ஸ்ரீமத்

# பகவத் கீதை

(மூலம்-பொழிப்புரையுடன் கூடிய பதவுரை-சிறப்புக் குறிப்புகளுடன்)

ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமிகள் அருளிய கீதை உரை

கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய

தமிழாக்கம்

கும்பகோணம் M. ராமராவ்



# ஸ்ரீமத் பகவத் கீதை

(தமிழ் மற்றும் ஸம்ஸ்கிருதத்தில் மூலம், பொழிப்புரையாகப் படிக்கும் வண்ணம் எழுதப்பட்ட பதவுரை, மற்றும் சிறப்புக் குறிப்புகளுடன் கூடிய வெகு அபூர்வமான நூல் இது)

*மூலம்*

ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமிகள்

அருளிய 'கீதார்த்த ஸங்க்ரஹம்'

அதைத் தழுவிய

*தமிழாக்கம்*

கும்பகோணம் M. ராமராவ்




**அருள்மிகு அம்மன் பதிப்பகம்**

**மிகச் சிறந்த நூல்கள் வெளியிடுவோர்**

16/116, T.P. கோயில் தெரு,

'திருமலா ஃப்ளாட்ஸ்,' (ஸ்ரீ ராகவேந்திர மடம் எதிரில்)

திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

தொலைபேசி எண்கள் : **28443546, 42663545, 42663546**

Email:arulmiguammanpathippagam@yahoo.com

Website:www.arulmiguammanpathippagam.com

SRIMAD BHAGAVATH GEETHA
with commentary of
Sri RAGHAVENDRA's
GEETHARTHA SANGRAHA

## நூல் விவரப் பட்டியல்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஸ்ரீமத் பகவத் கீதை |
| ஆசிரியர் பெயர் | : | கும்பகோணம் M. ராமராவ் |
| பொருள் | : | ஸ்ரீ ராகவேந்திரரின் கீதை உரையைத் தழுவிய தமிழாக்கம் |
| தயாரிப்பு | : | அம்மன் சத்தியநாதன் |
| தயாரிப்பில் பேருதவி | : | பாளேகட்ட்டே மாதவாசார்யா |
| முதற் பதிப்பு | : | டிசம்பர், 2003 |
| இரண்டாம் பதிப்பு | : | ஜூலை, 2006 |
| மூன்றாம் பதிப்பு | : | நவம்பர், 2011 |
| நான்காம் பதிப்பு | : | மே, 2017 |
| விலை | : | ரூ. **350.00** |
| மொத்த பக்கங்கள் | : | 480 |
| எழுத்து | : | 11 புள்ளிகள் |
| மொழி | : | தமிழ் மற்றும் வடமொழி |
| நூலின் அளவு | : | 1x8 டெம்மி |
| தாளின் தரம் | : | 16 கி. மேப்லித்தோ வெள்ளைத்தாள் |
| பைண்டிங் | : | செக்ஷன் தையல், சாதா அட்டை |
| முகப்போவியம் | : | எஸ். அசோக்குமார் |
| உள்படங்கள் | : | 'லயசித்ர ஓவியக் கலைஞர்' திரு. சசி |
| லேசர் அச்சு | : | எல்.கே.எம். கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ், சென்னை - 17, © 2436 1141 |
| அச்சிட்டோர் | : | கணபதி எண்டர்பிரைசஸ், சென்னை - 600 005. |




பீஷ்ம பர்வம், அத்தியாயம் 25 முதல் 42 வரை
உள்ள, ஸ்ரீமத் பகவத் கீதையை உள்ளடக்கிய
மஹாபாரதத்தை அருளிய

**ஸ்ரீ வேதவ்யாஸர்.**




கீதா பாஷ்யம், கீதாதாத்பர்யம் உள்ளிட்ட
ஸ்ரீ மத்வரின் நூல்களுக்கு 'டீகை' (உரை)
எழுதி 'டீகாசார்யர்' எனப் போற்றப்படும்

**ஸ்ரீ ஜயதீர்த்தர்.**

வாயு பகவானின்

# ஹநும–பீம–மத்வ அவதாரங்கள்




தேரின் கொடியிலே ஹனுமனாக அமர்ந்து அர்ஜுனனுக்கு அருகில் பீமனாக இருந்து, கேட்டு அநுபவித்த கீதோபதேசத்தை 'கீதா பாஷ்யம்' மற்றும் 'கீதா தாத்பர்ய'மாக அருளிய **ஸ்ரீ மத்வர்.**

# கிடைத்தற்கரிய பெரும் நிதி




ஸர்வஜ்ஞ ஸேவா நிரத, உபந்யாஸ ரத்னாகர, சாஸ்த்ர விசாரத,
பண்டித பூஷண, மத்வ ஸாஸ்த்ர ஸம்பன்ன, வித்வத் ரத்ன,
வேதாந்த பூஷண வித்வான், மத்வஸ்ரீ

## கும்பகோணம் M. ராமராவ்

**(1898 – 1988)**

அனைவருக்கும் எனது அன்பு வணக்கங்கள்...

ஸ்ரீஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமிகளின் முந்தைய அவதாரமான ஸ்ரீஸ்ரீ வியாஸராஜ ஸ்வாமிகளின் ஆராதனை மஹோற்சவ சமயம்.

1985ஆம் அண்டு, மார்ச் மாதம், சு. வீரசோழபுரம் கிராமம்.

நான் பதிப்பகம் துவங்கி நூல்கள் வெளியிட்டு ஏழு ஆண்டுகள் ஆகியிருந்த நேரம். ஸ்ரீ ராகவேந்திரர் மீதும், இன்ன பிற கடவுளர் மீதும் சிறிய அளவிலே நூல்களை வெளியிட்ட வண்ணம் ஸ்ரீ ராகவேந்திரரைக் குறித்து பல ஆய்வுகளை ஆண்டுக்கணக்கில் மேற்கொண்டு 'ஸ்ரீ ராகவேந்திர மகிமை' நூலை எழுதி முடிக்கும் தறுவாயில் இருந்த தருணம்.

இப்படியிருக்கையில் அந்த ஆண்டு ஸ்ரீ வியாஸராஜர் ஆராதனையின்போது 'ஸ்ரீ வியாஸராஜ வைபவம்' எனும் நூலை எனது சொந்த கிராமத்தில் வெளியிடக்கூடிய ஒரு பேறு கிடைத்ததோடல்லாமல் அதன் காரணமாய் எனக்கு வேறு ஒரு பாக்யமும் ஆசியும் அருளும் கிடைக்கப் பெற்று திக்குமுக்காடிப் போனேன்.

ஆம். அந்த நூலை அன்று வெளியிட்டவர் கும்பகோணம் ஸ்ரீ M. ராமராவ் அவர்கள். நூலை வெளியிட்டதோடல்லாமல் என்னையும் எங்கள் ஊரில் பிருந்தாவனஸ்தராய் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீஸ்ரீ ஸத்யநாத தீர்த்தரையும் தொடர்புபடுத்தி அவர் ஆசி கூறியது அப்படியே என் வாழ்வில் பலித்தது.

"ஸ்ரீ வியாஸராஜர் 'சந்த்ரிகாசார்யர்,' ஸ்ரீ ஸத்ய நாதர் 'அபிநவ சந்த்ரிகாசார்யர்.' இரண்டு மஹனீயர்களும் அனேக க்ரந்தங்களை அருளியவர்கள். நீயும் இவர்கள் அருளால் க்ரந்தங்கள் பல இயற்றிப் பேரும் புகழோடும் இருப்பாய்" என்று அன்று ஆசிர்வதித்ததற்கொப்ப இன்று எண்பதிற்கும் மேற்பட்ட நூல்களை எழுதிய தோடல்லாமல், நூற்றுக் கணக்கான இன்ன பிற பயனுள்ள நூல்களையும் வெளியிட்டு இன்றைய தேதியில் பதிப்புத்துறையில் (2004ல்) 27ம் ஆண்டில் இருக்கிறேன் என்ப தோடு அன்று என்னை வாழ்த்திய ஸ்ரீ ராமராவ் அவர்களின் படைப்புகளிலேயே மிகப் பிரம்மாண்டமானதான இந்த நூலினை வெளியிடக் கூடிய தகுதியையும் அந்தஸ்தையும் ஸ்ரீ ஹரி வாயு குரு எனக்கு அருளியிருப்பதை நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்கிறேன்.

ஸ்ரீமத் பகவத் கீதைக்கு எத்துணையோ உரை நூல்கள் இருந்த போதிலும், இந்நூலுக்கு உள்ள ஒரு தனிச்சிறப்பு வேறெந்த நூலுக்கும் இல்லையென்று துணிந்து கூறலாம். அந்தளவிற்கு இந்நூல் மிக மிகச் சிறந்தது, மிக மிகத் தலையாயது, ஸ்ரீ BNK சர்மா கூறியிருப்பதைப் போல ஒளிவு மறைவின்றி உள்ளது உள்ளபடி விளக்கக்கூடிய நூலாக இது அமைந்திருக்கிறதென்றால் அதற்கான காரணங்கள் மிகமிகப் பலமானவை.

ஆம்!

கும்பகோணம் ஸ்ரீ M. ராமராவ் அவர்கள் ஸ்ரீ ராகவேந்திரரின் 'கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவ; ஸ்ரீ ராகவேந்திரர் ஸ்ரீ ஜயதீர்த்தரின் ப்ரமேய தீபிகை - நியாய தீபிகைகளை ஆதார மாகக் கொள்ள; ஸ்ரீ ஜயதீர்த்தர், ஸ்ரீமத்வரின் கீதாபாஷ்யம் மற்றும் தாத்பர்யத்திற்கு உரையெழுத; ஸ்ரீ மத்வர் ஸ்ரீ வேதவ்யாஸரின் மஹாபாரதத்தைத் தழுவி எழுதினார் என்பது மட்டுமல்லாமல் அதை நேரில் கண்டு அனுபவித்து எழுதியது என்பதுதான் உண்மையிலும் உண்மையாகும். அதனால்தான் ஸ்ரீமத்வரின் நூல்களுக்கும் அதை அடியொற்றி ஸ்ரீ ஜயதீர்த்தர், ஸ்ரீ ராகவேந்திரர், ஸ்ரீ ராமராவ் எழுதிய நூல்களுக்கும் இவ்வளவு பெரிய மகிமை இருந்து வருகிறது என்றால் மிகையாகாது.

ஆனால் குருக்ஷேத்ர யுத்தத்தின் போது, கீதோபதேசத்தின் போது ஸ்ரீ மத்வர் அங்கிருந்திருந்தால்தானே மேற்சொன்னபடி உள்ளது உள்ளபடி, அவரால் எழுதியிருக்க முடியும்? கீதோப தேசம் நிகழ்ந்தது த்வாபர யுகத்தில், ஸ்ரீ மத்வர் அவதரித்தது கலியுகத்தில் (கி.பி. 1238ல்) பின் இதெப்படிச் சாத்தியம்?

ஸ்ரீ வாயு பகவான் த்ரேதாயுகத்தில் ஹனுமனாக அவதரித்து ஸ்ரீ ராம ஸேவை செய்தார்; த்வாபர யுகத்தில் பீமனாக அவதரித்து ஸ்ரீ க்ருஷ்ணஸேவை செய்தார்; இக்கலியுகத்தில் ஸ்ரீ மத்வராக அவதரித்து ஸ்ரீ வேதவ்யாஸ ஸேவை செய்து த்வைதத்தைப் பரப்பி, நிலை நிறுத்தி, இன்றும் அவருடனேயே மேல் பதரியில் வாஸம் செய்து வருகிறார்.

சரி, அப்படியே இருந்தாலும் ஸ்ரீ கிருஷ்ணர், அர்ஜுன னுக்குக் கீதோபதேசம் செய்த த்வாபர யுகத்தில் பீமன் குருக்ஷேத்ரத்தில் இருக்க வாய்ப்பிருந்தது. ஆனால் த்ரேதா யுக ஹனுமார் எப்படி உடனிருந்தார் என்றால், அவர்தான் என்றும் சிரஞ்சீவி ஆயிற்றே, அதனால் ஸ்ரீ கிருஷ்ணரின் தேரின் கொடியிலே வீற்றிருந்து (அட்டைப்படம் பார்க்கவும்) அங்கு நிகழ்ந்த சம்பாஷணைகள் அனைத்தையும் கேட்டிருக்கிறார்.

ஹனுமனாக இருந்து கேட்டதை, பீமனாக இருந்து உணர்ந்ததையெல்லாம் தனது மத்வ அவதாரத்தின்போது உள்ளது உள்ளபடி கீதா பாஷ்யமாக, தாத்பர்யமாக அருளி யுள்ளார். அதனாலேயே ஸ்ரீ மத்வர் அருளிய இந்த க்ரந்தங்களுக்கு உள்ள மேன்மை வேறெதற்கும் இல்லை என்றே கூறலாம்.

அப்படிப்பட்ட ஸ்ரீ மத்வரின் க்ரந்தங்களையும், அவற்றுக் கான ஸ்ரீ ஜயதீர்த்தரின் உரைகளையும் தழுவி, ஸ்ரீ ராகவேந்திரர் அருளியதைத் தழுவி, கும்பகோணம் ஸ்ரீ M. ராமராவ் எழுதியிருப்பதால் இந்நூலும் ஸ்ரீ மத்வரின், ஸ்ரீ ஜயதீர்த்தரின், ஸ்ரீ ராகவேந்திரரின் க்ரந்தங்களுக்குள்ள சிறப்பினைப் பெறுவதோடு, நம் எல்லோருக்கும் எளிமையாயும் தெளிவாயும் புரியும் விதத்திலும் உள்ளது. அதனாலேயே தமிழில் வெளிவந்த கீதை உரைகளில் இந்நூல் முதலிடத்தைப் பெறத்தக்கதாய் விளங்கு கின்றது.

நூல் முழுவதையும் படிக்கும் போது, எத்துணை உவமானங்கள், எத்துணை உவமேயங்கள், அப்பப்பா... அவை யெல்லாம் எங்கெங்கிருந்து எடுத்துக் கொடுக்கப்பட்டது, அவற்றுக்கான விசேஷ அர்த்தங்கள், பொழிப்புரையாகப் படிக்குமாறு பதம் பரித்து பதவுரை எழுதியுள்ள பாங்கு போன்றவை நமக்கு பிரமிப்பாக இருந்தாலும் ஸ்ரீ ராமராவிற்கு அது மிகச் சாதாரணமாக இருந்திருக்கிறது.

ஏனெனில் அவர் பிறந்த வம்சமும், பிறந்த நாளும் நேரமும் அவருக்கு ஸ்ரீ ஹரி கடாக்ஷமும், குரு கடாக்ஷமும் நிறைந்திருந்தது என்பதை உணர்த்துகிறது. ஆம்! ஸ்ரீ ராமர் பிறந்த சைத்ர சுத்த நவமி புனர்பூசத்தில் ஸ்ரீ லக்ஷ்மீபாய் ரகுநாதாசார்யா தம்பதி

யருக்கு மகவாக *31.3.1898* இவர் பிறந்தார். பிறந்த கிழமையோ குருகளுக்கு உகந்த வியாழக் கிழமை. பிறந்த ஊரோ மணம்பூண்டி ஸ்ரீ ரகூத்தமர் பிருந்தாவனத்திற்கு அருகிலுள்ள அந்திலி கிராமம். (அந்த அந்திலியிலிருந்து *10* கி.மீ. தூரத்திலும் மணம்பூண்டியிலிருந்து *12* கி.மீ. தூரத்திலும் உள்ளதுதான் எங்கள் வீரசோழபுரம்.)

ஸ்ரீ ராமராவின் குடும்பம் வாழையடி வாழையாக சகல கலைகளிலும், கல்வி கேள்விகளிலும் சிறந்து விளங்கும் முராடிகே (Muratige) வம்சமாகும். அதனால், இவர் தனது தந்தையிடமே அனைத்தையும் பயின்று, பாரத தேசமெங்கும் பயணித்து பல்வேறு உபந்யாஸங்கள் நிகழ்த்தி, பலபல நூல்கள் எழுதி, *90* ஆண்டுகள் முழுமையாய் வாழ்ந்து *17.6.1988*இல் இவரது பூதவுடல் நம்மை விட்டுப் பிரிந்திருந்தாலும் இவர் விட்டுச் சென்றுள்ள அழியாத சொத்துக்களான நூல்களும், தொடர்ந்து வரும் சந்ததியினரும் நம்முடன் இருந்து வருகிறார்கள். பிறந்த ஆண்டு மறைந்த ஆண்டு எண்கள் ஒன்றுக்குள் ஒன்றாய் மாறி வருவது *(1898-1988)* இவரது படைப்புகளைப் போலவே அற்புதமாய் இருக்கிறது.

தனது தந்தைக்கு என்னென்ன தகுதிகள் இருந்ததோ அதற்கீடாக ஸ்ரீ ராமராவ் விளங்கியது போல, அவரது குமாரரான ஸ்ரீ R. நரசிம்ஹாசார்யாரும் விளங்கி வருகிறார். ஸ்ரீ ராமராவ் அவர்கள் இந்நூலினை *1972-73* வாக்கில் மூன்று ஷட்கங்களாகப் பிரித்து மூன்று பகுதிகளாக வடிவமைத்துத் தந்தது இன்று இவ்வளவு பெரிய நூலாக நம் பதிப்பகத்தின் மூலம் வெளியாகிற தென்றால் அதற்குக் காரணம் ஸ்ரீ R. நரசிம்ஹாசார்தான். அதாவது ஸ்ரீ ஹரிவாயு குருவின் க்ருபை இவர் மூலம் வெளிப்பட்டு எனக்கிந்த பெறும் பேறு கிடைத்தது என்பதே சரியானதாகும்.

கடந்த *30.11.2003* அன்று சென்னை தர்மபிரகாஷில் திருவல்லிகேணி ஸ்ரீ ராகவேந்திர பஜனா மண்டலியின் 32வது ஆண்டு விழாக் கொண்டாட்டங்களின் போது, என்னுள் பல நாள் கனன்று கொண்டிருந்த, ஸ்ரீ ராமராவின் நூலை வெளியிட வேண்டும் என்ற ஆவலை, ஸ்ரீ பாளேகட்ட்டே மாதவாசார்யா வெளியிட, அதைக் கேட்ட ஸ்ரீ நரசிம்ஹாச்சார் அடுத்த நொடியே சந்தோஷமாய் சம்மதித்து, அடுத்த நாளே தனது இல்லத்திற்கு எங்களை வரவழைத்து, நூலை வெளியிடுவதற்கான அநுமதிக் கடிதத்தையும், புகைப்படங்களையும், குறிப்புகளையும் கொடுத்து அசிர்வதித்தார்.

முன்பே சொன்னதைப் போல ஸ்ரீ நரசிம்ஹாசாருக்கும், தந்தை ஸ்ரீ ராமராவைப் போல அநேக பட்டங்கள் இருந்தாலும், வங்கியிலே உயர்பதவி வகித்திருந்தாலும், எதையும் போட வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். ஏனென்றபோது, "கும்பகோணம் ஸ்ரீ ராமராவின் குமாரர்" என்பதைவிட வேறென்ன சிறந்த பட்டம் எனக்கு இருக்க முடியும் என்றபோது

ஆமாம் ஆமாம் என்றது என் நெஞ்சம். அப்படிப்பட்ட ஸ்ரீ நரசிம்ஹாசார்யருக்கு என் ஹ்ருதய பூர்வமான நன்றி.

இந்த நூலை அச்சிட்டு வெளியிடுவதற்கு அனுமதி வாங்கியதில் துவங்கி, இது வெளியாகும் வரை ஒவ்வொரு நடவடிக்கைகளிலும் உடனிருந்து, என்னை ஊக்குவித்து, பக்க பலமாக இருந்து செயல்பட்டவர், என்னைச் செயல்பட வைத்தவர் ஸ்ரீ பாளேகட்ட்டே மாதவாசார்யா. பன்மொழிப் புலமையும் சாஸ்த்ர நுணுக்கங்கள் அனைத்தையும் அறிந்ததோடு, அதைத் தெளிவாக பிறர்க்கும் உணர்த்த வல்லவர் இவர். கம்பீரமான குரலில் மத்வ ஸம்ப்ரதாய ஒலிநாடாக்களை வழங்கிவருபவரும்கூட. இவருக்கும் எனது ஸ்ரீ ராகவேந்திர மகிமை நூல்களுக்கு வரைந்தளித்தது போல இந்நூலுக்கும் அற்புதமான சித்திரங்கள் வழங்கியுள்ள லயசித்ர ஓவியக் கலைஞர் திரு சசி அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்கு கின்றேன்.

இந்த உயரிய நூலை, சுமார் 600 பக்கங்களில் வரவேண்டிய விஷயங்களை 472 பக்கங்களில் வருமாறு அடக்கி, அதே சமயம் படிப்பதற்கும் நன்றாக இருக்கும் வண்ணம் வடிவமைத்து, ஆண்டுகள் பல கடந்தாலும் நிலைத்திருக்கும் வண்ணம் உயரிய தாளில் அச்சிட்டிருக்கிறோம். மேலும் அதிக பொருட் செலவில், நன்கொடைகள் ஏதும் பெறாமல் இந்நூலை வெளியிட்டிருந் தாலும் இத்துணை பக்கங்கள் கொண்ட நூலுக்கு நியாயமாக வைக்க வேண்டிய தொகையில் 25 சதவீதம் குறைத்து, எல்லோரும் வாங்கவேண்டும் என்கின்ற நோக்கில் இந்த விலையை நிர்ணயித்துள்ளோம்.

கண்ணன் அருளிய கீதையை எப்படி கிடைத்தற்கரிய பெரும் பேறாக உலகம் கொண்டாடுகிறதோ, அவ்வாறே நம் தமிழ் கூறும் நல்லுலகிற்கும் கிடைத்தற்கரிய பெரும் நிதியாக விளங்குவது ஸ்ரீ ராமராவ் வழங்கியுள்ள இந்நூலாகும். இந்த நிதியை நாம் பெறுவதோடு மட்டுமல்லாது எல்லோருக்கும் பகிர்ந்தளிக்க வேண்டிய கடமையும் நம்முடையதாகும்.

ஆதலால், வழக்கம் போல் இந்நூலையும் நீங்கள் வாங்குவ தோடல்லாமல், பிறருக்கும் படிக்கக் கொடுத்து அவர்களையும் வாங்க வைத்து, பரிசளித்து, இதைப் போன்ற நூல்கள் மேன்மேலும் வெளிவர எமக்கு உறுதுணையாக இருக்க வேண்டு மென்றும் ஸ்ரீ ராகவேந்த்ர குர்வந்தர்கத, ஸ்ரீமத்வாந்தர்கத ஸ்ரீ கீதாசார்யனின் அநுக்ரஹத்தினால் எல்லோருக்கும் தத்வார்த்த ஞானம் கிடைக்கட்டும் என்றும் ப்ரார்த்தித்துக் கொள்கிறேன்.

அன்புடன்

**அம்மன் சத்தியநாதன்**

# ஒளிவு மறைவின்றி ஐயந்திரிபில்லாமல் அனைவருக்கும் விளக்கும் நூல்

வித்யாபூஷணம், சாஸ்திர நிதி, த்வைத வோந்த ரஸஜ்ஞ

**Dr. B.N.K. சர்மா,** M.A., Ph.D. Litt.

ஆசிரியர் ஸ்ரீ M. ராமராவ் அவர்கள் மேற்கொண்டுள்ள இப் பகவத்கீதையின் பதிப்பு, பல விரும்பத்தக்க அம்சங்களையுட்கொண்டுள்ளது. இதில் கீதையின் மூல சுலோகங்கள் தேவநாகர எழுத்துக்களிலும், தமிழெழுத்துக்களிலும் கொடுக்கப்பட்டுள்ளன. தேவநாகரி லிபியில் போதிய பரிசயமில்லாதோர்க்கும், அதைப் பயில இஃதோர் அரிய சந்தர்ப்பத்தை யளிக்கவல்லது. கீதையின் மூலச் செய்யுட்களுக்கு நேர் பதவுரை இங்கு சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது, அத்துடன் நின்றுவிடாமல், ஆசிரியர் ஆங்காங்கு அவசியமான அந்வயக் குறிப்புகளையும், கடின பதங்களின் சிறப்புரைகளையும், தமக்கே உரித்தான தெள்ளிய தமிழ் நடையில் தந்து, இரு மொழிப் புலமையையும் இனிது கலந்து, படிப்போர் உள்ளம் கவர்ந்து, அவர்களுக்குப் பேருதவி செய்துள்ளார். இந்நூல் நிரம்பிய புலமையின் பயனாக வெளிவந்துள்ளது.

ஸ்ரீ மத்வாசாரியரின் கீதாபாஷ்யம், கீதா தாத்பர்யம், ஸ்ரீ ராகவேந்திரரின் உரைநூல் முதலிய முதநூற்களின் பல அரிய குறிப்புகள் இங்கு சேர்க்கப் பட்டுள்ளன. ஸ்ரீமத்வரின் அநுவியாக்யானமெனும் வேதாந்த நூலிலிருந்து கொடுக்கப்பட்டுள்ள மேற்கோள், நமக்குப் பூர்வ ஜன்மம் உண்டு, இருந்திருக்கின்றது, என்ற விஷயத்தில், பகுத்தறிவுக்கு உகந்த தர்க்க முறையில் நுண்ணிய ஆதாரங்களை எடுத்துக்காட்டி, கீதையின் II-13ஆவது சுலோகத்தின் பொழிப்புரைக்குப் புஷ்டியைக் கொடுத்திருப்பது, நோக்கத்தக்கது.

இம்மாதிரி பல்வேறிடங்களிலும், நமது ஆசிரியர் ஸ்ரீ ராமராவ் அவர்களின் இவ்வெளியீடு, கீதைக்கு ஏனைய உரையாசிரியர்கள் கொடுத்துப் போந்த விளக்கங்களுக்கும், ஸ்ரீ மத்வரின் இரு பெரு நூற்களிலிருந்து நமக்குக் கிடைக்கும் நுண்பொருட்செறிவிற்குமுள்ள, வேற்றுமைகளை நன்கு புலப்படுத்துகின்றது. உண்மைப் பொருள்களாகிய ஜீவன், ஜடப்பிரகிருதி, பரம்பொருள் எனப்படும் முப்பொருட்களின் தொடர்புகளையும், ஆன்மாக்க ளாகிய நாம் அறிந்து கடைப்பிடித்து முன்னேற வேண்டிய வழிமுறை (சாதனங்)களையும், ஐயந்திரிபில்லாமலும், ஒளிவுமறைவின்றியும் அனை வருக்கும் விளக்கிக் காட்டி, மாபெரும் உதவியைச் செய்ய இந்நூல் முன்வந்துள்ளது.

யாமறிந்தவரை, துவைத மதத்தின் உரைநூற்களைத் தழுவி, கீதையின் மேல் எழுதப்பட்ட தமிழ் நூற்களில் இதுவே முதலிடம் பெற்றுள்ளது; பெரும் ஏற்பும் உடையது. இந்நூல் தமிழ்நாட்டு மாத்வ மக்கள் மட்டுமேயன்றி, தமிழறிந்தோர் அனைவருமே படித்துப் பயனடையவேண்டிய சிறப்புடையது. தமிழ்நாட்டின் தவப்புதல்வராகிய ஆசிரியர் ஸ்ரீ M. ராமராவ் அவர்கள், தமது பழுத்த நூலறிவின் மூலமாக, இத்தமிழ்த் தொண்டையும், ஞானயஜ்ஞத்தையும், ஒருங்கே யாற்றியுள்ளார். இதன் பயனைப் பெறுவது தமிழர் கடமை.

---

ஸ்ரீ B.N.K. சர்மா அவர்கள் ஸ்ரீ M. ராமராவ் அவர்களிடம் காவ்யம் முதல் ஸ்ரீ மத்வ சாஸ்திரம் வரையில் படித்த சிஷ்யர்களில் ஒருவர். தமது உழைப்பால் உயர்ந்து-சிஷ்யாத் இச்சேத்பராபவம் என்ற முறையில் புகழ்பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத்தகுந்தது.

॥ श्री ॥



# ஆசிரியரின் முன்னுரை

பாரதம் ஸர்வசாஸ்த்ரேஷு, பாரதே கீதிகா வரா |
தத்ர பஞ்சதசோSத்யாய:, தஸ்மின் ச்லோக சதுஷ்டயம் ||

பரவித்யாவான பிரம்மசூத்திரங்கள், பரவித்யாவும் அபரவித்யாவுமான வேதங்கள், இவற்றிற்கு அடுத்தபடி ஸ்ரீமன் மகாபாரதம் ஸகல சாஸ்திரங்களிற் சிறந்தது. அந்தப் பாரதத்தில், கீதை சிறந்தது. அந்தக் கீதையில் 15ம் அத்தியாயம் சிறந்தது. அந்த அத்தியாயத்தில், நான்கு சுலோகங்கள் (16 முதல் 19) சிறந்தவை.

கோபி கீதை, வேணு கீதை, ப்ரமர கீதை முதலிய பல கீதைகளிருப்பினும், கீதை என்றால், ஸ்ரீமத் பகவத் கீதையையே குறிக்கும். கீதை, கங்கை, காயத்ரீ, கோவிந்தன் என்ற க ga-வில் ஆரம்பிக்கும் நான்கும், ஒருவனுடைய மனதில் இருந்தால், அவனுக்கு மறு பிறப்பே இல்லை, என்கிறது மகாபாரதம். பசி, தாகம், இடறி விழுதல், முதலிய காலங்களிலும், கீதா! கீதா! எனக் கூறுபவன், பல கொடிய பாவங்களிலிருந்து விடுபட்டு, விஷ்ணு லோகமடைகிறான்.

இம்மாதிரியான மகிமையும், கீதையின் ஒவ்வொரு அத்தியாயத்தைத் தினந்தோறும் பாராயணம் செய்வதின் பலனும், பல புராணங்களில் கூறப்பட்டிருப்பினும், **வாயவீய ரஹஸ்யம்** என்ற நூலில், கருடனுக்கும் வாயுபகவானுக்கும் நடந்த சம்பாஷணையாக அமைந்துள்ள, கீதா மாஹாத்ம்யம், சாலச் சிறந்து விளங்குகிறது.

இந்தக் கீதை, பீஷ்ம பர்வம் 25 முதல் 42 வரை கடபயாதி கணக்கின்படி ஜய என்ற 18 அத்தியாயங்களையும், 700 சுலோகங்களையும் கொண்டது. முதல் அத்தியாயத்தில் கீதாவிவ்ருதியின்படி 46 சுலோகங்கள். பிறருக்கு 47 சுலோகங்கள். 13ம் அத்தியாயத்தின் முதலில், நம் பாடத்தின்படி அர்ஜுனன் கேட்கும் ஒரு சுலோகம் பிறர் பாடத்தில் இல்லை. ஆகவே,

அனைவருக்கும் 700 சுலோகங்களே. கீதோபதேசம் 2-11ல் **அசோச்யான்** - 'துக்கிக்கத் தகாதவர்கள்' என்று ஆரம்பித்து, 18-66ல், **மா சுச:** - 'துக்கப்படாதே;' என முடிகிறது. ஆகவே, எல்லோருக்கும் துக்கமின்மையே, கீதோபதேசஸாரமாக அமைந்துள்ளது என்பதைக் கவனிக்கவும்.

பாரதத்தில் ஒவ்வொரு சுலோகத்திற்கும் பத்து அர்த்தங்கள் உண்டு (தசார்த்தம் பாரதம்). ஆகவே, கீதையிலும் ஒவ்வொரு சுலோகத்திற்கும் பத்து அர்த்தங்களுண்டு. ஸ்ரீ மத்வர், முதன்முதலில் கீதைக்குத்தான் பாஷ்யம் செய்தார்.

கீதாபாஷ்யம் சகாராஸௌ, ப்ரதமம் துஷ்டிதம் ஹரே: |

அவர் பதரிக்குச் சென்று, அங்கு அர்ச்சா ரூபியான ஸ்ரீ நாராயணனின் முன்னிலையில், அதை வாசித்துக் காட்டினார். அந்த அர்ச்சாரூபியான பகவான், அதைக்கேட்டு, 'நீர் இந்தக் கீதையின் அதி சூக்ஷ்மமான அர்த்தங்களையும் கூறச் சக்தி யுள்ளவர். ஆயினும் அவற்றை இதில் கூறவில்லை. ஆகையால்,

தேவம் நாராயணம் நத்வா, ஸர்வதோஷ விவர்ஜிதம் |
பரிபூர்ணம் குரூம்ஸ்சான் கீ, தார்த்தம் வக்ஷ்யாமி சக்தித: ||

என்ற முதல் சுலோகத்தில், **'சக்தித:** என்ற பதத்திற்குப் பதிலாக **லேசத:** என்ற பதம் இருக்கட்டும்' என்று அருளினார். (மத்வ விஜயம் 6-43 சுலோகம்) இம்மாதிரி ஸ்ரீ மத்வரின் கீதார்த்தம் ஸ்ரீ பதரி நாராயணனால் அங்கீகரிக்கப்பட்டது.

மேற்படி சுலோகத்தில், **கீதார்த்தம் வக்ஷ்யாமி** - கீதையின் அர்த்தத்தைக் கூறுவேன், என்று கூறியிருப்பதால், மற்றவர்கள் கூறியவை கீதார்த்தமல்ல, என்று ஏற்படுகிறதல்லவா? ஆம்; அதுவும் சரியே. ஏனெனில், மற்றவர்களுக்கில்லாத மூன்று அவதாரமான அரிய வாய்ப்பு ஸ்ரீ மத்வருக்கு உண்டு.

மன்யே பார்த்தர தஸ்ய மூர்த்னி த்விஜே, ஜாக்ரத், த்வஜாக்ரே கபி:
சுக்ராவேதி ஸ கீதிகாம் பகவதோ, பீமோSபி ஸேனாந்தரே |
யோஸாவேவ ஹரேர் முகாத் ச்ரவணத:, ஸ்ரீமத்வநாமா குரு:
வ்யாசக்யௌ தமஹம் பஜே, குருமதிம் ஸர்வேஷ்ட சிந்தாமணிம் ||

இவர் ஹனுமதவதாரத்தில், கீதோபதேசத்தின்போது, அர்ஜுன னின் தேர்க்கொடியில், ஸந்நிஹிதராயிருந்தும், பீமாவதாரத்தில் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனர்களின் அருகில் சேனையின் நடுவில் இருந்தும், ஸ்ரீமத்வாவதாரத்தில், மேலே கூறியபடி பதரி நாராயணனின் அங்கீகாரத்தைத் தவிர, பெரிய பதரிகாசிரமத்தில் பாரத கர்த்தாவான ஸ்ரீ வியாஸரிடம் சகல ரஹஸ்யங்களையும் நேரில் கற்றறிந்தவர். ஆதலால் ஸ்ரீமத்வர் கூறியதே கீதார்த்தமாகும் என்றால் மிகையாகாது. மேலும், இதுவரையில் வெளிவந்துள்ள கீதைப்பேருரைகளில் காணாத அரிய அர்த்தங்களையும், ஆழ்ந்த கருத்துக்களையும் இதில் காணலாம்.

மேற்படி கீதாபாஷ்யம் தவிர, **கீதாதாத்பர்யநிர்ணயம்** என்ற மற்றொரு கிரந்தத்தையும் ஸ்ரீமத்வர் அருளியுள்ளார். இவ்விரு நூல்களையும் பற்றி, ஸ்ரீ த்ரிவிக்ரமபண்டிதாசார்யர், என்ற மகான், **ஆப்யாம் விச்வம் ப்ரகாச்யதே** *(ம. வி. 15-75)* - இவ்விரு நூல்களினாலும், சந்திர சூரியர்களால் உலகம் பிரகாசிக்கப்படுவதுபோல, சகல சாஸ்திரார்த்தமும் விளக்கப்படுகிறது; - எனப் புகழ்ந்துள்ளார். அன்னார் ஸ்ரீமத்வரின் காலத்திய சிறந்த அத்வைத பண்டிதராவர். ஸ்ரீமத்வருடன் 15 நாட்கள் வாதம் புரிந்து கடைசியில் அவருடைய பாத தூளிகளை வேண்டிச் சிறந்த சிஷ்யரானார். *(ம. வி. 15-70)*

ஸ்ரீ மத்வரின் அபிப்ராயங்களை, விசித்திரமான பதங்களினாலும் ஆழ்ந்த கருத்துக்கள் கொண்ட வாக்கியங்களினாலும், கண்டிக்க முடியாத பிரமாணங்களுடனும், விளக்குபவரான ஸ்ரீ ஜயதீர்த்தர் கீதாபாஷ்யத்திற்கு **'பிரமேய தீபிகை'** என்ற டீகையையும், கீதா தார்பர்யத்திற்கு, **'நியாய தீபிகை'** என்ற டீகையையும் செய்துள்ளார். அவற்றைத் தழுவி ஸ்ரீ குரு ராகவேந்திர ஸ்வாமிகள், **கீதார்த்த ஸங்க்ரஹம் (கீதா விவ்ருதி)** என்ற நூலைச் செய்துள்ளார். அதைத் தழுவியே இந்த தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது.

கீதைக்குப் பற்பல தமிழாக்கங்கள் இருப்பினும், ஸ்ரீ மத்வரின் ஸித்தாந்தத்தைத் தழுவிய தமிழாக்கம் இல்லாதிருந்தது ஓர் பெருங்குறையாகவிருந்தது. அதை நீக்கவே இந்நூல் வெளியிடப்படுகிறது.

கீதையின் ஒவ்வொரு அத்தியாயத்தின் முடிவிலுமுள்ள **ஓம், தத், ஸத்** என்பன (கீதை 17-23ல் கூறப்படுகிறபடி) பகவானின் மூன்று பெயர்களாகும். பல உபநிஷத்துக்களின் அர்த்தமே ஸ்ரீமத் பகவத்கீதையானதால், **உபநிஷத்ஸு** என்றும், குணபூர்ணனான விஷ்ணுவை அறிவிப்பதால், **ப்ரஹ்மவித்யாயாம்** என்றும்; அவரை அடையும் உபாயங்களைக் கூறுவதால் **யோகசாஸ்த்ரே** என்றும்; ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனர்களிடையே நிகழ்ந்த சம்பாஷணையாதலால், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே என்றும்; உள்ளது.

**சுலோகங்களின் பதவுரைகளில், ஸம்ஸ்கிருத பதங்களை விட்டு, அர்த்தத்தை மாத்திரம் வாசித்தால் பொழிப்புரையாகும் எனக் கருதி, தனியாக பொழிப்புரையைத் தரவில்லை.** ஆயினும் பலவிடங்களில் கருத்துரைகள் நன்கு தரப்பட்டுள்ளன.

அனைவருக்கும் ஸ்ரீ குரு ராகவேந்திர ஸ்வாமிகளின் அநுக்ரஹமும், கீதாசார்யரான ஸ்ரீ கிருஷ்ணரின் பரமாநுக்ரஹமும் ஏற்படும்படி நாம் பிரார்த்திப்பதுடன், நமது நன்றிகலந்த ஆசிகளையும் வழங்குகிறோம்.

M. **ராமராவ்,** B.A., L.T.

**"துவைத விலாஸ்",**
**கும்பகோணம்.**

॥ श्री ॥

# ध्यान श्लोकाः – தியான சுலோகங்கள்

**பாரதம் – பீஷ்மபர்வம் – 43ம் அத்தியாயம் – 3 சுலோகம்**

1. गीता गङ्गा च गायत्री गोविन्देति हृदि स्थिते ।
चतुर्गकारसंयुक्ते पुनर्जन्म न विद्यते ॥

கீ3தா க3ங்கா ச க3ாயத்ரீ, கே3ாவிந்தே3தி ஹ்ருதி3 ஸ்திதே ।
சதுர் க3க3ார ஸம்யுக்தே, புனர்ஜன்ம ந வித்யதே ॥

**கீதா பாஷ்யம் – முதல் சுலோகம்: – ஸ்ரீமத்வர்**

2. देवं नारायणं नत्वा सर्वदोष विवर्जितम् ।
परिपूर्णं गुरूंश्चान्गी तार्थं वक्ष्यामि लेशतः ॥

தே3வம் நாராயணம் நத்வா, ஸர்வதே3ாஷ விவர்ஜிதம் ।
பரிபூர்ணம் கு3ரூம்ஸ்சான் கீ3, தார்த்த2ம் வக்ஷ்யாமி லேஶத: ॥

**கீதா பாஷ்ய டீகா – முதல் சுலோகம் – ஸ்ரீ ஜயதீர்த்தர்**

3. गुणगणनिलयं पतिं रमायाः जगदघ दहनं च वासवी सूनुम् ।
मुनिकुलतिलकं च पूर्णबोधं गुरुमपि परमं गुरुं च मे वन्दे ॥

கு3ணக3ணநிலயம் பதிம் ரமாயா:, ஜக3த3க4 த3ஹனம் ச
வாஸவீஸூனும் ।
முனிகுல திகலம் ச பூர்ணபே3ாத4ம், கு3ருமபி பரமம்,
கு3ரும் ச மே வந்தே ॥

**கீதா தாத்பர்யம் – முதல் சுலோகம் – ஸ்ரீமத்வர்**

4. समस्तगुण संपूर्णं सर्वदोष विवर्जितम् ।
नारायणं नमस्कृत्य गीतातात्पर्यमुच्यते ॥

ஸமஸ்த கு3ண ஸம்பூர்ணம், ஸர்வதே3ாஷ விவர்ஜிதம் ।
நாராயணம் நமஸ்க்ருத்ய, கீ3தா தாத்பர்ய முச்யதே ॥

**கீதா தாத்பர்ய டீகா – முதல் சுலோகம் – ஸ்ரீ ஜயதீர்த்தர்**

5. इन्दिरा वदनांभोज राजहंसाय विष्णवे ।
अमन्दानन्द संदोह सुन्दराकृतये नमः ॥

இந்தி3ரா வதனாம்பே4ாஜ, ராஜஹம்ஸாய விஷ்ணவே ।
அமந்த3ானந்த ஸந்தே3ாஹ, ஸுந்த3ரா க்ருதயே நம: ॥

6. भगवद्गीता येनाधीता सौरसुधारस धारा पीता ।
मङ्गळपदगण संगम ललिता माध्वग्रन्थालिङ्गन लसिता ॥

ப4கவத்கீ3தா யேனாதீ3தா, ஸௌர ஸுத4ா ரஸ, த4ாரா பீதா |
மங்கள பத3க3ண, ஸங்கமலலிதா, மாத்4வ க்ரந்தா லிங்கன லஸிதா ||

7. मध्वमुनीरित भाष्यविलासा जयमुनि विरचित दीप विभासा ।
सद्गुरुनिकटे संयगधीता विरजागाहन घटकीभूता ॥

மத்4வமுனீரித, ப4ாஷ்ய விலாஸா, ஜயமுனி விரசித, தீ3ப விப4ாஸா |
ஸத்குரு நிகடே, ஸம்யக் அதீ4தா, விரஜா க3ாஹன, கடகீ பூ4தா ||

8. दिनदिन पठिता सहकृतटीका प्रकटित भगवन्महिमोद्रेका ।
नूतन नूतन सन्मति जनिका पुष्कल मङ्गल संपद्गमिका ॥

தி3னதி3ன படிதா, ஸஹக்ருதடீகா, ப்ரகடித ப4கவன் மஹிமோத்ரேகா |
நூதனநூதன, ஸன்மதி ஜனிகா, புஷ்கள மங்கள, ஸம்பத் க3மிகா ||

9. बहुजन्मार्जित पुण्यविपाका संसारार्णव तारणनौका ।
येन क्रियते गीता चर्चा नहि नहि तस्मिन् यमभट चर्चा ॥

ப3ஹு ஜன்மார்ஜித, புண்யவிபாகா, ஸம்ஸாரார்ணவ, தாரண நௌகா |
யேன க்ரியதே, கீ3தாசர்ச்சா, நஹி நஹி தஸ்மின், யமப4டசர்ச்சா ||

10. पार्थाय उज्झित धन्वने रणमुखे कृष्णेन या बोधिता
व्यासेन ग्रथिता च लोकगुरुणा मध्ये महाभारतम् ।
तां द्वैतामृतवर्षिणीं श्रुतिशिरस्सिद्धान्त रत्नोज्ज्वलां
सन्मार्गावगमाय लोकजननीं वन्दामहे गीतिकाम् ॥

பார்த்தாய உஜ்ஜித த4ன்வனே ரணமுகே2, க்ருஷ்ணேன யா
போ3தி4தா, வ்யாஸேன க்ரதி3தா ச லோககுருணா, மத்4யே
மஹாப4ாரதம் |

தாம் த்வைதாம்ருத வர்ஷிணீம், ஶ்ருதி சிரஸ் ஸித்த4ாந்த ரத்னோஜ்
ஜ்வலாம், *ஸன்மார்க்க3ாவக3மாய லோகஜனனீம், வந்த3ாமஹே
கீ3திகாம் ||

***1. ஸம்ஸ்சாஸௌ மார்க்கஸ்ச** – *நல்ல வழி. 2.* **ஸதாம் மார்க்க:** – *நல்லோர்களின் வழி. 3.* **ஸத:** – **வாயோ:** *(பாகவதம் 3–5–50)* – *வாயுதேவனின் வழி அல்லது மத்வ மதம். 4.* **ஸத:** – **மார்க்க:** – **விஷ்ணோ:** *(கீதா 17–23)* **மார்க்க:** – *ஸ்ரீ விஷ்ணுவின் வழி – வைஷ்ணவ மதம்.*

## உச்சரிப்பு முறைகள்

ஸ்ரீமத் பகவத் கீதையின் மூலம் ஸம்ஸ்கிருதத்திலும், அதையே தமிழ் எழுத்துக்களிலும் கொடுக்கப்பட்டுள்ளது. மூல நூலின் உச்சரிப்பு, பாராயணம் செய்திடும்போது வரவேண்டும் என்பதற்காக தேவையான எழுத்துக்ளின்மீது எண் குறியீடுகள் தரப்பட்டுள்ளன. அவற்றை எவ்வாறு உச்சரிக்க வேண்டும் என்பதற்கான அட்டவணையையும் கீழே கொடுத்துள்ளோம். அதன்படி உச்சரித்து, ஸ்லோகங்களைப் பாராயணம் செய்து, பின்னர் பொழிப்புரையுடன் கூடிய பதவுரையைப் படித்து நல்வழியில் நடைபோடுவோமாக!

| எழுத்து | உச்சரிப்பு | உதாரணம் |
|---|---|---|
| க | Ka | கடவுள், கப்பல் |
| க² | Kha | தித்திக்க |
| க³ | ga | கருடன், கணபதி |
| க⁴ | gha | கடம், Ghatam |
| ச | cha | சந்திரன், chandiran |
| ச² | chha | அச்சம் |
| ஜ | ja | ஜடை |
| ஜ⁴ | jha | ஜ்ஜ |
| ட | ta | பட்டம் |
| ட² | tta | அட்டகாசம் |
| ட³ | da | உடல், கடல் |
| ட⁴ | ddha | ட்ட³ |
| த | tha | தரம், தமிழ் |
| த² | thha | அத்தை, அத்தனையும் |
| த³ | dha | தயவு, தேவர் |
| த⁴ | dhha | தர்மம் |
| ப | pa | பழம், படம், பண்டிகை |
| ப² | pha | பப்படம் |
| ப³ | ba | பயம் |
| ப⁴ | bha | பானு, bhanu |
| ஸ | sa | ஸங்கல்பம், ஸோபானம் |
| ஶ | saa | ஶங்கரன், ஶோபானம் |
| ஷ | sha | ஷண்முகன், ஷோபானம் |

மேற்கண்ட பட்டியலை வைத்து பகவத்கீதை மூலத்தைப் பழகப் பழக சரியாக உச்சரிக்க இயலும். ஆனால் 'ரி' மற்றும் 'ரு' இவை இரண்டிற்கும் இடைப்பட்ட ஒரு ஓசை ரு காரத்தில் உள்ளது. அதை இதைப் போன்று எண் குறியிட்டு விளக்க இயலாது. உதாரணமாக ருஷி, ரிஷி என்பதை உச்சரிக்க முடியும். ஆனால் இவ்விரண்டு பதங்களுக்கு இடைப்பட்ட ஒரு ஒலியை நன்கு வடமொழி அறிந்தவர்களிடம்தான் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். முயற்சித்தால் முடியாததும் உண்டோ!



## பொருளடக்கம்

ஸ்ரீ:

# ॥ श्रीमद्भगवद्गीता ॥

# ஸ்ரீமத் பகவத் கீதை




श्रीमद्धनुमद्भीम मध्वान्तर्गत रामकृष्ण
वेदव्यासात्मक लक्ष्मी हयग्रीवाय नमः ॥ ॐ ॥

ஸ்ரீமத் ஹனுமத்பீ4ம மத்4வாந்தர்க்கத ராமக்ருஷ்ண
வேத3வ்யாஸாத்மக லக்ஷ்மீஹயக்ரீவாய நம: ஓம்.

लक्ष्मीनारायणं नत्वा पूर्णबोधान् गुरूनपि ।
कुर्मः श्रीकृष्णगीतायाः भाष्याद्युक्तार्थ संग्रहम् ॥

லக்ஷ்மீ நாராயணம் நத்வா பூர்ணபே3ாத4ான் கு3ரூனபி |
குர்ம: ஸ்ரீக்ருஷ்ணகீ3தாயா: ப4ாஷ்யாத்யுக்தார்த்த2ஸங்க்ரஹம் ||

ஸ்ரீ லக்ஷ்மீநாராயணனை வணங்கி, அறிவு நிறைந்த ஸ்ரீ மத்வாசாரியர் என்ற கு[3]ருகளையும் வணங்கி, ஸ்ரீகிருஷ்ணரின் கீதைக்கு கீதாப[4]ாஷ்யம் முதலியதில் (கீதா தாத்பர்யத்தில்) கூறப்பட்ட அர்த்தங்களின் சுருக்கத்தைக் கூறுகிறோம்.

ஸ்ரீ பாகவதம் 1-4-25ல் ஸ்திரீகளுக்கும், ஶூத்திரர் களுக்கும், பிராம்மண பந்துக்களுக்கும் மூன்று வேதங்களும் காதுக்கு எட்டாதவை; ஆகையால் ப[4]ாரதம் என்ற இதிகாசம் கருணையுடன் ஸ்ரீவியாஸரால் செய்யப்பட்டது—எனக் கூறப் பட்டிருப்பதால் வேதார்த்தங்களை அறிவதில் தகுதியற்ற ஸ்த்ரீகளும், சூத்திரர்களும், பிராம்மண பந்துக்களும் தர்மங் களை அறிவதன்மூலம் மோக்ஷமடையலாம் எனக்கருதி ஸ்ரீ வேதவ்யாஸ பகவான், 1 ஸம்பவ (ஆதி), 2 ஸபா, 3 வன, 4 விராட, 5 உத்யோக, 6 பீஷ்ம, 7 துரோண, 8 கர்ண, 9 சல்ய, 10 கதா, 11 ஸௌப்திக, 12 சாந்தி, 13 அநுசாஸன, 14 அச்வ மேத, 15 மௌஸல, 16 மஹாப்ரஸ்தான, 17 ஸ்வர்க்கா ரோஹண, 18 பவிஷ்யத்—என்ற பதினெட்டு பர்வங்கள் அடங்கிய பாரதத்தைச் செய்து, அதில் பீஷ்ம பர்வத்தில் (25 முதல் 42 அத்தியாயங்கள் வரை) 18 அத்தியாயங்களில் பாரதமெனும் பாரிஜாத மரத்தின் தேனாகவும், முழு பாரதத்தின் அர்த்தத்தின் சுருக்கமாயும், ஸ்ரீகிருஷ்ணார் ஜுனர்களின் ஸம்வாதமாயுமுள்ள பகவத்கீதையை அமைத்துள்ளார்.

அதில் முதல் ஷட்கத்தில் (அதாவது முதல் ஆறு அத்தியாயங்களில்) ஞானத்தின் உபாயமும், 2ம் ஷட்கத்தில் (அதாவது இரண்டாவது ஆறு அத்தியாயங்களில்) அதனால் ஏற்பட்ட ஞானமும், 3ம் ஷட்கத்தில் (அதாவது மூன்றாவது ஆறு அத்தியாயங்களில்) முற்கூறப்பட்டவைகளின் விஸ்தார மும் செய்யப்படுகிறது என்பது விளக்கம். அதில் முதல் அத்தியாயமும், 2ம் அத்தியாயத்தில் சில (10) சுலோகங்களும் ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனுக்கு உபதேசிக்க நேர்ந்த ஸந்தர்ப் பத்தை விளக்க எழுந்தவை. அதன் அர்த்தம்:



# 1
# அர்ஜுன விஷாத யோகம்

(46 சுலோகங்கள்)

## முதல் அத்தியாயச் சுருக்கம்

அர்ஜுன விஷாத யோகம் - அர்ஜுனனின் மனச் சோர்வு. இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் துரியோதனனின் விஷாதமும், முடிவில் அர்ஜுனனின் விஷாதமும் (துக்கம், மனச்சோர்வு) ஏற்பட்டிருப்பதைக் காணலாம். உபக்ரமத்தை (ஆரம்பத்தை)க் காட்டிலும், உபஸம்ஹாரம் (முடிவு) உயர்ந்ததனால், அர்ஜுன விஷாதயோகம் எனக் கூறப்படுகிறது.

கீதோபதேசம் பாரதப்போரின் துவக்கத்திலேயே செய்யப்பட்டதாயினும், ஸஞ்ஜயன் அதைப் போரின் பத்தாம் நாளிரவில் திருதராஷ்டிரனிடம் கூறினான். ஆதலால், அப்போதுதான் வெளியாயிற்று எனலாம்.

குரு பாண்டவ சேனைகள் குருக்ஷேத்திரத்தில் ஒன்று சேர்ந்து முறையே பீஷ்மராலும், த்ருஷ்டத்யும்னனாலும், அணிவகுக்கப்பட்டுப் போருக்குத் தயாராயிருந்தன. துரியோதனன், பாண்டவ சேனையைக் கண்டு பயந்து, துரோணாசாரியரிடம் ஓடி, அவருடைய உதவியைப் பெரிதும் நாடினான். அர்ஜுனன், தேரோட்டியான ஸ்ரீ கிருஷ்ணரை, இரு சேனைகளின் நடுவில் தன் தேரை நிறுத்தும்படிக் கூறி, இரு சேனைகளில் உள்ளவர்களைப் பார்த்தான்.

அனைவரின் இந்திரியங்களைத் தூண்டும் ஸ்ரீ கிருஷ்ணர், அவனை நிமித்தமாகக் கொண்டு, லோகக்ஷேமார்த்தமாகக் கீதோபதேசத்தைச் செய்ய விரும்பி, அதற்குரிய விஷய வைராக்யம் முதலிய தகுதிகள் அவனுக்கு உண்டாகும்படித் தூண்டினார். இதை அங்குள்ள ஹ்ருஷீகேச: என்ற பதம் குறிக்கிறது. அர்ஜுனனும், தன் சகோதரர்களான துரியோதனன் முதலியோரையும், குருக்களான பீஷ்மர், துரோணர் முதலியோரையும் கொல்வதால், பாபமும் நரகமும் ஏற்படும் என்றும், கணக்கற்ற போர் வீரர்கள் மடிவதால், அவர்களின் ஸ்த்ரீகள் கற்பிழந்து, ஜாதிக்கலப்பு, ஜாதி தர்மங்களின் நாசம்,

முதலிய பல அனர்த்தங்கள் ஏற்படும் என்றும், கூறித தான் போர் புரியமாட்டேன் என்று சொல்லி, வில்லையும் அம்பையும் எறிந்துவிட்டு, போர் வீரனின் ஆஸனத்திலிருந்து இறங்கித் தேர்த்தட்டில் துக்கத்துடன் உட்கார்ந்தான்.

धृतराष्ट्र उवाच — **த்ருதராஷ்ட்ர: உவாச** - **திருதராஷ்டிரன் கேட்டான்:**

1. धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेताः युयुत्सवः ।
मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत संजय ॥

த[4]ர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா: யுயுத்ஸவ: |
மாமகா: பாண்ட[3]வாஸ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய || 1

**ஸஞ்ஜய** - *ஸஞ்ஜயா!* **தர்மக்ஷேத்ரே** - *தர்மஸாதன பூமியான,* **குருக்ஷேத்ரே** - *குருக்ஷேத்திரத்தில்,* **யுயுத்ஸவ: ஏவ** *யுத்தம் செய்ய விரும்பினவர்களாகவே,* **ஸமவேதா:**– *ஒன்று சேர்ந்த,* **மாமகா:**– *என் புத்திரர்களும்,* **பாண்டவா:ச** - *பாண்டுவின் புத்திரர்களும்,* **கிம் அகுர்வத** - *என்ன செய்தார்கள்? (தர்மயுத்தம் புரிந்தனரா? அதர்மயுத்தம் புரிந்தனரா?)* **இதி** *என்று.*

குறிப்பு: (1) இந்தக் கேள்வி யுத்தம் நடந்து பத்தாம் நாள் இரவில் கேட்கப்பட்டது. யுத்தம் ஆரம்பிக்கும் முன்னர் ஸ்ரீ வியாஸர் திருதராஷ்டிரனிடம் வந்து, 'நீ யுத்தத்தைப் பார்க்க விரும்பினால் கண்ணைக் கொடுக்கிறேன்'' என்றார். அவன், 'நான் பார்க்க விரும்பவில்லை. கேட்க விரும்புகிறேன்' என்றான். ஸ்ரீ வியாஸர் ஸஞ்ஜயனுக்குத் தூரத்ருஷ்டி, தூர சிரவணம், மனதிலுள்ளதையும் அறியும் சக்தி, பசி தாகமின்மை முதலிய வற்றைத் தந்து யுத்தத்தை அவனுக்கு வர்ணிக்கும்படி ஏற்பாடு செய்தார். அவனும் போர்க் களத்துக்குச் சென்று பத்து நாட்கள் தங்கி, பீஷ்மர் விழ்ந்ததும் திருதராஷ்டிரனிடம் வந்து 'பீஷ்மர் வீழ்த்தப்பட்டார். அம்புப் படுக்கையில் படுத்திருக்கிறார்' என்று கூறினான். திருதராஷ்டிரன் திடுக்கிட்டு எல்லா விபரங்களையும் முதலிலிருந்து கூறும்படி சொல்லி இந்தக் கேள்வியைக் கேட்டான்.

(2) ஸஞ்ஜயன் திருதராஷ்டிரனின் தேரோட்டியும் மந்திரியுமாவான கவல்கணனின் புதல்வன். காம க்ரோதங்களை **ஸம்யக் ஜயதி** - நன்றாக ஜயித்தவன், பக்ஷபாதமில்லாமல் உண்மையை உரைப்பவன்.

(3) 700 சுலோகங்களில் திருதராஷ்டிரன் 1, ஸஞ்ஜயன் 41, அர்ஜுனன் 84, ஸ்ரீகிருஷ்ண பகவான் 574.

(4) **மாமகா:**– என் புத்திரர்கள். என்னைப்போல் குருடர்களே என்றும், மாமனான சகுனியைச் சார்ந்தவர்கள் என்றும் பொருள்படும்.

(5) தம்பியின புத்திரர்களான பாண்டவர்களை நம்மவர்களல்லர் என்றதால் அவர்களிடமுள்ள வெறுப்பு வெளியாகிறது. பாண்டவர்கள் பகவானுக்குப் பிரியமானவர்கள் என்பதை உலகமே அறிந்திருக்க, திருதராஷ்டிரன் அறியாது, தன் புத்திரர்களின் ஜயத்தை அறிய ஸஞ்ஜயனைக் கேட்டான்.

संजय उवाच — **ஸஞ்ஜய: உவாச** - *ஸஞ்ஜயன் பதில் கூறினான் (9 சு) என்று வைசம்பாயனர் ஜன்மேஜயராஜனிடம் சொன்னார்).*

2. दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
आचार्यमुपसंगम्य राजा वचनमब्रवीत् ॥

த்$^3$ருஷ்ட்வா து பாண்ட$^3$வானீகம் வ்யூட$^4$ம் து$^3$ர்யோத$^4$னஸ்தத$^3$ா ।
ஆசார்யமுபஸங்க$^3$ம்ய ராஜா வசனமப்$^3$ரவீத் ॥ 2

**ராஜா துர்யோதன: து** - *அரசனான துர்யோதனனோ,* **ததா** *அப்பொழுது (யுத்தத்திற்காக ஒன்று கூடின சமயத்தில்),* **வ்யூடம்** - *அணிவகுக்கப்பட்ட,* **பாண்டவானீகம்** - *பாண்டவர்களின் சேனையை,* **த்ருஷ்ட்வாது** - *பார்த்ததுமே,* **ஆசார்யம்** - *துரோணாசாரியரை,* **உபஸங்கம்ய** - *அருகில் அணுகி,* **வசனம் அப்ரவீத்** - *வார்த்தையைச் சொன்னான்.*

குறிப்பு: (1) இதுமுதல் சுலோகம் 12 முடிய விமர்ச(ன)ம் செய்தால் அத்தியாயத்தின் ஆரம்பத்தில் துரியோதனனின் விஷாதம் (துக்கம்) வெளிப்படும். அத்தியாயத்தின் முடிவில் அர்ஜுனனின் விஷாதம் ஏற்பட்டது. இங்கு, அரசனான தனக்குக் கீழ்ப்பட்ட துரோணரைத் தன்னிடம் வரவழைக் காமல் தானே அவரிடம் சென்றது அவனுடைய துக்கத்தை அறிவிக்கிறது. சுலோகம் 12-ல் 'அவனுக்குச் சந்தோஷத்தையுண்டு பண்ண' என்ற வாக்கியம் இதை ஊர்ஜிதப்படுத்துகிறது.

(2) **து – ஏவ.** இதை ஒவ்வொரு பதத்துடன் சேர்த்து அர்த்தம் செய்து பார்த்தால் ஸ்வாரஸ்யமாயிருக்கும்.

(3) 'சொன்னான்' என்பதால் அவனுடைய வார்த்தைகளில் துரோணரைப் புகழ்ந்ததும், இகழ்ந்ததும் கூறும் இரு அர்த்தங்களுண்டு என அறிவிக்கிறது. (பாணிம் க்ருண்ஹீஷ்வ பாணினா - என்பதை ஒப்பிட்டுப் பார்க்க.)

*துரியோதனனுடைய வார்த்தைகளைக் கூறுகிறான்.*

पश्यैतां पाण्डुपुत्राणां आचार्य महतीं चमूम ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥

பச்யைதாம் பாண்டு$^3$புத்ராணாம் ஆசார்ய மஹதீம் சமூம் ।
வ்யூட$^4$ாம் த்$^3$ருபத$^3$புத்ரேண தவ சிஷ்யேண தீ$^4$மதா ॥ 3

**ஆசார்ய** - *குருவே! **தவ** - உம்முடைய*, **ஶிஷ்யேண** *சிஷ்யனாயும்*, **தீமதா** - *புத்திசாலியுமான*, **த்ருபதபுத்ரேண** *த்ருபதனின் பிள்ளையால் (த்ருஷ்டத்யும்னனால்)*, **வ்யூடாம்** - *அணி வகுக்கப்பட்ட*, **பாண்டு புத்ராணாம்** - *பாண்டவர்களின்*, **ஏதாம்** - *இந்த*, **மஹதீம்** - *பெரிய*, **சமூம்** - *சேனையை*, **பஶ்ய** *பாருங்கள்.*

**குறிப்பு:** (1) நீர் பாண்டவர்களுக்குத்தான் குரு. அவர்களிடம் பக்ஷபாதமுள்ளவர் என்பதை 'பாண்டுபுத்ரா ணாம் ஆசார்ய' என்றும் பொருள்படும்படிக் கூறுகிறான்.

(2) தன் சேனை 11 அக்ஷௌஹிணி, பாண்டவ சேனை 7 அக்ஷௌஹிணீதான் ஆயினும் பயத்தில் பாண்டவசேனை பெரிது என்கிறான்.

(3) ஶிஷ்யன் புத்திசாலி என்றதால் குரு அவ்வாறல்ல. தன்னைக் கொல்வதற்காகப் பிறந்த திருஷ்டத்யும்னனைச் சிஷ்யனாகக் கொண்டவர் என்று இகழ்கிறான்.

(4) த்ருபதனின் புத்திரன் என்றதால் துரோணருக்கும் துருபத ராஜனுக்கும் ஏற்பட்ட பழைய விரோதத்தை ஞாபகமூட்டி அவனை எதிர்க்கத் தூண்டுகிறான்.

*பாண்டவ சேனையில் 17 வீரர்களைக் குறிக்கிறான்.*

4. अत्र शूराः महेष्वासाः भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥

5. धृष्टकेतुः चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित् कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥

6. युधामन्युश्च विक्रान्तः उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रः द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥

அத்ர ஶூரா: மஹேஷ்வாஸா: பீ$^{4}$மார்ஜுன ஸமா யுதி$^{4}$ |
யுயுத$^{4}$ானோ விராடஸ்ச த்$^{3}$ருபத$^{3}$ஸ்ச மஹாரத$^{2}$: || 4

த்$^{3}$ருஷ்டகேது: சேகிதான: காசிராஜஸ்ச வீர்யவான் |
புருஜித் குந்திபே$^{4}$ாஜஸ்ச ஶைப்யஸ்ச நரபுங்க$^{3}$வ: || 5

யுத$^{4}$ாமன்யுஸ்ச விக்ராந்த: உத்தமௌஜாஸ்ச வீர்யவான் |
ஸௌப$^{4}$த்ர: த்$^{3}$ரௌபதே$^{3}$யாஸ்ச ஸர்வ ஏவ மஹாரத$^{2}$ா: || 6

**அத்ர** - *இந்தப் பாண்டவ சேனையில்*, **மஹா இஷ்வா ஸா:** *பெரிய வில்களையுடையவர்களும்*, **யுதி** *யுத்தத்தில்*, **பீமார்ஜுனஸமா:** - *பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் ஒப்பானவர் களுமான*, **ஶூரா:** - *சூரர்கள், (**ஸந்தி** - உள்ளனர்).* **மஹாரதா:** -

ஒருவராகவே 10000 வில்லாளிகளுடன் போர் புரிபவர் களும், ஆயுத சாஸ்திர நிபுணர்களாயுமுள்ள, 1 **யுயுதான:** - ஸாத்யகியும், 2 **விராட:ச** - விராடராஜனும், 3 **த்ருபத: ச** - த்ருபதராஜனும், **வீர்யவான்** - பலமுடையவர்களான, 4 **த்ருஷ்டகேது:** - சிசுபாலனின் புத்திரனும், 5 **சேகிதான:** - சிகிதானனின் புத்திரனும், 6 **காசிராஜ: ச** - காசிராஜனும், **நரபுங்கவ:** - புருஷசிரேஷ்டர்களான, 7 **புருஜித்** - குந்தியின் சகோதரனும், 8 **குந்திபோஜ: ச** - குந்தியின் தகப்பனாரும், 9.**சைப்ய:ச** - சிபிச்சக்ரவர்த்தியின் வம்சத்தினனும், **விக்ராந்த:** - பராக்கிரமமுள்ள, 10 **யுதாமன்யு:** - துருபதனின் புத்திரனும், **வீர்யவான்** - பலமுள்ள, 11 **உத்தமௌஜா:** - துருபதனின் புத்திரனும், 12 **ஸௌபத்ர:** ஸுபத்திரையின் புத்திரனான அபிமன்யுவும் **த்ரௌபதேயா: ச** - த்ரௌபதியின் புத்திரர் களும், **(13 ப்ரதி விந்த்யன், 14 சுருதஸோமன், 15 சுருதகீர்த்தி, 16 ஶதானீகன், 17 ஶ்ருதஸேனன்) ஸர்வ ஏவ** - இந்த 17 பேர் எல்லாருமே **மஹாரதா:** - மகாரதர்கள் (ஆவார்கள்).

குறிப்பு: (1) பீமார்ஜுனர்களுடைய பலத்தை துர்யோதனன் நன்கு அறிந்தவன். முக்கியமாக விராட பர்வத்தில் உலகிலுள்ள பலிஷ்டர்களைக் கணக்கிட்டு, 1 பீமன், 2 பலராமன், 3 ஶல்யன், 4 கீசகன் - இந்த வரிசையிலுள்ள நால்வரே என்றும், ஐந்தாமவன் இல்லையென்றும் கூறியிருக்கிறான். மறுமுறை சூதாடப் பாண்டவர்களை அழைத்து வரும்படி திருதராஷ்டிரனை வேண்டும்போது, ராமரைக் கண்டு மாரீசன் நடுங்கினதுபோல், தான் அர்ஜுனனைக் கண்டு நடுங்குவதாகக் கூறியிருக்கிறான்.

லக்ஷ்மண: லகுஸந்தான: தூரபாதீ ச ராகவ: |
கர்ண: த்ருடப்ரஹாரீச பார்த்தஸ்யைதே த்ரயோகுணா: ||

(2) சிலரின் பெயர்கள் அர்த்தத்துடன் கூடியவையாக அமைந்துள்ளன. யுயுதான - நன்கு யுத்தம் புரிபவன். (யுத்தத்தில் பிழைத்த 10 பேர்களில் ஸாத்யகி ஒருவன்.) விராட: **விஶேஷேண ரடயதி** - சத்ருக்களை விசேஷமாகக் கதற அடிப்பவன், புருஜித் - அநேகரை ஜயித்தவன், அபீ: - பயமற்றவன், மன்யுமான் - கோபமுள்ளவன்.

7. अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।
नायकाः मम सैन्यस्य संज्ञार्थं तान् ब्रवीमि ते ।।

அஸ்மாகம் து விஶிஷ்டா யே தான் நிபோத[4] த்[3]விஜோத்தம |
நாயகா: மம ஸைன்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்த[2]ம் தான் ப்[3]ரவீமி தே || 7

**து** - ஆனால், **த்விஜோத்தம** - பிராம்மண சிரேஷ்டரே! **அஸ்மாகம்** - நம்முடைய, **விஶிஷ்டா:** - பலிஷ்டர்களும், **மம** - என்னுடைய, **ஸைன்யஸ்ய** - சேனையின், **நாயகா:** - தலைவர்களும், **யே** - எவர்களோ, **தான்** - அவர்களை, **நிபோத** - நன்கு அறிவீராக. **தே ஸம்ஜ்ஞார்த்தம்** - நீர் நன்கு அறிந்து கொள்வதற்காக, **தான்** - அவர்களை, **ப்ரவீமி** - சொல்கிறேன்.

குறிப்பு: பிராம்மண சிரேஷ்டரே! - திக்பலம் க்ஷத்ரிய பலம், ப்ரஹ்மதேஜோ பலம் பலம் - என்றவாறு துரோணரைப் புகழ்ந்தும், ப்ராஹ்மணோ போஜனப்ரிய: - யுத்தத்திற்குத் தகுந்தவரல்ல என நிந்தித்தும் கூறுகிறான்.

*அவர்களை 2 சுலோகங்களில் கூறி 7 பேர்களை முக்கியமாகக் குறிப்பிடுகிறான்.*

८. भवान् भीष्मश्च कर्णश्च कृपश्च समितिंजयः ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिः तथैव च ॥

9. अन्ये च बहवः शूराः मदर्थे त्यक्तजीविताः ।
नाना शस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥

ப⁴வான் பீ⁴ஷ்மஸ்ச கர்ணஸ்ச க்ருபஸ்ச ஸமிதிஞ்ஜய: |
அஶ்வத்த²ாமா விகர்ணஸ்ச ஸௌமத³த்தி: ததை²வ ச || 8

அன்யே ச ப³ஹவ: ஶூரா: மதர்த்தே² த்யக்தஜீவிதா: |
நானா ஶஸ்த்ர ப்ரஹரணா: ஸர்வே யுத்த⁴ விஶாரதா: || 9

*1* **பவான்** - தாங்களும், *2* **பீஷ்ம: ச** - பீஷ்மரும், *3* **கர்ண: ச** - கர்ணனும், **ஸமிதிஞ்ஜய:** - யுத்தத்தில் ஜயசீலரான, *4* **க்ருப: ச** - (தங்கள் மைத்துனர்) கிருபாசார்யரும், *5* **அசுவத்தாமா** - (பிறக்கும்போதே குதிரைபோல் கனைத்த) உமது புத்திரனும், *6* **விகர்ண: ச** - என் தம்பியும், **ததைவ ச** - அவ்வாறே, *7* **ஸௌமதத்தி:** - ஸோமதத்தனின் புத்திரனான பூரிச்ரவஸ்ஸும், **அன்யே** - மற்ற, **பஹவ:** - பல, **ஶூரா:ச** - சூரர்களும் (சல்யன், பகதத்தன், க்ருதவர்மா (யுத்தத்தில் பிழைத்த பத்து பேர்களில் ஒருவன்), **மதர்த்தே** - என் பொருட்டு, **த்யக்த ஜீவிதா:** - உயிரை விட்டவர்களாய் (உயிரை விடத்துணிந்தவர்களாய் உள்ளனர்). **ஸர்வே** - எல்லோரும், **நானா ஶஸ்த்ர ப்ரஹரணா:** - பலவிதமான ஆயுதங்களையும் அஸ்திரங்களையும் உடையவர்கள். **யுத்த விசாரதா:** - போரில் நிபுணர்கள்.

**குறிப்பு: துர்யோதனனின் வார்த்தையில் நிந்திக்கும் அர்த்தம்: 1) தாங்கள் பிராம்மணர். க்ஷத்ரியர் அல்ல. பாண்டவ பக்ஷபாதி. 2) பீஷ்மர் -**

வயது முதிர்ந்தவர். பாண்டவ பக்ஷபாதி. 3) கர்ணன் குருவான பரசுராமரின் சாபத்திற்கு ஆளானவன். உடன்பிறந்த கவச குண்டலங்களை இழந்தவன். 4) கிருபர் - பெயரே கருணாமூர்த்தி. 5) அசுவத்தாமா - தந்தையாலேயே அர்ஜுனனை விடத் தாழ்த்தப்பட்டவன். 6) விகர்ணன் - துரௌபதி வஸ்திரா பஹரண காலத்தில் தமையனைக் கண்டித்தவன். 7) பூரி சிரவஸ் - சிவனின் பூர்ணானுக்கிரஹத்திற்குப் பாத்திரம் ஆகாதவன். **பஹவ: சேத் ஶூரா:** - பலர் சேர்ந்தால்தான் சூரர்கள், தனித்தனியாச சூரர்களல்லர். **த்யக்தஜீவிதா:–** அமங்களமான வார்த்தை. **நானாசஸ்த்ர ப்ரஹரணா:–** வல்லவனுக்குப் புல் ஆயுதமாயிருக்க, பல ஆயுதங்களைட் பெற்றிருத்தலாலே வல்லவர்களல்லர்.

இரு கக்ஷியிலுள்ள பலிஷ்டர்களைக் கணக்கிட்டதில் பாண்டவர்களை ஜயிப்பது சந்தேகம் என்கிறான்.

10. अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं तु इदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥

அபர்யாப்தம் தத$^{3}$ஸ்மாகம் ப$^{3}$லம் பீ$^{4}$ஷ்மாபி$^{4}$ரக்ஷிதம் |
பர்யாப்தம்து இத$^{3}$மேதேஷாம் ப$^{3}$லம் பீ$^{4}$மாபி$^{4}$ரக்ஷிதம் || 10

**பீஷ்ம அபிரக்ஷிதம்** - சேனாபதியான பீஷ்மரால் நன்கு காப்பாற்றப்படும், **அஸ்மாகம்** - நம்முடைய, **தத்** - அந்த (ஏழு பலிஷ்டர்களுடன் கூடிய), **பலம்** - சேனை, **அபர்யாப்தம்** - (பாண்டவர்களை ஜயிப்பதற்கு) போதாது (எனத் தோன்றுகிறது). **பீம அபி ரக்ஷிதம்** - பீமனால் நன்கு காப்பாற்றப்படும், **இதம்** - இந்த (17 பலிஷ்டர்களுடன் கூடிய). **ஏதேஷாம்** - இந்தப் பாண்டவர்களின், **பலம்து** - ஸேனையோ, **பர்யாப்தம்** - (நம்மை ஜயிப்பதற்கு) போதுமானது (எனத் தோன்றுகிறது).

குறிப்பு: 1) பாண்டவ சேனாபதியான த்ருஷ்டத்யும் னனை விட்டு, பீமனைக் கூறியதின் மர்மம்:- இளமை முதற்கொண்டே பீமனை ஜன்ம சத்ருவாகப் பாவித்து வந்தான். கலியின் அவதாரமான துர்யோதனன், ஜீவோத்தம ரான வாயுவின் அவதாரமான பீமனை அவ்வாறு கருதியது இயற்கையே. மேலும் பீஷ்மரின் பிரதிஜ்ஞை 'நான் இந்த எல்லோரையும் கொல்வேன், ஆனால் பாண்டவர்களைக் கொல்லமாட்டேன்' என்பது. பீமனுடைய பிரதிஜ்ஞையோ 'துரியோதனன் முதலிய நூறு பேர்களையும் நானே கொல்லப் போகிறேன்' என்பது. இந்த இருவரின் பிரதிஜ்ஞைகளும், இருவரைச் சேர்த்துக் கூறவும், ஜயத்தில் சந்தேகமடை வதற்கும், காரணமாயுள்ளன.

2) சிலர் இதற்கு மாறாக உரை கூறுகிறார்கள். அவர்கள் துர்யோதனனின் பக்ஷபாதிகள் போலும்.

துரோணர் 'நாம் என்ன செய்யவேண்டும்?" என்றதால் கூறுகிறான்.

11. अयनेषु च सर्वेषु यथाभागं अवस्थिताः।
भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥

அயனேஷு ச ஸர்வேஷு யத²ாப⁴ாகம் அவஸ்தி²தா: |
பீ⁴ஷ்மமேவாபி⁴ரக்ஷந்து ப⁴வந்த: ஸர்வ ஏவ ஹி || 11

**ஹி** - *ஆகையால்,* **பவந்த: ஸர்வே ஏவ** - *தாங்கள் எல்லோருமே,* **ஸர்வேஷு அயனேஷு** - *எல்லா நுழைவாயில் களிலும்,* **யதாபாகம்** - *குறிப்பிட்ட தத்தம் இடங்களில்,* **அவஸ்திதா:** - *விலகாமல் இருந்துகொண்டு,* **பீஷ்மம் ஏவ** - *பீஷ்மரையே,* **அபிரக்ஷந்து** - *நாலா பக்கங்களிலும் பாதுகாப் பீர்களாக (இவ்விதம் கூறி துக்கமடைந்தான்.)*

*பிறகு நடந்ததை ஸஞ்ஜயன் திருதராஷ்டிரனுக்குக் கூறுகிறான்.*

12. तस्य सञ्जनयन् हर्षं कुरुवृद्धः पितामहः।
सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान् ॥

தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷம் குருவ்ருத்த⁴: பிதாமஹ: |
ஸிம்ஹநாத³ம் விநத்³யோச்சை: ஶங்கம் த³த்⁴மௌ ப்ரதாபவான் || 12

**தஸ்ய** - *அவனுக்கு (இம்மாதிரி துக்கப்படும் துரியோதன னுக்கு),* **ஹர்ஷம்** - *சந்தோஷத்தை,* **ஸம்ஜனயன் ஜனயிதும்** - *நன்கு உண்டாக்குவதற்கு,* **ப்ரதாபவான்** - *பராக்கிரமசாலியும்,* **குருவ்ருத்த:** - *கௌரவர்களில் வயது முதிர்ந்தவரும்,* **பிதாமஹ:** - *பாட்டனாருமான பீஷ்மர்,* **ஸிம்ஹநாதம்** - *சிங்க கர்ஜனையை,* **உச்சை:** - *உரக்க,* **விநத்ய** - *விசேஷமாகச் செய்து,* **ஶங்கம்** - *சங்கை,* **தத்மௌ** - *ஊதினார்.*

**குறிப்பு:** பீஷ்மரும் துரியோதனனின் துக்கத்தை அறிந்து அவனைத் தேற்றவும், தான் வயோதிகராயினும் பராக்கிரமத்தில் இளையவனே, என்று நிரூபிக்கவும், ஸிம்ஹ நாதத்தையும், சங்கநாதத்தையும் செய்தார்.

13. ततः शङ्खाश्च भेर्यश्च पणावानक गोमुखाः।
महसैवाभ्यहन्यन्त स शब्दः तुमुलोऽभवत् ॥

தத: ஶங்காஸ்ச பே⁴ர்யஸ்ச பணவானக கே³ாமுக²ா: |
ஸஹஸைவாப்⁴யஹன்யந்த ஸ ஶப்த³: துமுலோ(அ)ப⁴வத் || 13

**தத:** - *(பீஷ்மர் சங்கை ஊதின) பிறகு,* **ஶங்கா: ச** - *(மற்றவர்களின்) சங்குகளும்,* **பேர்ய: ச** - *பேரிகைகளும்,* **பணவ ஆனக கோமுகா:** - *தம்பட்டம், பறை, கொம்பு முதலிய வாத்யவிசேஷங்களும்,* **ஸஹஸா ஏவ** - *ஒரே காலத்திலேயே,*

**அபி அஹன்யந்த** – *நன்கு முழங்கப்பட்டன,* **ஸ: ஶப்த:** – *அந்த சப்தம்,* **துமுல:** – *எங்கும் நிறைந்ததாக,* **அபவத்** – *ஆயிற்று.*

குறிப்பு: சுலோகம் 15 முதல் 19-வரையில் சங்கின் பெயர்களும் ஊதினவர்களின் பெயர்களும் கூறப்படுவதுபோலும்; அந்த சப்தம் துரியோதனாதியர்களின் மனதைப் பிளந்தது என்பது போலும்; இங்கு கூறப்படவில்லை. ஆதலால் பாண்டவர்களின் ஜயம் நிச்சயம் எனக் குறிக்கப்படுகிறது.

*பாண்டவ சேனையில் நிகழ்ந்ததைக் கூறுகிறான்.*

14. ततः श्वेतहयै युक्ते महति स्यन्दने स्थितौ ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥

தத: ச்வேதஹயைர் யுக்தே மஹதி ஸ்யந்த$^{3}$னே ஸ்தி$^{2}$தௌ |
மாத$^{4}$வ: பாண்ட$^{3}$வஸ்சைவ தி$^{3}$வ்யௌ ஶங்கௌ ப்ரத$^{3}$த்$^{4}$மது: || 14

**தத:** – *(அவர்களின் சப்தத்திற்குப்) பிறகு,* **ச்வேத ஹயை: யுக்தே** – *(நான்கு) வெள்ளைக் குதிரைகள் பூட்டிய,* **மஹதி** – *பெரிய, சிறப்பு வாய்ந்த.* **ஸ்யந்தனே** – *தேரில்,* **ஸ்திதௌ ஏவ** – *(துரியோதனன் குருவிடம் ஓடினது போல் அல்லாது) அமர்ந்தே இருந்த,* **மாதவ:** – *லக்ஷ்மீபதியும், மதுகுலத்திற் பிறந்தவருமான, ஸ்ரீகிருஷ்ணரும்,* **பாண்டவ:ச** – *பாண்டுவின் புத்திரனான அர்ஜுனனும்,* **திவ்யௌ** – *தெய்வத்தன்மை வாய்ந்த,* **ஶங்கௌ** – *இரு சங்குகளை,* **ப்ரதத்மது:** – *நன்கு ஊதினார்கள்.*

குறிப்பு: 1) சல்யபர்வம் 63வது அத்தியாயம், 12 முதல் 14 சுலோகம் :- நந்திகோஷம் என்ற தேர், யுத்த தளவாளங்களுடனும், அக்ஷயமான அம்புக்கூடுடனும், ஹனுமாரின் கொடியுடனும் காண்டவ வனத்தை எரிக்கும்போது அக்நி பகவானால் அர்ஜுனனுக்குத் தரப்பட்டது. யுத்தம் முடிந்ததும் தீப்பற்றியது. 2) ச்வேதர்ஹயை:– பிறர் பாடம்.

15. पाञ्चजन्यं हृषीकेशः देवदत्तं धनञ्जयः ।
पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥

பாஞ்சஜன்யம் ஹ்ருஷிகேச: தே$^{3}$வத$^{3}$த்தம் த$^{4}$னஞ்ஜய: |
பௌண்ட்ரம் த$^{3}$த்மௌ மஹாஶங்கம் பீ$^{4}$மகர்மா வ்ருகோத$^{3}$ர: || 15

**ஹ்ருஷீக ஈச:** – *(இந்திரியங்களின் ஸ்வாமியான) ஸ்ரீ கிருஷ்ணர்,* **பாஞ்சஜன்யம்** – *(பாஞ்சஜனன் என்ற அசுரனைக் கொன்று, அவன் எலும்பாலானதால் அப்பெயர் கொண்ட சங்கையும்,* **தனஞ்ஜய:** – *(ராஜஸூய யாகத்திற்காகச் செல்வத்தை ஜயித்துவந்த) அர்ஜுனன்,* **தேவதத்தம்** – *(தேவர்*

களால் கொடுக்கப்பட்டு) அப்பெயர் கொண்ட சங்கையும், **பீமகர்மா** – (ஹிடிம்பன் முதலிய பலரைக் கொன்றும்) பயங்கர காரியங்களைச் செய்யும், **வ்ருகோதர:** – (பக்தி, ஜ்ஞானம், வைராக்யம் முதலிய பத்து குணங்களையுடையவனும், விருகம் என்ற ஜாடராக்னியையுடையவனுமான) பீமன், **பௌண்ட்ரம்** – சத்ருக்களைக் கண்டிப்பதால்) அப்பெயர் கொண்ட, **மஹாசங்கம்** – பெரிய சங்கையும், **தத்மௌ** – ஊதினார்கள்.

16. अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोष मणिपुष्पकौ ॥

17. काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।
धृष्टद्युम्नः विराटश्च सात्यकिश्च अपराजितः ॥

18. द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शंखं दध्मुः पृथक् पृथक् ॥

அனந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதி$^{4}$ஷ்டிர: |
நகுலஸ் ஸஹதே$^{3}$வஸ்ச ஸுகே$^{4}$ாஷ மணிபுஷ்பகௌ || 16

காஶ்யஸ்ச பரமேஷ்வாஸ: ஶிக$^{2}$ண்டீ ச மஹாரத$^{2}$: |
த்$^{3}$ருஷ்டத்யும்ன: விராடஸ்ச ஸாத்யகிஸ்ச அபராஜித: || 17

த்ருபதே$^{3}$ா த்$^{3}$ரௌபதே$^{3}$யாஸ்ச ஸர்வஶ: ப்ருதி$^{2}$வீபதே |
ஸௌப$^{4}$த்ரஸ்ச மஹாப$^{3}$ாஹு: ஶங்கம் த$^{3}$த்$^{4}$மு: ப்ருத$^{2}$க் ப்ருத$^{2}$க் || 18

*16.* **குந்தீபுத்ர:** – குந்தியின் புதல்வனும், **ராஜா** – அரசனாகப் போகிறவனும், **யுதிஷ்டிர:** – (யுத்தத்தில் ஸ்திரமாய் இருப்பவனுமான) தருமபுத்திரன், **அனந்த விஜயம்** – (முடிவற்ற ஜயத்தைத் தருவதால்) அப்பெயர் கொண்ட சங்கையும் **நகுல:** – நகுலனும், **ஸஹதேவ: ச** – ஸஹதேவனும், **ஸுகோஷ மணிபுஷ்பகௌ** – (முறையே) நல்ல நாதமுடையதால் அப்பெயர் கொண்ட சங்கையும், மணிகளாலும் புஷ்பங் களாலும் அலங்கரிக்கப் பட்டிருந்ததால் அப்பெயர் கொண்ட சங்கையும்.

*17.* பரம **இஷ்வாஸ:** – உயர்ந்த வில்லாளியான, **காச்ய:ச** – காசிராஜனும், **மஹாரத:** – ஒருவனாகவே *10000* வில்லாளி களுடன் போர் புரியும், **ஶிகண்டீச** – துருபத புத்திரனும், **அபராஜித:** – தோல்வியை அடையாதவர்களான, **த்ருஷ்டத் யும்ன:** – துரௌபதியின் தமையனும், **விராட:** – மத்ஸ்யதேச ராஜனும், **ஸாத்யகி: ச** – (சுலோகம் 4ல்) யுயுதானனும்,

*18.* **த்ருபத:** – *துருபதராஜனும்,* **த்ரௌபதேயா:ச** – *த்ரௌபதியின் ஐந்து புத்திரர்களும்,* **மஹாபாஹு:** – *நீண்ட கைகளையுடைய,* **ஸௌபத்ர: ச** – *(ஸுபத்திரையின் புதல்வனான) அபிமன்யுவும் ஆகிய,* **ஸர்வஶ:** – *எல்லோரும்,* **ப்ருதிவீபதே** – *(இப்போது) பூமியின் அரசனான திருதராஷ்டிரனே!* **ப்ருதக் ப்ருதக்** – *தனித்தனியாக,* **ஶங்கம்** *(ஸமுதாயாபிப்ராய:) – தத்தம் சங்குகளை,* **தத்மு:** – *ஊதினார்கள்.* *(**சங்கான் –** பிறர் பாடம்).*

குறிப்பு: சிகண்டீ – எட்டு வஸுக்களில் த்யு என்பவர் ஶாபத்தால் பீஷ்மராகப் பிறந்தவர். அவர் மனைவியும் ஶாபத்தால் பீஷ்மரின் வதத்துக்குக் காரணமாக காசிராஜ குமாரியான அம்பாவாகப் பிறந்தாள். அவளே மறு ஜன்மத்தில் த்ருபத ராஜகுமாரியாகப் பிறந்தாள். பரமேச்வரனின் வார்த்தையால் புருஷனுக்குரிய கர்மாக்களைச் செய்வித்து, பெண்ணையும் விவாஹம் செய்வித்தான். ஓர் கந்தர்வனின் அருளால் புருஷதேகத்தை அடைந்தாள். அவன்தான் சிகண்டீ. (பாரதத்தில் அம்போபாக்யானம்).

19. स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥

ஸகே$^{4}$ாஷோ த$^{4}$ார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருத$^{3}$யானி வ்யத$^{3}$ாரயத் |
நப$^{4}$ஸ்ச ப்ருதி$^{2}$வீம் சைவ துமுலோ வ்யநுநாத$^{3}$யன் ||
19

**ஸ: கோஷ: ஏவ** – *அந்த முழக்கமே,* **துமுல:** – *எங்கும் பரவியதாய்,* **நப: ச** – *ஆகாயத்தையும்,* **ப்ருதிவீம் ச** – *பூமியையும்,* **வி அநுநாதயன்** – *விசேஷமாக எதிரொலிக் கும்படி செய்துகொண்டு,* **தார்த்தராஷ்ட்ராணாம்** – *உமது புத்திரர்களுடைய,* **ஹ்ருதயானி** – *இதயங்களை,* **வி அதாரயத்** – *விசேஷமாகப் பிளந்தது, (இப்போதே குருவம்சம் அழிந்து விட்டது என உமது புத்திரர்கள் நினைத்தனர்.)*

குறிப்பு: பாரதம் வனபர்வத்தில் ஹனுமத் பீம ஸம்வா தத்தில், ஹனுமார், அர்ஜுனனின் தேர்க்கொடியில் ஸகல பூதங்களுடன் அமர்ந்திருந்து, பீமனின் சிம்மகர்ஜனையைத் தன் கர்ஜனையுடன் சேர்த்து, அதிகப்படுத்துவதாகக் கூறிய படி செய்ததாலும், ஸ்ரீ கிருஷ்ண பகவானின் அநுக்ரஹத் தாலும், இந்த சப்தம் அவர்களின் இதயங்களைப் பிளந்தது.

*கீதோபதேசத்துக்குரிய அர்ஜுனனின் விஷாதத்தைக் கூறுவதற்கு முகவுரையாக அர்ஜுனனின் செய்கையை 4 சுலோகங்களில் கூறுகிறான்.*

20. अथ व्यवस्थितान् दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पाण्डवः ॥

21. हृषीकेशं तदा वाक्यं इदमाह महीपते ।

அத[2] வ்யவஸ்தி[2]தான் த்[3]ருஷ்ட்வா த[4]ார்த்தராஷ்ட்ரான் கபித்[4]வஜ: |
ப்ரவ்ருத்தே ஶஸ்த்ரஸம்பாதே த[4]னுருத்[3]யம்ய பாண்ட[3]வ: || 20

ஹ்ருஷிகேசம் தத[3]ா வாக்யம் இத[3]மாஹ மஹீபதே |

**அத** - பிறகு, **கபித்வஜ:** - ஹனுமாரைக் கொடியில் உடைய, **பாண்டவ:** - பாண்டுபுத்திரனான அர்ஜுனன், **தார்த்தராஷ்ட்ரன்** - உமது புத்திரர்கள், **வ்யவஸ்திதான்** - யுத்தத்தில் நிச்சயமுள்ளவர்களாயிருப்பதை, **த்ருஷ்ட்வா** - கண்டு, **சஸ்த்ர ஸம்பாதே** - ஆயுதங்களை வீசி எறிதல், **ப்ரவ்ருத்தே** *(ஸதி)* - நேர்ந்தபொழுது *(சமீபித்தபோது)*, **தனு:** - *(காண்டீவம் என்ற)* வில்லை, **உத்யம்ய** - கையில் ஏந்தி, **ததா** - அப்போது, **ப்ருதிவீ பதே** - அரசனான திருதராஷ்டிரனே! **ஹ்ருஷீகேஶம்** - அனைவரின் இந்திரியங்களுக்கு ஸ்வாமியான ஸ்ரீ கிருஷ்ணரிடம், **இதம் வாக்யம்** - இந்த *(பின்வரும்)* வார்த்தையை, **ஆஹ** - சொன்னான்.

குறிப்பு: 1) கீதோபதேச முகவுரையிலேயே மங்கள கரமான அத என்ற ஶப்தம் உளது. (அத ஶப்தோ மங்களார்த்த:) அதற்கு அதிகாரி அர்ஜுனன் என்றும் (அதிகார ஆனந்தர் யார்த்தஸ்ச) வைராக்யம் முதலியன ஏற்படுவதையும் குறிக்கிறது.

2) **ஹ்ருஷீகேச:** - அர்ஜுனனின் இந்திரியங்களைத் தூண்டி உபதேஶத்திற்குத் தகுந்தவனாகவும், சேனை வீரர்களின் இந்திரியங்களைத் தூண்டி உபதேசம் முடியும் வரையில் அசைவற்று இருப்பவர்களாயும் செய்தார்.

3) தருமருக்கு மிருதங்கக் கொடி, பீமனுக்கு சிங்கக் கொடி, நகுலனுக்கு சரபக் கொடி, ஸஹதேவனுக்கு ஹம்ஸக் கொடி, துர்யோதனனுக்கு பாம்புக் கொடி.

அர்ஜுனனின் வார்த்தைகளை 2½ சுலோகங்களில் கூறுகிறான்.

अर्जुनः उवाच — **அர்ஜுன: உவாச** - அர்ஜுனன் கூறினான்.

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥

22. यावदेतान् निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यं अस्मिन् रणसमुद्यमे ॥

ஸேனயோருப4யோர் மத்4யே, ரத2ம் ஸ்த2ாபய மேऽச்யுத || 21

யாவதே3தான் நிரீக்ஷேऽஹம், யோத்து4காமான் அவஸ்தி2தான் |
கைர் மயா ஸஹ யோத்த4வ்யம், அஸ்மின் ரணஸமுத்3யமே || 22

23. योत्स्यमानान् अवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेः युद्धे प्रियचिकीर्षवः ।।

யோத்ஸ்யமானான் அவேக்ஷேऽஹம், ய ஏதேऽத்ர ஸமாக3தா: |
த4ார்த்தராஷ்ட்ரஸ்ய து3ர்பு3த்தே4:, யுத்தே4 ப்ரியசிகீர்ஷவ: || 23

*21.* **அச்யுத** - *தேசம், காலம், குணம் இவற்றால் நழுவாதவரே! பக்தர்களை நழுவவிடாதவரே!; (சு. 22)* **அஸ்மின்** - *இந்த;* **ரணஸமுத்யமே** - *போர் முயற்சியில்;* **கை: ஸஹ** - *யாருடன்கூட;* **மயா** - *என்னால்;* **யோத்தவ்யம்** - *போர் புரியத் தகுந்தது; (சு. 23)* **துர்புத்தே:** - *துஷ்டபுத்தியுள்ள;* **தார்த்தராஷ்ட்ரஸ்ய** - *துரியோதனனுக்கு;* **யே ஏதோ** - *எந்த இவர்கள்;* **யுத்தே** - *சண்டையில்;* **ப்ரியசிகீர்ஷவ:** - *பிரியத்தைச் செய்ய விரும்புகிறவர்களாய்;* **அத்ர** - *இங்கு;* **ஸமா கதா:** - *வந்திருக்கின்றனரோ: (சு. 22)* **ஏதான்** - *இந்த;* **யோத்துகாமான்** - *போர் புரிய ஆசையுள்ளவர்களாய்;* **அவஸ்திதான்** - *இருப்பவர் களை;* **யாவத்** - *எதுவரையில்;* **அஹம்** - *நான்;* **நிரீக்ஷே** - *நன்கு பார்ப்பேனோ; (சு. 23)* **யோத்ஸ்யமானான்** - *போர்புரியப் போகிறவர்களை;* **அஹம்** - *நான்;* **அவேக்ஷே** - *பார்ப்பேனோ; (தாவத் - அதுவரையில்); (சு. 21)* **உபயோ: ஸேனயோ** - *இரு சேனைகளின்;* **மத்யே** - *நடுவில்;* **மே ரதம்** - *என்னுடைய தேரை;* **ஸ்தாபய** - *நிறுத்தும்.*

**குறிப்பு: 'அஹம் - நான்' என்று இருமுறை அஹங்காரத்துடனும், 'மயா - என்னால், மே - என்னுடைய', என்று மமகாரத்துடனும் பேசுவதைக் கவனிக்க.**

सञ्जय उवाच — **ஸஞ்ஜய: உவாச** - ஸஞ்ஜயன் கூறினான்.

24. एवमुक्तो हृषीकेशः गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ।।

25. भीष्मद्रोण प्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान् समवेतान् कुरूनिति ।।

ஏவமுக்தோ ஹ்ருஷிகேஶ:, குட3ாகேஶேன ப4ாரத |
ஸேனயோ ருப4யோர் மத்4யே, ஸ்த2ாபயித்வா ரதே2ாத்தமம் || 24

பீ4ஷ்மத்ரோண ப்ரமுக2த:, ஸர்வேஷாம் ச மஹீக்ஷிதாம் |
உவாச பார்த்த பச்யைதான், ஸமவேதான் குரூனிதி || 25

24) **பாரத** – பரதவம்சத்திற் பிறந்த திருதராஷ்டிரரே! **ஏவம்** – இம்மாதிரி; **குடாகா ஈசேன** – தூக்கத்தை வென்ற அர்ஜுனனால்; **உக்த:** – சொல்லப்பட்ட; **ஹ்ருஷீகேச:** – அனைவரின் இந்திரியங்களின் ஸ்வாமியான ஸ்ரீ கிருஷ்ணர்; **ரதோத்தமம்** – சிறந்த தேரை; **உபயோ: ஸேனயோ: மத்யே** – இரு சேனைகளின் நடுவில்; (சு. 25) **பீஷ்மத்ரோண ப்ரமுகத:** – பீஷ்மருக்கும் துரோணருக்கும் எதிரிலும்; **ஸர்வேஷாம் மஹீக்ஷிதாம் ச (ப்ரமுகத:)** – எல்லா அரசர்களின் எதிரிலும், (சு. 24) **ஸ்தாபயித்வா** – நிறுத்திவிட்டு; (சு. 25) **பார்த்த** – (என் அத்தையான) ப்ருதா என்ற குந்தியின் புத்திரனே! **ஸமவே தான்** – (யுத்தத்திற்காக) ஒன்று கூடியுள்ள; **ஏதான் குரூன்** – இந்தக் கௌரவர்களை; **பச்ய** – பார்; **இதி உவாச** – என்று சொன்னார்.

26. तत्रापश्यत् स्थितान् पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान् मातुलान् भ्रातॄन् पुत्रान् पौत्रान् सखींस्तथा ॥
श्वशुरान् सुहृदश्चैव सेनयोरुभयोरपि ॥

தத்ராபச்யத் ஸ்தி2தான் பார்த்த2:, பித்ரூனத2 பிதாமஹான் |
ஆசார்யான் மாதுலான் ப்4ராத்ரூன், புத்ரான் பௌத்ரான் ஸகீம்
ஸ்த2தா || ச்வசுரான் ஸுஹ்ருத3ஸ்சைவ, ஸேனயோ ருப4யோரபி || 26

**அத** – பிறகு; **பார்த்த;** – குந்தீ புத்திரனான அர்ஜுனன்; (எழுந்து நின்று) **தத்ர** – அங்கு; **உபயோ: ஸேனயோ: அபி** – இரு சேனைகளிலும்; **ஸ்திதான்** – இருந்த; **பித்ருன்** – *பாண்டு போல தந்தை போன்றவர்களையும்; **பிதாமஹான்** – பீஷ்மர் போல, பாட்டனார் போன்றவர்களையும்; **ஆசார்யான்** – துரோணர்போல, குரு போன்றவர்களையும்; **மாதுலான்** – புருஜித், சல்யன்போல, மாமன் போன்றவர்களையும்; **ப்ராத்ரூன்** – துர்யோதனாதியர்போல சகோதரர் போன்றவர் களையும்; **புத்ரான்** – அபிமன்யுபோல, புதல்வர் போன்றவர் களையும்; **பௌத்ரான்** – பேரன் போன்றவர்களையும்; **ஸகீன் ததா** – நண்பர்களையும்; **ச்வசுரான்** – துருபதன் போல, மாமனார் போன்றவர்களையும்; **ஸுஹ்ருத: ச** – ஸாத்யகிபோன்று பிரதியுபகாரத்தை எதிர்பாராது உதவி

புரிபவர்களையும்; **அபச்யத்** – பார்த்தான், **ஏவ** – (இதை அடுத்த சுலோகத்தில் சேர்த்துப் படிக்க.)

**குறிப்பு:** *(1) உண்டுபண்ணுபவர், (2) உபநயனம் செய்விப்பவர், (3) கல்வியைக் கற்பிப்பவர், (4) அன்னம் தந்து போஷிப்பவர், (5) பயத்திலிருந்து பாதுகாப்பவர் இந்த ஐந்து பேரும் தந்தையாவார்கள்.

27. तान् समीक्ष्य स कौन्तेयः सर्वान् बन्धूनवस्थितान् ।
कृपया परयाऽऽविष्टो विषीदन् इदमब्रवीत् ॥

தான் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய:, ஸர்வான் பந்தூ[4]ன் அவஸ்தி[2]தான் |
க்ருபயா பரயா(ஆ)விஷ்ட:, விஷீத[3]ன் இத[3]மப்[3]ரவீத் || 27

**கௌந்தேய:** – குந்தீபுத்திரனான; **ஸ:** – அந்த அர்ஜுனன்; **தான்** – அந்த; **அவஸ்திதான்** – யுத்தத்தில் தீர்மானத்துடன் உள்ள; **ஸர்வான் பந்தூன்** – பந்துக்கள் அனைவரையும்; **ஸமீக்ஷ்ய ஏவ** – உற்றுப் பார்த்ததுமே; **பரயா க்ருபயா** – அதிகமான கருணையினால்; **ஆவிஷ்ட:** – கவரப் பட்டு; **விஷீதன்** – (மோகத்தால் ஏற்பட்ட துக்கத்தினால்) மனக்கலக்கமுடையவனாய்; **இதம்** – (பின்வரும்) இந்த வார்த்தையை; **அப்ரவீத்** – சொன்னான்.

**குறிப்பு: உபகாரம் கர்த்துமிச்சா, க்ருபேத யாஹுர் மனீஷிண:** உபகாரம் செய்யவேண்டும் என்ற விருப்பத் திற்குக் கிருபை என்று பெயர். குந்தீபுத்திரன் ஆனதால் இவனுக்கு கிருபையுண்டாயிற்று எனலாம். ஏகசக்ரா நகரத்தில் தங்கியிருந்த வீட்டுக்காரருக்குப் பகாசுரனின் நிமித்தம் ஏற்பட்ட துக்கத்தைக் கண்டு, குந்தி கருணையால் பீமனைத் தந்து உதவி புரிந்தாள் என்ற கதையைக் **கௌந்தேய:** என்ற பதம் குறிக்கிறது.

அர்ஜுனனின் வார்த்தைகளைக் கூறுகிறான். (சுலோகம் 28–45).

अर्जुनः उवाच - **அர்ஜுன: உவாச** – அர்ஜுனன் கூறினான்.

28. दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ।
सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ॥

த்[3]ருஷ்ட்வேமம் ஸ்வஜனம் க்ருஷ்ண, யுயுத்ஸூம் ஸமுபஸ்[2]திதம் |
ஸீத[3]ந்தி மம க[3]ாத்ராணி, முக[2]ம் ச பரிஶுஷ்யதி || 28

**க்ருஷ்ண** – (கூர்ம புராணத்தின்படி) உலகமனைத் தையும் நியமனம் செய்து இழுப்பவரே! **யுயுத்ஸூம்** – போர் புரிய விரும்பி; **ஸமுபஸ்திதம்** – உறுதியுடன் அருகில் நிற்கும்; **இமம் ஸ்வஜனம்** – இந்த பந்துக்களை; **த்ருஷ்ட்வா** – பார்த்து; **மம காத்ராணி** – என்னுடைய கைகால் முதலிய அவயவங்கள்;

**ஸீதந்தி** - சோர்வடைகின்றன. **முகம் ச** - முகமும்; **பரிஶுஷ்யதி** - சுற்றிலும் உலர்கிறது.

29. वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ।
गाण्डीवं स्त्रवते हस्तात् त्वक् चैव परिदह्यते ॥

வேபது[2]ஸ்ச ஶரீரே மே, ரோமஹர்ஷஸ்ச ஜாயதே |
காண்டீ[3]வம் ஸ்ரவதே ஹஸ்தாத், த்வக் சைவ பரித[3]ஹ்யதே || 29

**மே சரீரே** - என் உடலில்; **வேபது: ச** - நடுக்கமும்; **ரோம ஹர்ஷ: ச** - மயிர்க்கூச்சும்; **ஜாயதே** - உண்டாகிறது; **காண்டீவம்** - அப்பெயருள்ள வில்; **ஹஸ்தாத்** - கையிலிருந்து; **ஸ்ரவதே** - நழுவிக் கீழே விழுகிறது; **த்வக் ச** - மேல் தோலும்; **பரிதஹ்யதே ஏவ** - எங்கும் எரிகிறது நிச்சயம் (**ஸ்ரம்ஸதே** – பிறர் பாடம்).

குறிப்பு: காண்டீவத்தின் மகிமை உத்யோகபர்வம் 96, 98 அத்தியாயங்களில் விஸ்தரிக்கப்பட்டுள்ளது.

30. न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ।
निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ॥

ந ச ஶக்னோம்யவஸ்த[2]ாதும், ப்[4]ரமதீவ ச மே மன: |
நிமித்தானி ச பச்யாமி, விபரீதானி கேஶவ || 30

**கேசவ – க:** - பிரம்மா; **ஈச:** - சிவன்; இருவரையும் சிருஷ்டி முதலியவற்றால் நியமிப்பவரே! **அவஸ்தாதும் ச** - நிலையாக நிற்கவும்; **ந ஶக்னோமி** - என்னால் முடியவில்லை; **மே மன: ச** - என்னுடைய மனதும்; **ப்ரமதி இவ:** - சுற்றுவது போல் தோன்றுகிறது; **விபரீதானி நிமித்தானி ச** - அபசகுனங்களையும்; **பச்யாமி** - காண்கிறேன்.

குறிப்பு: கே சவா: இதி தே ப்ரோக்தா; யேஷாம் ஹ்ருதி[3] ந கேசவ: கேசவார்ப்பித சித்தா யே, ந சவா: ந புனர் ப[4]வா:||

பிரம்மருத்ர நியாமகனான கேசவன் யாருடைய மனதில் இல்லையோ, அவர்கள் ஜலத்தில் (மிதக்கும்) பிணங்கள் எனப்படுவர். கேசவனிடம் அர்ப்பணம் செய்த மனத்தினர்கள் யாரோ, அவர்கள் பிணங்களுமல்லர், மறு பிறப்புள்ளவர்களுமல்லர். கேசவ: க்லேஶ நாசன: - கேஶவன் என்ற பெயர் அநர்த்தத்தைப் போக்கும்.

ஸ்ரீ கிருஷ்ணர்: - அர்ஜுனா! இந்த அபசகுனங்கள் துரியோதனாதிகளுக்குத்தான், உனக்கு அல்ல, யுத்தத்தால் உனக்கு ஶ்ரேயஸ் உண்டாகும்.

31. न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ।
न कांक्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ॥
किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥

ந ச ஶ்ரேயோऽநுபச்யாமி, ஹத்வா ஸ்வஜன மாஹவே |
ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண, ந ச ராஜ்யம் ஸுக[2]ானிச ||
கிம் நோ ராஜ்யேன கோவிந்த[3], கிம் பே[4]ாகைர் ஜீவிதேன வா || 31

**ஆஹவே** – *போரில்;* **ஸ்வஜனம்** – *நம் பந்துக்களை;* **ஹத்வா** – *கொன்று;* **அநு** – *அதையொட்டிய;* **ச்ரேய: ச** – *பரலோக நன்மையையும்;* **ந பச்யாமி** – *நான் காணவில்லை.* **க்ருஷ்ண** – *உலகமனைத்தையும் இழுப்பவரே!* **விஜயம்** – *(இவ்வுலகில்) விசேஷ ஜயத்தையும்; விஜயன் என்ற என் பெயரையும்;* **ந காங்க்ஷே** – *விரும்பவில்லை.* **ராஜ்யம் ச** – *(ஜயத்தினால் கிடைக்கும்) ராஜ்யத்தையும்;* **ஸுகானி ச** – *(ராஜ்யத்தால் கிடைக்கும்) சுகங்களையும்;* **ந** – *விரும்ப வில்லை.* **கோவிந்த** – *வேதங்களால் கூறப்படுபவரே!* **(கவாம் இந்த்ர:)** *பசுக்களின் ஸ்வாமியே!* **(காம் ஸமயோசிதாம் வாசம் விந்ததி)** *சமயோசித மாய்ப் பேசுபவரே!* **ந:** – *நமக்கு (எனக்கு மாத்திரமல்ல, தருமர் முதலிய நால்வருக்கும்கூட);* **ராஜ்யேன** – *ராஜ்யத்தினால்;* **கிம்** – *என்ன பிரயோஜனம்?* **போகை:** – *(அதனால் கிடைக்கும்) சுகங்களினாலும்;* **வா** – *அல்லது;* **ஜீவிதேன** – *பிழைத் திருப்பதினாலும்;* **கிம்** – *என்ன பிரயோஜனம்? (ஒன்றுமில்லை).*

குறிப்பு: (1) விராடபர்வம் அத்தியாயம் 21-43ல் அர்ஜுனனின் பத்து பெயர்கள்:- (1) அர்ஜுன, (2) பல்குன, (3) ஜிஷ்ணு, (4) கிரீடீ, (5) ச்வேதவாஹன, (6) பீபத்ஸு, (7) விஜய, (8) பார்த்த, (9) ஸவ்யஸாசீ, (10) தனஞ்ஜய:- இந்தப் பத்துப் பெயர்களையும், பிரதி தினமும் உச்சரிப்பவர்களைச் சத்ருக்கள் கொல்ல முடியாது. அவர்கள் துஷ்ட ஜந்துக்களையும் காண மாட்டார்கள் (சு. 50).

(2) உத்யோக பர்வம் 47-39.

*ரிணம் ப்ரவ்ருத்தமிவ மே, ஹ்ருதயாத் நாபஸர்ப்பாதி |*
*கோவிந்தேதி யதா க்ரந்தத், க்ருஷ்ணா மாம் தூர வாஸினம் ||*

பகவானை, கோவிந்தா! என்று ஒருமுறை கூப்பிட்டால், தான் கடன்பட்டவர் எனவும், 2-ம் முறை கூப்பிட்டால், கடனுக்கு வட்டி உண்டு எனவும், 3-ம் முறை கூப்பிட்டால், வட்டிக்கு வட்டியுண்டு எனவும் அவர் நினைக்கிறார்.

ஸ்ரீ கிருஷ்ணர்: - நீ ஏன் இவ்வாறு கூறுகிறாய்?

32. येषामर्थे कांक्षित नो राज्यं भोगाः सुखानि च ।
त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥

யேஷாமர்த்தே[2] காங்க்ஷிதம் நோ, ராஜ்யம் பே[4]ாகாஸ் ஸுக[2]ானி ச |
த இமேSவஸ்தி[2]தா யுத்தே[4], ப்ராணாம்ஸ் த்யக்த்வா த[4]னானி ச || 32

**யேஷாம் அர்த்தே** - *எவர்களின் பிரயோஜனத்தின் பொருட்டு;* **ராஜ்யம்** - *அரசு;* **ந: காங்க்ஷிதம்** - *நம்மால் விரும்பப்படுகிறதோ;* **போகா:** - *சௌக்கியங்களும்;* **ஸுகானி ச** - *சுகங்களும் (விரும்பப்படுகின்றனவோ).* **தே இமே** - *அந்த இவர்கள்;* **ப்ராணான்** - *உயிர்களையும்;* **தனானி ச** - *(வெளி உயிர்களான)* **செல்வங்களையும்; த்யக்த்வா** - *விட்டு விட்டு;* **யுத்தே** - *போரில்;* **அவஸ்திதா:** - *உறுதியாக நிற்கின்றனர்.*

ஸ்ரீ கிருஷ்ணர்: - அவர்கள் யார்?

33. आचार्याः पितरः पुत्राः तथैव च पितामहाः ।
मातुलाः श्वशुराः पौत्राः श्यालाः संबन्धिनस्तथा ॥

ஆசார்யா: பிதர: புத்ரா:, ததை[2]வ ச பிதாமஹா: |
மாதுலா: ஶ்வஶுரா: பௌத்ரா:, ச்யாலா: ஸம்பந்தி[4]னஸ்தத[2]ா || 33

**ஆசார்யா:** - *குரு போன்றவர்களும்;* **பிதர:** - *தந்தை போன்றவர்களும்;* **புத்ரா:** - *புதல்வர் போன்றவர்களும்;* **ததா** - *அப்படியே;* **பிதாமஹா: ச** - *பாட்டனார் போன்றவர்களும்;* **மாதுலா:** - *தாய்மாமன் போன்றவர்களும்;* **ஶ்வஶுரா:** - *மாமனார் போன்றவர்களும்;* **பௌத்ரா:** - *பேரன் போன்றவர்களும்;* **ச்யாலா:** - *மைத்துனன் போன்றவர்களும்,* **ததா** - *அவ்வாறே;* **ஸம்பந்தின:** - *உறவினர்களும் (ஆவார்).* **ஏவ** - *(இதை அடுத்த சுலோகத்தில் சேர்த்துப் படிக்க.)*

ஸ்ரீ கிருஷ்ணர்: - அவர்கள் உன்னைக் கொல்லப் போகிறார்களே, நீ அவர்களைக் கொல்லவேண்டாமா?

34. एतान् न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।
अपि त्रैलोक्य राज्यस्य हेतोः किं नु महीकृते ॥

ஏதான் ந ஹந்து மிச்சாமி, க்[4]னதோSபி மது[4]ஸூத[3]ன |
அபி த்ரைலோக்ய ராஜ்யஸ்ய, ஹேதோ: கிம்நு மஹீக்ருதே || 34

**மதுஸூதன** - *மது என்ற அசுரனைக் கொன்றவரே!* **க்னத:** - *என்னைக் கொல்லும்;* **ஏதான் அபி** - *இவர்களைக் கூட;* **ஹந்தும்** - *கொல்வதற்கு;* **ந ஏவ இச்சாமி** - *விரும்பவே மாட்டேன்;* **த்ரைலோக்யராஜ்யஸ்ய அபி ஹேதோ:** - *மூவுலகங்*

களாகிற ராஜ்யத்தின் பொருட்டுகூட (கொல்ல மாட்டேன்); **மஹீக்ருதே** – இந்த அற்பமான பூமியின் பொருட்டு; **கிம்நு** – கேட்பானேன்?

**ஸ்ரீ கிருஷ்ணர்: – அநிஷித்த ஸுகத்யாகீ, பசுரேவ ந ஸம்சய: | சாஸ்திரங்களில் தடுக்கப்படாத சுகங்களை விட்டுவிடுபவன் மிருகமே, ஸந்தேகமில்லை. ஆகவே, நீ ஏன் இந்த சுகங்களை விடுகிறாய்?**

35. निहत्य धार्तराष्ट्रान् नः का प्रीति स्याज्जनार्दन ।
पापमेवाश्रयेदस्मान् हत्वैतान् आततायिनः ।।

நிஹத்ய த⁴ார்த்தராஷ்ட்ரான் ந:, கா ப்ரீதி: ஸ்யாத் ஜநார்த³ன |
பாபமேவாஶ்ரயே த³ஸ்மான், ஹத்வைதான் ஆததாயின: || 35

**ஜநார்தன** – *(3-1, 10-18)* பிறப்பில்லாதவரும், ஸம்ஸாரத்தை அழிப்பவருமானவரே! துஷ்ட ஜனங்களைக் கொல்பவரே! பக்த ஜனங்களினால் வேண்டப்படுபவரே! **தார்த்தராஷ்ட்ரான்** – பெரியப்பாவான திருதராஷ்டிரரின் புத்திரர்களையும், அவருடைய சம்பந்தமுள்ள பீஷ்மர் துரோணர் முதலியோரையும்; **நிஹத்ய** – கொன்று; **ந:** – நமக்கு; **கா ப்ரீதி:** – என்ன ஐஹிக சுகம்; **ஸ்யாத்** – ஏற்படும்? (ஒன்றுமில்லை); **ஆததாயின:** – *(1)* தீ வைப்பவன், *(2)* விஷமிடுபவன், *(3)* ஆயுதங்களைக் கையில் ஏந்தினவன், *(4)* பணத்தைக் கொள்ளையடிப்பவன், *(5)* நிலத்தை அபஹரிப் பவன், *(6)* மனைவியைத் திருடுபவன் – இந்த அறுவர்களில் ஒருவனே ஆததாயி ஆவான். ஆறையும் செய்தவர்களான; **ஏதான்** – இவர்களை; **ஹத்வா** – கொன்று; **பாபம் ஏவ** – (பர லோகத்தில் துக்கத்துக்குக் காரணமான) பாபமே; **அஸ்மான்** – நம்மை; **ஆச்ரயேத்** – அணுகும்.

**ஸ்ரீ கிருஷ்ணர்: – மனுஸ்மிருதியில் (8-350) ஆததாயியைக் கட்டாயம் கொல்லவேண்டும். அவனைக் கொல்வதால் யாதொரு தோஷமுமில்லை எனக் கூறப்பட்டுள்ளதே!**

36. तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान् सबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ।।

தஸ்மாத் நார்ஹா வயம் ஹந்தும், த⁴ார்த்தராஷ்ட்ரான் ஸப³ாந்த⁴வான் |
ஸ்வஜனம் ஹி கத²ம் ஹத்வா, ஸுகி²னஸ் ஸ்யாம மாத⁴வ || 36

**மாதவ** – லக்ஷ்மீபதியே! மதுகுலத்திற் பிறந்தவரே! (ஆததாயிகள் என்ற முறையில் அவர்களைக் கொல்லும் போது) **ஸ்வஜனம் ஹத்வா** – நம் பந்துக்களைக் கொன்று; **கதம்** – எப்படி; **ஸுகின: ஸ்யாம** – சுகமுள்ளவர்கள் ஆவோம்? **ஹி** –

*(அவர்களைப் பார்த்தல், தொடுதல், பேசுதல் முதலியன இல்லாமற் போகுமாதலால், சுகிகளாக மாட்டோம் என்பது)* பிரஸித்தம். **தஸ்மாத்** – *(சு. 28. என் அவயவங்களின் சோர்வு முதலிய காரணங்களால்);* **ஸபாந்தவான்** – *பீஷ்மர் முதலிய பந்துக்களோடுகூடிய;* **தார்த்தராஷ்ட்ரான்** – *திருதராஷ்டிரனின் புத்திரர்களை;* **ஹந்தும்** – *கொல்வதற்கு;* **வயம்** – *நாம்;* **ந அர்ஹா:** – *தகுந்தவர்களல்லர்.* **(ஸ்வபாந்தவான் – பிறர் பாடம்).**

குறிப்பு: பந்துக்களல்லாத ஆததாயிகளைக் கொல்ல வேண்டும் என்று மனுஸ்மிருதியின் அர்த்தம் என்கிறான் அர்ஜுனன்.

ஸ்ரீ கிருஷ்ணர்: – அவர்கள் ஏன் இவ்வித புத்தியால், யுத்தத்திலிருந்து விலகவில்லை?

37. यद्यप्येते न पश्यन्ति लोभोपहत चेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥

38. कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥

யத்[3]யப்யேதே ந பஶ்யந்தி, லோபே[4]ாபஹத சேதஸ: |
குலக்ஷயக்ருதம் தே[3]ாஷம், மித்ரத்[3]ரோஹே ச பாதகம் || 37

கத[2]ம் ந ஜ்ஞேய மஸ்மாபி:, பாபாத[3]ஸ்மாத் நிவர்த்திதும் |
குலக்ஷயக்ருதம் தே[3]ாஷம், ப்ரபஶ்யத்பி[4]ர் ஜநார்த[3]ன || 38

*37.* **ஏதே** – *இந்த துர்யோதனன் முதலியோர்;* **லோப உபஹத சேதஸ:** – *ராஜ்யத்தில் பேராசையால் நன்கு கெடுக்கப்பட்ட மனத்தினர்களாய் தர்ம ஞானத்தை இழந்து;* **குலக்ஷயக்ருதம்** – *வம்சங்களை அழிப்பதால் விளையும்;* **தோஷம்** – *கெடுதியையும்;* **மித்ரத்ரோஹே** – *நண்பர்களை மோசம் செய்வதால் விளையும்;* **பாதகம் ச** – *கொடிய பாவத்தையும்;* **ந பஶ்யந்தி** – *அறியவில்லை;* **யதி அபி** – *ஆயினும்;*

*38.* **ஜநார்தன** – *(சு. 35) பிறப்பில்லாதவரும்; ஸம்ஸாரத்தை அழிப்பவருமானவரே!* **குலக்ஷயக்ருதம்** – *வம்சத்தை அழிப்பதால் விளையும்;* **தோஷம்** – *கெடுதியை;* **ப்ரபஶ்யத்பி:** – *நன்றாக அறிந்த;* **அஸ்மாபி:** – *நம்மால்;* **அஸ்மாத் பாபாத்** – *இந்தப் பாவத்திலிருந்து;* **அஸ்மான்** – *நம்மை;* **நிவர்த்திதும்** – *விலக்கிக் கொள்வதற்கு;* **கதம் ந ஜ்ஞேயம்** – *எப்படி அறியாமலிருக்கக்கூடும்?*

குறிப்பு: அவர்கள் ராஜ்ய ஆசையால் போரின் அனர்த்தங்களை அறியாது விலகவில்லை. அறிந்த நாம் விலகுகிறோம்.

ஸ்ரீ கிருஷ்ணர்: - வம்சங்களை அழிப்பதால் விளையும் தோஷங்கள் யாவை?

39. कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नं अधर्मोऽभिभवत्युत ॥

குலக்ஷயே ப்ரணஶ்யந்தி, குலத$^{4}$ர்மாஸ் ஸ்நாதனா: |
த$^{4}$ர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்னம், அத$^{4}$ர்மோSபி$^{4}$ப$^{4}$வத்யுத || 39

**குலக்ஷயே** - *வம்சத்தின் அழிவில்;* **ஸநாதனா:** - *பரம்பரையாக வந்துள்ள;* **குலதர்மா:** - *க்ஷத்திரியர் முதலியோரின் வம்ச தர்மங்கள் (ஸதாசாரங்கள்);* **ப்ரணச்யந்தி** - *அடியோடு அழிகின்றன;* **தர்மே நஷ்டே** - *ஸதாசாரம் அழிந்தபோது;* **அதர்ம:** - *துராசாரம்;* **க்ருத்ஸ்னம் குலம் உத (அபி)** - *மீதியுள்ள வம்சம் அனைத்தையும்;* **அபிபவதி** - *கவருகிறது.*

40. अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दष्टासु वार्ष्णेय जायते वर्णसङ्करः ॥

அத$^{4}$ர்மாபிப$^{4}$வாத் க்ருஷ்ண, ப்ரது$^{3}$ஷ்யந்தி குலஸ்த்ரிய:
ஸ்த்ரீஷு து$^{3}$ஷ்டாஸு வார்ஷ்ணேய, ஜாயதே வர்ணஸங்கர: 40

**க்ருஷ்ண** - *அவரவர்களின் தர்மாதர்மங்களை யொட்டி இழுத்துச் செல்பவரே!* **அதர்ம அபிபவாத்** - *துராசாரம் தலையெடுப்பதால்;* **குலஸ்த்ரிய:** - *பதிவிரதைகள்;* **ப்ரதுஷ்யந்தி** - *கற்பழிந்து அடியோடு கெட்டுப் போகிறார்கள்;* **வார்ஷ்ணேய** - *விருஷ்ணியின் வம்சத்திற் பிறந்தவரே!* **ஸ்த்ரீஷு துஷ்டாஸு** - *ஸ்திரீகள் கற்பிழந்து கெட்டுப் போகையில்;* **வர்ணஸங்கர:** - *நான்கு வர்ணங்களின் கலப்பு;* **ஜாயதே** - *ஏற்படுகிறது. (ஒரு ஜாதியுடன் மற்றொரு ஜாதி கலந்து விடுகிறது.)*

41. सङ्करो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदक क्रियाः ॥

ஸங்கரோ நரகாயைவ, குலக்$^{4}$னானாம் குலஸ்ய ச |
பதந்தி பிதரோ ஹ்யேஷாம், லுப்த பிண்டே$^{3}$ாத$^{3}$க க்ரியா: || 41

**ஸங்கர:** - *இந்த ஜாதிக் கலப்பு;* **குலக்னானாம்** - *வம்சத்தை அழித்தவர்களுக்கும்;* **குலஸ்ய ச** - *அந்த வம்சத்தின் ஸந்ததிகளுக்கும்;* **நரகாய ஏவ** - *நரகத்தின் பொருட்டே (ஆகிறது). (அது மாத்திரமல்ல)* **ஏஷாம்** - *வம்சத்தை அழித்தவர்*

*களின்;* **பிதர:** - *பித்ருக்கள்;* **லுப்த பிண்ட உதக க்ரியா:** - *பிண்டங்களையும், ஜலக்ரியையான தர்ப்பணத்தையும், இழந்தவர்களாகி;* **பதந்தி** - *(நரகத்தில்) வீழ்கின்றனர்.* **ஹி** - *இது சாஸ்திரங்களில் பிரசித்தம்.*

**குறிப்பு:** வம்சத்தை அழித்தவர்கள், தங்கள் பித்ருக்களுக்கு சிராத்தம் செய்தாலும், வம்சத்தை அழித்த பாபத்தினால், சிராத்தம் செய்யத்தகாதவர்களானதால், அது பித்ருக்களைச் சேராததால் அவர்களும் நரகத்தில் வீழ்கின்றனர்.

42. दोषैरेतैः कुलघ्नानां वर्णसङ्करकारकैः ।
उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥

தே[3]ாஷைரேதை: குலக்[4]னானாம், வர்ண ஸங்கர காரகை: |
உத்ஸா த்[3]யந்தே ஜாதித[4]ர்மா:, குலத[4]ர்மாஸ்ச ஶாஶ்வதா: || 42

**குலக்னானாம்** - *வம்சத்தை அழித்தவர்களின்;* **வர்ண ஸங்கர காரகை:** - *ஜாதிக்கலப்பை உண்டுபண்ணும்;* **ஏதை: தோஷை:** - *இந்தக் கெடுதல்களால்;* **ஜாதி தர்மா:** - *க்ஷத்திரியர் முதலிய ஜாதிகளுக்குரிய ஆசாரங்களும்;* **ஶாஶ்வதா:** - *பரம்பரையாக வந்துள்ள;* **குல தர்மா: ச** - *வம்ச ஆசாரங்களும்;* **உத்ஸாத்யந்தே** - *அழிக்கப்படுகின்றன.*

43. उत्सन्न कुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरके नियतं वासः भवतीत्यनुशुश्रुम ॥

உத்ஸன்ன குலத[4]ர்மாணாம், மனுஷ்யாணாம் ஜநார்[3]ன |
நரகே நியதம் வாஸ:, ப[4]வதீத்யனு ஶுஶ்ரும || 43

**ஜநார்தன** - *(பாபி) ஜனங்களை (நரக துக்கத்தினால்) பீடிக்கிறவரே!;* **உத்ஸன்ன குலதர்மாணாம்** - *அழிந்த (ஜாதி ஆசாரங்களையும்) வம்சாசாரங்களையும் உடைய;* **மனுஷ் யாணாம்** - *மனிதர்களுக்கு;* **நரகே** - *நரகத்தில்;* **நியதம்** - *நிச்சயமாக;* **வாஸ:** - *வசித்தல்;* **பவதி** - *ஏற்படுகிறது;* **இதி** - *என்று;* **அநுஶுஶ்ரும** - *(உம்போன்ற பெரியோர்களிடமிருந்து) கேட்டிருக்கிறோம்.*

**குறிப்பு: அநியதம் வாஸ:** - பிறர் பாடம்.

இம்மாதிரி பந்துக்களைக் கொல்வது தோஷமென நிச்சயித்து அர்ஜுனன் வருந்திக் கூறுகிறான்.

44. अहो बत महत्पापं कर्तुं व्यवसिताः वयम् ।
यद्राज्य सुखलेभेन हन्तुं स्वजनमुद्यताः ॥

அஹோ ப$^{3}$த மஹத்பாபம், கர்த்தும் வ்யவஸிதா: வயம் |
யத்ராஜ்ய ஸுக$^{2}$லோபே$^{4}$ன, ஹந்தும் ஸ்வஜன முத்$^{3}$யதா: || 44

**வயம்** - *நாம்;* **ராஜ்ய ஸுக லோபேன** - *ராஜ்யபோகங் களிலுள்ள பேராசையால்;* **ஸ்வஜனம்** - *நம் பந்துக்களை;* **ஹந்தும்** - *கொல்வதற்கு;* **உத்யதா:** - *முயற்சித்துள்ளோம்; (இதி - என்ற);* **யத்** - *எதுவோ; (தத் - அந்த);* **மஹத்பாபம்** - *பெரும் பாவத்தை;* **கர்த்தும்** - *செய்வதற்கு;* **வ்யவஸிதா** - *நிச்சயித் துள்ளோம்;* **அஹோ** - *அந்தோ;* **பத** - *மகாகஷ்டம்!!*

இவ்வாறு கூறி மரணத்தையே விரும்பினவனாய்க் கூறுகிறான்.

45. यदि मां अप्रतीकारं अशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्राः रणे हन्युः तन्मे क्षेमतरं भवेत् ॥

யதி$^{3}$ மாம் அப்ரதீகாரம், அஶஸ்த்ரம் ஶஸ்த்ர பாணய: |
த$^{4}$ார்த்தராஷ்ட்ரா: ரணே ஹன்யு:, தன்மே க்ஷேமதரம் ப$^{4}$வேத் || 45

**அப்ரதீகாரம்** - *எதிர்க்காமலும்;* **அசஸ்த்ரம்** - *ஆயுத மில்லாமலும் (பேசாமலிருக்கும்);* **மாம்** - *என்னை;* **சஸ்த்ர பாணய:** - *ஆயுதங்களைக் கையிலேந்திய;* **தார்த்தராஷ்ட்ரா:** - *திருதராஷ்டிரனின் சம்பந்தமுள்ள துரியோதனாதிகளும் பீஷ்மாதிகளும்;* **யதிஹன்யு:** - *கொல்வார்களேயாகில்;* **தத்** - *அந்தக் கொலை;* **மே** - *எனக்கு;* **க்ஷேமதரம்** - *அதிக நன்மை யைத் தருவதாக;* **பவேத்** - *ஆகும்.*

**குறிப்பு:** அர்ஜுனனுக்குத் தான் பந்துக்களைக் கொல்லும் தோஷமில்லை என்பது ஒரு நன்மை. ஓடாமல் யுத்த பூமியில் இறப்பதால் ஸ்வர்க்கம் கிடைப்பது மற்றொரு அதிக நன்மை.

सञ्जयः उवाच - **ஸஞ்ஜய: உவாச** - *பிறகு நடந்ததை ஸஞ்ஜயன் திருதராஷ்டிரனிடம் கூறுகிறான்.*

46. एवमुक्त्वाऽर्जुनः संख्ये रथोपस्थे उपाविशत् ।
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥

ஏவமுக்த்வாऽர்ஜுனஸ் ஸங்க்$^{2}$யே, ரதே$^{2}$ாபஸ்தே உபாவிஶத் |
விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம், ஶோக ஸம்விக்$^{4}$ன மானஸ: || 46

**அர்ஜுன:** - *சுத்தமான கர்மத்தைச் செய்பவன்;* **ஏவம்** - *இம்மாதிரி;* **உக்த்வா** - *சொல்லிவிட்டு;* **ஸஶரம்** - *அம்புடன் கூடிய;* **ஶாபம்** - *வில்லை;* **விஸ்ருஜ்ய** - *தூக்கி எறிந்து;* **ஸங்க்யே** - *போரில்;* **ரத உபஸ்தே** - *தேரின் மத்தியில்;* **சோக ஸம்விக்ன**

மாநஸ: - துக்கத்தினால் அதிகம் நடுங்குகிற மனத்தினனாய்; உபாவிஶத் - உட்கார்ந்தான்.

(சுலோகம் 26-ல் எழுந்தவன் இப்போது உட்கார்ந்தான்).

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे अर्जुनविषादयोगो नाम प्रथमोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஶ்ரீமத் பகவத்கீதாஸு, உபநிஷத்ஸு,
ப்ரஹ்ம வித்யாயாம், யோகஶாஸ்த்ரே, ஶ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே[3],
அர்ஜுன விஷாதயோகோ நாம ப்ரத[2]மோ அத்[4]யாய: |

---

ஓம் தத் ஸத், உபநிஷத்துகளாகவும், ப்ரஹ்ம வித்யையாகவும், யோக (உபாய) சாஸ்திரமாகவும், ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனர்களின் ஸம்பாஷணையாகவுமுள்ள ஸ்ரீமத் பகவத் கீதையில் அர்ஜுனனின் மனச்சோர்வு என்ற முதலாவது அத்தியாயத்திற்கு இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய, அர்ஜுன விஷாதயோகம் என்னும் முதல். அத்தியாயத்தின் உரை முற்றிற்று.

---





# 2

# ஸாங்க்ய யோகம்

(72 சுலோகங்கள்)

## இரண்டாம் அத்தியாயச் சுருக்கம்

**ஸாங்க்ய யோகம் – ஜீவேசுவர ஸ்வரூபங்களின் உண்மையான ஞானத்தைப் பற்றியது.** பந்து ஸ்நேகத்தால், ஸ்வதர்மத்தில் மயங்கின அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணரை அடிபணிந்து, சிஷ்யனான தனக்குத் தத்வோபதேசம் செய்யும்படி வேண்டினான். ஸ்ரீகிருஷ்ணரும் உபதேசிக்கத் தொடங்கினார்.

அர்ஜுனா! பந்துக்களான துரியோதனாதியர்களும், குருமார்களான பீஷ்மாதிகளும், இறக்கப் போகிறார்களே என்று துக்கப்படாதே. ஏனெனில், "**அவர்கள்**" என்ற ஜீவர்கள் வேறு, தேகங்கள் வேறு. ஒவ்வொருவருக்கும் "**நான்**" என்ற அறிவு இருக்கிறதல்லவா! அந்த அறிவு ஜடப் பொருள்களான தேகத்துக்கோ, இந்திரியங்களுக்கோ, மனதுக்கோ இல்லை. அவைகளைக் காட்டிலும் வேறான, அறிவுள்ள சேதனனான ஜீவனை ஒப்பவேண்டும். ஆகவே ஜீவர்கள் வேறு.

எல்லா ஜீவர்களும் பிறந்தவுடனேயே, பால் இன்பம் தருவது, விளக்கெண்ணெய் துன்பம் தருவது, என்று அறிந்துள்ளனர். இந்த அறிவு, இதற்கு முந்திய பிறப்புக்களின் வாஸனையால் ஏற்பட்டது என ஒப்பவேண்டும். ஆகவே, ஜீவர்கள் இதற்கு முன், பல தேகங்களை அடைந்தவர்கள் என்றும், இனியும், பல தேகங்களை அடைபவர்கள் என்றும் ஏற்படுகிறது. அந்த தேகங்கள் அழிகின்றன, ஜீவர்களோ முக்காலங்களிலும் அழியாமல் இருப்பவர்கள், என்றும் ஏற்படுகிறது.

*தேஹஸ்ய ஸர்வதா நாசாத், அநாசாத் சேதனஸ்ய ச |*

தேகம் எப்போதும் அழியக்கூடியதே. அதைப் பற்றித் துக்கப்பட்டுப் பிரயோஜனமில்லை. ஜீவர்களின் ஸ்வரூபமோ அநாதி நித்யமானது. அதைப்பற்றித் துக்கப்படத் தேவையில்லை.

அர்ஜுனா! 'நான் போர் புரிந்து அவர்களைக் கொல்ல வேண்டியிருக்கிறதே!' என்று(ம்) நீ துக்கப்படாதே. ஏனெனில், நாராயணத்வேஷிகளான துரியோதனாதியர்களையும், அவர்களைச் சார்ந்த பீஷ்மாதிகளையும் கொல்வதே, க்ஷத்திரியனாகப் பிறந்துள்ள உனக்கு ஸ்வதர்மமாகும்.

அந்த ஸ்வதர்மத்தை விட்டுவிடின் நரக துக்கங்களை அனுபவிக்க வேண்டிவரும். ஆகவே பகவானின் மகிமைகளை அறிந்து, அவரிடம் பக்தியுடன், அவருடைய ஆராதனை யாகக் கருதி, உன் ஸ்வதர்மத்தைச் செய்வாயாக.

பகவானுக்கோ, ஜீவர்களுக்கு உள்ளது போன்ற ஸ்தூல தேகமோ, அநித்யத்வம், தேகம் அழிதல், துக்கமடைதல், அபூர்ணமாயிருத்தல், என்ற நான்கு வித நாசங்களோ, கிடையாது. அவனைப் போன்று, பார்க்கத் தகுந்த வேறு ஸ்வதந்திரமான வஸ்துவோ, சொல்லத் தகுந்ததும், கேட்கத் தகுந்ததுமான, அற்புத வஸ்துவோ கிடையாது. பகவானோ பிம்பமாயிருப்பவன். ஜீவர்களோ, அவனுக்கு அதீனமாயும், அற்ப ஸாம்யத்தையுடையதுமான பிரதிபிம்பமாக இருப்ப வர்கள். அவன் பூஜிக்கத் தகுந்தவன். ஜீவர்கள் அவனைப் பூஜிப்பவர்கள்.

*தச்சாத்மனே ப்ரதிமுகஸ்ய யதாமுகஸ்ரீ:– (பாகவதம் 7–9–11).*

இதுதான் ஜீவேசுவர ஸ்வரூபங்களின் உண்மையான ஞானமாகும்.

இவ்வித ஞானம் ஏற்படுவதற்கு நிஷ்காம கர்மமே உபாயமாகும். இந்தக் கர்மாவைச் செய்ய விரும்பினால்கூட பலன் உண்டு, ஆரம்பித்து நடுவில் விட்டுவிட்டால்கூட தோஷமில்லை. இது அபரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணி, அதன்மூலம் மோக்ஷத்திற்குக் காரணமானது.

அர்ஜுனன், அபரோக்ஷஞானியின் லக்ஷணம் யாது? என்று கேட்க, ஸ்ரீ கிருஷ்ணர், எல்லோரும் விழித்திருக்கும் சிற்றின்பங்களில் தூங்கிக்கொண்டும், எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கும் பகவத் விஷயத்தில் விழித்துக்கொண்டும், இருப்பவன், அபரோக்ஷ ஞானியாவான், என்று கூறினார்.

பிறகு, பகவான், 'அர்ஜுனா! காமம், கோபம் முதலிய வற்றை விட்டு, கர்மபலனில் ஆசையில்லாது, உனக்குரிய கர்மாவான யுத்தத்தைச் செய்து, பகவானின் அருளைப் பெறுவாயாக', என்று கூறினார்.

सञ्जय उवाच - **ஸஞ்ஜய: உவாச** - *(பிறகு நடந்ததைத் திருதராஷ்டிரனுக்கு) ஸஞ்ஜயன் கூறினான்.*

1. तं तथा कृपयाऽऽविष्टं अश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्यं उवाच मधुसूदनः ॥

தம் தத²ா க்ருபயா(ஆ) விஷ்டம், அஶ்ருபூர்ணாகுலேக்ஷணம் |
விஷீத³ந்தமித³ம் வாக்யம், உவாச மது⁴ஸூத³ன: || 1

**மதுஸூதன;** - *மது என்ற அசுரனைக் கொன்ற ஸ்ரீகிருஷ்ணர்;* **ததா** - *அவ்வாறு;* **க்ருபயா** - *கருணையினால்;* **ஆவிஷ்டம்** - *கவரப்பட்டவனும்;* **அச்ருபூர்ண ஆகுல ஈக்ஷணம்** - *கண்ணீர் நிரம்பிக் கலங்கிய கண்களையுடையவனும்;* **விஷீதந்தம்** - *மனச்சோர்வையுடையவனுமான;* **தம்** - *அந்த அர்ஜுனனிடம்;* **இதம் வாக்யம்** - *இந்த (பின்வரும்) வார்த்தையை;* **உவாச** - *கூறினார்.*

குறிப்பு: ததா - இதை ஒவ்வொரு பதத்துடனும் சேர்த்து அர்த்தம் கூறினால் ரஸமாயிருக்கும். மதுஸூதன: ஆதலால் இந்த துஷ்டர்களையும் கொல்லத் தூண்டுகிறார்.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீபகவான் உவாச** - *ஸ்ரீகிருஷ்ணர் கூறினார்.*

**பகவான்** - *(1)* ஞானம், சக்தி, பலம், ஐசுவர்யம், வீர்யம், தேஜஸ் என்ற ஆறு குணங்கள் நிறைந்தவர், *(2)* ஜீவர்களின் பிறப்பு, இறப்பு, வருகை, செல்தல், ஞானம், அஜ்ஞானம் என்ற ஆறையும் அறிந்தவர்.

2. कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टं अस्वर्ग्यं अकीर्तिकरमर्जुन ॥

3. क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।
क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ॥

குதஸ் த்வா கஶ்மலமிதம், விஷமே ஸமுபஸ்தி²தம் |
அநார்ய ஜுஷ்டம் அஸ்வர்க்³யம், அகீர்த்திகர மர்ஜுன || 2
க்லைப்³யம் மாஸ்ம க³ம: பார்த்த², நைதத் த்வய்யுப பத்³யதே |
க்ஷுத்³ரம் ஹ்ருத³ய தௌ³ர்ப³ல்யம், த்யக்த்வோத்திஷ்ட² பரம்தப || 3

**அர்ஜுன** - *சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!* **குத:** - *எந்தக் காரணத்தால்;* **அநார்யஜுஷ்டம்** - *பெரியோர்களால் சேவிக்கப்படாததும்;* **அஸ்வர்க்யம்** - *ஸ்வர்க்கத்திற்குத்*

தகாததும்; அகீர்த்திகரம் - அபகீர்த்தியைத் தருவதுமான, **இதம் கஶ்மலம்** - இவ்வித மோஹம்; **விஷமே** - ஸங்கடத்தில்; **த்வா** - உன்னை; **ஸம் உபஸ்திதம்** - நன்கு அணுகியுள்ளது?

**பார்த்த** - குந்தியின் புத்திரனே! **க்லைப்யம்** - அலியின் தன்மையை (பயத்தை); **மா ஸ்ம(ஏவ)கம:** - அடையவே கூடாது; **ஏதத்** - இது; **த்வயி** - உன்னிடம்; **ந உபபத்யதே** - பொருந்தாது. **பரம்தப** - சத்ருக்களை வாட்டுபவனே! **க்ஷுத்ரம்** - அற்பமான; **ஹ்ருதய தௌர்பல்யம்** - மனச்சோர்வை; **த்யக்த்வா** - விட்டுவிட்டு; **உத்திஷ்ட** - எழுந்திரு, (எழுந்து என்ன செய்ய வேண்டும்?) **பரம்தப** - சத்ருவை வாட்டு.

अर्जुनः उवाच - **அர்ஜுன: உவாச** - அர்ஜுனன் (ஸ்ரீ கிருஷ்ணர் கூறியது ஹிதமென்று அறியாது மறுபடியும் 5 சுலோகங்களில்) கூறினான்.

4. कथं भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन।
इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हौ अरिसूदन॥

கத$^{2}$ம் பீ$^{4}$ஷ்மமஹம் ஸங்க்$^{2}$யே, த்$^{3}$ரோணம் ச மது$^{4}$ஸூத$^{3}$ன |
இஷு$^{4}$பி: ப்ரதியோத்ஸ்யாமி, பூஜார்ஹௌ அரிஸூத$^{3}$ன || 4

**மதுஸூதன** - மது என்ற அசுரனைக் கொன்றவரே! **பூஜார்ஹௌ** - பூஜிக்கத் தகுந்தவர்களான; **பீஷ்மம்** - பீஷ்மா சார்யரையும்; **த்ரோணம் ச** - துரோணாசார்யரையும்; **ஸங்க்[யே]** - யுத்தத்தில்; **கதம்** - எப்படி; **அரிஸூதன** - பகைவர் களை[க்] சக்ராயுதத்தால் கொல்பவரே! **இஷுபி:** - அம்பு களால்; **அஹம்** - நான்; **ப்ரதியோத்ஸ்யாமி** - எதிர்த்துப் போர் புரிவேன்!

குறிப்பு: **மதுஸூதன அரிஸூதன** - துஷ்டர்களைக் கொல்பவரும், பகைவர்களைக் கொல்பவருமான நீர், துஷ்டரல்லாதவர்களும், பகைவரல்லாதவர்களுமான பீஷ்மாதிகளை எவ்வாறு கொல்லச் சொல்கிறீர்? **இஷுபி:** - புஷ்பங்களால் பூஜிக்கத் தகுந்தவர்களை, அம்புகளால் எவ்வாறு சண்டை செய்வேன்? இதனால் இவர்களைத் தவிர மற்றவர்களைக் கொல்ல சம்மதித்திருக்கிறான் என ஏற்படுகிறது.

ஸ்ரீ கிருஷ்ணர் - இவர்களைக் கொன்று ராஜ்யம் பெறாவிட்டால் நீ உயிர் வாழ முடியாதே!

5. गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं भैक्षमपीह लोके।
हत्वाऽर्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान् रुधिरप्रदिग्धान्॥

கு3ரூனஹத்வா ஹி மஹானுப4ாவான், ச்ரேயோ பே4ாக்தும்
பை4க்ஷமபீஹ லோகே |
ஹத்வா(அ)ர்த்த2காமாம்ஸ்து கு3ரூனி ஹைவ, பு4ஞ்ஜீய பே4ாகான்
ரு4திர ப்ர3திக்த4ான் || 5

**மஹா அநுபாவான்** - மகா மகிமை பொருந்திய; **குரூன்** - அந்தப் பெரியோர்களை; **அஹத்வா** - கொல்லாமல்; **இஹ லோகே** - இவ்வுலகத்தில்; **பைக்ஷம் அபி** (பிக்ஷாணாம் ஸமூஹ:) பிக்ஷைகளால் கிடைக்கும் அன்னத்தைக்கூட; **போக்தும்** - உண்பது; **ச்ரேய:** - மேலானது; **ஹி** - (பரலோக துக்கமில்லை). ஆகையால் (நான் போர் புரிய மாட்டேன்); **அர்த்தகாமான்** - பணத்தில் ஆசையுள்ள*; **குரூன்** - அந்த ஆசாரியர்களை; **ஹத்வாது** - கொன்ற பிறகோ; **ருதிர ப்ரதிக்தான்** - அவர்களுடைய ரத்தத்தால் நன்கு தோய்ந்த; **போகான் து ஏவ** - அவர்கள் அநுபவித்த சுகங்களையே; **இஹ** - இவ்வுலகில் (அவர்களின் ஆஸனங்களிலேயே உட்கார்ந்து) **புஞ்ஜீய** - அநுபவிப்பேன், (இது பரலோக துக்கத்தைக் காட்டிலும் அதிகமாகும்.)

**குறிப்பு:** *பீஷ்மரே கூறியிருக்கிறார்:

*அர்த்தஸ்ய புருஷோ தாஸ:, தாஸஸ்து அர்த்தோ ந கஸ்யசித் |*
*இதி ஸத்யம் மஹாராஜ, பத்தோ(அ)ஸ்மி அர்த்தேன கௌரவை: ||*

பணத்திற்கு மனிதன் அடிமையானவன். பணமோ யாருக்கும் அடிமையல்ல. மகாராஜனே! இது உண்மை. நான் கௌரவர்களுடன் பணத்தினால் கட்டுப்பட்டுள்ளேன்.

பாபத்தை ஒப்பி, போர் புரிந்தாலும், ஜயம் ஸந்தேஹமே என்கிறான்.

6. न चैतद्विद्मः कतरन्नो गरीयः यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामः तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥

நசைதத் வித்3ம:, கதரத் நோ க3ரீய:, யத்3வா ஜயேம யதி3 வா
நோ ஜயேயு: |
யானேவ ஹத்வா, ந ஜிஜீவிஷாம: தே(அ)வஸ்தி2தா: ப்ரமுகே
த4ார்த்தராஷ்ட்ரா: || 6

**யத்வா ஜயேம** - நாம் அவர்களை ஜயிப்போமா; **ந:** - நம்மை; **யதி வா ஜயேயு;** - அவர்கள் ஜயிப்பார்களா; (இவ்விரண்டில்) **கதரத்** - எது; **ந:** - நமக்கு; **கரீய:** - மேன்மையானது என்ற; **ஏதத்** - இதை; **நச(ஏவ) வித்ம:** - நாம் அறியவே இல்லை. (நம் ஜயமும் தோல்வியாகவே தோன்றுகிறது,

ஏனெனில்) **யான்** – எவர்களை; **ஹத்வா** – கொன்றபிறகு; **ந ஜிஜீவிஷாம:** – உயிர் வாழ விரும்ப மாட்டோமோ; **தே ஏவ** – அதே; **தார்த்தராஷ்ட்ரா:** – திருதராஷ்டிரனைச் சேர்ந்த பீஷ்மர், துரோணர் முதலியோர்; **ப்ரமுகே** – நமக்கு எதிரில்; **அவஸ்திதா:** – நிற்கிறார்கள்.

7. कार्पण्यदोषोपहत स्वभावः पृच्छामि त्वा धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयस्स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्॥

கார்ப்பண்ய தே[3]ாஷோபஹத ஸ்வப[4]ாவ:, ப்ருச்ச[2]ாமி த்வா த[4]ர்ம ஸம்மூட[4]சேதா: |
யச் ச்ரேயஸ் ஸ்யாத் நிஸ்சிதம் ப்[3]ரூஹி தன்மே, ஶிஷ்யஸ்தே(அ)ஹம் ஶாதி[4] மாம் த்வாம் ப்ரபன்னம் || 7

**கார்ப்பண்ய தோஷ உபஹத ஸ்வபாவ:** – தீனனாயிருக்கும் தன்மை என்ற தோஷத்தினால் நஷ்டமான (18-43) ஶௌர்யம் முதலிய க்ஷத்திரியனின் இயற்கை குணங்களையுடையவனும்; **தர்ம ஸம்மூடசேதா:** – தர்மத்தில் ஆழ்ந்த சந்தேகமுள்ள மனத்தையுடையவனுமான நான்; **த்வா** – உம்மை; **ப்ருச்சாமி** – கேட்கிறேன். **யத்** – எது (பிச்சை எடுப்பதா, போர் புரிவதா); **ச்ரேய:** – சிறந்ததாக, **ஸ்யாத்** – ஆகுமோ; **தத்** – அதை; **மே** – எனக்கு; **நிஸ்சிதம்** – சந்தேகமில்லாமல்; **ப்ரூஹி** – சொல்லும்; **அஹம்** – நான்; **தே** – உம்முடைய; **சிஷ்ய:** – சீடன்; **த்வாம்** – உம்மை; **ப்ரபன்னம்** – சரணமடைந்த; **மாம்** – என்னை (எனக்கு) **ஶாதி** – உபதேசிப்பீராக.

**குறிப்பு:** 18-6ல் – **நிஸ்சிதம் மதமுத்தமம்** – என்ற ஸ்ரீ கிருஷ்ணரின் பதிலைக் காண்க. (முதல் பாதியில்) **த்வாம்** – பிறர் பாடம்.

ஸ்ரீ கிருஷ்ணர்: – நீயே யோசித்து எது யுக்தமோ அதைச் செய்:–

8. न हि प्रपश्यामि ममापनुद्यात् यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमौ असपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥

ந ஹி ப்ரபஶ்யாமி, மமாபநுத்யாத், யச்சோகம், உச்சோஷண மிந்த்ரியாணாம் |
அவாப்ய பூ[4]மௌ, அஸபத்ன ம்ருத்த[4]ம், ராஜ்யம் ஸுராணாமபி சாதி[4]பத்யம் || 8

(நான் யுத்தம் செய்து) **பூமௌ** – இவ்வுலகில்; **அஸபத்னம்** – சத்ருக்களில்லாததும் (நிஷ்கண்டகமானதும்); **ரித்தம்** – செல்வம் நிறைந்ததுமான; **ராஜ்யம்** – ராஜ்யத்தையும்; **ஸுராணாம்** –

(அவ்வுலகில்) இந்திராதி தேவர்களின்; **ஆதிபத்யம் ச** - பதவியையும்; **அவாப்ய அபி** - அடைந்த போதிலும் கூட; **யத்** - எந்தக் காரியம்; **மம** - என்னுடைய; **இந்த்ரியாணாம்** - மனம் முதலிய புலன்களை; **உச்சோஷணம்** - அதிகம் உலர்த்துகிற; **சோகம்** - துக்கத்தை; **அபநுத்யாத்** - போக்கடிக்குமோ; (தத் - அதை) **ந ப்ரபஶ்யாமி** - நான் தெளிவாக அறியவில்லை; **ஹி** - ஆகையால் (தேவரீரைக் கேட்கிறேன்).

सञ्जय: उवाच - **ஸஞ்ஜய: உவாச** | (பிறகு அர்ஜுனன் என்ன செய்தான் என்று) ஸஞ்ஜயன் (திருதராஷ்டிரனிடம்) கூறுகிறான்.

9. एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परंतपः ।
न योत्स्य इति गोविन्दं उक्त्वा तूष्णीं बभूव ह ॥

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம், கு$^3$ட$^3$ாகேச: பரந்தப: |
ந யோத்ஸ்யே இதிகோ$^3$ாவிந்த$^3$ம், உக்த்வா தூஷ்ணீம்ப$^3$ூ$^4$வ:ஹ || 9

**குடாகா ஈச:** - தூக்கத்தை வென்றவனும், **பரந்தப:** - பகைவர்களை வாட்டுபவனுமான, அர்ஜுனன்; **ஹ்ருஷீக ஈசம்** - ஸர்வேந்திரியங்களின் பிரேரகரும்; **கோவிந்தம்** - வேத வாக்கியங்களினால் கூறப்படுபவருமான ஸ்ரீ கிருஷ்ணரிடம்; **ஏவம் உக்த்வா** - இம்மாதிரி சொல்லிவிட்டு; **ந யோத்ஸ்யே** - நான் போர் புரியமாட்டேன்; **இதி** - என்று **உக்த்வா** - சொல்லி; **தூஷ்ணீம்** - பேசாமல்; **பபூவ** - இருந்தான்; **ஹ** - ஆச்சரியம் (மகா தைர்யம் முதலிய குணங்களைப் படைத்த வனுக்கும் இவ்வித புத்தி ஏற்பட்டதே!)

10. तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।
सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः ॥

தமுவாச ஹ்ருஷீகேச:, ப்ரஹஸன்னிவ ப$^4$ாரத |
ஸேனயோருப$^4$யோர் மத்$^4$யே, விஷீத$^3$ந்தமித$^3$ம் வச: || 10

**பாரத** - பரத வம்சத்திற் பிறந்த திருதராஷ்டிரரே!; **ஹ்ருஷீக ஈச:** - எல்லா இந்திரியங்களின் பிரேரகரான ஸ்ரீகிருஷ்ணர்; **உபயோ: ஸேனயோ: மத்யே** - இரு சேனைகளுக்கும் நடுவில்; **விஷீதந்தம்** - துக்கப்பட்டுக் கொண்டிருக்கும்; **தம்** - அந்த அர்ஜுனனிடம்; **இதம் வச:** - இந்த (பின்வரும்) கீதா ரூபமான வார்த்தைகளை; **ப்ரஹஸன் இவ** -

புன்னகைப்பூத்து; அவனைப் பரிஹஸிப்பவர் போன்று; **உவாச** – சொன்னார்.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீபகவான் உவாச**

முகவுரை முடிந்து இங்கு கீதோபதேசம் ஆரம்பிக்கிறது. பகவானுடைய மகிமைகளையறிந்து, அவரிடம் பக்தியுடன் பகவானுடைய ஆராதனையாகவும், தனக்குச் ஶாஸ்திரங் களில் விதிக்கப்பட்ட தொழிலாகவும், அநுஷ்டிக்கப்படும், நாராயண த்வேஷிகளையும், அவர்களைச் சார்ந்தவர் களையும், கொல்வது, க்ஷத்திரியர்களின் மேன்மையான தர்மமாகும். அந்த தர்மத்தைப் பந்துக்களிடமுள்ள சினேக பாசத்தால், அதர்மமெனக் கருதி, முற்கூறியவாறு சந்தேகித்த அர்ஜுனனைக் குறித்து முற்கூறப்பட்ட வதமே, சிறந்த தர்மம், அதற்கு மாறானவை யாவும் அதர்மமே; என்று கீதா சாஸ்திரம் முழுவதினாலும், உபதேசிக்கிறவராய், முதலில் விவேகமின்மையால், உனக்கு துக்கம் ஏற்பட்டுள்ளது என்று ஸ்ரீகிருஷ்ணர் கூறினார்.

11. अशोच्यान् अन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।
गतासून् अगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥

அஸோச்யான் அன்வஸோசஸ்த்வம், ப்ரஜ்ஞாவாத$^{3}$ாம்ஸ்ச ப$^{4}$ாஷஸே |
க$^{3}$தாஸூன் அக$^{3}$தாஸூம்ஸ்ச நானுஶோசந்தி பண்டி$^{3}$தா: || 11

*(அர்ஜுனா!)* **த்வம்** – *நீ;* **அசோச்யான்** – *துக்கிக்கத் தகாதவர்களைப் பற்றி;* **அன்வசோச;** – *தொடர்ந்து துக்கப் பட்டாய்; (நீ யாரைப் பற்றித் துக்கித்தாயோ, அவர்கள் துக்கத்திற்குத் தகுந்தவர்களல்லர்)* **ப்ரஜ்ஞாவாதான் ச** – *உன் சொந்த புத்தியினால் மாத்திரம் உண்டானவையும், நன்கு அறிந்தவர்களுக்கு விருத்தமானவையுமான, பேச்சுக்களையும்;* **பாஷஸே** – *பேசினாய். (நீ பேசின பேச்சுக்கள் உன் சொந்த புத்தியின் கற்பனையே. ஞானிகளுக்கு விருத்தமானவை. நாராயண த்வேஷிகளையும் அவர்களைச் சார்ந்தவர் களையும் கொல்வது அதர்மம் என ஞானிகள் கூறமாட் டார்கள் அல்லவா!) ஏனென்றால்,* **பண்டிதா:** – *ஞானிகள்;* **அகத அஸூன் ச** *(இவ)* – *உயிருடனிருப்பவர்களைப் பற்றித் துக்கப்படாதிருப்பது போல;* **கதா அஸூன்** – *உயிரிழந்த வர்களை; (இங்கு, சமீபித்த மரணமுடையவர்களை) பற்றி,* **ந அனுசோசந்தி** – *துக்கப்படுவதில்லை.*

குறிப்பு: (1) ப்ரஜ்ஞாவாதான் - ஞானிகளின் வாதம் என்ற அர்த்தம் தவறு. ஏனெனில் அர்ஜுனன் மயங்கின நிலையிலும், 2-7ல், சந்தேக நிலையிலும் கூறியிருக்கிறான். 11-1, 18-73ல் மயக்கம் தெளிந்துவிட்டது என்கிறான். பாகவதத்தில் (1-9-36) பீஷ்மர் - குமதிம் அஹரத் -

அர்ஜுனனின் புத்தி துஷ்டமானது என நிந்திக்கிறார், மயங்கிக் கூறியதும், துஷ்டபுத்தி எனப்பட்டதும் ஞானிகளின் வாதமாகாது.

தெரிந்ததைக் கொண்டு தெரியாததைக் கூறுவது உபதேசமாகும். துக்கப்பட்டதும் பேசினதும் அவனுக்குத் தெரிந்ததே. ஆகவே நீ துக்கப்பட்டாய், பேசினாய், என்றால் உபதேசமாகாது. அவர்கள் துக்கத்துக்குத் தகுந்தவர்களா, அல்லரா என்பது அவனுக்குத் தெரியாது. ஆகவே நமது ஆசார்யர், அந்த வாக்கியங்களின் கருத்தை மேலே அடைப்புக்களில் உள்ளவாறு விளக்கியிருக்கிறார்.

*ஸ்ரீ கிருஷ்ணர் (1) பீஷ்மாதிகளின் ஜீவன் அழிகிறான் என்று துக்கமா? (2) உடல் அழிகிறது என்று துக்கமா? (3) உடலைத் தவிர ஜீவனே இல்லை; உடல் அழிந்தால் ஜீவனும் அழிகிறான் (சார்வாகமதம்) என்று துக்கமா? முதல் பக்ஷத்திற்குப் பதிலளிக்கிறார்.*

12. न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥

ந த்வேவாஹம் ஜாது நாஸம், ந த்வம் நேமே ஜனாதி[4]பா: |
நசைவ ந ப[4]விஷ்யாம:, ஸர்வே வயமத: பரம் || 12

**அஹம்து** – நானோ, **ஜாது** – இதற்குமுன் ஒருபொழுதும்; **ந ஆஸம்** – இருந்ததில்லை என்பது, **ந ஏவ** – இல்லவே இல்லை. *(நான் இறந்த காலத்தில் இருந்தேன்)* **த்வம்** – நீ; *(ந ஆஸீ: – முன் இருந்ததில்லை என்பது)* **ந** – இல்லை; *(நீ இறந்த காலத்தில் இருந்தாய்)* **இமே ஜனாதிபா:** – இந்த அரசர்கள்: *(ந ஆஸன் – முன் இருந்ததில்லை என்பது)* **ந** – இல்லை *(அவர்கள் இறந்த காலத்தில் இருந்தார்கள்)* **வயம்** – நாம்; *(நான், நீ, அவர்கள்)* **ஸர்வே ஏவ** – எல்லோருமே; **அத; பரம் ச** – இதற்குப் பிறகும்; **ந பவிஷ்யாம:** – இருக்கப் போவதில்லை என்பதும்; **ந** – இல்லை. *(எதிர்காலத்தில் இருக்கப் போகிறோம்).*

குறிப்பு: (1) நிகழ்காலத்தில் அனைவரும் இருப்பது தெரிந்ததே. ஆதலால் நிகழ்காலம் கூறப்படவில்லை. முன் பாதியில் இறந்த காலத்திலும், பின் பாதியில் எதிர் காலத்திலும் இருப்பது கூறப்பட்டது. ஆகவே பகவானும், எல்லா ஜீவர்களும், மூன்று காலங்களிலும் இருப்பவர்கள், அநாதி நித்யர்கள். ஆகையால் ஜீவன் அழிகிறான் என்ற துக்கத்திற்கு இடமில்லை.

(2) 'ந – இல்லை', என்று இருமுறை கூறியதாலேயே அர்த்தம் உறுதியாகிறது. அதனால் ஏவ என்ற பதம். சுருதி ஸ்மிருதிகளில் இந்த அர்த்தத்தின் பிரசித்தியைக் காட்டுகிறது. ச என்ற பதம் 'அநாதி' என்பதையும், 'நித்யம்' என்பதையும் சேர்க்கிறது. து – விசேஷத்தைக்

கூறுகிறது. அதாவது ஜீவர்களின் ஸ்வரூபம் அநாதி நித்யமானது. அவர்களுக்கு வேறான ஸ்தூலதேக சம்பந்தம் தான் சிருஷ்டி; தேகநாசம் தான் மரணம் எனப்படும். ஆனால் பகவானுக்கு ஸ்தூல தேகமில்லை. அதனால் ஜனன மரணமில்லாதவர் என்ற விசேஷத்தைக் குறிக்கிறது.

*உடல் அழிகிறது என்ற 2-ம் பக்ஷத்திற்குப் பதில் அளிக்கிறார்.*

13. देहिनोऽस्मिन् यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहान्तरप्राप्तिः धीरस्तत्र न मुह्यति ॥

தே[3]ஹினோ(அ)ஸ்மின் யத[2]ா தே[3]ஹே, கௌமாரம் யௌவனம் ஜரா |
தத[2]ா தே[3]ஹாந்தர ப்ராப்தி:, தீ[4] ரஸ் தத்ர ந முஹ்யதி || 13

**தேஹின:** – *தேகத்தையுடைய ஜீவனின்;* **அஸ்மின்** – *இப்போதுள்ள;* **தேஹே** – *ஸ்தூல தேகத்தில்,* **யதா** – *எவ்வாறு;* **கௌமாரம்** – *குழந்தைப் பருவமும்;* **யௌவனம்** – *இளமையும்;* **ஜரா** – *கிழத்தனமும் (ஏற்படுகின்றனவோ);* **ததா** – *அவ்வாறே;* **தேஹாந்தரப்ராப்தி:** – *வேறு தேகத்தையடைதலும் (ஏற்படு கிறது).* ஆகவே, **தீர:** – *(தியா ரமதே) புத்திமான்;* **தத்ர** – *உடல் அழிகிறது என்பதில்;* **ந முஹ்யதி** – *மோகத்தையும், துக்கத் தையும் அடைவதில்லை.*

குறிப்பு: ஓர் இளைஞன் தன்னுடைய குழந்தைப் பருவமுள்ள உடல் அழிந்துவிட்டதே என்று துக்கிப்பதில்லை. ஏனெனில் அதற்குப் பதில் ஒரு இளமையுள்ள உடல் கிடைத்துள்ளது. (ப்ரதி நிதி லாபேன ஹானி: ஸமாதீயதே), ஓர் கிழவர் தன் இளமையுள்ள உடல் போய்விட்டதே என்று துக்கப்படுவதில்லை. ஏனெனில் அதற்குப் பதிலாக முதுமையுள்ள தேகம் கிடைத்துள்ளது. இம்மாதிரியே மரணத்திலும் துக்கப்பட இடமில்லை. ஏனெனில் இன்னொரு தேகம் கிடைத்துவிடுகிறது. அதிலும் கிழ சரீரத்திற்குப் பதிலாக நல்ல புதிய சரீரம் கிடைக்கிறது. அதற்குச் சந்தோஷப்பட வேண்டுமே தவிர துக்கத்திற்கு இடமில்லை.

யௌவனத்திலோ முதுமையிலோ தேகம் போவ தில்லை. தேகத்தின் பருவம்தான் போகிறது. மரணத்திலோ தேகமே போகிறதே என்றால், அது பவுன் சங்கிலியைக் காப்பாகச் செய்வது போன்றது. இதுவோ பவுனைக் கொடுத்துவிட்டுப் பட்டாடை வாங்குவது போன்றது. ஆகவே துக்கத்திற்கு இடமில்லை.

*உடலைத் தவிர ஜீவனில்லை என்ற 3-ம் பக்ஷத்திற்குப் பதில், இதே சுலோகத்தின் 2-ம் அர்த்தம்:*

**அஸ்மின் தேஹே** – *இந்த தேகத்தில்;* **கௌமாரம்** – *குழந்தைப் பருவத்தின் ஞானம்;* **யௌவனம்** – *இளமையின் ஞானம்;* **ஜரா** – *முதுமையின் ஞானம்; அதாவது முன்*

குழந்தையின் உடலோடு இருந்த நான், இப்போது யௌவன சரீரமுடையவனாயிருக்கிறேன். முன் யௌவன சரீரத்தோடு இருந்த நான், இப்போது முதிர்ந்த சரீரமுடையவனாயிருக்கிறேன் என்ற ஞானம் இருக்கிறது. இந்த ஞானம், **தேஹின:** – ஜடமான தேகம், இந்திரியங்கள், மனது இவற்றையுடைய, ஆகவே இவற்றைக் காட்டிலும் வேறான ஒரு சேதனனுக்கு உண்டாகிறது. தேஹின: என்ற ஒருமையால், ஒரே சேதனனுக்கே, குழந்தை சரீரம் முதலிய பல சரீரங்களின் ஞானம்; **யதா** - எவ்வாறு உண்டாகிறதோ; **ததா** – அவ்வாறே; **தேஹாந்தர ப்ராப்தி:** – பல தேகங்களை அடைதல்; **தேஹின:** – தேகம் முதலியவைகளைக் காட்டிலும் வேறான ஒரே சேதனனுக்கு (ஏற்படுகிறது). **தீர:** – புத்திமான்; **தத்ர** – தேகம் முதலியவற்றைக் காட்டிலும் வேறான ஜீவன் இருக்கிறான், என்ற விஷயத்தில்; **ந முஹ்யதி** – மோகத்தையும் துக்கத்தையும் அடைவதில்லை.

குறிப்பு: ஸ்ரீமத்வரின் அநுவ்யாக்யானம்:

*ஜாதமாத்ரா ம்ருகா: காவ:, ஹஸ்தின: பக்ஷிணோ ஜஷா: |*
*பயாபய ஸ்வபோகாதௌ, காரணானி விஜானதே ||*
*அஸ்ம்ருதௌ பூர்வ தேஹஸ்ய, விஜ்ஞானம் தத் கதம் பவேத் ||*

பிறந்தவுடனேயே, மிருகங்களும், பசுக்களும், யானை களும், பக்ஷிகளும், மீன்களும், பயம், பயமின்மை, சுகம், துக்கம் இவற்றின் காரணங்களை நன்கு அறிகின்றன. முந்தின தேகத்தின் ஞாபகமில்லையேல், இந்த அறிவு எப்படி ஏற்படும்? ஆகையால் உடலைத் தவிர, வேறான ஜீவன் இருக்கிறான்; உடல் அழிந்தாலும் அவன் அழிவதில்லை. நீ துக்கப்பட வேண்டாம்.

**அர்ஜுனன்:–** தாங்கள் கூறியது சரி. ஆயினும் பீஷ்மாதிகள் இறந்துவிட்டால் அவர்களின் தர்சனம், ஸம்பாஷணம் முதலியன இல்லாமற் போவதால் எனக்கு சுகமில்லாமற்போகும். வெட்டுக் காயங்களால் விகார ரூபத்தையடைந்த அவர்களின் தேகங்களைப் பார்த்து எனக்கு துக்கமும் ஏற்படும்.

14. मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।
आगमापायिनोऽनित्याः तान् तितिक्षस्व भारत ॥

மாத்ரா ஸ்பர்ஶாஸ்து கௌந்தேய, ஶீதோஷ்ண ஸுக துக்கதா: |
ஆக³மா பாயினோऽநித்யா:, தான் திதிக்ஷஸ்வ ப⁴ாரத || 14

**கௌந்தேய** – குந்தீ புத்திரனே! **மாத்ராஸ்பர்சா: து ஏவ** – *மாத்ரா – சப்தம்,* ஸ்பர்சம் முதலிய விஷயங்களின், **ஸ்பர்சா:** –

(காது, தோல் முதலிய இந்திரியங்களுடன்) சம்பந்தங்கள்; **சீத உஷ்ண ஸுக துக்கதா:** - நமக்கு குளிர்ச்சி, உஷ்ணம், இஷ்டமானது என்ற அறிவையுண்டுபண்ணி சுகத்தையும், அநிஷ்டமானது என்ற அறிவையுண்டுபண்ணி துக்கத்தையும், தருபவைகளா என்ன? (இல்லை. ஆனால் அவற்றில் நாம் வைத்துள்ள சிநேகம் அல்லது த்வேஷம் என்ற அபிமானத்துடன் கூடியே சுகத்தையோ, துக்கத்தையோ, முறையே தருபவை). ஏன் இவ்வாறு கூற வேண்டும்? **ஆகம அபாயின;** - (அவை) உற்பத்தியையும் நாசத்தையும் உள்ளவை. ஆகவே, **அநித்யா:-** நித்யமானவையல்ல; அதாவது சுகத்தையோ துக்கத்தையோ எப்போதும் தருவதில்லை. அயர்ந்த தூக்கம் முதலிய காலங்களில் வாசனையுள்ள சந்தனம், நெருப்புத் துண்டம் இவற்றின் சம்பந்தத்தால் முறையே குளிர்ச்சி, உஷ்ணம் என்ற அறிவை யுண்டுபண்ணி ஸுகத்தையோ துக்கத்தையோ தருவதில்லை அல்லவா! தேகாபிமானமுள்ள விழிப்புள்ள நிலையில்தான் தருகின்றன. **பாரத** - பரத வம்சத்திற் பிறந்தவனே!, **தான்** - அந்த விஷயேந்திரிய சம்பந்தங்களை; **திதிக்ஷஸ்வ** - (பீஷ்மாதிகளிடம் நீ வைத்துள்ள அபிமானத்தை விட்டுவிட்டு) பிரயோஜனமற்றவைகளாக அதாவது உனக்குத் துக்கத்தைத் தராதபடி செய்.

குறிப்பு: (1) து - ஏவ, என்று அர்த்தம் செய்து, காகு ஸ்வரத்தில் உச்சரித்து, நமது அபிமானம்தான் முக்கிய காரணம் என்பதை நமது ஆசார்யர் ஒருவரே விளக்கி யுள்ளார். **அவஜ்ஞா ஸூசக: நீச ஸ்வர: காகுரிதீரித: | தாத்பர்யம் ந கில ஸ்வார்த்தே, காக்வா வாக்யம் யதுச்யதே ||** அவமதிப்பைக் குறிக்கும் தாழ்ந்த குரல் காகு: எனப்படும். இந்தக் குரலில் எது சொல்லப்படுகிறதோ, அதன் சொந்த அர்த்தத்தில் அபிப்ராயமில்லை, என்று அறிய வேண்டும்.

(2) நம் குழந்தை திண்ணையிலிருந்து கீழே விழுகிறது. அதைக் கண்டவுடன் ஓடி எடுக்கிறோம். அயலார் குழந்தை விழுகிறது, நாம் ஓடி எடுப்பதில்லை, ஏன்? நம் குழந்தை யினிடமுள்ள அபிமானமும், அயலார் குழந்தையிடம் அபிமானமின்மையும் காரணமாகும் என்பது நம் அனுபவ ஸித்தமானது.

(3) **திதிக்ஷஸ்வ** - பொறுத்துக்கொள் என்ற பிறரின் அர்த்தம், துக்கத்தைப் போக்கும் உபாயத்தைக் கூறுவதா யில்லை. நமது ஆசார்யரின் அர்த்தமோ ஒரு உபாயத்தைக் கூறி துக்கத்தைப் போக்க வழி வகுத்துள்ளது.

**அர்ஜுனன்:-** துக்கமில்லாமலிருக்கப் போர் புரியாமலே இருக்கலாம். ஏன் போர் புரிந்து, துக்கமில்லாதிருக்க, அபிமானத்தை

விடவேண்டும்? சேற்றை மிதித்துக் காலை அலம்புவதைக் காட்டிலும், மிதிக்காமலிருக்கலாமல்லவா!

15. यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥

யம் ஹி ந வ்யத[2]யந்த்யேதே, புருஷம் புருஷர்ஷப[4] |
ஸமதுக்க[2]ஸுக[2]ம் தீ[4]ரம், ஸோ (அ) ம்ருதத்வாய கல்பதே || 15

**புருஷர்ஷப** – மனிதர்களில் சிறந்தவனே! **ஏதோ** – இந்த, **விஷய** – இந்திரியங்களின் சம்பந்தங்கள்; **புருஷம்** – (புரம் தேஹம் ஸரதி ஜானாதி) (விழிப்பில்) தேகத்தின் அறிவுள்ள வனும் அல்லது (புரு ப்ரஹ்ம ஸரதி ஜானாதி) ப்ரஹ்மத்தை (விஷ்ணுவை) அறிந்தவனும்; **தீரம்** – சுக துக்கங்களில் பூரிப்பை யும் வாட்டத்தையும் அடக்க வல்லவனும்; (அதனாலே) **ஸமதுக்கஸுகம்** – (வேண்டாம் என்ற விஷயத்திலும், மோக்ஷத் திற்கு விரோதி என்ற விஷயத்திலும்) துக்கத்திற்குச் சமமாக சிற்றின்பத்தைப் பாவிப்பவனும்; (அதனாலே அபிமான மில்லாதவனுமான; **யம்** – எந்த ஜீவனை (ஸ்திரீயோ புருஷனோ), **ந வ்யதயந்தி** – அசைப்பதில்லையோ; **ஸ:** – அந்த அதிகாரி ஜீவன்; **அம்ருதத்வாய** – மோக்ஷத்திற்கு; **கல்பதே** – தகுந்தவனாகிறான்; **ஹி** – பிரஸித்தம்.

குறிப்பு: போர் புரியாவிடில் துக்கமில்லை. ஆயினும் போர் புரிந்து அபிமானத்தை விட்டுவிடுவதால் ஏற்படும் துக்கமின்மைதான் மோக்ஷத்திற்குக் காரணமாகும். தூக்கத்தில் அபிமானமில்லையே! ஆதலால் மோக்ஷம் கிடைக்கட்டுமே என்றால் புருஷம் - விழிப்பில் அபிமான மின்மை, மோக்ஷத்திற்குக் காரணம் எனப்பட்டது. புருஷம் - பிரஹ்மஞானி என்றதால் - தமேவம் வித்வான் அம்ருத இஹ பவதி - என்றபடி ஞானம் மோக்ஷ ஸாதனமாகும்.

அர்ஜுனன்:- 1-35ல் கூறியபடி பரலோக துக்கத்தைத் தரும் பாபம் ஏற்படுமே என துக்கப்படுகிறேன் என்றதால் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

16. नासतो विद्यते भावः नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽन्तः त्वनयोऽस्तत्वदर्शिभिः ॥

நாஸதோ வித்[3]யதே ப[4]ாவ:, நாப[4]ாவோ வித்[3]யதே ஸத: |
உப[4]யோரபி த்ருஷ்டோ(அ)ந்த: த்வனயோஸ் தத்வதர்ஶிபி[4]: || 16

(**யதா** – எப்படி) **அஸத:** – பாபகர்மாவால்; **பாவ:** – சுகம்; **ந வித்யதே** – இல்லையோ; (**ததா** – அப்படி) **ஸத:** – புண்ய கர்மாவால், **அபாவ:** – துக்கம்; **ந வித்யதே** – இல்லை; (இந்த யுத்தம் புண்யகர்மாவாதலால், பரலோக துக்கத்தைத் தராது),

*இதற்கு என்ன பிரமாணம்?* **அனயோ:** - *இந்த புண்ய பாப கர்மங்களினால், முறையே துக்கமும் சுகமுமில்லை என்ற;* **உபயோ:** அபி - *இரு விஷயங்களையும்;* **அந்த:** - *நிர்ணயம்; (நிர்ணயிக்கும் உபதேச பரம்பரையாகிற ஸம்பிரதாயம்),* **தத்வ தர்சிபி:** - *உண்மையைக் கண்ட மகான்களால்;* **த்ருஷ்ட: து** - *காணப்பட்டதே.*

**2ம் அர்த்தம்:–** *2-12ல் பகவானும் ஜீவர்களும் அநாதியா யிருப்பதால், நித்யர்கள் - என்பதற்குப் பிரகிருதியைத் திருஷ்டாந்தமாகக் கூறுகிறார்.*

*(யதா - எப்படி)* **அஸத:** - *ஜகத்தின் உபாதான காரண மான பிரகிருதிக்கு;* **அபாவ:** *என்று பதம் பிரித்து - ப்ராக் அபாவம், ப்ரத்வம்ஸ அபாவம் இரண்டும்;* **ந வித்யதே** - *இல்லையோ (அநாதி நித்யமானதோ) (ததா - அப்படி)* **ஸத:** - *விஷ்ணுவுக்கு;* **அபாவ:** - *மேற்படி இரு அபாவங்களும்;* **ந வித்யதே** - இல்லை. *(அநாதி நித்யமானவர்);* **அனயோ; உபயோ: அபி** - *இவ்விரண்டின்;* **அந்த;** - *நிர்ணயிக்கும் உபதேச பரம்பரையாகிற ஸம்பிரதாயம்;* **தத்வதர்ஶிபி:** - *உண்மையைக் கண்ட மகான்களால்;* **த்ருஷ்ட: து** - *பார்க்கப்பட்டதே.*

குறிப்பு: ப்ராக் அபாவ: - ஒரு பொருள் உண்டாவதற்கு முன்னிருக்கும் அதன் இல்லாமை, ப்ரத்வம்ஸ அபாவ: - ஒரு பொருள் அழிந்தபின்னிருக்கும் அதன் இல்லாமை, ப்ராக் அபாவம் இல்லை என்றால் அநாதியானது என்றும், ப்ரத்வம்ஸாபாவம் இல்லை என்றால் நித்யமானது என்றும், இரண்டும் இல்லையேல் அநாதிநித்யமானது என்றும் அர்த்தம். தத்வஸங்க்யானம்

பிரகிருதியைத் தவிர வேறு அநாதிநித்யமான பொருள் களையும் பொதுவாகக் கூறுகிறார்.

17. अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥

அவிநாஶி து தத்வித்தி[4], யேன ஸர்வமித[3]ம் ததம் |
விநாஶம் அவ்யயஸ்யாஸ்ய, ந கஸ்சித் கர்த்துமர்ஹதி || 17

**யேன** - *எந்தப் பொருளால்;* **இதம் ஸர்வம்** - *இந்த உலகம் முழுவதும்;* **ததம்** - *வியாப்தமாயுள்ளதோ;* **தத்** - *அது;* **அவிநாசிது** *(ஏவ) - அநாதி நித்யமானதே என்று;* **வித்தி** - *அறிவாயாக. இயற்கையாக நாசமில்லாவிடினும்,* **ஶாபம்** *முதலியவற்றால் நாசம் ஏற்படலாம் என்றால்;* **அவ்யயஸ்ய** - *மாறுதலேயில்லாத;* **அஸ்ய** - *இந்த எங்கும் நிறைந்த*

பொருளுக்கு; **விநாஶம் கர்த்தும்** – நாசம் உண்டுபண்ணுவதற்கு; **கஸ்சித்** – யாரும்; **ந அர்ஹதி** – தகுந்தவரல்ல.

**குறிப்பு:** அ-ஆ முதலிய 51 ஸம்ஸ்கிருத உயிர், மெய் எழுத்துக்களும், அவ்யாகிருத ஆகாசம் என்ற இடைவெளியும், காலப்ரவாஹமும், எங்கும் நிறைந்த பொருள்களாகும். இவை அநாதிநித்யமானவை.

**அர்ஜுனன்:–** ஜீவர்களும் ஈசுவரனும் அநாதிநித்யர் களாய் இருக்கையில், ஈசுவரன் எப்படிப் பூஜிக்கத் தகுந்தவன் ஆவான்?

**2ம் அர்த்தம்:–** சுலோகத்தின் முதற்பகுதிக்கு மாத்திரம்.

**யேன** – எந்த ஈசுவரனால்; **இதம் ஸர்வம்** – இந்த உலகங்கள் (தேசம்), காலம், ஞானம், ஆனந்தம் முதலிய குணங்கள், இவை எல்லாம்; **ததம்** – வியாப்தமாயுள்ளதோ; **தத்** – அந்த ஈசுவரனான விஷ்ணு; **து** – விசேஷமாக; **அவிநாசி** – நாசமில்லாதவர், அதாவது, (1) அநித்யமாயிருத்தல் (2) தேகம் அழிதல் (3) துக்கத்தை அடைதல் (4) அபூர்ணமாயிருத்தல் என்ற நான்கு விதமான நாசமில்லாதவர்.

அநித்யத்வம் தே³ஹ ஹானி: துக்கப்ராப்தி: அபூர்ணதா |
நாசஸ் சதுர் வித⁴: ப்ரோக்த: ததப⁴ாவோ ஹரேஸ் ஸத³ா ||

என்று; **வித்தி** – அறிவாயாக.

**குறிப்பு:** 51 எழுத்துக்களும், அவ்யாக்ருத ஆகாசமும் இதன் அபிமானி லக்ஷ்மீயும், எல்லா தேசங்களிலும், எல்லா காலங்களிலும், வியாப்தமாயினும், குணங்களால் வியாப்த மல்லாதவை. ஜீவர்கள் எல்லா காலங்களிலும் வியாப்தர் களாயினும், தேசத்தாலும் குணத்தாலும் வியாப்தர்களல்லர். இவ்வாறு ஜீவர்களைக் காட்டிலும் சிறப்பு இருப்பதால் ஈசுவரன் பூஜிக்கத் தகுந்தவன்.

**அர்ஜுனன்:–** ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ – என்ற சுருதியின்படி, ஜீவன் பகவானின் பிரதிபிம்பமாவான். நம்முடைய முகத்தின் பிரதிபிம்பத்துக்குக் கண்ணாடி என்ற உபாதி போல, ஜீவனுக்குத் தேகம் என்ற உபாதியுள்ளது. இந்த தேகம் அழிவதால் பிரதிபிம்பமான ஜீவனும் அழிவான். அநாதிநித்யம் என்று கூறியது தவறு; என்றால்.

18. अन्तवन्त इमे देहाः नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्मात् युध्यस्व भारत ॥

அந்தவந்த இமே தே³ஹா:, நித்யஸ் யோக்தா: ஶரீரிண: |
அநாஶினோ (அ) ப்ரமேயஸ்ய, தஸ்மாத் யுத்⁴யஸ்வ பாரத || 18

**அப்ரமேயஸ்ய** – அளவுகடந்து எங்கும் நிறைந்த பகவானைப் போன்றவர்களும்; **அநாசின:** – அழிவில்லாதவர்

களும்; **நித்யஸ்ய** - நித்யர்களுமான; **ஶரீரிண:** - தேகத்தைப் படைத்த ஜீவர்களுடைய; **இமே தேஹா:** - இந்தக் கண்ணுக்குத் தென்படும், ஸ்தூல தேகங்கள்; **அந்தவந்த:** - அழிவுடையவை, (அழிவில்லாத ஸ்வரூப தேகங்கள் என்ற உபாதிகளும் உண்டு) என்று, **உக்தா:** - கூறப்படுகின்றன. **தஸ்மாத்** - (பிம்பமான பகவான் நித்யன், ஸ்வரூப தேகம் என்ற உபாதி நித்யமானது, இவ்விரண்டுக்கும் ஸந்நிதி என்ற அருகாமையும் நித்யமானது, ஆகையால் ஜீவர்கள் அநாதி நித்யர்களே) அதனால்; **பாரத** - பரத வம்சத்தில் பிறந்தவனே! **யுத்யஸ்வ** - போர் புரிவாயாக.

**குறிப்பு: அநாசின: நித்யஸ்ய** - இரண்டும் ஒரே பொருளைக் கூறுவனபோல் தோன்றும். **அநாசின:**– பிம்பம், உபாதி என்ற இரண்டின் ஸந்நிதிக்கு நாசமில்லையாதலால், பிரதிபிம்பமான ஜீவர்களுக்கு நாசமில்லை என்று அர்த்தம். **நித்யஸ்ய** - ஸ்வரூப தேகமான உபாதிக்கு நாசமில்லை. ஆதலால் பிரதிபிம்பமான ஜீவர்களுக்கு நாசமில்லை என்று அர்த்தம். ஸந்நிதிக்கு ஏன் நாசமில்லை என்றால் **அப்ரமே யஸ்ய** - பிம்பம் எங்கும் நிறைந்திருப்பதால் நாசமில்லை.

அளவுக்குட்பட்ட கண்ணாடியில், அளவு கடந்த பொருளின் முழு பிரதிபிம்பம் ஏற்படாதே என்றால், இங்கு ஜீவன் கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பம் போன்றவன் என்று அர்த்தமல்ல. பிம்பத்தின் அற்ப ஸாம்யத்தை உடையதும், பிம்பத்திற்கு அதீனமானதுமான பொருள்தான் பிரதிபிம்பம் என்று அர்த்தம்.

**2ம் அர்த்தம்:**– சுலோகம் 17ல் - 2ம் அர்த்தத்தில் கூறப்பட்ட ஈசுவரனின் சிறப்பை இங்கு விளக்குகிறார்.

**நித்யஸ்ய** - ஸ்வரூபத்தில் நித்யமானவர்களும்; **சரீரிண:** - அழியும் தேகத்தை யுடையவர்களுமான ஸம்ஸாரி ஜீவர்களின்; **இமே தேஹா:** - இந்த ஸ்தூல தேகங்கள்; **அந்தவந்த:** - நாசமுள்ளவை. (பிறப்பும் உள்ளவை) **என உக்தா:** - கூறப்படுகின்றன. (இதனால் முக்தர்களின் தேகங்கள் இவ்விதமில்லை என ஏற்படுகிறது. அவர்களுக்கு ஸ்வாமியான பகவானுக்கு நித்யமான தேகம் உண்டு என்று சொல்லத் தேவையில்லை. பிறப்பு இறப்புகளுள்ள தேகத்தைப் படைத்த ஜீவர்களைத் துக்கம் விட்டதல்ல. அவர்கள் பூர்ண குணமில்லாதிருப்பது அநுபவஸித்தமானது.) **தஸ்மாத்** - இம்மாதிரி ஜீவர்களைக் காட்டிலும் பகவானுக்குச் சிறப்பு இருப்பதால்; **பாரத** - பரத வம்சத்திற் பிறந்தவனே! **அநாஶின:** - நான்குவித நாசமில்லாதவரும்; **அப்ரமேயஸ்ய** - தேசம், காலம், குணம் மூன்றினாலும் அளவுகடந்தவருமான பகவானுடைய; (பூஜையின் பொருட்டு) **யுத்யஸ்வ** - போர் புரிவாயாக.

**குறிப்பு:** ஜீவர்களுக்கு ஸ்வரூபம் நித்யமாயினும், தேகநாசம், துக்கத்தையடைதல், அபூர்ணதா என்ற மூன்றுவித நாசங்கள் உண்டு. ஆதலால் பரதந்திரர்கள்; பகவான் ஸ்வதந்திரன்.

**அர்ஜுனன்:–** ஒருவன் மற்றொருவனைக் கொன்று விட்டான் என்று உலகில் சொல்கிறார்கள். அதனால் ஜீவன் கொல்வதில் ஸ்வதந்திரன் என்றும், கொல்லப்பட்ட ஜீவன் நித்யனல்ல என்றும் ஏற்படுகிறது. ஆகையால் ஜீவன் நித்யனுமல்ல, பரதந்திரனுமல்ல.

19. य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम् ।
उभौ तौ न विजानीतः नायं हन्ति न हन्यते ॥

ய ஏனம் வேத்தி ஹந்தாரம், யஸ்சைனம் மன்யதே ஹதம் |
உபெ[4]ள தௌ ந விஜானீத:, நாயம் ஹந்தி ந ஹன்யதே || 19

**ய:** – *யார்;* **ஏனம்** – *இந்த ஒருவன்;* **ஹந்தாரம்** – *மற்றொருவனை ஸ்வதந்திரமாகக் கொள்பவன் என்று;* **வேத்தி** – *அறிகிறானோ;* **ய: ச** – *இன்னும் யார்;* **ஏனம்** – *இந்த மற்றொருவன்;* **ஹதம்** – *கொல்லப்பட்டவன் என்று;* **மன்யதே** – *நினைக்கிறானோ;* **தௌ உபௌ** – *அந்த இருவரும், (1 ஜீவன் ஸ்வதந்திரன் என்று அறிபவன், 2 ஜீவன் அநித்யன் என அறிபவன்)* **ந விஜானீத:** – *உண்மையை அறியாத விபரீத ஞானிகள். ஏனெனில்,* **அயம்** – *இவன்;* **ந ஹந்தி** – *(மற்றவனை) கொல்லவில்லை.* **ந ஹன்யதே** – *மற்றவனும் கொல்லப் படவில்லை. (பிம்பம், உபாதி, இரண்டின் அருகாமை – இம் மூன்றும் நித்யமானவை யாதலால் ஜீவன் அநாதி நித்யன் அல்லவா!) ஜீவன் பகவானின் பிரதிபிம்பமானதால் கொல்வதில் மாத்திரமல்ல, எந்தக் காரியத்திலுமே அஸ்வ தந்திரன் ஆவான்.*

**குறிப்பு:** (1) அவ்வாறாயின் உலகத்தில் கொலை செய்தவனைத் தண்டிக்க வேண்டியதில்லையே! என்றால், ஒருவனை அவன் வசித்து வரும் வீட்டிலிருந்து விரட்டி விடுவதும், வீட்டை அழிப்பதும், குற்றமாகும் அல்லவா! அவன் தண்டிக்கத் தகுந்தவன் அல்லவா! அம்மாதிரி ஜீவனுடைய போகங்களுக்கு இருப்பிடமானதும், தர்ம ஸாதனங்களில் முதன்மையானதுமான தேகத்தை அழித்து, அதனின்று அவனை வெளியேற்றும் குற்றத்திற்காகத் தண்டிக்கத் தகுந்தவனே!

(2) கீதா தாத்பர்யத்தில் – ஏனம் – இந்தப் பகவானை; ஜீவஸ்வருபத்தை, அழிப்பவன் என்று நினைப்பவனும் விபரீத ஞானியே. ஏனெனில் பகவான் நித்ய வஸ்துக்களை நித்யமாகவே வைத்துள்ளார் எனக் கூறப்படுகிறது.

முற்கூறப்பட்ட விஷயங்களுக்கு ஆதாரமான கட உபநிஷத்தைச் சற்று மாற்றிக் கூறுகிறார்.

20. न जायते म्रियते वा कदाचित्, नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो, न हन्यते हन्यमाने शरीरे ॥

ந ஜாயதே ம்ரியதே வா கத³ாசித், நாயம் பூ⁴த்வா ப⁴விதா வா ந பூ⁴ய:|
அஜோ நித்ய: ஶாஶ்வதோ (அ) யம் புராணோ, ந ஹன்யதே
ஹன்யமானே ஶரீரே || 20

**ஜீவபரமாக அர்த்தம்:** *(நாயம் = ந + அயம்)* **அயம்** - இந்த ஜீவன்; **ந ஜாயதே** - ஸ்வரூபத்தால் பிறப்பதுமில்லை; **ந ம்ரியதே வா (ச)** - இறப்பதுமில்லை. வளர்ச்சியும் தேய்தலு மில்லாத பகவானின் ஞானம், ஒரு சமயம் உண்டானது போல் **தத் ஐக்ஷத** என்று வேதத்தில் கூறப்படுவது போல; **அயம்** - இந்த ஜீவன்; **பூத்வா** - ஸ்வரூபத்துடன் நித்யனாக இருந்து கொண்டு; **கதாசித்** - ஒரு சமயம்; **பூய:** - மறுபடியும்; **ந பவிதா வா(ச)** - ஸ்வரூபத்தினால் உண்டாகிறான் என்று கூறப் படுவதில்லை. ஜீவஸ்வரூபத்துக்கு உற்பத்தியும் நாசமும் ஏன் இல்லை? **அஜ:** - பிறப்பில்லாதவனும்; **நித்ய:** - நாசமில்லாத வனும்; **ஶாஶ்வத:** - ஒரேவிதமாயிருப்பவனுமான பகவானுடைய ஸாம்யத்தைப் பெற்றவன். (பிரதி பிம்பமானவன்). ஜீவன் பிறக்கிறான் என்ற வியவஹாரத்திற்கு என்ன கதி? **புராண:** - (புராணி) - பல தேகங்களை (அணதி) - அடைகிறவன். (அந்த வியவகாரம், தேக சம்பந்தம் ஏற்படுவதை யொட்டியது என்று அர்த்தம்.) உபாதியான தேகத்திற்கு நாசம் ஏற்படுமே? **சரீரே ஹன்யமானே** - ஸ்தூல தேகம் என்ற உபாதி நாசமடைந்தாலும்; *(2-18-ல் கூறியபடி ஸ்வரூப தேகம் என்ற நித்யமான உபாதி இருப்பதால்)* **ந ஹன்யதே** - ஜீவன் நாசமடைவதில்லை.

குறிப்பு: **அஜ:** - பிம்பமான பகவானுக்கு உற்பத்தி யில்லை. **நித்ய:** - அவனுக்கு நாசமில்லை. **சாச்வத:** - பிம்பம், உபாதி, ஸந்நிதி, மூன்றுக்கும் பிறப்பும் அழிவும் கிடையாது. இவ்வித பகவானின் பிரதிபிம்பமான ஜீவனுக்கும் பிறப்பும் அழிவும் ஸ்வரூபத்தில் கிடையாது.

**முதற்பாதிக்கு பகவத்பரமாக அர்த்தம்:** *(நாயம் = நா + அயம்)* **அயம்** - இந்த; **நா** - *(நா-நரௌ-நர:)* பரம புருஷனான பகவான்; **ந ஜாயதே, ந ம்ரியதே வா** - தேகத்தின் சேர்க்கை யையும் பிரிவையும் உடையவனல்ல (நித்யமான தேகத்தை யுடையவன்). தேகத்திற்கே நாசமில்லை என்றால், ஸ்வரூபத் துக்கு நாசமில்லை எனச் சொல்லத் தேவையில்லை, அப்படி

யானால், ராமகிருஷ்ணாதிரூபங்களால் பிறக்கிறான் என்கிறோமே! என்றால், **பூத்வா** – ராமகிருஷ்ணாதி ரூபங்களுடன் எப்போதும் இருந்துகொண்டே; **கதாசித்** – ஒரு சமயம்; **பூய:** – மறுபடியும்; **பவிதா** – நம் கண்களுக்குத் தென்படும் ரூபத்துடன் தோன்றுகிறான். (இதுவே பிறப்பு, தேகத்தின் சம்பந்தமல்ல). **அயம்** – இந்த ஜீவனும்; **அஜ:** – பிறப்பில் லாதவன்; **நித்ய:** – நாசமில்லாதவன்; **ஶாஶ்வத:** – எப்போதும், ஒரே விதமாக பரதந்திரனாகவேயிருக்கும் ஸ்வபாவத்தை யுடையவன். ஏனெனில், **புராண:** – (தான் விரும்பாவிடில்), தேகங்களை யிழந்து தேகங்களைப் பெறுபவன். ஆனால் ஒரு குணம் உண்டு. அதாவது, **ஶரீரே ஹன்யமானே** – தேகம் நாசமடைந்தாலும்; **ந ஹன்யதே** – ஜீவன் நாசமடைவதில்லை.

சுலோகம் 19-ல் கூறப்பட்ட உண்மையை ஜீவன் அறியாதிருப்பதற்குக் காரணம் கூறுகிறார்.

21. वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।
कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम् ॥

வேத³ா விநாஶினம் நித்யம், ய ஏனமஜமவ்யயம் |
கத²ம் ஸ புருஷ: பார்த்த², கம் க⁴ாதயதி ஹந்தி கம் || 21

**ய:** – யார்; **ஏனம்** – இந்த ஜீவனை; **அவிநாசினம்** – (பிம்ப நாசம் முதலியவற்றால்) நாசமில்லாதவனாகவும், அல்லது (நாசம் – தோஷம்) ஸ்வரூபத்தில் தோஷமற்றவனாகவும்; **நித்யம்** – இயற்கையான நாசமில்லாதவனாகவும்; **அஜம்** – பிறப்பில்லாதவனாகவும்; **அவ்யயம்** – மாறுதலில்லாதவனாகவும்; (பகவத் பரமாக – ஏனம் – இந்தப் பகவானை, அவிநாசினம் – நான்குவித நாசமில்லாதவனாகவும் (2-17); **நித்யம்** – ஸ்வரூபத்தினால் நாசமற்றவனாகவும்; **அஜம்** – பிறப்பில்லாதவனாகவும்; **அவ்யயம்** – மாறுதலில்லாதவனாகவும்; (அதனாலேயே ஸ்வதந்திரனாகவும்); **வேத** – அறிகிறானோ; **ஸ: புருஷ:** – அந்த ப்ரஹ்ம ஞானியான மனிதன்; **பார்த்த** – குந்தீ புத்ரனே! **கதம்** – எவ்வாறு; **கம்** – யாரை; **காதயதி** – கொல்விப்பான்? **கம்** – யாரை, **ஹந்தி** – கொல்வான்? (நான் ஸ்வதந்திரன் என்ற அபிமானம் இல்லையாதலால், நான் இவனைக் கொல்விக்கிறேன் என்றோ, நான் கொல்கிறேன் என்றோ, கருதமாட்டான்).

**சுலோகம் 20-ல், புராண: – பல தேகங்களை அடைபவன், என்பதால் தேகத்தைக் காட்டிலும் ஜீவன் வேறானவன் எனத் தெரிகிறது. சுலோகம்**

13-ல் ஒரே தேகத்தில் ஏற்படும் குழந்தைப் பருவம் முதலியவற்றால் தேகம் வேறு, ஜீவன் வேறு, என நன்கு புரியாது என்று இங்கு வஸ்திர திருஷ்டாந்தத்தால் அதை நன்கு விளக்குகிறார்.

22. वासांसि जीर्णानि यथा विहाय, नवानि गृह्णाति नरोऽपराणि ।
तथा शरीराणि विहाय जीर्णा न्यन्यानि संयाति नवानि देही ॥

வாஸாம்ஸி ஜீர்ணானி யத$^2$ா விஹாய, நவானி க்ருஹ்ணாதி நரோ (அ) பராணி |
தத$^2$ா ஶரீராணி விஹாய ஜீர்ணான், யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ || 22

**நர:** – *மனிதன்;* **யதா** – *எவ்வாறு;* **ஜீர்ணானி** – *பழையதான,* **வாஸாம்ஸி** – *வஸ்திரங்களை,* **விஹாய** – *விட்டுவிட்டு;* **நவானி** – *புதியவையான;* **அபராணி** – *வேறானவைகளை; (வேறு விதமானவைகளை)* **க்ருஹ்ணாதி** – *உடுத்திக்கொள்கிறானோ;* **ததா** – *அவ்வாறு;* **தேஹீ** – *தேகத்தையுடைய (அதனால் தேகத்தைக்காட்டிலும் வேறான) ஜீவன்;* **ஜீர்ணானி** – *பழையதான (பகவானின் கருத்தில் ஸாதனத்திற்குத் தகாதவையான);* **ஶரீராணி** – *தேகங்களை;* **விஹாய** – *விட்டுவிட்டு;* **அன்யானி** – *வேறான (வேறு விதமான);* **நவானி** – *புதியவைகளான (தேகங்களை);* **ஸம்யாதி** – *நன்கு அடைகிறான்.*

**குறிப்பு: வஸ்திர திருஷ்டாந்தத்தால் தெளிவாகும் விஷயங்கள்:** பழைய வஸ்திரங்களை விட்டு விடுவதில் நாம் துக்கப்படுவதில்லை. புதிய வஸ்திரங்களை உடுக்க சந்தோஷப்படுகிறோம். வஸ்திரம் உடுப்பவனைக் காட்டிலும் வேறானது. உடுப்பவனுக்கு மாறுதல் இல்லை. வஸ்திரங்களை எவ்வளவு பந்தோபஸ்து செய்தாலும் நாளடைவில் பழையதாய் விடுகின்றன. அவைகளை எறியத்தான் வேண்டும்; வேறு வழியில்லை. நம்மால் ஒன்றும் செய்யமுடியாது, நாம் அஸ்வதந்திரர்கள். இவற்றை தேகத்துக்குப் பொருத்தவும். புதிய வஸ்திரம் கிடைத்த பின்பே, பழையதை எறிகிறான். தன் கர்மாவுக்குத் தகுந்த புது சரீரத்தை ஏற்படுத்திக் கொண்டே இதை விடுகிறான்.

(2) 'நவானி' என்றதாலேயே 'வேறான', என்ற அர்த்தம் ஏற்படுகிறது. 'அபராணி, அன்யானி' – என்ற பதங்கள் தேவையில்லையே! என்றால்; புதியது வேறாயிருப்பினும், இதைப்போன்று மானிட சரீரமாயில்லாது வேறுவிதமான, பசு, பக்ஷி முதலியவற்றின் சரீரமாயிருக்கலாமல்லவா! மேலும் சுலோகம் 13-ல் தெளிவில்லாதிருப்பதைத் தெளிவாக்க அந்தப் பதங்கள் அவசியமே.

**அர்ஜுனன்:–** ஜீவஸ்வருபத்திற்கு, காலத்தாலும், பிம்பநாசம் முதலியவற்றாலும், நாசமில்லாதிருப்பினும், தக்ஷப்ரஜேசுவரனின்

சிரஸ்சேதம்போல, இந்த யுத்தத்தில் (1, 20 ப்ரவ்ருத்தே சஸ்த்ர ஸம்பாதே) ஆயுதங்களால் நாசம் ஏற்படுமல்லவா? என்றால், பதிலளிக்கிறார்.

23. नैनं छिन्दन्ति शस्त्राणि नैन दहति पावकः।
न चैनं क्लेदयन्यापो न शोषयति मारुतः॥

நைனம் சி$^{2}$ந்த$^{3}$ந்தி ஶஸ்த்ராணி, நைனம் த$^{3}$ஹதி பாவக: |
ந சைனம் க்லேதயந்தி ஆபோ, ந ஶோஷயதி மாருத: || 23

**ஏனம்** – இந்த ஜீவனை; (பகவானை); **சஸ்த்ராணி** – (ப்ருதிவீ சம்பந்தமான) பலவித ஆயுதங்கள்; **ந சிந்தந்தி** – பிளப்பதில்லை; **ஏனம்** – இந்த ஜீவனை (பகவானை); **பாவக:** – நெருப்பு (அதன் சம்பந்தமான ஆக்நேயாஸ்திரங்களும்); **ந தஹதி** – எரிப்பதில்லை, **ஏனம்** – இந்த ஜீவனை (பகவானை); **ஆப: ச** – ஜலமும்; (அதன் சம்பந்தமான வாருணாஸ்திரங் களும்); **நக்லேதயந்தி** – நனைத்து மிருதுவாக்கி அழிப்பதில்லை. **மாருத:** – காற்று (அதன் சம்பந்தமான வாயவ்யாஸ்திரங் களும்); **ந சோஷயதி** – உலர்த்துவதில்லை.

குறிப்பு: 'ஏனம்' எனப் பலதடவைக் கூறியது; எல்லா ஜீவர்களையும், எல்லா பகவத் ரூபங்களையும், ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு ஆகிய நான்கு பூதங்களும் அழிக்க முடியாது என்பதைத் தெரிவிக்கிறது.

அர்ஜுனன்:– சிந்தந்தி - முதலியன நிகழ்கால வினைச்சொற்கள் ஆதலால் இப்போது அழிக்கமுடியாது என்பதால், இனி எதிர்காலத்தில் அழிக்கலாமல்லவா! என்றால், பதிலளிக்கிறார்.

24. अच्छेद्योऽयं अदाह्योऽयं अक्लेद्योऽशोष्य एव च।
नित्यः सर्वगतः स्थाणुः अचलोऽयं सनातनः॥

அச்சே$^{2}$த்யோ(அ)யம் அத$^{3}$ாஹ்யோ(அ)யம், அக்லே
த்யோ(அ)ஶோஷ்ய ஏவ ச |
நித்யஸ் ஸர்வக$^{3}$த: ஸ்த$^{2}$ாணு:, அசலோ(அ)யம் ஸநாதன: || 24

**அயம்** – இந்த ஜீவன்; **அச்சேத்ய: ஏவ** – பிளக்கத் தகாதவனே; **அயம்** – இவன், **அதாஹ்ய:** – எரிக்கத் தகாதவனே; **அயம்** – இவன்; **அக்லேத்ய:** – நனைத்து மிருதுவாக்கி அழிக்கத் தகாதவனே; **ச** – மேலும்; **அசோஷ்ய:** – உலர்த்தத் தகாதவனே; ஏனென்றால், **அயம்** – இந்த ஜீவன்; **நித்ய: ஸர்வகத:** – நித்ய மாயிருக்கும் எங்கும் நிறைந்திருக்கும் தன்மையையுடைய வனும்; **ஸ்தாணு:** – எக்காரணத்தினாலும் மாறுதலடையாத வனும்; **அசல:** – பிரகிருதி சம்பந்தமான அசைவற்றவனும்; **ஸநாதன:** – सनादः एव सनातनः வேத சப்தங்களால் கூறப்

படுபவனுமான பகவானுடைய பிரதிபிம்பமானவன். (பிம்பத்தின் குணம் பிரதிபிம்பத்தில் பெரும்பாலும் இருக்கு மாதலால் அழிக்கத் தகுதியேயில்லாத ஜீவனை எதிர் காலத்திலும் அழிக்க முடியாது.)

**2–ம் அர்த்தம் (பின்பகுதிக்கு மாத்திரம்):–** ஜீவனும் பகவானைப்போல அழிவற்றவன் என்றால், ஜீவன் ஏன் பகவானைப் பூஜிக்க வேண்டும்? **அயம்** – இந்த ஜீவன்; **நித்ய:** – நித்யம் – எப்போதும், ஸர்வகதஸ்த அணு: (என்று பதம் பிரித்து) **ஸர்வகத** – எங்கும் நிறைந்த பகவானிடம், **ஸ்த** (அதீனமாக) இருக்கும், **அணு:** – மிகமிகச் சிறியவன், **அசல:** – (பகவானுடைய அதீனத்திலிருந்து) அசையாதவன். ஏன் எப்போதும் அதீனன்? என்றால், **ஸநாதன:** – வேதங்களில் விதிக்கப்பட்டவை களுக்கும், தடுக்கப்பட்டவைகளுக்கும் கட்டுப்பட்டவன். (ஆதலால், ஜீவன் பகவானைப் போல் அழிவற்றவன் ஆயினும், எப்போதும் பகவானுக்கு அதீனனா யிருப்பதால் அவனைப் பூஜிக்க வேண்டும்).

**குறிப்பு:** குதிரையின் வாலின் நுனியை எடுத்துக் கொண்டு, அதை நூறு பாகமாகச் செய்து, ஒரு பாகத்தை மறுபடியும் நூறாகச் செய்வதால், எந்த அளவு ஏற்படுமோ, அந்த அளவுதான் பிரம்மதேவர் முதலிய ஜீவர்களின் பரிமாணம் என்று கூறப்பட்டுள்ளது.

*அசுவவாலாக்ர மாதாய, விபஜ்ய சததாஹி தத் |*
*புனஸ்ச சததா பின்னம், கியன் மானம் பவிஷ்யதி |*
*தாவத் ப்ரஹ்மாதிஜீவானாம், பரிமாணம் ப்ரகீர்த்திதம் ||*

**அர்ஜுனன்:–** அணுவான ஜீவனுக்கு ஆதாரமான பரமாத்மா எங்கும் நிறைந்தவனாகில், ஏன் காணப்பட வில்லை?

25. अव्यक्तोऽयं अचिन्त्योऽयं अविकार्योऽयमुच्यते ।
तस्मादेनं विदित्वैवं नानुशोचितुमर्हसि ॥

அவ்யக்தோ (அ) யம் அசிந்த்யோ (அ) யம், அவிகார்யோ (அ) யமுச்யதே |
தஸ்மாதே³னம் விதி³த்வைவம், நானுஶோசிது மர்ஹஸி || 25

**அயம்** – இந்த ஹரி; **அவ்யக்த:** – மிக சூக்ஷ்மமானவன். தேகத்துடன் இருப்பவன், எப்படி சூக்ஷ்மமாயிருக்க முடியும்? **அயம்** – இவன்; **அசிந்த்ய:** – சிந்தனைக்கு எட்டாத சக்தி யுடையவன். அந்த சக்தி அழிந்தாலோ தடைபட்டாலோ காணலாமல்லவா? **அயம்** – இவன்; **அவிகார்ய:** – ஒரு பொழுதும் மாறாத சக்தியுடையவன். இதற்கு என்ன

பிரமாணம்? **உச்யதே** - (ஸத்தேஹ: **ஸுககந்தஸ்ச** - முதலிய சுருதிகளில் இதெல்லாம்) கூறப்படுகிறது. **தஸ்மாத்** - (பிம்பம், உபாதி, இரண்டின் ஸந்நிதி, இவற்றின் நாசத்தாலும், ஶாபம் முதலிய காரணங்களினாலும், சஸ்திரம் அஸ்திரம் முதலியவைகளினாலும், நாசமில்லாதபடியால் ஜீவன் நித்யன்.) ஆதலால்; **ஏனம்** - இந்த ஜீவனை; **ஏவம்** - இம்மாதிரி நித்யன் என்று; **விதித்வா** - அறிந்து; **அனுஶோசிதும்** - துக்கப்படுவதற்கு, **ந அர்ஹஸி** - நீ தகுந்தவனல்ல.

**பின் பாதிக்கு 2-ம் அர்த்தம்:-** தஸ்மாத் - (ஸ்ரீஹரியே ஸர்வ ஸ்வதந்திரர், துக்கமனைத்தையும் போக்கி மோக்ஷ சுகத்தைத் தருபவர்) ஆதலாலும்; **ஏனம்** - இந்த பகவானை; **ஏவம்** - இம்மாதிரி (அவ்யக்தன் என்றெல்லாம்), **விதித்வா** - (கர்மணா ஜ்ஞான மாதனோதி - யுத்தமாகிற உனக்குரிய கர்மாவால்) அறிந்து; **அனுசோசிதும்** - ஸம்ஸார துக்கத்தை அனுபவிப்ப தற்கு; **ந அர்ஹஸி** - நீ தகுந்தவனல்ல. முக்தியை அடைவாய்.

(**தஸ்மாதேவம் விதித்வைனம்** - பிறர் பாடம்),

**அர்ஜுனன்:-** யுத்தத்தில் மரணம் நிச்சயம். அதனால் என்னைச் சேர்ந்த பீஷ்மாதிகளுக்குத் துக்கம் ஏற்படும் என்று எனக்குத் துக்கம் என்றால்.

26. अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।
तथापि त्वं महाबाहो नैनं शोचितुमर्हसि ।।

அத² சைனம் நித்யஜாதம், நித்யம் வா மன்யஸே ம்ருதம் |
தத²ா(அ)பி த்வம் மஹாபா³ஹோ நைனம் ஶோசிதுமர்ஹஸி || 26

**ஏனம்** - இந்த ஜீவனை; **நித்யஜாதம் - ஜாதமேவ** - தேகத்தின் சேர்க்கை என்ற பிறப்பையுடையவனாகவே; **வா** - அல்லது; **நித்யம் ம்ருதம் - ம்ருதமேவ** - தேகத்தின் பிரிவு என்ற மரணத்தையுடையவனாகவே; **மன்யஸே அதச** - ஒரு வேளை நீ நினைக்கும்பக்ஷத்தில், **ததாஅபி** - அப்படியாயினும்; **மஹாபாஹோ** - பெரும் கைகளையுடையவனே! **த்வம்** - நீ; **ஏனம்** - இந்த ஜீவனைக் குறித்து; **சோசிதும்** - துக்கப்படுவதற்கு; **ந அர்ஹஸி** - தகுந்தவனல்ல.

குறிப்பு: 'நித்யம்' என்ற பதத்திற்கு ஏவ என்ற புதிய அர்த்தத்தைக் கவனிக்க. (**நைவம் சோசிதும்** - பிறர் பாடம்).

**அர்ஜுனன்:-** துக்கப்படாமலிருப்பதற்குக் காரணம் கூற வில்லையே! என்றால், பதிலளிக்கிறார்:

27. जातस्य हि ध्रुवो मृत्युः ध्रुवं जन्म मृतस्य च ।
तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितु मर्हसि ।।

ஜாதஸ்ய ஹி த்[4]ருவோ ம்ருத்யு:, த்[4]ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச |
தஸ்மாத் அபரிஹார்யே(அ)ர்த்தே[2], ந த்வம் ஶோசிதுமர்ஹஸி || 27

**ஜாதஸ்ய** - *பிறந்தவனுக்கு;* **ம்ருத்யு:** - *மரணம்;* **த்ருவ:** - *நிச்சயம்.* **ம்ருதஸ்ய** - *இறந்தவனுக்கு;* **ஜன்ம ச** - *பிறப்பும்;* **த்ருவம்** - *நிச்சயம்;* **ஹி** - *இது பிரசித்தமானது.* **தஸ்மாத்** - *(மோக்ஷமடையும் வரையில் பிறப்பும் இறப்பும் விட்டதல்ல) ஆதலால்;* **அபரிஹார்யே** - *போக்கடிக்க முடியாத;* **அர்த்தே** - *விஷயத்தில்;* **த்வம்** - *நீ;* **சோசிதும்** - *துக்கிப்பதற்கு,* **ந அர்ஹஸி** - *தகுந்தவனல்ல. (பிறப்பு இறப்புகளையுடைய ஜீவன் ஸ்வதந்திரன் என்பதற்கும் தகுந்தவனல்ல).*

குறிப்பு: ஜாதஸ்ய தவ - பிறந்துள்ள உனக்கும், மரணம் நிச்சயம். ஆகவே அவர்களைப் பற்றி துக்கிக்காமல் மோக்ஷமடைய முயற்சி செய். அபரிஹார்யே - அ - விஷ்ணுவால், பரிஹார்யே - போக்கடிக்கத் தகுந்த விஷயத்தில் நீ துக்கப்படாமல், அவனுடைய பிரஸாதத்தை அடைய முயற்சிப்பாயாக.

பிறப்பு இறப்புகளின் தன்மையை விளக்கி, இதையே தெளிவாக்குகிறார்.

28. अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।
अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ।।

அவ்யக்தாதீ[3]னி பூ[4]தானி, வ்யக்த மத்[4]யானி ப[4]ாரத |
அவ்யக்த நித[4]னான்யேவ, தத்ர கா பரிதே[3]வனா || 28

**பாரத** - *பரதவம்சத்திற் பிறந்தவனே!* **பூதானி** - *ஜீவர்களின் தேகங்கள்;* **அவ்யக்த ஆதீனி** - *ஜடபிரகிருதியை,* **ஆதி** - *உற்பத்திக்கு காரணமாகக் கொண்டவை.* **வ்யக்த மத்யானி** - *பிறப்புக்கும் இறப்புக்கும் நடுவில் கண்ணுக்குத் தெரிபவை.* **அவ்யக்த நிதனானி ஏவ** - *ஜடப்பிரகிருதியில் நாசமடைபவனே,* **தத்ர** - *அவ்வித தேகங்களின் விஷயத்தில்,* **கா பரிதேவனா** - *துக்கம் ஏது? (துக்கமில்லை).*

பரிவேதனா - பிறர் பாடம்.

அர்ஜுனன்:- யாரை ஸ்வதந்திரன் என்று அறிய வேண்டும்?

29. आश्चर्यवत्पश्यति कश्चिदेनं आश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः श्रृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् ।।

ஆஸ்சர்யவத் பச்யதி கஸ்சிதே[3]னம், ஆஸ்சர்யவத் வத[3]தி
தநை[2]வசான்ய: |
ஆஸ்சர்யவச் சைன மன்ய: ஶ்ருணோதி, ஶ்ருத்வாப்யேனம் வேத[3]
நசைவ கஸ்சித் || 29

**கஸ்சித்** - ஒரு ஸாத்விகன், முக்தியோக்யன்; **ஏனம்** - இந்த ஸ்வதந்திரனான ஈசுவரனை; **ஆஸ்சர்யவத்** - ஸ்வதந்திர னான ஈசுவரனைப்போல், **பச்யதி** - பார்க்கிறான் (அதாவது, **ககனம் ககனாகாரம்** - ஆகாயம் ஆகாயம் போன்றது என்பது போல, வேறு ஸ்வதந்திரவஸ்து கிடையாது என்று அர்த்தம்). **அன்ய: ச** - மற்றொரு ஸாத்விகன்: **ஏனம்** - இந்த அற்புதமான ஈசுவரனை; **ததா ஏவ** - அப்படியே (பார்ப்பவன் போலவே) **ஆஸ்சர்யவத்** - அற்புதமான ஈசுவரன் போலவே, **வததி** - பிறருக்குச் சொல்கிறான். (அதாவது, **ஸாகரம் ஸாகரோபமம்** - சமுத்திரங்களின் கூட்டம், சமுத்திரங்களின் கூட்டத்தைப் போன்றது என்பது போல, வேறு சொல்லத் தகுந்த அற்புத வஸ்து கிடையாது என்று அர்த்தம்). **அன்ய:ச** - இன்னும் ஒரு ஸாத்விகன்; **ஏனம்** - இந்த அற்புத ஈசுவரனை; **ஆஸ்சர்யவத்** - அற்புத ஈசுவரன் போலவே; **ஶ்ருணோதி** - காதால் கேட்கிறான். (அதாவது **ராமராவணயோர் யுத்தம் ராமராவண யோரிவ** - ராம ராவணர்களின் போர், ராம ராவணர்களின் போர் போன்றது என்பதுபோல, வேறு கேட்கத் தகுந்த அற்புத வஸ்து கிடையாது என்று அர்த்தம்). **கஸ்சித் ச** - மற்றும் ஒரு ஸாத்விகனும்; **ஏனம்** - இந்த அற்புதமான ஈசுவரனை; **ஶ்ருத்வா அபி** - காதால் கேட்கும்; (கண்ணால் பார்த்தும், வாயால் சொல்லியும்கூட) **நைவ வேத** - உண்மை யாக அறியவில்லை. (ஸ்ரீஹரி அத்யத்புதவஸ்து).

குறிப்பு: (1) முதல் ஆஸ்சர்ய பதத்திற்கு ஸ்வதந்திரன் என்று அர்த்தம். (2) ஸாகர: ஸாகரோபம: என்று அனைவரும் சொல்வது வழக்கம். அது தவறு. ஏனெனில் இந்துமகா சமுத்திரம் பஸிபிக் சமுத்திரம் போன்றது என்று உதாரணமாகக்கூற இடமிருக்கிறது, ஆகவே ஸாகராணாம் சமூஹ: ஸாகரம் - சமுத்திரங்களின் கூட்டம் போன்றது என்று சொன்னால், வேறு உதாரணம் கூற முடியாது. ஒரு வஸ்து அந்த வஸ்து போலவே இருக்கிறது; வேறு உதாரணமில்லை; என்பதற்கு அநன்வயா லங்காரம் எனப் பெயர்.

**ஜீவபரமாக 2-ம் அர்த்தம்:- ய: கஸ்சித்** - எந்த ஒருவன்; **ஏனம்** - இந்த ஜீவனை; **பஶ்யதி** - 2-18-ல் கூறியபடி பகவானைப் போன்றவன், (பகவானுக்கு அதீனன் என்று) பார்க்கிறானோ;

**ஸ:** – அவன்; **ஆஸ்சர்யவத்** – ஆஸ்சர்ய: **ஏவ** – கிடைப்பதரிதே. இம்மாதிரியே, **ஏனம்** – இந்த ஜீவனைப் பற்றி; **வததி** – பிறருக்குச் சொல்கிறானோ; அவனும் கிடைப்ப தரிது. இம்மாதிரியே **ஏனம்** – இந்த ஜீவனை; **ஶ்ருணோதி** – காதால் கேட்கிறானோ; அவனும் கிடைப்பரிது. எல்லோரும், 'நான்' என்று ஜீவனை அறிந்திருக்கிறார்களே, கிடைப்பது அரிது என்பது தவறு என்றால், **ஏனம்** – இந்த ஜீவனை, **ஶ்ருத்வா அபி** – கேட்டும், (பார்த்தும், சொல்லியும்) கூட; **கஸ்சித்** – யாரும், **நைவ வேத** – நன்றாக அறியவே இல்லை. (பிரதி பிம்பனான ஜீவனின், ஸ்வரூபத்தை நன்கு அறிந்தவனே துர்லபம் என்றால், பிம்பமாகவிருக்கும் ஸ்ரீஹரியின் மகிமையை அறிந்தவனைப் பற்றிக் கேட்பானேன்!)

**குறிப்பு:** (1) **ஆஸ்சர்ய:** என்ற பதத்துக்கு துர்லபமானது என்றும் அர்த்தம். வத் என்பதற்குப் போல என்று அர்த்தமல்ல. ஏவ என்று அர்த்தம்.

(2) கஸ்சித் – யாரோ ஒருவன் – என்று பல தடவை கூறியிருப்பதால் ஸாத்விகர்கள் குறைவு. அஸுர ஸ்வபாவமுள்ளவர்கள் அதிகம் என்று அறியவும். அவர்கள் விபரீதமாகவே பார்ப்பவர்கள், சொல்பவர்கள், கேட்பவர்கள். துர்யோதனன், ஸ்ரீ கிருஷ்ணர் தூது சென்றபோது அவருடைய விசுவ ரூபத்தைப் பார்த்தும், பீஷ்மர் முதலிய பல பேர் ஸ்ரீ கிருஷ்ணரின் மகிமையைச் சொல்லியும், அவன் கேட்டும், பகவானை அறியவில்லை. ஜீவஸ்வரூபத்தையும், பகவத்ஸ்வரூபத்தையும், உள்ளது உள்ளபடி அறிபவன், சொல்பவன், கேட்பவன் அரிது.

**அர்ஜுனன்:–** 2-12-ல் ஜீவர்கள் இயற்கையில் அநாதி நித்யர்கள் எனப்பட்டதால், ஈசுவரனுக்கு அதீனமானவர் களல்லர் என்றதும், பகவான் ஸ்வதந்திரன் என்றதும் சரியல்ல என்றால்,

30. देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥

தே³ஹீ நித்யம் அவத்³யோ(அ)யம், தே³ஹே ஸர்வஸ்ய ப⁴ாரத |
தஸ்மாத் ஸர்வாணி பூ⁴தானி, ந த்வம் ஶோசிது மர்ஹஸி || 30

**பாரத** – பரதவம்சத்திற் பிறந்தவனே! **ஸர்வஸ்ய** – எல்லா ஜீவர்களின்; **தேஹே** – பஞ்ச பூதங்களாலான ஸ்தூல தேகத்திலும்; பிரகிருதி சம்பந்தமான லிங்கதேகமென்ற ஸூக்ஷ்ம தேகத்திலும்; ஸாத்விகனின் ஞானானந்த ஸ்வரூபமான ஸ்வரூப தேகத்திலும்; **அயம்** – இந்த ஸ்ரீஹரி, (திஷ்டதி – காப்பாற்றிக் கொண்டிருக்கிறான்). ஆகையால் **தேஹீ** – ஜீவன், **நித்யம்** – எப்பொழுதும், **அவத்ய:** – கொல்லப்படத்தகாதவன்; **தஸ்மாத்** – ஆகையால்; **த்வம்** – நீ; **ஸர்வாணி பூதானி** – எல்லா

ஜீவர்களைக் குறித்து; **ஶோசிதும்** - துக்கப்படுவதற்கு, **ந அர்ஹஸி** - தகுந்தவனல்ல.

குறிப்பு: சுலோகம் 18-ல் "யுத்தம் செய்" என்றார். துக்கம் அதற்குப் பெரும் தடையாகவிருந்ததால், 25 முதல் 28, 30 ஐந்து சுலோகங்களில் துக்கப்படாதே என்றார். பகவான் ஜீவர்களைக் காப்பாற்றுபவன், ஆனதால் பகவான் ஸ்வதந்திரனே, பாகவதம் 2-10-12:-

*த்ரவ்யம் கர்ம ச காலஸ்ச, ஸ்வப[4]ாவோ ஜீவ ஏவ ச |*
*யதனுக்ரஹதஸ் ஸந்தி, ந ஸந்தி யதுபேக்ஷயா ||*

பிரகிருதி முதலிய த்ரவ்யங்களும், புண்யம் பாபம் என்ற கர்மாவும், காலமும், எல்லாப் பொருள்களின் ஸ்வபாவமும், லக்ஷ்மீயும், ப்ரஹ்மாதி ஜீவர்களும், பகவானின் அநுக்ரஹத்தா லேயே உள்ளனர். அவர் அலக்ஷியம் செய்தால் இருக்க மாட்டார்கள் என்றபடி, எல்லாம் பகவானுக்கு அதீன மானவை.

இங்கு 2-12-ல் ஆரம்பமான ஜீவ நித்யத்வம் முடிகிறது.

1-29-ல் அர்ஜுனன், தன் தேகத்தில் நடுக்கம் உண்டா யிருக்கிறது என்றான். 1-31-ல் சிரேயஸ்ஸையும் காணவில்லை என்றான். அவ்விரண்டுக்கும் பதிலளிக்கிறார்.

31. स्वधर्ममपि चावेक्ष्य न विकंपितुमर्हसि ।
धर्म्याद्धि युद्धात् श्रेयोऽन्यत् क्षत्रियस्य न विद्यते ॥

ஸ்வத[4]ர்மமபி சாவேக்ஷ்ய, ந விகம்பிது மர்ஹஸி |
த[4]ர்ம்யாத்தி[4] யுத்த[4]ாத் ஶ்ரேயோऽன்யத், க்ஷத்ரியஸ்ய ந வித்[3]யதே ||
31

**ஸ்வதர்மம் அபிச** - (ஜீவர்களுக்கு நாசமில்லை என்பது மாத்திரமல்ல) யுத்தம் உன்னுடைய கடமை என்பதையும்; **அவேக்ஷ்ய** - நன்கு அறிந்து; **விகம்பிதும்** - விசேஷமாக நடுங்குவதற்கு; **ந அர்ஹஸி** - நீ தகுந்தவனல்ல. **க்ஷத்ரியஸ்ய** - உன் போன்ற க்ஷத்ரியனுக்கு; **தர்ம்யாத்** - பரலோக சுகத்திற்குக் காரணமான தர்மத்தையுண்டுபண்ணும் அல்லது, **(தாரகத் வாத்) தர்ம:** - அனைத்தையும் தாங்கியிருக்கும் ஸ்ரீ ஹரியின் பூஜையாகவும் உள்ள; **யுத்தாத்** - போரைக்காட்டிலும்; **அன்யத்** - வேறு; **ஶ்ரேயஸ்** - பரலோக நன்மை, **ந வித்யதே** - இல்லை, **ஹி** - இது பிரஸித்தமானது.

அந்தப் பெரும் நன்மை, தானே கிடைத்திருக்கையில் நடுங்குவது உசிதமல்ல என்று கூறி, 1-36-ல் எப்படி ஸுகிகள் ஆவோம்? என்பதற்கும் பதிலளிக்கிறார்.

32. यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥

யத்ருச்ச[2]யா சோபபன்னம், ஸ்வர்க்கத்[3]வாரம் அபாவ்ருதம் |
ஸுகி[2]ன: க்ஷத்ரியா: பார்த்த[2], லப[4]ந்தே யுத்த[4]மீத்ருஶம் || 32

**பார்த்த** – குந்தீபுத்திரனே! **ச** – மேலும், **யத்ருச்சயா** – உன் முயற்சியில்லாமல், அல்லது பகவானின் இச்சையால்; **உபபன்னம்** – கிடைத்ததும், **அபாவ்ருதம்** – மூடப்படாத; (திறந்துள்ள); **ஸ்வர்க்கத்வாரம்** – ஸ்வர்க்கத்தின் வாயிலை உடையதும், (பரலோக சுகத்துக்கு ஸாதனமானதும்); **ஈத்ருஶம்** – இவ்விதமானதுமான (உன் கடமையாகவும், பகவத் பூஜை யாகவும் உள்ளதுமான); **யுத்தம்** – போரை, **ஸுகின:** – சுகத்தின் காரணமான புண்யத்தைச் செய்த; **க்ஷத்ரியா:** க்ஷத்திரியர்கள்; **லபந்தே** – அடைகிறார்கள். அல்லது, **யே** – எவர்கள்; இவ்வித யுத்தத்தை அடைகிறார்களோ; **தே** – அந்த க்ஷத்ரியர்கள்; **ஸுகின:** – புண்யம் செய்தவர்கள்.

இப்போது போர்புரியாவிடில் விளையும் அனர்த்தங் களைக் கூறி 4 சுலோகங்களில் (33 முதல் 36) போர் புரியச் சொல்கிறார்.

33. अथ चेत् त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि ।
ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापं अवाप्स्यसि ॥

அத சேத் த்வமிமம் த[4]ர்ம்யம், ஸங்க்[3]ராமம் ந கரிஷ்யஸி |
தத: ஸ்வத[4]ர்மம் கீர்த்திம் ச, ஹித்வா பாபம் அவாப்ஸ்யஸி || 33

**அத** – ஒருகால்; **த்வம்** – நீ; **இமம்** – இந்த; **தர்ம்யம்** – பரலோக சுகத்துக்குக் காரணமான தர்மத்தையுண்டுபண்ணு வதும், ஸ்ரீஹரியின் பூஜையாகவிருப்பதுமான; **ஸங்க்ராமம்** – சண்டையை; **ந கரிஷ்யஸி சேத்** – செய்யாவிடில்; **தத:** – அதனால்; **ஸ்வதர்மம்** உன் கடமையையும்; **கீர்த்திம் ச** – புகழையும்; **ஹித்வா** – இழந்து; **பாபம் ச** – (உனக்கு விதிக்கப் பட்ட கர்மத்தை விட்டுவிட்டதால் ஏற்படும்) பாவத்தையும்; **அவாப்ஸ்யஸி** – அடைவாய்.

குறிப்பு: 1-35-ல் அர்ஜுனன், அவர்களைக் கொன்றால் பாபம் வரும் என்றான். இங்கு ஸ்ரீ கிருஷ்ணர், கொல்லாவிடில் பாபம் வரும் என்கிறார்.

கீர்த்தியை இழப்பது மாத்திரமல்ல, அபகீர்த்தியையும் அடைவாய் என்கிறார்.

34. अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम् ।
संभावितस्य चाकीर्तिः मरणादतिरिच्यते ॥

அகீர்த்திம் சாபி பூ4தானி, கத2யிஷ்யந்தி தே(அ)வ்யயாம் |
ஸம்ப4ாவிதஸ்ய சாகீர்த்தி:, மரணாத் அதிரிச்யதே || 34

**அபிச** - மேலும்; **பூதானி** - பாமர ஜனங்கள்; **தே** - உன்னுடைய; **அவ்யயாம்** - என்றும் அழியாத; **அகீர்த்திம்** - அபகீர்த்தியை, (இகழ்ந்து பேசுதலை); **கதயிஷ்யந்தி** - சொல் வார்கள். (சொல்லட்டுமே என்ன தோஷம்?) **அகீர்த்தி: ச** - அபகீர்த்தியும்; **ஸம்பாவிதஸ்ய** - உலகில் நன்கு மதிக்கப்பட்ட (உன்போன்றவனுக்கு); **மரணாத்** - மரணத்தைக் காட்டிலும்; **அதிரிச்யதே** - அதிகமானது. (இவ்வுலகில் வேதனையையும், பரலோகத்தில் நரகத்தையும் தரும்).

**குறிப்பு:** பாகவதம் 4-3-25 - ஸம்பாவிதஸ்ய ஸ்வஜனாபவாத: யதா ஸ ஸத்யோ மரணாய கல்பதே. (சிவன் ஸதியிடம் கூறியது).

**அர்ஜுனன்:-** கருணையால், போரிலிருந்து விலகினேன் என்று என்னைப் புகழ்வார்களே தவிர நிந்திக்கமாட்டார்கள் என்றால், பதிலளிக்கிறார்:

35. भयाद्रणात् उपरतं मंस्यन्ते त्वां महारथाः ।
येषां च त्वं बहुमतः भूत्वा यास्यसि लाघवम् ॥

ப4யாத் ரணாத் உபரதம், மம்ஸ்யந்தே த்வாம் மஹாரத2ா: |
யேஷாம் ச த்வம் பஹுமத:, பூ4த்வா யாஸ்யஸி லாக4வம் || 35

**மஹாரதா:** (1-4) ஒருவராகவே 10,000 வில்லாளிகளுடன் போர்புரிபவர்கள்; **த்வாம்** - உன்னை; **பயாத்** - பயத்தினால் (கருணையால் அல்ல); **ரணாத்** - போரிலிருந்து; **உபரதம்** - ஓய்வு பெற்றவனாக; **மம்ஸ்யந்தே** - அறிவார்கள். (அறியட்டுமே என்ன தோஷம்?), **ச** - மேலும்; **யேஷாம்** - எந்த மகாரதர்களுக்கு; **த்வம்** - நீ; **பஹுமத: பூத்வா** - நன்கு மதிக்கப் பட்டவனாகி; (**ஆஸீ:** - இருந்தாயோ) **தேஷாம் புரத: ஏவ** - அவர்களுடைய முன்னிலையிலேயே; **லாகவம்** - சிறுமையை; **யாஸ்யஸி** - அடைவாய்.

36. अवाच्यवादांश्च बहून् वदिष्यन्ति तवाहिताः ।
निन्दन्तः तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥

அவாச்ய வாத3ாம்ஸ்ச ப3ஹூன், வதி3ஷ்யந்தி தவாஹிதா: |
நிந்த3ந்த: தவ ஸாமர்த்யம், ததோ து3க்க2தரம் நு கிம் || 36

**ச** - *மேலும்;* **தவ அஹிதா:** - *உன்னுடைய சத்ருக்கள்;* **தவ ஸாமர்த்யம்** - *உன்னுடைய திறனை;* **நிந்தந்த:** - *தூஷித்துக் கொண்டு;* **அவாச்ய வாதான்** - *சொல்லத்தகாத வார்த்தைகளான;* **பஹூன்** - *பலவற்றை;* **வதிஷ்யந்தி** - *சொல்வார்கள்.* **தத:** - *அதைக் காட்டிலும்;* **துக்கதரம்** - *அதிக துக்கத்தைத் தருவது;* **கிம் நு** - *யாது இருக்கிறது? (யாதுமில்லை).*

குறிப்பு: பந்துக்களும், சிநேகர்களும் நிந்தித்தாலே துக்கம், சத்ருக்கள் நிந்தித்தால், துக்கதரம் - அதைவிட துக்கமானது.

அர்ஜுனன், 2-6-ல் 'ஜயம் சந்தேகமே', என்று கூறியதற்குப் பதிலளிக்கிறார்.

37. हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।
तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः ॥

ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்க[3]ம், ஜித்வா வா போ[4]க்ஷ்யஸே மஹீம் |
தஸ்மாது[3]த்திஷ்ட[2] கௌந்தேய, யுத்த[4]ாய க்ருத நிஸ்சய: || 37

**கௌந்தேய** - *குந்திபுத்திரனே!* **ஹத: வா** - *நீ யுத்தத்தில் கொல்லப்பட்டாலோ;* **ஸ்வர்க்கம்** - *வீரஸ்வர்க்கத்தை,* **ப்ராப்ஸ்யஸி** - *அடைவாய்,* **ஜித்வா வா** - *ஜயித்தாலோ;* **மஹீம்** - *பூமியையும் (பிறகு ஸ்வர்க்கத்தையும், இரண்டையும்);* **போக்ஷ்யஸே** - *அநுபவிப்பாய்.* **தஸ்மாத்** - *ஆகையால் (இரு பக்ஷங்களிலும் பலனிருப்பதால்);* **யுத்தாய** - *போரின் பொருட்டு;* **க்ருதநிஸ்சய:** - *நிச்சயம் செய்து கொண்டவனாய்;* **உத்திஷ்ட** - *எழுந்திரு (தயாராகு).*

குறிப்பு: **யே யுத்யந்தே ப்ரதனேஷு, சூராஸோ யே தனு த்யஜ:**– எந்த சூரர்கள் போர்களில் போர் புரிகிறார்களோ, யார் தேகத்தை விடுகிறார்களோ - இருவர்க்கும் ஸ்வர்க்க முண்டு - என்று வேதம் கூறுகிறது. ஆகவே ஜயித்தால், பூமியும் ஸ்வர்க்கமும் இரண்டும் கிடைக்கும்.

அர்ஜுனன் 1-35-ல் பாபம் வரும் என்றேனே! என்றால்

38. सुखदुःखे समे कृत्वा लाभालभौ जयाजयौ ।
ततो युद्धाय युज्यस्व नैव पापमवाप्स्यसि ॥

ஸுக[2]து[3]க்கே[2] ஸமே க்ருத்வா, லாப[4]ாலாபெ[4]ள ஜயாஜயௌ |
ததோ யுத்த[4]ாய யுஜ்யஸ்வ, நைவ பாபமவாப்ஸ்யஸி || 38

**ஸுகதுக்கே** - *விஷயஸுகத்தையும், துக்கத்தையும்;* **லாப அலாபௌ** - *லாபத்தையும் நஷ்டத்தையும்;* **ஜய அஜயௌ** - *ஜயத்தையும் தோல்வியையும்,* **ஸமே க்ருத்வா** - *ஸமமாகப்*

பாவித்து; யுத்தாய - போரின் பொருட்டு; யுஜ்யஸ்வ - முயற்சிப்பாயாக. தத: - அதனால்; (பகவானிடம் பக்தியுடன் உன் கடமையென்று செய்வதால்) பாபம் - பாவத்தை; நைவ அவாப்ஸ்யஸி - அடையவே மாட்டாய். (புண்யத்தையே அடைவாய்.)

குறிப்பு: சுக துக்கத்தைச் சமமாகப் பாவிப்பது என்பதை 2-15-ல் பார்க்க. அதுபோலவே, வேண்டாம் என்ற விஷயத்தில் நஷ்டத்திற்குச் சமமாக லாபத்தையும், தோல்விக்குச் சமமாக ஜயத்தையும் பாவிப்பதாகும். நைவம் பாபம் - பிறர் பாடம்.

2-12-ல் ஆரம்பித்த ஜீவேசுவரஸ்வரூப விளக்கத்தை முடித்து அதைப் பற்றிய மேல் விபரத்தை ஆரம்பிக்கிறார்.

39. एषा तेऽभिहिता सांख्ये बुद्धिर्योगे त्विमां श्रृणु ।

ஏஷா தே அபி[4]ஹிதா ஸாங்க்யே, பு[3]த்தி[4]ர் யோகே[3] த்விமாம் ஶ்ருணு ।

(பார்த்த - குந்தீபுத்திரனே!), ஸாங்க்யே - ஜீவேசுவர ஸ்வரூபஞான விஷயத்தில், அதாவது அந்த ஞானத்தை உண்டாக்க; ஏஷா - இந்த ( 2-12 முதல் 2-30 முடிய), புத்தி: - ஞானத்தை யுண்டாக்கும் வார்த்தைகள்; தே - உனக்கு; அபிஹிதா - சொல்லப்பட்டன. யோகே து - அந்த ஞானத்தின் உபாயத்தை அறியும் பொருட்டு; இமாம் - இந்த (2-45 முதல் 6-ம் அத்தியாயம் முடிய கூறப்படும்); (புத்திம் - வார்த்தை களை); ச்ருணு - கேள். (கேட்டு, அதில் நம்பிக்கையை வைத்து, அதன்படி நட.

குறிப்பு: (1) ஸாங்க்யம் - அப்பெயர் கொண்ட சாஸ்திர மல்ல.

*ஶுத்த[4]ாத்ம தத்வவிஜ்ஞானம் ஸாங்க்ய மித்யபி[4]தீ[4]யதே* ।

ஜீவன், ஈசுவரன் என்ற தத்வங்களின் சுத்தமான விசேஷ ஞானம் ஸாங்க்யம் எனப்படுகிறது.

(2) புத்தி:- ஞானம் என்று பொதுவான அர்த்தம். இங்கு (புத்யதே அனயா) - ஞானத்தையுண்டாக்கும் வார்த்தைகள் என்று அர்த்தம். அவைகளைக் கேட்டதும் ஞானமுண்டாகும் விதத்தில் என் வார்த்தைகள் அமைந்துள்ளன என்பதைக் குறிக்க இவ்வாறு கூறுகிறார்.

இதில் சிரத்தையுண்டாவதற்காக 2½ சுலோகங்களில் அதைப் புகழ்கிறார்.

बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥

பு[3]த்[4]யா யுக்தோ யயா பார்த்த[2], கர்மப[3]ந்த[4]ம் ப்ரஹாஸ்யஸி ॥ 39

**யயா புத்யா** – அந்த என் வார்த்தைகளால் அறியப்படும் ஞானோபாயத்துடன்; **யுக்த:** – கூடினவனாய் (அதாவது அதை அனுஷ்டித்துப் பகவானின் அபரோக்ஷ ஞானத்தை யடைந்து); **கர்மபந்தம்** – அநாதிகர்மாவால் ஏற்பட்ட ஸம்ஸார பந்தத்தை, **ப்ரஹாஸ்யஸி** – அடியோடு ஒழித்து முக்தனாக ஆவாய்.

40. नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥

நேஹாபி4க்ரமநாஶோ(அ)ஸ்தி, ப்ரத்ய வாயோ ந வித்3யதே |
ஸ்வல்பமப்யஸ்ய த4ர்மஸ்ய, த்ராயதே மஹதோ ப4யாத் || 40

**இஹ** – இதில் (நான் கூறப்போகும் ஞானோபாயமான விஷ்ணுவின் ஆராதனமாகிய நிஷ்காம கர்மத்தில்) **அபிக்ரமநாஶ:** – ஆரம்பம் வீண்போதல்; **ந அஸ்தி** – இல்லை. (**ப்ராரம்பமாத்ரம் இச்சா வா விஷ்ணுதர்மே ந நிஷ்பலா** – ஆரம்பித்தாலே பலனுண்டு. விரும்பினாலேகூட பயனுண்டு) (ஆரம்பித்த விஷ்ணு பூஜையை முடிவுறாமல் நிறுத்தி விட்டாலோ) **ப்ரத்யவாய:** – தோஷம்; **ந வித்யதே** – இல்லை. **அஸ்ய** – இந்த; அல்லது 'அ' என்ற விஷ்ணுவின்; **தர்மஸ்ய** – பூஜாரூபமான நிஷ்காம கர்மத்தின்; **ஸு அல்பமபி** – மிகச் சிறிய அம்சம்கூட; **மஹத: பயாத்** – பெரிய ஸம்ஸார பயத்திலிருந்து, **த்ராயதே** – காப்பாற்றும்.

**குறிப்பு:** உலகத்தில் பயிர்த்தொழில் முதலிய எந்தக் காரியத்திலும், ஆரம்பித்து முடித்தால்தான் பலன் கிடைக்கும்; நடுவில் விட்டுவிட்டால் கஷ்டமும் நஷ்டமும் ஏற்படும். விஷ்ணு விஷயமான கார்யத்திற்கோ அப்படியல்ல. செய்தவரையிலும் பலனுண்டு.

**அர்ஜுனன்:–** இந்த ஞானோபாயத்தைப் பற்றிப் பல மதங்களின் பரஸ்பர விருத்தமான அபிப்ராயங்கள் நிலவுகின்றன. தங்கள் வார்த்தைகளில் எப்படி நம்பிக்கையை வைக்கமுடியும்? என்றால், பதிலளிக்கிறார்:

41. व्यवसायात्मिका बुद्धिः एकेह कुरुनन्दन ।
बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥

வ்யவஸாயாத்மிகா பு3த்தி4:, ஏகேஹ குரு நந்த3ன |
ப3ஹுஶாகா: ஹ்யனந்தாஸ்ச, பு3த்த4யோ அவ்யவஸாயினாம் || 41

**குருநந்தன** – குருவம்சத்தினரைச் சந்தோஷப்படுத்து பவனே! **இஹ** – இவ்வுலகிலும், வேதங்களிலும்; **வ்யவஸாய ஆத்மிகா** – ப்ரமாணங்களினால் நிர்ணயிக்கப்பட்டப்

பொருள்களின் நிச்சயத்தையுண்டாக்கும்; **புத்தி:** - வார்த்தை; **ஏகா ஏவ** - ஒன்றே (அதில் சந்தேகமில்லை) **அவ்யவ ஸாயினாம்** - பிரமாணங்களினால் நிர்ணயிக்கப்பட்ட நிச்சயமில்லாதவர் களுடைய, **புத்தய:** - வார்த்தைகள்; **பஹுஶாகா:** - பல கிளைகளையுடையன. **அனந்தா: ச** - *(1-16)* **அந்த: - நிர்ணய:** - நிர்ணயமில்லாதவை, (அவைதிகமானவை) **ஹி** - பிரஸித்தம்.

குறிப்பு: நான் கூறுவது அனைத்தும் பிரமாணத்தை யொட்டியது என்று தெரியவரும். ஆகையால் என் வார்த்தைகளை நம்பு.

அர்ஜுனன்:- வைதிகர்களிடையேயும் சிலர் (மீமாம்ஸகர்கள்) கர்மாக்களின் பலன் ஸ்வர்க்கலோகம்தான் என்கின்றனர். தாங்களோ காம்ய கர்மாவின் பலன்தான் ஸ்வர்க்கம்; நிஷ்காம கர்மாவின் பலன் அபரோக்ஷ ஞானம் என்கிறீர். எப்படி நம்புவது? என்றால் 3 சுலோகங்களில் பதிலளிக்கிறார்.

42. यामिमां पुष्पितां वाचं प्रवदन्ति अविपश्चितः ।
वेदवादरताः पार्थ नान्यतस्तीति वादिनः ॥

43. कामात्मानः स्वर्गपराः जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेष बहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥

44. भोगैश्वर्यप्रसक्तानां तयाऽपहृत चेतसाम् ।
व्ययसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥

யாமிமாம் புஷ்பிதாம் வாசம், ப்ரவத[3]ந்தி அவிபஸ்சித: |
வேத[3]வாத[3]ரதா: பார்த்த, நான்யத[3]ஸ்தீதி வாதி[3]ன: || 42

காமாத்மான: ஸ்வர்க்க[3]பரா:, ஜன்மகர்ம ப[2]லப்ரதாம் |
க்ரியாவிஶேஷ ப[3]ஹுளாம், பே[4]ாகைசுவர்ய க[3]திம் ப்ரதி || 43

பே[4]ாகைஶ்வர்ய ப்ரஸக்தானாம், தயா(அ)பஹ்ருத சேதஸாம் |
வ்யவஸாயாத்மிகா பு[3]த்தி[4]:, ஸமாதெ[4]ள ந விதீ[4]யதே || 44

*42.* **பார்த்த** - குந்திபுத்திரனே! **வேதவாதரதா:** - வேதங் களால், (**வாத:** - முகதோவசனம்) மேல்வாரியாகக் கூறப்படும், கர்மா முதலியவற்றில் ரஸிப்பவர்கள், அல்லது வேதங்களில் கூறப்படும், விஷ்ணுவின் மகிமையை விவாதிப்பவர்கள், அல்லது அர்த்தத்தை அறியாமல் அத்யயனம் செய்தவர்கள்; (அதனால்) **அவிபஸ்சித:** - வேதங்களின் உட்கருத்தையறியாத வர்களாய்; **அன்யத்** - வேறான மோக்ஷம் என்ற பலனோ, விஷ்ணுவின் ஸ்வரூபமோ, **ந அஸ்தி** - இல்லை என்று; **வாதின:** - கூறுகிறவர்களாய் *(சு. 43)*; **காம ஆத்மான:** - காம்ய பலனில்

அல்லது போகங்களில் மனதுடையவர்களாய்; **ஸ்வரக்கபரா:** - ஸ்வர்க்கத்தில் கருத்துள்ளவர்களாய்; ஸ்வர்க்கமே சிறந்த புருஷார்த்தம் என நினைப்பவர்களாய்; **ஜன்ம கர்மபல ப்ரதாம்** - அடிக்கடி பிறப்பையும், கர்மா வையும், அவற்றின் பலனையும் நன்கு தருவதும்; **க்ரியா விசேஷ பஹுளாம்** - பலவித கர்ம விசேஷங்கள் நிறைந்தது மான; (சு. 42) **யாம்** - எந்த; **இமாம்** - இந்த; **புஷ்பிதாம் வாசம்** - பழம் போன்ற மோக்ஷத்தைவிட்டு புஷ்பம் போன்ற ஸ்வர்க்கத்தைப் பலனாகக் கூறும் வார்த்தையை; (சு. 43) **போக ஐஶ்வர்ய கதிம் ப்ரதி** - சுகங்களையும் அதிகாரத்தையும் அடை வதின் பொருட்டு; (சு. 42) **ப்ரவதந்தி** - நன்கு கூறுகின்றனரோ, (சு. 44) **தயா** - அந்த வார்த்தையால்; **அபஹ்ருத சேதஸாம்** - கவரப்பட்ட மனதுள்ளவர்களும்; **போக ஐசுவர்ய ப்ரஸக் தானாம்** - சுகங்களிலும் அதிகாரத்திலும், ஆழ்ந்த பற்றுள்ளவர் களுமான, அவர்களின்; **வ்யவஸாய ஆத்மிகா** - பிரமாணங் களால் நன்கு நிர்ணயிக்கப்பட்ட நிச்சயத்தையுடைய; **புத்தி:** - அறிவு; **ஸமாதேன** - பகவானிடம் மனதை வைப்பதில் (உண்மையான அர்த்தத்தை உறுதிப்படுத்துவதில்); **ந விதீயதே** - சக்தியுள்ளதாக இல்லை. (அவர்களுக்கு மோக்ஷமில்லை.)

**குறிப்பு:** மீமாம்ஸகர்கள் வைதிகர்களாயினும், கர்மமே தெய்வம், ஸ்வர்க்கமே புருஷார்த்தம், என்பதால் வேதங்களின் உட்கருத்தை யறியாததால் உண்மையான வைதிகர்களல்லர். பிறர்களை மோஹிக்கவே ஜைமினி அந்த சாஸ்திரத்தை இயற்றியுள்ளார்.

2-39-ல் நிஷ்காம கர்மயோகத்தைக் கூறுவதாகச் சொல்லி, 1½-சுலோகங்களில் அதைப் புகழ்ந்து, சு. 41-ல் வேறு மதத்தைக் கூறி, சு. 42 முதல் 44-ல் அம்மதத்தை நிந்தித்து, தம் வார்த்தையில் நம்பிக்கையை யுண்டுபண்ணி, சு. 45 முதல் 6-ம் அத்தியாயம் முடிய, நிஷ்காம கர்மயோகத்தை விவரிக்கிறார்.

45. त्रैगुण्यविषया वेदा: निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥

த்ரைகு³ண்ய விஷயா வேத³ா:, நிஸ்த்ரைகு³ண்யோப⁴வார்ஜுன |
நிர்த்³வந்த்வோ நித்யஸத்வஸ்த²:, நிர்யோகக்ஷேம ஆத்மவான் || 45

**அர்ஜுன** - சுத்தமான கர்மாவைச் செய்பவனே! **வேதா:** - வேதங்கள்; **த்ரைகுண்ய விஷயா:** - ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று ப்ரகிருதி குணங்களினால் உண்டான ஸ்வர்க்கம் முதலியவற்றை (**விஷய:** - முகதோ வசனம்) மேல்வாரியாகக்

கூறுபவை. மேலும், அந்த அநித்ய ஸ்வர்க்கம் அல்லது ஸம்ஸாரபந்தம் என்ற; **விஷம்** - விஷத்தை; யாபயந்தி - போக்கடிப்பவை; (**விஷயா:** - அதாவது நித்யமான மோக்ஷத்திற்குக் காரணமான பகவத் ஸ்வரூபத்தைக் கூறுபவை). (**த்வம்** - நீ) **நிஸ் த்ரை குண்ய:** - மூன்று குணங்களால் உண்டான ஸ்வர்க்கம் முதலியவற்றிலிருந்து விலகி; பவ - இரு; (அதாவது மேல்வாரியாகக் கூறும் காம்யகர்மா முதலிய பொருளில் ஆசை வைக்காதே. உட்கருத்தான மோக்ஷத்திலும் பகவத் ஸ்வரூபத்திலும் ஆசையை வை). மேலும், **நிர்த்வந்த்வ:** - சுகம் - துக்கம்; லாபம் - நஷ்டம்; முதலிய ஜோடிகளை 2-38-ல் கூறியபடி ஸமமாகக் கருதுபவனாகவும் அல்லது சுகத்தில் பூரிப்பையும், துக்கத்தில் வாட்டத்தையும் அடையாமல், இரு. ஸம்ஸார விஷத்தைப் போக்க: **நித்ய ஸத்வஸ்த:** - எப்போதும் ஸாது குணங்களுடன் கூடிய பகவானிடம் (இரு). அதாவது பகவானைத் தியானம் செய்துகொண்டு இரு. **ஆத்மவான்** - பரமாத்மாவையுடையவனாக; அதாவது அவர் எனக்கு யஜமானன், நான் அவரல்ல, என்று ஸ்மரித்துக்கொண்டு இரு. **நிர்யோகக்ஷேம:** - (கிடைக்காதது கிடைத்தல் யோகமாகும். கிடைத்ததைக் காப்பது க்ஷேமமாகும்). (சாஸ்திர விருத்தமான) யோக க்ஷேமங்களிலிருந்து விலகி இரு.

**குறிப்பு: 9-22-ல் கிடைக்காதது கிடைத்தல் என்பது மோக்ஷம். அதன் க்ஷேமம் - நாசமில்லாது காப்பது, மீண்டும் ஸம்ஸாரத்திற்கு வராமற் செய்வது என்ற அர்த்தத்தையும் கவனிக்க.**

**அர்ஜுனன்:- காம்ய கர்மாவைச் செய்பவர்களுக்கு எவ்வாறு மோக்ஷமில்லையோ, அவ்வாறு நிஷ்காம கர்மாவைச் செய்து ஞானத்தையடைந்தவர்களுக்கு ஸ்வர்க்க மில்லை. ஆகவே கர்ம மார்க்கமும் ஞான மார்க்கமும் சமமே!**

46. यावानर्थः उदपाने सर्वतः संप्लुतोदके ।
तावान् सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥

**யாவானர்த்த[2]: உத[3]பானே, ஸர்வதஸ் ஸம்ப்லுதோத[3]கே |**
**தாவான் ஸர்வேஷு வேதே[3]ஷு, ப்ராஹ்மணஸ்ய விஜானத: || 46**

**உதபானே** - கிணற்றில்; **யாவான் அர்த்த:** - (ஸ்நானம் பானம் முதலிய) எத்தனை பிரயோஜனம்; (**பவதி** - ஏற்படுகிறதோ); **தாவான்** - அத்தனை பிரயோஜனம்; **ஸர்வத:** - எங்கும்; **ஸம்ப்லுத உதகே** - பரவிய ஜலத்தையுடைய சமுத்திரத்தில்; (உண்டாகிறது). (**ஏவம்** - இம்மாதிரி); **ஸர்வே ஷு**

**வேதேஷு** - எல்லா வேதங்களிலும்; (மேல்வாரியாகக் கூறப்படும் காம்ய கர்மாவைச் செய்பவர்களுக்கு); **யாவான் அர்த்த:** - எவ்விதமான ஸ்வர்க்கம் முதலிய பிரயோஜனம், (ஏற்படுகிறதோ); **தாவான் அர்த்த:** - அவ்விதமான பலன்; **விஜானத:** - பகவானைச் சாஸ்திரமூலமாக அறிந்து (பரோக்ஷ ஞானத்தையடைந்து); **ப்ராஹ்மணஸ்ய** - (ப்ரஹ்ம - அணதி) விஷ்ணுவை நேரில் காண்பவனுக்கு (அபரோக்ஷ ஞானிக்கு) ஏற்படுகிறது.

குறிப்பு: ஞானியின் பலன் சமுத்திரஜலம் போல மிகப் பெரியது, நித்யமானது. காம்ய கர்மியின் பலன் கிணற்று ஜலத்தைப் போல மிகச் சிறியது, அநித்யமானது. காம்ய கர்மமார்க்கமும் ஞானமார்க்கமும் சமமல்ல.

**2-ம் அர்த்தம்:- ஸர்வத:** - எங்கும்; **ஸம்ப்லுத உதகே** - பரவியுள்ள ப்ரகிருதியின் ஸ்வரூபமான மஹா ப்ரளய ஜலத்தில்: (படுத்திருக்கும்); **உதபானே** - **உத்** - உயர்ந்த குணங் களைப் படைத்தவனாயும்; **அப:** - (பாலகரஹித:) காப்பாற்று பவனில்லாதவனாயும்; **அன:** - காலம் முதலியவற்றைத் தூண்டுபவனாயும்; உள்ள பாலனான முகுந்தன் என்னும் பகவான், சந்தோஷித்திருக்கையில்; **யாவான் அர்த்த:** - எந்த பிரயோஜனம் (தர்மம் மோக்ஷம் முதலியன) ஏற்படுகிறதோ; **தாவான்** - அந்த பிரயோஜனம்; **ஸர்வேஷு வேதேஷு** - எல்லா வேதங்களிலும்; **விஜானத:** - (கர்மாக்களின் பலன் பகவத் ஞானமே. பகவானே வேதங்களின் முக்கிய அர்த்தமானவன்; ஸ்வர்க்கம் முதலிய பலனைக் கூறியிருப்பது மருந்தைச் சாப்பிட சர்க்கரை தருவதுபோல, கர்மானுஷ்டானத்தில் ருசியை உண்டு பண்ணுவதற்காகவே என்று) விசேஷமாக அறிந்தவனும்; **ப்ராஹ்மணஸ்ய** - விஷ்ணுவை நேரில் அறிந்த அபரோக்ஷ ஞானிக்கு (ஏற்படும்).

குறிப்பு: 3-4-1, சூத்திர பாஷ்யத்தில் காம்ய கர்மாவால் கிடைக்கும் பலனும் மற்ற எல்லா பலன்களும் அபரோக்ஷ ஞானிக்கு கிடைக்கும் - ஜ்ஞானாதேவ ஸர்வேகாமா: ஸம்பத்யந்தே - எனக் கூறப்பட்டிருப்பதால், ஞானமார்க்கம், கர்ம மார்க்கத்தைக் காட்டிலும் சிறந்தது. இரண்டும் சமமல்ல.

அர்ஜுனன்:- ஸ்வர்க்க காமோ யஜேத - ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் யாகம் செய்யவேண்டும் - என்று ஆசையோடு கூடிய யாகத்தை வேதம் விதிக்கிறது. அதைச் செய்பவர்களை 2-42ல் நிந்தித்தது சரியல்ல.

47. कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन।
मा कर्मफलहेतुर्भूः मा ते सङ्गोऽस्तु अकर्मणि ॥

கர்மண்யேவாதி[4]காரஸ்தே, மா ப[2]லேஷு கத[3]ாசன |
மா கர்மப[2]லஹேதுர் பூ[4]:, மா தே ஸங்கோSஸ்து அகர்மணி || 47

**தே** – உனக்கு (உன் போன்ற மற்ற ஞானிகளுக்கும்); **கர்மணி ஏவ** – யாகம் முதலிய கர்மாக்களைச் செய்வதிலேயே; **அதிகார:** – தகுதி (உண்டு); **பலேஷு** – ஸ்வர்க்கம் முதலிய பலன்களில்; **கதாசன** – ஒருபொழுதும்; **மா** – (தகுதி) இல்லை. ஆகவே, **கர்மபலஹேது:** – கர்மாவைச் செய்வதில் பலனைக் காரணமாகக் கொண்டவனாக; **மா பூ:** – இருக்காதே; அப்படி யானால் கர்மாவைச் செய்வது வீண் என்றால், **தே** – உனக்கு; (உன் போன்ற மற்ற ஞானிகளுக்கும்); **அகர்மணி** – கர்மாவைச் செய்யாதிருப்பதில்; **ஸங்க:** – பற்றுதல்; **மா அஸ்து** – இருக்க வேண்டாம். அதாவது பலனில் ஆசையில்லாது, கர்மாவைச் செய்தால், மோக்ஷத்திற்குக் காரணமான பகவத்ஞானம், பக்தி, பிரஸாதம் முதலிய பலன்கள் ஏற்படும். மோக்ஷத்திலும் ஆனந்தம் பொங்குவதற்குக் காரணமாகும், வீணல்ல.

குறிப்பு: ஸ்வர்க்க காமோ யஜேத – இங்கு யாகம் செய்ய வேண்டும் என்றுதான் விதிக்கிறது. ஆசைப்பட வேண்டும் என விதிக்கவில்லை. மேலும் கர்மாவைச் செய்யாவிடில் தோஷம் உண்டு என வேதம் கூறுவதுபோல, ஆசைப்படா விடில் தோஷம் உண்டு என்று கூறவில்லை. ஆகவே 2-42ல் காம்யகர்மிகளை நிந்தித்தது சரியே.

**2–ம் அர்த்தம்:–** *2-45ல்* **ஆத்மவான்** என்ற பதத்தால், 'ஐக்யபாவனை கூடாது' எனப்பட்டது. ஏனெனில், ஜீவ ப்ரஹ்ம ஐக்யமேயில்லை என்று இங்கு கூறப்படுகிறது.

**தே** – உனக்கு (மற்ற எல்லா ஜீவர்களுக்கும்); **கர்மணி ஏவ** – கர்மாவைச் செய்வதிலேயே; **அதிகார:** – சாமர்த்தியம் (உண்டு). **பலேஷு** – அதன் பலன்களைச் சம்பாதிப்பதில்; **கதாசன** – ஒருபோதும்; **மா** – (சாமர்த்தியம்) கிடையாது. (ஈசுவரன்தான் பலனைத் தருவதில் சமத்தர். ஆகவே பகவானுக்கும் ஜீவர்களுக்கும் ஐக்யமில்லை.) **கர்மபல ஹேது:** – கர்மாக்களின் பலனைத் தரும் ஈசுவரனாக; **மா பூ:** – (மனதினாலும்) ஆகாதே. அவனுடன் ஐக்ய பாவனையைச் செய்யாதே. அப்படியாயின் *(2-45)* **நித்யஸத்வஸ்த:** – என்றபடி ஹரித்யானமே போதும், கர்மா ஏன்? என்றால், **தே** – உனக்கு (மற்றவர்களுக்கும்); **அகர்மணி** – கர்மாவைச் செய்யா திருப்பதில்; **ஸங்க:** – பற்று; **மா**

**அஸ்து** - இருக்க வேண்டாம். ஏனெனில், கர்மாவைச் செய்யாவிடில் தோஷமுண்டு. ஆகவே கர்மாவைச் செய்துகொண்டிரு.

**அர்ஜுனன்:– கர்மாவை எப்படிச் செய்யவேண்டும்?**

48. योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनञ्जय ।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥

யோக[3]ஸ்த[2]: குரு கர்மாணி, ஸங்கம் த்யக்த்வா த[4]னஞ்ஜய |
ஸித்தி[4] அஸித்யோஸ் ஸமோ பூ[4]த்வா, ஸமத்வம் யோக[3] உச்யதே || 48

**தனஞ்ஜய** - ராஜஸூய யாகத்திற்காக ஏராளமான பணத்தை ஜயித்தவனே! **யோகஸ்த:** - ஞானோபாயத்தை அனுஷ்டித்துக்கொண்டு; **ஸங்கம்** - பலனில் ஆசையை; **த்யக்த்வா** – விட்டுவிட்டு; அதனால்; **ஸித்தி அஸித்யோ:** – பலன் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும்; **ஸம: பூத்வா** - ஒரே விதமாகயிருந்துகொண்டு; **கர்மாணி** - கர்மாக்களை; **குரு** - செய். ஞானோபாயம் எது? **ஸமத்வம்** - (பலனில் ஆசையைவிட்டு, கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும்) ஒரே விதமாயிருப்பது; **யோக:** - ஞானோபாயம் என **உச்யதே** - கூறப்படுகிறது.

2-46ல் கர்மாவின் பலன், ஞானத்தின் பலனைக் காட்டிலும் அற்பமானது எனக் கூறினார். இங்கு கர்மா என்ற உபாயம், ஞானம் என்ற உபாயத்தைக் காட்டிலும் தாழ்ந்தது என்கிறார்.

49. दूरेण ह्यवरं कर्म बुद्धियोगात् धनञ्जय ।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥

தூ[3]ரேண ஹ்யவரம் கர்ம, பு[3]த்தி[4]யோக[3]ாத் த[4]னஞ்ஜய |
பு[3]த்தெ[4]ள ஶரணமன்விச்ச, க்ருபணா: ப[2]லஹேதவ: || 49

**தனஞ்ஜய** - ராஜஸூயத்திற்காக ஏராளமான செல்வத்தை ஜயித்தவனே! **புத்தியோகாத்** - ஞானம் என்ற உபாயத்தைக் காட்டிலும்; **கர்ம** – காம்ய கர்மா என்ற உபாயம்; **தூரேண அவரம்** - மிகமிகத் தாழ்ந்தது. ஆகவே, **புத்தெள** - ஞானம் என்ற உபாயத்தில்; **ஶரணம்** – இருப்பதை; **அன்விச்ச** – அடைவாயாக. **ஹி** – ஏனென்றால்; **பலஹேதவ:** – கர்ம பலனை நாடுபவர்கள்; **க்ருபணா:** - எளியவர்கள் (மீண்டும் இந்த உலகத்தையோ, இதைவிடத் தாழ்ந்த உலகத்தையோ, அடைபவர்கள்). உத்தமமான ஞானத்தை அடைந்தபின் ஐக்ய பாவனை செய்யலாம் அல்லவா? என்றால், **புத்தெள** (ஜாதே

ஸதி) ஞானமடைந்த பின்னரும்; ஶரணம் – (விஷ்ணுவையே) அடைக்கலமாக; **அன்விச்ச** – அடைவாயாக; **ஹி** – ஏனெனில்; **பலஹேதவ:** – 'பலனுக்குக் காரணமாயிருக்கும் பகவானே நாம்'; என்று பாவிப்பவர்கள்; **க்ருபணா:** – எளியவர்கள், (தமஸ்ஸை அடைபவர்கள்).

குறிப்பு: – மதன்ய: ஜகதீசுவர: க்வ – என்றபடி ஐக்கியபாவனை செய்த ஹிரண்யகசிபு; வாஸுதேவோஹம் இத்யஜ்ஞ:, தூதம் க்ருஷ்ணாய ப்ராஹிணோத் – என்ற பௌண்ட்ரக வாஸுதேவன் முதலியோரின் கதி தெரிந்ததே.

இங்கு காம்ய கர்மாவின் பலனைக்காட்டிலும் ஞானத்தின் பலன் சிறந்தது என்கிறார்.

50. बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्मात् योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥

பு[3]த்தி[4]யுக்தோ ஜஹாதீஹ, உபே[4] ஸுக்ருத து[3]ஷ்க்ருதே |
தஸ்மாத் யோக[3]ாய யுஜ்யஸ்வ, யோக[3]: கர்மஸு கௌஶலம் || 50

**இஹ** – இங்கு (ஞானி, அஜ்ஞானி என்ற இருவர்களில்); **புத்தியுக்த:** – பகவத் அபரோக்ஷ ஞானமுடையவன், **ஸுக்ருத துஷ்க்ருதே** – புண்யம் பாபம் என்ற; **உபே** – இரண்டையும்; **ஜஹாதி** – விட்டுவிடுகிறான். **தஸ்மாத்** – ஆகையால்; **யோகாய** – ஞானோபாயத்தின் பொருட்டு; **யுஜ்யஸ்வ** – தயாராயிரு; அல்லது முயற்சிப்பாயாக. **யோக:** – இந்த ஞானோபாயம் (பகவத் ஞானத்துடன், பலனில் பற்றில்லாது, பகவானின் பொருட்டு, செய்யப்படும் கர்மா) **கர்மஸு** – கர்மாக்களில்: **கௌஶலம்** – சிரேஷ்டமானது.

குறிப்பு: காம்ய புண்யம் (1) இஷ்டம், (2) அநிஷ்டம் என இருவகைப்படும். எந்த புண்யம் அபரோக்ஷ ஞானத்தைப் பெருக்கி, மோக்ஷானந்தத்தைப் பொங்கும்படிச் செய்யுமோ, அது இஷ்ட புண்யமாகும். இதை விட்டுவிடுவதில்லை. எந்த புண்யம் இவ்வுலகில் பிறந்து சுகங்களை அநுபவிக்க உதவுகிறதோ, அது அநிஷ்ட புண்யமாகும். இதை விட்டு விடுகிறான். இதை அவனுடைய புத்திரர்களும், நண்பர்களும் அடைந்து, சுகப்படுகிறார்கள். ஸ்ரீ ராகவேந்திரர் போன்ற ஞானிகள் இந்த புண்யத்தைத் தான் தம்மைச் சேவிப்பவர் களுக்குத் தந்து அருள்புரிகின்றனர். இந்த அபரோக்ஷ ஞானியின் பாபத்தை, அவனைத் துவேஷிப்பவர்கள் அடைகிறார்கள். தஸ்ய புத்ரா: தாயமுபயந்தி, ஸுஹ்ருத: ஸாது க்ருதயாம், த்விஷந்த: பாபக்ருத்யாம் – என்று வேதம் கூறுகிறது.

முற்கூறிய ஞானோபாயத்தையும் பலனையும் விவரிக் கிறார்.

51. कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।
जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्ति अनामयम् ॥

கர்மஜம் பு$^3$த்தி$^4$யுக்தா:ஹி, ப$^2$லம் த்யக்த்வா மனீஷிண: |
ஜன்மப$^3$ந்த$^4$ விநிர்முக்தா:, பத$^3$ம் க$^3$ச்ச$^2$ந்தி அநாமயம் || 51

**கர்மஜம் பலம்** - *கர்மாக்களினால் உண்டாகும் பலனை (அதில் ஆசையையும்);* **த்யக்த்வா** - *விட்டுவிட்டு; (கர்மாக் களைச் செய்து; அதனால்);* **புத்தியுக்தா;** - *சாஸ்திரங்களினால் நன்கு ஏற்படும் பகவத் ஞானத்தை உடையவர்களாய்; அதனால்,* **மனீஷிண:** - *அபரோக்ஷ ஞானிகளாய்;* **ஜன்மபந்த விநிர்முக்தா:** - *பிறப்பாகிற கட்டிலிருந்து அடியோடு விடுபட்டவர்களாய்;* **அநாமயம்** - *துக்கமில்லாத, (ஆனந்தம் நிறைந்த);* **பதம்** - *இடமாகிற மோக்ஷத்தை;* **கச்சந்தி** - *அடைகிறார்கள்.* **ஹி** - நிச்சயம்.

குறிப்பு: சுலோகம் 50-ல் புத்தி: - அபரோக்ஷ ஞானம்; இங்கு பரோக்ஷ ஞானம்; அடுத்த சுலோகத்தில் மனது என்று அர்த்தம்.

**அர்ஜுனன்:-** இந்த நிஷ்காம கர்மாவை எதுவரையில் செய்ய வேண்டும்?

52. यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।
तदा गन्ताऽसि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥

யத$^3$ா தே மோஹ கலிலம், புத்தி$^4$ர் வ்யதிதரிஷ்யதி |
தத$^3$ா க$^3$ந்தா(அ)ஸி நிர்வேத$^3$ம், ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச || 52

**யதா** - *எப்பொழுது, எதுவரையில்;* **தே** - *உன்னுடைய;* **புத்தி:** - *மனது;* **மோஹ கலிலம்** - *விபரீத ஞானம் என்கிற தோஷத்தை;* **வ்யதிதரிஷ்யதி** - *அடியோடு விட்டுவிடுகிறதோ;* **ததா** - *அப்பொழுது, அதுவரையில்;* **ச்ருதஸ்ய** - *பெரியோர் களிடம் கேட்டதும்;* **ச்ரோதவ்யஸ்ய ச** - *கேட்கப் போவது மான எல்லா கர்மாக்களின்;* **நிர்வேதம்** - *(நிதராம் லாபம்) - பூர்ணமான லாபத்தை;* **கந்தா அஸி** - *அடைபவனாக ஆவாய். அதாவது, நிஷ்காம கர்மா, மனச்சுத்தியையுண்டு பண்ணி; சிரவணம், மனனம் முதலியவற்றிற்கு உதவிபுரிந்து; விபரீத ஞானமாகிற தோஷத்தை ஒழித்து; தத்வ ஞானத்தை உண்டுபண்ணும் வரையிலும் செய்யவேண்டும்.*

குறிப்பு: நிர்வேதம் - வைராக்யம்; என்று சாதாரணமான அர்த்தம். அந்த அர்த்தம் இங்கு பொருந்தாது. பூர்ணமாக அடைதல் என்ற இந்த

அர்த்தம் - ப்ராஹ்மண: பாண்டித்யம் நிர்வித்ய - என்ற சுருதியில் செய்யப்பட்டிருக்கிறது.

அர்ஜுனன்:– விபரீத ஞானமாகிய தோஷம் யாது? அதை எப்படிப் போக்குவது?

53. श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।
समाधौ अचला बुद्धिः तदा योगमवाप्स्यसि ॥

ச்ருதி விப்ரதிபன்னா தே, யத[3]ா ஸ்த[2]ாஸ்யதி நிஸ்சலா |
ஸமாதெ[4]ள அசலா புத்[4]தி:, தத[3]ா யோக[3] மவாப்ஸ்யஸி || 53

**ச்ருதி விப்ரதிபன்னா** – (ஆரம்பத்தில்) வேதங்களுக்கு விருத்தமாயிருந்த; **தே** – உன்னுடைய; **புத்தி:** – மனம்; **யதா** – எப்போது; **நிஸ்சலா** – (உண்மையான வேதார்த்தத்தை அறிந்து; துஷ்ட சாஸ்திரங்களினால் சந்தேகப்படாமல்) உறுதி யாக; **ஸ்தாஸ்யதி** – நிற்குமோ; **ததா** – அப்போது; (**ஸமாதி:** – ஆழ்ந்த தியானம் உண்டாகிறது) **ஸமாதௌ ச** (ஜாதே) – ஆழ்ந்த தியானம் ஏற்பட்டவுடன்; (அபரோக்ஷ ஞானம் உண்டாகிறது. பகவானை நேரில் கண்டு மகிழ்ந்து, ஆனந்தக் கடலில் மூழ்கியிருக்கையில்; பேரிகை, டமாரம் முதலிய வற்றின் சப்தங்களால்); **யதா** – எப்போது; **தே புத்தி:** – உன் மனம்; **அசலா** – அசைவற்று உறுதியாக; **ஸ்தாஸ்யதி** – நிற்குமோ; **ததா** – அப்போது; **யோகம்** – யோகபலம் – ஞானோபாயத்தின் பலனை; **அவாப்ஸ்யஸி** – அடைவாய்.

குறிப்பு: வேதங்களின் உண்மையான அர்த்தத்திற்கு விருத்தமா யிருப்பதே தோஷமாகும். அதைப் போக்கடிக்க வேதார்த்தத்திற்கு அநுகூலமான நிஸ்சய ஞானத்தையடைந்து சந்தேகமில்லாமல் உறுதியாயிக்க வேண்டும்.

**2–ம் அர்த்தம்:–** **யதா** – எப்போது; **தே புத்தி:** – உன்னுடைய மனம்; **ச்ருதி விப்ரதிபன்னா** – வேதார்த்த நிர்ணயத்தை விசேஷமாக அடைந்து; **நிஸ்சலா** – சந்தேக மில்லாது, உறுதியாக; **ஸ்தாஸ்யதி** – நிற்குமோ; **ததா** – அப்போது; அதாவது, **ஸமாதௌ ஸதி** – உறுதியாக நிற்கும் போது; (அபரோக்ஷஞானம் உறுதியாகும்). அதனால், **அசலா புத்தி:** – விஷ்ணுவிடம் ஸ்திரமான புத்தி (ஏற்படும்) அதனால் **யோகம்** – பகவானை அடைவது என்ற மோக்ஷத்தை; **அவாப்ஸ்யஸி** – அடைவாய்.

अर्जुनः उवाच - **அர்ஜுன: உவாச** - *அபரோக்ஷ ஞானியைப் பற்றிக் கூறியதால், அர்ஜுனன் முற்கூறிய அவனுடைய லக்ஷணத்தைக் கூறி, வேறு லக்ஷணங்களையும் வினவுகிறான்.*

54. स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।
स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥

ஸ்தி[2]த ப்ரஜ்ஞஸ்ய கா ப[4]ாஷா, ஸமாதி[4]ஸ்த[2]ஸ்ய கேஶவ ।
ஸ்தி[2]த தீ[4]: கிம் ப்ரப[4]ாஷேத, கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ 54

**கேஶவ** - *ப்ரம்ம ருத்ர நியாமகரே! அழகிய கூந்தல் உடையவரே!* **ஸமாதிஸ்தஸ்ய** - *ஆழ்ந்த தியான நிலையிலுள்ளவன் என்று தாங்கள் கூறிய லக்ஷணமுள்ள (விஷம புத்தியற்ற);* **ஸ்தித ப்ரஜ்ஞஸ்ய** - *உறுதியான அபரோக்ஷ ஞானியின்;* **பாஷா** - *(பாஷ்யதே அனயா) எப்போதுமுள்ள லக்ஷணம்;* **கா** - *யாது?* **ஸ்தித தீ:** - *அந்த அபரோக்ஷ ஞானி (அதாவது பகவானை நேரில் பார்த்து மகிழ்ந்து ஆனந்தக் கடலில் மூழ்கியுள்ளவன்);* **கிம்** - *எதற்காக (மற்றவர்களுடன்);* **ப்ரபாஷேத** - *பேசவேண்டும்?* **கிம் ஆஸீத** - *எதற்காக உட்காரவேண்டும்?* **கிம் வ்ரஜேத** - *எதற்காக பிக்ஷையெடுக்க நடமாட வேண்டும்? ஆகவே 2-53ல் (பேரிகை முதலிய சப்தங்களாலும் அசையாதவன் என்று) கூறியது சரியல்ல.*

குறிப்பு: (1) பாஷா:- மொழி என்பது சாதாரண அர்த்தம். இங்கு லக்ஷணம், அறியும் சின்னம் என்று அர்த்தம். (2) அர்ஜுனன் கேள்விகள் இரண்டே. அபரோக்ஷ ஞானியின் (1) லக்ஷணத்தைப் பற்றியது (2) அவனுடைய செயல்களைப் பற்றியது. பிறர் நான்கு கேள்விகள் என்கின்றனர்.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - *ஸ்ரீ கிருஷ்ண பகவான் முதல் கேள்விக்கு சுலோகம் 55 முதல் 58-ல் பதிலளிக்கிறார்.*

55. प्रजहाति यदा कामान् सर्वान् पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥

ப்ரஜஹாதி யத[3]ா காமான், ஸர்வான் பார்த்த[2] மனோக[3]தான் ।
ஆத்மன்யே வாத்மனா துஷ்ட:, ஸ்தி[2]தப்ரஜ்ஞஸ் ததே[3]ாச்யதே ॥ 55

**பார்த்த** - *குந்தீபுத்திரனே!* **யதா** - *எப்பொழுது;* **மனோகதான்** - *மனதிலுண்டாகும்;* **ஸர்வான்** - *எல்லா;* **காமான்** - *(துஷ்ட) ஆசைகளையும், (கோபம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் இவற்றையும்);* **ப்ரஜஹாதி** - *அடியோடு விட்டு*

விடுகிறானோ; **யதா ச** – எப்பொழுது; **ஆத்மனி ஏவ** – பரமாத்மாவிடமே, (ஒரே மனதுடன் இருந்து கொண்டு); **ஆத்மனா** – பரமாத்மாவின் அருளால்; **துஷ்ட:** – திருப்தியுடன் இருக்கிறானோ; **ததா** – அப்பொழுது; **ஸ்தித ப்ரஜ்ஞ:** – அபரோக்ஷஞானி என்று; **உச்யதே** – சொல்லப் படுகிறான்.

**குறிப்பு:** பெரும்பாலும் துஷ்டமான எல்லா ஆசை முதலியவைகளையும் ஒழித்து, பகவானிடமே மனதை வைத்து, திருப்தியுடன் இருத்தல் – அபரோக்ஷஞானியின் லக்ஷணமாகும்.

56. दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥

து3க்கேஷ் வநுத்விக்3னமனா:, ஸுகே2ஷு விக3த ஸ்ப்ருஹ: |
வீதராக3 ப4யக்ரோத4:, ஸ்தி2ததீ4ர் முனிருச்யதே || 56

**துக்கேஷு** – துன்பங்களில்; **அனுத்விக்னமனா:** – கலக்க மடையாது பொறுமையுள்ள மனத்தினனாயும்; **ஸுகேஷு** – இன்பங்களில்; **விகத ஸ்ப்ருஹ:** – ஆசையற்றவனாயும்; **வீதராக பய க்ரோத:** – (ராகம்) அசுபமான பொருளில் சுபமானது என்ற அறிவுடன் ஆசையையும்; பயத்தையும், கோபத்தையும் விட்டவனாயும் உள்ள; **முனி:** – தியானத்தில் ஈடுபட்டவன், **ஸ்திததீ:** – அபரோக்ஷஞானி என்று; **உச்யதே** – சொல்லப் படுகிறான்.

57. यस्सर्वत्र अनभिस्नेहः तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

யஸ் ஸர்வத்ர அநபி4ஸ்நேஹ:, தத்தத் ப்ராப்ய ஶுப4ாஶுப4ம் |
நாபி4நந்த3தி ந த்வேஷ்டி, தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி2தா || 57

**ய:** – யார்; **ஸர்வத்ர** – எல்லா சிற்றின்பங்களிலும்; **அநபிஸ்நேஹ:** – அதிகப்பற்று இல்லாதவனாயும்; அதனால், **தத்தத்** – அந்தந்த; **ஶுபஅஶுபம்** – நல்லதையும் கெட்டதையும்; **ப்ராப்ய** – அடைந்து; **ந அபிநந்ததி** – சந்தோஷப்படுவதில்லையோ; **ந த்வேஷ்டி** – வெறுப்பதில்லையோ; **தஸ்ய** – அவனுடைய; **ப்ரஜ்ஞா** – அபரோக்ஷ ஞானம்; **ப்ரதிஷ்டிதா** – நிலைத்திருக்கும். அதாவது, அவன் அபரோக்ஷஞானி யாவான்.

58. यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।
इन्द्रियाणि इन्द्रियार्थेभ्यः तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

யத³ா ஸம்ஹரதே சாயம், கூர்மோ அங்க³ானீவ ஸர்வஶ: |
இந்த்ரியாணி இந்த்ரியார்த்தே²ப்⁴ய:, தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா || 58

**ச** - மேலும்; **அயம்** - இவன்; **யதா** - எப்போது; **ஸர்வச:** - எல்லா; **இந்த்ரியாணி** - கண், காது முதலியவற்றை; **இந்த்ரிய அர்த்தேப்ய:** - அவைகளின் விஷயமான ரூபம், சப்தம் முதலியவைகளிலிருந்து; **கூர்ம:** - ஓர் ஆமை, **அங்கானி இவ** - தன் கால்கள் முதலிய உறுப்புக்களை எளிதில் உள்ளே சுருக்கிக்கொள்வது போல; **ஸம்ஹரதே** - திருப்பி இழுத்துக் கொள்கிறானோ; **ததா** - அப்போது; **தஸ்ய** - அவனுடைய; **ப்ரஜ்ஞா** - அபரோக்ஷ ஞானம்; **ப்ரதிஷ்டிதா** - நிலைத்திருக்கும்; அதாவது, அவன் அபரோக்ஷஞானி எனப்படுவான்.

அபரோக்ஷஞான ஸாதனங்களை சுலோகம் 59 முதல் 68ல் கூறுகிறார். ஆசை முதலியவற்றை ஒழிப்பது மிகக் கஷ்டம் என்று மூன்று சுலோகங்களில் விளக்க, இங்கு இந்திரிய ஜயத்தைக் கூறுகிறார்.

59. विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥

விஷயா: விநிவர்த்தந்தே, நிராஹாரஸ்ய தே³ஹின: |
ரஸவர்ஜம் ரஸோSப்யஸ்ய, பரம் த்³ருஷ்ட்வா நிவர்த்ததே || 59

**நிராஹாரஸ்ய** - உணவை உட்கொள்ளாத; **தேஹின:** - மனிதனுடைய; **ரஸவர்ஜம்** - ருசியை அநுபவிக்கும் நாக்கின் சக்தியையும், மனதிலுள்ள அதன் ஆசையையும், தவிர; **விஷயா:** - சப்தம், ஸ்பர்சம், ரூபம், கந்தம் என்பவைகளை அனுபவிக்கும் இந்திரியங்களின் சக்திகளும், மனதிலுள்ள அவற்றின் ஆசைகளும்; **விநிவர்த்தந்தே** - அடியோடு அழிகின்றன. **ரஸ: அபி** - அந்த ருசியை அனுபவிக்கும் நாக்கின் சக்தியும், மனதிலுள்ள அதன் ஆசையும்கூட; **பரம்** - உத்தமனான பகவானை; **த்ருஷ்ட்வா** - கண்டவுடன்; **நிவர்த்ததே** - விசேஷமாக விலகுகின்றன.

குறிப்பு: உபவாஸத்தால் நான்கு ஞான - இந்திரியங் களின் ஜயம் ஏற்படும். நாக்கின் ஜயமோ அபரோக்ஷ ஞானத்தால்தான் ஏற்படும். ஆகவே இந்திரியங்களை ஜயிப்பது கஷ்டம்.

அர்ஜுனன்:- இந்திரியங்களை ஜயிக்க, உபவாஸம் ஏன்? ப்ரத்யாஹாரம் (விஷயங்களில் செல்லாது திருப்பினால்) போதுமே! ரஸத்தை ஜயிக்க, அபரோக்ஷ ஞானம் ஏன்? இது நித்யம், இது அநித்யம் என்ற விவேகம் போதுமே!

60. यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥

யததோ ஹ்யபி கௌந்தேய, புருஷஸ்ய விபஸ்சித: |
இந்த்ரியாணி ப்ரமாதீ[2]னி, ஹரந்தி ப்ரஸப[4]ம் மன: || 60

**கௌந்தேய** – *குந்தீ புத்திரனே!* **விபஸ்சித:** – *(சாஸ்திரங்களினால் ஏற்பட்ட) பரோக்ஷஞானமுடைய;* **தேஹின:** – *தேகாபிமானமுடையவன்;* **யதத: அபி** – *(ப்ரத்யாஹாரத்தாலும், விவேகத்தாலும்) முயன்றாலும்கூட;* **ப்ரமாதீனி** – *நன்கு கடையும் சக்தியுள்ள;* **இந்த்ரியாணி** – *இந்திரியங்கள்;* **மன:** *மனதை;* **ப்ரஸபம்** – *பலாத்காரமாக;* **ஹரந்தி ஹி** – *(விஷயங்களைக் குறித்து) கவர்கின்றன அல்லவா? ஆகையால், பொல்லாத இந்த்ரியங்களை ஜயிப்பது கஷ்டம்.*

குறிப்பு: பலவான் இந்த்ரியக்ராம: வித்வாம்ஸமபி கர்ஷதி – இந்திரியங்களின் கூட்டம் ஞானியையும் கூட (கெட்ட வழியில்) இழுத்துவிடும். (மனுஸ்மிருதி 2-215)

*மிகுந்த பிரயாசையுடன் இந்திரியங்களை ஜயிப்பதன் பலனைக் கூறுகிறார்.*

61. तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

தானி ஸர்வாணி ஸம்யம்ய, யுக்த ஆஸீத மத்பர: |
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி, தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி[2]தா || 61

**தானி** – *அவ்விதமான;* **ஸர்வாணி இந்த்ரியாணி** – *எல்லா இந்திரியங்களையும்;* **ஸம்யம்ய** – *(விஷயங்களில் செல்லாதவாறு) நன்கு அடக்கி;* **மத்பர:** – *நானே (ஸ்ரீகிருஷ்ணரே) ஸர்வோத்தமர், என்று அறிந்து;* **யுக்த:** – *மனதை என்னிடம் நிலை நிறுத்தினவனாய்;* **ஆஸீத** – *இருக்க வேண்டும்.* **யஸ்ய வஶே** – *யாருடைய அதீனத்தில்;* **இந்த்ரியாணி** – *இந்திரியங்கள் (இருக்கின்றனவோ);* **தஸ்ய** – *அவனுக்கு;* **ப்ரஜ்ஞா** – *அபரோக்ஷ ஞானம்;* **ப்ரதிஷ்டிதா** – *நிலைத்திருக்கும்; அதாவது, அவன் அபரோக்ஷ ஞானி எனப்படுவான்.* **ஹி** – *ப்ரஸித்தம்.*

குறிப்பு: பகவான் ஸர்வோத்தமன் என்ற அறிவுடன் அவனிடமே இடைவிடாது மனத்தை வைத்திருப்பது, இந்திரிய ஜயத்திற்கு முக்கிய உபாயமாகும்.

ராகம், த்வேஷம் (காமம், கோபம்) இவற்றை விட்டுவிடுவதும், இந்திரிய ஜயத்திற்கு மற்றொரு உபாயம் என சுலோகம் 64-ல்

கூறப்போகிறார். இந்த இரு சுலோகங்களில் முன்னுரையாக ராக த்வேஷங்களின் காரணத்தையும், அவற்றின் பலனையும் கூறுகிறார்.

62. ध्यायतो विषयान् पुसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्सञ्जायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥

63. क्रोधात् भवति संमोहः संमोहात् स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशात् बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥

த்[4]யாயதோ விஷயான் பும்ஸ:, ஸங்க[3]ஸ்தேஷூபஜாயதே |
ஸங்க[3]ாத் ஸஞ்ஜாயதே காம:, காமாத் க்ரோதே[4]ாSபி[4]ஜாயதே || 62

க்ரோத[4]ாத் ப[4]வதி ஸம்மோஹ:, ஸம்மோஹாத் ஸ்ம்ருதி விப்[4]ரம: |
ஸ்ம்ருதிப்[4]ரம்ஶாத் புத்திநாஶ:, புத்திநாஶாத் ப்ரணஶ்யதி || 63

*62.* **விஷயான்** – *ரூபம், ரஸம் முதலியவற்றை;* **த்யாயத:** – *(தனக்கு ஹிதமானவை என) நினைக்கும்;* **பும்ஸ:** – *மனிதனுக்கு;* **தேஷு** – *அவைகளில்;* **ஸங்க:** – *பற்று;* **உபஜாயதே** – *உண்டாகிறது.* **ஸங்காத்** – *அந்தப் பற்றுதலில் இருந்து;* **காம:** – *ஆசை;* **ஸஞ்ஜாயதே** – *அதிகமாகிறது;* **காமாத்** – *(தடைபட்ட) ஆசையிலிருந்து;* **க்ரோத:** – *கோபம்;* **அபிஜாயதே** – *ஏற்படுகிறது.*

*63.* **க்ரோதாத்** – *கோபத்திலிருந்து;* **ஸம்மோஹ:** – *(1) செய்யத்தகாத கார்யத்தில் விருப்பமும், (2) அதர்மத்தை தர்மம் என்று அறியும் விபரீத ஞானமும்;* **பவதி** – *உண்டா கின்றன.* **ஸம் மோஹாத்** – *இருவித மோகத்தால்;* **ஸ்ம்ருதி விப்ரம:** – *முறையே (1) இது சாஸ்திரத்தில் தடுக்கப்பட்டுள்ளது என்றதின் மறதியும், (2) அதர்மம் என்று, தான் முதலில் அறிந்திருந்தும், இப்பொழுது அதற்கு மாறான அறிவும் (உண்டாகின்றன).* **ஸ்ம்ருதி ப்ரம்சாத்** – *இருவித மறதியினால்;* **புத்திநாஶ:** – *முன்னர் இருந்த நிர்ணய ஞானத்தின் அழிவு (ஏற்படுகிறது).* **புத்திநாஶாத்** – *ஞானத்தின் அழிவால் (அதனால் பாபச் செயல்களைப் புரிவதால்);* **ப்ரணஶ்யதி** – *நரகம் முதலிய அனர்த்தங்களை நன்கு அடைகிறான்.*

குறிப்பு: இங்கு கூறப்பட்ட எட்டில், விஷயங்களை நினைப்பது தான் ராகத்வேஷங்களின் மூல காரணம் என்றும், அவற்றின் பலன் நரகம் முதலிய அனர்த்தங்கள் என்றும் அறிக.

இந்திரிய ஜயத்தின் உபாயமும் பலனும் கூறப்படு கின்றன.

64. रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥

65. प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठति ॥

ராக³த்வேஷ வியுக்தைஸ்து, விஷயான் இந்த்ரியைஸ்சரன் |
ஆத்மவச்யைர்விதே⁴யாத்மா, ப்ரஸாத³மதி⁴கச்ச²தி || 64

ப்ரஸாதே³ ஸர்வது³க்கானாம், ஹானிரஸ்யோபஜாயதே |
ப்ரஸன்னசேதஸோ ஹ்யாஶு, புத்தி⁴: பர்யவதிஷ்ட²தி || 65

*64.* **து** – *ஒரு விசேஷம்;* **ராகத்வேஷவியுக்தை:** – *காமம், கோபம் இவற்றிலிருந்து விடுபட்டவைகளும், அதனால்,* **ஆத்மவச்யை:** – *தன்வசப்பட்டவைகளுமான,* **இந்த்ரியை** – *புலன்களால் (கண் முதலியவற்றால்);* **விஷயான்** – *ரூபம் முதலியவற்றை;* **சரன்** – *(உயிர் வாழ மாத்திரம்) அநுபவித்துக் கொண்டு;* **விதேய ஆத்மா** – *தன்வசப்பட்ட மனத்தினனாகி;* **ப்ரஸாதம்** – *மனத்தெளிவை (அதாவது மனது தானே விஷயங்களில் செல்லாதிருத்தலை);* **அதிகச்சதி** – *அடைகிறான்.*

*65.* **ப்ரஸாதே** *(ஸதி) மனத்தெளிவு ஏற்பட்டதும்;* **ப்ரஸன்ன சேதஸ:** – *தெளிந்த மனமுடைய;* **அஸ்ய** – *இவனுக்கு;* **ஆசு** – *சீக்கிரம்;* **புத்தி:** – *அபரோக்ஷஞானம்,* **பரிஅவதிஷ்டதி** – *நன்கு உண்டாகிறது. அதனால்,* **ஸர்வ துக்கானாம்** – *எல்லா துக்கங்களின்;* **ஹானி:** – *நாசமும்;* **உபஜாயதே** – *உண்டாகிறது;* **ஹி** – *(***தரதி சோகம் ஆத்மவித்** *– என்ற சுருதியில்) பிரஸித்தம்.*

**அர்ஜுனன்:–** சிரவணம், மனனம், இவ்விரண்டின் உதவியுடன் கூடிய தியானத்தினாலல்லவா அபரோக்ஷ ஞானம் உண்டாகிறது. மனத்தெளிவு ஏன்? என்றால், மனத்தெளிவு இல்லையேல் ஏற்படும் தோஷங்களைக் கூறுகிறார்.

66. नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शान्तिः अशान्तस्य कुतः सुखम् ॥

நாஸ்தி பு³த்தி⁴ரயுக்தஸ்ய, நசா யுக்தஸ்ய ப⁴ாவனா |
நசா ப⁴ாவயத: ஶாந்தி:, அஶாந்தஸ்ய குதஸ்ஸுக²ம் || 66

*இங்கு: சில பதங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.* **ப்ரஸாதாபாவே** – *மனத்தெளிவு இல்லையேல்;* **அயுக்தி:** – *மனத்தை அடக்க முடியாது;* **அயுக்தஸ்ய** – *மன அடக்கமில்லாதவனுக்கு;* **புத்தி:** – *அபரோக்ஷஞானம்;* **ந அஸ்தி** –

இல்லை; ஏனென்றால், **அயுக்தஸ்ய** - மன அடக்கமில்லாதவனுக்கு; **பாவனா** - தியானம், **ந** - இல்லை; **அபாவயத:** - தியானமில்லாதவனுக்கு; (**புத்தி:** - அபரோக்ஷஞானம்); **ந** - இல்லை; **அபுத்தே:** - அபரோக்ஷஞானமில்லாதவனுக்கு; **சாந்தி:** - மோக்ஷம்; **ந** - இல்லை; **அசாந்தஸ்ய** - மோக்ஷமடையாதவனுக்கு; **ஸுகம்** - ஆனந்தம்; **குத:** - ஏது? (அல்லது **சாந்தி:** - பகவானிடமே மனம் நிலைத்திருத்தல்; **ந** - இல்லை; **அசாந்தஸ்ய** - பகவானிடம் நிலைத்த மனமில்லாதவனுக்கு; **ஸுகம்** - மோக்ஷம்; **குத:** - ஏது?)

மன அடக்கமில்லாதவனுக்கு தியானமில்லை என்பதை விளக்குகிறார்.

67. इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवांभसि ॥

இந்த்ரியாணாம் ஹி சரதாம், யன் மனோ(அ)நு விதீ⁴யதே |
த³தஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம், வாயுர் நாவமிவாம்ப⁴ஸி || 67

**சரதாம்** - விஷயங்களில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கும்; **இந்த்ரியாணாம்** - இந்த்ரியங்களை; **அனு** - பின்தொடர்ந்து; **மன:** - மனது; **விதீயதே–வி** - ஈசுவரனால்; **தீயதே** - தூண்டப்படுகிறது என்ற; **யத்** - எதுவோ; **தத்** - அது; **அஸ்ய** - இந்த மனிதனின்; **ப்ரஜ்ஞாம்** - சாஸ்திரசிரவண மனனத்தால் ஏற்படும் பரோக்ஷஞானத்தை; **வாயு:** - காற்று; **நாவம்** - கப்பலை; **அம்பஸி இவ** - நடு ஸமுத்திரத்தில் இழுத்துச் செல்வதுபோல; **ஹரதி** - உண்டாகாமல் தடுக்கிறது; உண்டான பரோக்ஷ ஞானத்தையும், அபரோக்ஷ ஞானத்தை யும் உண்டுபண்ணாதவாறு தடுக்கிறது.

சு. 54-ல் அர்ஜுனனின் முதல் கேள்வியின் பதிலை முடிக்கிறார்.

68. तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।
इन्द्रियाणि इन्द्रियार्थेभ्यः तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

தஸ்மாத் யஸ்ய மஹாப³ாஹோ, நிக்³ருஹீதானி ஸர்வஶ: |
இந்த்ரியாணி இந்த்ரியார்த்தே²ப்ய:, தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா || 68

**மஹாபாஹோ** - பெரும் புஜபலத்தையுடையவனே! **தஸ்மாத்** - ஆகையால்; **யஸ்ய** - யாருடைய; **ஸர்வஶ: இந்த்ரியாணி** - எல்லா இந்த்ரியங்களும்; **இந்த்ரிய அர்த்தேப்ய:** - அவற்றின் விஷயங்களிலிருந்து; **நிக்ருஹீதானி** - நன்கு

*அடக்கப்பட்டுள்ளனவோ;* **தஸ்ய** - *அவனுக்கு;* **ப்ரஜ்ஞா** - *அபரோக்ஷ ஞானம்;* **ப்ரதிஷ்டிதா** - *நிலைத்திருக்கும்; அதாவது அவன் அபரோக்ஷஞானி ஆவான்.*

**குறிப்பு:** ஆகையால் - என்றால், உபவாஸம்; (சு. 59) பகவான் ஸர்வோத்தமன் என்று அறிந்து, அவரிடம் இடைவிடாது மனதை வைத்தல்; (சு. 61); ராக த்வேஷங்களை விடுதல் (சு. 64); வெளி இந்திரிய ஜயம் (சு. 61); மனத்தெளிவு; (சு. 64): மன அடக்கம்; (சு. 66); சிரவணம், மனனம்; பரோக்ஷஞானம் அல்லது தத்வநிஸ்சயம் (சு. 67); தியானம்; (சு. 66); தியானத்தினால் அபரோக்ஷஞானம் என்றவாறு ஏற்படுவதால் - என்று அர்த்தம்.

சுலோகம் 54-ல் அர்ஜுனன் கேட்ட 2-ம் கேள்விக்குப் பதில் தருகிறார். அல்லது ஞானியின் லக்ஷணத்தைத் தொகுத்துக் கூறுகிறார்.

69. या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥

யா நிஶா ஸர்வபூ[4]தானாம், தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ |
யஸ்யாம் ஜாக்ரதி பூ[4]தானி, ஸா நிஶா பச்யதோ முனே: || 69

**யா** - *எது;* **ஸர்வபூதானாம்** - *எல்லாப் பிராணிகளுக்கும்* **நிஶா** - *இரவோ;* **தஸ்யாம்** - *அந்த இரவில்;* **ஸம்யமீ** - *இந்திரியங்களை நன்றாக அடக்கின அபரோக்ஷஞானி;* **ஜாகர்த்தி** - *விழித்திருக்கிறான்;* **யஸ்யாம்** - *எதில்;* **பூதானி** - *பிராணிகள்;* **ஜாக்ரதி** - *விழித்திருக்கின்றனவோ;* **ஸா** - *அது;* **முனே:** - *மனனம் அல்லது சிந்தனையில் ஈடுபட்டுள்ளவனாய் (அதனால்)* **பச்யத:** - *பகவானை நேரில் காணும் அபரோக்ஷஞானிக்கு;* **நிசா** - *இரவு (ஆகும்).*

**கருத்து:** அனைவரும் சிற்றின்பங்களில் விழித்திருக் கின்றனர். அவற்றை நன்கு அறிந்து பற்றுதலுடன் அநுபவிக் கின்றனர். பகவத் ஸ்வரூபத்தில் தூங்குகின்றனர். அதை அறிவதில்லை. அபரோக்ஷஞானியோ பகவத் ஸ்வரூபத்தில் விழித்திருக்கிறான். அதை நன்கு அறிந்து அதில் ஈடுபட்டிருக் கிறான். சிற்றின்பங்களில் தூங்குகிறான். அவைகளை அறிவதில்லை. விழிப்பு அறிவுக்கும், இரவு அறியாமைக்கும் ஒப்பிடப்பட்டுள்ளது. யத்து ஸர்வாத்மனா அஜ்ஞானம், நிசா ஸா பரிகீர்த்திதா | எப்போதும் பகவானிடம் ஒருமுகப்பட்ட மனத்தினனாய், மற்றவைகளில் பற்று இல்லாதிருத்தல், அபரோக்ஷஞானியின் சுருக்கமான லக்ஷணமாகும்.

**குறிப்பு:** சுலோகம் 54-ல் கேட்ட 2-ம் கேள்விக்குப் பதில்:- அபரோக்ஷஞானியின் பிராரப்த கர்மாவினால் பகவத் ஸ்வரூபம் சிறிது மறைந்து விடுகிறது. பூர்வ வாஸனையால் பேசுதல், பிக்ஷை எடுத்தல் முதலிய செயல்களில் மதம் பிடித்தவன்போல அற்ப அநுஸந்தானத்துடன்

ஈடுபடுகிறான். பாகவதம் 5-ம் ஸ்கந்தத்தில் ஜடபரதனின் பல்லக்கு தூக்குதல் முதலிய செயல்கள் உதாரணம்.

அபரோக்ஷஞானி விஷயங்களை அனுபவிக்கும் விதத்தை இரு சுலோகங்களில் விளக்குகிறார்.

70. आपूर्यमाणं अचल प्रतिष्ठं समुद्रमापः प्रविशंति यद्वत् ।
तद्वत्कामाः यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ॥

ஆபூர்யமாணம் அசல ப்ரதிஷ்டம், ஸமுத்ரமாப: ப்ரவிஶந்தி யத்வத் |
தத்வத் காமா: யம் ப்ரவிஶந்தி ஸர்வே, ஸ ஶாந்திமாப்னோதி ந
காமகாமீ || 70

**ஆபூர்யமாணம்** - *(பற்பல நதிகளின் ஜலத்தால்)* நாலா பக்கங்களிலும் நிரப்பப்பட்டபோதிலும்; **அசலப்ரதிஷ்டம்** - அசைவற்று இயற்கையாகவே இருக்கும்; *(ஜலப் பெருக்கினால் அதிகரிக்காமலும், கோடையில் நதிகள் வற்றி விழாமலிருப்பதால் வற்றாமலும், நதிகள் வந்து விழ வேண்டும் என்ற முயற்சியில்லாமலும் இருக்கும்)*; **ஸமுத்ரம்** - கடலை; **ஆப:** - ஜலம்; **யத்வத்** - எவ்வாறு; **ப்ரவிஶந்தி** - நுழைகிறதோ; **தத்வத்** - அவ்வாறு; *(விஷயங்களால் நிரப்பப்பட்டபோது பூரிக்காமலும், அவையில்லாதபோது வாடாமலும், அவைகளைப் பெற முயற்சிக்காமலும்)* இருக்கும்; **யம்** - எந்த அபரோக்ஷ ஞானியை; **ஸர்வே காமா:** - எல்லா விஷயங்களும்; **ப்ரவிஶந்தி** - அடைகின்றனவோ; **ஸ:** - அந்த ஞானி; **ஶாந்திம்** - மோக்ஷத்தை; **ஆப்னோதி** - அடைகிறான். **காமகாமீ (குத்ஸிதத் வேனமீயதே இதி காம:)** - துஷ்டமான விஷயங்களை விரும்பு கிறவன்; **ந** - மோக்ஷத்தை அடையமாட்டான். அல்லது, **ஸ:** - இவ்வாறு விஷயங்களை அநுபவிக்கும் அவன்; **காமகாமீ ந** - விஷயங்களை அநுபவிப்பவனல்ல.

71. विहाय कामान् यः सर्वान् पुमांश्चरति निस्पृहः ।
निर्ममो निरहङ्कारः स शान्तिमधिगच्छति ॥

விஹாய காமான் யஸ்ஸர்வான், புமாம்ஸ்சரதி நிஸ்ப்ருஹ: |
நிர்மமோ நிரஹங்கார:, ஸ சாந்திமதி$^4$க$^3$ச்ச$^2$தி || 71

**ய: புமான்** - எந்த மனிதன்; **நிஸ்ப்ருஹ:** - *(சாஸ்திரங் களில் தடுக்கப்பட்டவைகளில்)* ஆசையற்றவனாயும்; **நிர்மம:** - என்னுடையது, நான் யஜமானன், என்ற அபிமானமற்றவனாயும்; **நிரஹங்கார:** - நானே அனுபவிக்கிறேன் என்ற பாவனையற்றவனாயும் இருந்து; **ஸர்வான் காமான்** - எல்லா

விஷயங்களையும்; **விஹாய** - (ஆசையையும், மமகாரத்தையும், அஹங்காரத்தையும்) விட்டுவிட்டு; **சரதி** - அநுபவிக் கிறானோ; **ஸ:** - அவன்; **சாந்திம்** - மோக்ஷத்தை; **அதிகச்சதி** - அடை கிறான். அல்லது, **ஸ:** - அவ்விதமானவனே: **புமான்** மனிதன் ஆவான். (மற்றவர்கள் மிருகங்களே).

சுலோகம் 55-ல் ஆரம்பித்த ஞானியின் லக்ஷணம், என்ற பகுதியை முடிக்கிறார்.

72. एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वाऽस्यां अन्तकालेऽपि ब्रह्म निर्वाणमृच्छति ॥

ஏஷா ப்ராஹ்மீ ஸ்தி²தி: பார்த்த², நைனாம் ப்ராப்ய விமு ஹ்யதி |
ஸ்தித்²வா (அ) ஸ்யாம் அந்தகாலே(அ)பி, ப்ரஹ்ம நிர்வான
ம்ருச்சதி || 72

**பார்த்த** - குந்திபுத்ரா! **ஏஷா** - இது, (சு. 55-ல் ஆரம்பித்து, சு. 69-ல் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது); **ப்ராஹ்மீ** - பிரம்ம ஞானியின்; **ஸ்திதி:** - லக்ஷணமாகிற நிலையாகும்; **ஏனாம்** - இதை; **ப்ராப்ய** - அடைந்து; **ந வி முஹ்யதி** - ஸம்ஸார வேதனையை அனுபவிப்பதில்லை. **அந்தகாலே அபி** - தேகத்தை விடும் முடிவு காலத்திலும் கூட; **அஸ்யாம்** - இந்த நிலையில்; **ஸ்தித்வா** - இருந்து; **நிர்வாணம்** - ப்ரகிருதி சம்பந்த மான சரீரமில்லாத; **ப்ரஹ்ம** - குணபூர்ணனான விஷ்ணுவை; **ரிச்சதி** - (பிராரப்தகர்மா இல்லாவிட்டால், அதே ஜன்மத் திலும், இருந்தால், அது முடியும் ஜன்மத்திலும்) அடைகிறான்.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे सांख्य योगो नाम द्वितीयोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸு உபநிஷத்ஸு,
ப்ரஹ்மவித்யாயாம், யோகசாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
ஸாங்க்ய யோகோ நாம த்விதீயோ(அ) த்யாய: ||

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய, ஸாங்க்யயோகம் என்ற 2-ம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*



# 3

## கர்ம யோகம்

(43 சுலோகங்கள்)

## மூன்றாம் அத்தியாயச் சுருக்கம்

கர்மயோகம் – (2ம் அத்தியாயத்து) ஜீவேசுவர ஸ்வரூப ஞானத்தின் உபாயமான நிஷ்காம கர்மாநுஷ்டானத்தை இந்த அத்தியாயத்தில் விஸ்தாரமாகக் கூறுகிறார்.

மோக்ஷமடைய, ஞானமார்க்கம், கர்மமார்க்கம், என்ற இரு வழிகளும், அவைகளுக்குரிய அதிகாரிகளும், பகவானால் வகுக்கப்பட்டுள்ளனர். ஞானமார்க்கத்திற்கு ஸநகாதி முனிவர்களும், கர்மமார்க்கத்திற்கு ஜநகாதி கிருஹஸ்தர்களு மாவர். ஞானயோகிகளுக்குச் சிறிது கர்மமும், கர்ம யோகி களுக்குச் சிறிது ஞானமும், உண்டு. ஞானயோகம், கர்ம யோகத்தைக் காட்டிலும் உயர்ந்தது. ஆயினும், அர்ஜுனன் கர்மயோகத்திற்கு உரியவன். ஆதலால் ஸ்ரீ கிருஷ்ணர் அவனை யுத்தம் என்ற கர்மத்தைச் செய்யும்படித் தூண்டுகிறார்.

1. ஜீவர்கள் 2. வேதங்கள் (அக்ஷரம்) 3. விஷ்ணு (ப்ரஹ்மம்) 4. செய்கை (கர்மம்) 5. யாகம் 6. சூரியன் அல்லது மேகக்கூட்டம் 7. அன்னம் – இவற்றைக்கொண்டு உலக சக்கிரத்தைப் பகவான் ஏற்படுத்தியுள்ளார். அதாவது, ஜீவர்கள் அத்யயனம் செய்வதால், வேதங்கள் வெளிப் படுகின்றன. வேதங்களினால் விஷ்ணுவின் ஸ்வரூபம் வெளியாகிறது. அவர் ரித்விக் முதலியோரை செயல்படும்படி தூண்டுகிறார். அவர்களின் செய்கைகளால், யாகம் செய்யப் படுகிறது. யாகத்தால் மகிழ்ந்த சூரியன், மழையைத் தருகிறான். மழையால் உணவுப் பொருள்கள் விளைகின்றன. உணவால் ரேதஸ்ஸின் மூலம் ஜீவர்கள் பிறக்கிறார்கள். அவர்கள் மீண்டும் வேதங்களை அத்யயனம் செய்கிறார்கள். மீண்டும் முன்போல் ஏற்படு கின்றன.

அர்ஜுனா! இந்தச் சக்கிரத்தை யார் சுழலும்படி செய்கிறதில்லையோ, அதாவது தன் கர்மத்தைச் செய்வ

தில்லையோ, அவனுடைய வாழ்க்கை வீணே! ஆகையால், நீ ஸர்வோத்தமனான என்னிடம் மனதை வைத்து, ஞான பக்தி வைராக்கியங்களைத் தவிர, மற்றவைகளை ஆசைப்படாமல், நான் ஸ்வதந்திரமாகச் செய்யவில்லை. பகவான்தான் செய்விக்கிறான். அது பகவானுடைய பூஜை, என்று நினைத்துப் போர்புரிவாயாக.

காமம், கோபம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் - என்ற ஆறும் மோக்ஷமார்க்கத்திற்குப் பெரும் பகைவர்கள். அவைகளுக்கு அரிஷட்வர்க்கம் எனப் பெயருண்டு. அவை நீ விரும்பாவிடினும், பாவங்களைச் செய்யும்படித் தூண்டும். அவைகளில் காமம்தான் பிரபலமானது. அதற்கு அபிமானி காலநேமி என்ற அஸுரனாவான். காமத்தை ஜயித்து விட்டால், அதனால் உண்டாகும் மற்றவைகளையும் ஜயிப்பது சுலபம்.

காமத்தை ஜயிக்க, அதன் இருப்பிடங்களான, இந்திரியங்கள், மனது, புத்தி ஆகியவற்றை அடக்கி வசப் படுத்திக் கொள்ளவேண்டும். அந்த இந்திரிய அபிமானி தேவர்களைக் காட்டிலும், சப்தம், ஸ்பர்சம், முதலிய விஷயங்களின் அபிமானி தேவர்கள் உயர்ந்தவர்கள் முதலிய தேவதா தாரதம்யஞானமும், **எல்லோரைக்காட்டிலும் விஷ்ணு தான் உயர்ந்தவர்,** அவரைக் காட்டிலும் உயர்ந்தது எதுவுமில்லை, என்ற ஞானமும், அதை ஜயிக்கும் ஆயுதங்களாகும்.

இவ்வாறு, காமம் முதலியவற்றை ஜயித்து, கர்ம பலனில் ஆசையைத் துறந்து, விஷ்ணுவிடம் ஆசையை வைத்து, உனக்குரிய கர்மத்தைச் செய்துவந்தால்தான், அபரோக்ஷ ஞானத்தின் மூலம், மோக்ஷமடையலாம். ஜனக மஹாராஜன், ப்ரியவ்ரத மஹாராஜன் முதலியவர்கள் கர்மத்தைச் செய்து கொண்டே மோக்ஷமடைந்துள்ளனர். நீயும் அவர்களைப் பின்பற்றவேண்டும்.

மேலும், நீ ஓர் சிறந்த தலைவனாய் விளங்குகிறாய். தலைவனைப் பின்பற்றிப் பாமர மக்கள் செல்கின்றனர் அல்லவா! நீ கர்மத்தைச் செய்தால்தான், பாமரர்களும் செய்வார்கள். அவாப்த ஸமஸ்த காமனான நானே, கர்மங்களை, லோக க்ஷேமத்தின் பொருட்டுச் செய்து வருகையில், மோக்ஷம் முதலிய புருஷார்த்தங்களை விரும்புகிற ஜீவர்கள், கர்மங்களைச் செய்யவேண்டாமா? மோக்ஷத்தில் ஸ்வரூபானந்தம் பொங்கவேண்டி, அபரோக்ஷ ஞானமடைந்த

பிறகும், கர்மங்களைச் செய்து வருகையில், அபரோக்ஷ ஞானம் உண்டாகக் கர்மத்தைச் செய்ய வேண்டாமா?

ஆகவே, அர்ஜுனா! கஷ்டமான கர்மத்தில் ஏவுகிறேனே என்று குறை கூறாது, உன்னுடைய நிஷ்காம கர்மத்தைச் செய்வாயாக.

अर्जुनः उवाच - **அர்ஜுன: உவாச - அர்ஜுனன்** *(2-49ல் ஞானத்தைக் காட்டிலும் காம்யகர்மம் மிகத் தாழ்ந்தது என்று கூறியதால்)* **வினவுகிறான்.**

1. ज्यायसी चेत्कर्मणम्ते मता बुद्धिर्जनार्दन ।
तत् किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥

2. व्यामिश्रेणैव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥

ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்தே, மதா பு[3]த்தி[4]ர்ஜநார்த்த[3]ன |
தத் கிம் கர்மணி கே[4]ாரே மாம், நியோஜயஸி கேஶவ || 1

வ்யாமிஶ்ரேணைவ வாக்யேன, புத்தி[4]ம் மோஹயஸீவ மே |
ததே[3]கம் வத[3] நிஸ்சித்ய யேன ஶ்ரேயோ(அ) ஹமாப்நுயாம் || 2

*1.* **ஜநார்த்தன** *(1-35; 10-18) பிறப்பில்லாதவரே! ஜனனத்தையும் மரணத்தையும் நாசம் செய்பவரே! துஷ்ட ஜனங்களைக் கொல்பவரே!* **புத்தி:** *- ஞானம்;* **கர்மண:** *- (காம்ய) கர்மாவைக் காட்டிலும்;* **ஜ்யாயஸீ** *- உயர்ந்தது என்று;* **தவ** *- உம்முடைய;* **மதா சேத்** *- அபிப்ராயமாயின்;* **தத்-தர்ஹி** *- அப்பொழுது;* **கேஶவ** *- பிரம்மருத்ரநியாமகரே!* **மாம்** *- என்னை;* **கிம்** *- ஏன்;* **கர்மணி** *- கர்மாவில்;* **நியோஜயஸி** *- ஏவுகிறீர்? (இது ஒரு கேள்வி) அதிலும்* **கோரே** *- (ராகம், த்வேஷம், இவற்றுடன் கூடி), பயங்கரமான;* **கர்மணி** *- யுத்தமாகிற கர்மாவில்;* **கிம்** *- ஏன்;* **நியோஜயஸி** *- ஏவுகிறீர்? (இது இரண்டாம் கேள்வி).*

**குறிப்பு:** முதல் கேள்விக்குப் பதில் 3 முதல் 34 சுலோகங்கள்; 2-ம் கேள்விக்குப் பதில் 35-ம் சுலோகம்; பார்க்க.

*2.* **வ்யாமிஶ்ரேண** *- ஸந்தேகத்தையுண்டுபண்ணுகிற;* **வாக்யேன ஏவ** *- வார்த்தைகளாலேயே; (சிலவிடங்களில் (2-31) கர்மத்தைப் புகழ்ந்தும், மற்றும் சிலவிடங்களில் (2-49) ஞானத்தைப் புகழ்ந்தும் கூறியபடியால் அல்லது 2-37ல் ஸ்வர்க்கத்திற்காக யுத்தம் (காம்யகர்மா) என்றும், 2-48ல் ஞானத்தையடைவதற்காக யுத்தம் (நிஷ்காம கர்மா) என்றும்*

கூறியதால்; **மே** - என்னுடைய; **புத்திம்** - புத்தியை; **மோஹயஸி இவ** - இதுவோ அதுவோ என்று ஊசலாடும்படிச் செய்கிறீர் போலும்; **(தத்** - ஆகையால்) **யேன** - எதனால்; **அஹம்** - நான்; **ஶ்ரேய:** - நன்மையை (மோக்ஷத்தை) **ஆப்நுயாம்** - அடைவேனோ; **தத்** - அந்த; **ஏகம்** - ஒன்றை; **நிஸ்சித்ய** - தீர்மானித்து; **வத** - கூறும்.

**குறிப்பு:** பலனை உத்தேசித்து யுத்தம் புரிந்தால், அது காம்ய கர்மாவாகும். பலனையுத்தேசிக்காமல் போர் புரிந்தால், அதுவே நிஷ்காம கர்மாவாகும். ஆனால் ஸன்யாஸாசிரமத்துக்குரிய ஶமம், தமம் முதலியன, எப்போதுமே நிஷ்காம கர்மமானதால், அந்த ஆஶ்ரமத்தை அடைவாயாக, என்று கூறவேண்டுமே தவிர 2-18ல் யுத்தம் புரிவாயாக என்று கூறியது சரியல்ல என்பது அர்ஜுனனின் கருத்து.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் முதல் கேள்விக்குப் பதிலளிக்கிறார். (இது முதல் சுலோகம் 34 முடிய).

3. लोकेऽस्मिन् द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयाऽनघ ।
ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥

லோகே (அ)ஸ்மின் த்வி வித⁴ா நிஷ்ட²ா, புரா ப்ரோக்தா மயா (அ)நக⁴ |
ஜ்ஞானயோகே³ன ஸாங்க்யானாம், கர்ம யோகே³ன யோகி³னாம் || 3

**அநக** - பாபமற்றவனே! **அஸ்மின்** - இந்த; **லோகே** - உலகத்தில் அல்லது ஸாதக வர்க்கத்தில்; **நிஷ்டா** - (நிதராம் ஸ்திதி:) - அவரவர் ஸ்வரூபத்துடனிருத்தல்; (நிதராம் நிவ்ருத்தி:) - அடியோடு ஸம்ஸார நாஶம்; என்ற மோக்ஷம்; **த்வி விதா** - இருவித உபாயங்களால் கிடைப்பது; என **மயா** - என்னால்; **புரா** - முன்; **ப்ரோக்தா** - கூறப்பட்டது. எவை எனில், (1) **ஸாங்க்யானாம்** - ஞானத்தை முக்கியமாகக் கொண்ட தேவர்களுக்கும் ஸநகாதி ஸந்யாஸிகளுக்கும்; **ஜ்ஞானயோகேன** - (கொஞ்சம் கர்மானுஷ்டானத்துடன் கூடிய, ஜபம் தியானம், முதலிய) ஞானோபாயத்தால்: **நிஷ்டா** - மோக்ஷம். (2) **யோகினாம்** - கர்மாவை முக்கியமாகக் கொண்ட ஜனகன், ப்ரியவ்ரதன், முதலிய கிருஹஸ்தர்களுக்கு; **கர்மயோகேன** - (கொஞ்சம் ஞானத்துடன் கூடிய) கர்மானுஷ் டானம் என்ற உபாயத்தால்; **நிஷ்டா** - முக்தி; **(இதி** - என்றவாறு).

**குறிப்பு:** ப்ராதான்யாத் வ்யபதேஶா: பவந்தி - கொஞ்சம் ஜலம் கலந்த பாலை, பால் என்றும், கொஞ்சம் பால் கலந்த ஜலத்தை, ஜலம், என்றும் கூறிவருகிறோமல்லவா! அது போலவே, ஞானயோகம் என்றால், கொஞ்சம் கர்மாவுடன் கூடியது என்றும், கர்ம யோகம் என்றால் கொஞ்சம்

ஞானத்துடன் கூடியது என்றும், கூறியிருக்கிறார். இருவித யோகிகளுக்கும் இருவித உபாயங்களும் உண்டு. அர்ஜுனன் கர்மயோகியாகப் பகவானால் நியமிக்கப்பட்டதால், கர்மாவில் அவனைத் தூண்டியது சரியே.

**ஸ்ரீ கிருஷ்ணர்:–** அர்ஜுனா! கர்மாவைச் செய்யக் கூடாது என்று கூறும் உன் அபிப்பிராயம் யாது?

1. மோக்ஷத்திற்கு நைஷ்கர்ம்யம் எனப்பெயர். ஏனெனில், கர்மாவைச் செய்யாதிருப்பதால் அது அடையத் தகுந்தது; அதனால் கர்மாவைச் செய்யக்கூடாது என்றா? 2. கர்மா ஸம்ஸாரத்திற்கு விதை போன்றது. அதைச் செய்தால் ஸம்ஸாரம் வளரும். அதைச் செய்யாதிருப்பது மோக்ஷ ஸாதனம் .ன்றா? 3. **கர்மணா பத்யதே ஜந்து:– மனிதன் அவைஷ்ணவ கர்மத்தினால் பந்தத்தை அடைகிறான் - என்ற ஸ்மிருதியால், கர்மம் மோக்ஷத்திற்குத் தடையாகவுள்ளது என்றா? முதல் அபிப்ராயத்தை நிராகரிக்கிறார்.**

4. न कर्मणां अनारंभात् नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च सन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥

ந கர்மணாம் அநாரம்ப[4]ாத், நைஷ்கர்ம்யம் புருஷோ (அ)ஶ்னுதே |
நச ஸந்ந்யஸனாதே[3]வ, ஸித்தி[4]ம் ஸமதி[4]க[3]ச்ச[2]தி || 4

**கர்மணாம் அநாரம்பாத்** - கர்மாக்களைச் செய்யாதிருப்பதால்; **நைஷ்கர்ம்யம்** - மோக்ஷத்தை; **அச்னுதே** - அடைகிறான்; என்று நீ கூறுவது; **ந** - சரியல்ல. ஏனெனில் - **புருஷ:** - (புராணி ஸரதி இதி புருஷ:) எப்போதும், ஸூக்ஷ்ம தேகத்துடனும், ஸ்தூல தேகத்துடனும், கூடியிருப்பவன், (பல ஜன்மங்களையடைபவன், ஆதலால், பசு, பக்ஷி, செடி, கொடி முதலிய பிறப்புகளை அடைந்தபோது கர்மாவைச் செய்யாதிருந்ததால், அவன் மோக்ஷமடைந்திருக்க வேண்டும். இந்தப் பிறப்பு அவனுக்கு ஏற்பட்டிராது அல்லவா? ஆகவே **நைஷ்கர்ம்யம்** - காம்ய கர்மாவைச் செய்யாதிருப்பதால் அடையத்தகுந்தது மோக்ஷம்; என்று அர்த்தம் செய்ய வேண்டும். நானோ உன்னை நிஷ்காம கர்மாவையல்லவா செய்யும்படித் தூண்டுகிறேன்).

இரண்டாவது அபிப்ராயமும் தவறு. ஏனெனில் எப்போதும் இருவித ஸூக்ஷ்மம், ஸ்தூலம் தேகத்துடன் கூடியிருப்பதால் முன் பல ஜன்மங்களில் செய்த கணக்கற்ற கர்மங்கள் என்ற ஸம்ஸார விதைகள் இருக்கையில், இந்த ஒரு ஜன்மத்தில் மாத்திரம் கர்மாவைச் செய்யாதிருப்பதால், மோக்ஷம் கிடைக்குமா?

மூன்றாவது அபிப்பிராயமும் தவறு என்று சுலோகம் 9-ல் கூறப்போகிறார்.

**ச** - மேலும், **ஸந்ந்யஸனாத் ஏவ** - காம்ய கர்மாவைச் செய்யாமல் விட்டுவிடுவதால் மாத்திரமே அல்லது (நிஷ்காம கர்மாவையே செய்வதினால் மாத்திரமே); **ஸித்திம்** - மோக்ஷத்தை; **புருஷ:** - மனிதன்; **ந ஸமதிகச்சதி** - அடைவ தில்லை. (அதாவது நிஷ்காம கர்மத்தால் மனச்சுத்தி, வைராக்யம்; சிரவணம், மனனம், த்யானம், அபரோக்ஷ ஞானம் முதலியவற்றின் மூலமாகத்தான் அடையலாம்.) மேலும், **ஸந்ந்யஸனாதேவ** - ஸந்ந்யாஸ ஆசிரமத்தினால் மாத்திரமே, (மோக்ஷத்தை அடைவதில்லை. அதாவது பகவா னிடம் ஒருமுகப்பட்ட மனதை வைத்து, அவனுடைய விசேஷ அருளினால்தான் அடையலாம்).

மேலும் கர்மாவை அடியோடு விட்டுவிடுவதற்கும் உன்னால் முடியாது, என்கிறார்.

5. न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥

ந ஹி கஸ்சித் க்ஷணமபி, ஜாது திஷ்டத் யகர்மக்ருத் |
கார்யதே ஹ்யவஶ: கர்ம, ஸர்வ: ப்ரக்ருதி ஜைர் கு³ணை: || 5

**கஸ்சித் அபி** - யாரும்கூட; ஞானியோ அஞ்ஞானியோ; **க்ஷணம் அபி** - ஒரு கணம் கூட; **அகர்மக்ருத்** - கர்மாவைச் செய்யாமல்; **ஜாது** - ஒருபொழுதும்; **ந திஷ்டதி** - இருப்ப தில்லை; **ஹி** - ஏனெனில்; **அவச:** - அவசேன - தன் வசமில்லாதவர்களும்; 'அ' என்ற விஷ்ணுவின் வசப்பட்டவர் களுமான; **ஸர்வ:** - ஸர்வேண - அனைவராலும்; **ப்ரக்ருதிஜை:** - ஜடப்பிரகிருதியிலிருந்து உண்டான; **குணை:** - ஸத்வம் ரஜஸ், தமஸ் என்ற குணங்களினால்; **கர்ம, கார்யதே** - கர்மம் செய்விக்கப்படுகிறது.

**குறிப்பு:** ஸ்வதந்த்ர கர்த்தா - பகவான். விகார (மாறுபாடு). கர்த்தா - ஸத்வாதி குணங்கள். இவற்றால் தூண்டப்படும், அஸ்வதந்திர கர்த்தாவான ஜீவன், எப்போதும் ஏதாவது ஒரு கர்மாவைச் செய்துகொண்டே யிருப்பான். ஆகவே, கர்மாவைச் செய்யாதவன் யாருமில்லை. (சு. 27 பார்க்க).

மேலும் மனம்தான், பந்தத்திற்கும், மோக்ஷத்திற்கும் முக்கிய காரணம், கர்மா அல்ல, என்று 2 சுலோகங்களில் கூறுகிறார்.

6. कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।
इन्द्रियार्थान् विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥

7. यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।
कर्मेन्द्रियैः कर्मयोगं असक्तः स विशिष्यते ॥

கர்மேந்த்[3]ரியாணி ஸம்யம்ய, ய ஆஸ்தே மனஸா ஸ்மரன் |
இந்த்ரியார்த்த[2]ான் விமூட[4]ாத்மா, மித்யாசாரஸ் ஸ உச்யதே ||6

யஸ்து இந்த்[3]ரியாணி மனஸா, நியம்யாரப[4]தே அர்ஜுன |
கர்மேந்த்ரியை: கர்மயோக[3]ம், அஸக்தஸ் ஸ விஶிஷ்யதே || 7

*6.* **ய:** *யார்;* **கர்மேந்த்ரியாணி** *- வாக் (வாய்), பாணி (கைகள்), பாதம் (கால்கள்), பாயு (மலம் கழிக்கும் உறுப்பு) உபஸ்தம் (ஆண் பெண் குறி), இந்த ஐந்தையும் (ஞானேந் திரியங்கள் ஐந்தையும்):* **ஸம்யம்ய** *- நன்கு அடக்கி;* **இந்த்ரிய அர்த்தான்** *- சப்தம், ஸ்பர்சம்; ரூபம், ரஸம், கந்தம் என்ற விஷயங்களை;* **மனஸா** *- மனதினால்;* **ஸ்மரன் ஆஸ்தே** *- நினைத்துக்கொண்டிருக்கிறானோ;* **ஸ:** *- அந்த,* **விமூடஆத்மா** *- விபரீத ஞானமுடையவன்;* **மித்யா ஆசார;** *- கபடமான ஒழுக்கமுள்ளவன் என,* **உச்யதே** *- சொல்லப்படுகிறான்.*

*7.* **து** *- ஆனால்;* **அர்ஜுன** *- சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!* **ய:** *- யார்;* **மனஸா** *- மனத்தால்;* **இந்த்ரியாணி** *- கண், காது முதலிய ஞானேந்திரியங்களை;* **நியம்ய** *- அடக்கி;* **அஸக்த:** *- கர்மாவின் பலனில் பற்றில்லாமல்;* **கர்மேந்த்ரியை:** *- வாக் முதலிய ஐந்தால்;* **கர்மயோகம்** *- தன் வர்ணா சிரமத்துக்குரிய கர்மானுஷ்டானம் என்ற ஞானோபாயத்தை;* **ஆரபதே** *- செய்கிறானோ;* **ஸ:** *- அவன்;* **விஶிஷ்யதே** *- முற் கூறப்பட்டவனைக் காட்டிலும் சிறந்தவன்.*

**குறிப்பு:** சு. 6-ல் மனதை அடக்காவிடில், பந்தம் உண்டு, மோக்ஷமில்லை; எனப்பட்டது. சு. 7-ல் மனதை அடக்கினால், பந்தம் இல்லை, மோக்ஷம் உண்டு; எனப்படுகிறது.

அதனால் அர்ஜுனன் செய்யவேண்டியதைக் கூறுகிறார்.

8. नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्राऽपि च ते न प्रसिद्ध्येत् अकर्मणः ॥

நியதம் குரு கர்ம த்வம், கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: |
ஶரீரயாத்ரா(அ)பி ச தே, ந ப்ரஸித்[4]யேத் அகர்மண: || 8

**ஹி** *- எதனால்;* **அகர்மண:** *- கர்மாவைச் செய்யாம லிருப்பதைக் காட்டிலும்;* **கர்ம** *- கர்மாவைச் செய்வது;* **ஜ்யாய:** *- மிகச் சிறந்ததோ; (அதனால்)* **த்வம்** *- நீ;* **நியதம் கர்ம** *- உனக்குரிய வர்ணாசிரம தர்மத்தை;* **குரு** *- செய்வாயாக.* **ச** *- மேலும்;*

**அகர்மண:** – ஒரு கர்மாவையும் செய்யாதிருக்கும்; **தே** – உனக்கு; **சரீரயாத்ரா அபி** – உடல் வாழ்க்கையும் கூட; **ந ப்ரஸித்யேத்** – சாத்தியமாகாமல் போய்விடும்.

குறிப்பு: ஶரீரமாத்யம் கலு தர்மஸாதனம் – உடல்தான் எல்லா தர்மங்களைச் செய்வதற்கும் முதல் கருவியாக வுள்ளது. அதைப் பாதுகாக்கும் கர்மாவையாவது செய்ய வேண்டுமல்லவா! அதையும் செய்யாவிட்டால் உயிர் வாழ முடியாது.

சுலோகம் 4-ல் அர்ஜுனனின் 3-ம் அபிப்ராயமும் தவறு என்கிறார்.

9. यज्ञार्थात् कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः ।
तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर ॥

யஜ்ஞார்த்த[2]ாத் கர்மணோ(அ)ன்யத்ர, லோகோ(அ)யம் கர்ம ப[3]ந்த[4]ன: |
தத[3]ர்த்த[2]ம் கர்ம கௌந்தேய, முக்தஸங்க[3]: ஸமாசர || 9

**அயம் லோக:** – இந்த ஜனங்கள்; **யஜ்ஞார்த்தாத்** – *(யஜ்ஞ: விஷ்ணு:)* – விஷ்ணுவின் பொருட்டான அல்லது *(ய: – யாத:)* **யஜ்ஞ:** – விஷ்ணுவை உத்தேசமாகக் கொண்ட; **கர்மண:** – கர்மாவைக் காட்டிலும்; **அன்யத்ர** – வேறான விஷயங்களில்; **கர்மபந்தன:** – கர்மபந்தத்தையடைவார்கள். ஆகையால், **கௌந்தேய** – குந்தீபுத்திரனே! **ததர்த்தம்** – அந்த விஷ்ணு பூஜையின் பொருட்டு; **கர்ம** – *(யுத்தமாகிற)* கர்மாவை; **முக்தஸங்க:** – பலனில் பற்றை விட்டுவிட்டு; **ஸம் ஆசர** – நன்றாகச் செய்வாயாக.

குறிப்பு: விஷ்ணுவைக் குறித்துச் செய்யப்படும் கர்மம் பந்தத்தைத் தராது. அவைஷ்ணவ கர்மம்தான் பந்தத்தைத் தரும். கர்மணா பத்யதே ஜந்து: – என்ற ஸ்மிருதியில், கர்மணா – அவைஷ்ணவ கர்மத்தால்தான் மனிதன் பந்தத்தை யடைகிறான் என்று அர்த்தம் கூறவேண்டும். (சுலோகம் 3ல் விளக்கம் பார்க்க).

வர்ணாசிரமங்களுக்குரிய கர்மாக்களை செய்ய வேண்டும் என்பதற்கு ஸ்துதி, நிந்தா, பரக்ருதி, புராகல்பம் என்ற அர்த்த வாதத்தை 4 சுலோகங்களில் கூறுகிறார்.

10. सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वं एष वोऽस्तु इष्टकामधुक् ॥

11. देवान्भावयताऽनेन ते देवा भावयन्तु वः ।
परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥

12. इष्टान्भोगान् हि वो देवाः दास्यन्ते यज्ञभाविताः ।
तैर्दत्तान् अप्रदायैभ्यो यो भुंक्ते स्तेन एव सः ॥

13. यज्ञशिष्टाशिनः सन्तः मुच्यन्ते सर्वकिल्बिषैः ।
भुंजते ते त्वघं पापाः ये पचन्त्यात्मकारणात् ॥

ஸஹயஜ்ஞா: ப்ரஜாஸ் ஸ்ருஷ்ட்வா, புரோவாச ப்ரஜாபதி: |
அநேன ப்ரஸவிஷ்யத்$^{4}$வம், ஏஷ வோ(அ)ஸ்து இஷ்டகாமது$^{4}$க் || 10

தே$^{3}$வான் ப$^{4}$ாவயதாநேன, தே தே$^{3}$வா ப$^{4}$ாவயந்து வ: |
பரஸ்பரம் ப$^{4}$ாவயந்த:, ஶ்ரேய: பரம் அவாப்ஸ்யத || 11

இஷ்டான் பே$^{4}$ாகான் ஹி வோ தே$^{3}$வா:, த$^{3}$ாஸ்யந்தே யஜ்ஞ ப$^{4}$ாவிதா: |
தைர் த$^{3}$த்தான் அப்ரத$^{3}$ாயைப்$^{4}$யோ, யோ பு$^{4}$ங்க்தே ஸ்தேன ஏவ ஸ: ||
12

யஜ்ஞஶிஷ்டாஶினஸ் ஸந்த:, முச்யந்தே ஸர்வகில்பி$^{3}$ஷை: |
பு$^{4}$ஞ்ஜதே தே த்வக$^{4}$ம் பாபா:, யே பசந்த்யாத்ம காரணாத் || 13

*10.* **ப்ரஜாபதி:** – *விஷ்ணு அல்லது பிரம்மதேவர்;* **புரா** – *முன்னர்; (சிருஷ்டி காலத்தில்);* **ஸஹயஜ்ஞா:** – *யாகத்துடன் கூடிய;* **ப்ரஜா:** – *(பிராம்மணர் முதலிய) ஜனங்களை;* **ஸ்ருஷ்ட்வா** – *படைத்து;* **உவாச** – *(பின்வருமாறு) கூறினார்: (***ப்ரஜா:** – *ஜனங்களே !)* **அநேன** – *இந்த யாகத்தினால்;* **ப்ரஸ விஷ்யத்வம்** – *(நீங்கள் விரும்பும் புருஷார்த்தங்களை) உண்டு பண்ணிக் கொள்ளுங்கள்.* **ஏஷ:** – *இந்த யாகம்;* **வ:** – *உங்களுக்கு;* **இஷ்டகாமதுக்** – *(காமதேனு போல) விரும்பும் போகங்களைக் கறப்பதாக;* **அஸ்து** – *இருக்கட்டும்.*

*11. எப்படி போகங்களைக் கறக்கும்?* **அநேன** – *இந்த யாகத்தினால்;* **தேவான்** – *தேவர்களை;* **பாவயத** – *கௌரவியுங்கள். (ஹவிஸ்களினால் திருப்தி செய்யுங்கள்.)* **தே தேவா:** – *அந்த திருப்தியடைந்த தேவர்கள்;* **வ:** – *உங்களை;* **பாவயந்து** – *(நீங்கள் விரும்பும் போகங்களைத் தந்து) திருப்தி செய்யட்டும். (இம்மாதிரி* **பரஸ்பரம்** – *ஒருவரையொருவர்;* **பாவயந்த:** – *திருப்தி செய்பவர்களாய்;* **பரம் ச்ரேய:** – *சிறந்த நன்மையான மோக்ஷத்தை;* **அவாப்ஸ்யத** – *அடைவீர்களாக.*

*12. யாகம் செய்யாதவர்களை நிந்திக்கிறார்:* – **யஜ்ஞ பாவிதா:** – *யாகத்தினால் திருப்தி செய்யப்பட்ட;* **தேவா:** – *தேவர்கள்;* **வ:** – *உங்களுக்கு,* **இஷ்டான் போகான்** – *விரும்பப்பட்ட போகங்களை;* **தாஸ்யந்தே** – *(தாஸ்யந்தி)* –

கொடுப்பார்கள்; **ய:** - யார்; **தை:** - அவர்களால்; **தத்தான்** - கொடுக்கப்பட்ட அன்னம் முதலியவற்றை; **ஏப்ய:** - அவர்களுக்கு; **அப்ரதாய** - (யாகங்கள் மூலமாக) கொடுக்காமல்; **புங்க்தே** - சாப்பிடுகிறானோ; **ஸ:** - அவன்; **ஸ்தேன: ஏவ** - திருடனே. **ஹி** - பிரசித்தம்.

**குறிப்பு:** தாஸ்யந்தி - என்ற பரஸ்மை பதத்திற்குப்பதில் தாஸ்யந்தே - என்ற ஆத்மனேபதம் ஆர்ஷம்.

*13.* இங்கு யாகம் செய்பவர்களைப் புகழ்கிறார். யாகம் செய்யாதவர்களை மீண்டும் இகழ்கிறார்:- **யஜ்ஞசிஷ்ட அசின:** - (யாகத்தில் விஷ்ணு, மற்ற தேவர்கள் ஆகியவர்களின் ஆராதனத்தின்) மீதியைச் சாப்பிடும் அல்லது வைசுவதேவம் முதலிய யாகங்களில் மிகுந்ததைச் சாப்பிடும்; **ஸந்த:** - நல்லோர்கள்; **ஸர்வகில்பிஷை;** - எல்லா பாவங்களிலிருந்தும்; **முச்யந்தே** - விடுபடுகிறார்கள். **து** - ஆனால், **யே** - எவர்கள்; **ஆத்மகாரணாத்** - தமக்காகவே என்று; **பசந்தி** - சமைக்கிறார்களோ; **தே** - அந்த; **பாபா:** - பாபிகள்; **அகம்** - பாவத்தையே; **புஞ்ஜதே** - சாப்பிடுகின்றனர். (அவர்களின் போஜனம் பாபத்துக் காரணமாகும்.)

**குறிப்பு:** (1) இந்த நான்கும் அர்த்தவாதமாகும்.

i. ஸ்துதி - புகழ்தல்

சு. 10-ல் ஏஷவோ அஸ்து இஷ்ட காமது[4]க் |
சு. 12-ல் இஷ்டான் பே[4]ாகான் த[3]ாஸ்யந்தே |
சு. 13-ல் முச்யந்தே ஸர்வகில்பி[3]ஷை: |

ii. நிந்தா - இகழ்தல்

சு. 12-ல் ஸ்தேன ஏவ ஸ: |
சு. 13-ல் பு[4]ஞ்ஜதே தேது அக[4]ம் பாபா: |

iii. பரக்ருதி - ஒருவர் செய்திருப்பதை உதாஹரித்தல்

சு. 10-ல் புரா உவாச ப்ரஜாபதி:

iv. புராகல்பம் - பலர் செய்திருப்பதை உதாஹரித்தல்

சு. 13-ல் ஸந்த: முச்யந்தே

(2) நமக்காகவென்றே சமைத்தாலும், முன்னோர்கள், 'இன்று ஸ்வாமி நைவேத்யத்திற்கு என்ன சமைப்பது?' என்று கேட்டு வந்தார்கள்.

(3) வைசுவதேவம் - ஐந்து பாவங்களைப் போக்குகிறது. 1) தான்யங்களை அறுத்தல் (கண்டனீ) 2) மாவாக அரைப்பது (பேஷணீ) 3) அடுப்பில் வேக வைப்பது (சுல்லீ) 4) ஜலத்தில் ஊறவைப்பது (உதகும்பீ) 5) வார்கோலால் பெருக்குதல் (மார்ஜனீ). பிரதி தினமும் வைசுவதேவம் செய்யவேண்டும். முடியாவிடில் அதற்காகச் சிறிது அன்னத்தை எடுத்து

வைத்து விட்டு, செய்ய முடியவில்லை என்று வருந்தி, பகவானைப் பிரார்த்திக்க வேண்டும்.

*வர்ணாசிரமத்துக்குரிய கர்மாக்களைச் செய்ய வேண்டும் என்பதற்கு, மற்றொரு காரணத்தை 3 சுலோகங்களில் கூறி; செய்யாவிடில் அனர்த்தத்தையும் கூறுகிறார்.*

14. अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसंभवः ।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥

15. कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्म अक्षरसमुद्भवम् ।
तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥

16. एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।
अघायुः इन्द्रियारामो मोघं पार्थ स जीवति ॥

அன்னாத் ப[4]வந்தி பூ[4]தானி, பர்ஜன்யாத் அன்ன ஸம்ப[4]வ: |
யஜ்ஞாத் ப[4]வதி பர்ஜன்ய:, யஜ்ஞ: கர்மஸமுத்ப[4]வ: || 14

கர்ம ப்[3]ரஹ்மோத்ப[4]வம் வித்தி[4], ப்ரஹ்ம அக்ஷரஸமுத்ப[4]வம் |
தஸ்மாத் ஸர்வக[3]தம் ப்ரஹ்ம, நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டி[2]தம் || 15

ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம், நானுவர்த்தயதீஹ ய: |
அக[4]ாயு: இந்த்ரியாராமோ, மோக[4]ம் பார்த்த[2] ஸ ஜீவதி || 16

*14.* **பூதானி** – *ஜீவர்கள்;* **அன்னாத்** – *அன்னத்தினால்; (ரேதஸ்மூலம்);* **பவந்தி** – *பிறக்கின்றனர்.* **அன்னஸம்பவ:** – *அன்னத்தின் உற்பத்தி;* **பர்ஜன்யாத்** – *மேகக்கூட்டத்தின் அபிமானியான சூரியனால் (மழையின் மூலம்) ஏற்படுகிறது.* **பர்ஜன்ய:** – *மேற்படி சூரியன் அல்லது மேகக்கூட்டம்;* **யஜ்ஞாத்** – *யாகத்தினால் (அதில் கொடுக்கப்படும் ஹவிஸ் மூலமாக);* **பவதி** – *உண்டாகிறது.* **யஜ்ஞ:** – *யாகம்;* **கர்ம ஸமுத்பவ:** – *ரித்விக் முதலியோரின் செய்கைகளால் உண்டாகிறது.*

*15.* **கர்ம** – *அந்தச் செய்கைகள்;* **ப்ரஹ்மோத்பவம்** – *விஷ்ணுவால் (அவருடைய பிரேரணையால்) ஏற்படுபவை என்று,* **வித்தி** – *அறிவாயாக; (வேதங்களினால் உள்ளது உள்ளபடி அறியப்பட்ட விஷ்ணு, நற்கார்யத்தைச் செய்விக்கிறார்.)* **ப்ரஹ்ம** – *அந்த விஷ்ணு;* **அக்ஷரஸமுத்பவம்** – *எழுத்துக்களான வேதங்களால் வெளிப்படுபவர். [அந்த எழுத்துக்களாகிய வேதங்கள், ஜீவர்களால் (அவர்களின் அத்யயனத்தால்) வெளிப்படுபவை, என்று சேர்த்துக்கொள்ள வேண்டும். இல்லையேல், முதலிலுள்ள ஜீவர்களுக்கும்,*

எழுத்துக்களாகிற வேதங்களுக்கும், தொடர்பு இல்லாது, சக்ரம் பூர்த்தியாகாது]. **தஸ்மாத்** – இவ்வாறு கூறப்பட்ட சங்கிலி போன்ற பரம்பரையினால்; ஏழின் நடுவிலுள்ள யாகத்தினால், வெளிப்படுவதால்; **ஸர்வ கதம்** – எங்கும் உள்ள; **ப்ரஹ்ம** – விஷ்ணு; **நித்யம்** – எப்போதும்; **யஜ்ஞே** – யாகத்தில்; **ப்ரதிஷ்டிதம்** – நிலை பெற்றிருக்கிறார் (எனக் கூறப்படுகிறது.)

**குறிப்பு:** (a) 1) ஜீவர்கள், 2) அன்னம், 3) மேகக்கூட்டம், 4) யாகம், 5) அதன் அங்கமான செய்கைகள், 6) ப்ரஹ்ம- விஷ்ணு, 7) அக்ஷரம் - வேதம். மீண்டும் 1) ஜீவர்கள் முதலியன. இம்மாதிரி அர்த்தம் கூறினால்தான் சக்ரம் சுழலும். இதில் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளது. பிறர்கள் 6-வது ப்ரஹ்ம - வேதம் என்றும்; 7-வது அக்ஷரம் - பரப்ரஹ்மம் என்றும் அர்த்தம் செய்துள்ளனர். இதில் ஏழாவதுக்கும் முதலா வதுக்கும் தொடர்பில்லை. ஆகையால் சக்ரம் பூர்த்தியாக வில்லை. அது சுழலாது. சுழலாவிடில் ஏற்படும் அனர்த்தத்தை அடுத்த சுலோகத்தில் கவனிக்க.

(b) யாகத்தில் அக்நியில் போடப்படும் ஹவிஸ்களும், ஆஹுதிகளும், சூரியனை அடைகின்றன. சூரியனால் மழையைத்தரும் மேகக்கூட்டம் உண்டாகிறது. அதனால் அன்னமும், அன்னத்தினால் பிரஜைகளும், உண்டாகின்றன.

*16.* **பார்த்த** – குந்தீபுத்திரனே!; **இஹ** – இவ்வுலகில்; **யா:** – யார்; **ஏவம்** – இம்மாதிரி; **ப்ரவர்த்திதம்** – (பகவானால் அல்லது முன்னோர்களால் லோகக்ஷேமத்தின் பொருட்டு) ஏற்படுத்தப் பட்ட, **சக்ரம்** – சக்கிரத்தை; **ந அநுவர்த்தயதி** – தொடர்ந்து சுழலும்படி செய்யவில்லையோ (யாகம் முதலிய கர்மாக் களைச் செய்வதில்லையோ); **ஸ:** – அவன்; **அகஆயு:** – பாபத்தின் பொருட்டு ஆயுள் உள்ளவனாகவும்; **இந்த்ரிய ஆராம:** – புலன்களினால்; விஷய சுகத்தையுடையவனாயும்; **மோகம்** – வீணாக; **ஜீவதி** – வாழ்கிறான். (நரகத்தில் மூழ்கு கிறான்.)

**குறிப்பு:** யாகம், தானம், தபஸ் என்ற மூன்றுவிதமான கர்மாக்கள், கிருஹஸ்தர்களுக்கு இருப்பதுபோல, பிரம்மசாரி, வானப்ரஸ்தன், ஸந்யாஸிகளுக்கும், அத்யயனம், ப்ரவசனம், என்ற வாசிக யாகமும், தியானம் என்ற மானஸிக யாகமும்; வித்யாதானம், அன்னதானம், அபயதானம் என்ற தானங்களும்; க்ருச்ரம், சாந்த்ராயணம் முதலிய தபஸ்களும்; உண்டு. ஆதலால் அவர்களுக்கும் இந்தச் சக்கிரத்தில் பங்கு உண்டு.

**அர்ஜுனன்:–** இம்மாதிரி கர்மாவைச் செய்யாவிடில், அனர்த்தமென்றால், ஞானிகள் வெளி உலகை மறந்து பரமேசுவரனைத் தியானிக்கும் நிலையான அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதி, இல்லாமற்போகும்.

ஏனெனில் அவர்கள் அந்த நிலையில் கர்மாக்களைச் செய்ய முடியாதே! என்றால் பதிலளிக்கிறார்.

17. यस्तु आत्मरतिरेव स्यात् आत्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टः तस्य कार्यं न विद्यते ॥

யஸ்து ஆத்மரதிரேவ ஸ்யாத், ஆத்மத்ருப்தஸ்ச மானவ: |
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்ட:, தஸ்ய கார்யம் ந வித்[3]யதே || 17

**து** - ஒரு விசேஷம் உளது; **ய: மானவ:** - (மனுதே இதி) எந்த அபரோக்ஷஞானி; **ஆத்மரதி; ஏவ** - பகவானைத் தரிசிப்பதால் ஏற்பட்ட சுகமுடையவனாகியே, (மற்றவை களில் சுகமில்லாத வனாகி); **ஆத்மத்ருப்த: ச** - பகவானின் அருளாலேயே, மற்றவைகளில் போதும் என்ற புத்தியை யுடையவனாய்; **ஆத்மனி (ஸ்தித்யா) ஏவ** - பகவானிடம் அஸம்ப்ரஜ்ஞாத நிலையில் இருப்பதாலேயே; **ஸந்துஷ்ட:** - மிகுந்த சுக முடையவனாய் இருக்கிறானோ; **தஸ்ய கார்யம் ந வித்யதே** - அவன் அக்காலங்களில் செய்யவேண்டிய ஸந்தியாவந்தனம் முதலிய கர்மாக்களைச் செய்ய வேண்டிய தில்லை.

**2-ம் அர்த்தம்:-** மோக்ஷமடைந்தவன் கர்மா செய்ய வேண்டியதில்லை. மோக்ஷமடையாதவன் செய்யவேண்டும். **து** - ஒரு விசேஷம் உளது; **ய: மானவ:** - மோக்ஷத்தை அடைந்த யார்; **ஆத்மரதி: ஏவ** - பகவானால் வ்யக்தமான ஸ்வரூப ஆனந்தத்தையுடையவனாகியே; **ஆத்மத்ருப்த: ச** - பகவானால் பூர்ணமான பிரயோஜனத்தையுடையவனாயும்; **ஆத்மனி ஏவ ஸந்துஷ்ட: ச** - பகவானிடமே பிரியமுள்ளவனாயும் இருக் கிறானோ; **தஸ்ய து கார்யம் ந வித்யதே** - அவன் செய்யத் தகுந்த கர்மா கிடையாது

**குறிப்பு: க்ருஷ்ணோ முக்தை: இஜ்யதே வீதமோஹை:-** முக்தர்களும் யாகங்களினால் பகவானைப் பூஜிக்கிறார்கள்; என்றபடி மோக்ஷத்திலும் கர்மா உண்டு. ஆனால், அது வேத விதிகளுக்குக் கட்டுப்பட்டுச் செய்வதல்ல. ஸ்வரூப பூதமானது. செய்தால் பலனுமில்லை. செய்யாவிட்டால் தோஷமுமில்லை.

**அர்ஜுனன்:-** ஸமாதியிலிருப்பவன், கர்மாவைச் செய்ய வேண்டிய காலத்தில் தன்னை எழுப்பும்படி சொல்லிவிட்டு, யோக சாஸ்திரத்தில் கூறிய உபாயங்களால் எழுப்பியவுடன், கர்மாவை ஏன் செய்யக்கூடாது? என்றால், பதிலளிக்கிறார்:

18. नैव तस्य कृतेनार्थः नाकृतेनेह कश्चन ।
न चास्य सर्वभूतेषु कश्चिदर्थ व्यपाश्रयः ॥

நைவ தஸ்ய க்ருதேனார்த்த[2]:, நாக்ருதேனேஹ கஸ்சன |
ந சாஸ்ய ஸர்வ பூ[4]தேஷு, கஸ்சித் அர்த்த[2] வ்யபாஶ்ரய: || 18

**தஸ்ய** - *அந்த ஸமாதி நிலையிலுள்ளவனுக்கு;* **இஹ** - *இவ்வுலகில்;* **க்ருதேன** - *(யாகம் முதலிய) கர்மாக்களால்;* **கஸ்சன** - *யாதொரு;* **அர்த்த:** - *பிரயோஜனமும்;* **நைவ** - *இல்லவேயில்லை;* **அக்ருதேன** - *நித்யகர்மாவான ஸந்தியா வந்தனம் முதலியவற்றைச் செய்யாதிருப்பதால்;* **கஸ்சன** - *யாதொரு (தோஷ: - குற்றமும்)* **ந** - *இல்லை.* **ச** - *மேலும்;* **அஸ்ய** - *இந்த நிலையிலுள்ளவனுக்கு;* **ஸர்வபூதேஷு** - *(குருகள், பெரியோர்கள் முதலிய) அனைவரிடமும்;* **கஸ்சித்** - *யாதொரு;* **அர்த்த வ்யபாச்ரய:** - *பார்ப்பது, பேசுவது, பூஜிப்பது முதலியவற்றால் அடையும் பிரயோஜனமும்;* **ந** - *இல்லை. (அவ்விதம் செய்யாமலிருப்பதாலடையும் தோஷமு மில்லை.)*

19. तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।
असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥

தஸ்மாத் அஸக்தஸ் ஸததம், கார்யம் கர்ம ஸமாசர |
அஸக்தோ ஹ்யாசரன் கர்ம, பரமாப்னோதி பூருஷ: || 19

**தஸ்மாத்** - *ஆகையால், (ஸமாதியில் இருப்பவனும், முக்தனும், கர்மாவைச் செய்யவேண்டியதில்லையாதலாலும், உன்போன்றவன் கர்மாவைச் செய்யவேண்டுமாதலாலும்);* **அஸக்த:** - *கர்ம பலனில் ஆசையில்லாதவனாய்;* **கார்யம்** - *அவசியம் செய்யத் தகுந்த;* **கர்ம** - *கர்மாவை;* **ஸததம்** - *எப்பொழுதும்;* **ஸமாசர** - *நன்றாக (பகவத் பூஜை என்று) செய்வாயாக;* **ஹி** - *ஏனெனில்;* **புருஷ:** - *ஒரு மனிதன்;* **அஸக்த:** - *பலனில் பற்றற்றவனாய், (அ என்ற விஷ்ணுவிடம் பற்றுள்ளவனாய்)* **கர்ம** - *கர்மாவை;* **ஆசரன்** *(ஏவ)* - *நன்றாகச் செய்துகொண்டே (அபரோக்ஷ ஞானத்தின் மூலம்)* **பரம்** - *பரமாத்மாவை;* **ஆப்னோதி** - *அடைகிறான்.*

**அபரோக்ஷஞானத்தினாலேயே மோக்ஷம் கிடைப்ப தாயினும், மோக்ஷத்தால் ஆனந்தம் பொங்குவதற்காக கர்மாவைச் செய்துகொண்டே வரவேண்டும்; என்பதற்கு ஞானிகளின் அனுஷ்டானத்தை எடுத்துக் காட்டுகிறார்:**

20. कर्मणैव हि संसिद्धिं आस्थिताः जनकादयः ।
लोकसंग्रहमेवापि संपश्यन्कर्तुमर्हसि ॥

கர்மணைவ ஹி ஸம்ஸித்தி[4]ம், ஆஸ்தி[2]தா: ஜநகாத[3]ய: |
லோக ஸங்க்[3]ரஹமேவாபி ஸம்பஶ்யன் கர்த்து மர்ஹஸி || 20

**ஜநக ஆதய:** – *(ராமாயணம்)* ஜனகமகாராஜன், **ப்ரியவிரதன்** – *(பாகவதம் 5-ம் ஸ்கந்தம்)* முதலிய ஞானிகள்; **கர்மணா ஏவ** – *(கர்மஸஹிதா ஏவ)* – கர்மாவைச் செய்து கொண்டே; **ஸம்ஸித்திம்** – பூர்ணமான மோக்ஷத்தை (ஆனந்தம் பொங்குவதை); **ஆஸ்திதா: ஹி** – அடைந்துள்ளனர் என்பது பிரசித்தம். அல்லது **கர்மணா** – கர்மா என்ற ஸாதனத்தினால், ஞானத்தின்மூலம் மோக்ஷத்தை அடைந் துள்ளனர். அல்லது, **கர்மணா** – கர்மானுஷ்டானத்தால்; **ஸம்ஸித்தம்** – அபரோக்ஷஞானத்தை (கர்மணா ஜ்ஞான மாதனோதி ஞானேன அம்ருதீபவதி) அடைந்துள்ளனர்; **ஏவ** – கர்மாவைச் செய்வதில் மேற்கூறிய வேறு காரணம் இருக் கட்டும்; **அபி** – மேலும்; **லோகஸங்க்ரஹம்** – பாமர மக்களைக் கர்மானுஷ் டானத்தில் தூண்டுவதை; **ஸம்பஶ்யன்** – நன்கு அறிந்தவனாய்; **கர்த்தும்** – (கர்மாவைச்) செய்வதற்கு; **அர்ஹஸி** – தகுந்த வனாயிருக்கிறாய்.

**குறிப்பு:** (1) பாமர மக்களைக் கர்மாவைச் செய்யும்படித் தூண்டுவதால், பகவானின் அருள் ஏற்பட்டு, அதன்மூலம் மோக்ஷத்தை அடையலாம். (2) கர்மா ஸாக்ஷாத்தாக மோக்ஷத்திற்குச் ஸாதனமாகாது. மனச்சுத்தி, அபரோக்ஷ ஞானம் முதலியவற்றின் மூலமாகத்தான் மோக்ஷஸாதன மாகும்.

**அர்ஜுனன்:–** என் கர்மானுஷ்டானம் பாமர மக்களை கர்மாக்களைச் செய்யும்படி எவ்வாறு தூண்டும்?

21. यद्यत् आचरति श्रेष्ठः तत्तदेव इतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥

யத்யத் ஆசரதி ச்ரேஷ்ட:, தத்ததே[3]வ இதரோ ஜன: |
ஸ யத் ப்ரமாணம் குருதே, லோகஸ்தத[3]னுவர்த்ததே || 21

**ச்ரேஷ்ட:** – சிறந்த தலைவன்; **யத்யத்** – எந்தெந்தக் கர்மாவை (லௌகிகமோ, வைதிகமோ); **ஆசரதி** – செய்கிறானோ; **தத்தத் ஏவ** – அந்தந்தக் கர்மாவையே; **இதர: ஜன:** – மற்ற பாமர மக்கள் (செய்கிறார்கள்). **ஸ:** – அந்த மகாத்மா; **யத்** – (உலகத்தார் அறியாத) எந்த வாக்கியம் முதலியவற்றை; **ப்ரமாணம்** – ஆதாரமாக; **குருதே** – எடுத்துக்காட்டுகிறானோ, அல்லது யத் ப்ரமாணம் – ஒரே பதம் – எந்த ஆதாரத்தைக் கொண்டு; **குருதே** – கார்யத்தைச்

செய்கிறானோ; **தத்** - அதை; **லோக:** - உலக மக்கள்; **அநுவர்த்ததே** - பின்பற்றிச் செய்கிறார்கள்.

**குறிப்பு:** (1) அர்ஜுனா! நீ ஒரு சிரேஷ்டன்; உன் கர்மானுஷ்டானத்தைப் பின்பற்றி அனைவரும் செய்வார்கள். ஆகவே நீ கர்மாவைச் செய்.

(2) **ப்ரமாணம் குருதே** - பிரமாணமாகச் செய்கிறான் என்ற அர்த்தம் பொருந்தாது. ஏனெனில் பிரமாணமாக இருப்பதை இவன் பிரமாணமாகச் செய்ய வேண்டியதில்லை. பிரமாணமல்லாததை இவன் பிரமாணமாகச் செய்ய முடியாது. தன் செய்கைக்குப் பிரமாணமாகவுள்ள ஆதாரத்தை உலகத்தார் அறியாதிருந்தால், இவன் அதை எடுத்துக்காட்டுகிறான், என்று அர்த்தம் செய்ய வேண்டும்.

பூர்ணகாமனான நானே உலக க்ஷேமத்திற்காக கர்மாக்களைச் செய்து வருகையில், மோக்ஷானந்தம் என்ற பிரயோஜனத்தை விரும்புகிற ஞானி கர்மாக்களைச் செய்யவேண்டும்; என்று கூறவும் வேண்டுமா? என்கிறார் (3 சுலோகங்களில்).

22. न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन ।
नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥

ந மே பார்த்த[2]ாஸ்தி கர்த்தவ்யம், த்ரிஷு லோகேஷு கிஞ்சன |
நானவாப்த மவாப்தவ்யம், வர்த்தே ஏவ ச கர்மணி || 22

**பார்த்த** - குந்தீபுத்திரனே!; **மே** - எனக்கு; **கர்த்தவ்யம்** - செய்யவேண்டியது; **கிஞ்சன** - எதுவும்; **ந அஸ்தி** - இல்லை; ஏனெனில், **த்ரிஷு லோகேஷு** - மூவுலகங்களிலும்; **அநவாப்தம்** - இதற்குமுன் அடையப்படாததும்; **அவாப்தவ்யம் ச** - இனி அடையவேண்டியது; **ந** - இல்லை. (அப்படியிருந்தும்) **கர்மணி** - கர்மாவைச் செய்வதில்; **வர்த்தே ஏவ** - இருந்தே வருகிறேன். (கர்மாக்களைச் செய்து கொண்டே இருக்கிறேன்).

23. यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥

யதி ஹ்யஹம் ந வர்த்தேயம், ஜாது கர்மண்யதந்த்[3]ரித: |
மம வர்த்மாநு வர்த்தந்தே, மனுஷ்யா: பார்த்த ஸர்வஶ: || 23

**பார்த்த** - குந்தீபுத்திரனே!; **அஹம்** - நான்; **ஜாது** - ஒருசமயம்; **அதந்த்ரித:** - (வேறு விஷயங்களில்) சுறுசுறுப்பாக இருந்துகொண்டு; **கர்மணி ந வர்த்தேயம் யதி** - நான் கர்மாவைச் செய்யாதிருக்கும்பக்ஷத்தில்; அல்லது **கர்மணி** - கர்மாக்களைச் செய்வதில்; **அதந்த்ரித:** - சுறுசுறுப்பாக; **ந**

**வர்த்தேயம் யதி** - இல்லாதிருக்கும்பக்ஷத்தில், அதாவது சோம்பலால் கர்மாவைச் செய்யாதிருந்தால்; **ஸர்வஶ:** - எல்லா; **மனுஷ்யா:** - மனிதர்களும்; **மம வர்த்ம** - என்னுடைய வழியை அதாவது கர்மா செய்யாதிருப்பதை; **அநுவர்த்தந்தே** - அநுஸரிப்பார்கள். **ஹி** - பிரசித்தம்.

24. उत्सीदेयुः इमे लोकाः न कुर्यां कर्म चेतहम् ।
सङ्करस्य च कर्ता स्यां उपहन्यां इमाः प्रजाः ॥

உத்ஸீதே[3]யு: இமே லோகா:, ந குர்யாம் கர்ம சேதஹம் |
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம், உபஹன்யாம் இமா:ப்ரஜா: || 24

**அஹம்** - நான்; **கர்ம** - கர்மாவை; **ந குர்யாம் சேத்** - செய்யாதிருந்தால்; **இமே லோகா:** - இந்த ஜனங்கள்; **உத்ஸீ தேயு:** - (கர்மாவைச் செய்யாது) நரகத்தை அடைவார்கள். **ச** - மேலும்; (அவரவர்களின் கர்மலோபத்தினால் பிராம்மணர் முதலிய ஜாதிபேதங்கள் இரா. அதனால்) **ஸங்கரஸ்ய கர்த்தா ஸ்யாம்** - ஜாதிக்கலப்பைச் செய்யாதவன் ஆவேன். **இமா: ப்ரஜா:** - இந்த ஜனங்களை; **உபஹன்யாம்** - (நானே) கொன்றவ னாவேன்.

**அர்ஜுனன்:-** ஞானியும் அஜ்ஞானிபோல கர்மாவைச் செய்யவேண்டுமென்றால், இருவர்களின் கர்மாவுக்கும் பேதம் இராதே !

25. सक्ताः कर्मणि अविद्वांसः यथा कुर्वन्ति भारत ।
कुर्यात् विद्वान् तथाऽसक्तः चिकीर्षुः लोकसंग्रहम् ॥

ஸக்தா: கர்மணி அவித்[3]வாம்ஸ:, யத[2]ா குர்வந்தி ப[4]ாரத |
குர்யாத் வித்வான் தத[2]ா(அ)ஸக்த:, சிகீர்ஷு: லோக ஸங்க்[3]ரஹம் || 25

**பாரத** - பரத வம்சத்திற் பிறந்தவனே! **அவித்வாம்ஸ:** - அஜ்ஞானிகள்; **யதா** - எவ்வாறு; **கர்மணி** - கர்மாவில், **ஸக்தா:** - பற்றுள்ளவர்களாய் (பலனில் ஆசையுள்ளவர்களாய்) **குர்வந்தி** - செய்கிறார்களோ; **ததா** - அவ்வாறு; **வித்வான்** - ஞானியும்; **அஸக்த:** - பலனில் ஆசையில்லாதவனாய்; **லோக ஸங்க்ரஹம்** - உலக மக்களைக் கர்மாவில் தூண்டுவதை; **சிகீர்ஷு:** - செய்ய விரும்பி; **குர்யாத்** - செய்யவேண்டும்.

**குறிப்பு:** இருவர்களும் கர்மாவைச் செய்தபோதிலும், ஞானிக்குப் பலனில் ஆசையில்லை, அஜ்ஞானிக்குப் பலனில் ஆசையுண்டு; என்ற பேதம் உண்டு. வயது முதிர்ந்தவர்கள் தம் பேரக்குழந்தைகளுடன் கூடி விளையாடுவதற்கு ஒப்பிடலாம்.

---

அஜ்ஞானிகளைக் கர்மாவில் ஈடுபடும்படிச் செய்ய, ஞானி கர்மா செய்ய வேண்டும் என்கிறார்.

26. न बुद्धिभेदं जनयेत् अज्ञानाम् कर्मसंगिनाम् ।
जोषयेत् सर्वकर्माणि विद्वान् युक्तः समाचरन् ॥

ந புத்தி[4]பே[4]தம் ஜனயேத், அஜ்ஞானாம் கர்மஸங்கி[3]னாம் |
ஜோஷயேத் ஸர்வ கர்மாணி, வித்வான் யுக்தஸ் ஸமாசரன் || 26

**வித்வான்** - *ஞானி;* **கர்மஸங்கினாம்** - *கர்மானுஷ்டானத்தில் பற்றுள்ள;* **அஜ்ஞானம்** - *பகவத் ஸ்வரூபத்தை அறியாத யோக்யர்களின் விஷயத்தில்;* **புத்திபேதம்** - *மாறான புத்தியை;* **ந ஜனயேத்** - *உண்டுபண்ணலாகாது (கர்மானுஷ்டானத்தை விட்டுவிடும்படிச் செய்யலாகாது).* **யுக்த:** - *பகவானிடம் மனதை நிலைநிறுத்தி;* **ஸர்வகர்மாணி** - *எல்லாக் கர்மாக்களையும்;* **ஸம் ஆசரன்** - *பகவானின் பூஜையாகச் செய்துகொண்டே;* **ஜோஷயேத்** - *அஜ்ஞானிகளுக்குச் சேவை புரியவேண்டும். (சு. 29 பார்க்க.)*

சுலோகம் 25, 26-ல் கூறப்பட்ட ஞானி, அஜ்ஞானி இருவர்களுடைய கர்மாக்களின் பேதத்தை விவரிக்கிறார். (3 சுலோகங்களில்),

27. प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहङ्कारविमूढात्मा कर्ताऽहमिति मन्यते ॥

ப்ரக்ருதே: க்ரியமாணானி, கு[3]ணை: கர்மாணி ஸர்வஶ: |
அஹங்கார விமூட[4]ாத்மா, கர்த்தா (அ) ஹமிதி மன்யதே || 27

**ப்ரக்ருதே: குணை:** - *(1)* **ப்ரக்ருஷ்டா க்ருதி: யஸ்ய** - *சிருஷ்டி முதலிய சிறந்த கர்மாக்களைச் செய்யும் ஸ்ரீ ஹரியின் விருப்பம், ஞானம் முதலிய குணங்களினாலும்; (2) ஸாத்விகர், ராஜஸர், தாமஸர் என்ற மூன்றுவித ஜீவராசிகளின் ஸ்வபாவத்திற்கு அனுகுணமான தத்வ ஞானம், கலப்பான ஞானம், விபரீத ஞானம் இவைகளாலும்; (3) ஜடப்ரகிருதியின் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களாலும்; (4) ஜடப்ரகிருதியின் மாறுபாடுகளான தேகம், இந்திரியங்கள், மனது என்ற கருவிகளாலும்;* **க்ரியமாணானி** - *செய்யப்படும்;* **ஸர்வஶ: கர்மாணி** - *புண்யகர்மா, கலப்பான கர்மா, பாப கர்மா என்ற எல்லாக் கர்மாக்களையும்;* **அஹங்கார விமூட ஆத்மா** - *நான் என்ற விபரீத ஞானத்தால், அறிவில்லாத மனத்தினனாய்;* **கர்த்தா** - *ஸ்வதந்திரமாகச் செய்பவன்;* **அஹம்** - *நானே;* **இதி** - *என்று,* **மன்யதே** - *நினைக்கிறேன்.*

குறிப்பு: புமான் தோக்தா ச கௌர் தோக்த்ரீ, ஸ்தனோ தோக்தே திவத் க்ரமாத்|

இடையன் பாலைக் கறக்கிறான், பஶு பாலைக் கறக்கிறது, பஶுவின் ஸ்தனம் பாலைக் கறக்கிறது என்று கூறுகிறோம். இடையன் - ஸ்வதந்திர கர்த்தா. பஶு - அவனுக்கு அதீனமான கர்த்தா. ஸ்தனம் - ஜடமான விகாரகர்த்தா. அதுபோல எல்லாக் கர்மாக்களிலும், பகவான் - ஸ்வதந்திர கர்த்தா. ஜீவன் - அவனுக்கு அதீனமான கர்த்தா. சரீரம் முதலியன விகார கர்த்தா என்று அறிக.

அஜ்ஞானி அவ்வாறு செய்யின், ஞானி செய்யும் விதம் யாது? என்பதைக் கூறுகிறார்.

28. तत्ववित्तु महाबाहो गुणकर्म विभागयोः ।
गुणाः गुणेषु वर्तन्ते इति मत्वा न सज्जते ॥

தத்வவித் து மஹாப[3]ாஹோ, கு[3]ண கர்ம விப[4]ாகயோ: |
கு[3]ணா: கு[3]ணேஷு வர்த்தந்தே,இதி மத்வா ந ஸஜ்ஜதே || 28

**மஹாபாஹோ** – *பெரிய கைகளையுடையவனே! (புஜபல முடையவனே!),* **குணகர்ம விபாகயோ:** – *குணவிபாக – (1) பகவானின் விருப்பம் முதலிய குணங்கள்; (2) மூன்று வித ஜீவர்களின் ஞானம் முதலியன, (3) ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற ஜடப்ரகிருதியின் குணங்கள்; (4) பிரகிருதியின் மாறு பாடுகளான தேகம், இந்திரியங்கள், மனது ஆகிய கருவிகள். – இவற்றின் பிரிவுகளையும்;* **கர்மவிபாகயோ:** – *(1) ஸ்வதந் திரனான பகவான் செய்யும் கர்மா (2) அவனுக்கு அதீனமான ஜீவர்கள் செய்யும் கர்மா (3) பிரகிருதியின் மாறுபாடுகளான தேகம், இந்திரியங்கள், மனது இவற்றால் செய்யும் கர்மா – இவற்றின் பிரிவுகளையும்;* **தத்வவித்து** – *உண்மையில் அறிந்த ஞானியோ; (1)* **குணா:** – *பகவானுடைய விருப்பம் முதலிய குணங்கள்;* **குணேஷு** – *ஜீவர்களின் ஸ்வபாவம், கர்மா முதலியவைகளில்* **வர்த்தந்தே** – *(தூண்டுபவைகளாக) இருக் கின்றன; (2)* **குணா:** – *இந்திரியம் முதலியன;* **குணேஷு** – *சப்தம், ஸ்பர்சம், ரூபம்; ரஸம், கந்தம் ஆகிய விஷயங்களில்;* **வர்த்தந்தே** – *(பகவானின் விருப்பத்தை அனுசரித்து); உள்ளன, (ஜீவனுக்கு எதிலும் ஸ்வாதந்தர்யமில்லை);* **இதி** – *என்று;* **மத்வா** – *அறிந்து;* **ந ஸஜ்ஜதே** – *ஸம்ஸாரத்தில் மூழ்குவதில்லை (முக்தியைப் பெறுகிறான்).*

**அர்ஜுனன்:–** தாமே ஸ்வதந்திரகர்த்தா என்று நினைவுள்ள அஜ்ஞானிகளுக்கு, ஞானி உண்மையைப் போதிக்க வேண்டுமா?

29. प्रकृतेर्गुणसंमूढाः सज्जन्ते गुणकर्मसु ।
तान् अकृत्स्नविदो मन्दान् कृत्स्नवित् न विचालयेत् ॥

ப்ரக்ருதேர் கு3ணஸம்மூட4ா:, ஸஜ்ஜந்தே கு3ணகர்மஸு |
தான் அக்ருத்ஸ்னவிதே3ா மந்த3ான், க்ருத்ஸ்னவித் ந விசாலயேத் || 29

**யே** - எவர்கள்; **ப்ரக்ருதே: குணஸம்மூடா:** - *(1) ஈசுவரனின் விருப்பம் முதலிய குணங்களினாலும் (கர்த்தா) (2) ஜடப்ரகிருதியின் ஸத்வம் முதலிய குணங்களினாலும் (கருவி) (3) அதன் மாறுபாடான தேகம், இந்திரியங்கள் முதலியவைகளில்;* **ஸம்மூட:** - *இவை என்னுடைய சொந்தக் கருவிகள் என்ற அபிமானமுடையவர்களாய்;* **குணகர்மஸு** - *ஶப்தம், ஸ்பர்சம் முதலிய விஷயங்களில், தத்தம் செய்கை களிலும்;* **ஸஜ்ஜந்தே** - *ஸ்வதந்திரர்கள் என்ற விபரீத ஞானத்தை அடைவார்களோ;* **தான்** - *அந்த;* **அக்ருத்ஸ்னவித:** - *குண கர்மங்களின் பிரிவுகளைப் பூர்ணமாக அறியாத;* **மந்தான்** - *அயோக்யர்களை;* **க்ருத்ஸ்னவித்** - *பூர்ணமாக அறிந்த ஞானி;* **ந விசாலயேத்** - *நல்வழியில் திருப்பக்கூடாது.*

குறிப்பு: சுலோகம் 26-ல், யோக்யர்களின் புத்தியைத் திருப்பக் கூடாது என்றும், இங்கு அயோக்யர்களை திருப்பக்கூடாது என்றும் கூறப்படுகிறது.

ஞானி அபிமானமில்லாமல் கர்மாவைச் செய்கிறான், என்று விளக்கி, நீயும் ஞானியானதால் அம்மாதிரி கர்மாவைச் செய்ய வேண்டும் என்கிறார்.

30. मयि सर्वाणि कर्माणि सन्यस्य अध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥

மயி ஸர்வாணி கர்மாணி, ஸம்ந்யஸ்ய அத்4யாத்ம சேதஸா |
நிராஶீர் நிர்மமோ பூ4த்வா, யுத்4யஸ்வ விக3தஜ்வர: || 30

**அத்யாத்மசேதஸா** - *(1) பரமாத்மாவிடமுள்ள மனதினால்; (2) எல்லோரைக்காட்டிலும் மேலான என்னிட முள்ள மனதினால்;* **நிராஶீ:** - ஞானம், பக்தி முதலியவற்றைத் தவிர மற்றவைகளில் ஆசையில்லாதவனாயும்; **நிர்மம:** - நானே ஸ்வதந்திரமாகச் செய்கிறேன் என்ற அபிமான மில்லாதவனாயும்; **பூத்வா** - ஆகி; **ஸர்வாணி கர்மாணி** - எல்லாக் காரியங்களையும்; **மயி** - என்னிடம்; **ஸம் ந்யஸ்ய** - (ஸ்ரீ கிருஷ்ணரே என்னிடமிருந்துகொண்டு, எல்லாவற்றையும்

செய்கிறார் என்று அறிந்து, அவை ஸ்ரீகிருஷ்ணரின் பூஜை என்று) அர்ப்பணம் செய்து; **விகதஜ்வர:** - துக்கத்தை விட்டு; **யுத்யஸ்வ** - போர்புரிவாயாக. (4-34; 5-10 பார்க்க).

**குறிப்பு:** (1) ஆத்மானம் அதிக்ருத்ய ஸ்திதம் அத்யாத்மம், (2) அதிகஸ் சாஸௌ ஆத்மா ச அத்யாத்மா; தஸ்மின் - என்றபடி, இரு அர்த்தங்களையும் பின்வரும் சுலோகத்தையும் கவனிக்க.

*நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா, தத்பூஜா கர்மசாகிலம் |*
*ததாபி மத்க்ருதா பூஜா, த்வத் ப்ரஸாதேன நான்யதா ||*

தாம் சொன்னதைச் செய்தால் என்ன பலன்; செய்யாவிட்டால் என்ன பலன்; என்பதை இரு சுலோகங்களில் கூறுகிறார்.

31. ये मे मतमिदं नित्यं अनुतिष्ठन्ति मानवाः ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥

யே மே மதமித[3]ம் நித்யம் அநுதிஷ்ட[2]ந்தி மானவா: |
ஶ்ரத்த[4]ாவந்தோ (அ) னஸூயந்தோ, முச்யந்தே தேऽபி கர்மபி[4]: || 31

**யே மானவா:** - எந்த மனிதர்கள்; **ச்ரத்தாவந்த:** - (என் வார்த்தையில்) ஆஸ்திக்ய புத்தியுள்ளவர்களாய், **அனஸூ யந்த:** - (கஷ்டமான காரியத்தில் ஏவுகிறார் என்று என்னைக்) குறைகூறாமல்; **இதம்** - இந்த (முன் சுலோகத்தில் கூறப் பட்டபடி கர்மாவைச் செய்யவேண்டும் என்ற); **மே மதம்** - என் அபிப்ராயத்தை; **நித்யம்** - எப்பொழுதும்; **அநுதிஷ்டந்தி** - பின்பற்றுகிறார்களோ; **தேஅபி** - அவர்களும்கூட; **கர்மபி:** - நிஷ்காம கர்மாக்களினால் (ஞானத்தின் மூலம்); **முச்யந்தே** - மோக்ஷமடைகிறார்கள். ஞானிகள் மோக்ஷமடைகிறார்கள் எனக் கூறவும் வேண்டுமா?

32. ये तु एतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।
सर्वज्ञान विमूढांस्तान् विद्धि नष्टान् अचेतसः ॥

யே து ஏதத் அப்[4]யஸூயந்தோ, நாநுதிஷ்ட[2]ந்தி மே மதம் |
ஸர்வஜ்ஞானவிமூட[4]ாம்ஸ்தான், வித்தி[4] நஷ்டான் அசேதஸ: || 32

**து** - ஆனால்; **யே** - எவர்கள்; **ஏதத்** - இந்த; **மே மதம்** - என்னுடைய கருத்தை; **அபி அஸூயந்த:** - (கஷ்டமான காரியம் என்று) நன்கு இகழ்ந்து; **ந அநுதிஷ்டந்தி** - பின்பற்றுவ தில்லையோ; **தான்** - அவர்களை; **அசேதஸ:** - பகுத்தறிவு இல்லாதவர்கள் என்றும்; அதனால், **ஸர்வ ஜ்ஞானவிமூடான்** - அறியவேண்டிய எல்லாவற்றிலும் அதிக விபரீத ஞான

முடையவர்கள் என்றும்; அதனால், **நஷ்டான்** - நரகம் முதலிய அனர்த்தங்களை அடைபவர்கள் என்றும்; **வித்தி** - அறிவாயாக.

**அர்ஜுனன்:–** அப்படியாயின் ஜனங்கள் ஏன் உமது மதத்தின்படி நடப்பதில்லை?

33. सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति ॥

ஸத்ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞானவானபி |
ப்ரக்ருதிம் யாந்தி பூ[4]தானி, நிக்[3]ரஹ: கிம் கரிஷ்யதி || 33

**ஜ்ஞானவான் அபி** - *(என் மதத்தின்படி நடந்தால் மோக்ஷம்; இல்லையேல் நரகம் என்று) அறிந்தவனும்கூட, அறியாதவனைப் பற்றிக் கேட்பானேன்!)* **ஸ்வஸ்யா:** - தன்னுடைய; **ப்ரக்ருதே:** - பூர்வ வாஸனையின் கார்யமான ராகம், த்வேஷம், இவைகளுக்கு; **ஸத்ருஶம்** - ஏற்றபடி; **சேஷ்டதே** - காரியங்களைச் செய்கிறான்; **பூதானி** - ஜீவர்கள்; **ப்ரக்ருதிம்** - தத்தம் ஸ்வபாவத்தையே; **யாந்தி** - அடை கின்றனர்; **நிக்ரஹ:** - மனத்தை அடக்குதல்; **கிம் கரிஷ்யதி** - என்ன செய்யப் போகிறது? *(ஒன்றுமில்லை).*

**குறிப்பு:** ஸுலோகம் 29-ல் அயோக்யர்களுக்கு உபதேசம் செய்யலாகாது என்றதற்குக் காரணம் இங்கு கூறப்படுகிறது. நீரின் ஸ்வபாவம் குளிர்ச்சியாகும். அதைக் காய்ச்சினால் சூடாகிறது. ஆயினும் மீண்டும் குளிர்ந்து விடுகிறது, அதன் ஸ்வபாவத்தை அடியோடு மாற்ற முடியாது. பகவானால் முடியும். ஆனால் அவரும் ஸ்வபாவத்தை யொட்டியே நியமனம் செய்பவர். ஆதலால் அதை மாற்றுவதில்லை.

*ஸத்ய ஸங்கல்பதோ விஷ்ணு: நான்யதா து கரிஷ்யதி |*

**அர்ஜுனன்:–** அனைவரும் தத்தம் ஸ்வபாவத்தை யொட்டியே செய்கின்றனர்; மன அடக்கம் பிரயோஜனமில்லை என்றால், ஸு. 30-ல் கர்மாவைச் செய்ய வேண்டும் என்ற உபதேசமும், ஸு. 31-ல் கூறப்பட்ட அதன் பலனும் வீணே!

34. इन्द्रियस्य इन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।
तयोर्नवशमागच्छेत् तौ ह्यस्य परिपन्थिनौ ॥

இந்த்ரியஸ்ய இந்த்ரியஸ்யார்த்தே[2], ராக[3]த்வேஷௌ வ்யவஸ்தி[2]தௌ |
தயோர் ந வஶமாகச்சேத், தௌ ஹ்யஸ்ய பரிபந்தி[2]னௌ || 34

**இந்த்ரியஸ்ய இந்த்ரியஸ்ய** - *(கண், காது முதலிய)* ஒவ்வொரு இந்திரியத்தின்; **அர்த்தே** - *(ரூபம், சப்தம் முதலிய)*

விஷயங்களில்; **ராகத்வேஷௌ** -அநுகூலமான பொருளில் விருப்பமும், பிரதிகூலமான பொருளில் வெறுப்பும் (மற்றும் லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற நான்கும் கூட); **வ்யவஸ்திதௌ** - (தூண்டுபவைகளாக), கட்டாயம் உள்ளன. (அவைகளின்படியே ஜீவர்கள் செயல்படுகின்றனர், ஆயினும்); **தயோ:** - அவ்விரண்டின் (மொத்தம் ஆறின்) **வஶம் ந ஆகச்சேத்** - வசப்படக்கூடாது; **ஹி** - ஏனெனில்; **தௌ** - அவ்விரண்டும் (ஆறும்) **அஸ்ய** - (மோக்ஷத்தை விரும்பும்) **இவனுக்கு; பரிபந்தினௌ** - விரோதிகள் (பாபத்துக்குக் காரணமானவை.)

**குறிப்பு:** தாமஸ ஜீவர்களுக்கு மன அடக்கத்தினால் பிரயோஜன மில்லை. ஸாத்விகர்களுக்கு அதிக முயற்சியால் பிரயோஜனமுண்டு.

*ஸம்ஸ்கார: பலவானேஷ:, ப்ரஹ்மாத்யா: அபி தத்வஶா: |*
*ததா அபி ஸோ அன்யதா கர்த்தும், சக்யதே அதி ப்ரயத்னத: ||*

3-1ல் அர்ஜுனன் கேட்ட இரு கேள்விகளில், முதல் கேள்விக்கு சு. 34 முடிய பதிலளிக்கப்பட்டது. 2-ம் கேள்விக்கு இப்போது பதில் அளிக்கிறார்.

35. श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात् स्वनुष्ठितात् ।
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥

ஶ்ரேயான் ஸ்வத[4]ர்மோ விகு[3]ண:, பரத[4]ர்மாத் ஸ்வநுஷ்டி[2]தாத் |
ஸ்வத[4]ர்மே நித[4]னம் ஶ்ரேய:, பரத[4]ர்மோ ப[4]யாவஹ: || 35

**ஸ்வதர்ம:** - தன் வர்ணத்துக்கும் ஆசிரமத்துக்கும் தகுந்த கர்மம்; **விகுண:** - அங்கஹீனமாயினும்; **ஸு அநுஷ்டிதாத்** - எல்லா அங்கங்களுடன் நன்கு செய்யப்பட்ட; **பரதர்மாத்** - பிற வர்ணாசிரமத்துக்குரிய கர்மாவைக் காட்டிலும்; **ஶ்ரேயான்** - மேலானது (மோக்ஷ ஸாதனமாகும்). ஏனெனில், **ஸ்வதர்மே** - உன் கர்மாவான யுத்தம் முதலியவற்றில்; **நிதனம்** - மரணம் கூட; **ஶ்ரேய:** - மேலானது; **பரதர்ம:** - பிற வர்ணாசிரம கர்மாவோ, (சாஸ்திரங்களில் தடுக்கப்பட்டிருப்பதால்) **பயாவஹ:** - அனர்த்தங்களைத் தரும். (ஆகவே நீ கோரமான யுத்தம் என்ற கர்மாவில் ஏவப்படுகிறாய்.)

अर्जुनउवाच — **அர்ஜுன: உவாச**

சுலோகம் 34-ல் ஆறு ஶத்ருக்களை அதிக முயற்சியால் ஜயிக்கலாம் என்றதால், அந்த ஆறில் எது பலமுள்ளது? அதைப் பிரேரிப்பவன் யார்? சு. 27-ல் பகவான் ஸர்வ பிரேரகன் என்பதை அவன் அறிவான். தான் தேவனானதால் (இந்திரனின் அவதாரம்) தத்வாபிமானி தேவர்கள் பிரேரகர்கள் என்பதையும் அறிவான். ஆகவே இவர்களுக்கு அடுத்தபடி பிரேரிப்பவர் யார்? என அர்ஜுனன் கேட்கிறான்.

36. अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।
अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥

அத[2] கேன ப்ரயுக்தோ அயம், பாபம் சரதி பூருஷ: |
அநிச்ச[2]ன் அபி வார்ஷ்ணேய, ப[3]லாதி[3]வ நியோஜித: || 36

**அத** - இது வேறு பிரகரணம் எனக் குறிக்கிறது. **வார்ஷ்ணேய** - வ்ருஷ்ணி என்றவரின் வம்சத்தில் உதித்தவரே! **அத** - பகவானுக்கும் தத்வாபிமானி தேவர்களுக்கும் பிறகு; **கேன** - *(காமம் முதலிய ஆறில்)* **யாரால்; ப்ரயுக்த;** - ஏவப்பட்ட; **அயம் பூருஷ:** - இந்த ஜீவன்; **அநிச்சன் அபி** - *(பாபம் செய்ய)* விரும்பாதிருப்பினும் கூட; **பலாத்** - கட்டாயமாக; **நியோஜித: இவ** - ஏவப்பட்டவன் போல; **பாபம் சரதி** - பாபத்தைச் செய்கிறான்?

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார்.

37. काम एषः क्रोध एषः रजोगुण समुद्भवः ।
महाशनो महापाप्मा विद्धयेनमिह वैरिणम् ॥

காம ஏஷ: க்ரோத[4] ஏஷ: ரஜோகு[3]ண ஸமுத்ப[4]வ: |
மஹாஶனோ மஹாபாப்மா வித்[4]த்யேனமிஹ வைரிணம் || 37

**ஏஷ:** - இவன் *(உன்னால் வினவப்பட்ட இந்தப் பாபிகளில் பலவான்);* **காம:** - ஆசையாகும் *(அதைப் பிரேரிப்பவன் அதன் அபிமானியான காலநேமி என்ற அசுரன்).* **ஏஷ:** - இது; **க்ரோத:** - கோபமும் ஆகும் *(2-62ல், காமத்தால் கோபம் உண்டாகிறது என்றதால் காமம் காரணம்;* **கோபம் கார்யம்;** *காரணத்திற்கும் கார்யத்திற்கும் அபேதம் என்ற நியாயம்)* **ரஜோகுண ஸமுத்பவ:** - ஜடபிரகிருதியின் ரஜோகுணத்தினால் உண்டாவது; **மஹா அசன:** - பெரும் உணவை *(சிற்றின்பத்தை)* உண்பது. *(அது விரும்பியதைத் தந்து ஜயிக்க முடியாது).* **மஹாபாப்மா** - *(பிரம்மஹத்தி முதலிய)* பெரும் பாவச் செயல்களைச் செய்விப்பது; **ஏனம்** - இந்தக் காமத்தை; **இஹ** - இந்த இம்மை மறுமை சிரேயஸ்களில்; **வைரிணம்** - ஶத்ருவாக; **வித்தி** - அறிவாயாக.

குறிப்பு: (1) காலநேமி ஆயிரம் தலைகளையும், இரண்டாயிரம் கைகளையும் உடையவன். தேவாஸுர யுத்தத்தில் பகவானால் கொல்லப்பட்டவன். அவன் கம்ஸனாகப் பிறந்தான். (2) கீசகன், துச்சாஸனன், துர்யோதனன், மணிமான், பகாஸுரன், ஜராஸந்தன் - இந்த

அறுவரையும் முறையே, காமம் முதலிய ஆறுக்காகக் கொன்ற பீமஸேனனை ஸ்மரிப்பதால் அரிஷட்வர்க்க ஜயம் உண்டாகும்.

காமீ யேன ஹி கீசகோ விநிஹத:, க்ரோதீ ச துச்சாஸன:, லுப்த: ஸதப்த ஸுயோதனஸ்ச மணிமான், முக்தோ மதாந்தோ பக: | க்ருஷ்ணேர்ஷ்யாபி ரதஸ்ச மாகதபதி:, ஷட்வைரி வர்க்காத் ஸதா, ஸ த்வம் பீம, குணாபிராம தயயா, தாஸம் ஹி மாம் உத்தர ||

காமம் எவ்வாறு பலமுள்ளது என்பதை இரு சுலோகங்களில் உதாரணத்துடன் விளக்குகிறார்.

38. धूमेन आव्रियते वन्हिः यथाऽऽदर्शो मलेन च।
यथोल्बेन आवृतो गर्भः तथा तेनेदमावृतम् ॥

தூ⁴மேன ஆவ்ரியதே வன்ஹி:, யத²ா ஆத³ர்ஸோ மலேன ச |
யதே²ால்பே³ன ஆவ்ருதோ க³ர்ப்ப⁴:, தத²ா தேனேத³மாவ்ருதம் || 38

**வன்ஹி:** – *நெருப்பு;* **தூமேன** – *புகையினால்;* **யதா** – *எவ்வாறு;* **ஆவ்ரியதே** – *மூடப்படுகிறதோ;* **ததா** – *அவ்வாறு; (1)* **இதம்** – *இந்த ஸாத்வீக ஜீவர்களின் ஸமூகம்;* **தேன** – *அந்த காமத்தால்;* **ஆவ்ருதம்** – *லேசாக மூடப்படுகிறது.* **ஆதர்ஸ: ச** – *முகம் பார்க்கும் கண்ணாடியும்;* **மலேன** – *தூஸியினால்;* **யதா** – *எவ்வாறு; (மூடப்படுகிறதோ, அவ்வாறு (2)* **இதம்** – *இந்த ராஜஸ ஜீவர்களின் ஸமூகம், (அந்தக் காமத்தால் அதிகம் மூடப்படுகிறது);* **கர்ப்ப:** – *கர்ப்பத்திலுள்ள சிசு;* **உல்பேன** – *கர்ப்பப்பையினால்;* **யதா** – *எவ்வாறு;* **ஆவ்ருத:** – *மூடப் படுகிறதோ; அவ்வாறு, (3)* **இதம்** – *இந்த தாமஸ ஜீவர்களின் ஸமூகம், (அந்தக் காமத்தால் மிகவும் பலமாக மூடப் பட்டுள்ளது).*

**குறிப்பு:** இதம் = (1) அறியப்படவேண்டிய ஈஸ்வரன், (2) அறியும் கருவியான மனது; (3) அறிபவனான ஜீவன் என்றும் முறையே அர்த்தம். அக்னி (பிரகாச ரூபமாயினும்), புகையால் மூடப்பட்டு, மற்றவர்களுக்குப் புலப்படாமல் இருப்பது போல, ஈசுவரன், ஞான ஸ்வரூபியாயினும், ஜீவனிடமுள்ள காமத்தால் மூடப்பட்டு ஜீவனால் காணமுடியாம லிருக்கிறார். கண்ணாடி தூஸியினால் மூடப்பட்டு, நம் முகத்தின் பிரதி பிம்பத்தைக் காட்டமுடியாதிருப்பது போல, ஜீவனின் மனது, காமத்தினால் மூடப்பட்டு, ஈசுவரனையோ தன்னையோ, அறிவிக்க முடிவதில்லை, கர்ப்பப் பையினால் மூடப்பட்ட ஸிசு, எதையும் செய்ய முடியா திருப்பதுபோல, காமத்தினால் மூடப்பட்ட ஜீவன், ஈசுவர ஞான விஷயத்தில், எதையும் செய்ய முடியாமலிருக்கிறான். இவ்வாறு காமம், ஈசுவர ஞானம் உண்டாகாமல் தடுக்கிறது. அடுத்த ஸ்லோகத்தில் ஸாஸ்திரத்தால் உண்டான பரோக்ஷ ஞானத்தையும், அபரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணாதபடி தடுக்கிறது எனப் போகிறார்.

39. आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।
कामरूपेण कौन्तेय दुष्पूरेण अनलेन च ॥

ஆவ்ருதம் ஜ்ஞானமேதேன, ஜ்ஞானினோ நித்யவைரிணா |
காமரூபேண கௌந்தேய, து$^{3}$ஷ்பூரேண அநலேன ச || 39

**கௌந்தேய** - குந்தீ புத்திரனே!, **ஜ்ஞானின:** - (குருபதேசம், சிஷ்யபிரயத்னம் இவற்றுடன் கூடி சாஸ்திரங்களால் உண்டான ஞானத்தையுடையவனின்; **ஜ்ஞானம்** - அறிவு; **நித்ய வைரிணா** - எப்போதும் அபகாரம் செய்வதும்; **துஷ்பூரேண** - சிரமப்பட்டு நிரப்பத்தகுந்ததும்; **அநலேன ச** - அலம் - போதும் என்ற திருப்தியில்லாததும்; **காமரூபேண** - காமம் என்ற பெயரையுடையதுமான; **ஏதேன** - இதனால்; **ஆவ்ருதம்** - மூடப்பட்டுள்ளது. (அது பகவானுடைய அபரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணாமல் தடுக்கிறது.)

அந்தக் காமம் என்ற ஶத்ருவைக் கொல்ல அதன் இருப்பிடத்தைக் கூறுகிறார்.

40. इन्द्रियाणि मनो बुद्धिः अस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येषः ज्ञानमावृत्य देहिनम् ॥

இந்த்$^{3}$ரியாணி மனோ பு$^{3}$த்தி$^{4}$; அஸ்யாதி$^{4}$ஷ்ட$^{2}$ான முச்யதே |
ஏதைர் விமோஹயத்யேஷ:, ஜ்ஞானமாவ்ருத்ய தே$^{3}$ஹினம் || 40

**அஸ்ய** - இந்தக்காமம் என்ற சத்ருவுக்கு; **இந்த்ரியாணி** - கண் முதலிய ஐந்து இந்திரியங்களும்; **மன:** - மனதும்; **புத்தி:** - புத்தியும்; **அதிஷ்டானம்** - இருப்பிடம் என்று; **உச்யதே** - சொல்லப்படுகிறது. **ஏஷ:** - இந்தக் காமம்; **ஏதை:** - (விஷயங்களுடன் தொடர்புள்ள) இந்திரியங்கள், மனது, புத்தி, இவைகளால்; **ஜ்ஞானம் ஆவ்ருத்ய** - (பரோக்ஷ ஞானத்தையுண்டாக்காமல்) தடுத்தும், (உண்டான அந்த ஞானத்தை, அபரோக்ஷஞானத்தை உண்டுபண்ணாதவாறு) தடுத்தும்; **தேஹினம்** - ஜீவனை; **விமோஹயதி** - அதிகம் கலங்கச் செய்கிறது.

**குறிப்பு:** 2-4-13 பிரம்ம சூத்திரத்தில் (1) மனம் (2) புத்தி (3) அஹங்காரம் (4) சித்தம் (5) சேதனா என்று மனம் ஐந்து விதமாகச் செயல்படும். 'இதைச் செய்யப் போகிறேன்' என்று நினைப்பது மனம். 'இதுதான்' என்று நிச்சயிப்பது புத்தி, தனது அல்லாததைத் தனது என்று நினைப்பது அஹங்காரம். ஞாபக சக்தி சித்தம். அஷ்டாவதானம், சதாவதானம் போன்று பல விஷயங்களின் ஞாபக சக்தி, சேதனா எனக் கூறப்படுகிறது.

இந்திரியஜயம் காமத்தைக்கொல்ல உபாயமாகும், என்கிறார்.

41. तस्मात् त्वं इन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञान विज्ञान नाशनम् ॥

தஸ்மாத் த்வம் இந்த்ரியாண்யாதெ[3]ள, நியம்ய ப[4]ரதர்ஷப[4] |
பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம், ஜ்ஞான விஜ்ஞான நாஶனம் || 41

**பரதர்ஷப** - *பரத வம்சத்து சிரேஷ்டனே!;* **தஸ்மாத்** - *ஆகையால்;* **த்வம்** - *நீ;* **ஆதௌ** - *முதலில்;* **இந்த்ரியாணி** - *(வெளியேயுள்ள) இந்திரியங்களை;* **நியம்ய** - *நன்கு அடக்கி; (விஷயங்களுடன் தொடர்பு இல்லாமற் செய்தும், தொடர்பு ஏற்படினும், மனது புத்தி இவைகளுடன் தொடர்பு இல்லாமற் செய்தும், அவற்றுடன் தொடர்பு ஏற்படினும், கலங்காமல் இருந்தும்);* **ஜ்ஞான விஜ்ஞான நாஶனம்** - *பரோக்ஷ ஞானத்தையும், அபரோக்ஷ ஞானத்தையும் அழிப்பதும்;* **பாப்மானம்** - *பாபத்துக்குக் காரணமானதுமான;* **ஏனம்** - *இந்தக் காமத்தை;* **ப்ரஜஹி** - *அடியோடு கொல்வாயாக.* **ஹி** - *(ஶத்ருவின் இருப்பிடத்தை அபகரித்துவிட்டால், அவனைக் கொல்வது ஶுலபம் என்பது); பிரஸித்தமானதே.*

குறிப்பு: சு. 43-ல் ஜஹி என்ற பதத்தையொட்டி, இங்கு (1) ப்ரஜஹி (2) ஹி என்ற இரு பதங்களே பொருந்தும். பிறரோ, ப்ரஜஹிஹி என ஒரே பதமாகக் கொண்டுள்ளனர்.

அந்த சத்ருவைக் கொல்ல ஞானம் என்ற ஆயுதத்தை சு. 43-ல் கூறுபவராய், இங்கு அந்த ஞானத்தின் விஷயத்தைக் கூறுகிறார்.

42. इन्द्रियाणि पराण्याहुः इन्द्रियेभ्यः परं मनः।
मनसस्तु परा बुद्धिः यो बुद्धेः परतस्तु सः॥

43. एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्य आत्मानमात्मना।
जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥

இந்த்[3]ரியாணி பராண்யாஹு:, இந்த்[3]ரியேப்[4]ய: பரம் மன: |
மனஸஸ்து பரா புத்தி[4]:, யோ புத்தே[4]: பரதஸ்து ஸ: || 42

ஏவம் புத்தே: பரம் புத் த்வா, ஸம்ஸ்தப்ய ஆத்மான மாத்மனா |
ஜஹி ஶத்ரும் மஹாபா[3]ஹோ, காமரூபம் து[3]ராஸத[3]ம் || 43

*42. இங்கு சில பதங்களைக் காடக உபநிஷத்தின்படி சேர்த்துக்கொள்ள வேண்டும்.* [**சரீராத்** - *தேகத்தைக் காட்டிலும்*]; **இந்த்ரியாணி** - *ஞானேந்திரியங்கள்;* **பராணி** - *உயர்ந்தவை, என்று;* **ஆஹு:** - *(பெரியோர்கள்) சொல்*

கிறார்கள். (ஏனெனில் ஞானத்தையுண்டுபண்ணுகின்றன) **இந்த்ரியேப்ய:** - இந்திரியங்களைக் காட்டிலும்; [**அர்த்தா:** - சப்தம், ஸ்பர்சம் முதலிய விஷயங்கள்; **பரா:** - உயர்ந்தவை; (ஏனெனில் அவை கிரஹிக்கப்படுபவை.) **அர்த்தேப்ய:** - விஷயங்களைக் காட்டிலும்; **மன:** - மனது; **பரம்** - உயர்ந்தது. (ஏனெனில் விஷயங்களைப் பற்றிய எண்ணங்களை உண்டு பண்ணுகிறது.) **மனஸ: து** - மனத்தைக் காட்டிலுமோ, **புத்தி:** - அறிவு; **பரா** - உயர்ந்தது; (ஏனெனில் அது எண்ணங்களை நிச்சயிக்கிறது); **புத்தே:** - புத்தியைக் காட்டிலும், [**மஹான் ஆத்மா** - மஹத் தத்வம்; **பர:** - உயர்ந்தது; **மஹத:** - மஹத் தத்வத்தைக் காட்டிலும்; **அவ்யக்தம்** - பிரக்ருதி; **பரம்** - உயர்ந்தது; **அவ்யக்தாத்** - பிரகிருதியைக் காட்டிலும்] **ய:** - யார்; **பரத:** - உயர்ந்தவனோ; **ஸ: து** - (அவன்) அந்த விஷ்ணுவே; (அவனைக் காட்டிலும் உயர்ந்தவனில்லை.)

*43.* **மஹாபாஹோ** - பெரிய கைகளை (புஜபலத்தை) யுடையவனே! **ஏவம்** - இம்மாதிரி; **புத்தே:** - புத்தியைக் காட்டிலும்; [மஹத் தத்வத்தைக் காட்டிலும்; பிரகிருதியைக் காட்டிலும்] **பரம்** - உயர்ந்த பகவானை; **புத் த்வா;** (தாரதம்யத்தின் உச்சியில் இருப்பதாக) அறிந்து; **ஆத்மானம்** - மனதை; **ஆத்மனா** - புத்தியால்; **ஸம்ஸ்தப்ய** - நன்கு அடக்கி; **துராஸதம்** - சிரமப்பட்டு போக்கத்தகுந்த; **காமரூபம்** - காமம் என்ற பெயருள்ள; **ஶத்ரும்** - விரோதியை **ஜஹி** - கொல்வாயாக.

குறிப்பு: இங்கு இந்திரியம் முதலிய பதங்கள் அவற்றின் அபிமானி தேவர்களைக் குறிக்கின்றன.

| ஞானேந்திரியங்கள் | அபிமானிகள் | விஷயங்கள் | அபிமானிகள் |
|---|---|---|---|
| 1. காது | – சந்திரன் | ஶப்தம் | – கருடனின் பத்னீ |
| 2. தோல் | – குபேரன் | ஸ்பர்சம் | – ஷ |
| 3. கண் | – சூரியன் | ரூபம் | – ஶேஷபத்னி |
| 4. நாக்கு | – வருணன் | ரஸம் | – ஷ |
| 5. மூக்கு | – அஶ்வினி தேவர்கள் | கந்தம் | – பார்வதீ |

| கர்மேந்திரியங்கள் | அபிமானிகள் | மற்றவை | அபிமானிகள் |
|---|---|---|---|
| 1. வாக் (வாய்) | – அக்நி | 1. மனது | – கருடன், ஶேஷன், ஶிவன் |
| 2. பாணி (கைகள்) | – இந்திரன் | | |
| 3. பாதம் (கால்கள்) | – ஜயந்தன் | 2. புத்தி | – ஸரஸ்வதி |

4. பாயு – யமன்
(மலம் கழிக்கும் உறுப்பு)
5. உபஸ்தம் – தக்ஷ
(ஆண்பெண் குறி) ப்ரஜேச்வரன்

3. மஹத்தத்வம் – ப்ரஹ்ம தேவர்
4. அவ்யக்தம் – லக்ஷ்மீ
(ப்ரகிருதி)
(4–27 பார்க்க)

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे कर्म योगो नाम तृतीयो अध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்மவித்யாயாம், யோகசாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
கர்மயோகோ நாம த்ருதீயோ அத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திரஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய கர்மயோகம் என்ற*
*மூன்றாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 4

# ஜ்ஞான யோகம்

(42 சுலோகங்கள்)

## நான்காம் அத்தியாயச் சுருக்கம்

**ஞானயோகம்** என்பது 3-ம் அத்தியாயத்து நிஷ்காம கர்ம யோகத்தால் உண்டாகும் அபரோக்ஷ ஞானமாகும். கர்மங்களை எவ்வித ஞானத்துடன் செய்யவேண்டும் என்பதையும் விளக்கும். முதலில் பகவன்மகிமையையும், பிறகு நிஷ்காமகர்மங்களின் பிரிவுகளையும், கடைசியில் அபரோக்ஷ ஞானத்தின் மகிமையையும் விளக்குகிறார்.

தர்மத்திற்கு வாட்டமும், அதர்மத்திற்கு மலர்ச்சியும் ஏற்படும்போதெல்லாம் பகவான் தர்மத்தை நிலைநிறுத்தவும், ஸாதுக்களைக் காக்கவும், துஷ்டர்களை ஒழிக்கவும், பல அவதாரங்களைச் செய்கிறார். அந்த அவதாரங்கள் ஒன்றில், இந்த நிஷ்காம கர்மயோகத்தைச் சூரியனுக்கு உபதேசித்தார். அவன் மூலம் வைவஸ்வத மனு, இக்ஷ்வாகு முதலிய ராஜரிஷிகள், அதை அநுஷ்டித்து வந்தனர். காலப்போக்கில், அது மறையவே, அதையே இப்போது அர்ஜுனனுக்கு உபதேசித்தார். பகவானின் திவ்ய அவதாரங்களையும், அவதார காரியங்களையும், அறிபவன் மோக்ஷம் அடைவான்.

இம்மாதிரி முன்னோர்களால் செய்யப்பட்டுவந்த நிஷ்காம கர்மத்தைச் செய்யும்படி அர்ஜுனனைப் பகவான் தூண்டுகிறார். அந்தக் கர்மத்தின் ஸ்வரூபத்தை அறிவது சுலபமல்ல. நாம் ஒரு காரியத்தையும் செய்யாமல், படுத்துத் தூங்கும்போது, பகவான் தூங்காமல் ஸ்வப்னத்தில் பல பொருள்களைச் சிருஷ்டித்துக் காட்டும் கர்மாவில் ஈடுபட்டிருக்கிறார். அதை உதாரணமாய்க் கொண்டு, விழிப்பிலும், பகவானே அனைத்தையும் நம் மூலம் செய்விக்கிறார்; நாம் ஸ்வதந்திரமாகச் செய்வதில்லை; பகவானின் பொருட்டு, பகவானின் பூஜையாகச் செய்கிறோம் என்ற ஞானத்துடன் செய்யவேண்டும். அவ்வாறு செய்யப்படுவதெல்லாம் யஜ்ஞங்களேயாகும்.

அவை, யாகம், தவம், தியானம், அத்யயனம், ப்ராணாயாமம், போஜனம், விஷயானுபவம் முதலிய பல வகைப்படும். அவற்றில், ஞான யஜ்ஞமே சிறந்தது. மகான்களை அணுகி, அடிபணிந்து, உபதேசம் பெற்று, அதை அடையவேண்டும். அந்த ஞானமாகிற கத்தியால் ஸந்தேகத்தை ஒழித்துப் போர் புரியும்படித் தூண்டினார்.

இங்கு முற்கூறப்பட்ட நிஷ்காம கர்மாவும், விஷ்ணுவின் மகிமையும் விஸ்தரிக்கப்படுகின்றன, முதல் 14 சுலோகங்களில் விஷ்ணுவின் மகிமையும், 15 முதல் 32 முடிய நிஷ்காம கர்மாவிற்கும், மற்ற கர்மாக்களுக்குமுள்ள பேதமும், 33 முதல் 42 முடிய உபாஸனை, யாகம் முதலிய பல நிஷ்காம கர்மத்தின் பிரிவுகளும் கூறப்படுகின்றன.

3-30 முதல் 32ல் நிஷ்காம கர்மாவை அவசியம் அநுஷ்டிக்க வேண்டும் எனப்பட்டது. அதில் ருசியை உண்டாக்குவதற்காக, அது முன்னோர்களாலும் அநுஷ்டிக்கப்பட்டது; என முதல் மூன்று சுலோகங்களில் கூறுகிறார்.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார்.

1. इमं विवस्वते योगं प्रोक्तवान् अहमव्ययम् ।
विवस्वान् मनवे प्राह मनुः इक्ष्वाकवेऽब्रवीत् ॥

2. एवं परंपराप्राप्तं इमं राजर्षयो विदुः ।
स कालेनेह महता योगो नष्टः परंतप ॥

3. स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥

இமம் விவஸ்வதே யோக³ம், ப்ரோக்தவான் அஹ மவ்யயம் |
விவஸ்வான் மனவே ப்ராஹ, மனு: இக்ஷ்வாகவே அப்³ரவீத் || 1

ஏவம் பரம்பரா ப்ராப்தம், இமம் ராஜர்ஷயோ விது³: |
ஸ காலேனேஹ மஹதா, யோகே³ா நஷ்ட: பரம்தப || 2

ஸ ஏவாயம் மயா தே அத்³ய, யோக: ப்ரோக்த: புராதன: |
ப⁴க்தோSஸி மே ஸக²ா சேதி, ரஹஸ்யம் ஹ்யோதது³த்தமம் || 3

*1.* **அஹம்** - நான்; **அவ்யயம்** - அழிவற்ற பலனைத் தரும்; **இமம்** - இந்த (3-30ல் கூறப்பட்ட); **யோகம்** - நிஷ்காம கர்மம் எனும் ஞானோபாயத்தை; **விவஸ்வதே** - சூரியனுக்கு; **ப்ரோக்தவான்** - உபதேசித்தேன். **விவஸ்வான்** - சூரியன்;

**மனவே** - (தன் புத்திரனான, சிராத்ததேவன் என்ற) வைவஸ்வதமனுவுக்கு; **ப்ராஹ** - உபதேசித்தான்; **மனு:** - அந்த மனு; **இக்ஷ்வாகவே** - (தன் புத்திரனான) இக்ஷ்வாகு மகாராஜ னுக்கு; **அப்ரவீத்** - உபதேசித்தான்.

2. **ஏவம்** - இம்மாதிரி; **பரம்பரா ப்ராப்தம்** - வழிவழியாக வந்துள்ள; **இமம்** - இந்த நிஷ்காம கர்மாவை; **ராஜர்ஷய:** - பல அரசர்களும், ரிஷிகளும்; அல்லது நிமி முதலிய ராஜ சிரேஷ்டர்களும்; **விது:** - அறிந்தனர். (அநுஷ்டித்தனர். இக் காலத்தினர் அறியவில்லை. ஏனெனில்), **பரம்தப** - சத்ருக்களை வாட்டுபவனே; **ஸ: யோக:** - அந்த ஞானோபாயம்; **மஹதா காலேன** - நெடுங்காலத்தினால்; **இஹ** - இவ்வுலகில்; **நஷ்ட:** - மறைந்துவிட்டது.

குறிப்பு: ரிஷிகளில் 1. பிரம்மர்ஷி 2. தேவர்ஷி 3 மஹர்ஷி 4. பரமர்ஷி 5. காண்டர்ஷி 6. ச்ருதர்ஷி 7. ராஜர்ஷி என்ற ஏழு வகையினர் உண்டு இங்கு தாரதம்யத்தின்படி கூறப்பட்டுள்ளனர்.

3. **(நீ) மே** - என்னுடைய; **பக்த:** - பக்தனாயும்; **ஸகா ச** - நண்பனாகவும்; **அஸி** - இருக்கிறாய்; **இதி** - என்ற காரணத்தால்; **அயம்** - இந்த; **புராதன:** - பழமையான; **ஸ: ஏவ யோக:** - அதே ஞானோபாயம்; **மயா** - என்னால்; **தே** - உனக்கு; **அத்ய** - இப்பொழுது; **ஹி** - எதனால்; **ப்ரோக்த:** - உபதேசிக்கப்பட்டதோ; (அதனால்) **ஏதத்** - இது; **ரஹஸ்யம்** - ரகஸ்யமானது; **உத்தமம்** - உயர்ந்தது; அல்லது, **ஹி** - எதனால் (ரஹஸ்யம், உத்தமம் ஆனதோ அதனால் நீ பக்தனாயும் நண்பனாயும் இருப்பதால் அது உபதேசிக்கப்பட்டது.)

குறிப்பு: (1) பக்தன் ச்ரத்தையுடன் கேட்பான். ஆனால் ஆக்ஷேபித்துக் கேள்வி கேட்கமாட்டான். நண்பன் ஆக்ஷேபித்துக் கேள்வி கேட்பான், ஆனால் ச்ரத்தையுடன் கேட்கமாட்டான். அர்ஜுனனோ இரண்டும் செய்துள்ளவன்.

(2) 3-20ல் கிருஹஸ்த தர்மத்தை விடக்கூடாது. என்பதற்கு ஜனகர் முதலிய முன்னோரின் அநுஷ்டானமும், இங்கு நிஷ்காம கர்மாவைச் செய்யவேண்டும், என்பதில் சூரியன் முதலிய முன்னோரின் அனுஷ்டான மும் உதாஹரிக்கப்பட்டுள்ளன.

अर्जुन उवाच — **அர்ஜுன: உவாச** - அர்ஜுனன் ஆக்ஷேபித்துக் கேட்கிறான்.

4. अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।
कथमेतत् विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥

அபரம் ப[4]வதோ ஜன்ம, பரம் ஜன்ம விவஸ்வத: |
கத[2]மேதத் விஜானீயாம், த்வமாதெ[3]ள ப்ரோக்தவானிதி || 4

**பவத:** - (துவாபர யுகத்தில் வஸுதேவனின் புத்திரனாகப் பிறந்த) *உம்முடைய;* **ஜன்ம** - *பிறப்பு;* **அபரம்** - *பிந்தியது;* **விவஸ்வத:** - (சிருஷ்டி காலத்தில் பகவானின் கண்ணிலிருந்து பிறந்த) *சூரியனுடைய;* **ஜன்ம** - *பிறப்பு;* **பரம்** - *முந்தியது;* **த்வம்** - *நீர்;* **ஆதௌ** - *முற்காலத்தில்;* **ப்ரோக்தவான்** - (சூரியனுக்கு) *உபதேசித்தீர்;* **இதி** - *என்ற;* **ஏதத்** - *இதை;* **கதம்** - *எப்படி;* **விஜானீயாம்** - *நன்கு அறிவேன்?*

**குறிப்பு:** 2-12ல் பகவானுக்குப் பிறப்பில்லை என்றதை அறிந்தும், அர்ஜுனன், இங்கு பகவானுக்குப் பிறப்பு உண்டு, அது சூரியனின் பிறப்பைவிடப் பிந்தியது; என்கிறானே? என்றால் 3-30ல் பகவான் ஸ்வதந்திரகர்த்தா, பூஜிக்கத் தகுந்தவன்; ஜீவன் அஸ்வதந்திரகர்த்தா, பூஜிப்பவன்; என்று கூறப்பட்ட ஜீவேசுவர பேதத்தை, பிரமாணத்துடன் அறியவே கேட்கிறான். இதையறிந்தே ஸ்ரீ கிருஷ்ணரும் அடுத்த சுலோகத்தில் இருவர்க்கும் பிறப்பு களிருப்பினும், அவற்றை நான் அறிவேன், நீ அறியமாட்டாய் என ஜீவேசுவர பேதத்தைக் கூறுகிறார். இந்த உட்கருத்து இல்லாவிடில், பகவான் தனக்குப் பிறப்புகளுண்டு என்பதை மாத்திரம் கூறியிருப்பார். உனக்கும் பல பிறப்புகளுண்டு என்று கூறியிருக்க மாட்டார்.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் *கூறுகிறார்.*

5. बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।
तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥

ப[3]ஹூனி மே வ்யதீதானி, ஜன்மானி தவ சார்ஜுன |
தான்யஹம் வேத[3] ஸர்வாணி, ந த்வம் வேத்த[2] பரம்தப || 5

**அர்ஜுன** - *ஶுத்தமான கர்மத்தைச் செய்பவனே!;* **மே** - *எனக்கும்;* **தவ ச** - *உனக்கும்;* **பஹூனி ஜன்மானி** - *பல பிறப்புகள்;* **வ்யதீதானி** - *கடந்துவிட்டன;* **ஆயினும்** *நம்மிருவர்க்கும் என்ன பேதம்?* **பரம்தப** - *சத்ருக்களை வாட்டுபவனே!* **அஹம்** - *நான்;* **தானி ஸர்வாணி** - *அந்த எல்லாவற்றையும் (என்னுடையது, உன்னுடையது;)* **வேத** - *அறிவேன்;* **த்வம்** - *நீயோ;* **நவேத்த** - *(உன் பிறப்புக்களைக் கூட) அறியமாட்டாய். (என் பல பிறப்புகள் ஒன்றில் சூரியனுக்கு உபதேசித்தேன் என்று அறிவாயாக.)*

அர்ஜுனன்:— அப்படியாகில், உமக்கு 2-12ல் கூறிய பிறப்பு இறப்பு இல்லாதிருப்பதோ, 2-17ல் கூறிய ஈசுவரத் தன்மையோ, பொருந்தாதே !

6. अजोऽपि सन् अव्ययात्मा भूतानां ईश्वरोऽपि सन् ।
प्रकृतिं स्वां अधिष्ठाय संभवामि आत्म मायया ॥

அஜோSபி ஸன் அவ்யயாத்மா, பூ[4]தானாம் ஈசுவரோSபி ஸன் |
ப்ரக்ருதிம் ஸ்வாம் அதி[4]ஷ்டாய, ஸம்ப[4]வாமி ஆத்மமாயயா || 6

**அஜ:** - *(நான்) தேகத்தினால் பிறப்பில்லாதவனாகவும்;* **அவ்யய ஆத்மா** - *அழிவில்லாத ஸ்வரூபத்தையும், தேகத்தையும் உடையவனாகவும்;* **ஸன் அபி** - *இருப்பினும்;* **பூதானாம்** - *பிரம்மாதி ஜீவர்களுக்கு;* **ஈஶ்வர:** - *யஜமானனாகவும்;* **ஸன் அபி** - *இருப்பினும்;* **ஸ்வாம்** - *எனக்கு அதீனமான;* **ப்ரக்ருதிம்** - *(1) பிராகிருததேகம் படைத்த வஸுதேவன், தேவகி முதலியோரின்;* **அதிஷ்டாய** - *உள்ளே பிரவேசித்தும்; (2) தமோ குணாபிமானியான துர்க்காவை;* **அதிஷ்டாய** - *ஆஶ்ரயித்தும்; (3)* **தேவஸ்யைஷ ஸ்வபாவோயம்** - *பிரயோஜனத்தைக் கருதாது என் ஸ்வபாவத்தை;* **அதிஷ்டாய** - *அநுசரித்தும்;* **ஆத்மமாயயா** - *என் இஷ்டப்படி அல்லது என் ஞானத்துடன்;* **ஸம் பவாமி** - *நன்கு தோன்றுகிறேன். (பிறக்கிறேன் என உலகத்தார் கூறுவது விபரீத ஞானமே.)*

குறிப்பு: (1) ஈச்வர: — ஈஶேப்ய: வர: மற்றவர்களுக்கு யஜமானர்களான ரமா. ப்ரஹ்மா, சிவன் முதலியோர்களைக் காட்டிலும், சிரேஷ்டரான விஷ்ணு. (2) இங்கு ஜீவர்களின் பிறப்பைக் காட்டிலும், வேறான பிறப்பையுடையவனாத லால் ஸ்ரீ ஹரி பூஜ்யன், ஜீவர்கள் பூஜகர்கள் என்ற ஜீவேஶ்வரபேதம் நிரூபிக்கப்பட்டுள்ளது. பகவானின் பிறப்புக்கு அவதாரம், என்றும், மறைவுக்கு, பரந்தாம ப்ரவேஶம் என்றும், சிறப்புப் பெயர்கள் உண்டு. ஜீவர்கள் தத்தம் கர்மத்தின் பயனாக பிரகிருதியால் கட்டுண்டு பிறக்கிறார்கள். பகவானோ தன் வஶமான பிரகிருதியை ஆஶ்ரயித்து விளையாட்டாக நம் கண்ணுக்குப் புலப்படு கிறான்.

*(3) மஹாமாயே த்யவித்யேதி, நியதிர் மோஹினீதி ச |*
*ப்ரகிருதிர் வாஸனேத் யேவம், தவேச்சா (அ)னந்த கத்யதே ||*

பகவானின் இச்சைக்கு 1. மஹாமாயா 2. அவித்யா 3. நியதி 4. மோஹினீ 5. ப்ரக்ருதி 6. வாஸனா என்ற பெயர்கள் உண்டு. 'யா மா ஸா மாயா- எது இல்லையோ அது மாயை', என்ற அர்த்தம் தவறு.

அவாப்த ஸமஸ்த காமரான தமக்குப் பிரயோஜன மில்லா விடிலும், உலகத்தார் விரும்பும் தர்ம ஸ்தாபனம் முதலியவைகளுக்காக அவதாரம் என்றும், அவதார காலத்தையும் கூறுகிறார்.

7. यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत।
अभ्युत्थानमधर्मस्य तदाऽऽत्मानं सृजाम्यहम् ॥

8. परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम्।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥

யத$^{3}$ா யத$^{3}$ா ஹி த$^{4}$ர்மஸ்ய, க்$^{3}$லானிர் ப$^{4}$வதி பா$^{4}$ரத |
அப்$^{4}$யு த்த$^{2}$ானமத$^{4}$ர்மஸ்ய, தத$^{3}$ா(ஆ)த்மானம் ஸ்ருஜாம்யஹம் || 7

பரித்ராணாய ஸாதூ$^{4}$னாம், விநாஶாய ச து$^{3}$ஷ்க்ருதாம் |
த$^{4}$ர்ம ஸம்ஸ்த$^{2}$ாபனார்த்த$^{2}$ாய, ஸம்ப$^{4}$வாமி யுகே$^{3}$ யுகே$^{3}$ || 8

*7.* **பாரத** – *பரத வம்சத்திற் பிறந்தவனே!* **அஹம்** – *நான்;* **யதா யதா** – *எவ்வெப்பொழுது;* **தர்மஸ்ய** – *புண்யத்திற்கு;* **க்லானி:** – *வாட்டமும்;* **அதர்மஸ்ய** – *பாபத்திற்கு;* **அபி உத்தானம்** – *அதிக எழுச்சியும்;* **பவதி** – *ஏற்படுகிறதோ;* **ததா** *(ததா)* – *அவ்வப்பொழுது;* **ஆத்மானம்** – *என்னை;* **ஸ்ருஜாமி** – *சிருஷ்டித்துக் கொள்கிறேன்;* **ஹி** – *பிரசித்தம்.*

*8.* **ஸாதூனாம்** – *நல்லவர்களின்;* **பரித்ராணாய** – *பூர்ணமான பாதுகாப்புக்காகவும்;* **துஷ்க்ருதாம்** – *துஷ்டர்களின்;* **விநாஶாய ச** – *அடியோடு நாசத்திற்காகவும்;* **தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய** – *தர்மத்தை நன்கு நிலைநிறுத்தும் பிரயோஜனத்திற்காகவும்,* **யுகே யுகே** – *தர்மத்தின் வாட்டமும், அதர்மத்தின் எழுச்சியும் ஏற்படும் போதெல்லாம்;* **ஸம்பவாமி** – *அவதரிக்கிறேன்.*

குறிப்பு: (1) அவதரிக்காமலேயே சிஷ்ட பரிபாலனம் முதலியவற்றைச் செய்யமுடியுமாயினும், விளையாட்டாக தம் ஸ்பாவத்தையநுசரித்து அவதாரத்தின்மூலம் செய்கிறார். மேலும் தம் அநுஷ்டானத்தினால் உலகத்தாரைக் கற்பிக்கவும், ஸம்ஸாரத்தில் தபிக்கிறவர்களின் சிரவணம், ஸ்மரணம் முதலியவற்றிற்குத் தகுந்த லீலைகளைச் செய்யவும், அவதரிக்கிறார்.

(2) யுகே யுகே - ஒவ்வொரு யுகத்திலும் என்ற அர்த்தம் சரியல்ல. ஏனெனில் கலியுகத்தில் பகவானுக்கு அவதார மில்லை. மற்ற மூன்று யுகங்களில் அவதரிப்பவர் ஆனதால் த்ரியுகன் என்ற பெயர் பிரசித்தமாயுள்ளது. புத்தாவதாரமும், கல்கி அவதாரமும், யுகங்களின் ஸந்திகாலங்களில் ஏற்பட்டவை.

*இம்மாதிரியான அவதாரங்களையும், அவதார கார்யங்களையும், அறிவதின் பலனைக் கூறுகிறார்.*

9. जन्म कर्म च मे दिव्यं एवं यो वेत्ति तत्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मां एति सोऽर्जुन ॥

ஜன்ம கர்ம ச மேதி[3]வ்யம், ஏவம் யோ வேத்தி தத்வத: |
த்யக்த்வா தே[3]ஹம் புனர்ஜன்ம, நைதி மாம் ஏதி ஸோSஅர்ஜுன || 9

**அர்ஜுன** – சுத்தமான கர்மத்தைச் செய்பவனே ! **ய:** – யார்; **ஏவம்** – இம்மாதிரி; **திவ்யம்** – தெய்வத்தன்மை வாய்ந்த **மே** – என்னுடைய; **ஜன்ம** – அவதாரத்தையும்; **கர்ம ச** – அவதார கார்யத்தையும்; (தன் யோக்யதைக்குத் தகுந்த பகவத் குணங்களையும்) **தத்வத:** – உள்ளபடி; **வேத்தி** – அறிகிறானோ; **ஸ:** – அந்த ஞானி; **தேஹம்** – உடலை; **த்யக்த்வா** – விட்டபிறகு; **புன:** – மறுபடியும்; **ஜன்ம** – பிறப்பை; **ந ஏதி** – அடைவதில்லை. ஆனால், **மாம்** – என்னை; **ஏதி** – அடைகிறான்.

இம்மாதிரி அறிந்து முக்தியைப் பெற்றவர்கள் உண்டா?

10. वीतरागभलक्रोधाः मन्मयाः मां उपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥

வீதராக[3] ப[4]யக்ரோத[4]ா:, மன்மயா: மாம் உபாஶ்ரிதா: |
ப[3]ஹவோ ஜ்ஞானதபஸா, பூதா: மத்ப[4]ாவ மாக[3]தா: || 10

**வீதராக பய க்ரோதா:** – ஆசை, பயம், கோபம் – இவற்றை விலக்கினவர்களும்; **மன்மயா:** – (மயம் ப்ரதான முத்திஷ்டம்) நானே (ஸ்ரீ கிருஷ்ணரே) உத்தமர் என்று அறிந்தவர்களும்; **மாம்** – என்னையே; **உபாஶ்ரிதா:** – சரணமடைந்தவர்களுமான; **பஹுவ:** – பலர்; **ஜ்ஞான தபஸா** – ஞானம் என்ற தவத்தால் அல்லது ஞானத்துடன் கூடிய தவத்தால்; **பூதா:** – (கர்மாக் களை எரித்து) பரிசுத்தர்களாகி; **மத்பாவம்** – (மயிபாவம்) என்னிடம் பிரவேசித்தல் என்ற ஸாயுஜ்யத்தை; **ஆகதா:** – அடைந் துள்ளனர்.

**குறிப்பு:** மத்பாவ;– (1) மே பாவ: இவ பாவ: ஸாரூப்யம். (2) மயா ஸஹ பாவ:– ஸாமீப்யம், (3) மயி – மதீயலோகே பாவ:– ஸாலோக்யம் என்ற அர்த்தங்களையும் அறிக. 4வதாக மேலே சொல்லப்பட்ட ஸாயுஜ்யம்.

அர்ஜுனன் – மோக்ஷத்தை மாத்திரம் விரும்பி உம்மைப் பூஜிக்கும் ஞானிகளுக்கும், ஸவர்க்கம் முதலிய வற்றை விரும்பி மற்ற தேவதைகளைப் பூஜித்து, அந்தக் கர்மாவை உமக்கு அர்ப்பணம் செய்யும், த்ரைவித்யர் களுக்கும், சமமான பலனா? இல்லை.

11. ये यथा मां प्रद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥

யே யத$^2$ா மாம் ப்ரபத்$^3$யந்தே, தாம்ஸ்ததை$^2$வ ப$^4$ஜாம்யஹம் |
மம வர்த்மாநுவர்த்தந்தே, மனுஷ்யா: பார்த்த$^2$ ஸர்வஶ: || 11

**பார்த்த** – குந்தீபுத்திரனே !; **யே** – எவர்கள் (ஞானிகளோ, த்ரைவித்யர்களோ); **யதா** – எவ்வாறு (மோக்ஷத்தை மாத்திரம் விரும்பி, என்னைப் பூஜித்தோ, ஸ்வர்க்காதிகளை விரும்பி, இந்திரன் முதலிய மற்ற தேவர்களைப் பூஜித்தோ) **மாம்** – என்னை; **ப்ரபத்யந்தே** – அடைகின்றனரோ, **ததா ஏவ** – அவ்வாறே; (அவர்களின் பூஜையை அநுஸரித்தே) **தான்** – அவர்களை; **அஹம்** – நான்; **பஜாமி** – (முறையே மோக்ஷத்தையும் ஸ்வர்க்காதிகளையும் தந்து) ஸேவை புரிகிறேன். (சந்தோஷப்படுத்துகிறேன்). ஏனெனில், **ஸர்வஶ: மனுஷ்யா:** – எல்லா மனிதர்களும், (ஞானிகளும், த்ரைவித்யர்களும்); **மம வர்த்ம** – என்னுடைய வழியை (நிவிருத்த கர்மாவையும், ப்ரவிருத்த கர்மாவையும் முறையே) **அநுவர்த்தந்தே** – பின் பற்றுகிறார்கள். (கடைசியில் எனக்கு அர்ப்பணம் செய்வதால் த்ரைவித்யர்களும் என் வழியைப் பின்பற்றினவர்களே !)

ஆயினும் த்ரைவித்யர்களின் விசேஷத்தைக் கூறுகிறார்.

12. काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்தி$^4$ம், யஜந்தே இஹ தே$^3$வதா: |
க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே, ஸித்தி$^4$ர் ப$^4$வதி கர்மஜா || 12

**ஹி** – எதனால்; **கர்மஜா** – யாகம் முதலிய கர்மாக்களினால் ஏற்படும்; **ஸித்தி:** – பலன்; **மானுஷே லோகே** – இந்த மனித உலகில்; **க்ஷிப்ரம்** – சீக்கிரம்; **பவதி** – உண்டாகிறதோ; (அதனால் த்ரைவித்யர்கள்), **இஹ** – இவ்வுலகில்; **கர்மணாம் ஸித்திம்** – அந்த கர்மாக்களின் பலனை; **காங்க்ஷந்த:** – விரும்பினவர்களாய்; (நான் ஸர்வ யஜ்ஞபோக்தா என்று அறியாமல்), **தேவதா:** – மற்ற தேவதைகளை; **யஜந்தே** – பூஜிக்கிறார்கள். (ஞானிகளோ, அந்த உண்மையை அறிந்து, நிஷ்காமர்களாய் பகவானைப் பூஜிக்கிறார்கள்.)

**குறிப்பு:** பிரம்ம சூத்திரம், 3-2-39-ஓம் பலம் அத: உபபத்தே: ஓம்: சாந்தோக்யம் 1-7-6-தஸ்மாத்தே தனஸநய: – என்றபடி பலனைத் தருபவர் பகவானே.

நான்கு வர்ணத்தாரையும் பகவான் சிருஷ்டித்துள்ளார், அதனால் அவர் அனைவருக்கும் தந்தையாவார். தந்தையை விட்டு விட்டு

மற்றவர்களைப் பூஜிக்கும் த்ரைவித்யர்களுக்குப் பலன் கிடைக்காது என்கிறார்.

13. चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।
तस्य कर्तारमपि मां विद्धि अकर्तारमव्ययम् ॥

சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம், கு[3]ணகர்ம விப[4]ாகஶ: |
தஸ்ய கர்த்தாரமபி மாம், வித்தி[4] அகர்த்தாரம் அவ்யயம் || 13

**சாதுர்வர்ண்யம்** – *(பிராம்மணர், க்ஷத்திரியர், வைச்யர், சூத்திரர் என்ற) நான்கு வர்ணங்கள் அல்லது நான்கு வர்ணங்களின் கூட்டம்;* **மயா** – *என்னால்;* **குணகர்ம விபாகஶ:** – *ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களின் பிரிவுகளைத் தழுவியும், அவரவர்களுக்குரிய கர்மாக்களின் பிரிவுகளைத் தழுவியும்;* **ஸ்ருஷ்டம்** – *சிருஷ்டிக்கப்பட்டுள்ளது;* **மாம்** – *என்னை;* **தஸ்ய** – *அந்த நான்கு வர்ணங்களின்;* **அவ்யயம்** – *அழிவற்ற;* **கர்த்தாரம்** – *படைப்பவனாயும்;* **அகர்த்தாரம் அபி** – *1) என்னைத் தவிர வேறு படைப்பவனில்லை 2) என்னைப் படைப்பவன் வேறு யாரும் இல்லை. 3) கர்ம பலனை அடையும் ஜீவன் போன்ற கர்த்தா அல்லவென்றும்;* **வித்தி** – *அறிவாயாக.*

**குறிப்பு:** குணவிபாகம் 17-2, 3ல் கூறப்போகிறபடி ஜீவர்கள் இயற்கையிலேயே (1) ஸாத்விகர்கள் (2) ராஜஸர்கள் (3) தாமஸர்கள் என்று மூவகையினர் ஆவர். தேவர்கள், ரிஷிகள் பித்ருக்கள் முதலியோர் ஸாத்விகர்களாவர். மனிதர் களில் உத்தமர்களும், மத்யமர்களும், ராஜஸர்களாவர். மனிதர்களில் அதமர்களும், தைத்யர்களும், தாமஸர்களாவர்:

ராஜஸர்களில், அதிக ஸத்வ குணமும், அதிக ரஜோகுணமும் கூடியவர்கள், பிராம்மணர்களாவர். கொஞ்சம் ஸத்வகுணமும், அதிக ரஜோகுணமும் கூடியவர்கள், க்ஷத்திரியர்களாவர். தமோகுணத்தைக் காட்டிலும் அதிகமானதும், சமமான ஸத்வகுணமும் ரஜோகுணமும் கூடியவர்கள், வைச்யர்கள். ரஜோகுணத்தைக் காட்டிலும் அதிக தமோகுணமும் ஸத்வ குணமும் கூடியவர்கள் சூத்திரர்களாவர்.

இந்த சாதுர்வர்ண்யம் ராஜஸர்களில்தான் உண்டு. அது (1) ஜீவர்களின் ஸ்வபாவத்திலேயே அமைந்தது (2) ஸ்தூல தேகத்தையொட்டியது என இருவகைப்படும். முந்தியது ஶமம், தமம் முதலிய குணங்களைத் தழுவியது, பிந்தியது தந்தையின் வர்ணம் பிள்ளைக்கு என்பது. தேவர்களிடையேயும் இந்த சாதுர்வர்ண்யம் உண்டு. அது அந்தந்த வர்ணங்களுக்கு அபிமானிகளாயிருப்பதேயாகும். **கர்மவிபாகம்:** 18-42 முதல் 44 வரை கூறப்போகும் அவரவர்களுக்குரிய கர்மாக்களை அறியவும்.

தாம் அகர்த்தா அதாவது ஜீவன் போன்ற கர்த்தா அல்ல என்பதை விளக்குகிறார்.

14. न मां कर्माणि लिंपन्ति न मे कर्मफले स्पृहा ।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥

ந மாம் கர்மாணி லிம்பந்தி, ந மே கர்மப[2]லே ஸ்ப்ருஹா |
இதி மாம் யோSபி[4]ஜானாதி, கர்மபி[4]ர் ந ஸ ப[3]த்[4]யதே || 14

**மாம்** – *என்னை;* **கர்மாணி** – *புண்ய பாப கர்மங்கள்;* **ந லிம்பந்தி** – *பற்றுவதில்லை. ஏனெனில்,* **மே** – *எனக்கு;* **கர்மபலே** – *அந்தக் கர்மங்களின் பலனில்;* **ஸ்ப்ருஹா** – *ஆசை, (பலனை யடையும் வரையிலுள்ள மனக்கலக்கம் என்ற அபிநிவேசம்);* **ந** – *இல்லை. மேலும்,* **ய:** – *யார்;* **மாம்** – *என்னை;* **இதி** – *இம்மாதிரி;* **அபிஜானாதி** – *நன்கு அறிகிறானோ;* **ஸ:** – *அவனும்கூட;* **கர்மபி:** – *கர்மாக்களால்;* **ந பத்யதே** – *கட்டுப்படுவதில்லை (முக்தியை அடைகிறான்). ஆகவே என்னைக் கர்மாக்கள் கட்டுப்படுத்த மாட்டா எனக் கூறவும் வேண்டுமா!*

**அர்ஜுனன்:-** நானும் அம்மாதிரி உம்மை அறிந்தவன், ஆகவே கர்மா என்னைக் கட்டுப்படுத்தாது. என்னை ஏன் கர்மாவைச் செய்யத் தூண்டுகிறீர்?

15. एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।
कुरु कर्मैव तस्मात्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥

ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம, பூர்வைரபி முமுக்ஷுபி[4]: |
குரு கர்மைவ தஸ்மாத் த்வம், பூர்வை: பூர்வதரம் க்ருதம் || 15

**பூர்வை:** – *முற்காலத்திய;* **முமுக்ஷுபி: அபி** – *அதிகமான மோக்ஷத்தை (மோக்ஷத்தில் ஆனந்தம் பொங்குவதை) விரும்பும் ஞானிகளால் கூட;* **ஏவம்** – *இம்மாதிரி;* **ஜ்ஞாத்வா அபி** – *அபரோக்ஷ ஞானத்திற்குப் பிறகும்கூட;* **கர்ம க்ருதம்** – *கர்மா செய்யப்பட்டது;* **தஸ்மாத்** – *ஆகையால்;* **த்வம் அபி** – *நீயும்;* **பூர்வை:** – *முன்னோர்களால்;* **க்ருதம்** – *செய்யப் பட்டதும்;* **பூர்வதரம்** – *அவர்களுக்கும் முந்தியதான;* **கர்ம ஏவ** – *கர்மத்தையே;* **குரு** – *செய்வாயாக.*

**குறிப்பு:** அபரோக்ஷஞானியும் கர்மாக்களைச் செய்து வந்தால் தான், மோக்ஷத்தில் அவர்களின் ஆனந்தம், பால் பொங்குவது போல் அதிகமாகும். இல்லையேல் ஆனந்தம் பொங்காது.

அந்தக் கர்மத்தின் ஸ்வரூபத்தை அறிவதில் ஆசையை உண்டாக்க, அதன் மகிமையைக் கூறுகிறார்.

10|

16. किं कर्म किं अकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्तेऽकर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥

கிம் கர்ம கிம் அகர்மேதி, கவயோSப்யத்ர மோஹிதா: |
தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி, யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேSஶுப⁴ாத்|| 16

**கவய: அபி** – ஞானிகளும் கூட; **கர்ம கிம்** – கர்மத்தின் ஸ்வரூபம் யாது? **அகர்ம கிம்** – (1) கர்மத்தைச் செய்யாதிருத்தல் (2) தடுக்கப்பட்ட கர்மா – இவ்விரண்டின் ஸ்வரூபம் யாது? **இதி** – என்ற விஷயத்தில்; **மோஹிதா:** – திகைக்கின்றனர்; **யத்** – எந்தக் கர்மாவை; **ஜ்ஞாத்வா** – அறிந்து; **அஶுபாத்** – அமங்கள மான கர்மபந்தத்திலிருந்து; **மோக்ஷ்யஸே** – விடுபடுவாயோ; **தத் கர்ம** – அந்தக் கர்மத்தையும்; **அகர்ம** – (என்றும் பதச் சேதம்) கர்மமின்மை, தடுக்கப்பட்ட கர்மா – இரண்டையும்; **தே** – உனக்கு; **ப்ரவக்ஷ்யாமி** – நன்கு கூறுவேன். (சு. 17 முதல் 23)

17. कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः ।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥

கர்மணோ ஹ்யபி பே³ாத்த⁴வ்யம், பே³ாத்த⁴வ்யம் ச விகர்மண: |
அகர்மணஸ்ச பே³ாத்த⁴வ்யம், க³ஹனா கர்மணோ க³தி: || 17

**கர்மண:** – கர்மத்திலிருந்து வேறான; **அகர்ம** – கர்ம மின்மையும்; **விகர்ம** – தடுக்கப்பட்ட கர்மமும்; **ஹி** – அவசியம்; **போத்தவ்யம்** – அறியத்தகுந்தவை; **விகர்மண: ச** – தடுக்கப்பட்ட கர்மத்திலிருந்து வேறான (கர்மமும், கர்மத்தைச் செய்யா திருப்பதும்); **போத்தவ்யம்** – அறியத் தகுந்தவை; **அகர்மண: ச** – கர்மமின்மையிலிருந்து வேறான; (கர்மமும், தடுக்கப்பட்ட கர்மமும்); **போத்தவ்யம்** – அறியத்தகுந்தது. ஏனெனில், **கர்மண:** – கர்மத்தின்; **கதி:** – ஞானம் போக்கு; **கஹனா** – அறிவதற்குக் கஷ்டமானது.

**2–ம் அர்த்தம்: கர்மண:** – கர்ம ந: | **விகர்மண:** – விகர்ம ந: | **அகர்மண:** – அகர்ம ந: (என்று பதம் பிரித்து) **கர்ம** – கர்மம் (செய்கை); **ந:** – (பல ரூபங்களையுடைய) என்னிட மிருந்து (உண்டாகிறது); அது ஸ்வதந்திரமல்ல என்று; **ஹி** – அவசியம்; **போத்தவ்யம்** – அறியவேண்டும். **விகர்ம ச** – தடுக்கப்பட்ட கர்மமும்; **ந:** – என்னிடமிருந்து (உண்டாகிறது) என; **போத்தவ்யம்** – அறியவேண்டும். **அகர்ம ச** – கர்ம மின்மையும்; **ந:** – என்னிடமிருந்து (உண்டாகிறது) என; **போத்தவ்யம்** –

அறியவேண்டும். ஆகவே, **கர்மண: கதி: கஹனா** - (இவ்வாறு) கர்மம் முதலியவற்றை அறிவது கஷ்டம்.

குறிப்பு: பாகவதம் 11-3-43ல் இதுவே கூறப்படுகிறது. கர்மாகர்ம விகர்மேதி, வேதவாதோ ந லௌகிக: | வேதஸ்ய ஈச்வராத்மத்வாத், தேன முஹ்யந்தி ஸூரய: ||

கர்மஸ்வரூபத்தை அறிந்தவனைப் புகழ்கிறார்.

18. कर्मण्यकर्म यः पश्येत् अकर्मणि च कर्म यः ।
स बुद्धिमान् मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥

கர்மண்யகர்ம ய : பஶ்யேத், அகர்மணி ச கர்ம ய: |
ஸ பு[3]த்தி[4]மான் மனுஷ்யேஷு, ஸ யுக்த: க்ருத்ஸ்ன கர்மக்ருத் || 18

**ய:** - யார்; **கர்மணி** - தன் வர்ணாசிரமத்துக்குரிய கர்மத்தைச் செய்துகொண்டிருக்கும்போது; (1) **அகர்ம** - கர்மமின்மையை (நான் கர்மத்தைச் செய்யவில்லை) என்று; **பச்யேத்** - அறிகிறானோ; **ய:** - யார்; **அகர்மணி** - தான் எந்தக் கர்மத்தையும் செய்யாதிருக்கும்போது (தூக்கத்தில்) (2) **கர்ம** - கர்மத்தைச் செய்வதாய்; **பஶ்யேத்** - அறிகிறானோ; **ஸ:** - அவன்; **மனுஷ்யேஷு** - மனிதர்களில்; **புத்திமான்** - சிறந்த அறிவாளி; **ஸ:** - அவனே; **யுக்த:** - ஞானோபாயத்தைப் பெற்றவன்; **ஸ:** - அவனே; **க்ருத்ஸ்ன கர்மக்ருத்** - தனக்குரிய எல்லாக் கர்மங்களையும் செய்வதின் பலனான ஞானத்தை யும் மோக்ஷத்தையும் அடைந்தவன்.

குறிப்பு: மேல்வாரியாகப் பார்த்தால், இதன் அர்த்தம் விருத்தமாகத் தோன்றும். மகாபாரதத்தை எழுதிய விக்னேசுவரனை மோஹிக்கும்படி செய்ய ஆங்காங்கு 8800 புதிர் போன்ற சுலோகங்களை ஸ்ரீ வியாஸர் இயற்றினார். அவற்றில் இது ஒன்று எனலாம்.

**உண்மையான அர்த்தம்:-** (1) அகர்ம - அ இதி ப்ரஹ்ம அஸ்யகர்ம - விஷ்ணுவின் கர்மம். தான் கர்மாவைச் செய்யும்போது பகவானே கர்மத்தைச் செய்பவன். தான் ஸ்வதந்திரகர்த்தா அல்ல, அவனுக்கு அதீனமான சக்தியைக் கொண்டு செய்கிறேன் என்று அறிபவன். (2) தூக்கத்தில் பகவானே, தன் இச்சையையும் ஜீவனின் பூர்வ ஸம்ஸ்காரங் களையும் கொண்டு ஸ்வப்னத்தில் பல பொருள்களைச் சிருஷ்டித்துக் காட்டும் கர்மாவைச் செய்கிறான் என்று அறிபவன்.

இதனால் ஸ்ரீ ஹரி பிறரை அபேக்ஷிக்காமல் செய்கிறவர். ஜீவன் அவருக்கு அதீனமாகச் செய்பவன் என அறிந்து அவருடைய ப்ரீதியின் பொருட்டு தன் வர்ணாசிரமத்துக் குரியதைச் செய்வதே கர்மம், எனப்படும். இந்தக் கர்மாவைச் செய்யாதிருத்தல் அகர்மம் எனப்படும்.

சாஸ்திரங்களில் செய்யக்கூடாது எனத் தடுக்கப்பட்டிருப்பது விகர்மம் எனப்படும்.

**2–ம் அர்த்தம்:–** [கரோடீஸ்மின் மீயத இதி, கர்ம ஜீவ உதாஹ்ருத: | **கர்ம – கர;** – கர்மவிதி:, **தேன மீயதே விஷயீ க்ரியதே** – விதிக்குக் கட்டுப்பட்ட ஜீவன்; **அகர்ம** – விதிக்குக் கட்டுப்படாத ஈசுவரன் என்றும் கர்மமின்மை என்றும் அர்த்தம்.] **கர்மணி** – விதிக்குக் கட்டுப்பட்ட ஜீவனிடம்; **அகர்ம** – கர்மமின்மையை (அஸ்வதந்திரன் ஆனதால்; **ய: பச்யேத்** – யார் அறிகிறானோ, அம்மாதிரியே; **அகர்மணி** – ஸ்ரீ ஹரியிடம்; **கர்ம** – எல்லாக் கர்மங்களும் அவருடையதே என்று; **ய: பச்யேத்** – யார் அறிகிறானோ; **ஸ:** – அவன்; **புத்திமான்** – சிறந்த அறிவாளி; **யுக்த:** – ஞானோபாய முடையவன்; **க்ருத்ஸ்னகர்மக்ருத்** – எல்லாக் கர்மங்களைச் செய்வதின் பலனான ஞானத்தையும் மோக்ஷத்தையும் அடைந்தவன்.

நம் வர்ணாசிரமத்துக்குரிய கர்மங்களை பலனில் ஆசையையும், ஸங்கல்பத்தையும் விட்டுவிட்டுச் செய்ய வேண்டும் என்று (19 to 23) 5 சுலோகங்களில் கூறுகிறார்.

19. यस्य सर्वे समारंभाः कामसङ्कल्पवर्जिताः ।
ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥

யஸ்ய ஸர்வே ஸமாரம்ப$^4$ா:, காம ஸங்கல்ப வர்ஜிதா: |
ஜ்ஞானாக்நி த$^3$க்த$^4$கர்மாணம், தமாஹு: பண்டி$^3$தம் பு$^3$த$^4$ா: || 19

**யஸ்ய** – யாருடைய; **ஸர்வே** – எல்லா; **ஸமாரம்பா:** – கர்மங்களின் தொடக்கங்களும்; **காம ஸங்கல்ப வர்ஜிதா: – காம** – பலனில் ஆசை, **ஸங்கல்ப** – இந்தக் கர்மத்தினால் ஸ்வர்க்கம் முதலியதைச் சாதிக்கப் போகிறேன் என்ற எண்ணம்; இவ்விரண்டும் இல்லாதவைகளோ; **தம்** – அவனை; **ஜ்ஞான அக்நி தக்த கர்மாணம்** – (பகவான்தான் ஸ்வதந்திர கர்த்தா என்ற) அறிவாகிற நெருப்பால், எரிக்கப் பட்ட கர்மத்தையுடையவனை அதாவது தனக்கு ஸ்வதந்திர மான கர்மா இல்லை என்று அறிந்தவனை; **பண்டிதம்** – உண்மையை அறிந்தவன் (தத்வஞானி) என; **புதா:** – ஞானிகள்; **ஆஹு:** – கூறுகிறார்கள்.

பலனிலுள்ள பற்றையும் விடவேண்டும் என்கிறார்.

20. त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किंचित्करोति सः ॥

த்யக்த்வா கர்மப[2]லாஸங்கம், நித்ய த்ருப்தோ நிராஶ்ரய: |
கர்மண்யபி[4]ப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ: || 20

**கர்ம பல ஆஸங்கம்** - *கர்மத்திலும், அதன் பலனிலும் அதிகப் பற்றுதலை;* **த்யக்த்வா** - *விட்டுவிட்டு;* **நித்ய த்ருப்த:** - *எப்போதும் திருப்தியுள்ளவரும்;* **நிராச்ரய:** - *ஆச்ரயமில்லாத வருமான (பகவானின் ஸாரூப்யத்தையுடையவன்) என்று அறிந்து;* **கர்மணி** - *காரியத்தில்;* **அபி ப்ரவ்ருத்த: அபி** - *நன்கு ஈடுபட்டபோதிலும்;* **ஸ:** - *அவன்;* **கிஞ்சித்** - *எதையும்;* **ந கரோதி ஏவ** - *(ஸ்வாதந்தர்யமில்லாததால்) செய்வதே இல்லை. (கர்மம் அவனைக் கட்டுப்படுத்தாது)* **(அநிராச்ரய:** - *அ இதி ப்ரஹ்ம, அ - பகவானை;* **நிதராம் ஆஶ்ரய:** - *சிறந்த ஆச்ரய மாகக் கொண்டவன் என்றும் அர்த்தம்.)*

காமத்தையும் ஸங்கல்பத்தையும் விட்டுவிடுவதற்கு உபாயத்தைக் கூறுகிறார்.

21. निराशीः यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।
शारीरं केवलं कर्म कुर्वन् नाप्नोति किल्बिषम् ॥

நிராஶீ: யத சித்தாத்மா, த்யக்த ஸர்வ பரிக்[3]ரஹ: |
ஶாரீரம் கேவலம் கர்ம, குர்வன் நாப்னோதி கில்பி[3]ஷம் || 21

*(ஸ: - அவன்)* **யத சித்த ஆத்மா** - *ஞாபகசக்தி என்ற சித்தத்தையும் (3-40 குறிப்பு: பார்க்க.) மனதையும், அடக்கின வனாகி;* **நிராஶீ:** - *ஆசையில்லாதவனாய்;* **த்யக்த ஸர்வ பரிக்ரஹ:** - தேகம், இந்திரியங்கள் முதலிய எல்லாப் பொருள் களிலும், அபிமானத்தை விட்டவனாகிறான்; **ஶாரீரம்** - உடல் வாழ்க்கைக்கு; **கேவலம்** - மாத்திரம்; **கர்ம** - கர்மத்தை; (அல்லது **கேவலம்** - காமம் முதலியவையில்லாத; **ஶாரீரம்** - தேகம், இந்திரியம், முதலியவற்றால்; **கர்ம** - கர்மத்தை;) **குர்வன்** - செய்துகொண்டு; **கில்பிஷம்** - கர்ம பந்தத்தை (ஸம்ஸாரத்தை); **ந ஆப்னோதி** - அடைவதில்லை.

**குறிப்பு:** மனதை அடக்குவதே காம ஸங்கல்பங்களை விட்டு விட உபாயமாகும்.

சித்தத்தையும் மனதையும் அடக்கினவனின் லக்ஷணத்தைக் கூறுகிறார்.

22. यद्दच्छा लाभसंतुष्टः द्वन्द्वातीतो विमत्सरः ।
समः सिद्धौ असिद्धौ च कृत्वाऽपि न निबध्यते ॥

யத்ருச்ச$^{2}$ா லாப$^{4}$ ஸந்துஷ்ட:, த்$^{3}$வந்த்$^{3}$வா தீதோ விமத்ஸர: |
ஸமஸ் ஸித்தௌ அஸித்தெ$^{4}$ள ச, க்ருத்வாऽபி ந நி$^{3}$பத்$^{4}$யதே || 22

**யத்ருச்சா லாப ஸந்துஷ்ட:** – *தன் முயற்சியின்றி (பகவதிச்சையால்) கிடைத்த பொருளினால் திருப்தி யடைந்தும்;* **த்வந்த்வ அதீத:** – *சுகம் துக்கம், லாபம் நஷ்டம் முதலிய ஜோடிகளைக் கடந்தும்; அதாவது* **ஸித்தௌ** – *கிடைத்தபொழுதும்;* **அஸித்தௌ ச** – *கிடைக்காதபொழுதும்;* **ஸம:** – *(முறையே உற்சாகமும் சோர்வும் இல்லாது) ஒரே விதமாயிருந்தும்;* **விமத்ஸர:** – *பொறாமை அதாவது பிறர் தனக்கு வசப்படவில்லையே என்ற துக்கம் இல்லாமலும், இருப்பவன்;* **க்ருத்வா அபி** – *கர்மத்தைச் செய்தாலும் கூட;* **ந நிபத்யதே** – *கர்மபந்தத்தால் கட்டுப்படுவதில்லை. (முக்தி யடைகிறான்.)*

சுலோகம் 18 முதல் 22 வரை கூறப்பட்டதைத் தொகுத்துக் கூறுகிறார்.

23. गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थित चेतसः ।
यज्ञाय आचरतः कर्म समग्रं प्रविलीयते ॥

க$^{3}$தஸங்கஸ்ய முக்தஸ்ய, ஜ்ஞானாவஸ்தி$^{2}$த சேதஸ: |
யஜ்ஞாய ஆசரத: கர்ம, ஸமக்$^{3}$ரம் ப்ரவிலீயதே || 23

**கத ஸங்கஸ்ய** – *பலனில் பற்று இல்லாதவனும் (சு. 19, 20);* **முக்தஸ்ய** – *தேகம், இந்திரியம் முதலியவற்றில் அல்லது ஸ்வாதந்தர்யத்தில் அபிமானத்தை விட்டவனும் (சு. 21);* **ஜ்ஞான அவஸ்தித சேதஸ:** – *விஷ்ணுவின் ஞானத்தில் ஆழ்ந்த மனதையுடையவனும் (சு. 18, 20);* **யஜ்ஞாய** – *(யஜ்ஞோ வை விஷ்ணு:) விஷ்ணுவின் ப்ரீதியின் பொருட்டு;* **கர்ம** – *கர்மத்தை;* **ஆசரத:** – *செய்கிறவனுமான புருஷனின்;* **ஸமக்ரம்** *(கர்ம)* – *எல்லாக் கர்மங்களும்;* **ப்ரவிலீயதே** – *அடியோடு அழிகின்றன. (கட்டுப்படுத்துவதில்லை).*

குறிப்பு: 4-16ல் குறிப்பிட்ட கர்ம ஸ்வருபம் இத்துடன் விளக்கப் பட்டது.

மேற்படி விஷ்ணுவின் ஞானத்தில் ஆழ்ந்த மனதைப் பெற்றிருத்தல் என்பதை விளக்குகிறார்.

24. ब्रह्म अर्पणं ब्रह्म हविः ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्म कर्म समाधिना ॥

ப்ரஹ்ம அர்ப்பணம், ப்ரஹ்ம ஹவி:, ப்ரஹ்மாக்[3]நௌ ப்ரஹ்மணா ஹுதம் |
ப்ரஹ்மைவ தேன க[3]ந்தவ்யம், ப்ரஹ்ம கர்ம ஸமாதி[4]னா || 24

**அர்ப்பணம்** – *(அர்ப்யதே அநேன)* ஹோமத்திற்குரிய ஸ்ருக், ஸ்ருவம் முதலிய கருவிகள்; **ப்ரஹ்ம** – குணபூர்ணனான விஷ்ணுவே; **ஹவி:** – ஹோமம் செய்யப்படும் நெய் முதலிய பொருள்கள்; **ப்ரஹ்ம** – விஷ்ணுவே. **ப்ரஹ்மாக்நௌ** – விஷ்ணு வாகிற நெருப்பில்; **ப்ரஹ்மணா** – விஷ்ணுவான யஜமானனால் *(யாகம் செய்பவனால்)*; **ஹுதம்** – ஹோமம் செய்தல் என்ற செய்கையும்; **ப்ரஹ்ம** – விஷ்ணுவே. **ஸமாதினா** . *(விஷ்ணுவான)* தியானத்துடன்; *(***ஸஹிதம்** *– கூடின)*; **கர்ம** – அக்நிஹோத்ரம், யாகம் முதலிய கர்மங்களும்; **ப்ரஹ்ம** – விஷ்ணுவே. *(4–14–ல்,* **இதி** *– என்று;* **ய:** *– யார்;* **அபிஜானாதி** *– நன்கு அறிகிறானோ);* **தேன ஏவ** – *அவனாலேயே;* **ப்ரஹ்ம** – *விஷ்ணு;* **கந்தவ்யம்** – *அடையத்தகுந்தவர்.*

குறிப்பு: இங்கு (1) ஹோமக் கருவிகள். (2) ஹோமப் பொருள்கள். (3) அக்நி. (4) யஜமானன். (5) ஹோமம் செய்தல் என்ற செய்கை. (6) தியானம். (7) அக்நிஹோத்ரம் முதலிய கர்மங்கள் – இந்த ஏழுக்கும், விஷ்ணுவுக்கும் ஐக்யம் கூறப்படுகிறது. இந்த ஐக்யம் ஸகல சுருதிஸ்ம்ருதி புராணங்களுக்கு விருத்தமானதால் இதன் கருத்து:–

*த்வத[3]தீனம் யதஸ் ஸர்வம், அதஸ் ஸர்வோ மதோ ப[4]வான்*
*வதந்தி முனயஸ் ஸர்வே, ந து ஸர்வ ஸ்வருபதா: ||*

எல்லாம் உமது அதீனமாயிருக்கின்றன. (நீர் எல்லாவற்றிற்கும் யஜமானர்) அதனால் நீரே, 'எல்லாம்' எனப்படுகிறீர். என்று எல்லா ஞானிகளும் கூறுகின்றனர். நீரே எல்லாப் பொருள்களாக இருக்கிறீர் என்றல்ல. இந்த பாத்ம புராணத்தின்படியும், 1-4-3 பிரம்மசூத்திரத்தின் படியும், மேற்படி ஏழும் விஷ்ணுவுக்கு அதீனமாயுள்ளன என்று அறிய வேண்டும். இம்மாதிரியே ஐக்யம் கூறும் 7-8; 9-16 முதல் 18; 10-21 முதல் 38 சுலோகங்களுக்கும், தத் த்வமஸி முதலிய சுருதிகளுக்கும் அர்த்தம் செய்யவேண்டும்.

மேலும், இந்த பேதத்தை அறிவிக்கவே இங்கு ப்ரஹ்மைவ ஹுதம் என்று கூறாமல் ப்ரஹ்மனா ஹுதம் என்றும், ஸமாதினா கர்ம – என்றும் பிரித்துக் கூறியுள்ளார். அதைத் தழுவி – ப்ரஹ்மணி அர்ப்பணம், ப்ரஹ்மண: ஹவி:, ப்ரஹ்மண: அக்நௌ, ப்ரஹ்மண: கர்ம, ப்ரஹ்மண: ஸமாதி:–என்று பேதமே கூறவேண்டும். அப்பொழுதுதான் முற்கூறப்பட்ட ஸ்வாதந்தர்யாபிமானத்தை விட வேண்டும் என்பது பொருந்தும்.

சுலோகம் 23 முடிய கர்ம ஸ்வரூபம் விளக்கப்பட்டது. அதன் பல வகைகள் இது முதல் சுலோகம் 30 முடிய ஆறு சுலோகங்களில் கூறப்படுகின்றன.

25. दैवमेव अपरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नौ अपरे यज्ञं यज्ञेनैव उपजुह्वति ॥

தை³வமேவ அபரே யஜ்ஞம், யோகி³ன: பர்யுபாஸதே |
ப்ரஹ்மாக்நௌ அபரே யஜ்ஞம், யஜ்ஞேனைவ உபஜுஹ்வதி || 25

**அபரே** - *சில;* **யோகின:** - *ஸன்யாஸிகள்;* **தைவம்** - *விஷ்ணுவை;* **யஜ்ஞம்** *(யதா பவதி ததா)* - *யாகமாகவே;* **பரி உபாஸதே** - *நன்கு உபாஸிக்கிறார்கள் (பகவானின் உபாஸனையையே யாகமாக அனுஷ்டிக்கின்றனர்).* **அபரே** - *சிலர் (கிருஹஸ்தர்கள்);* **ப்ரஹ்மாக்நௌ** - *விஷ்ணு என்ற அக்நியில்;* **யஜ்ஞேன ஏவ** - *யஜ்ஞன் என்ற விஷ்ணுவின் பொருட்டே;* **யஜ்ஞம்** - *அக்நிஹோத்ரம் முதலிய யாகங்களை, அல்லது* **யஜ்ஞேன** - *அக்நிஹோத்திரம் முதலிய யாகங்களால்;* **யஜ்ஞம்** - *விஷ்ணுவை;* **உபஜு ஹ்வதி** - *பூஜிக்கின்றனர்.*

குறிப்பு: (1) எல்லாம் விஷ்ணுவின் அதீனம் என்று அறிந்து, தம் ஸ்வாதந்தர்ய அபிமானத்தைவிட்டு, செய்யும் கர்மத்தை விஷ்ணுவிடம் ஸமர்ப்பிக்கின்றனர், என்று கருத்து.

(2) யஜ்ஞேனைவ - என்ற பதத்தைப் பின்வரும் சுலோகங்களிலும் சேர்க்க வேண்டும்.

26. श्रोत्रादीनि इन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन् विषयानन्ये इन्द्रियाग्निषु जुह्वति ॥

ஶ்ரோத்ராதீனி இந்த்³ரியாண்யன்யே, ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி |
ஶப்த³ாதீ³ன் விஷயான் அன்யே, இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி || 26

**அன்யே** - *மற்ற;* **(யோகின:** - *பிரம்மசாரிகள்);* **ச்ரோத்ர ஆதீனி** - *காது முதலிய;* **இந்த்ரியாணி** - *ஞானேந்திரியங்களை;* **ஸம்யம அக்நிஷு** - *நன்கு அடக்குதல் ( என்ற நெருப்புகளில்* **(யஜ்ஞேன ஏவ** - *விஷ்ணுவின் பொருட்டே)* **ஜுஹ்வதி** - *ஹோமம் செய்கிறார்கள். அதாவது இந்திரியங்களை விஷயங் களில் செல்லாமல் தடுத்து அடக்குவதையே,* **யாகமாக** - *பகவத் பூஜையாகக் கருதுகிறார்கள்.* **அந்யே** - *மற்றவர்கள் (கிருஹஸ்தர்கள்);* **ஶப்த ஆதீன்** - *ஶப்தம் முதலிய (ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம்) விஷயங்களை;* **இந்த்ரிய அக்நிஷு** - *காது முதலிய ஞானேந்திரியங்கள் என்ற நெருப்புகளில்;* **ஜுஹ்வதி** -

ஹோமம் செய்கின்றனர். அதாவது விஷய ஸுகங்களை அநுபவிப்பதைப் பகவானின் பூஜையாகக் கருதுகிறார்கள்.

27. सर्वाणि इन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।
आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥

ஸர்வாணி இந்த்ரிய கர்மாணி, ப்ராண கர்மாணி சாபரே |
ஆத்ம ஸம்யம யோக³ாக்நௌ, ஜுஹ்வதி ஜ்ஞான தீ³பிதே || 27

**அபரே** - வேறு சிலர் (தியான யோகிகள்); **ஸர்வாணி** - எல்லா; **இந்த்ரிய கர்மாணி** - (வாய், கைகள், கால்கள், பாயு, உபஸ்தம் என்ற) கர்மேந்திரியங்களின் தொழில்களையும்; **ப்ராண கர்மாணி ச** - ப்ராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் என்ற வாயுக்களின் தொழில்களையும்; **ஜ்ஞான தீபிதே** - ஞானத்தினால் பிரகாசிக்கிற; **ஆத்ம ஸம்யம யோக அக்நௌ** - மனதை அடக்குதல் என்ற உபாயமாகிற நெருப்பில்; (**யஜ்ஞேன ஏவ** - விஷ்ணுவின் பொருட்டே); **ஜுஹ்வதி** - ஹோமம் செய்கின்றனர். அதாவது மனதை அடக்கி, கர்மேந்திரியங்களின் கார்யங்களையும், பிராணாதிகளின் காரியங்களையும் அடக்குதலை, பகவானின் பூஜையாகக் கருதுகிறார்கள்.

| கர்மேந்திரியங்கள் | | வேலைகள் |
|---|---|---|
| 1. வாய் | – | பேசுதல் முதலியன |
| 2. கைகள் | – | எடுத்தல் முதலியன |
| 3. கால்கள் | – | நடத்தல் முதலியன |
| 4. பாயு | – | மலம்கழித்தல் முதலியன |
| 5. உபஸ்தம் | – | சிறுநீர் கழித்தல் முதலியன |

(3–43 பார்க்க)

முக்கிய ப்ராணனின் ரூபங்கள்

| பெயர்கள் | | வேலைகள் |
|---|---|---|
| 1. ப்ராணன் | – | மேலே செல்லுதல் |
| 2. அபானன் | – | கீழே செல்லுதல் |
| 3. வ்யானன் | – | நீட்டுதல் முதலியன |
| 4. உதானன் | – | உயரச் செல்லுதல் |
| 5. ஸமானன் | – | எப்போதும் கூடவிருத்தல் |

தாஸ ப்ராணர்கள்

1. நாகன் – ஏப்பம் விடுதல்
2. கூர்மன் – கண்ணைத் திறத்தல், மூடுதல்
3. க்ருகரன் – தும்மல்
4. தேவதத்தன் – கொட்டாவி விடுதல்
5. தனஞ்ஜயன் – எப்போதும் கூடவிருத்தல்

28. द्रव्ययज्ञाः तपोयज्ञाः योगयज्ञाः तथाऽपरे ।
स्वाध्याय ज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥

த்ரவ்ய யஜ்ஞா: தபோ யஜ்ஞா:, யோக யஜ்ஞா: தத$^2$ாSபரே |
ஸ்வாத்$^4$யாய ஜ்ஞானயஜ்ஞாஸ்ச, யதய: ஸம்ஶிதவ்ரதா: || 28

**ததா** – அவ்வாறே; **அபரே** – மற்றவர்களான; **த்ரவ்ய யஜ்ஞா:** – நெய் முதலிய பொருள்களால் (யஜ்ஞேனைவ – பகவானின் பொருட்டே) யாகம் செய்பவர்கள்; **தபோ யஜ்ஞா:** – க்ருச்ரம், சாந்திராயணம் முதலிய தவங்களை பகவானின் பூஜையாகக் கருதிச் செய்பவர்கள்; **யோக யஜ்ஞா:** – தியானத்தைப் பகவானின் பூஜையாகக் கருதிச் செய்பவர்கள்; **ஸ்வாத்யாய ஜ்ஞான யஜ்ஞா:** – வேதங்களை ஓதுவதையும், ஶ்ரவணம், மனனம் முதலியவைகளையும், பகவத் பூஜையாகக் கருதிச் செய்பவர்கள்; (இவர்கள் அனைவரும்), **யதய:** – முயற்சியை உடையவர்கள். **ஸம்ஶித வ்ரதா:** – மிகக்கடுமை யான விரதத்தை யுடையவர்கள்.

**குறிப்பு: யஜ்ஞா:**– யாகங்களைச் செய்பவர்கள் என்ற அர்த்தத்தைக் கவனிக்க.

29. अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथाऽपरे ।
प्राणापानगती रुद्ध्वा प्राणायाम परायणाः ॥

30. अपरे नियताहाराः प्राणान् प्राणेषु जुह्वति ।

அபானே ஜுஹ்வதி ப்ராணம், ப்ராணே அபானம் தத$^2$ாSபரே |
ப்ராணாபான க$^3$தீருத்$^4$த்வா, ப்ராணாயாம பராயணா: || 29

அபரே நியதாஹாரா: ப்ராணான் ப்ராணேஷு ஜுஹ்வதி |

*29.* **ததா** – அவ்வாறே; **அபரே** – மற்றவர்கள்; **ப்ராணா யாம பராயணா:** – ச்வாஸவாயுவை அடக்குவதில் ஈடுபட்ட வர்களாய்; **ப்ராண அபான கதீ:** – ப்ராணன், அபானன் இரண்டின் போக்குகளை (பூரகத்தையும், ரேசகத்தையும்)

**ருத்த்வா** – *தடுத்து; (கும்பகத்தில் இருந்துகொண்டு);* **ப்ராணன்** – *பிராணனை;* **அபானே** – *அபானனிடமும்;* **அபானம்** – *அபானனை;* **ப்ராணே** – *ப்ராணனிடமும்;* **ஜுஹ்வதி** – *பிரவேசிக்கச் செய்வதை, பகவானின் பூஜையாகக் கருது கிறார்கள்.*

*30.* **அபரே** – *மற்றவர்கள்;* **நியத ஆஹாரா:** – *ஆகார நியமத்தையுடையவர்களாய்;* **ப்ராணான்** – *ஞானேந்திரியங் களின் சக்திகளை;* **ப்ராணேஷு** – *அந்தந்த இந்திரியங்களில்;* **ஜுஹ்வதி** – *ஒடுக்குகிறார்கள். (இதைப் பகவத் பூஜையாகக் கருதுகிறார்கள்.) அல்லது* **ப்ராணான்** – *கர்மேந்திரியங்களின் அபிமானி தேவர்களை (3–43 பார்க்க)* **ப்ராணேஷு** – *மனம் முதலியவற்றின் அபிமானி தேவர்களிடம்;* **ஜுஹ்வதி** – *லய மடைகின்றனர் எனத் தியானிக்கின்றனர். (இந்த அர்த்தத்தில் ஆஹார நியமம் தனி யஜ்ஞுமாகும்.)*

குறிப்பு: (a) பிராணாயாமம் (1) பூரகம் - மூச்சை உள்ளே இழுத்தல். (2) ரேசகம் - மூச்சை வெளியே விடுதல். (3) கும்பகம் - உள்ளிழுத்த மூச்சை அடக்கிவைத்தல், என்ற மூன்றும் சேர்ந்தது. இவற்றுள் கும்பகம்தான் முக்கியமானது.

(b) ஆஹாரநியமம் - நமது வயிற்றின் பாதியை அன்னம் முதலிய உணவுப் பொருள்களால் நிரப்பியும், கால் பாகத்தை ஜலத்தால் நிரப்பியும், மீதி கால் பாகத்தைக் காற்றோட்டத் திற்காகக் காலியாகவும் விட்டுவிடவேண்டும். ஸாவகாச மாகச் சாப்பிடுங்கள் என்று உபசரிப்பதின் உட்கருத்து, வயிற்றில் அவகாசத்துடன் இடைவெளியுடன் சாப்பிடுங்கள், என்று இதையொட்டி ஏற்பட்டது. மற்றும், உபவாஸம், யாகவ்ரதம், முதலிய பல நியமங்களும் உண்டு.

*அவர்களனைவரையும் புகழ்கிறார்.*

सर्वेप्येते यज्ञविदः यज्ञक्षपितकल्मषाः ॥

ஸர்வேப்யேதே யஜ்ஞவித:, யஜ்ஞக்ஷபித கல்மஷா: || 30

**ஏதே** – இந்த *(சு. 25 முதல் கூறப்பட்ட 12 விதமான);* **ஸர்வே அபி** – *எல்லோருமே;* **யஜ்ஞவித:** – *பகவத் பூஜையாகிற யாகத்தை அறிந்தவர்கள்;* **யஜ்ஞக்ஷபித கல்மஷா:** – *அந்த யாகங்களை அனுஷ்டிப்பதால் பாபங்களைப் போக்கிக் கொண்டவர்கள் ஆவர்.*

இம்மாதிரி பல யாகங்களை அறிந்து அனுஷ்டிப் பவர்கள், அநுஷ்டிக்காதவர்கள், இருவர்களின் பலனைக் கூறுகிறார்.

31. यज्ञशिष्टामृतभुजः यान्ति ब्रह्म सनातनम् ।
नायं लोकोऽस्ति अयज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥

யஜ்ஞ ஶிஷ்டாம்ருதபு[4]ஜ:, யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம் |
நாயம் லோகோSஸ்தி அயஜ்ஞஸ்ய, குதோSன்ய: குருஸத்தம || 31

**குருஸத்தம** – குரு வம்சத்துச் சிரேஷ்டனே! **யஜ்ஞ ஶிஷ்ட அம்ருதபுஜ:** – யாகத்தில் தேவதைகளுக்கு அர்ப்பித்த ஹவிஸ்ஸின் மீதியான அமிருதத்தை உண்பவர்கள்; அதாவது யாகம் செய்பவர்கள்; **ஸநாதனம்** – அநாதி நித்யரான; **ப்ரஹ்ம** – குணபூர்ணரான விஷ்ணுவை; **யாந்தி** – அடைகின்றனர்; **அயஜ்ஞஸ்ய** – ஒருவித யாகத்தையும் செய்யாதவனுக்கு; **அயம் லோக:** – (அற்ப சுகத்தையுடைய) இந்த மானிட உலகமே; **ந அஸ்தி** – இல்லை; **அன்ய:** – மற்ற ஸ்வர்க்கம் முதலிய தேவலோகங்கள்; **குத:** – எங்கிருந்து கிடைக்கும்? (ஆகவே யாகமாகிற பகவத் பூஜையைச் செய்யவேண்டும்.)

சுலோகம் 25ல் ஆரம்பித்த பலவகையான கர்மங்களை முடிக்கிறார்.

32. एवं बहुविधा यज्ञाः वितताः ब्रह्मणो मुखे ।
कर्मजान् विद्धि तान् सर्वान् एवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥

ஏவம் பஹுவித[4]ா யஜ்ஞா:, விததா: ப்[3]ரஹ்மணோ முகே[2] |
கர்மஜான் வித்தி[4] தான் ஸர்வான், ஏவம் ஜ்ஞாத்வா
விமோக்ஷ்யஸே || 32

**ஏவம்** – இம்மாதிரி; **பஹுவிதா:** – (மனோ வாக்கு காயங்களினால் செய்யப்படும்) பலவிதமான; **யஜ்ஞா:** – யாகங்கள்; **ப்ரஹ்மண:** – குணபூர்ணரான ஸ்ரீ ஹரியின்; **முகே** – வாயில்; **விததா:** – விசேஷமாகப் பரவியுள்ளன. (2–24ல் எல்லா யாகங்களிலும் ஹவிஸ்ஸை சாப்பிடுபவர் என்பதால்; **'வாயால்'** எனப்பட்டது.) இவற்றில் ஞான யஜ்ஞம் போதுமே, யுத்தம் எனும் கர்மயஜ்ஞம் ஏன்? என்றால்; **தான் ஸர்வான்** – முற்கூறப்பட்ட ஞானயஜ்ஞம் முதலிய எல்லாவற்றையுமே; **கர்மஜான்** – மானஸிக கர்மத்தாலோ, வாசிக கர்மத்தாலோ, காயிக கர்மத்தாலோ, உண்டானவை என்று; **வித்தி** – அறிவாயாக; **ஏவம்** – இம்மாதிரி; **ஜ்ஞாத்வா** – (நீ அறிந்தால், யுத்தமும் உனக்கு விதிக்கப்பட்ட கர்மமேயாகும் என) அறிந்து, யுத்தத்தைச் செய்தே; **விமோக்ஷ்யஸே** – மோக்ஷத்தை அடைய விரும்புவாய்.

குறிப்பு: கர்மமாகிற யுத்தத்தை விட்டு, ஞானயஜ்ஞம் செய்கிறேன் என்றால் ஞானயஜ்ஞமும் ஒரு கர்மமானதால் கர்மத்தை விட்டு விட்டதாக ஆகாது. மேலும் உனக்கு விதிக்கப்பட்ட கர்மத்தை விட்டு, விதிக்கப்படாத கர்மத்தைச் செய்த தோஷமும் ஏற்படும். ஆகவே யுத்தம் புரிவாயாக.

முற்கூறப்பட்ட யஜ்ஞங்களில் ஞான யஜ்ஞம் சிறந்தது என்று விளக்குகிறார்.

33. श्रेयान् द्रव्यमयात् यज्ञात् ज्ञानयज्ञः परंतप ।
सर्वं कर्म अखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥

ஶ்ரேயான் த்[3]ரவ்யமயாத் யஜ்ஞாத், ஜ்ஞான யஜ்ஞ: பரம்தப |
ஸர்வம் கர்ம அகி[2]லம் பார்த்த[2], ஜ்ஞானே பரிஸமாப்யதே || 33

**பரம்தப** – *சத்ருக்களை வாட்டுபவனே!* **த்ரவ்யமயாத்** – *நெய் முதலிய பொருள்களால் செய்யப்படும்;* **யஜ்ஞாத்** – *யாகத்தைக் காட்டிலும் (மற்ற யாகங்களையும் காட்டிலும்);* **ஜ்ஞான யஜ்ஞ:** – *பகவத் ஞானத்தைச் சம்பாதிப்பது என்ற யாகம்;* **ச்ரேயான்** – *உயர்ந்தது. ஏனெனில்,* **பார்த்த** – *குந்தீ புத்திரனே!* **அகிலம்** – *மீதியில்லாததும், எல்லா அங்கங்களுடன் செய்யப்பட்டதுமான; (அல்லது,* **ஆ** *- மிகவும்,* **கிலம்** – *அற்பமான;)* **ஸர்வம் கர்ம** – *எல்லா கர்மங்களும்;* **ஜ்ஞானே** *(ஜாதே) – பகவத் ஞானத்தை உண்டுபண்ணினால்தான்;* **பரிஸமாப்யதே** – *நன்கு பூர்த்தியாகின்றன. (பலனுள்ளவையாகின்றன).*

**குறிப்பு: கர்மணா ஜ்ஞானமாதனோதி** - கர்மானுஷ்டானத்தினால், சித்த சுத்தியடைந்து பகவத் ஞானம் ஏற்படவேண்டும். அது ஏற்படாவிட்டால் கர்மம் வீணே. ஆகையால் ஞானம் கர்மத்தைக் காட்டிலும் சிறந்தது.

ஆகவே அந்த உயர்ந்த ஞானத்தைப் புகழ்ந்து, அதைச் சம்பாதிக்கும் வழியை இரு சுலோகங்களில் கூறுகிறார்.

34. तत् विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनः तत्वदर्शिनः ॥

35. यत् ज्ञात्वा न पुनर्मोहं एवं यास्यसि पाण्डव ।
येन भूतान्यशेषेण द्रक्ष्यसि आत्मन्यथो मयि ॥

தத் வித்தி[4] ப்ரணிபாதேன, பரிப்ரஶ்னேன ஸேவயா |
உபதே[3]க்ஷயந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞானின: தத்வத[3]ர்சின: || 34

யத் ஜ்ஞாத்வா ந புனர்மோஹம், ஏவம் யாஸ்யஸி பாண்டவ |
யேன பூ[4]தான்யஶேஷேண, த்ரக்ஷ்யஸி ஆத்மன்யதே[2]ா மயி || 35

முதலில் சுலோகம் 35க்கு அர்த்தம் கூறவேண்டும்.

*35.* **தத்** *(சு. 34) – (ஞானம் கர்மத்தைக் காட்டிலும் சிறந்தது.)* ஆகையால்; **பாண்டவ** – பாண்டு மகாராஜனின் புத்திரனே!; **யத்** – *(என்னால் கூறப்படும்)* எதை; **ஜ்ஞாத்வா** – அறிந்த பிறகு; **புன:** – மறுபடியும்; **ஏவம்** – முதல் அத்தியா யத்தில் நீ கூறியபடி பந்துக்களைப்பற்றிய; **மோஹம்** – விபரீத ஞானத்தை; **ந யாஸ்யஸி** – அடைய மாட்டாயோ; **யேன** – எந்த ஞானத் தினால்; **அதோ** – அதற்காக (விபரீத ஞானத்தைப் போக்கு வதற்காக); **ஆத்மனி** – எல்லோருடைய அந்தர்யாமியான அல்லது எங்கும் பரவியுள்ள; **மயி** – என்னிடம்; (என்னை ஆச்ரயித்து); **அதோ** – அதனாலே – எங்கும் பரவியிருப்பதாலே; **பூதானி** – பிரம்மா முதலிய எல்லா ஜீவர்களையும்; **அசேஷேண** – மீதியில்லாது; **த்ரக்ஷ்யஸி** – பார்ப்பாயோ;

*34.* **தத்** – அந்த (அறியவேண்டிய) விஷயத்தை; **தத்வ தர்சின:** – உண்மையை அறிந்த; **ஜ்ஞானின:** – ஞானிகள் (ஞானியாகிற நான்); **ப்ரணிபாதேன** – பக்தியுடன் கூடிய உன் நமஸ்காரத்தாலும்; **ஸேவயா** – பணிவிடையாலும்; **பரிப்ரச்னேன** – பல தத்துவங்களைப்பற்றிய உன் கேள்வி களாலும்; **தே** – உனக்கு; **ஜ்ஞானம்** – (ஜ்ஞாயதே அநேன) ஞானத்தை யுண்டுபண்ணும் சாஸ்திரத்தை; **உபதேக்ஷ்யந்தி** – உபதேசிப்பார்கள். (இனியும் உபதேசிப்பேன்) **தேப்ய:** – அவர் களிடமிருந்து; (அதாவது என்னிடமிருந்து); **தத்** – அந்த அறிய வேண்டியதை; **வித்தி** – அறிவாயாக. (நீ ஞானியானதால் அதை அறிந்திருந்தும், அது மறந்து போகாமல் இருக்க அறிவாயாக.)

**குறிப்பு:** 1. எல்லோரையும் என்னிடம் பார்ப்பாய் – என்றதால் இனி 11-ம் அத்யாயத்தில் காட்டும் விசுவரூபத்தைக் குறிப்பிடுகிறார்.

2. இங்கு வேறு ஞானிகள் அர்ஜுனனுக்கு உபதேசிக்கப் போவதாகத் தோன்றுகிறது. உண்மையில், அவனுக்கு உபதேசம் செய்யவே ஸ்ரீ கிருஷ்ணர் முற்பட்டிருக்கிறார். 2-11 முதல் உபதேசத்தைச் செய்துகொண்டும் இருக்கிறார். 7-2; 8-11, 9-1, 10-1-ல் பன்முறை 'நான் உனக்கு ஞானத்தையும், விஜ்ஞானத்தையும் கூறுவேன்', என்று உபதேசிக்கப் போகிறார். ஆகவே வேறு ஞானிகள் அல்ல. நானே உபதேசிக்கப்போகிறேன்', என்ற அர்த்தத்தை அறியவும். இம்மாதிரியே, ஸ்ரீ கிருஷ்ணர் 3-30ல் 'என்னிடம் எல்லாக் கர்மங்களையும் அர்ப்பணம் செய்து', என்றும், 5-10-ல், 'குணபூர்ணனான விஷ்ணுவிடம் எல்லாக் கர்மங்களையும் அர்ப்பணம்செய்து', என்றும் கூறியுள்ளார். 18-62ல், 'எல்லாப் பிராணிகளின் இதயத்திலுள்ள ஈசுவரனைச் சரணமடைவா யாக,

என்றும்; 18-66-ல், 'என்னையே சரணமடைவாயாக', என்றும் கூறியுள்ளார்; என்பதையும் அறியவும்.

அந்த ஞானத்தையே மூன்று சுலோகங்களில் (36 முதல் 38 வரை) புகழ்கிறார்.

36. अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ॥

அபிசேத் அஸி பாபேப்$^4$ய:, ஸர்வேப்$^4$ய: பாப க்ருத்தம: |
ஸர்வம் ஜ்ஞான ப்லவேனைவ, வ்ருஜினம் ஸம்தரிஷ்யஸி || 36

**ஸர்வேப்ய:** – *எல்லா;* **பாபேப்ய: அபி** – *(மஹாபாதகம் முதலிய) பாபங்களைச் செய்தவர்களைக் காட்டிலும்கூட;* **பாபக்ருத்தம:** – *அதிக பாபம் செய்தவனாக;* **அஸிசேத்** – *நீ இருக்கும் பக்ஷத்தில்;* **ஸர்வம் வ்ருஜினம்** – *எல்லா பாபங் களாகிற (சமுத்திரத்தை);* **ஜ்ஞான ப்லவேன ஏவ** – *(அபரோக்ஷ) ஞானம் என்னும், கப்பலினாலேயே;* **ஸம்தரிஷ்யஸி** – *நன்கு தாண்டிவிடுவாய் (பாபங்களிலிருந்தும் விடுபடுவாய்.)*

*கப்பல் நம்மைத் தாண்டுவிக்கிறது. ஆனால் சமுத்திரத்தை அழிப்பதில்லை. அதுபோல ஞானம் நம்மைப் பாபங்களிலிருந்து விடுவிக்கிறது. பாபங்களை அழிக்கா தல்லவா! என்றால், வேறு உதாரணம் தருகிறார்.*

37. यथैधांसि समिद्धोऽग्निः भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥

யதை$^2$ த$^4$ாம்ஸி ஸமித்தே$^4$ாSக்நி:, ப$^4$ஸ்மஸாத் குருதேSர்ஜுன |
ஜ்ஞானாக்நி: ஸர்வ கர்மாணி, ப$^4$ஸ்மஸாத் குருதே தத$^2$ா || 37

**அர்ஜுன** – *சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!* **யதா** – *எவ்வாறு;* **ஸமித்த:** – *சுடர்விட்டு ஜ்வலிக்கும்;* **அக்நி:** – *நெருப்பு;* **ஏதாம்ஸி** – *விறகுக் கட்டைகளை;* **பஸ்மஸாத் குருதே** – *சாம்பலாகச் செய்கிறதோ;* **ததா** – *அவ்வாறு;* **ஜ்ஞானாக்நி:** – *அபரோக்ஷஞானம் என்ற நெருப்பு;* **ஸர்வகர்மாணி** – *(ப்ராரப்த கர்மத்தைத் தவிர மற்ற) எல்லா கர்மங்களையும்;* **பஸ்மஸாத் குருதே** – *சாம்பலாகச் செய்கிறது. ஆகவே ஞானம் சிறந்தது.*

கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களும் பாவங்களை அழிக் கின்றனவே! அவைகளைவிட ஞானம் எவ்வாறு சிறந்தது?

38. न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥

நஹி ஜ்ஞானேன ஸத்[3]ருசம், பவித்ரமிஹ வித்[3]யதே |
தத் ஸ்வயம் யோக[3] ஸம்ஸித்த[4]: காலேனாத்மனி விந்த[3]தி || 38

**இஹ** - இவ்வுலகத்தில்; **ஜ்ஞானேன** - அபரோக்ஷ ஞானத்திற்கு; **ஸத்ருஶம்** - சமமான; **பவித்ரம்** - சுத்தமாக்கும் வஸ்து; **ந வித்யதே** - இல்லை; **ஹி** - நிச்சயம்; **தத்** - அந்த ஞானத்தை; **ஸ்வயம்** - தானாகவே, (நம் யத்தனம் இல்லாமல்); **யோகஸம்ஸித்த:** - ஞானோபாயமான நிஷ்காம கர்மத்தில் வெற்றி பெற்றவன்; **காலேன** - வெகு காலம் கழித்து; **ஆத்மனி** - மனதில் அல்லது பகவத் விஷயத்தில்; **விந்ததி** - அடைகிறான்.

**குறிப்பு:** கங்காதி தீர்த்தங்கள் பாவங்களைப் போக்கி அநிஷ்ட புண்யத்தையும் தருகின்றன. அது மறு பிறப்பிற்குக் காரணமாயும், மோக்ஷத்திற்குத் தடையாயுமுள்ளது. ஞானமோ, அநிஷ்ட புண்யத்தையும் அழித்துவிடுகிறது. (2-50 பார்க்க). ஆகவே, கங்காதி புண்யதீர்த்தங்களைக் காட்டிலும், ஞானம் அதி பவித்ரமானது.

இவ்வித ஞானத்தின் அந்தரங்க ஸாதனத்தையும், பலனையும் கூறுகிறார்.

39. श्रद्धावान् लभते ज्ञानं मत्परः संयतेन्द्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शान्तिं अचिरेणाधिगच्छति ॥

ஶ்ரத்த[4]ாவான் லப[4]தே ஜ்ஞானம், மத்பர: ஸம்யதேந்த்ரிய: |
ஜ்ஞானம் லப்[4]த்வா பராம் ஶாந்திம், அசிரேணாதி[4]க[3]ச்ச[2]தி || 39

**ஶ்ரத்தாவான்** - ஆஸ்திக்ய புத்தியையுடையவனும்; **மத்பர:** - நானே (ஸ்ரீ கிருஷ்ணரே) ஸர்வோத்தமன் என்று என்னிடமே நிலை பெற்றவனும்; **ஸம்யத இந்த்ரிய:** - எல்லா இந்திரியங் களையும் நன்கு அடக்கினவனுமான புருஷன்; **ஜ்ஞானம்** - அபரோக்ஷ ஞானத்தை; **லபதே** - அடைகிறான். **ஜ்ஞானம்** - அந்த ஞானத்தை; **லப்த்வா** - அடைந்த பிறகு; **அசிரேண** - சீக்கிரத்திலேயே (பிராரப்த கர்மா இல்லையேல்) **பராம் சாந்திம்** - உத்தமமான மோக்ஷத்தை; **அதிகச்சதி** - அடை கிறான்.

**குறிப்பு:** (1) தத்பர:- பிறர் பாடம் (2) அபரோக்ஷஞான ஸாதனங்களாவன:- (1) ஆஸ்திக்ய புத்தி (2) விஷ்ணுவிடம் நிலை பெற்றிருத்தல் (3) இந்திரியங்களை நன்கு அடக்குதல், அதன் பலன் மோக்ஷம்.

மேற்படி ஸாதனங்களும் ஞானமுமில்லாதவர்களின் பலனைக் கூறுகிறார்.

40. अज्ञश्च अश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥

அஜ்ஞஶ்ச அச்ரத்த$^{3}$தா$^{4}$னஶ்ச, ஸம்ஶயாத்மா விநஶ்யதி |
நாயம் லோகோ (அ)ஸ்தி ந பரோ, ந ஸுக$^{2}$ம் ஸம்ஶயாத்மன: || 40

**அஜ்ஞ: ச** - ஞானமில்லாதவனும்; விபரீத ஞானமுள்ளவனும்; **அச்ரத்ததான: ச** - ஆஸ்திக்ய புத்தியில்லாதவனும்; **ஸம்சய ஆத்மா(ச)** - தத்வங்களில் ஸந்தேகிக்கும் மனதுடையவனும் (Doubting Thomas); **விநஶ்யதி** - அடியோடு அழிகிறான் (நரகங்களை அடைகிறான்); **ஸம்ஶய ஆத்மன:** - மேற்படி மூவரில்) ஸந்தேகிக்கும் மனதுடையவனுக்கு; **அயம் லோக:** - இந்த மனித உலகம்; **ந அஸ்தி** - இல்லை; **பர:** - மேலான ஸ்வர்க்கம் முதலியதும்; **ந** - இல்லை. (அதிகம் சொல்வானேன்); **ஸுகம்** - ஸுகமும்; **ந** - இல்லை.

ஞானத்தின் பலனை விஸ்தரித்துக் கூறுகிறார்.

41. योग संन्यस्तकर्माणं ज्ञानसंछिन्न संशयम् ।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥

யோக$^{3}$ ஸம்ந்யஸ்த கர்மாணம், ஜ்ஞான ஸஞ்சின்ன ஸம்ஶயம் |
ஆத்மவந்தம் ந கர்மாணி, நிப$^{3}$த்$^{4}$னந்தி த$^{4}$னஞ்ஜய || 41

**தனஞ்ஜய** - ராஜஸூயத்திற்காகச் செல்வங்களைத் திரட்டியவனே! **யோக ஸம்ந்யஸ்த கர்மாணம்** - (யோகோ யோகவிதாம் நேதா - என்றபடி) **யோக** - பகவானிடம்; **யோக** - மனதை வைத்திருக்கும் உபாயத்தினால்; **ஸம் ந்யஸ்த கர்மாணம்** - அவரிடம் கர்மங்களைப் பக்தியுடன் அர்ப்பணம் செய்தவனும்; **ஜ்ஞான ஸஞ்சின்ன ஸம்சயம்** - பகவத் ஞானத்தினால் சந்தேகங்களை அறவே ஒழித்தவனும்; **ஆத்ம வந்தம்** - பகவானை யஜமானனாகவுடையவனுமான, ஞானியை; **கர்மாணி** - கர்மங்கள்; **ந நிபத்னந்தி** - கட்டுப்படுத்தமாட்டா. (முக்தியை அடைவான்.)

ஞானோபாயமான கர்மத்தைச் செய்தே ஆகவேண்டும் எனக் கூறி முடிக்கிறார்.

42. तस्मात् अज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिना आत्मनः ।
छित्वैनं संशयं योगं आतिष्ठ उत्तिष्ठ भारत ॥

தஸ்மாத் அஜ்ஞான ஸம்பூ$^{4}$தம், ஹ்ருத்ஸ்த$^{2}$ம் ஜ்ஞானாஸினா ஆத்மன: |
சி$^{2}$த்வைனம் ஸம்ஶயம் யோக$^{2}$ம், ஆதிஷ்ட$^{2}$ உத்திஷ்ட$^{2}$ பா$^{4}$ரத || 42

**பாரத** - பரத வம்சத்திற் பிறந்தவனே! அல்லது **பா** - பிரகாசமான ஞானத்தில்; **ரத** - ஈடுபட்டவனே! **தஸ்மாத்** -

ஆகையால், (ஞானோபாயத்தை அநுஷ்டிப்பதால் நன்மையும், அநுஷ்டிக்காவிடில் தீமையும், ஏற்படுவதால்); **அஜ்ஞான ஸம்பூதம்** - அறிவின்மையால் நன்கு உண்டானதும்; **ஹ்ருத்ஸ்தம்** - மனதில் உள்ளதுமான; **ஏனம்** - இந்த; **ஆத்மன:** - பகவத் விஷயமான; **ஸம்சயம்** - சந்தேகத்தை; **ஜ்ஞான அஸினா** - அபரோக்ஷ ஞானம் என்ற கத்தியினால்; **சித்வா** - வெட்டி (போக்கி); **யோகம்** - ஞானோபாயமான நிஷ்காம கர்மமான யுத்தத்தை; **ஆதிஷ்ட** - செய்வாயாக. **உத்திஷ்ட** - எழுந்திரு.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे ज्ञान योगो नाम चतुर्थोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம
வித்யாயாம், யோகஶாஸ்த்ரே, ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
ஜ்ஞானயோகோ நாம சதுர்த்தோ அத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய, ஞானயோகம் என்னும்*
*4-ம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 5

# ஸந்ந்யாஸ யோகம்

(29 சுலோகங்கள்)

## ஐந்தாம் அத்தியாயச் சுருக்கம்

ஸந்ந்யாஸ யோகம் - 3-ம் அத்தியாயத்து நிஷ்காம கர்மயோகத்திற்கு இரு அம்சங்கள் உண்டு. 1. காமம், கோபம், முதலியவற்றைத் துறத்தல். 2. கர்மத்தைச் செய்து வருதல். முதல் அம்ஶத்திற்கு ஸந்ந்யாஸம் எனப்பெயர். (ஸந்யாஸா ஶ்ரமம் அல்ல). 2-ம் அம்ஶத்திற்கு கர்மயோகம் எனப்பெயர். பத்தியமாயிருத்தல், மருந்துண்ணல் என்ற இரண்டும் சேர்ந்தே வியாதியைப் போக்குவதுபோல, ஸந்ந்யாஸமும், கர்மயோகமும் சேர்ந்தே, பிறப்பு இறப்பாகிற வியாதியைப் போக்கி, மோக்ஷத்தைத் தரும். பிரித்துக்கூறினால், ஸந்ந்யா ஸத்தைக் காட்டிலும், கர்மயோகமே உயர்ந்தது. ஏனெனில், கர்மத்தைச் செய்யாவிடில், நரகத்தை அடைவான்.

கர்மத்தை எப்படிச் செய்யவேண்டும்? பார்ப்பது கேட்பது முதலிய ஞானேந்திரிய காரியங்களையும், பேசுவது, எடுப்பது முதலிய கர்மேந்திரிய காரியங்களையும், செய்து கொண்டிருக்கையில், அந்த இந்திரியங்கள் பகவானின் இச்சையால்தான், செயல்படுகின்றன. நாம் ஸ்வதந்திரர் களல்லர், என்று கருதவேண்டும். ஏனெனில் இந்திரியங்களோ ஜடமானவை. அவைகளை இயக்க அபிமானி தேவர்கள் வேண்டும். அந்த அபிமானி தேவர்களும் அஸ்வதந்திரர்கள். அவர்களைப் பகவான் தூண்டவேண்டும். துருவன் கூறியதும் இதுதான். (பா 4-9-6)

மேற்படி ஸந்ந்யாஸத்தின் பொருட்டே விஷய சுகங்களை நிந்திக்கிறார். அந்த சுகங்களைப் பெறவேண்டியும், அவைகளை அநுபவித்த பிறகும், நாம் துக்கப்பட வேண்டியிருக்கிறது. மேலும் அவை உற்பத்தியும் நாஶமும் உள்ளவை. ஆகவே அபரோக்ஷஞானி அவற்றில் ஈடுபட மாட்டான். அவன் வ்யக்தமான ஸ்வரூபானந்தத்தையும்,

பகவானின் ஸ்வரூபம் மனதில் விளங்குவதால், அதை நேரில் காணும் ஆனந்தத்தையும் அநுபவிப்பவன்.

**அபரோக்ஷ ஞானத்தின் நெருங்கிய ஸாதனம்:-** பகவானிடமே புத்தியை வைத்து, அவனே நம் யஜமானன் என்று கருதி, அனைவரின் அந்தர்யாமியான பகவத் ரூபங்களில் தாரதம்யமில்லை என்று அறிந்து, தியானம் செய்துவர வேண்டும்.

*2-48-ல் கர்மங்களைப் பற்றில்லாமல் செய் எனச் சுருக்கமாகக் கூறினார். அந்தக் கர்மயோகத்திற்கு, 1. ஆசை முதலியவற்றை விட்டுவிடுவது. 2. கர்மங்களை அனுஷ்டித்து வருவது என்ற இரண்டு அம்சங்கள் உண்டு என்று 3-ம் அத்தியாயத்தில் கூறியதை இங்கு விஸ்தரிக்கிறார்:*

अर्जुनः उवाच - **அர்ஜுன: உவாச** - *அர்ஜுனன் கேட்கிறான்.*

1. संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।
यच्छ्रेयः एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥

ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண, புனர்யோக³ம் ச ஶம்ஸஸி |
யச் ச்ரேய: ஏதயோரேகம், தன்மே ப்³ரூஹி ஸுநிஸ்சிதம் || 1

**க்ருஷ்ண** - *ஸ்ரீ கிருஷ்ணரே!;* **கர்மணாம் ஸந்ந்யாஸம்** - *கர்மங்களில் ஆசை முதலியவற்றை அடியோடு விட்டுவிட வேண்டும் என்பதை 4-22லும்;* **புன:** - *மறுபடியும்;* **கர்மணாம் யோகம் ச** - *ஈசுவரார்ப்பண புத்தியுடன் கர்மங்களின் அநுஷ்டானத்தை 4-15லும்;* **ஶம்ஸஸி** - *கூறுகிறீர்.* **ஏதயோ:** - *(ஸந்ந்யாஸம்; கர்மயோகம் என்ற) இரண்டில்;* **யத் ச்ரேய:** - *எது உயர்ந்ததோ;* **தத் ஏகம்** - *அந்த ஒன்றை;* **மே** - *எனக்கு;* **ஸுநிஸ்சிதம்** - *நன்றாக நிச்சயித்து;* **ப்ரூஹி** - *சொல்வீராக.*

**2-ம் அர்த்தம்:** *4-41-ல் கூறிய 'ஸந்ந்யாஸம்', யத்யாஶ்ர மத்தைக் குறிக்கும். 4-42-ல் கூறிய 'யோகம்', கிருஹஸ்தனைக் குறிக்கும் என நினைத்துக் கேட்கிறான்:* **க்ருஷ்ண** - *ஸ்ரீ கிருஷ்ணரே!* **கர்மணாம் ஸந்ந்யாஸம்** - *எல்லா கர்மங்களைத் துறந்து ஞானத்தை மேற்கொண்ட ஸன்யாஸ ஆஶ்ரமத்தை; 4-41லும்;* **புன:** - *மறுபடியும்;* **கர்மணாம் யோகம்** *(ஞானத்தைத் துறந்து) - கர்மானுஷ்டானமாகிற கிருஹஸ்தாசிரமத்தை 4-42லும்;* **ஶம்ஸஸி** - *கூறுகிறீர்;* **ஏதயோ:** - *யத்யாஶ்ரமம் கிருஹஸ்தாஶ்ரமம் என்ற இரண்டில்;* **யத் ச்ரேய:** - *எது*

உயர்ந்ததோ; **தத் ஏகம்** – அந்த ஒன்றை; **மே** – எனக்கு; **ஸு நிஸ்சிதம்** – நன்றாக நிச்சயித்து; **ப்ரூஹி** – சொல்வீராக.

குறிப்பு: கர்மங்களில் ஆசையை விட்டுவிடுதல் என்றால், கர்மங்களைச் செய்வதிலேயே ஆசையை விட்டுவிடுதல் என்ற அர்த்தம் கொண்டு அவைகளை விட்டுவிடுவதே ஸந்ந்யாஸம் என்று நினைத்துக் கர்மானுஷ்டானம் அதற்கு முரண் படுவதாகக் கூறுகிறான்.

श्रीभगवान् उवाच – **ஸ்ரீ பகவான் உவாச** – ஸ்ரீ கிருஷ்ணர் பதிலளிக்கிறார்.

2. संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरौ उभौ ।
तयोस्तु कर्मसंन्यासात् कर्मयोगो विशिष्यते ॥

ஸந்ந்யாஸ: கர்மயோக[3]ஸ்ச, நிஶ்ஶ்ரேயஸ கரௌ உபௌ[4] |
தயோஸ்து கர்ம ஸந்ந்யாஸாத், கர்மயோகோ[3] விஶிஷ்யதே || 2

(ஸந்ந்யாஸம், கர்மயோகம், இரண்டும் முறையே யத்யாஶ்ரமத்தையும், கிருஹஸ்தாஶ்ரமத்தையும், குறிக்கவில்லை. ஆகவே) **ஸந்ந்யாஸ:** – கர்மங்களில் அல்ல, கர்ம பலனில் ஆசையை விட்டுவிடுதலும், (விஷய வைராக்யம்); **கர்மயோக: ச** – ஈஶ்வரார்ப்பண புத்தியுடன் கர்மங்களை அநுஷ்டித்து வருவதும்; **உபௌ** – இரண்டும் சேர்ந்துதான்; **நிஶ்ஶ்ரேயஸகரௌ** – மோக்ஷத்தைத் தருபவை; **து** – ஆயினும், (பிரித்துக் கூறினால்); **தயோ:** – அவ்விரண்டில்; **கர்ம ஸந்ந்யாஸாத்** – (கர்மணி ஸந்ந்யாஸாத்) கர்மானுஷ்டானத்தில் காமம், கோபம், த்வேஷம் முதலியவற்றை விட்டு விடுவதைக் காட்டிலும்; **கர்மயோக:** – ஈஶ்வரார்ப்பண புத்தியுடன் கர்மங்களை அநுஷ்டித்து வருவது; **விசிஷ்யதே** – சிறந்தது.

குறிப்பு: இதற்கு ஒரு உதாரணம்:– மருந்துண்ணல் பத்தியமாயிருத்தல், என்ற இரண்டும் சேர்ந்தே வியாதியைப் போக்கும். ஆயினும் இந்த இரண்டில் எது சிறந்தது என்றால், மருந்துண்ணல்தான் எனலாம். ஏனெனில் மருந்துதான் வியாதியைப் போக்குவது; பத்தியம் அதன் வீர்யத்தைக் குறைக்காது சீக்கிரம் ஸ்வஸ்தமாக்க உதவுவது. பத்தியமா யில்லாவிடிலும், நீண்டநாள் மருந்துண்டு ஸ்வஸ்தமாகலாம் அதுபோல் இங்கு கர்மானுஷ்டானம் சிறந்தது.

ஸந் ந்யாஸ பதத்தின் அர்த்தத்தை விளக்குகிறார்.

3. ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न कांक्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥

ஜ்ஞேய: ஸ நித்ய ஸந்ந்யாஸீ, யோ ந த்$^3$வேஷ்டி ந காங்க்ஷதி |
நிர்த்$^3$வந்த்$^3$வோ ஹி மஹாபா$^3$ஹோ, ஸுக$^2$ம் ப$^3$ந்த$^3$ாத் ப்ரமுச்யதே|| 3

**மஹாபாஹோ** – *பெரிய கைகளை (புஜ பலத்தை) உடையவனே!* **ய:** – *யார்;* **ந த்வேஷ்டி** – *வெறுப்பதில்லையோ;* **ந காங்க்ஷதி** – *விரும்புவதில்லையோ; (விஷய வைராக்ய முள்ளவனோ);* **நிர் த்வந்த்வ:** – *சுகம் துக்கம், லாபம் நஷ்டம், முதலிய இருமைகளை (காம்ய கர்மங்களையும்) விட்டவனே;* **ஸ:** – *அவன்;* **நித்ய ஸந்ந்யாஸீ** – *எப்போதும் ஸந்ந்யாஸி என்று;* **ஜ்ஞேய:** – *அறியத் தகுந்தவன். அவன்தான்,* **பந்தாத்** – *ஸம்ஸாரக் கட்டிலிருந்து;* **ஸுகம்** – *அனாயாஸமாக;* **ப்ரமுச்யதே** – *நன்கு விடுபடுகிறான்;* **ஹி** – *பிரசித்தம்.*

பாகவதம் 5-11-3ல் ஆசை முதலியவற்றை விடுதல் என்ற விஷய வைராக்யமில்லையேல், ஞானமுண்டாகாது எனப்படுகிறது. 11-21-27ல் கர்மானுஷ்டானத்தில் புகையினால் வாடி வதங்கினவன் பகவானை அறிவதில்லை என்று கர்மானுஷ்டானத்தால் ஞான முண்டாகாது எனப்படுகிறது. ஆகவே கர்மயோகம் ஸந் ந்யாஸத்தைக் காட்டிலும் சிறந்ததல்ல என்றால்,

4. सांख्य योगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।
एकमपि आस्थितः संयक् उभयोर्विन्दते फलम् ॥

ஸாங்க்ய யோகெ$^3$ள ப்ருத$^2$க்ப$^3$ாலா:, ப்ரவத$^3$ந்தி ந பண்டி$^3$தா: |
ஏகமபி ஆஸ்தி$^2$த: ஸம்யக், உப$^4$யோர் விந்த$^3$தே ப$^2$லம் || 4

**ஸாங்க்ய யோகெள** – *ஞானம், ஈசுவரரார்ப்பண புத்தியினால் கர்மானுஷ்டானம், இவ்விரண்டையும்;* **ப்ருதக்** – *வெவ்வேறானவை, கார்யகாரண சம்பந்தமில்லாதவை என்று;* **பாலா:** – *விவேகமில்லாதவர்கள்;* **ப்ரவதந்தி** – *கூறுகிறார்கள்;* **பண்டிதா:** – *ஞானிகள்;* **ந** – *அவ்வாறு கூற மாட்டார்கள். கர்மானுஷ்டானம் காரணம், ஞானம் அதன் கார்யம், என்பது எப்படி? என்றால்,* **ஏகம் அபி** – *ஞான மார்க்கம், கர்மமார்க்கம் என்ற ஏதாவதொன்றைக் கூட;* **ஸம்யக்** – *நன்றாக;* **ஆஸ்தித;** – *பின்பற்றியிருப்பவன்;* **உபயோ:** – *ஞானம், கர்மம் இவ்விரண்டின்;* **பலம்** – *பலனை;* **விந்ததே** – *அடைகிறான்.*

**குறிப்பு:** பாகவதம் 11-21-27ல் கூறப்பட்டது காம்ய கர்ம விஷயமாகும். நிஷ்காம கர்மம்தான் ஞானத்தையுண்டாக்கும்.

**2–ம் அர்த்தம்:** *(சு. 1-ல் 2-ம் அர்த்தத்திற்குப் பதில்)* **பாலா:** *விவேகமில்லாதவர்கள்;* **ஸாங்க்ய யோகெள** – *ஞானம், கர்மம் இரண்டும்;* **ப்ருதக்** – *வேறானவை, ஒருவரிடமே இருக்காதவை,*

அதாவது யதிகளிடம் ஞானம் மாத்திரம் உண்டு, கர்மா கிடையாது; கிருஹஸ்தர்களிடம், கர்மம் மாத்திரம் உண்டு, ஞானம் கிடையாது என்று; **ப்ரவதந்தி** – கூறுகிறார்கள்; **பண்டிதா:** – ஞானிகள்; **ந** – கூறமாட்டார்கள். ஏனெனில், **ஏகம் அபி** – ஏதாவதொன்றைக்கூட; **ஸம்யக் ஆஸ்தித:** – நன்றாகப் பின்பற்றுபவன், (அதாவது மோக்ஷானந்தம் பொங்குவதற்கு ஞானி, கர்மம் செய்ய வேண்டும்; கிருஹஸ்தன் மோக்ஷமடைவதற்கு, கர்மத்தால் ஞானத்தைப் பெறவேண்டும்.) **உபயோ:** – இரண்டின்; **பலம்** – பலனை; **விந்ததே** – அடைகிறான். இவ்வாறு ஞானமும் கர்மமும் ஒவ்வொருவரிடமும் சேர்ந்தேயுள்ளன.

பலனைத் தருவதில் ஞானமும், கர்மமும் சமமானவை என்று ஆயிற்றே தவிர, கர்மம் ஞானத்திற்குக் காரணம், என்று ஆகவில்லையே! என்றால் விளக்குகிறார்.

5. यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।
एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥

யத் ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தா²னம், தத் யோகை³ரபி க³ம்யதே |
ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச, ய: பச்யதி ஸ பச்யதி || 5

**ஸாங்க்யை:** – ஞானிகளால், (யதிகளால்); **யத்** – எந்த; **ஸ்தானம்** – பகவத் ஸ்வரூபம் என்ற இருப்பிடம்; **ப்ராப்யதே** – அடையப்படுகிறதோ; **தத்** – அது; **யோகை: அபி** – கர்மானுஷ்டானமுடைய கிருஹஸ்தர்களால்கூட; **கம்யதே** – (ஞானத்தின் மூலம்) அடையப்படுகிறது. ஆகவே, **ய:** – யார்; **ஸாங்க்யம் ச** – ஞானமும்; **யோகம் ச** – கர்மானுஷ்டானமும்; **ஏகம்** – ஒன்றே; (கார்ய காரண யோ: அபேத:) அல்லது ஒருவரிடம் இருப்பது என்று; **பர்யதி** – அறிகிறானோ; **ஸ:** – அவன்; **பர்யதி** – அறிகிறான் (ஞானி).

ஸந்ந்யாஸம் என்ற பதத்தின் உண்மையான அர்த்தத்தைக் கூறி, அது கர்மாநுஷ்டானத்தைக் காட்டிலும் தாழ்ந்தது என்கிறார்.

6. संन्यासस्तु महाबाहो दुःखमासुं अयोगतः ।
योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेण अधिगच्छति ॥

ஸந் ந்யாஸஸ்து மஹாப³ாஹோ, து³க்கமாப்தும் அயோக³த: |
யோக³ யுக்தோ முனிர் ப்ரஹ்ம, நசிரேண அதி⁴க³ச்ச²தி || 6

**மஹாபாஹோ** – பெருங்கைகளை (புஜபலத்தை) யுடையவனே! **அயோகத:** – ஈஶ்வரார்ப்பண புத்தியுடன்

கர்மாநுஷ்டானம் என்ற உபாயம் இல்லையேல்; **ஸந்ந்யாஸ: து** - ஆசை முதலியவற்றை விட்டுவிடுவது மாத்திரம்; **துக்கம்** - துக்கத்தை (நரகத்தை); **ஆப்தும் ஏவ** - அடைவதற்கே (ஆகும். ஏனெனில் தனக்குரிய கர்மங்களை விட்டுவிட்டானல்லவா!) **யோக யுக்த:** - கர்மானுஷ்டானத்துடன் கூடிய; **முனி:** - ஸந்ந்யாஸியோ; **நசிரேண** - சீக்கிரமே; **ப்ரஹ்ம** - குண பூர்ணனான விஷ்ணுவை; **அதிகச்சதி** - அடைகிறான்.

குறிப்பு: கர்மானுஷ்டானமில்லையேல், ஞானமில்லை. அதனால் மோக்ஷமில்லை, அது இருந்தால் பரம்பரையாக மோக்ஷமுண்டு. ஆகவே ஸந்ந்யாஸத்தைக்காட்டிலும் கர்மா நுஷ்டானம் உயர்ந்தது.

கர்மாநுஷ்டானத்துடன் கூடிய ஸந்ந்யாஸம்தான் மகாபலனைத் தருவது, என்பதை விஸ்தரிக்கிறார்.

7. योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥

யோக[3] யுக்தோ விஶுத்த[4]ாத்மா, விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: |
ஸர்வ பூ[4]தாத்ம பூ[4]தாத்மா, குர்வன்னபி ந லிப்யதே || 7

**யோகயுக்த:** - ஈஶ்வரார்ப்பண புத்தியுடன் கர்மாநுஷ்டானமுள்ளவன்; **விஶுத்த ஆத்மா** - நன்கு சுத்தியடைந்த ஸ்வபாவமுள்ளவனாகி; **விஜித ஆத்மா** - மனதை நன்கு ஜயித்தவனாகி; **ஜிதேந்த்ரிய** - (பத்து) இந்திரியங்களையும் ஜயித்தவனாகி; (1) **ஸர்வபூத, ஆத்மபூத, ஆத்மா** - பிரம்மா முதலிய எல்லாப் பிராணிகளுக்கும், யஜமானனாகவுள்ள பகவான், தனக்கும் யஜமானன், என்ற ஞானமுள்ளவனாகி அல்லது (2) **ஸர்வபூத ஆத்ம** - எல்லாப் பிராணிகளுக்கும் ஸ்வாமியான பகவானிடம்; **பூத ஆத்மா** - இருக்கும் மனதை யுடையவனாகி; **குர்வன் அபி** - கர்மங்களைச் செய்து வரினும்; **ந லிப்யதே** - கர்ம பலன்களால் ஒட்டுவதில்லை.

குறிப்பு: (1) ஆத்மா - யஜமானன், ஸ்வபாவம், மனது, பரமாத்மா - என்ற பல அர்த்தங்களைக் கவனிக்க. (2) இந்திரிய ஜயத்தால்தான் ஆசை முதலியவற்றை விட்டுவிட முடியும்.

ஸங்கல்பத்தையும் விட்டுவிட வேண்டும். என்று இரு சுலோகங்களில் கூறுகிறார்.

8. नैव किंचित्करोमीति युक्तो मन्येत तत्ववित् ।
पश्यन् श्रृण्वन् स्पृशन् जिघ्रन् अश्नन् गच्छन् स्वपन् श्वसन् ॥

9. प्रलपन् विसृजन् गृह्णन् उन्मिषन् निमिषन्नपि ।
इन्द्रियाणि इन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥

நைவ கிஞ்சித் கரோமீதி, யுக்தோ மன்யேத **தத்வவித்** |
பஶ்யன் ஶ்ருண்வன் ஸ்ப்ருஶன் ஜிக்ரன், அச்னன் கச்சன் ஸ்வபன் ஶ்வஸன் || 8

ப்ரலபன் விஸ்ருஜன் க்[3]ருஹ்ணன், உன்மிஷன் நிமிஷன் அபி |
இந்த்[3]ரியாணி இந்த்[3]ரியார்த்தே[2]ஷு, வர்த்தந்தே இதி த[4]ாரயன் || 9

*(8-9)* **யுக்த:** *- கர்மங்களை அநுஷ்டிக்கும்;* **தத்வவித்** *- உண்மையை அறிந்த ஞானி; 1.* **பஶ்யன்** *- பார்த்துக் கொண்டும். 2.* **ஶ்ருண்வன்** *- கேட்டுக் கொண்டும், 3.* **ஸ்ப்ருஶன்** *- தொட்டுக் கொண்டும், 4.* **ஜிக்ரன்** *- முகர்ந்து கொண்டும், 5.* **அஶ்னன்** *- ருசித்துக் கொண்டும், 6.* **கச்சன்** *- நடமாடிக் கொண்டும், 7.* **ஸ்வபன்** *- தூங்கிக் கொண்டும், 8.* **ஶ்வஸன்** *- மூச்சு விட்டுக் கொண்டும், 9.* **ப்ரலபன்** *- பேசிக்கொண்டும் 10.* **விஸ்ருஜன்** *- (a) மலம், (b) மூத்திரம் இவற்றைக் கழித்துக்கொண்டும், 11.* **க்ருஹ்ணன்** *- எடுத்துக்கொண்டும், 12.* **உன்மிஷன்** *- கண்ணைத் திறந்துகொண்டும், 13.* **நிமிஷன்** *- கண்ணை மூடிக் கொண்டும் இருப்பது, முதலிய ஞான-கர்மேந்திரியங்களின் காரியங்களை;* **அபி** *- செய்துகொண்டிருந்த போதிலும்;* **இந்த்ரியாணி** *- அந்த புலன்கள்;* **இந்த்ரிய அர்த்தேஷு** *- அவைகளின் விஷயங்களில்;* **வர்த்தந்தே** *- (பகவானின் இச்சையால் ஏவப்பட்டு) உள்ளன;* **இதி** *- என்று;* **தாரயன்** *- மனதால் விமர்சனம் செய்து நிச்சயித்து;* **கிஞ்சித்** *- எதையும்;* **நைவ கரோமி** *- நான் ஸ்வதந்திரமாகச் செய்யவே இல்லை;* **இதி மன்யதே** *- என்று நினைக்கவேண்டும்; (இவ்வாறு ஸங்கல்பத்தை விட்டுவிடுவதும் ஸந்ந்யாஸமாகும்.)*

**குறிப்பு:** (1) 1 முதல் 5. கண், காது, தோல், மூக்கு, நாக்கு என்ற ஐந்து ஞானேந்திரியங்களின் காரியங்கள். 6 கால், 9 வாய், 10 (a) பாயு (b) உபஸ்தம், 11 கை - ஐந்து கர்மேந்திரியங்களின் காரியங்கள். 7. புத்தியின் கார்யம் 8. பிராணனின் காரியம் 12, 13 கூர்மன் என்ற தாஸ ப்ராணனின் காரியங்கள் என அறிக. (4-27 பார்க்க)

(2) **மனதினால் விமர்சம் செய்யும் முறை:-** இந்திரியங்கள் ஜடமானவை. ஆகவே அவைகளே காரியம் செய்ய முடியாது. அவற்றின் அபிமானி தேவர்களோ அஸ்வதந்திரர்கள். ஸ்வதந்திரனும் ஸர்வ ஸ்வாமியுமான பகவான், அவற்றில் இருந்து கொண்டு, அவற்றைத் தூண்டுகிறான். அவனிச்சைப்படி அவை காரியங்களைச் செய்கின்றன. அவ்விஷயத்தில் நான் ஸ்வதந்திரனல்ல. என்னால் எதுவும் செய்ய முடியாது. நான் ஸ்வதந்திரனாயிருந்தால், அந்த இந்திரியங்கள்

என்னிஷ்டப்படி வேலை செய்ய வேண்டும். ஆனால் சில சமயங்களில் அவைகளின் வேலைகளான பார்ப்பது, கேட்பது முதலியனவும், மல மூத்ர விஸர்ஜனம் முதலியனவும் தடைபட்டுச் சிறந்த வைத்தியர்களின் முயற்சியாலும் கூட ஏற்படுவதில்லை. ஆகவே பகவான்தான் செய்விக்கிறான். நான் செய்வதில்லை. இதுவே ஸங்கல்பத் தியாகமாகும்.

ஸந்ந்யாஸம், கர்மாநுஷ்டானம் என்ற இரண்டுடன் கூடினவனே, கர்மபலன்களினால் ஒட்டுவதில்லை என்கிறார்.

10. ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवांभसा ॥

ப்ரஹ்மண்யாத[4]ாய கர்மாணி, ஸங்க[3]ம் த்யக்த்வா கரோதி ய: |
லிப்யதே ந ஸ பாபேன, பத்ம பத்ரமிவாம்ப[4]ஸா || 10

**ய:** – *யார்;* **ஸங்கம்** – *பலனிலுள்ள ஆசையை;* **த்யக்த்வா** – *விட்டுவிட்டு;* **ப்ரஹ்மணி ஆதாய** – *குண பூர்ணனான விஷ்ணுதான் என் நன்மைக்காக, தன் பூஜையாகிற கர்மங்களை என்னால் செய்விக்கிறார், என்னுடைய சக்தியும் அவருடைய அதீனமானது என்று நினைத்து;* **கர்மாணி** – *கர்மங்களை;* **கரோதி** – *செய்கிறானோ;* **ஸ:** – *அவன்;* **பத்மபத்ரம்** – *தாமரை இலை;* **அம்பஸா** – *ஜலத்துடன்;* **இவ** – *ஒட்டாதிருப்பதுபோல;* **பாபேன** – *பாபத்தினால்;* **ந லிப்யதே** – *ஒட்டுவதில்லை. (ஞானத்தின்மூலம் மோக்ஷமடைகிறான்.)*

**குறிப்பு:**

*(1) ஸ்வ வந்தனம் யதா பித்ரா காரிதம், ஶிஶுகர்த்ருகம் |
ஏவம் பூஜா விஷ்ண்வதீனா, பவேத் ஜீவக்ருதா இத்யபி ||*

ஓர் தந்தை தன் சிறு குழந்தையைத் தன்னை நமஸ்கரிக்கும்படி செய்து, குழந்தை நமஸ்கரிக்கிறது என்று கூறுவதுபோல, பகவத் பூஜை ஜீவனால் செய்யப்பட்ட போதிலும், விஷ்ணுவின் அதீனமானதே.

(2) 3-30ல் மயி ஸர்வாணி கர்மாணி என்றும், இங்கு, ப்ரஹ்மண்யாதாய கர்மாணி என்றும், கூறுவதால் ஸ்ரீ கிருஷ்ணரே பிரஹ்மம் என்று குறிக்கிறார். (4-35)

மேற்படி விஷயத்தில் பெரியோர்களின் அநுஷ்டானமும் உண்டு:-

11. कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वा आत्मशुद्धये ॥

காயேன மனஸா பு[3]த்த்[4]யா, கேவலை: இந்த்[3]ரியை ரபி |
யோகி[3]ன: கர்ம குர்வந்தி, ஸங்க[3]ம் த்யக்த்வா ஆத்மஶுத்த[4]யே || 11

**யோகின: அபி** – *கர்மயோகமுடையவர்களும்கூட;* **காயேன** – *தேகத்தாலும்;* **மனஸா** – *மனதினாலும்;* **புத்த்யா** – *புத்தி என்ற 12வது இந்திரியத்தாலும்;* **கேவலை:** – *தனிப்பட்ட அதாவது ஆசை அஹங்காரம் முதலியவையில்லாத;* **இந்த்ரியை: அபி** – *இந்திரியங்களாலும் கூட;* **ஸங்கம்** – *பலனில் ஆசையை;* **த்யக்த்வா** – *விட்டு;* **ஆத்ம ஶுத்தயே** – *மனத்தின் சுத்தியின் பொருட்டு அதாவது ஞானம் உண்டாவதற்கும், பாபம் ஒட்டாமலிருப்பதற்கும்;* **கர்ம குர்வந்தி** – *கர்மத்தைச் செய்கிறார்கள்.*

குறிப்பு: பிரம்ம சூத்திரம் 2-4-6ல், மனது 11வது, புத்தி 12வது இந்திரியங்கள் எனப்படுகிறது. ஞானேந்திரியங்கள் 7, கர்மேந்திரியங்கள் 5 மொத்தம் 12 இந்திரியங்களாகும்.

*ஸந்ந்யாஸம், கர்மயோகம் இரண்டையும் உடையவர் களுக்கே மோக்ஷம். அவ்விரண்டும் இல்லாதவர்களுக்கு ஸம்ஸாரம் என்கிறார்.*

12. युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम् ।
अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते ॥

யுக்த: கர்மப²லம் த்யக்த்வா, ஶாந்தி மாப்னோதி நைஷ்டிகீம் |
அயுக்த: காமகாரேண, ப²லே ஸக்தோ நிப³த்⁴யதே || 12

**கர்மபலம்** – *கர்மங்களின் பலனில் ஆசை முதலியவற்றை;* **த்யக்த்வா** – *விட்டு;* **யுக்த:** – *(ஸந்ந்யாஸத்துடன்); ஈஶ்வரார்ப் பண புத்தியுடன் கர்மாநுஷ்டானமுடையவன்;* **நைஷ்டிகீம்** – *அவனுடைய இயற்கையில் அமைந்துள்ள;* **ஶாந்திம்** – *ஸ்வரூபானந்தத்தின் ஆவிர்ப்பாவம் என்ற மோக்ஷத்தை;* **ஆப்னோதி** – *அடைகிறான்;* **அயுக்த:** – *கர்மாநுஷ்டான மில்லாதவன்;* **காமகாரேண** – *பலனில் ஆசை முதலியவற்றை யுடையவனாய் (ஸந்ந்யாஸமில்லாதவனாய்);* **பலே** – *ஸ்வர்க்கம் முதலிய அற்ப பலனில்;* **ஸக்த:** – *பற்றுள்ளவனாய்;* **நிபத்யதே** – *நன்கு கட்டுப்படுகிறான்.*

5-8ல், நான் செய்கிறேன் என்ற அபிமானம் கூடாது என்றார். இங்கு நான் செய்விக்கிறேன் என்ற அபிமானமும் கூடாது என்கிறார்.

13. सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।
नवद्वारे पुरे देही नैव कुर्वन् न कारयन् ॥

ஸர்வ கர்மாணி மனஸா, ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுக²ம் வஶீ |
நவத்வாரே புரே தே³ஹீ, நைவ குர்வன் ந காரயன் || 13

**தேஹீ** - தேகம் படைத்த ஜீவன்; **வஶீ** - இந்திரியங்களை வசப்படுத்திக்கொண்டு; **நைவ குர்வன்** - நான் ஸ்வதந்திர மாகச் செய்யவில்லை; **ந காரயன்(ச)** - பிறரைச் செய்விக்கவு மில்லை என்று நினைத்து; **ஸர்வ கர்மாணி** - எல்லாக் கர்மங் களை (செய்துகொண்டு); **மனஸா** - மனத்தினால்; **ஸந்ந்யஸ்ய** - விட்டு, அதாவது, பகவானே என் பூஜையாகிற கர்மங்களை என் நன்மையின் பொருட்டு, என்னால் செய்விக்கிறார், நான் செய்யும் சக்தியும்கூட, அவர் அதீனமே என்று நினைத்து; **நவ த்வாரே** - ஒன்பது வாயில்களுடைய; **புரே** - நகரமாகிற, தேகத்தில்; **ஸுகம்** - சுகமாக (கர்ம சம்பந்தமின்றி); **ஆஸ்தே** - இருக்கிறான்.

குறிப்பு: கண்கள் 2, காதுகள் 2, மூக்குத் துவாரங்கள் 2, வாய்1, பாயு (மலம் கழிப்பது) 1, உபஸ்தம் (மூத்ரம் கழிப்பது) 1 என்ற 9 வாயில்கள். கடோபநிஷத்தில் (2-2-1) புரம் ஏகாதசத்வாரம் - 1 தொப்புள் 2 தலையில் பிரம்மரந்திரம் என்ற இரண்டையும் சேர்த்து 11 வாயில்கள் எனப்படுகிறது. இவை பின்னர் மூடிவிடுவதால் சேர்க்கவில்லை.

நாம் கர்மங்களைச் செய்து கொண்டிருக்கும்போது, நாம் செய்யவில்லை என்று நினைப்பது விபரீத ஞானமல்லவா? என்றால் ஸ்வதந்திரமாகச் செய்யவில்லை என்ற அதன் கருத்தை விளக்குகிறார்.

14. न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥

ந கர்த்ருத்வம் ந கர்மாணி, லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு[4]: |
ந கர்மப[2]ல ஸம்யோக[3]ம், ஸ்வப[4]ாவஸ்து ப்ரவர்த்ததே || 14

**ப்ரபுः** - ஜடப்பொருளைக் காட்டிலும் ஸமர்த்தனான ஜீவன்; **லோகஸ்ய** - (லோகேன) - ஜனங்களால்; **கர்த்ருத்வம்** - கர்மத்தைச் செய்யும் ஸ்வாதந்தர்யத்தை; **ந ஸ்ருஜதி** - சிருஷ்டிப்பதில்லை; அதாவது ஜனங்களினால் கர்மங்களைச் செய்விப்பதில்லை. **(ஸ்வயம் ச** - தானும்) **கர்மாணி** - கர்மங் களை; **ந ஸ்ருஜதி** - ஸ்வதந்திரமாகச் செய்வதில்லை. **கர்ம பல ஸம்யோகம் ந ஸ்ருஜதி** - கர்ம பலனைத் தானும் அடைவ தில்லை; பிறருக்கு அடைவிப்பதுமில்லை. ஏனெனில் ஜீவனுக்கு எதிலும் ஸ்வாதந்தர்யமில்லை; அல்லது, **ப்ரபுः** - ஈஶ்வரன்; **லோகஸ்ய** - ஜீவனுக்கு; **கர்த்ருத்வம்** - கர்மங்களை செய்வதில் ஸ்வாதந்தர்யத்தை; **ந ஸ்ருஜதி** - தருவதில்லை; **கர்மாணி** - கர்மங்களினால் உண்டாகும் அதிருஷ்ட பலன்

களையும்; **லோகஸ்ய** – ஜீவனுக்கு; (அவைகளில் ஸ்வாதந்தர்யத்தை) **ந ஸ்ருஜதி** – தருவதில்லை; **கர்மபல ஸம்யோகம் ச** – கர்மபலனை அடைவதில்கூட ஸ்வாதந்தர்யத்தை; **லோகஸ்ய** – ஜீவனுக்கு; **ந ஸ்ருஜதி** – தருவதில்லை; அப்படியாயின் கர்மங்கள் எவ்வாறு நடைபெறும்? **ஸ்வபாவ: து** – (ஸ்வம் – ஸ்வயமேவ, பவதி இதி ஸ்வபாவ:) – தாமே பிறரின் அபேக்ஷையின்றி இருக்கும்; அல்லது (ஸ்வம் – ஸ்வயமேவ பாவயதி ஜகத் இதி ஸ்வபாவ:) தாமே, பிறர் உதவியின்றி உலகங்களைச் சிருஷ்டிக்கும் பகவானே; **ப்ரவர்த்ததே** – எல்லாவற்றையும், எல்லாவிடத்திலும், எப்போதும் செய்கிறான்.

**குறிப்பு:** ஜீவன் சேதனன் ஆகையினால் கர்மங்களைச் செய்கிறான் என்கிறோம். அஸ்வதந்திரன் ஆனதால் ஸ்வதந்திரமாகச் செய்வதில்லை என்கிறோம். ஆகவே இது விபரீத ஞானமல்ல. முரண்பட்டதுமல்ல.

கர்ம பலனையடைவதில் ஜீவனுக்கு ஸ்வாதந்தர்யமில்லை என்பதை விளக்குகிறார்.

15. नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।
अज्ञानेन आवृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥

நாத[3]த்தே கஸ்யசித் பாபம், நசைவ ஸுக்ருதம் விபு[4]: |
அஜ்ஞானேன ஆவ்ருதம் ஜ்ஞானம், தேன முஹ்யந்தி ஜந்தவ: || 15

**விபு:** – ஜடப்பொருளைக் காட்டிலும் ஸமர்த்தனான ஜீவன்; **கஸ்யசித்** – எந்த துராசாரமுடையவனின்; **பாபம்** – பாபத்தையும்; **ந ஆதத்தே** – (ஸ்வதந்திரமாக) ஏற்பதில்லை; **கஸ்யசித்** – (எந்த ஸதாசாரமுடையவனின்); **ஸுக்ருதம் ச** – புண்யத்தையும்; **ந ஏவ** – (ஸ்வதந்திரமாக) ஏற்பதே இல்லை. அல்லது **விபு:** – எங்கும் வியாப்தனாயும், ஸமர்த்தனாயுமுள்ள, ஸ்வதந்திரனான பகவான்; **கஸ்யசித்** – எந்தக் கர்மத்தினுடைய; **பாபம்** – பாபத்தையும்; **ந ஆதத்தே** – ஏற்பதில்லை; **ஸுக்ருதம் ச** – புண்ணியத்தையும்; **நைவ** – ஏற்பதே இல்லை; (புண்ய பாபங்களின் ஸம்பந்தமில்லாதவன்). எங்கும் இருந்து கொண்டு, ஸ்வதந்திரமாக எல்லாவற்றையும் செய்யும் பகவான் ஏன் காணப்படுவதில்லை? என்றால், **ஜ்ஞானம்** – (நம்முடைய) புத்தி; **அஜ்ஞானேன** – அறிவின்மையால்; **ஆவ்ருதம்** – மூடப்பட்டுள்ளது; **தேன** – அதனால்; **ஜந்தவ:** – பிராணிகள்; **முஹ்யந்தி** – பகவானை அறிவதில்லை.

**குறிப்பு:** நம்முடைய மனைவி மக்கள் முன் செய்த பாபத்தின் பயனான துக்கத்தை அநுபவிக்கையில், அதைப் போக்கவோ, அதை நாம்

ஏற்றுக்கொள்ளவோ முடியாது தவிக்கிறோம். அம்மாதிரி நம் விரோதிகள் முன் செய்த புண்யத்தின் பயனான சுகத்தை அனுபவிக்கையில், அதைப் போக்கவோ, அதை நாம் அநுபவிக்கவோ முடியாதவர்களா யிருக்கிறோம். ஆகவே ஜீவர்களாகிய நாம் அஸ்வ தந்திரர்களே.

அர்ஜுனன்:- ஞானம், அஜ்ஞானத்தால் மூடப்பட்டுள்ளது என்றதால், அந்த ஞானம் அஜ்ஞானத்தைப் போக்க முடியாதல்லவா! அவ்வித ஞானத்தைச் சம்பாதிக்கத் தாங்கள் விதிக்கும், ஸந்ந்யாஸமும், கர்ம யோகமும் வீண் ஆயிற்றே! என்றால், விளக்குகிறார்:

16. ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषां आदित्यवत् ज्ञानं प्रकाशयति तत्परम् ॥

ஜ்ஞானேன து தத[3]ஜ்ஞானம், யேஷாம் நாஶித மாத்மன: |
தேஷாம் ஆதி[3]த்யவத் ஜ்ஞானம், ப்ரகாஶயதி தத் பரம் || 16

**ஆத்மன:** - *பகவானைப்பற்றிய;* **ஜ்ஞானேன** - *பரோக்ஷ வ்ருத்தி ஞானத்தால்;* **யேஷாம்** - *எவர்களுடைய;* **தத் அஜ்ஞானம்** - *(அந்த ஸ்வரூபத்தை மூடியிருக்கும் அநாதி அவித்யா என்ற) அஜ்ஞானம்;* **நாஶிதம்** - *பழுதாக்கப் படுகிறதோ;* **தேஷாம்** - *அவர்களுடைய;* **ஜ்ஞானம் து** - *அபரோக்ஷஞானமே;* **தத்** - *அந்த;* **பரம்** - *ஸர்வோத்தமரான குணபூர்ணரான விஷ்ணுவை;* **ஆதித்ய வத்** - *சூரியனைப் போல்;* **ப்ரகாஶயதி** - *நன்கு விளக்குகிறது.*

குறிப்பு: ஞானம் இருவகைப்படும். (1) ஸ்வரூபஞானம்- ஜீவனின் ஸ்வரூபமாய் அனாதி நித்யமானது. அனாதி அவித்யை என்ற அஜ்ஞானத்தால் மூடப்பட்டுள்ளது. (2) வ்ருத்திஞானம் - கல்வி கேள்விகளால் ஏற்படும் ஞானம். இதற்கு உற்பத்தியும் நாஶமும் உண்டு. இது பரோக்ஷஞானம் என்றும், அபரோக்ஷஞானம் என்றும் இரு வகைப்படும். நேரில் அறியாத பொருள்களைப் பற்றிய ஞானம் பரோக்ஷ ஞானமாகும். நேரில் காணும் பொருள்களைப் பற்றிய ஞானம் அபரோக்ஷ ஞானமாகும். ஸ்வரூப ஞானம் அஜ்ஞானத்தினால் மூடப்பட்டு, அதைப் போக்க முடியாவிடினும், பரோக்ஷஞானம், அனாதி அஜ்ஞானத்தைப் பழுதாக்கி, அபரோக்ஷஞானத்தையுண்டாக்குகிறது. ஆகவே ஸந்ந்யாஸ மும் கர்மயோகமும் வீணல்ல. அநுஷ்டிக்கத்தக்கவையே,

அபரோக்ஷ ஞானத்தின் நெருங்கிய ஸாதனம் யாது?

17. तद्बुद्धयः तदात्मानः तन्निष्ठाः तत्परायणाः ।
गच्छन्ति अपुनरावृत्तिं ज्ञाननिर्धूत कल्मषाः ॥

தத்புத்த[4]ய: தத[3]ாத்மான:, தந்நிஷ்டா: தத்பராயணா: |
க[3]ச்ச[2]ந்தி அபுனராவ்ருத்திம், ஜ்ஞான நிர்தூ[4]த கல்மஷா: || 17

**தத்புத்தய:** - *(4-1-1 ப்ரஹ்ம சூத்திரத்தின்படி திருப்பித் திருப்பி) ஸ்ரீஹரியிடம் புத்தியை உடையவர்களாயும்;* **ததாத்மான:** - *அந்த ஸ்ரீஹரியையே தமக்கு யஜமானனாக வுடையவர்களாயும்;* **தந்நிஷ்டா:** - *அவரிடமே ஸ்திரமா யிருப்பவர்களாயும்;* **தத்பராயணா:** - *அவரையே சிறந்த ஆச்ரயமாயுடையவர்களாயும் இருந்து;* (**ஜ்ஞானின:** - *அபரோக்ஷ ஞானத்தைப் பெற்றவர்களாகி);* **ஜ்ஞான நிர்தூத கல்மஷா:** - *அந்த அபரோக்ஷ ஞானத்தினால் பாபங்களை அடியோடு போக்கிக்கொண்டவர்களாய்;* **அபுனரா வ்ருத்திம்** - *மீண்டும் ஸம்ஸாரத்துக்குத் திரும்பிவராத மோக்ஷத்தை;* **கச்சந்தி** - *அடைகிறார்கள்.*

குறிப்பு: பாகவதம் 10-30-43. கோபிகாஸ்திரீகளின் நிலையும் இம்மாதிரியிருந்தது.

*தன்மனஸ்கா: தத்$^3$ஆலாப$^4$ா: தத்விசேஷ்டா: தத்$^3$ஆத்மிகா: |*
*தத்கு$^3$ணானேவ க$^3$ாயந்த்ய: நாத்மகாராணி ஸஸ்மரு: ||*

ஏற்றத் தாழ்வுள்ள எல்லா ஜீவர்களிடமும் உள்ள பகவானின் ரூபங்களுக்கிடையே, ஏற்றத்தாழ்வில்லை என்ற ஞானமும் அபரோக்ஷ ஞானத்திற்குச் ஸாதனம் என்கிறார்.

18. विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।
शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥

வித்$^3$யா வினய ஸம்பன்னே, ப்ராஹ்மணே க$^3$வி ஹஸ்தினி |
ஶுனி சைவ ஶ்வபாகே ச, பண்டி$^3$தா: ஸமத$^3$ர்ஶின: || 18

**பண்டிதா:** - *(பாண்டித்யம் ஆகம ஜ்ஞானம்) சாஸ்திர ஞானம் படைத்த பரோக்ஷஞானிகள்;* **வித்யா வினய ஸம்பன்னே** - *படிப்பும் பணிவும் நிறைந்த;* **ப்ராஹ்மணே** - *பிராம்மணனிடமும்;* **கவி** (गवि) - *பசுவினிடமும்;* **ஹஸ்தினி** - *யானையிடமும்;* **ஶுனி ச** - *நாயினிடமும்;* **ஶ்வபாகேச** - *நாயைச் சமைத்து உண்ணும் சண்டாளனிடமும்* (**ஸ்திதம் ஏவ** - *இருக்கிற ஸ்ரீஹரியையே);* **ஸமதர்ஶின:** *குணங்களிலும், தோஷ மில்லாதிருப்பதிலும், ஸமமானவனாக அதாவது ஏற்றத்தாழ் வில்லாதவன் எனப் பார்க்கிறவர்கள்.*

குறிப்பு: சிலர், பிராம்மணன், பஶு, யானை, நாய், சண்டாளன் இந்த ஐவரிடமே ஸமதிருஷ்டியை வைக்க வேண்டும் என்று கூறுகின்றனர். அவர்கள் ஒவ்வொன்றிலுமுள்ள ஏழாம் வேற்றுமையைக் கவனிக்க வில்லைபோலும். அவர்களிடமுள்ள அந்தர்யாமியான பகவத் ரூபங்களையே இந்த ஏழாம் வேற்றுமையும், அடுத்த சுலோகத்திலுள்ள,

நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம என்ற வாக்யமும் குறிக்கின்றன. மேலும் இந்த ஐந்துக்கும் ஏற்றத்தாழ்வுகளிருப்பது கண்கூடு. இதற்கு மாறாகக் கூறும் சாஸ்திரத்திற்கு எப்போதும் அஷ்டமீ திதியாகிற விடுமுறையை இந்த ஸப்தமி (7-ம் வேற்றுமை) தெரிவிக்கிறது. **ஸப்தமீயம் பவத் க்ரந்த, ஸ்யாஷ்டமீம் குருதே ஸதா** || என்கிறார் ஸ்ரீவாதிராஜஸ்வாமிகள்.

இம்மாதிரி அந்தர்யாமியான பகவத் ரூபங்களைச் ஸமமாகப் பார்ப்பவனைப் புகழ்கிறார்.

19. इहैव तैर्जितः सर्गः येषां साम्ये स्थितं मनः ।
निर्दोषं हि समं ब्रह्म तस्मात् ब्रह्मणि ते स्थिताः ॥

இஹைவ தைர் ஜிதஸ் ஸர்க்க[3]:, யேஷாம் ஸாம்யே ஸ்தி[2]தம் மன: |
நிர்தே[3]ாஷம் ஹி ஸமம் ப்[3]ரஹ்ம, தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்தி[3]தா: ||

**யேஷாம்** - *எவர்களுடைய;* **மன:** - *மனம்;* **ஸாம்யே** - *அந்தர்யாமியான பகவத் ரூபங்களின் சமமான தன்மையில்;* **ஸ்திதம்** - *இருக்கிறதோ;* **தை:** - *அவர்களால்;* **இஹஏவ** - *இந்த ஜன்மத்திலேயே;* **ஸர்க்க:** - *பிறப்பு முதலியவைகளான ஸம்ஸாரம்;* **ஜித:** - *ஜயிக்கப்பட்டது (மோக்ஷமடைகிறார்கள்). அந்த ஸமமான வஸ்து எது? எவ்விதத்தில் ஸாம்யம்? என்றால்,* **ஸமம்** - *அந்த சமமான வஸ்து;* **ப்ரஹ்ம** - *குண பூர்ணனான விஷ்ணுவே;* **நிர்தோஷம்** - *தோஷமற்றவர்; தோஷமில்லா திருப்பதில் ஸாம்யம் என்று கருத்து.* **தஸ்மாத்** - *ஆகையால் (ஸமமாக எங்கும் உள்ள வஸ்து விஷ்ணுவாதலால்);* **தே** - *அந்த ஸம வஸ்துவைக் காண்பவர்கள்;* **ப்ரஹ்மணி** - *விஷ்ணுவிடம்;* **ஸ்திதா: ஏவ** - *இருப்பவர்களே; (பிரஹ்ம ஞானிகளே ஆவர்);* **ஹி** - *பிரஸித்தமானது.*

மீண்டும் முற்கூறிய ஸந்ந்யாஸத்தை விஸ்தாரமாகக் கூறுகிறார்.

20. न प्रहृष्येत् प्रियं प्राप्य नोद्विजेत् प्राप्य चाप्रियम् ।
स्थिरबुद्धिरसंमूढः ब्रह्मवित् ब्रह्मणि स्थितः ॥

ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய, நோத்விஜேத் ப்ராப்ய சா ப்ரியம் |
ஸ்தி[2]ரபு[3]த்தி[4] ரஸம்மூட[4]:, ப்[3]ரஹ்மவித் ப்[3]ரஹ்மணி ஸ்தி[2]த: || 20

**ப்ரஹ்மவித்** - *விஷ்ணுதான் ஸ்வதந்திரன் என்று அறிந்தவனும்;* **ப்ரஹ்மணி ஸ்தித:** - *எப்போதும் அவரை ஸ்மரித்துக்கொண்டிருப்பவனும்;* **அஸம்மூட:** - *சுகதுக்கங்களைத் தருவதில் உலகத்தாரே காரணம் என்ற விபரீத ஞானமில்லாதவனாயும்;* **ஸ்திரபுத்தி:** - *உறுதியான புத்தியையுடையவனாயும் இருந்து;* **ப்ரியம்** - *சுகத்தைத் தரும்*

பொருள்களை; **ப்ராப்ய** - அடைந்து; **ந ப்ரஹ்ருஷ்யேத்** - அதிகம் ஸந்தோஷப்படக்கூடாது; **அப்ரியம்** - துக்கத்தைத் தருபவைகளை; **ப்ராப்ய ச** - அடைந்தும்; **ந உத்விஜேத்** - மனக் கலக்கத்தை அடையக்கூடாது.

**குறிப்பு:** முதற்பாதியில் ஸந்ந்யாஸமும், பின்பாதியில் அதன் உபாயமும் கூறப்பட்டுள்ளது.

ஸந்ந்யாஸத்தைக் காட்டிலும் தியானம் என்ற கர்மா சிறந்தது என்று கூறுகிறார்.

21. बाह्यस्पर्शेषु असक्तात्मा विन्दति आत्मनि यत्सुखम् ।
स ब्रह्मयोग युक्तात्मा सुखमक्षयमश्नुते ॥

ப[3]ாஹ்ய ஸ்பர்சேஷு அஸக்தாத்மா, விந்த[3]தி ஆத்மனி யத் ஸுக[2]ம்|
ஸ ப்ரஹ்மயோக[3] யுக்தாத்மா, ஸுக[2]மக்ஷய மச்னுதே || 21

**பாஹ்ய ஸ்பர்சேஷு** - சப்தம், ஸ்பர்சம் முதலிய வெளி விஷயங்களைக் காது, தோல் முதலிய இந்திரியங்களுக்கு எட்டாதபடி செய்து; **அஸக்த ஆத்மா** - அவற்றில் பற்றில்லாத மனமுடைய; **ஸ:** - அந்த ஸந்ந்யாஸி (காமம் முதலியவற்றை விட்டவன்); **ஆத்மனி** - தன் ஸ்வரூபத்தில் (வ்யக்தமாகும்) **யத் ஸுகம்** - எந்த ஆனந்தத்தை; **விந்ததி** - அநுபவிக்கிறானோ; **தத் ஸுகம்** - அந்த ஆனந்தத்தை; **ப்ரஹ்மயோக யுக்த ஆத்மா** - (ப்ரஹ்மணி யோக:) - பகவத் தியானத்துடன் கூடிய மனத்தையுடையவனாய்; **அக்ஷயம்** - மீண்டும் மறையாதபடி; **அச்னுதே** - அநுபவிக்கிறான்.

விஷய ஆசைகளை ஒழிப்பதற்காக, விஷய போகங்களை நிந்திக்கிறார்.

22. ये हि संस्पर्शजा भोगाः दुःखयोनय एव ते ।
आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥

யே ஹி ஸம்ஸ்பர்சஜா: பே[4]ாக[3]ா:, து[3]க்க[2]யோனய ஏவ தே |
ஆத்[3]யந்த வந்த: கௌந்தேய, ந தேஷு ரமதே பு[3]த[4]: || 22

**கௌந்தேய** - குந்தீ புத்திரனே!; **யே போகா:** - எந்த ஸுகாநுபவங்கள்; **ஹி** - பிரசித்தமான; **ஸம்ஸ்பர்சஜா:** - சப்தம், ஸ்பர்சம் முதலிய விஷயங்களின் சம்பந்தத்தால் உண்டாகின்றனவோ; **தே** - அவைகள்; **துக்கயோனய: ஏவ** - துக்கத்துக்குக் காரணமானவைகளே; ஏனெனில், **ஆத்யந்த வந்த:** - உற்பத்தியையும், நாசத்தையும் உடையவை; **புத:** - ஞானி; **தேஷு** - அவைகளில்; **ந ரமதே** . இன்புறுவதில்லை.

குறிப்பு: தினவினால் இரு கைகளைச் சொரிவதால் ஏற்படும் சுகதுக்கங்கள் போன்றவை விஷய சுகங்கள், என பாகவதம் 7-9-45ல் பிரஹ்லாதன் கூறுகிறான்.

*யன் மைதுனாதி க்ருஹமேதி ஸுகம் ஹி துச்சம்,*
*கண்டூயனேன கரயோரிவ துக்கதுக்கம் ||*

கீதை 18-38ல் இது ராஜஸசுகம் எனப்படுவது. ஆரம்பத்தில் அமிர்தம் போன்றும், முடிவில் விஷமாயுமிருக்கும்.

*விஷய சுகங்களை ஒழிப்பதைப் புகழ்கிறார்.*

23. शक्नोति इहैव यः सोढुं प्राक् शरीर विमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥

ஶக்னோதி இஹைவ யஸ் ஸோடு[4]ம், ப்ராக் ஶரீர விமோக்ஷணாத் |
காம க்ரோதே[4]ாத்ப[4]வம் வேக[3]ம், ஸ யுக்த: ஸ ஸுகீ[2] நர: || 23

**ய:** - *யார்;* **இஹஏவ** - *இந்த மனித தேகத்திலேயே;* **ஶரீர விமோக்ஷணாத் ப்ராக்** - *தேகத்தை விடுவதற்குமுன்;* **காமக்ரோத உத்பவம்** - *காமத்தினாலும், கோபத்தினாலும் உண்டாகும்;* **வேகம்** - *மனதின் சஞ்சலத் தன்மையை;* **ஸோடும்** - *பொறுத்துக் கொள்வதற்கு (வீணாக்குவதற்கு);* **ஶக்னோதி** - *சக்தியுள்ளவனாயிருக்கிறானோ;* **ஸ: நர:** - *அம்மனிதன்;* **யுக்த:** - *ஞானோபாயமுள்ளவனாயும்;* **ஸ:** - *அவன்;* **ஸுகீ** - *ஸுகமுள்ளவனாயும் (இருக்கிறான்).*

குறிப்பு: இந்த ஸாதனை மானிட தேகத்தில்தான் முடியும். மற்ற தேகங்களில் முடியாதென்று அறிந்து மனிதர்கள் முற்பட வேண்டும்.

*ஞானியின் லக்ஷணத்தைப் பின்வரும் சுலோகங்களில் விஸ்தரிக்கிறார்.*

24. योऽन्तःसुखो अन्तरारामः तथाऽन्तर्ज्योतिरेव यः ।
स योगी ब्रह्म निर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥

யோந்தஸ்ஸுகே[2]ா அந்தராராம:, தத[2]ாऽந்தர் ஜ்யோதிரேவ ய: |
ஸ யோகீ[3] ப்ரஹ்ம நிர்வாணம், ப்ரஹ்மபூ[4]தோ அதி[4]கச்ச[2]தி || 24

**ய:** - *யார்;* **அந்தர்ஜ்யோதி: ஏவ** - *மனதினுள்ளேயே தோன்றின பகவத் ஸ்வரூபத்தையுடையவனோ; அதனால்* **ய:** - *யார்;* **அந்தஸ்ஸுக:** - *ஆசை முதலியவற்றைத் துறந்தால் வ்யக்தமான தன் ஸ்வரூபானந்தமுடையவனோ;* **ததா** - *அப்படியே;* **அந்த: ஆராம:** - *மனதினுள் பகவானைப் பார்ப்பது, தொடுவது, பேசுவது முதலியவைகளாலும்*

ஏற்பட்ட ஆனந்தத்தை உடையவனோ; **ஸ:** - அவன்; **யோகீ** - ஞானி (ஆவான்). ஏனென்றால் அவன்; **ப்ரஹ்ம பூத:** - 5-17ல் கூறியபடி பகவானிடம் புத்தி முதலியவைகளை உடையவனாய்; **நிர்வாணம்** - பிராக்ருத சரீரமற்ற; **ப்ரஹ்ம** - விஷ்ணுவை; **அதிகச்சதி** - நன்கு அறிகிறான்.

**குறிப்பு:** அந்தஸ்ஸுக:, அந்த: ஆராம:- இரண்டும் ஞானியின் லக்ஷணமாகும்.

*தர்சன ஸ்பர்ச ஸம்பாஷாத், யத்ஸுகம் ஜாயதே ந்ருணாம்*
*ஆராமஸ் ஸது விஜ்ஞேய: ஸுகம் காம க்ஷயோதிதம் ||*

பாபங்களின் நாசத்தாலும் இந்த லக்ஷணம் ஏற்படும் என்கிறார்.

25. लभन्ते ब्रह्म निर्वाणं ऋषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥

லப[4]ந்தே ப்ரஹ்ம நிர்வாணம், ரிஷய: க்ஷீண கல்மஷா: |
சி[2]ன்ன த்வைத[4]ா யதாத்மான:, ஸர்வபூ[4]த ஹிதே ரதா: || 25

**ரிஷய:** - (ரிஷ ஜ்ஞானே) ஞானிகள்; **க்ஷீணகல்மஷா:** - பாபங்களைப் போக்கினவர்களாகி; **சின்ன த்வைத ஆயத ஆத்மான:** - ஸந்தேகம், விபரீதஞானம் இவற்றை அகற்றினவர்களாயும், விசாலமான மனதையுடையவர்களாயும் (அதாவது ச்ரவணம் முதலியவற்றால் அறிய வேண்டிய எல்லாவற்றையும் அறிந்தவர்களாய்); அல்லது **சின்ன த்வைதா:** - ஸந்தேகம் முதலியவற்றை அகற்றினவர்களாயும்; **யதாத்மான:** - மனதை அடக்கினவர்களாயும்; **ஸர்வபூத ஹிதே** - எல்லாப் பிராணிகளின் நன்மையில்; **ரதா:** - ஈடுபட்டவர்களாயும்; **ஆகி, நிர்வாணம்** - பிராக்ருத சரீரமில்லாத; **ப்ரஹ்ம** - விஷ்ணுவை; **லபந்தே - உபலபந்தே** - நேரில் தர்சிக்கிறார்கள்.

எப்போதும் எங்கும் பகவானை அடைந்திருப்பதும் ஞானியின் லக்ஷணம் என்கிறார்.

26. कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्म निर्वाणं वर्तते विदितात्मनाम् ॥

காம க்ரோத[4] வியுக்தானாம், யதீனாம் யதசேதஸாம் |
அபி[4]தோ ப்ரஹ்ம நிர்வாணம், வர்த்ததே விதி[3]தாத்மனாம் || 26

**யதீனாம்** - முயற்சிப்பவர்களும்; **யத சேதஸாம்** - மனத்தை அடக்கினவர்களும்; **காம க்ரோத வியுக்தானாம்** - ஆசை, கோபம் முதலியவை இல்லாதவர்களுமான; **விதித ஆத்மனாம்**

– பகவானை அறிந்த ஞானிகளுக்கு; **நிர்வாணம்** – பிராகிருத சரீரமில்லாத; **ப்ரஹ்ம** – விஷ்ணு; **அபித:** – எல்லா தேசங்களிலும்; எல்லாக் காலங்களிலும்; **வர்த்ததே** – (ரக்ஷிப்பவராக அல்லது ஞானத்திற்கு விஷயமாக) உளர்.

**குறிப்பு:** ப்ரஹ்லாதன், ஜடபரதன் முதலிய ஞானிகளைப் பகவான் எப்போதும் எங்கும் காப்பாற்றியிருப்பது அறிந்ததே.

5-21ல் 'ப்ரஹ்மயோக' பதத்தால் கூறிய தியானத்தின் முறையை இரு சுலோகங்களில் கூறுகிறார்.

27. स्पर्शान् कृत्वा बहिर्बाह्यान् चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।
प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तर चारिणौ ॥

28. यतेन्द्रिय मनोबुद्धिः मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छा भयक्रोधः यस्सदा मुक्त एव सः ॥

ஸ்பர்சான் க்ருத்வா ப³ஹிர் பா³ஹ்யான், சக்ஷுஸ்சைவ அந்தரே ப்⁴ருவோ: |
ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா, நாஸாப்⁴யந்தர சாரிணௌ || 27

யதேந்த்ரிய மனோ பு³த்³தி⁴:, முனிர்மோக்ஷ பராயண: |
விக³தேச்சா ப⁴ய க்ரோத⁴:, யஸ்ஸதா³ முக்த ஏவ ஸ: || 28

*(சு. 28ல்)* **ய:** – *யார்; (சு. 27ல்)* **பாஹ்யான்** – வெளியே இருக்கத் தகுந்த (துக்கத்தைத் தரும்); **ஸ்பர்சான்** – ஶப்தம், ஸ்பர்ஶம் முதலிய விஷயங்களை; **பஹி: க்ருத்வா** – வெளியேயே இருக்கும்படி (அதாவது ப்ரத்யாஹாரத்தால் அவை காது, தோல் முதலிய இந்திரியங்களையடையாமல்) அடக்கியும்; **ப்ருவோ:** – இரு புருவங்களின்; **அந்தரே ஏவ** – நடுவிலேயே; **சக்ஷு:** – கண்களை; (பார்வையை); **க்ருத்வா ச** – வைத்தும்; (அல்லது 6-13ல் கூறுவதுபோல் மூக்கின் நுனியையே பார்த்துக் கொண்டும்;) **ப்ராண அபானௌ** – பிராண வாயுவையும், அபான வாயுவையும்; **ஸமௌ** – சமமாக அதாவது மேலும் கீழும் செல்லாமல் அசைவற்று; **நாஸா ஆப்யந்தர சாரிணௌ** – மூக்கின் உள்ளேயே ஸஞ்சரிக்கும்படி; **க்ருத்வா** – செய்தும் (கும்பகத்தில் இருந்தும்);

*28.* **யத இந்த்ரிய மனோ புத்தி:** – இந்திரியங்களையும், மனத்தையும், புத்தியையும் அடக்கினவனாயும்; **முனி:** – மனனம் என்ற சிந்தனையில் ஈடுபட்டவனாயும்; **மோக்ஷ பராயண:** – மோக்ஷத்தைச் சிறந்த ஆச்ரயமாகக் கொண்டவனும்; **விகத இச்சா பய க்ரோத:** – ஆசையையும், பயத்தையும்,

கோபத்தையும் விட்டவனாயும் (உள்ளவனோ) **ஸ:** - அவன்; **ஸதா** - எப்போதும்; **முக்த: ஏவ** - முக்தியைப் பெற்றவனே அதாவது முக்தன் போன்றவனே ஆவான்.

இங்கு தியானிக்கத் தகுந்த வஸ்துவைக் கூறுகிறார்.

29. भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥

பே[4]ாக்தாரம் யஜ்ஞ தபஸாம், ஸர்வலோக மஹேஶ்வரம் |
ஸுஹ்ருத[3]ம் ஸர்வபூ[4]தானாம், ஜ்ஞாத்வா மாம் ஶாந்தி ம்ருச்ச[2]தி ||29

**யஜ்ஞ தபஸாம்** - ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்கள்; க்ருச்ரம், சாந்திராயணம் முதலிய தபஸ்கள், இவற்றைப் புசிப்பவனும்; **ஸர்வலோக மஹேஶ்வரம்** - எல்லா உலகங்களிலும் உயர்ந்த ஈசுவரனாயும்; **ஸர்வ பூதானாம்** - எல்லாப் பிராணிகளுக்கும்; **ஸுஹ்ருதம்** - பதில் உபகாரத்தைக் கருதாது உபகாரம் செய்பவனும்; **ஶாந்திம்** - மோக்ஷத்துக்குக் காரணமானவனுமான; **மாம்** - என்னை; **ஜ்ஞாத்வா** - தியானம் செய்து; **ரிச்சதி** - நேரில் காண்கிறான். (அடைகிறான் என்ற அர்த்தமல்ல).

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे संन्यास योगो नाम पञ्चमो अध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸு, உபநிஷத்ஸு,
ப்ரஹ்மவித்யாயாம், யோகசாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
ஸந்ந்யாஸ யோகோ நாம பஞ்சமோ அத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய, ஸந்ந்யாஸயோகம் என்னும்*
*5-ம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 6

# ஆத்மஸம்யம யோகம்

(47 சுலோகங்கள்)

## ஆறாம் அத்தியாயச் சுருக்கம்

**ஆத்மஸம்யம யோகம்** - மனத்தை நன்கு அடக்கும் உபாயம்:- 2-39ல் பகவத்ஞானத்தின் உபாயம் கூறப்பட்டது. அது 1. நிஷ்காம கர்மயோகம் 2. தியானயோகம் - என இருவகைப்படும். மேற்படி கர்மயோகம் ஞானத்தின் பஹிரங்க உபாயமாகும். அதை 2-45 முதல், 5ம் அத்தியாயம் முடிய விளக்கினார். இந்த அத்தியாயத்தில் மேற்படி கர்மயோகத்தால் உண்டாவதும், ஞானத்தின் அந்தரங்க உபாயமுமான, தியான யோகத்தை விளக்குகிறார். தியானத்திற்குரிய ஆஸனம் முதலிய அங்கங்களையும் நிரூபிக்கிறார்.

முதலில் மனதையும், பகவானையும், நாம் வசப்படுத்திக் கொள்ள வேண்டும். சுத்தமான இடத்தில், ஆஸனத்தை ஏற்படுத்திக்கொண்டு, அதன் மீது தர்ப்பைகள், மான்தோல், வஸ்திரம் - இவற்றைப் பரப்பி, நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு, மூக்கின் நுனியில் பார்வையைச் செலுத்தி, மனதை ஒருமுகப் படுத்தி, பகவானின் மூர்த்தியை தியானித்து வரவேண்டும். குரங்குபோன்ற மனத்தை அடக்குவது கஷ்டமே, ஆயினும், பழக்கத்தினாலும், விஷயங்களிலுள்ள வைராக்கியத்தி னாலும், நாளடைவில் அடக்கிவிடலாம். அதற்கு ஆகார நியமமும் அவசியமாகும். இப்படி பல ஜன்மங்களில் செய்யும் தியானத்தால், பகவான் ஹ்ருதய கமலத்தில் விளங்குவார். அவரை நேரில் கண்டு மகிழலாம். இதுவே அபரோக்ஷ ஞானமாகும்.

இவ்விதம் தொடர்ந்து செய்யமுடியாமல், நடுவில் விட்டுவிட்ட யோகப்ரஷ்டனுக்கு எங்கும், என்றும், யாதொரு அனர்த்தமுமில்லை.

ப்ராரம்ப மாத்ரம் இச்சா வா, விஷ்ணுதர்மே ந நிஷ்பலா ||

விஷ்ணுவைப் பற்றிய தர்மத்தை ஆரம்பித்ததற்கே பலனுண்டு. செய்ய விரும்பினாலும் பலனுண்டு. அந்த

யோகப்ரஷ்டன், புண்ய லோகங்களை அடைந்து, போகங்களை அனுபவித்து, மீண்டும் இவ்வுலகத்தில் செல்வம் நிறைந்த ஸ்ரீமான்களின் குலத்திலோ, தவம் நிறைந்த ஞானிகளின் குலத்திலோ பிறந்து, விட்டகுறை தொட்டகுறை என்றபடி, முன் ஜன்மத்திய தியானத்தைத் தொடர்ந்து (செய்து) ஸித்தியை அடைகிறான்.

2-39-ல் பகவத் ஞானத்தின் உபாயம் கூறப்பட்டது. அது இருவகைப்படும். 1 (நிஷ்காம) கர்மயோகம் - பகவத் ஞானத்தின் பஹிரங்க ஸாதனமாகும். இது 2-45 முதல் 5-ம் அத்தியாயம் முடிய கூறப்பட்டது. 2. தியானயோகம் - இது பகவத்ஞானத்தின் அந்தரங்க ஸாதனமாகும். இது 5-27,28ல் சுருக்கமாகக் கூறப்பட்டது. இந்த அத்தியாயத்தில் விஸ்தரிக்கப்படுகிறது. தியானத்தின் அங்கமான ஆஸனம் முதலியனவும் கூறப்படுகின்றன.

இந்த தியானயோகத்தில், காமம் முதலியவற்றை விட்டு விடுதல் என்ற ஸந்ந்யாஸமும், ஈசுவரனின் ஆராதனையாகிற கர்மானுஷ்டானமும், உள்ளவன்தான், அதிகாரியாதலால் அவ்விரண்டையும் கூறுகிறார்.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீபகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார்.

1. अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः।
स संन्यासी च योगी च न निरग्निः न च अक्रियः॥

அநாச்ரித: கர்மப²லம், கார்யம் கர்ம கரோதி ய: |
ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ³ ச, ந நிரக்³னி: ந ச அக்ரிய: || 1

**ய:** - யார்; **கர்மபலம்** - கர்மங்களின் பலனை; **அநாச்ரித:** - அபேக்ஷிக்காமல்; **கார்யம்** - தன் வர்ணாசிரமத்தை யொட்டிச் செய்யவேண்டிய; **கர்ம** - கர்மத்தை; **கரோதி** - செய்கிறானோ; **ஸ:** - அவன்; **ஸந்ந்யாஸீ ச** - துறந்தவனும்; **யோகீ ச** - கர்மயோகியும்; ஆவான். (அவனேதான் தியானத்தின் அதிகாரியுமாவான்). **நிரக்னி:** - கார்ஹபத்யம், தக்ஷிணாக்னி, ஆஹவனீயம் என்ற மூன்று அக்நிகளை விட்டவன்; **ந** - ஸந்ந்யாஸியும் கர்மயோகியும் அல்ல; **அக்ரிய: ச** - அக்நி ஹோத்ரம் முதலிய கர்மங்களை விட்டவனும்; **ந** - ஸந்ந்யாஸியும் கர்மயோகியும் அல்ல.

**குறிப்பு:** மூன்று அக்நிகளில் செய்யும் யாகங்களையும் அக்நிஹோத்ரம் முதலிய கர்மங்களையும் விட்டு, பற்றில்லாதிருப்பவனே

தியானத்தின் அதிகாரி என்ற ஸாங்க்ய மதக் கொள்கையை இங்கு கண்டித்துள்ளார். 4-25ல் கூறப்பட்டபடி ஸன்யாஸிகளுக்கும் அக்நிகளும், கர்மங்களும் உண்டு என நிரூபிக்கப்பட்டுள்ளது.

ஸந்ந்யாஸம் வேறு, கர்மயோகம் வேறு அல்ல. ஸந்ந்யாஸம் கர்மயோகத்தின் ஒரு பகுதியே என்கிறார்.

2. यं संन्यासमिति प्राहुः योगं तं विद्धि पाण्डव ।
न ह्यसंन्यस्त सङ्कल्पो योगी भवति कश्चन ॥

யம் ஸந்ந்யாஸமிதி ப்ராஹு:, யோக[3]ம் தம் வித்தி[4] பாண்ட[3]வ |
ந ஹ்ய ஸந்ந்யஸ்த ஸங்கல்ப:, யோகீ[3] ப[4]வதி கஸ்சன || 2

**பாண்டவ** – *பாண்டுவின் குமாரனே!;* **யம்** – *எதை;* **ஸந்ந்யாஸம்** – *5-3ல் கூறியபடி காமம், கோபம் முதலியதைத் துறத்தல் என்று;* **ப்ராஹு:** – *கூறுகின்றனரோ;* **தம்** – *அதை;* **யோகம்** – *ஞானோபாயமான பூர்ண கர்மாநுஷ்டானம் என்று;* **வித்தி** – *அறிவாயாக;* **ஹி** – *ஏனெனில்;* **அஸந்ந்யஸ்த ஸங்கல்ப:** – *ஆசை முதலியவற்றைத் துறக்காத;* **கஸ்சன** – *யாரும்;* **யோகீ** – *பூர்ணகர்மானுஷ்டானமுடையவனாக;* **ந பவதி** – *ஆகமாட்டான்.*

**குறிப்பு:** ஆசை முதலியவற்றைத் துறந்து, கர்மங்களைச் செய்து வருபவன்தான் பூர்ணகர்மானுஷ்டானமுடையவன் ஆவான். ஸந்ந்யாஸம் கர்மானுஷ்டானத்தின் ஒரு பாகமே.

இந்தப் பூர்ண கர்மானுஷ்டானத்தை எதுவரையில் செய்ய வேண்டும் என்பதைக் கூறுகிறார்.

3. आरुरुक्षोः मुनेर्योगं कर्म कारणमुच्यते ।
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥

ஆருருக்ஷோ: முனேர் யோக[3]ம், கர்ம காரண முச்யதே |
யோக[3]ாரூட[4]ஸ்ய தஸ்யைவ, ஶம: காரண முச்யதே || 3

**யோகம்** – *ஞானோபாயத்தை;* **ஆருருக்ஷோ:** – *அடைய விரும்புகிற;* **முனே:** – *பரோக்ஷ வ்ருத்திஞானமுடையவனுக்கு;* **கர்ம** – *(உயர்ந்தவர், தாழ்ந்தவர், சமமானவர் ஆகியவர்களின் சேவையும், தன் வர்ணாசிரமத்திய) கர்மானுஷ்டானமும்;* **காரணம்** – *ஹேதுவாகும் என்று;* **உச்யதே** – *சொல்லப்படுகிறது. அதாவது அபரோக்ஷ ஞானம் உதயமாகும் வரையில் கர்மானுஷ்டானம் செய்யவேண்டும்.* **யோக ஆரூடஸ்ய** – *ஞானோபாயத்தின் பூர்த்தியை அடைந்த;* **தஸ்ய ஏவ** – *அவனுக்கே, அபரோக்ஷ ஞானிக்கே;* **ஶம:** – *(1) முற்கூறிய*

பலரின் சேவையின் ஓய்வும், (2) பகவானிடம் மனதை வைத்தல் என்ற தியானமும்; காரணம் - (மோக்ஷத்தில் ஆனந்தம் பொங்கு வதற்கு) காரணம் என்று; **உச்யதே** - சொல்லப்படுகிறது.

**குறிப்பு:** அபரோக்ஷஞானி, பலரின் சேவையைச் செய்ய வேண்டியதில்லை. பகவத்தியானம் செய்தால் போதும்.

யோகாரூடன் என்ற அபரோக்ஷஞானியின் லக்ஷணத்தைக் கூறுகிறார்.

4. यदा हि नेन्द्रियार्थेषु न कर्मसु अनुषज्जते ।
सर्व सङ्कल्प संन्यासी योगरूढस्तदोच्यते ॥

யத[3]ா ஹி நேந்த்ரியார்த்தே[2]ஷு, ந கர்மஸு அநுஷஜ்ஜதே |
ஸர்வ ஸங்கல்ப ஸந்ந்யாஸீ, யோக[3]ாரூட[4]ஸ் ததே[3]ாச்யதே || 4

**யதா** - எப்பொழுது; **இந்த்ரிய அர்த்தேஷு** - இந்திரியங் களின் விஷயமான ஶப்தம், ஸ்பர்சம் முதலியவற்றில்; **ந அநுஷஜ்ஜதே** - தன் முயற்சியில்லாமலேயே ஸம்பந்தப்படுவ தில்லையோ; **கர்மஸு** - கர்மங்களிலும்; **ந** - ஸம்பந்தப்படுவ தில்லையோ; அதாவது, **ஸர்வஸங்கல்ப ஸந்ந்யாஸீ** - எல்லாக் கர்மங்களிலும் தன்னுடையது என்ற அபிமானத்தை விட்டு, பகவானின் வஶமானதென்ற ஞானமுள்ளவனாகிறானோ; **ததா** - அப்பொழுது; **யோகாரூட:** - ஞானோபாயத்தின் பூர்த்தியை அடைந்தவன் என்று; **உச்யதே** - சொல்லப் படுகிறான்; **ஹி** - பிரஸித்தம்.

**குறிப்பு:** ஸங்கல்பம் முதலியனயாவும், பகவானின் அதீனமானவை என்று அறிந்து, கர்மங்களில் பற்றில்லாமல் அநுஷ்டித்துக் கொண்டு, தன் முயற்சியில்லாமலேயே ஶப்தம் ஸ்பர்சம் முதலிய விஷயங்களில் ஈடுபடாதிருப்பதே யோகா ரூடனின் அல்லது அபரோக்ஷஞானியின் லக்ஷணமாகும்.

முற்கூறிய தியான யோகத்தைத் திருந்தச் செய்ய வேண்டும் என்கிறார்.

5. उद्धरेत् आत्मना आत्मानं नात्मानं अवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बन्धुः आत्मैव रिपुरात्मनः ॥

உத்த[4]ரேத் ஆத்மனா ஆத்மானம், நாத்மானம் அவஸாத[3]யேத் |
ஆத்மைவ ஹ்யாத்மனோ ப[3]ந்து[4]:, ஆத்மைவ ரிபு ராத்மன: || 5

**ஆத்மனா** - 1. மனதால், 2. ஸ்ரீஹரியால், அவன் அருளால்; **ஆத்மானம்** - ஜீவனை; **உத்தரேத்** - மோக்ஷத்திற்குப்

பாத்திரமாகச் செய்யவேண்டும்; **ஆத்மானம்** - ஜீவனை; **ந அவஸாதயேத்** - துக்கத்திற்குப் பாத்திரமாகச் செய்யக்கூடாது; **ஹி** - ஏனெனில்; **ஆத்மா ஏவ** - *(1) மனதே (2) ஸ்ரீஹரியே;* **ஆத்மன:** - ஜீவனுக்கு; **பந்து:** - நண்பன்; **ஆத்மா ஏவ** - *(1) மனதே, (2) ஸ்ரீஹரியே;* **ஆத்மன:** - ஜீவனுக்கு; **ரிபு:** - ஶத்ரு (ஆகும்).

எவ்வித ஜீவனுக்கு, எவ்வித மனமும், ஸ்ரீஹரியும், நண்பனாகவும் ஶத்ருவாகவும் ஆகும் என்பதை விளக்குகிறார்.

6. बन्धुरात्मा आत्मनस्तस्य येनात्मैव आत्मना जितः ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेत आत्मैव शत्रुवत् ॥

ப[3]ந்து[4]ராத்மா ஆத்மனஸ்தஸ்ய, யேனாத்மைவ ஆத்மனா ஜித: |
அநாத்மனஸ்து ஶத்ருத்வே, வர்த்தேத ஆத்மைவ ஶத்ருவத் || 6

**யேன ஆத்மனா** - எந்த ஜீவனால், புத்தி என்ற கருவியால்; **ஆத்மா** - மனம்; **ஜித:** - வஶமாக்கப்படுகிறதோ; **தஸ்ய ஆத்மன:** - அந்த ஜீவனுக்கு; **ஆத்மா** - மனம்; **பந்து: ஏவ** - (பகவத் தியானத்திற்கு உதவி புரியும்) நண்பனே; **அநாத்மன: து** - மனத்தை வசப்படுத்தாத ஜீவனுக்கோ; **ஆத்மா ஏவ** - மனதே; **ஶத்ருவத்** - பகைவன்போல; **ஶத்ருத்வே** - உதவி புரியாதிருப்பதில்; **வர்த்தேத** - இருக்கும். மனதின் ஜயத்தால் தியானயோகம் செய்யவேண்டும், அல்லது, **யேன** - எந்த ஜீவனால்; **ஆத்மனா** - பக்தி என்ற கருவியால்; **ஆத்மா** - ஸ்ரீஹரி; **ஜித:** - வசமாக்கப்படுகிறாரோ; **தஸ்ய ஆத்மன:** - அந்த ஜீவனுக்கு; **ஆத்மா** - ஸ்ரீஹரி; **பந்து: ஏவ** - நண்பனே ஆவார். **அநாத்மன: து** - பக்தி என்ற கருவியால் ஸ்ரீஹரியை வசப்படுத்தாத ஜீவனுக்கோ; **ஆத்மா ஏவ** - ஸ்ரீஹரியே; **ஶத்ருவத்** - பகைவன்போல; **ஶத்ருத்வே** - உதவி புரியாதிருப்பதில்; **வர்த்தேத** - இருப்பார்.

குறிப்பு: கடோபநிஷத்தில் மனம் கடிவாளமாகவும், புத்தி தேரோட்டியாகவும், உடல் தேராகவும், இந்திரியங்கள் குதிரைகளாகவும், ஜீவன், மோக்ஷம் என்ற ஊருக்குச் செல்லும் பிரயாணியாகவும் வர்ணிக்கப்படுகிறது.

*ஆத்மானம் ரதினம் வித்தி, ஶரீரம் ரதமேவ ச |*
*புத்திம் து ஸாரதிம் வித்தி, மன: ப்ரக்ரஹமேவ ச ||*
*ஸோ அத்வன: பாரமாப்னோதி, தத்விஷ்ணோ: பரமம் பதம் ||*

*மனதும் ஸ்ரீஹரியும் எவ்வித உபகாரத்தால் நண்பர்கள்?*

7. जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः ।

ஜிதாத்மன: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: | 7A

**ஜிதாத்மன:** – *(1) புத்தியினால் வசப்படுத்திய மனத்தை உடையவனுக்கும், (2) பக்தியினால் வசப்படுத்திய ஸ்ரீஹரியை யுடையவனுக்கும். (***ப்ரஶாந்தி: பவதி** *– தன் முயற்சியின்றி ஶப்தம் முதலிய விஷயங்களில் மனது செல்லாமல் இருக்கும்.)* **ப்ரஶாந்தஸ்ய** – *அவ்வாறு தானே விஷயங்களிற் செல்லாத மனத்தினனுக்கு;* **பரமாத்மா** – *உத்தம சேதனனான ஸ்ரீஹரி;* **ஸமாஹித:** – *ஹிருதயத்தில் நன்கு நிலைபெற்றிருப்பார், நேரிலும் காணப்படுவார்.*

*சுலோகம் 4ல் கூறிய அபரோக்ஷ ஞானியின் லக்ஷணத்தை 2½ சுலோகங்களில் தெளிவாக்குகிறார்.*

शीतोष्ण सुखदुःखेषु तथा मानापमानयोः ॥

8. ज्ञान विज्ञान तृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः ।
युक्तः इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥

9. सुहृन्मित्रार्युदासीन मध्यस्थ द्वेष्य बन्धुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥

ஶீதோஷ்ண ஸுக$^2$து$^3$க்கே$^2$ஷு, தத$^2$ா மானாபமானயோ: | 7B

ஜ்ஞான விஜ்ஞான த்ருப்தாத்மா, கூடஸ்தே$^2$ா விஜிதேந்த்ரிய: |
யுக்த: இத்யுச்யதே யோகீ$^3$, ஸமலோஷ்டாஶ்ம காஞ்சன: || 8

ஸுஹ்ருன் மித்ராரி உத$^3$ாஸீன, மத்$^4$யஸ்த$^2$ த்வேஷ்ய ப$^3$ந்து$^4$ஷு |
ஸாது$^4$ஷ்வபி ச பாபேஷு, ஸமபுத்தி$^4$ர் விஶிஷ்யதே || 9

*7.* **ஶீத உஷ்ண, ஸுக துக்கேஷு** – *குளிர், வெப்பம், இன்பம், துன்பம் இவைகளில்;* **ததா** – *அவ்வாறே;* **மான அபமானயோ:** – *கௌரவம், அகௌரவம் இரண்டில்;*

*8.* **கூடஸ்த:** – *ஆகாயம்போல், மலர்ச்சி, வாட்டம் ஆகிய மாறுதலடையாதவனாய்;* **ஜ்ஞான விஜ்ஞான த்ருப்தாத்மா** – *ஜ்ஞான – விஷ்ணு ஸர்வோத்தமர் என்ற ஞானம் அல்லது பரோக்ஷஞானம்;* **விஜ்ஞான** – *விஷ்ணுவின் விசேஷ ஞானம் அல்லது அபரோக்ஷஞானம்; இவ்விரண்டினால் விஷய சுகங்களில், போதும் என்ற மனத்தைப் பெற்றவனாயும்;* **விஜித இந்த்ரிய:** – *வெளி இந்திரியங்களை நன்கு ஜயித்தவனாயும்;* **ஸமலோஷ்ட அஶ்ம காஞ்சன:** – *மண் கட்டி, கல், தங்கக்கட்டி*

இவற்றைச் சமமாகப் பாவிப்பவனாயும் உள்ள; **யோகீ** - தியானம் புரிபவன்; **யுக்த:** - பூர்த்தியடைந்த யோக முடையவன்; **இதி உச்யதே** - என்று கூறப்படுகிறான்.

9. **ஸுஹ்ருத்** - பிரதி உபகாரத்தை எதிர்பாராது உபகரிக்கும் நண்பன்; **மித்ர** - வரும் துக்கத்தை அறிவித்து அதிலிருந்து காப்பாற்றும் நண்பன்; **அரி** - கொலை முதலிய வற்றைப் புரியும் சத்ரு; **உதாஸீன** - செய்ய வேண்டிய உபகாரத்தையும், அபகாரத்தையும், செய்யாமல் ஒதுங்கி இருப்பவன்; **மத்யஸ்த** - உபகாரம், அபகாரம் இரண்டையும் செய்பவன்; **த்வேஷ்ய** - நாம் விரும்பாததைச் செய்பவன்; (வெறுக்கத் தகுந்தவன்); **பந்து** - உபாகரம் செய்பவன்; இவர் களிடமும்; **ஸாதுஷு அபி** - புண்யங்களைச் செய்பவர் களிடமும்; **பாபேஷு ச** - பாபிகளிடமும்; **ஸமபுத்தி:** - ஒரே விதமான புத்தியை உடையவன்; **விஶிஷ்யதே** - அனைவரிலும் சிறந்தவனாயிருக்கிறான்.

குறிப்பு: எல்லோரிடமும் சமபுத்தியுடன் இருத்தல் ஶாஸ்திர சம்மதமுமல்ல. உலக நடைக்கும் பொருத்தமல்ல. அதன் உண்மையான அர்த்தம்:- 1. எல்லோரிடமுள்ள பகவத் ரூபங்களில் தாரதம்யமில்லை, அவை சமமானவை. 2. நண்பனாயிருப்பது, பகைவனாயிருப்பது முதலியன ஸ்வதந்திரமானவையல்ல, அவர்களிடமுள்ள பகவத் ரூபங்களால் தரப்படுபவை. 3. இவை ஜீவ ஸ்வரூபத்தில் அமைந்தவையல்ல, பிராகிருத மனதினால் ஏற்பட்டவை. 4. யாரிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று சாஸ்திரங்கள் விதிக்கின்றனவோ, அவரிடம் அப்படி அதாவது அவரவர்களின் தகுதிக்குத் தக்கவாறு நடந்து கொள்ளுதல் - இவை தான் ஸமபுத்தியுடன் இருத்தல் எனப்படும். மயா - லக்ஷ்மீயுடன்; ஸஹித: - கூடியிருப்பவன்; ஸம:- விஷ்ணு அவனிடமுள்ள புத்தி ஸம புத்தியாகும். 5-18;6-29;9-29;13-29 சுலோகங்களிலும் இவ்வித ஸமமாயிருத்தல் என்ற அர்த்தத்தைக் காண்க.

சு. 5ல் விதிக்கப்பட்ட தியானத்தின் முறையைப் பல சுலோகங்களில் விளக்குகிறார்.

10. योगी युञ्जीत सततं आत्मानं रहसि स्थितः ।
एकाकी यतचित्तात्मा निराशीः अपरि ग्रहः ॥

யோகீ$^3$ யுஞ்ஜீத ஸததம், ஆத்மானம் ரஹஸி ஸ்தி$^2$த: |
ஏகாகீ யதசித்தாத்மா, நிராஶீ: அபரிக்ரஹ: || 10

**யோகீ** - ஞானோபாயத்தை அநுஷ்டிப்பவன்; **ஸததம்** - எப்பொழுதும்; **ரஹஸி** - பிறர் அறியாத இடத்தில்; **ஸ்தித:** - இருந்துகொண்டு; **ஏகாகீ** - பிறர் சேர்க்கையின்றி; **யத சித்த**

**ஆத்மா** - *மனத்தையும், தேகத்தையும், தன் வசப்படுத்தி;* **நிராஶீ:** - *ஆசை இல்லாதவனாய்;* **அபரிக்ரஹ:** - *மனைவி, மக்கள் முதலியோரிடம் பற்றில்லாதவனாய்;* **ஆத்மானம்** - *மனதை;* **யுஞ்ஜீத** - *பகவானிடம் சேர்க்க வேண்டும்.*

**குறிப்பு:** ஏகஸ்தப: த்விரத்யாயீ, த்ரிபிர் கீதம், சது: பதம்- தவம்செய்ய ஒருவன், கல்விகற்க இருவர், பாட்டுக்கு மூவர், பிரயாணத்திற்கு நால்வர் இருக்க வேண்டும்.

11. शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।
नात्युच्छ्रितं नातिनीचं चेलाजिन कुशोत्तरम् ॥

12. तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रिय क्रियः ।
उपविश्य आसने युंज्यात् योगं आत्मविशुद्धये ॥

ஶுசௌ தே[3]ஶே ப்ரதிஷ்ட[2]ாப்ய, ஸ்தி[2]ர மாஸன மாத்மன; |
நாத்யுச் ச்ரிதம் நாதிநீசம், *சேலாஜின குஶோத்தரம் || 11

தத்ரைகாக்[3]ரம் மன: க்ருத்வா, யதசித்தேந்த்ரியக்ரிய: |
உபவிச்ய ஆஸனே யுஞ்ஜ்யாத், யோக[3]ம் ஆத்ம விசுத்த[4]யே || 12

*11.* **ஶுசௌ** - *ஶுத்தமான அதாவது மனத்தெளிவுக்குக் காரணமான;* **தேஶே** - *(நைமிசாரண்யம் முதலிய) இடத்தில்;* **ந அதி உத் ச்ரிதம்** - *அதிக உயரமில்லாததும்;* **ந அதி நீசம்** - *அதிகம் தாழ்ந்ததல்லாததும்;* **சேல அஜின குச உத்தரம்** - *வஸ்த்ரம், மான்தோல் அல்லது புலித்தோல், தர்ப்பைகள் இவற்றை மேலே பரப்பப்பட்டதுமான;* **ஆஸனம்** - *உட்காரும் பலகை முதலியவற்றை;* **ஆத்மன:** - *தனக்காக;* **ஸ்திரம்** - *உறுதி யாக (ஆடாமல்) இருக்கும்படி;* **ப்ரதிஷ்டாப்ய** - *ஏற்படுத்திக் கொண்டு.*

*12.* **தத்ர ஆஸனே** - *அந்த இடத்தில்;* **உப விச்ய** - *உட்கார்ந்து;* **யத சித்த இந்த்ரிய க்ரிய:** - *மனம், இந்திரியங்கள் இவற்றின் செயல்களை அடக்கினவனாய்;* **மன:** - *மனதை;* **ஏக அக்ரம் க்ருத்வா** - *(ஊசியில் கோர்க்கும் நூலின் பல திரிகளை ஒன்றாக்குவது போல) ஒருமுகப்படுத்தி;* **ஆத்ம விஶுத்தயே** - *மனதின் எல்லா தோஷங்களை அல்லது ஸம்ஸாரம் என்னும் தோஷத்தை, எரிப்பதற்காக;* **யோகம்** - *தியானமாகிற உபாயத்தை;* **யுஞ்ஜ்யாத்** - *அனுஷ்டிக்க வேண்டும். (****சைலாஜின** *- பிறர் பாடம்)*

**குறிப்பு:** ஆஸனம் ஆடினால் மனம் நிலைத்திருக்காது. அதிக உயரமாயிருந்தால் கீழேவிழ ஹேதுவாகும். அதிகம் தாழ்ந்திருந்தால் புழு,

பூச்சி முதலியவற்றின் தொல்லை ஏற்படும். மிருதுவாக இருக்க வஸ்திரமும், ஸூத்திக்காக மான் முதலியதின்தோலும், உண்மை விளங்க தர்ப்பைகளும், பரப்பப்படவேண்டும்.

13. समं कायशिरोग्रीवं धारयन् अचलं स्थिरः ।
संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्च अनवलोकयन् ॥

14. प्रशान्तात्मा विगतभीः ब्रह्मचारिव्रते स्थितः ।
मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥

ஸமம் காய ஶிரோ க்[3]ரீவம், த[4]ாரயன் அசலம் ஸ்தி[2]ர: |
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்[3]ரம் ஸ்வம், தி[3]ஶஸ்ச அநவலோகயன் || 13

ப்ரஶாந்தாத்மா விக[3]தபீ[4]:, ப்ரஹ்மசாரி வ்ரதே ஸ்தி[2]த: |
மனஸ் ஸம்யம்ய மச்சித்தோ, யுக்த ஆஸீத மத்பர: || 14

*13.* **காய ஶிரோ க்ரீவம்** – *மத்யதேகம், தலை, கழுத்து இவற்றை;* **ஸமம்** – *நேராக (நிமிர்ந்து);* **தாரயன்** – *வைத்துக் கொண்டு;* **அசலம்** – *அசையாமல் இருக்கும்படி;* **ஸ்திர:** – *உறுதியுள்ளவனாய்;* **ஸ்வம்** – *தன்னுடைய;* **நாஸிகா அக்ரம்** – *மூக்கின் நுனியை;* **ஸம்ப்ரேக்ஷ்ய** – *உற்றுப் பார்த்துக்கொண்டு (அல்லது 5–27ல் கூறியபடி பார்வையை இரு புருவங்களின் நடுவில் வைத்துக்கொண்டு);* **திஶ:** – *திசைகளை (திசை களிலுள்ள பொருள்களை);* **அநவலோகயன் ச** – *பார்க்காமலும் (சு. 12ல்* **யுஞ்ஜ்யாத்** – *அனுஷ்டிக்க வேண்டும்; அல்லது சு. 14ல் சேர்க்கலாம்).*

*14.* **ப்ரஶாந்த ஆத்மா** – *தானாகவே விஷயங்களில் செல்லாத மனத்தினனாயும்;* **விகதபீ:** – *புலி, திருடர் முதலிய பயமில்லாதவனாகவும்;* **ப்ரஹ்மசாரி வ்ரதே ஸ்தித:** – *சிற்றின் பத்தில் ஆசையின்மை முதலிய பிரம்மசாரியின் நியமங்களை யுடையவனாகவும்;* **மன:** – *மனதை;* **ஸம்யம்ய** – *விஷயங்களில் செல்லாது நன்கு அடக்கி;* **மச்சித்த:** – *என்னைத் தியானிப் பவனாகவும்;* **மத்பர:** – *என்னையே ஸர்வோத்தமனாக வுடையவனாகவும்;* **யுக்த:** – *ஸமாதியுடன் கூடினவனாகவும்;* **ஆஸீத** – *இருக்கவேண்டும்.*

குறிப்பு: கண்கள் திறந்திருந்தால், வெளிப்பொருள்கள் மனதைக்கவரும். நன்கு மூடியிருந்தால் தூக்கம் வந்து விடலாம். ஆகவே பாதி திறந்தும், பாதி மூடியும் இருக்க, மூக்கின் நுனியை உற்றுப்பார்க்கும்படி கூறுகிறார்.

தியானத்தின் பலனைக் கூறுகிறார்.

15. युञ्जन्नेवं सदाऽऽत्मानं योगी नियतमानसः।
शान्तिं निर्वाण परमां मत्संस्थां अधिगच्छति ॥

யுஞ்ஜன்னேவம் ஸத³ா ஆத்மானம், யோகீ³ நியத மானஸ: |
ஶாந்திம் நிர்வாண பரமாம், மத்ஸம்ஸ்த²ாம் அதிக³ச்சதி || 15

**நியதமானஸ:** – *நன்கு அடக்கின மனதையுடைய;* **யோகீ** – *தியானிப்பவன்;* **ஏவம்** – *இம்மாதிரி;* **ஸதா** – *எப்பொழுதும்;* **ஆத்மானம்** – *பகவானை;* **யுஞ்ஜன்** – *தியானித்துக்கொண்டு; (அல்லது* **ஆத்மானம்** – *மனதை;* **யுஞ்ஜன்** – *பகவானிடம் சேர்த்து);* **நிர்வாண பரமாம்** – *தேகத்தை விட்டபிறகு ஏற்படும்;* **மத்ஸம்ஸ்தாம்** – *என்னிடம் நிலைத்திருப்பது என்ற;* **ஶாந்திம்** – *மோக்ஷத்தை;* **அதிகச்சதி** – *அடைகிறான்.*

குறிப்பு: இங்கு மோக்ஷம் என்ற அர்த்தமுடைய ஶாந்தி, நிர்வாணம் என்ற இருபதங்களிருப்பதால், 2-ம் பதத்திற்குத் தேகத்தை விடுதல் என்று அர்த்தம் செய்யப்பட்டது. (சு. 28ல், ஏவம் யுஞ்ஜன் நம்முடைய பாடம்.)

*தியானயோகத்தில் ஈடுபட்டவனுக்கு ஆகாரம் முதலிய வைகளில் நியமங்களை இரு சுலோகங்களில் கூறுகிறார்.*

16. नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्त मनश्नतः।
न चाति स्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥

17. युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥

நாத்யஶ்னதஸ்து யோகே³ாSஸ்தி, நசைகாந்த மநஶ்னத: |
ந சாதிஸ்வப்ன ஶீலஸ்ய, ஜாக்ரதோ நைவ சார்ஜுன || 16

யுக்தாஹார விஹாரஸ்ய, யுக்த சேஷ்டஸ்ய கர்மஸு |
யுக்த ஸ்வப்னாவ பே³ாத⁴ஸ்ய, யோகே³ா ப⁴வதி து³க்க²ஹா || 17

*16.* **அதி அச்னத:** – *அளவுக்கு மீறி உண்பவனுக்கு;* **யோக:** – *தியான உபாயம்;* **நது அஸ்தி** – *இல்லவே இல்லை;* **ஏகாந்தம்** – *ஒன்றையுமே,* **அநச்னத: ச** – *சாப்பிடாமல் உபவாஸ மிருப்பவனுக்கும்;* **ந** – *இல்லை; (உபவாஸம் செய்யும் ஶக்தி யுள்ளவன் செய்யலாம்).* **அதிஸ்வப்ன சீலஸ்ய** – *அதிகம் தூங்கும் ஸ்வபாவமுடையவனுக்கும்;* **ந** – *இல்லை;* **அர்ஜுன** – *ஶுத்தமான கர்மத்தைச் செய்பவனே!* **ஜாக்ரத: ச** – *(அதிகம்) விழித்திருப்பவனுக்கும்;* **ந ஏவ** – *இல்லை.*

*17.* **யுக்த ஆஹார விஹாரஸ்ய** – *சிரமத்தையுண்டு பண்ணாத உபாயத்துடன் கூடிய, போஜனம், உலாவுதல்,*

இவற்றையுடையவனுக்கும்; **கர்மஸு** - கர்மங்களில்; **யுக்த சேஷ்டஸ்ய** - சிரமமுண்டாகாதபடி அளவுடன் செயல் படுபவனுக்கும்; **யுக்தஸ்வப்ன அவபோதஸ்ய** - தியானத்திற்குத் தடங்கலில்லாதபடி தூக்கத்தையும், விழிப்பையும் உடைய வனுக்கும்; **யோக:** - தியானமாகிற உபாயம்; **துக்கஹா பவதி** - துக்கத்தைப் போக்குவதாகும்.

குறிப்பு:– பாதி வயிறு அன்னம் முதலிய உணவுப் பொருள்கள், கால் வயிறு ஜலம், மீதி கால் வயிறு காற்றோட்டத்திற்காகக் காலியாக இருக்க வேண்டும். இந்தக் கருத்துடன்தான் நாம் ஸாவாகாசமாக (வயிற்றில் இடைவெளியுடன் கூடியதாக) சாப்பிடுங்கள், என்று கூறி வருகிறோம். 'பகவான் நமக்கு அரை வயிற்றுக்குக் கொடுத்திருக்கிறான்' என்றும் கூறிவருகின்றனர்.

தியானயோக பூர்த்தியின் ஸ்வரூபத்தைப் பல சுலோகங் களில் கூறுகிறார்.

18. यदा विनियतं चित्तं आत्मन्येव अवतिष्ठते ।
निस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥

யத[3]ா விநியதம் சித்தம், ஆத்மன்யேவ அவதிஷ்ட[2]தே |
நிஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்[4]யோ, யுக்த இத்யுச்யதே தத[3]ா || 18

**யதா** – எப்பொழுது; **விநியதம்** – விஷயங்களில் செல்லாது விசேஷமாக அடக்கப்பட்ட; **சித்தம்** – மனம்; **ஆத்மனி ஏவ** - பரமாத்மாவிடமே; **அவதிஷ்டதே** - ஸ்திரமாக நிற்கிறதோ; **ஸர்வகாமேப்ய:** - எல்லா விஷயங்களில்; **நிஸ்ப்ருஹ:** - ஆசையில்லாமலும் இருக்கிறானோ; **ததா** - அப்பொழுது; **யுக்த:** – யோகத்தின் பூர்த்தி யடைந்தவன்; **இதி உச்யதே** – எனக் கூறப்படுகிறான்.

அந்த நிலையை ஒரு உதாரணத்தால் விளக்குகிறார்.

19. यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥

யத[2]ா தீ[3]போ நிவாதஸ்தே[2]ா, நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா |
யோகி[3]னோ யதசித்தஸ்ய, யுஞ்ஜதோ யோக[3] மாத்மன: || 19

**ஆத்மன: யோகம்** – பரமாத்மாவின் தியான உபாயத்தை; **யுஞ்ஜத:** - அநுஷ்டிப்பவனும்; **யத சித்தஸ்ய** - மனதை அடக்கினவனுமான; **யோகின:** – தியான யோகிக்கு; **நிவாதஸ்த:** – காற்றில்லாதவிடத்திலுள்ள; **தீப:** – விளக்கு; **யதா** – எவ்வாறு; **ந**

**இங்கதே** – *அசைவதில்லையோ;* **ஸா உபமா** – *அந்த உதாரணம்;* **ஸ்ம்ருதா** – *கருதப்படுகிறது.*

20. यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैव आत्मना आत्मानं पश्यन् आत्मनि तुष्यति ।

21. सुखं आत्यन्तिकं यत्तत् बुद्धिग्राह्यं अतीन्द्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्वतः ॥

22. यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन् स्थितः न दुःखेन गुरुणाऽपि विचाल्यते ॥

23. तं विद्यात् दुःखसंयोग वियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगो निर्विण्णचेतसा ॥

யத்ரோபரமதே சித்தம், நிருத்த$^{4}$ம் யோக$^{3}$ஸேவயா |
யத்ர சைவ ஆத்மனா ஆத்மானம், பச்யன் ஆத்மனி துஷ்யதி || 20
ஸுக$^{2}$ம் ஆத்யந்திகம் யத்தத், புத்தி$^{4}$ க்$^{3}$ராஹ்யம் அதீந்த்$^{3}$ரியம் |
வேத்தி யத்ர நசைவாயம், ஸ்தி$^{3}$தஸ் சலதி தத்வத: || 21
யம் லப்த்$^{4}$வா சாபரம் லாப$^{4}$ம், மன்யதே நாதி$^{4}$கம் தத: |
யஸ்மின் ஸ்தி$^{2}$தோ ந து$^{3}$க்கேன, கு$^{3}$ருணாऽபி விசால்யதே || 22
தம் வித்யாத் து$^{3}$க்க ஸம்யோக$^{3}$, வியோக$^{3}$ம் யோக$^{3}$ஸம்ஜ்ஞிதம் |
ஸ நிஸ்சயேன யோக்தவ்யோ, யோகே$^{3}$ா நிர்விண்ண சேதஸா || 23

*20.* **யத்ர** – *எந்த தியானத்தில்;* **யோகஸேவயா** – *தியானத்தை அநுஷ்டிப்பதால்;* **நிருத்தம்** – *நன்கு அடக்கப் பட்ட;* **சித்தம்** – *மனம்;* **உபரமதே** – *வெளி வியவஹாரங்களில் ஈடுபடாமல் இருக்கிறதோ;* **யத்ர ச ஏவ** – *அந்த தியானத் திலேயே;* **ஆத்மனா** – *மனதால்;* **ஆத்மானம்** – *பரமாத்மாவை;* **ஆத்மனி** – *தன் தேகத்தில்;* **பச்யன்** – *தர்ஶித்துக்கொண்டு;* **துஷ்யதி** – *ஆனந்தமடைகிறானோ;*

*21.* **யத்ர** – *எந்த தியானத்தில்;* **ஸ்தித:** – *உள்ள;* **அயம்** – *இவன்;* **புத்தி க்ராஹ்யம்** – *அநுபவத்தினால் அறியத்தகுந்ததும்;* **அதி இந்த்ரியம்** – *இந்திரியங்களால் அறிய முடியாததும்;* **ஆத்யந்திகம்** – *மிக உயர்ந்ததுமான;* **யத்** – *எதுவோ;* **தத்** – *அந்த;* **ஸுகம்** – *ஆனந்தத்தை;* **வேத்தி** – *அநுபவிக்கிறானோ;* **யத்ர** – *எந்த தியானத்தில் (**ஸ்தித: அயம்** – இருக்கும் இவன்);* **தத்வத:** – *பகவானின் ரூபத்திலிருந்து;* **ந ஏவ சலதி** – *விலகுவதே இல்லையோ;*

13

*22.* **யம்** – *எந்த தியானத்தை;* **லப்த்வா ச** – *அடைந்தும்;* **அபரம் லாபம்** – *வேறு லாபத்தை;* **தத:** – *அதைக் காட்டிலும்;* **அதிகம்** – *அதிகமாக;* **ந மன்யதே** – *நினைக்க மாட்டானோ;* **யஸ்மின்** – *எந்த தியானத்தில்;* **ஸ்தித:** – *இருப்பவன்;* **குருணா** – *மிகப்பெரிய;* **துக்கேன அபி** – *துக்கத்தின் காரணத்தினால் கூட;* **ந விசால்யதே** – *அசைக்கப்படுவதில்லையோ;*

*23.* **தம்** – *அந்த;* **துக்க ஸம்யோக வியோகம்** – *(உண்டான) துக்கத்தின் ஸம்பந்தத்தால் விடுபட்ட, அல்லது துக்கத்தின் ஸம்பந்தம் ஏற்படாமல் தடுப்பதை;* **யோக ஸம்ஜ்ஞிதம்** – *தியானம் என்ற பெயரையுடையதாக;* **வித்யாத்** – *அறியவேண்டும்;* **ஸ: யோக:** – *அவ்வித தியானமாகிற உபாயம்;* ***நிர்விண்ண சேதஸா** – *விஷயங்களில் வைராக்யம் படைத்த மனத்தையுடையவனால்;* **நிஸ்சயேன** – *கட்டாயம்,* **யோக்தவ்ய:** – *செய்யத்தகுந்தது.*

**குறிப்பு: *அநிர்விண்ண சேதஸா** – பிறர் பாடம்.

*அவ்வித தியானம் செய்யும் முறையை விளக்குகிறார்.*

24. सङ्कल्प प्रभवान् कामान् त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैव इन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥

25. शनैः शनैः उपरमेत् बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिन्तयेत् ॥

ஸங்கல்ப ப்ரப$^{4}$வான் காமான், த்யக்த்வா ஸர்வான் அஶேஷத: |
மனஸைவ இந்த்ரிய க்$^{3}$ராமம், விநியம்ய ஸமந்தத: || 24

ஶனை: ஶனை: உபரமேத், பு$^{3}$த்த்$^{4}$யா த்$^{4}$ருதி க்$^{3}$ருஹீதயா: |
ஆத்ம ஸம்ஸ்தம் மன: க்ருத்வா, ந கிஞ்சித$^{3}$பி சிந்தயேத் || 25

*24.* **ஸங்கல்ப ப்ரபவான்** – *இதன்பொருட்டு இதைச் செய்கிறேன், என்ற நோக்கத்துடன் அனுஷ்டிப்பதால் ஏற்படும்;* **ஸர்வான்** – *எல்லா;* **காமான்** – *விஷய சுகங்களை;* **அஶேஷத:** – *மீதியில்லாமல்;* **த்யக்த்வா** – *விட்டுவிட்டு;* **ஸமந்தத:** – *சுற்றிலுமுள்ள;* **இந்த்ரிய க்ராமம்** – *இந்திரியங்களின் கூட்டத்தை;* **மனஸா ஏவ** – *மனதினாலேயே;* **விநியம்ய** – *நன்றாக அடக்கி;*

*25.* **[மன: ச** – *(கடிவாளம் போன்ற) அந்த மனதையும்];* **த்ருதி க்ருஹீதயா** – *தைரியத்துடன் வசமாக்கப்பட்ட;* **புத்த்யா** – *(ஸாரதி போன்ற) புத்தியினால்;* **ஶனை: ஶனை:** – *மெல்ல*

*மெல்ல;* **உபரமேத்** – *(1) விஷயங்களில் ஓய்வு பெறும்படி செய்யவேண்டும். (2)* **உப** – *(உபோ அதிகே) ஸர்வோத்தமனான ஸ்ரீ ஹரியிடம் ரமிக்கச்செய்ய வேண்டும். மேலும்,* **மன:** – *மனதை;* **ஆத்ம ஸம்ஸ்தம்** – *பரமாத்மாவிடம் இருக்கும்படி;* **க்ருத்வா** – *செய்து;* **கிஞ்சித் அபி** – *வேறு எதையும்;* **ந சிந்தயேத்** – *நினைக்கலாகாது.*

*தியானத்தில் மனம் ஈடுபடாவிடில் செய்ய வேண்டியதைக் கூறுகிறார்.*

26. यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतत् आत्मन्येव वशं नयेत् ॥

யதோ யதோ நிஸ்சரதி, மனஸ் சஞ்சல மஸ்தி[2]ரம் |
ததஸ்ததோ நியம்யைதத், ஆத்மன்யேவ வஶம் நயேத் || 26

**சஞ்சலம்** – *(இயற்கையிலேயே) அலைந்து திரிகிற;* **மன:** – *மனது;* **அஸ்திரம்** *(ஸத்) – நிலையற்றதாகி;* **யத: யத: = யத்ர யத்ர** – *எந்தெந்த விஷயங்களில்;* **நிஸ்சரதி** – *நன்கு செல்கிறதோ;* **தத: தத:** – *அந்தந்த விஷயங்களிலிருந்து;* **ஏதத்** – *இந்த மனதை;* **நியம்ய** – *இழுத்துக் கட்டுப்படுத்தி;* **ஆத்மனி ஏவ** – *பரமாத்மாவிடமே;* **வஶம்** – *வசப்பட்டிருக்கும்படி;* **நயேத்** – *செய்யவேண்டும்.*

குறிப்பு: (1) பாகவதம், 9-4-51; 9-15-31 சுலோகங்களில், யத: யத: = யத்ர யத்ர, என்ற அர்த்தத்தைக் காண்க.

(2) சஞ்சலம், அஸ்திரம் – ஒரே அர்த்தமுள்ள பதங்களைப் புனருக்தியில்லாமல் அர்த்தம் கூறியிருக்கும் அழகைக் கவனிக்க.

*இவ்வித தியானத்தைச் செய்பவர்களின் பலனை விவரிக்கிறார்.*

27. प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।
उपैति शान्तरजसं ब्रह्मभूतं अकल्मषम् ॥

ப்ரஶாந்த மனஸம் ஹ்யேனம், யோகி[3]னம் ஸுக[2]முத்தமம் |
உபைதி ஶாந்தரஜஸம், ப்ரஹ்மபூ[4]தம் அகல்மஷம் || 27

**ப்ரஶாந்த மனஸம்** – *தானாகவே விஷயங்களில் செல்லாத மனத்தையுடையவனும்;* **ஶாந்த ரஜஸம்** – *ரஜோ குண மற்றவனும்; அதனால்,* **அகல்மஷம்** – *(3-37ல் ரஜோகுண கார்யமான) காமம், கோபம் முதலிய தோஷங்களற்றவனும்;* **ப்ரஹ்ம பூதம்** – *ப்ரஹ்மணி பூதம் (5-17ல் கூறியபடி) விஷ்ணு*

விடம் இருப்பவனுமான; **ஏனம் யோகினம்** – இந்த தியான யோகியை; **உத்தமம் ஸுகம்** – மிகச்சிறந்த ஆனந்தம்; **உபைதி** – வந்து அடைகிறது; **ஹி** – (வேதம் முதலியவற்றில்) பிரசித்தம்.

அந்த ஆனந்தம் எவ்விதமானது? அதைச் ஶ்ரமப்பட்டு அடைகிறானா? என்றால் பதிலளிக்கிறார்.

28. एवं युञ्जन् सदाऽऽत्मानं योगी विगतकल्मषः ।
सुखेन ब्रह्मसंस्पर्शं अत्यन्तं सुखमश्नुते ॥

ஏவம் யுஞ்ஜன் ஸத[3]ா ஆத்மானம், யோகீ[3] விக[3]த கல்மஷ: |
ஸுகே[2]ன ப்ரஹ்ம ஸம் ஸ்பர்ஶம், அத்யந்தம் ஸுக[2]மஶ்னுதே || 28

**விகதகல்மஷ:** – காமம், கோபம் முதலிய தோஷங்களற்ற; **யோகீ** – தியானயோகி; **ஏவம்** – முற்கூறியபடி; **ஆத்மானம்** – பரமாத்மாவை; **ஸதா** – எப்பொழுதும்; **யுஞ்ஜன்** – தியானித்துக்கொண்டு; **ஸுகேன** – சிரமப்படாமல்; **ப்ரஹ்ம ஸம்ஸ்பர்ஶம்** – பகவானின் சேர்க்கையால் வெளியான; **அத்யந்தம்** – மிகச்சிறந்த; **ஸுகம்** – ஸ்வரூப ஆனந்தத்தை; **அஶ்னுதே** – அடைகிறான்.

குறிப்பு: 'யுஞ்ஜன்னேவம்' பிறர் பாடம். (6-15 கவனிக்க.) தியானிக்கப்படும் வஸ்துவைக் கூறுகிறார்.

29. सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥

ஸர்வபூதஸ்த[2] மாத்மானம், ஸர்வபூ[4]தானி சாத்மனி |
ஈக்ஷதே யோக[3] யுக்தாத்மா, ஸர்வத்ர ஸமதர்ஶன: || 29

**ஸர்வத்ர** – பிரம்மதேவர் முதல் துரும்பு ஜீவன் வரையிலுள்ள, எல்லோரிடமும் (உள்ள பகவானை); **ஸமதர்ஶன:** – ஐஶ்வர்யம் முதலிய குணங்களினால் சமமானவன் என்று காணும்; **யோக யுக்த ஆத்மா** – தியானத்துடன் கூடிய மனதையுடையவன்; **ஆத்மானம்** – பரமாத்மாவை; **ஸர்வ பூதஸ்தம்** – பிரம்மதேவர் முதலிய எல்லோரிடமிருப்பவனாகவும், **ஸர்வபூதானி ச** – எல்லா ஜீவர்களையும்; **ஆத்மனி** – பகவானிடம் இருப்பவர்களாகவும்; **ஈக்ஷதே** – பார்க்கிறான்.

குறிப்பு: 5-29; 6-14; இரண்டிலும் தியானிக்கப்படும் வஸ்து கூறப்பட்டிருப்பினும், இங்கு உத்தமாதிகாரிகள் தியானிக்கும் வஸ்து கூறப்படுகிறது.

30. यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ।।

யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர, ஸர்வம் ச மயி பஶ்யதி |
தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி, ஸ ச மே ந ப்ரணஶ்யதி || 30

**ய:** – *யார்;* **ஸர்வத்ர** – *பிரம்மதேவர் முதல் துரும்பு ஜீவன் வரையிலுள்ள, எல்லோரிடமும் (இருக்கிற);* **மாம்** – *என்னை;* **பஶ்யதி** – *காண்கிறானோ;* **ஸர்வம் ச** – *பிரம்மதேவர் முதலிய உலகமனைத்தையும்;* **மயி** – *என்னிடம் (என் அதீனமாக);* **பஶ்யதி** – *காண்கிறானோ;* **தஸ்ய** – *அவனுக்கு;* **அஹம்** – *நான்;* **ந ப்ரணஶ்யாமி** – *அழிவதில்லை (அவனுடைய யோக க்ஷேமங்களை எப்போதும் வஹிக்கிறேன். 9-22)* **ஸ: ச** – *அவனும்;* **மே** – *எனக்கு;* **ந ப்ரணஶ்யதி** – *அழிவதில்லை (எப்போதும் என் பக்தனாகவே இருக்கிறான்).*

**குறிப்பு:** முன் சுலோகத்தில் எல்லோரிடமும் உள்ளவன் பரமாத்மா என்றார். இதில் எல்லோரிடமும் உள்ளவன் 'நானே' என்கிறார். இதனால் அந்த ஸர்வாந்தர்யாமியான பரமாத்மா தானே என்று அறிவிக்கிறார். இம்மாதிரி (1) 3-30;5-10 (2) 4-34; 7-2; 9-1 (3) 18-62; 18-66 சுலோகங்களில் காண்க.

31. सर्वभूतस्थितं यो मां भजति एकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ।।

ஸர்வ பூ$^4$தஸ்தி$^2$தம் யோ மாம், ப$^4$ஜதி ஏகத்வ மாஸ்தி$^2$த: |
ஸர்வத$^2$ா வர்த்தமானோSபி, ஸ யோகீ$^3$ மயி வர்த்ததே || 31

**ய:** – *யார்;* **ஏகத்வம்** – *எங்கும் உள்ளவர் பரமேசுவரன் ஒருவரே, அவருடைய ரூபங்களில் பேதமில்லை என்று;* **ஆஸ்தித:** – *நன்கு அறிந்தவனாய்;* **ஸர்வ பூதஸ்திதம்** – *எல்லாப் பிராணிகளிடம் இருக்கிற;* **மாம்** – *என்னை;* **பஜதி** – *சேவிக்கிறானோ;* **ஸ: யோகீ** – *அந்த அபரோக்ஷஞானி;* **ஸர்வதா** – *நியாயமாகவோ, அநியாயமாகவோ எவ்விதமேனும்;* **வர்த்தமான: அபி** – *இருந்தபோதிலும்;* **மயி** – *என்னிடம்;* **வர்த்ததே** – *இருக்கிறான். (மோக்ஷமடைகிறான்).*

**குறிப்பு:** பிரம்ம சூத்திரம் 3-4-15 அபரோக்ஷ ஞானிகள் ஶாஸ்திரவிருத்தமாக நடந்தாலும் மோக்ஷத்தை அடைவார்கள். ஆனால் மோக்ஷத்தில் ஆனந்தம் பொங்காது. ஶாஸ்திரப்படி நடந்தால்தான் மோக்ஷத்தில் ஆனந்தம் பொங்கும். (உத்ரேக)

சு. 29ல், ஸமதர்ஶன:- என்பதற்கு மற்றொரு அர்த்தத்தைக் கூறுகிறார்.

32. आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।
सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥

ஆத்மௌபம்யேன ஸர்வத்ர, ஸமம் பஶ்யதி யோ அர்ஜுன |
ஸுக[2]ம் வா யதி வா து:க்[2]கம், ஸ யோகீ[3] பரமோ மத: || 32

**அர்ஜுன** – சுத்தமான கர்மத்தைச் செய்பவனே! **ய:** – யார்; **ஸர்வத்ர** – எல்லா பக்தர்களிடமும்; **ஆத்ம ஔபம் யேன** – தன்னைப்போலவே; அதாவது, **யதி** – யதா (यथा) **வா ஸுகம்** – தனக்குச் சுகம் எவ்வாறு பிரியமானதோ; **துக்கம் வா** – துக்கம் பிரியமானதல்லவோ; அம்மாதிரி, **ஸமம்** – ஒரேவிதமாக; **பஶ்யதி** – பார்க்கிறானோ; **ஸ: யோகீ** – அந்த அபரோக்ஷ ஞானி; **பரம:** – உயர்ந்தவனாக; **மத:** – கருதப்படுகிறான்.

குறிப்பு: தனக்குச் ஸுகமே வேண்டும். துக்கம் கொஞ்சம் கூட வேண்டாம்; என்று நினைப்பதுபோல, பிற பகவத் பக்தர்களுக்கும் ஸுகத்தையே விரும்புகிறவன் ஶ்ரேஷ்டன் ஆவான்.

अर्जुनउवाच – **அர்ஜுன: உவாச**

மேற்கண்டவாறு யாரும் அநுஷ்டிக்காததால், தாங்கள் கூறுவது அப்ரமாணம், என்று கருதி அர்ஜுனன் கேட்கிறான்.

33. योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।
एतस्याहं न पश्यामि चञ्चलत्वात् स्थितिं स्थिराम् ॥

34. चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवत् दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥

யோऽயம் யோக[3]ஸ் த்வயா ப்ரோக்த:, ஸாம்யேன மது[4]ஸூதன |
ஏதஸ்யாஹம் ந பஶ்யாமி, சஞ்சலத்வாத் ஸ்தி[2]திம் ஸ்தி[2]ராம் || 33

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண, ப்ரமாதி[2] ப[3]லவத் த்[3]ருட[4]ம் |
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே, வாயோரிவ ஸுது[3]ஷ்கரம் || 34

*33.* **மதுஸூதன** – மது என்ற அஸுரனைக் கொன்றவரே! **ஸாம்யேன** – சு. 29ல் எல்லோரிடமுள்ள பகவத் ரூபங்கள் ஸம மானவை என்றும்; சு. 32ல் எல்லா பக்தர்களையும் தன்னைப் போல் பாவிக்கவேண்டும் என்றும்; **ய:** – எந்த; **அயம்** – இந்த; **யோக:** – தியானயோகம்; **த்வயா** – உம்மால்; **ப்ரோக்த:** – உபதேசிக்கப்பட்டதோ; **ஏதஸ்ய** – இந்த யோகத்தின்; **ஸ்திராம் ஸ்திதிம்** – நிலைத்திருக்கும் தன்மையை; **அஹம்** – நான்; **சஞ்சலத்வாத்** – ஊசலாடுகிறபடியால்; **ந பஶ்யாமி** – காண வில்லை.

எது ஊசலாடுகிறது என்பதை இங்கு கூறுகிறான்.

*34.* **க்ருஷ்ண** – எல்லோருடைய மனதை இழுப்பவரே!; **மன:** – மனம்; **சஞ்சலம்** – ஸ்திரமானதல்ல என்பது; **ஹி** – பிரசித்தமானது; **ப்ரமாதி** – (தேகத்தையும், இந்திரியங்களையும்) நன்கு கடைந்து கலக்கக்கூடியது; **பலவத்** – (பகுத்தறிவினாலும் ஜயிக்கமுடியாதபடி) பலம்பெற்றது; **த்ருடம்** – (அதில் விஷய வாஸனைகள் பதிந்திருப்பதால், நல்வழியில் செலுத்த முடியாதபடி) உறுதியானது; **தஸ்ய** – அப்பேர்ப்பட்ட மனதை; **நிக்ரஹம்** – நன்கு அடக்குவது; **வாயோ: இவ** – (ஆகாயத்தில் வீசிக்கொண்டிருக்கும்) காற்றை (வஸ்திரத்தினாலோ அல்லது குடம் முதலியவற்றில் பிடித்து அடைப்பது) போல்; **ஸுதுஷ்கரம்** – மிகமிகக் கஷ்டமானது என்று; **அஹம் மன்யே** – நான் நினைக்கிறேன்.

श्रीभगवान् उवाच – **ஸ்ரீ பகவான் உவாச** – ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனன் கூறியதை ஒப்புக்கொண்டு மனதை அடக்கும் உபாயத்தைக் கூறுகிறார்.

35. असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥

**அஸம்ஶயம் மஹா ப³ாஹோ, மனோ து³ர்நிக்ரஹம் சலம் |**
**அப்⁴யாஸேனது கௌந்தேய, வைராக்³யேண ச க்³ருஹ்யதே || 35**

**மஹா பாஹோ** – பெரிய கைகளை உடையவனே!; **சலம்** – இயற்கையிலேயே ஸ்திரமற்ற; **மன:** – மனம்; **அஸம்ஶயம்** – ஸந்தேகமில்லாதபடி; **துர்நிக்ரஹம்** – மிகக் கஷ்டப்பட்டு அடக்கக்கூடியதே; **து** – ஆயினும்; **கௌந்தேய** – குந்தியின் குமாரனே!; **அப்யாஸேன** – பழக்கத்தாலும்; **வைராக்யேண ச** – விஷயங்களில் பற்றின்மையாலும்; **க்ருஹ்யதே** – அடக்கப் படும்.

**அர்ஜுனன்:** – மதம்பிடித்த யானை, ஓடி ஆடிக் கடைசியில் தானே சாந்தமடைவதுபோல, மனமும் விஷயங்களினால் திருப்தியடைந்து தானே ஒடுங்குமே! அப்யாஸம், வைராக்யம் ஏன்?

36. असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुं उपायतः ॥

**அஸம்யதாத்மனா யோகே³ா, து³ஷ்ப்ராப இதி மே மதி: |**
**வஶ்யாத்மனா து யததா, ஶக்யோ S வாப்தும் உபாயத: || 36**

**யோக:** – இந்த தியானயோகம்; **அஸம்யத ஆத்மனா** – (பழக்கம், வைராக்யம் இவற்றால்) நன்கு அடக்கப்படாத மனத்தினனால்; **துஷ்ப்ராப:** – அடைய முடியாதது; **இதி** – என்று; **மே** – என்னுடைய; **மதி:** – அபிப்ராயம்; **து** – ஆனால்; **வஶ்ய ஆத்மனா** – அடக்கப்பட்ட மனத்தினனாலும்; **உபாயத:** – (பழக்கம், வைராக்யம் ஆகிய) உபாயத்தால்; **யததா** – முயற்சிக்கிறவனாலும்; **அவாப்தும்** – அடைவதற்கு; **ஶக்ய:** – முடியும்.

अर्जुनः उवाच – **அர்ஜுன: உவாச** – பழக்கம் முயற்சி முதலியன இல்லாதவனின் கதி யாது? என்று அர்ஜுனன் கேட்கிறான்.

37. अयतिः श्रद्धयोपेतो योगात् चलितमानसः।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥

அயதி: ஶ்ரத்த[4]யோபேதோ, யோக[3]ாத் சலித மானஸ: |
அப்ராப்ய யோக[3]ஸம்ஸித்தி[4]ம் காம் க[3]திம் க்ருஷ்ண க[3]ச்சதி || 37

**க்ருஷ்ண** – அனைவரையும் கவர்பவரே!; **அயதி:** – முயற்சியில்லாதவனும்; ஆனால், **ச்ரத்தயா உபேத:** – ஆஸ்திக்ய புத்தியுடன் கூடியவனுமான; **யோகாத்** – தியானம் என்ற உபாயத்திலிருந்து; **சலித மானஸ:** – விலகிய மனதை உடையவன்; (யோகப்ரஷ்டன்); **யோக ஸம்ஸித்திம்** – தியானோபாயத்தின் ஸம்பூர்ண பலனான அபரோக்ஷ ஞானத்தை; **அப்ராப்ய** – அடையாமல்; **காம் கதிம்** – எந்த கதியை; **கச்சதி** – அடைகிறான்?

38. कच्चिन्नोभयविभ्रष्टः छिन्नाभ्रमिव नश्यति।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥

கச்சிந்நோப[4]யவிப்[4]ரஷ்ட:, சின்னாப்[4]ரமிவ நஶ்யதி |
அப்ரதிஷ்டே[2]ா மஹாப[3]ாஹோ! விமூடே[4]ா ப்ரஹ்மண: பதி[2] || 38

**மஹாபாஹோ** – பெரிய கைகளையுடையவரே!; **உபய விப்ரஷ்ட:** – *1)* ஸ்வர்க்கம், மோக்ஷம் இரண்டிலிருந்து *2)* இம்மை, மறுமை என்ற இரு பலன்களிலிருந்து *3)* ஸ்வர்க்கத்தின் உபாயமான காம்யகர்மாநுஷ்டானம், மோக்ஷத்தின் உபாயமான தியானம், இரண்டிலிருந்து நன்கு நழுவியவனாய்; **அப்ரதிஷ்ட:** – ஆஶ்ரயமில்லாதவனாய்; அதனாலேயே; **ப்ரஹ்மண: பதி** – குணபூர்ணனான விஷ்ணுவை அடையும்

*மார்க்கத்தில்;* **விமூட:** - *ஆழ்ந்த விபரீத ஞானமுடையவனாய்;* **சின்ன அப்ரம் இவ** - *(காற்றினால்) துண்டுகளாகச் சிதறியடிக்கப்பட்ட மேகம்போல;* **கச்சித் நச்யதி** - *நாசத்தை (நரகம் முதலிய அனர்த்தங்களை) அடைகிறானா? அல்லது;* **ந** - *இல்லையா?*

39. एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हसि अशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥

ஏதன் மே ஸம்ஶயம் க்ருஷ்ண, சேத்துமர்ஹஸி அஶேஷத: |
த்வத[3]ன்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய, சேத்தா ந ஹ்யுபபத்யதே || 39

**க்ருஷ்ண** - *(ஸம்சயத்தை) இழுப்பவரே, (போக்குபவரே!)* **மே** - *என்னுடைய;* **ஏதத் = ஏதம்** - *இந்த;* **ஸம்ஶயம்** - *ஸந்தேகத்தை;* **அஶேஷத:** - *மீதியில்லாமல் (அடியோடு);* **சேத்தும்** - *போக்குவதற்கு;* **அர்ஹஸி** - *தகுந்தவராயிருக்கிறீர்;* **அஸ்ய ஸம்ஶயஸ்ய** - *இந்த ஸந்தேகத்தை;* **சேத்தா** - *போக்கடிப்பவர்;* **த்வத் அன்ய:** - *உம்மைக் காட்டிலும் வேறானவர்;* **ந உபபத்யதே** - *தகுந்தவராயில்லை;* **ஹி** - *(விஷ்ணு ஸஹஸ்ரநாமம் முதலியவற்றில்,* **சின்ன ஸம்ஶய:** *என்று) பிரஸித்தம்.*

**குறிப்பு:** கீதை, உபநிஷத்து ஆகையால் வியாகரணத்துக்கு அப்பாற்பட்டது. ஆகவே, ஏதத் ஸம்சயம் என்ற இலக்கணப் பிழை சாந்தஸமாகும்.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - *ஸ்ரீ கிருஷ்ணர் (40–43½) 4½ சுலோகங்களில் பதிலளிக்கிறார்.*

40. पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
न हि कल्याणकृत्कश्चित् दुर्गतिं तात गच्छति ॥

பார்த்த[2] நைவேஹ நாமுத்ர, விநாஶஸ்தஸ்ய வித்[3]யதே |
ந ஹி கல்யாணக்ருத் கஸ்சித், து[3]ர்க[3]திம் தாத க[3]ச்ச[2]தி || 40

**பார்த்த** - *குந்தியின் குமாரனே!* **தஸ்ய** - *அந்த யோகத்திலிருந்து நழுவினவனுக்கு;* **இஹ** - *இவ்வுலகில்;* **விநாஶ:** - *அழிவு - பசு, பக்ஷி முதலியவையாகப் பிறத்தல்;* **நைவ வித்யதே** - *இல்லவே இல்லை.* **அமுத்ர** - *அவ்வுலகில்; (***விநாஶ:** - *அழிவு - நரகம் அடைதல் முதலியன);* **ந** - *இல்லை.* **ஹி** - *ஏனெனில்;* **தாத** - *அப்பா! குழந்தாய்;* **கல்யாணக்ருத்** - *(சிரத்தையுடன் கொஞ்ச காலம் பகவத் தியானம் என்னும்) மங்களகரமான*

கார்யத்தைச் செய்த; **கஸ்சித்** – ஒருவனும்; **துர்கதிம்** – கெட்ட கதியை; **ந கச்சதி** – அடையமாட்டான்.

**குறிப்பு:** சிஷ்யன் புத்திரனுக்குச் சமமானவன். ஆதலால் சிஷ்யனான அர்ஜுனனைக் குழந்தாய் என்று அழைக்கிறார்.

பின் எதை அடைகிறான்? என்றால் விளக்குகிறார்.

41. प्राप्य पुण्यकृतान् लोकान् उषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥

ப்ராப்ய *புண்யக்ருதான் லோகான், உஷித்வா ஶாஶ்வதீ: ஸமா: |
ஶுசீனாம் ஸ்ரீமதாம் கே³ஹே, யோக³ ப்⁴ரஷ்டோऽபி⁴ஜாயதே || 41

**யோகப்ரஷ்ட:** – தியான யோகத்திலிருந்து நழுவினவன்; ***புண்யக்ருதான்** – புண்ணியங்களால் சம்பாதிக்கத் தகுந்த; **லோகான்** – உலகங்களை; **ப்ராப்ய** – அடைந்து; (அங்கு) **ஶாஶ்வதீ: ஸமா:** – அநேக வருஷங்கள்; **உஷித்வா** – வசித்து விட்டு; **ஶுசீனாம்** – ஸதாசாரமுடைய; **ஸ்ரீமதாம்** – தனிகர்களின்; **கேஹே** – வீட்டில்; **அபிஜாயதே** – நன்கு பிறக்கிறான்.

**குறிப்பு:** ***புண்யக்ருதாம்** – பிறர் பாடம்.

42. अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥

அத²வா யோகி³னாமேவ, குலே ப⁴வதி தீ⁴மதாம் |
ஏதத்ஹி து³ர்லப⁴தரம், லோகே ஜன்ம யத் ஈத்³ருஶம் || 42

**அதவா** – அல்லது; **தீமதாம்** – ஞானம் படைத்த; **யோகினாம்** – யோகிகளின்; **குலே ஏவ** – வம்சத்திலேயே; **பவதி** – பிறக்கிறான்; **லோகே** – உலகத்தில்; **யத்** – எந்த; **ஈத்ருஶம்** – இப்படிப்பட்ட (தனிகர்களின் வீட்டிலும், ஞான யோகிகளின் வீட்டிலும்); **ஜன்ம** – பிறப்போ; **ஏதத்** – இது; **துர்லபதரம்** – மிகமிகக் கஷ்டப்பட்டு அடையத்தகுந்தது, சுலபமானதல்ல. **ஹி** – பிரஸித்தம்.

**குறிப்பு:** தனிகர்களின் பலவித போகங்கள் தியானத்திற்கு இடையூறானவை. ஆதலால் ஞான யோகிகளின் வீட்டில் பிறக்கிறான் என்றார். இதற்கு உதாரணம் ஸகர மகாராஜனின் புத்திரன் அஸமஞ்ஜன். அவன் அயோத்தி மாநகரக் குழந்தைகளை ஸரயூ நதியில் தூக்கி எறிந்து, தந்தையால் தேசப்ரஷ்டம் செய்யப்பட்டுக் காட்டுக்குச் செல்கையில் தன் யோகசக்தியால் எல்லா குழந்தைகளையும் உயிர்ப்பித்து அவரவர் வீடுகளுக்கு அனுப்பி விட்டுச் சென்றான். (பாகவதம் 9-8-16 முதல் 19 வரை)

43. तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदैहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥

தத்ர தம் பு[3]த்தி[4] ஸம்யோக[3]ம், லப[4]தே *பௌர்வ தை[3]ஹிகம் |
யததே ச ததோ பூ[4]ய:, ஸம்ஸித்தெ[4]ள குருநந்தன || 43

**குருநந்தன** – குருவம்சத்தினனே! **தத்ர** – அந்த இருவித பிறப்புகளிலும்; **பௌர்வ தைஹிகம்** – சென்ற தேகத்தில் ஏற்பட்ட; **தம்** – அந்த; **புத்திஸம்யோகம்** – (பகவானிடம் மனதை நன்கு சேர்த்தல் என்ற) தியானத்தை; **லபதே** – அடைகிறான். **தத:** – அந்த முற்பிறப்பைக் காட்டிலும்; **பூய:** – அதிகமாக; **ஸம்ஸித்தெள** – தியானம் நன்கு பூர்த்தியடையும் விஷயத்தில்; **யததே ச** – முயற்சியும் செய்கிறான்.

**குறிப்பு: *பௌர்வதேஹிகம்** – பிறர்பாடம்.

44. पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।

பூர்வாப்[4]யாஸேன தேனைவ, ஹ்ரியதே ஹ்யவஶோऽபி ஸ: | 44A

**ஸ:** – அந்த யோகப்ரஷ்டன்; **தேன** – அந்த; **பூர்வ அப்யாஸேன ஏவ** – முற்பிறப்பின் பழக்கத்தாலேயே; **அபி** – தான் புத்திபூர்வமாக ஈடுபடாதபோதிலும்; **அவஶ:** – பரவஶமாக; **ஹ்ரியதே** – தியானத்தில் இழுக்கப்படுகிறான்.

யோகப்ரஷ்டனுக்குப் புண்ய லோகங்கள் கிடைக்கின்றன என்பதைக் கைமுத்ய ந்யாயத்தினால் கூறுகிறார்.

जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्म अतिवर्तते ॥

ஜிஞ்ஞாஸுரபி யோக[3]ஸ்ய ஶப்த[3]ப்ரஹ்ம அதி வர்த்ததே || 44B

**யோகஸ்ய ஜிஞ்ஞாஸு: அபி** – (தியானம் செய்யாமல்) தியான யோகத்தை அறிய விரும்புகிறவன்கூட; **ஶப்த ப்ரஹ்ம** – வேதங்களை (அதாவது அவைகளில் கூறப்பட்ட விதி நிஷேதங்களை); **அதி வர்த்ததே** – தாண்டி விடுகிறான் (முக்தனாகிறான்). (ஆகவே கொஞ்சகாலம் தியானம் செய்து நழுவின யோகப்ரஷ்டனைப்பற்றிக் கேட்பானேன்!)

**குறிப்பு:** வேதங்களில் செய்யவேண்டும் எனப்படுவது விதி என்றும், செய்யக்கூடாது எனப்படுவது நிஷேதம் என்றும் கூறப்படும். அவைகளுக்குக் கட்டுப்பட்டு அனைவரும் நடக்க வேண்டும். பிரம்மா தன்னிச்சைப்படி நடக்கலாம்.

அப்படியாயின் தியானம் செய்தல் வீணாயிற்றே என்றால், அறிவுடன் அநுஷ்டானமும் வேண்டும் என்கிறார்.

45. प्रयत्नात् यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः।
अनेकजन्मसंसिद्धः ततो याति परां गतिम्॥

ப்ரயத்னாத் யதமானஸ்து, யோகீ[3] ஸம்ஶுத்த[4] கில்பி[3]ஷ: |
அநேக ஜன்ம ஸம்ஸித்த[4]:, ததோ யாதி பராம் க[3]திம் || 45

**(யோகஸ்ய ஜிஞ்ஞாஸு: அபி** - தியான யோகத்தை அறிய விரும்புகிறவன்கூட, **யோகம் ஜ்ஞாத்வா** - அந்த தியான யோகத்தை அறிந்து); **யதமான: து** - முயற்சித்துக் கொண்டே; **ப்ரயத்னாத்** - அந்த முயற்சியால்; **யோகீ** (ஸன்) - தியான யோகியாக ஆகி (தியானத்தை அநுஷ்டித்து); **ஸம் ஶுத்த கில்பிஷ:** - பாபங்களைப் போக்கடித்துக்கொண்டு நன்கு ஶுத்தனாகி; **அநேக ஜன்ம ஸம்ஸித்த:** - பல ஜன்மங்களில் அதன் பூர்த்தியின் பலனான அபரோக்ஷ ஞானத்தை அடைந்தவனாய்; **தத:** - அந்த அபரோக்ஷ ஞானத்தினால்; **பராம்** - உத்தமமான; **கதிம்** - கதியை (மோக்ஷத்தை); **யாதி** - அடைகிறான்.

தியான யோகத்தைப் புகழ்கிறார்.

46. तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः।
कर्मिभ्यश्च अधिको योगी तस्मात् योगी भवार्जुन॥

தபஸ்விப்[4]யோ அதி[4]கோ யோகீ[3], ஜ்ஞானிப்[4]யோऽபி மதோ அதி[4]க:|
கர்மிப்[4]யஸ்ச அதி[4]கோ யோகீ[3], தஸ்மாத் யோகீ[3] ப[4]வார்ஜுன || 46

**அர்ஜுன** - சுத்தமான கர்மங்களைச் செய்பவனே! **யோகீ** - தியான யோகத்தைப் புரிபவன்; **தபஸ்விப்ய:** - க்ருச்ரம், சாந்திராயணம் முதலிய தவங்களைச் செய்பவர்களைக் காட்டிலும்; **அதிக:** - மேலானவனாகவும்; **ஜ்ஞானிப்ய: அபி** - (தியானயோகமில்லாத) ஞானிகளைக் காட்டிலும்கூட; **அதிக:** - மேலானவனாகவும்; **மத:** - கருதப்படுகிறான். **யோகீ** - அந்த தியான யோகத்தைப் புரிபவன்; **கர்மிப்ய: ச** - கர்ம யோகிகளைக் காட்டிலும்; **அதிக:** - மேலானவன். **தஸ்மாத்** - ஆகையால் (தியான யோகம் எல்லாவற்றையும்விட உயர்ந்ததாகையால்); **யோகீ பவ** - தியானத்தை அனுஷ்டிப்பவனாக இரு.

தியான யோகிகளிடையேயும் தாரதம்யத்தைக் கூறுகிறார்.

47. योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना।
श्रद्धावान् भजते यो मां स मे युक्ततमो मतः॥

யோகி[3]னாமபி ஸர்வேஷாம், மத்க[3]தேனாந்தராத்மனா |
ஶ்ரத்த[4]ாவான் ப[4]ஜதே யோ மாம், ஸ மே யுக்த தமோ மத: || 47

**ஸர்வேஷாம் யோகினாம் அபி** - எல்லா தியான யோகிகளின் இடையேயும்; **ய:** - யார்; **ஶ்ரத்தாவான்** - ஆஸ்திக்ய புத்தியினால் ஏற்பட்ட பக்தியை உடையவனோ; **ஸ:** - அவன்; (**யுக்த:** - யோகமுள்ளவன்; **பக்திமத்ஸு அபி** - பக்தியுள்ளவர் களிடையேயும் கூட; **ய:** - யார்); **மாம்** - என்னை; **பஜதே** - ஸேவிக்கிறானோ; **ஸ:** - அவன் (**யுக்ததர:** - அதிக யோக முள்ளவன்; **தத்ராபி** - என்னை ஸேவிப்பவர் களிடையேயும்; **ய:** - யார்); **மத்கதேன** - என்னிடமே யுள்ள; **அந்தராத்மனா** - மனத்துடன் அதாவது எந்தப் பலனிலும் ஆசையில்லாமல்; **பஜதே** - ஸேவிக்கிறானோ; **ஸ:** - அவன்; **யுக்ததம:** - எல்லோரைக் காட்டிலும் சிறந்த யோகமுள்ளவன் என்று; **மே மத:** - என்னுடைய அபிப்பிராயம்.

**குறிப்பு:** 1) பக்தியுள்ளவன் யுக்த: 2) பக்தியுடன் ஸேவிப்பவன் யுக்ததர:; 3) பலனில் ஆசையில்லாது பக்தியுடன் ஸேவிப்பவன் யுக்ததம:|

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे आत्मसंयम योगो नाम षष्ठोऽध्यायः॥

ஓம் தத்ஸத், இதி ஶ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம
வித்யாயாம், யோகசாஸ்த்ரே, ஶ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
ஆத்மஸம்யம யோகோ நாம ஷஷ்டோ அத்யாய: ||

---

*இவ்வாறு ஶ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய,
கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய, ஆத்மஸம்யம யோகம்
என்னும் 6-ம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 7

# ஜ்ஞான விஜ்ஞான யோகம்

(30 சுலோகங்கள்)

## ஏழாம் அத்தியாயச் சுருக்கம்

இங்கு இரண்டாவதான ஞான ஷட்கம் ஆரம்ப மாகிறது. ஆறாம் அத்தியாயத்தில் கூறிய தியானத்தைப் பக்தியுடன் செய்தால்தான் பலன்கிட்டும். அந்த பக்தி, பகவன் மகிமைகளை அறிவதால்தான் உண்டாகும். ஆகவே இந்த ஷட்கத்தில் பகவன் – மகிமைகளை விளக்குகிறார்.

விஷ்ணு ஸர்வோத்தமர் என்று அறிவது ஞானமாகும். அவர் நிலம், நீர் முதலிய ஒவ்வொரு பொருளுக்கும், அதற்கே உரிய மணம், ரஸம் போன்ற சிறந்த குணத்தைத் தந்து, அதைத் தூண்டிக்கொண்டு, அந்தப் பெயரைத் தாங்கி, அதில் விசேஷமாக விளங்குகிறார், என்று அறிவது விஜ்ஞானமாகும்.

அந்த விஷ்ணு, ஜடப்பிரகிருதியின் அபிமானியான லக்ஷ்மீயைத் தூண்டி, அவள் மூலம், எல்லா ஸாத்விக ராஜஸ தாமஸ பிராணிகளையும் படைத்துக் காத்துக் கடைசியில் அழிக்கிறார். அவைகளின் அந்தர்யாமியாயுமிருக்கிறார். அவரைக் காட்டிலும் மேலான யாதொரு பிரம்மமும் இல்லை. அவரே ஸகுணபிரம்மமும், நிர்குண பிரம்மமும் ஆவார்.

இவ்வித மகிமை பொருந்திய விஷ்ணுவைப் பல ஜன்மங்களில் புண்ணியம் செய்தவர்கள்தாம் அடைய முடியும். அவரை விட்டு மற்ற பிரம்மாதி தேவர்களைப் பூஜித்தாலும், பலனைத் தருபவர், அவர்களின் அந்தர்யாமி யான விஷ்ணுவே ஆவார். ஆயினும் அந்தப் பலன் அற்பமாயும், அநித்யமாயுமுள்ளது. விஷ்ணுவையே ஸாக்ஷாத் தாகப் பூஜித்து, அவரிடமிருந்து அடையும் பலனோ, நித்யமானது, ஆகையால் விஷ்ணுவை முக்கியமாகவும் மற்ற தேவர்களை அவருடைய பரிவாரமாகவும் பூஜிக்க வேண்டும்.

இவ்வித பகவானை நிந்திப்பவர்களும் உண்டு. அதாவது ஜீவர்களும் பகவானும் ஒன்று, என ஜீவேசுவர ஐக்கியம் முதலியவற்றைக் கூறுகின்றார். இதற்குக் காரணம் விபரீத ஞானமாகும். அந்த விபரீத ஞானத்திற்குப் பகவானும்,

துர்க்காதேவியும், அந்த ஜீவர்களின் ஸ்வபாவமும் காரண மாகும். இந்த துர்க்கை திரைபோல் பகவானை மறைக்கிறாள், அதனால் ஜீவர்கள் பகவானைக் காணமுடியாது. ஆனால் பகவான் மூன்று காலங்களிலுள்ள எல்லாவற்றையும் அறிவார். ஆகவே ஸாத்விகர்கள் புண்ணிய கர்மங்களைச் செய்து, பாபங்களைப் போக்கிக்கொண்டு, பகவானை ஆசிரயித்து பகவானையும் மற்ற தத்வங்களையும் நன்கு அறிய முயல வேண்டும்.

*2-39ல்* பகவத் ஜ்ஞானத்தின் உபாயத்தைக் கூறுவதாகச் சொன்னார். அதன் பகிரங்க உபாயமான நிவ்ருத்த கர்மாநுஷ்டானத்தை 5-ம் அத்தியாயம் முடிய விளக்கினார். அதன் அந்தரங்க உபாயமான தியானயோகத்தை 6-ம் அத்தியாயத்தில் கூறினார். அந்த தியானத்தைப் பக்தியுடன் செய்தால்தான், ஞானோபாயமாகும். சிசுபாலன் முதலியோர் போன்று துவேஷத்துடன் செய்யலாகாது. ஆகவே, பக்தி யுண்டாவதற்காக பகவானின் மகிமையை இந்த ஆறு அத்தியாயங்களில் விளக்குகிறார் (மகிமையை அறிந்தால் தான் பக்தியுண்டாகும். தோஷங்களை அறிந்தால் விரக்தி யுண்டாகும்)

श्री भगवान उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ-கிருஷ்ணர் கூறுகிறார்.

1. मय्यसक्तमनाः पार्थ योगं युञ्जन् मदाश्रयः ।
असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तत्श्रृणु ॥

மய்யாஸக்தமனா: பார்த்த², யோக³ம் யுஞ்ஜன் மத³ாஶ்ரய: |
அஸம்ஶயம் ஸமக்ரம் மாம், யத²ா ஜ்ஞாஸ்யஸி தத் ஶ்ருணு || 1

**பார்த்த** - குந்தியின் புத்திரனே!; **மயி** - என்னிடம்; **ஆஸக்தமனா:** - ஆழ்ந்த ஸ்னேகமுள்ள மனத்தினனாய்; **யோகம்** - (நிவ்ருத்த கர்மம், தியான யோகம் என்ற இருவித) உபாயத்தை; **யுஞ்ஜன்** - அநுஷ்டித்துக்கொண்டு; **மதாஶ்ரய:** - என்னை அண்டி அதாவது பகவானே என்மூலம் எல்லா வற்றையும் செய்விக்கிறார், அவர்தான் எனக்குச் சரணம், அவரிடமே நான் உள்ளேன், என அறிந்து; **அஸம்ஶயம்** - சந்தேக மில்லாமலும்; **ஸமக்ரம்** - முழுமையாகவும், **மாம்** - என்னை; **யதா** - எவ்வாறு; **ஜ்ஞாஸ்யஸி** - அறிவாயோ; **தத்** - **ததா** - அவ்வாறு; அல்லது, **தத்** - அவ்வித ஞானத்தை யுண்டாக்கும் வார்த்தையை; **ஶ்ருணு** - கேள்.

2. ज्ञानं तेऽहं सविज्ञानं इदं वक्ष्याम्यशेषतः ।
यज्ज्ञात्वा नेह भूयोऽन्यत् ज्ञातव्यमवशिष्यते ।।

ஜ்ஞானம் தேSஹம் ஸவிஜ்ஞானம், இத³ம் வக்ஷ்யாம்யஶேஷத꞉ |
யத்ஜ்ஞாத்வா நேஹ பூ⁴யோSன்யத், ஜ்ஞாதவ்ய மவஶிஷ்யதே || 2

**அஹம்** – நான்; **தே** – உனக்கு; **இதம்** – இந்த; **ஸவிஜ்ஞானம்** ஸவிஜ்ஞாதவ்யம் – விசேஷமாக அறியத்தகுந்ததுடன் கூடிய; **ஜ்ஞானம் – ஜ்ஞாதவ்யம்** – அறியத் தகுந்ததை (ஸாமான்ய மகிமையை); **அஶேஷத:** – (உன் யோக்யதைக்குத் தகுந்ததில்) மீதியில்லாமல்; **வக்ஷ்யாமி** – சொல்வேன். (அதைப் புகழ்கிறார்.) **யத்** – அந்த மகிமையை; **ஜ்ஞாத்வா** – அறிந்த பிறகு; **பூய:** – மறுபடியும்; **ஜ்ஞாதவ்யம்** – அறியத்தகுந்த; **அன்யத்** – வேறொன்றும்; **இஹ** – இவ்விஷயத்தில்; **ந அவஶிஷ்யதே** – மீதி இராது.

**குறிப்பு:** சுலோகம் 4 முதல் 7 முடிய ஸாமான்ய மகிமையையும். 8 முதல் 12 முடிய விஶேஷ மகிமையையும் கூறுகிறார்.

*ஸர்வத்ர விஷ்ணோ: உத்கர்ஷ, ஜ்ஞானம் ஜ்ஞானமிதீர்யதே |*
*தத் விஶேஷ பரிஜ்ஞானம், விஜ்ஞானமிதி கீ³யதே ||*

விஷ்ணு எங்கும் உத்தமராக இருக்கிறார் என்ற ஞானம், ஸாமான்ய ஞானமாகும். எங்கெங்கு எவ்வாறிருக்கிறார் என்ற ஞானம், விஶேஷ ஞானமாகும்.

இந்த ஞானம் கிடைப்பதரிது என்கிறார்.

3. मनुष्याणां सहस्रेषु कश्चित् यतति सिद्धये ।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्वतः ।।

மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு, கஸ்சித் யததி ஸித்த⁴யே |
யததாமபி ஸித்த⁴ானாம், கஸ்சின் மாம் வேத்தி தத்வத꞉ || 3

**ஸஹஸ்ராணாம் மனுஷ்யாணாம்** – ஆயிரம் மனிதர் களிடையே; **கஸ்சித்** – யாரோ ஒரு புண்ணியவானே, (அல்லது **கம்** – சுகம், **சித்** – ஞானம், இவற்றையுள்ள ஸாத்விகன்;) **ஸித்தயே** – ஞானத்தின் பொருட்டு; **யததி** – யததே – முயல் கிறான். **யததாம் அபி** – முயற்சிப்பவர்களிடையேயும்; (**கஸ்சித் ஸித்த: பவதி** – யாரோ ஒருவன்தான் ஞானியாகிறான்). **ஸித்தானாம் அபி** – ஞானிகளிடையே கூட; **கஸ்சித்** – யாரோ ஒருவன்தான்; **மாம்** – என்னை; **தத்வத:** – உள்ளபடி; **வேத்தி** – அறிகிறான்.

குறிப்பு:– கீதை வேதம்போன்று இலக்கணத்திற்கு அப்பாற்பட்டது. ஆதலால் யததே என்பதற்கு யததி என உளது

சுலோகம் 2-ல் ஜ்ஞானம் என்பதால் கூறிய, விஷ்ணு ஸர்வோத்தமர் என்ற ஸாமான்ய மகிமையை, நான்கு சுலோகங்களில் விளக்குகிறார்.

4. भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥

பூ⁴மிராபோS நலோ வாயு:, க²ம் மனோ பு³த்தி⁴ரேவ ச |
அஹங்கார இதீயம் மே, பி⁴ன்னா ப்ரக்ருதிரஷ்டத⁴ா || 4

**மே** – என் வசமான; **இயம் ப்ரக்ருதி;** – இந்த ஜடப்ரகிருதி என்ற மூலப்பொருள்; **பூமி** – நிலம்; **ஆப:** – நீர்: **அநல:** – நெருப்பு; **வாயு:** – காற்று; **கம்** – ஆகாயம் (ஆகிய ஐந்து பூதங்கள்); **மன:** – மனம்; **புத்தி:** – அறிவு; **அஹங்கார: ச** – நானே செய்கிறேன் என்ற பாவனையும் (ஆகிய மூன்று தத்வங்கள்); **இதி** – என்றபடி; **அஷ்டதா ஏவ** – எட்டு விதமாகவே; **பின்னா** – பிரிந்துள்ளது. (இவை எட்டும் ப்ரக்ருதியின் காரியப்பொருள்கள்).

**குறிப்பு:** இங்கு மஹத்தத்வத்தையும் சேர்த்து ஒன்பது விதமாக என்று கூறவேண்டும். மனம் என்ற இந்திரியம் வேறு, மனம் என்ற தத்வம் (பொருள்) வேறு; புத்தி என்ற இந்திரியம் வேறு; புத்தி என்ற தத்வம் வேறு; என்று அறியவும். பிரம்ம சூத்திரம் 2-4-6ல் மனம், புத்தி இவ்விரண்டும் சேர்ந்து மொத்தம் பன்னிரண்டு இந்திரியங்கள் எனப்பட்டுள்ளது.

அந்த ஜடப்ரகிருதிமாத்திரமல்ல, அதன் அபிமானியும், பிரம்மா முதலியோரின் தாயுமான, சேதனப்ரகிருதி என்ற லக்ஷ்மீயும் என்வசமே என்கிறார்.

5. अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबोहो ययेदं धार्यते जगत् ॥

அபரேய மிதஸ்த்வன்யாம், ப்ரக்ருதிம் வித்தி⁴ மே பராம் |
ஜீவபூ⁴தாம் மஹாபா³ஹோ, யயேத³ம் த⁴ார்யதே ஜக³த் || 5

**மஹாபாஹோ** – பெருங்கைகளை உடையவனே!; **இயம்** – இந்த ஜடப்ரகிருதி; **அபரா** – தாழ்ந்தது. **இத: து** – இதைக் காட்டிலும்; **அன்யாம்** – வேறானவளும்; **ஜீவபூதாம்** – ஜீவ ப்ராணதாரணே – எல்லா ஜீவர்களின் உயிர்களையும் பிடித்துக்கொண்டு; **பூ ஸத்தாயாம்** – எப்பொழுதும் அவர் களுடைய தேகங்களில் இருப்பவளுமான; **மே ப்ரக்ருதிம்** – என்வசமான சேதனப்ரகிருதியான லக்ஷ்மீயை; **பராம்** – உயர்ந்தவளாக; **வித்தி** – அறிவாயாக. ஏனெனில், **யயா** –

அவளால்தான்; **இதம் ஜகத்** - இந்த பிரம்மா முதலிய உலகம்; **தார்யதே** - தாங்கப்பட்டுள்ளது.

**குறிப்பு:** (1) அபரம் - தாழ்ந்தது - ஜடப்ரகிருதியும், ஸம்ஸாரி ஜீவர்களும். (2) அபரதரம் - மிகத்தாழ்ந்தது - அஸுர ஜீவர்கள் (3) பரம் - உயர்ந்தது - லக்ஷ்மீயும், முக்த ஜீவர்களும், (4) பரதரம் - மிக உயர்ந்தது - விஷ்ணு. அவரைக்காட்டிலும் பரதரம் இல்லை. (சு. 7 பார்க்க).

தேகம், இந்திரியம் முதலியன உமது வசமல்லவா? என்றால், அவை மேற்படி ப்ரக்ருதியில் அடங்கியவை; ஆதலால் அவைகளும் என்வசமே என்கிறார்.

6. एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥

ஏதத் யோனீனி, பூ$^{4}$தானி, ஸர்வாணீத்யுபத$^{4}$ாரய |
அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத:, ப்ரப$^{4}$வ: ப்ரளயஸ் தத$^{2}$ா || 6

**பூதானி** - தேகம், இந்திரியம், சப்தம் ஸ்பர்சம் முதலிய விஷயங்கள், இவற்றுடன் கூடியுள்ள ஜீவர்கள்; **ஸர்வாணி** - எல்லாம்; **ஏதத்யோனீனி** - இந்த இரண்டு ப்ரக்ருதிகளிலிருந்து உண்டானவை; **இதி** - என்று; **உபதாரய** - நன்கு அறிவாயாக. ஆனால், **அஹம்** - நானே; **க்ருத்ஸ்னஸ்ய ஜகத:** - உலக மனைத்திற்கும்; **ப்ரபவ:** - (உற்பத்தி) படைப்பவன்; **ததா** - அவ்வாறே; **ப்ரளய:** - (நாசம்) அழிப்பவன். (ஆகவே உலக மனைத்துக்கும் பிதாவான நான் ஸர்வோத்தமன்).

**குறிப்பு:** நானே உற்பத்தி, நானே நாசம் என்றதின் கருத்து: அந்த உற்பத்தியும் நாசமும் என் வசமானவை. மேலும், புத்திரர் முதலியோரின் உற்பத்தியாலும், பகைவர்களின் நாசத்தாலும் தந்தை முதலியோர்க்கு எவ்வாறு ஆனந்த முண்டாகிறதோ, அவ்வாறு பகவானுக்கு ஆனந்தகர மானவை; என அறிக.

உம்மைக் காட்டிலும் இன்னொரு உத்தமன் இருக்கிறானா? என்றால், இல்லை என்கிறார்.

7. मत्तः परतरं नान्यत् किंचिदस्ति धनञ्जय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥

மத்த: பரதரம் நான்யத், கிஞ்சித$^{3}$ஸ்தி த$^{4}$னஞ்ஜய |
மயி ஸர்வமித$^{3}$ம் ப்ரோதம், ஸூத்ரே மணிகணா இவ || 7

**தனஞ்ஜய** - ராஜஸூயத்திற்காகச் செல்வத்தை ஜயித்தவனே!; **மத்த:** - என்னைக்காட்டிலும்; **அன்யத்** - வேறான; **பரதரம்** - அதிக உயர்ந்தது எனப்படும்; **கிஞ்சித்** -

*(நிர்குண ப்ரம்மம் போன்ற)* எதுவும்; **ந அஸ்தி** - இல்லை. *(நானே பரதரன்). சு. 6-ல் கூறிய படைத்தலும், அழித்தலும் மாத்திரமல்ல, காத்தலும் என் வசமானதே என்கிறார்.* **ஸூத்ரே** - ஓர் நூலில் *(கோர்க்கப்பட்ட);* **மணிகணா: இவ** - ரத்தினங்களின் கூட்டங்களைப்போல; **இதம் ஸர்வம்** - இந்த ப்ரக்ருதி முதலிய உலகமனைத்தும்; **மயி** - என்னிடம்; **ப்ரோதம்** - நன்கு கோர்க்கப்பட்டுள்ளது. *(என்னால் பாதுகாக்கப் படுகிறது).*

குறிப்பு: சிலர் - ஸகுண பிரம்மம், நிர்குண பிரம்மம் என இரண்டு உண்டு. பிரம்மா, விஷ்ணு, சிவன் ஸகுண பிரம்மமாவர். அவர்களை யடைதல் ஸகுணமுக்தி அல்லது க்ரமமுக்தியாகும். அவர்களைக் காட்டிலும் உயர்ந்தது நிர்குண பிரம்மமாகும். அது மனதுக்கும், வாக்குக்கும் எட்டாதது. அதாக ஆவது நிர்குண முக்தி அல்லது பரமமுக்தியாகும் - என்கின்றனர். ஸ்ரீ கிருஷ்ணர் இங்கு அம்மாதிரி இல்லை என்கிறார். அனந்த கல்யாண குணங்களுள்ளவர் ஆதலால் ஸ்ரீ கிருஷ்ணரே ஸகுண பிரம்மமாவார். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற ப்ரக்ருதியின் குணங்களில்லாதவர் ஆதலால் அவரே நிர்குண ப்ரம்மமும் ஆவார். ஸ்ரீ கிருஷ்ணரை அடைவதே பரமமுக்தியாகும்.

2. நூலில் கோர்க்கப்பட்ட மணிகளே நம் கண்ணுக்குப் புலப்படும். ஆனால், நூல் புலப்படாது. அதுபோல் பகவானை அண்டியுள்ள உலகம் நமக்குப் புலப்படும், பகவான் புலப்படமாட்டார்.

சுலோகம் 2-ல் **விஜ்ஞானம்** என்பதால் கூறிய, விசேஷமாக அறிய வேண்டிய மகிமையை, ஐந்து (8மு12) சுலோகங்களில் விளக்குகிறார். இது, இனி 10ம் அத்தியாயத்தில் கூறப்போகும் விபூதிகளின் சுருக்கம் எனலாம். (9-16 பார்க்க).

8. रसोऽहमप्सु कौन्तेय प्रभाऽस्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥

ரஸோSஹமப்ஸு கௌந்தேய, ப்ரப[4]ாSஸ்மி ஶஶிஸூர்யயோ: |
ப்ரணவ: ஸர்வவேதே[3]ஷு, ஶப்த: கே[2]பௌருஷம் ந்ருஷு || 8

**கௌந்தேய** - குந்தியின் புத்திரனே!; **அஹம்** - நான்; **அப்ஸு** - ஜலத்தில்; **ரஸ:** - அப்பெயர்கொண்ட ஸாரப் பொருளாக; **அஸ்மி** - இருக்கிறேன். **ஶஶிஸூர்யயோ:** - சந்திரன், ஸூரியன் இருவரிடமும்; **ப்ரபா** - ஒளியாக (இருக்கிறேன்). **ஸர்வவேதேஷு** - *(ரிக் யஜுஸ் ஸாமம் அதர்வம் என்ற)* எல்லா வேதங்களிலும்; **ப்ரணவ:** - ஓங்காரமாக; *(* **ப்ரணௌதி இதி** - *துதிக்கும்படி தூண்டுவதால், ப்ரணவ: என்ற பெயருள்ள வனாக)* இருக்கிறேன். **கே** - ஆகாயத்தில்; **ஶப்த:** - ஒலியாக

(இருக்கிறேன்) **ந்ருஷு** – மனிதர்களிடம்; **பௌருஷம்** – ஆண்மையாக அதாவது பராக்கிரமமாக (இருக்கிறேன்).

குறிப்பு: இங்கு பகவானும், ரஸம், ஒளி, ஓங்காரம், ஒலி பௌருஷம் இவைகளும் ஒன்று எனத்தோன்றுகிறது. (4-24 பார்க்க) அதன் கருத்து :- ஜலத்தின் பல குணங்களில் ரஸம் ஒன்று. அதற்குக் காரணம் பகவான். அது அதன் மற்ற குணங்களைக் காட்டிலும் ஶ்ரேஷ்டமாகவும், ஜலத்தின் இயற்கையான குணமாகவும் அமைந்திருப்பது பகவானின் வசமானது. ஸாரபோக்தாவான பகவான் அந்த ரஸத்தை அநுபவிக்கிறார். அது பகவானின் ப்ரதிமை போன்றது. அதில் அந்தர்யாமியாக விளங்கும் ரஸ: என்ற பெயருடைய பகவானைத் தியானிக்கவேண்டும். அதைப் பகவான் ப்ரேரித்து வருகிறார். இம்மாதிரியே ஒளி, ஓங்காரம், ஒலி, பௌருஷம் என்பதற்கும் அர்த்தம் செய்க. ஆகவே, பகவானுக்கும் அவைகளுக்கும் ஐக்கியமில்லை. இவ்விதம் பின்வரும் 9,10,11 சுலோகங்களிலும், அர்த்தம் செய்க

9. पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥

புண்யோ க[3]ந்த[4]: ப்ருதி[2]வ்யாம் ச, தேஜஸ்சாஸ்மி விப[4]ாவஸௌ |
ஜீவனம் ஸர்வபூ[4]தேஷு, தபஸ்சாஸ்மி தபஸ்விஷு || 9

**ப்ருதிவ்யாம் ச** – பூமியில்; **புண்ய: கந்த: ச** – நறுமணமாகவும்; **விபாவஸௌ** – நெருப்பில்; **தேஜ: ச** – எரிக்கும் ஶக்தியாகவும்; **அஸ்மி** – இருக்கிறேன். **ஸர்வபூதேஷு** – எல்லா பிராணிகளிடமும்; **ஜீவனம்** – பிழைத்திருத்தலாகவும் **தபஸ்விஷு** – தவம் செய்பவர்களிடம்; **தப: ச** – (க்ருச்ரம், சாந்திராயணம் முதலிய) தவமாகவும்; **அஸ்மி** – இருக்கிறேன்.

10. बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥

பீ[3]ஜம் மாம் ஸர்வபூ[4]தானாம், வித்தி[4] பார்த்த[2] ஸநாதனம் |
பு[3]த்தி[4]ர் பு[3]த்தி[4]மதாமஸ்மி, தேஜஸ் தேஜஸ்வினா மஹம் || 10

**பார்த்த** – குந்தீ புத்திரனே!; **மாம்** – என்னை; **ஸர்வ பூதானாம்** – எல்லா பிராணிகளுக்கும்; **ஸநாதனம்** – அனாதியான; **பீஜம்** – வெளிப்படுத்துவதால் விதை போன்ற நிமித்த காரணமாக; **வித்தி** – அறிவாயாக. **அஹம்** – நான்; **புத்திமதாம்** – புத்திமான்களுடைய; **புத்தி:** – அறிவாகவும்; **தேஜஸ்வினாம்** – பராக்கிரமசாலிகளுடைய; **தேஜ:** – பராக்கிரமமாகவும்; **அஸ்மி** – இருக்கிறேன்.

11. बलं बलवतां चाहं कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥

ப[3]லம் ப[3]லவதாம் சாஹம் காமராக[3] விவர்ஜிதம் |
த[4]ர்மாவிருத்தே[4]ா பூ[4]தேஷு, காமோSஸ்மி ப[4]ரதர்ஷப[4] || 11

**பரதர்ஷப** – *பரதவம்சத்துச் சிரேஷ்டனே !;* **அஹம்** – *நான்;* **பலவதாம்** – *பலசாலிகளின்;* **காம ராக விவர்ஜிதம் – காம** – *சிற்றின்பங்களில் ஆசை;* **ராக** – *தகாததில் ஆசை,* **விவர்ஜிதம்** – *இவையில்லாத;* **பலம் ச** – *வலிமையாகவும்;* **பூதேஷு** – *ஜீவர் களிடம்;* **தர்ம அவிருத்த:** – *தர்மத்திற்கு முரண்படாத ஶாஸ்திர ஸம்மதமான;* **காம:** – *ஆசையாகவும்;* **அஸ்மி** – *இருக்கிறேன்.*

**குறிப்பு:** பீஷ்மர், துரோணர் முதலியோரின் சிறந்த பலம், காமம், ராகம் இவற்றுடன் கூடியது. **பத்தோஸ்மி அர்த்தேன கௌரவை:–** பணத்தினால் துரியோதனன் முதலியோரிடம் கட்டுப் பட்டுள்ளேன் – என பீஷ்மர் கூறியுள்ளார். பீமஸேனன் முதலியோரின் பலமோ, காம ராகங்களற்றது. இந்தப் பலம்தான் பகவானின் பிரதிமை போன்றது.

*பொருள்களின் குணங்கள் மாத்திரமல்ல; பொருள்கள் யாவுமே பகவானின் வசமானவை என்கிறார்.*

12. ये चैव सात्विका भावाः राजसाः तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥

யே சைவ ஸாத்விகா பா[4]வா:, ராஜஸா: தாமஸாஸ்ச யே |
மத்த ஏவேதி தான் வித்தி[4], நத்வஹம் தேஷு தே மயி || 12

**யே பாவா:** – *எந்தப் பொருள்கள்;* **ஸாத்விகா:** – *ஸத்வ குணத்தின் காரியங்களோ;* **ராஜஸா: ச** – *ரஜோகுணத்தின் காரியங்களோ;* **யே** – *எவைகள்;* **தாமஸா: ச** – *தமோ குணத்தின் காரியங்களோ;* **தான் ஏவ** – *அந்தப் பொருள் களையே;* **மத்த: ஏவ** – *என்னிடமிருந்தே (உண்டாகின்றன);* **இதி** – *என்று;* **வித்தி** – *அறிவாயாக.* **தே** – *அந்தப் பொருள்கள்;* **மயி** – *என்னிடம் (ஆசிரயித்துள்ளன).* **அஹம்** – *நான்;* **தேஷு** – *அவைகளிடம்;* **ந** – *(ஆசிரயித்து) இல்லை. (நான் அவை களுக்கு ஆதாரம், அவை எனக்கு ஆதாரமல்ல).*

**குறிப்பு:** யே ச – என இருமுறைக் கூறியதின் கருத்து :– உலகிலுள்ள எல்லாப்பொருள்களும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களின் கலப்பேயாகும். ஆயினும் ஸாத்வீகப் பொருள் என்றால், மற்ற இரு குணங்களைக் காட்டிலும் அதிகமான ஸத்வ குணக்கலப்புள்ளது என்று அர்த்தம். இம்மாதிரியே ராஜஸப் பொருள்களும், தாமஸப் பொருள்களும் அந்தந்த குணத்தின் அதிகக் கலப்புள்ளவை என்று அறிக.

இதனால் பகவான் முக்குணங்களைக் கடந்தவர் என ஏற்படுகிறது. ஆயினும் முக்குணங்களின் ஸம்பந்தமுள்ளவராகவும் காணப்படுகிறாரே! என்றால் பதிலளிக்கிறார்.

13. त्रिभिर्गुणमयैर्भावैः एभिः सर्वमिदं जगत् ।
मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥

த்ரிபி⁴ர் கு³ணமயைர் பா⁴வை; ஏபி⁴: ஸர்வமித³ம் ஜகத் |
மோஹிதம் நாபி⁴ ஜானதி, மாமேப்⁴ய: பரமவ்யயம் || 13

**இதம் ஸர்வம் ஜகத்** - *(ஞானிகளைத் தவிர்த்த)* இந்த உலகம் முழுவதும்; **த்ரிபி: குணமயை:** - மூன்று குணங்களின் ஸ்வரூபமான அல்லது ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்று விதமான; **ஏபி: பாவை:** - ப்ரமாண ஸித்தமான இந்தப் பொருள்களால்; **மோஹிதம் (ஸத்)** - மயக்கப்பட்டு; **மாம்** - என்னை; **ஏப்ய:** - இந்த மூன்று குணங்களையும், அவற் றாலான பொருள்களையும் காட்டிலும்; **பரம்** - உயர்ந்தவ னாகவும்; அதனால், **அவ்யயம்** - தேக நாஶமில்லாதவனாகவும் இருப்பதை; **ந அபிஜானாதி** - நன்கு அறிவதில்லை. *(விபரீத மாகவும் அறிகிறது).*

குறிப்பு: உலகிலுள்ள அனைவருக்கும் பிராகிருதமான ஸ்தூல தேகமிருப்பதால், பகவானுக்கும், அவ்விதம் உண்டு என்று அறிவிலிகள் நினைக்கின்றனர். அதற்குக்காரணம் முக்குணங்களே. ஞானிகள் அவ்வாறு நினைப்பதில்லை.

உலகில் ஞானிகளோ மிகச் சிலர். அஜ்ஞானிகளோ பலர். பலரின் ஞானம் எப்படி விபரீதமாகும்? பலரின் ஞானத்தினால் பாதிக்கப்பட்ட சிலரின் ஞானம் விபரீத மாகலாம். அந்தச் சிலரும் காலபோக்கில் தாங்கள் அறிந்தது தவறு என்று உணரலாம்; என்றால், அனாதி காலமாகவே உண்மையறிவின்மையும், விபரீதஞானமும் உண்டு. அதற்கு துர்க்காதேவிதான் காரணம் என்கிறார்.

14. दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥

தை³வீ ஹ்யேஷா கு³ணமயீ, மம மாயா து³ரத்யயா |
மாமேவ யே ப்ரபத்³யந்தே, மாயாமேதாம் தரந்தி தே || 14

**தைவீ** - உலக சிருஷ்டி முதலிய அற்புத லீலைகளைப் புரியும் தேவனைச் சார்ந்தவளும்; *(அந்த தேவன் யார்? நானே)* **மம** - எனக்கு மிகப் பிரியமானவளும்; **ஏஷா** - இந்த பிரமாண பிரஸித்தமானவளும்; **குணமயீ** - தமோகுணத்தின் அபிமானி யானவளுமான; **மாயா** - துர்க்கா **(மோஹிகா** - மயங்கச்

செய்பவள்). காலப்போக்கில் அந்த மயக்கம் தெளியுமா? என்றால், **துரத்யயா** - மீறமுடியாதவள். (அந்த மயக்கம் தெளியாது). பின் யாருக்கும் யதார்த்த ஞானம் ஏற்படாதே! என்றால், **யே** - எவர்கள்; **மாம்** - என்னை; **ஏவ** - **ஏவம்** - இம்மாதிரி அதாவது மற்றவைகளைத் துறந்து, (குரு முதலியோர்களை வணங்குவது முதலியதும்கூட - அவர்கள் பகவத் பக்தர்களாயிருப்பதால்தான் என்ற பாவனையுடன்); **ப்ரபத்யந்தே** - ஶரணமடைகின்றனரோ; **தே** - அவர்கள்; **ஏதாம்** - இந்த; **மாயாம்** - துர்க்கையால் ஏற்பட்ட மயக்கத்தை; **தரந்தி** - தாண்டுகிறார்கள். (யதார்த்த ஞானத்தை அடைவார்கள்).

குறிப்பு: (1) ஜடபிரகிருதியின் அபிமானியான லக்ஷ்மீ, அதிலிருந்து முக்குணங்களைப் படைக்கும்போது, ஸத்வகுணத்திற்கு ஸ்ரீ என்றும், ரஜோகுணத்திற்கு பூ என்றும், தமோகுணத்திற்கு துர்க்கா என்றும், மூன்று ரூபங்களைத் தரிக்கிறாள். கீதை 14-ம் அத்தியாயத்தில் இது விஸ்தரிக்கப் படுகிறது.

(2) பாகவதம் 10-2-11,12 (1) துர்க்கா (2) பத்ரகாளி (3) விஜயா (4) வைஷ்ணவி (5) குமுதா (6) சண்டிகா (7) கிருஷ்ணா (8) மாதவீ (9) கன்யகா (10) மாயா (11) நாராயணீ (12) ஈசானா (13) சாரதா (14) அம்பிகா என்ற 14 பெயர்கள் அவளுக்கு உண்டு.

அர்ஜுனன்:- அப்படியாயின், உம்மைச் சரணமடைந்து எல்லோருமே ஏன் மாயையைத் தாண்டவில்லை?

15. न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।
माययाऽपहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥

ந மாம் து[3]ஷ்க்ருதினோ மூட[4]ா:, ப்ரபத்யந்தே நராத[4]மா: |
மாயயாऽபஹ்ருதஜ்ஞானா:, ஆஸுரம் ப[4]ாவமாஶ்ரிதா: || 15

**துஷ்க்ருதின:** - பாவம் செய்தவர்கள்; அதனால், **மூடா:** - பகுத்தறிவில்லாதவர்கள்; அதனால், **நராதமா:** - (தமோ யோக்யர்களான) தாழ்ந்த மனிதர்கள்; **மாயயா** - (1) பகவானின் இச்சையாலும், (2) அவர்களின் ஸ்வபாவத்தாலும்; **அப ஹ்ருதஜ்ஞானா:** - பறிக்கப்பட்ட உண்மை அறிவையுடையவர் களாய்; அதனால், (மூடா: - விபரீத ஞானமுடையவர்களாய்); **ஆஸுரம் பாவம்** - (1) அஸுரத்தன்மையையும், (2) **அஸுஷு ரமந்தே** - இந்திரிய சுகங்களில் ஈடுபாட்டையும்; **ஆஶ்ரிதா:** - அடைந்தவர்களாய்; **மாம்** - என்னை; **ந ப்ரபத்யந்தே** - சரண மடைவதில்லை.

குறிப்பு: பகவானை அடையாதிருப்பதற்குப் பாபம்தான் மூலகாரண மாகும். அந்தப் பாபிகள்: (1) மூடர்கள் - சாஸ்திரம் கற்காதவர்கள். (2)

நராதமா:- சாஸ்திரங்களைக் கற்றும் ஞானமடையாதவர்கள். (3) மாயயா அபஹ்ருதஜ்ஞானா:- ஞானமடைந்தும் குயுக்தி செய்து கெடுபவர்கள். (4) ஆஸுரம் பாவம் ஆச்ரிதா:- தம் குயுக்திகளால் பிறரையும் கெடுப்பவர்கள் - என்று நான்கு வகையினர் எனலாம்.

அடுத்த சுலோகத்தில் பகவானை அடையும் புண்ணிய மாலிகளின் தாரதம்யத்தின்படி நான்கு வகையினரைக் காண்க.

16. चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥

சதுர்வித[4]ா ப[4]ஜந்தே மாம், ஜனா: ஸுக்ருதினோ அர்ஜுன |
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு: அர்த்தார்த்தீ, ஜ்ஞானீச ப[4]ரதர்ஷப[4] || 16

**அர்ஜுன** – *சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!;* (**யே** – *எந்த);* **ஸுக்ருதின:** – *பூர்வ ஜன்மங்களில் புண்ணியம் செய்த;* **ஜனா:** – *ஜனங்கள்;* **மாம்** – *(மற்ற தேவர்களை விட்டு) என்னை;* **பஜந்தே** – *சேவிக்கின்றனரோ;* (**தே** – *அவர்கள்)* **சதுர்விதா:** – *நான்கு வகையினர் ஆவர்.* **பரதர்ஷப** – *பரதவம்ச சிரேஷ்டனே;* *அவர்கள் (1)* **ஆர்த்த:** – *வியாதி முதலியவற்றால் பீடிக்கப் பட்டவன் (கஜேந்திரன் போல); (2)* **ஜிஜ்ஞாஸு:** – *பகவத் ஞானத்தை விரும்புகிறவன் (உத்தவன் போல); (3)* **அர்த்தஅர்த்தீ** – *பணம், விஷயசுகம் இவற்றை வேண்டுபவன் (ஸுக்ரீவன் போல); (4)* **ஜ்ஞானீ ச** – *பகவத் ஞானத்தை அடைந்தவன் (ப்ரஹ்லாதன் போல).*

**இந்த நால்வரில் ஞானி சிறந்தவன் என்கிறார்.**

17. तेषां ज्ञानी नित्ययुक्तः एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थं अहं स च मम प्रियः ॥

தேஷாம் ஜ்ஞானீ நித்யயுக்த:, ஏகப[4]க்திர் விஶிஷ்யதே |
ப்ரியோ ஹி ஜ்ஞானினோSத்யர்த்த[2]ம், அஹம் ஸ ச மம ப்ரிய: || 17

**தேக்ஷாம்** – *அந்த நால்வர்களிடையே;* **நித்யயுக்த:** – *எப்பொழுதும் தியானிப்பவனும்;* **ஏகபக்தி:** – *ஸர்வோத்த மனான என் ஒருவனிடமே முக்கிய பக்தியைப் புரிப வனுமான;* **ஜ்ஞானீ** – *பகவத்ஞானமடைந்தவன்;* **விஶிஷ்யதே** – *சிறந்தவனாயிருக்கிறான்.* **ஹி** – *ஏனெனில்;* **அஹம்** – *நான்;* **ஜ்ஞானின:** – *அறிவாளிக்கு;* **அத்யர்த்தம் ப்ரிய:** – *மிகவும் பிரியமானவன்.* **ஸ: ச** – *அவனும்;* **மம** – *எனக்கு; (***அத்யர்த்தம்** – *மிகவும்);* **ப்ரிய:** – *பிரியமானவன்.*

மேற்படி ஒரு வகையினரைப் புகழ்ந்ததால் ஏற்பட்ட மற்ற மூவர்களின் இகழ்ச்சியைப் போக்குகிறர்.

18. अदाराः सर्व एवैते ज्ञानी तु आत्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥

உத³ாராஸ் ஸர்வ ஏவைதே, ஜ்ஞானீ து ஆத்மைவ மே மதம் |
ஆஸ்தி²தஸ் ஸ ஹி யுக்தாத்மா, மாமேவாநுத்தமாம் க³திம் || 18

**ஏதே ஸர்வே** – இந்த நான்கு வகையினரான அனைவரும்; **உதாரா: ஏவ** – (மற்ற தேவர்களைப் பூஜிப்பவர் களைக் காட்டிலும்) சிறந்தவர்களே. **ஜ்ஞானீது** – பகவத் ஞானியோ; **மே** – என்னுடைய; **ஆத்மாஏவ** – ஸ்வரூபமே. அதாவது (1) என் ஸ்வரூபம் எனக்கு மிகப் பிரியமாயிருப்பது போல, அவன் எனக்கு மிகப்பிரியமானவன். (2) **ஆப்னோதி இதி ஆத்மா** – அவன் என்னை அடைபவன். **இதி** – என்று; **மே மதம்** – என் கருத்து. **ஹி** – ஏனெனில்; **ஸ:** – அவன்; **அநுத்தமாம்** – இதைவிட உத்தமமில்லாத, (மிகச் சிறந்த); **கதிம்** – நிலையை, மோக்ஷத்தை (உத்தேசித்து); **யுக்தஆத்மா** – தியானத்தில் ஈடுபட்ட மனத்தினனாய்; **மாம் ஏவ** – என்னையே; **ஆஸ்தித:** – ஆசிரயித்திருப்பவன். (வேறு பலன் களை விரும்பாத ஏகாந்த பக்தன்).

இவ்வித ஞானி கிடைப்பது அரிது என்கிறார்.

19. बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥

ப³ஹூனாம் ஜன்மனாமந்தே, ஜ்ஞானவான் மாம் ப்ரபத்³யதே |
வாஸுதே³வஸ் ஸர்வமிதி, ஸ மஹாத்மா ஸுது³ர்லப⁴: || 19

**பஹூனாம் ஜன்மனாம்** – பல பிறவிகளின்; **அந்தே** – முடிவில் (ஏற்பட்ட); **வாஸுதேவ: ஸர்வம்** – ஸ்ரீ கிருஷ்ணரே, பூர்ணமான வஸ்து (ஸர்வம் பூர்ணமிஹோச்யதே); அல்லது கீதை 11-40ல் அர்ஜுனன் கூறியபடி – **ஸர்வம் ஸமாப்னோஷி ததோS ஸி ஸர்வ:** – எங்கும் வியாபித்திருப்பதால் அவரே எல்லாம்; அல்லது (ஸர்வஸ்ய தததீனத்வாத்) எல்லாம் ஸ்ரீ கிருஷ்ணரின் அதீனமானது; **இதி ஜ்ஞானவான்** – என்ற ஞானத்தை அடைந்த; **ஸ:** – அவன்; **மாம் ப்ரபத்யதே** – என்னை அடைகிறான். **ஸ: மஹாத்மா** – அவ்வித சிறந்த ஞானி; **ஸுதுர்லப:** – மிகமிக அரிதானவன்.

குறிப்பு: 'எல்லாம் ஸ்ரீ கிருஷ்ணரே', என்ற ஐக்கிய ஞானம் ஸகல ஶ்ருதி ஸ்மிருதிகளுக்கு விருத்தமானது. (4-24 பார்க்க) ஸர்வம் கலுஇதம் ப்ரஹ்ம, புருஷ ஏவேதம் ஸர்வம் - என்ற ஶ்ருதிகளுக்கும், 'இந்த எல்லாம், பூர்ணனான பகவானுக்கு அதீனமானது', என்று அர்த்தம் செய்ய வேண்டும்.

தைத்திரீய ஸம்ஹிதை 6-ம் காண்டம், 4-ம் பிரச்னத்தில் இந்திரன் ஓர் வியாகரணத்தை இயற்றினான் என்றுளது. அது ஒன்பது வியாகரணங் களில் ஒன்றாகும்.

*ஐந்த்ரம் சாந்த்ரம் காசக்ருத்ஸ்னம், கௌமாரம் சாகடாயனம்*
*ஸாரஸ்வதம் சாபிசலம், சாகலம் பாணினீயகம் ||*

அந்த இந்திரனின் அவதாரமான அர்ஜுனன், சப்த சாஸ்திரத்தை நன்கு அறிந்தவன். ஆனதால் அவன் 11-40 ல் கூறிய அர்த்தத்தை அனைவரும் ஒப்பவேண்டும்.

*ஐந்த்ரம் வ்யாசரணம் யஸ்ய, மூலரூபம் ந்யரூருபத் |*
*ஸ பார்த்த: சப்த சக்திஜ்ஞ:, சக்திஜ்ஞஸ்ச பராத்மன: ||*

**அர்ஜுனன்:-** உலகில் பல ஞானிகள் காணப்படுவதால், மிக மிக அரிதானவன் என்றது எப்படி?

20. कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥

காமைஸ் தைஸ்தைர் ஹ்ருதஜ்ஞானா:, ப்ரபத்யந்தே அன்யதேவதா: |
தம் தம் நியமமாஸ்த[2]ாய, ப்ரக்ருத்யா நியதாஸ் ஸ்வயா || 20

**தை: தை: காமை:** - *(அவரவர்களின்)* அந்தந்த ஆசை களால்; **ஹ்ருதஜ்ஞானா:** - விஷ்ணு ஸர்வோத்தமர் என்ற யதார்த்த ஞானத்தை இழந்தவர்களாய்; **தம் தம் நியமம்** - அந்தந்த ஆகமங்களில் கூறப்பட்ட உபவாஸம் முதலிய விரதங்களை; **ஆஸ்தாய** - அனுஷ்டித்து; **ஸ்வயா** - தங்கள் தங்களுக்குரிய; **ப்ரக்ருத்யா** - ஸாத்விக, ராஜஸ, தாமஸ, ஸ்வபாவத்தினால்; **நியதா:** - தூண்டப்பட்டவர்களாய்; **அன்ய தேவதா;** - *(பிரம்மா, சிவன் முதலிய)* பிற தேவதைகளை; **ப்ரபத்யந்தே** - சரணமடைகிறார்கள்.

குறிப்பு: உலகில் சுத்த பாகவதன் கிடைப்பது அரிது என்று கருத்து.

*ஸத்வநிஷ்டா ஹி புருஷா: விஷ்ணுமேவ யஜந்தி தே |*
*ப்ரஹ்மாணம் ராஜஸாஸ் ஸர்வே, தமோநிஷ்டாஸ்து சூலினம் ||*

ஸாத்விகர்கள், சுத்த ஸத்வகுணம் பொருந்திய விஷ்ணுவையும், ராஜஸர்கள், ரஜோகுணம் அதிகம் படைத்த பிரம்மாவையும், தாமஸர்கள்,

தமோகுணம் அதிகம் படைத்த சிவனையும், பூஜிக்கின்றனர். (பாத்ம புராணம்). கீதை 17-4.

*யஜந்தே ஸாத்விகா: தேவான், யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: |*
*ப்ரேதான் பூதகணாம்ஸ்சான்யே, யஜந்தே தாமஸா ஜனா: ||*

ஸாத்விகர்கள் தேவர்களையும்; ராஜஸர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் ஆகியோரையும்; தாமஸர்கள், பிரேதங்களை யும், பூதகணங்களையும்; பூஜிக்கின்றனர்.

அர்ஜுனன்:- மற்ற தேவதைகளைப் பூஜிப்பவர்கள் காலக்கிரமத்தில் சுத்த பாகவதர்களாவார்களா?

21. यो यो यां यां तनुं भक्तः श्रद्धयाऽर्चितुमिच्छति ।
तस्य तस्य अचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ।।

யோ யோ யாம் யாம் தனும் ப$^4$க்த:, ஶ்ரத்த$^4$யாSர்ச்சிதுமிச்ச$^2$தி |
தஸ்ய தஸ்ய அசலாம் ச்ரத்த$^4$ாம், தாமேவ வித$^3$த$^4$ாம்யஹம் || 21

**ய: ய:** - *(விஷ்ணுவின் யதார்த்த ஞானமுள்ள சுத்த பாகவதனுமல்லாத, விபரீத ஞானமுடைய தமோயோக்யனு மல்லாத) யார் யார் (நித்யத்ரைவித்யர்களோ);* **யாம் யாம்** - எந்தெந்த; **தனும்** - பிரம்மா, சிவன் முதலிய வடிவத்தை; **பக்த:** - அதில் பக்தியுள்ளவனாய்; **ச்ரத்தயா** - ஆஸ்திக்ய புத்தியுடன்; **அர்ச்சிதும் இச்சதி** - பூஜிக்க விரும்புகிறானோ; **தஸ்ய தஸ்ய** - அந்தந்த தேவதா பக்தனுக்கு; **தாமேவ ஶ்ரத்தாம்** - அதே ஆஸ்திக்ய புத்தியை; **அசலாம்** - ஸ்திரமாக; **விததாமி** - நன்கு செய்கிறேன். *(அவர்கள் சுத்த பாகவதர்களாகார்).*

**குறிப்பு:** விஷ்ணு ஸர்வோத்தமர் என அறிந்தும், மூன்று வேதங்களில் மேல் வாரியாகக் கூறப்படும் ஸ்வர்க்கத்தைக் கருதி, மற்ற தேவர்களைப் பூஜித்துக் கடைசியில் அதை விஷ்ணுவிடம் அர்ப்பணம் செய்பவர்கள், நித்யத்ரை வித்யர்கள் எனப்படுவர். கீதை 9-20, 24. பார்க்க.

22. स तया श्रद्धया युक्तः तस्याराधन मीहते ।
लभते च ततः कामान् मयैव विहितान् हि तान् ।।

ஸ தயா ச்ரத்த$^4$யா யுக்த:, தஸ்யாராத$^4$ன மீஹதே |
லப$^4$தே ச தத: காமான், மயைவ விஹிதான் ஹி தான் || 22

**ஸ:** - அந்த த்ரைவித்யன்; **தயா ச்ரத்தயா** - அந்த ஆஸ்திக்ய புத்தியுடன்; **யுக்த:** - கூடினவனாய்; **தஸ்ய-தஸ்யா:** - அந்த தேவதையின்; **ஆராதனம்** - பூஜையை; **ஈஹதே** - செய்கிறான். **ச** - மேலும்; **தத:** - அந்தப் பூஜையினால்; **மயா ஏவ** - (அந்த தேவதையின் அந்தர்யாமியான) என்னாலேயே; **விஹிதான்** -

கொடுக்கப்பட்ட; தான் – அந்த; காமான் – விரும்பிய பலன்களை; லபதே – அடைகிறான். ஹி – பலனைத் தருவதில் என்னைத் தவிர வேறு யாருக்கும் சக்தியில்லை என்பது; (ஓம் பலமத உபபத்தே: ஓம் 3–2–39 சூத்திரத்தில்) பிரசித்தம்.

குறிப்பு: (1) சுலோகம் 21ல் தனும் என்ற பெண்பாலை இங்கு தஸ்ய என்ற ஆண்பால் குறிக்கிறது. கீதை, வேதம் போன்றதால் தோஷமில்லை. சிலர் தஸ்யா: ராதனம் எனப் பிரித்துத் தோஷமில்லை என்கின்றனர். ஆனால் ராதனம் என்ற பதம், ஆராதனத்தைக் குறிக்கும் பிரயோக மில்லை.

(2) ஹிதான் - ஒரே பதமாகக் கொண்டு, ஹிதமான என்றும் அர்த்தம் கூறலாம். 4-11, 9-23 பார்க்க.

அர்ஜுனன்:- மற்ற தேவர்களைப் பூஜிப்பவர்களுக்கும் தாங்களே பலனையளிப்பதால், அவர்களை விட்டுத் தங்களை ஏன் பூஜிக்க வேண்டும்?

23. अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान् देवयजो यान्ति मद्भक्ता: यान्ति मामपि ॥

அந்தவத்து ப²லம் தேஷாம், தத்ப⁴வதி அல்பமேத⁴ஸாம் |
தே³வான் தே³வயஜோ யாந்தி, மத்ப⁴க்தா யாந்தி மாமபி || 23

தேஷாம் – (மற்ற தேவர்கள் விஷ்ணுவைக் காட்டிலும் உத்தமர், என்று அறிந்து), அவர்களைப் பூஜிப்பவர்களுடைய; தத் பலம் – அந்தப்பலன்; அந்தவத்து – நாசமுள்ளதாகவே; பவதி – ஆகிறது; ஏன்? அல்ப மேதஸாம் – அவர்கள் அற்ப பலனில் புத்தியுடையவர்கள். ஏன் நாசமுள்ளது? தேவயஜ: – பிரம்மாதி தேவர்களையே; யாந்தி – அடைகிறார்கள் (என்னை அடைவதில்லை, ஆதலால் நாசமுள்ள பலன்) 9–25 பார்க்க. து – ஆனால்; மத்பக்தா: – என் பக்தர்கள்; மாம்அபி – (அந்த தேவர்களையும் அடைந்த பிறகு) என்னையும்; யாந்தி – அடைகிறார்கள் (அதனால் நாசமற்ற பலன்).

குறிப்பு: பிரம்மாதி தேவர்களும், அவர்களின் பதவிகளும் அநித்யமானவை. பிரளயத்தில் அழிபவை. ஆகையால் அவர்கள் மூலம் கிடைக்கும் பலனும் அநித்யமானது. பகவானோ பிரளயத்திலும் அழியாதவர். ஆகவே அவருடைய பலன் நித்யமானது ஆதலால் விஷ்ணுவை முக்கியமாகவும்.

*ரமா ப்ரஹ்மாதயஸ் தஸ்ய பரிவாரதயைவ து |*

லக்ஷ்மீ, பிரம்மா முதலியோர்களை அவருடைய பரிவாரமாகவும் பூஜிக்க வேண்டும் (பிரம்ம சூத்திரம் 3-3-57).

அர்ஜுனன்:- உம்மை அடைந்தவர்களுக்கு அழியாத பலன் கிடைக்கும்படி, பிரம்மாதி தேவர்களைக் காட்டிலும், உமக்குள்ள மேன்மை யாது?

24. अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मां अबुद्धयः ।
परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥

அவ்யக்தம் வ்யக்திமாபன்னம், மன்யந்தே மாம் அபு[3]த்த[4]ய: |
பரம் ப[4]ாவமஜானந்தோ, மமாவ்யயம் அநுத்தமம் || 24

**அபுத்தய:** – அறிவிலிகள்; **மம** – என்னுடைய; **பரம்** – மற்றவைபோலல்லாத; **அநுத்தமம்** – இதைவிட உத்தம மில்லாத (மிகச் சிறந்த); **அவ்யயம்** – அழிவற்ற அல்லது ஒரே விதமாயுள்ள; **பாவம்** – உண்மையை; **அஜானந்த:** – அறியாத வர்களாய்; **அவ்யக்தம்** – உற்பத்தியுள்ள தேகம் முதலியன இல்லாத; **மாம்** – என்னை; **வ்யக்திம் ஆபன்னம்** – உற்பத்தி யுள்ள தேகம் முதலியவைகளுடன் கூடினவனாக; **மன்யந்தே** – நினைக்கிறார்கள்.

**குறிப்பு:** பிரம்மாதிகளுக்கு உற்பத்தியுள்ள தேகம் முதலியன உண்டு. எனக்கு அவை இல்லை. இதுதான் எனக்குள்ள மேன்மை.

**2–ம் அர்த்தம்:–** மற்ற தேவர்களைப் பூஜிக்கும் த்ரை வித்யர்களும், என்னையே பூஜிக்கும் சுத்த பாகவதர் களும் இருப்பதுபோல என்னைத் துவேஷிப்பவர்களும் சிலர் உண்டு என்கிறார். அல்லது சுலோகம் 7ல் கூறிய மகாமகிமை யுடையவராயின், ஏன் சிலர் தங்களுக்கும் ஜீவர்களுக்கும் ஐக்கியத்தைக் கூறுகிறார்கள்? என்றால் பதில் அளிக்கிறார்:–

(**யே** – எவர்கள்); **அவ்யக்தம்** – புலப்படாத ஈசுவரனாக இருக்கும்; **மாம்** – என்னை; **வ்யக்திம் ஆபன்னம்** – புலப்படும் தன்மையை அடைந்துள்ள ஜீவனாக (ஜீவனுடன் ஐக்கியத்தை); **மன்யந்தே** – கருதுகிறார்களோ; (**தே** – அவர்கள்); **மம** – என்னுடைய; **பரம்** – மற்றவைபோலல்லாத; **அநுத்தமம்** – மிகச் சிறந்த; **அவ்யயம்** – அழிவற்ற; **பாவம்** – உண்மையை; **அஜானந்த:** – அறியாத; **அ** – அல்ப; **புத்தய:** – அற்ப அறிவுடைய தமோயோக்யர்கள் (ஆவர்).

அவர்களின் அறியாமை ஸ்வதந்திரமல்ல, என்வச மானது. அதனால் அவர்கள் என்னைத் துவேஷித்தாலும் எனக்கு வருத்தம் இல்லை என்கிறார்.

25. नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।
मूढोऽयं नाभिजानाति लोको मां अजमव्ययम् ॥

நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய, யோகமாயா ஸமாவ்ருத: |
மூடே[4]ாSயம் நாபி[4]ஜானாதி, லோகோ மாம் அஜமவ்யயம் || 25

**யோகமாயா ஸமாவ்ருத:** - யோக - என் சாமர்த்தியம் என்ற உபாயத்தாலும்; **மாயா** - துர்க்கா தேவியாலும், (திரையினால் போல) நன்கு மறைக்கப்பட்டுள்ள; **அஹம்** - நான்; **ஸர்வஸ்ய** - அனைவர்க்கும்; **ப்ரகாஶ: ந** - தென்படுவதில்லை. ஆகையால், **மூட:** - (என்னாலேயே) விபரீத ஞானமுள்ள; **அயம் லோக:** - இந்த ஜனங்கள்; **மாம்** - என்னை; **அஜம்** - பிறப்பில்லாதவன் என்றும்; **அவ்யயம்** - இறப்பு இல்லாதவன் என்றும்; **ந அபிஜானாதி** - நன்கு அறிவதில்லை.

**அர்ஜுனன்:** - திரையின் இருபுறமுள்ளவர்கள் ஒருவரை ஒருவர் அறியாதிருப்பதுபோல, தங்களுக்கும் ஜீவர்களைப் பற்றிய அறியாமை உண்டு அல்லவா?

26. वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥

வேத[3]ாஹம் ஸமதீதானி, வர்த்தமானானி சார்ஜுன |
ப[4]விஷ்யாணி ச பூ[4]தானி, மாம் து வேத[3] ந கஸ்சன || 26

**அர்ஜுன** - ஶுத்தமான கர்மத்தைச் செய்பவனே!; **அஹம்** - நான்; **ஸமதீதானி** - முன் கடந்தவைகளும்; **வர்த்தமானானி ச** - இப்போது இருப்பவைகளும்; **பவிஷ்யாணி ச** - இனி இருக்கப் போவதுமான; **பூதானி** - பிராணிகளை; **வேத** - அறிவேன். **து** - ஆனால்; **கஸ்சன** - யாரும் (ஜீவோத்தமரான பிரம்மாகூட); **மாம்** - என்னை; **ந வேத** - (பூர்ணமாக) உள்ளபடி அறியமாட்டார்.

**குறிப்பு:** பகவானின் அதீனளான துர்க்காதேவியின் பந்தம் பகவானுக்கு இல்லை. ஆகையால் அவர் எல்லா வற்றையும் அறிகிறார். பிராணிகளுக்கோ அந்த பந்தம் உண்டு. ஆகையால், அவர்கள் பகவானை அறியமுடியாது. ராஜஸ்திரீகள் கண்ணாடி ஜன்னல்களின் மூலம் பிறரைப் பார்க்கலாம். ஆனால், பிறர் அவர்களைப் பார்க்கமுடியாது. அதுபோல் என்று அறிக.

ஜீவைக்கியம் முதலிய விபரீத ஞானத்திற்கு, சு.14ல் துர்க்கையும், சு. 25ல் பகவானின் சாமர்த்தியமும் முக்கிய காரணம் எனப்பட்டது. இங்கு சுகம், துக்கம் முதலிய ஜோடிகளிலுள்ள விபரீத ஞானமும் காரணமாகும் என்கிறார்.

27. इच्छाद्वेष समुत्थेन द्वन्द्वमोहेन भारत ।
सर्वभूतानि संमोहं सर्गे यान्ति परंतप ॥

இச்ச[2]ா த்[3]வேஷ ஸமுத்தே[2]ன, த்[3]வந்த்வ மோஹேன ப[4]ாரத |
ஸர்வபூ[4]தானி ஸம்மோஹம், ஸர்க்கே[3] யாந்தி பரந்தப || 27

**பாரத** - *பரத வம்சத்தில் பிறந்தவனே!;* **பரந்தப** - *பகைவர்களை வாட்டுபவனே!;* **ஸர்வபூதானி** - *எல்லா பிராணிகளும்;* **ஸர்க்கே** - *சிருஷ்டிகாலம் முதற்கொண்டே;* **இச்சா த்வேஷ ஸமுத்தேன** - *விருப்பு வெறுப்புகளின் பெருக்கால் ஏற்படும்;* **த்வந்த்வ மோஹேன** *(1) சுகம்-துக்கம், லாபம்-நஷ்டம் முதலிய இருமைகளிலுள்ள விபரீத ஞானத்தினால்; (2) ஜீவன் - ஈசுவரன் என்ற இருமை; அவர்களின் ஸர்வஜ்ஞத்வம் - அல்பஜ்ஞத்வம், ஸர்வசக்தி - அற்பசக்தி, ஸ்வாதந்தர்யம் - அஸ்வாதந்தர்யம்; முதலிய ஜோடிகள், இவைகளிலுள்ள விபரீத ஞானத்தினால்;* **ஸம்மோஹம்** - *ஜீவேசுவர ஐக்யம் முதலிய உறுதியான விபரீத ஞானத்தை;* **யாந்தி** - *அடைகின்றனர்.*

குறிப்பு: (1) துக்கம் எவ்வாறு விடத்தகுந்ததோ, அவ்வாறு ஸுகமும் விடத்தகுந்ததே என்ற ஞானம் யதார்த்த ஞானமாகும். துக்கமே விடத்தகுந்தது, சுகம் விடத்தகாதது என்ற ஞானம் விபரீத ஞானமாகும். இதுபோல மற்ற ஜோடிகளிலும் காண்க. (2) மோஹம் அவித்யையின் ஐந்து விதங்களில் ஒன்றாகும். (1) தமஸ் - இருட்டு போன்ற அஜ்ஞானம், (2) மோஹம் - விபரீத ஞானம். (3) மஹாமோஹம் - அதில் பிடிவாதம். (4) தாமிஸ்ர:-கோபம், (5) அந்த (अन्ध) தாமிஸ்ரம் - ஸாகும்வரையில் கலகம்.

எல்லா பிராணிகளும் விபரீத ஞானத்தை அடைந்தால், முக்தி மார்க்கம் இல்லாமற்போகுமாதலால், விபரீத ஞானமில்லாத சிலரும் உண்டு என்கிறார்.

28. येषां तु अन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।
ते द्वन्द्वमोहनिर्मुक्ताः भजन्ते मां दृढव्रताः ॥

யேஷாம் து அந்தக[3]தம் பாபம், ஜனானாம் புண்யகர்மணாம் |
தே த்வந்த்வமோஹ நிர்முக்தா:, ப[4]ஜந்தே மாம் த்ருட[4]வ்ரதா: || 28

**து** - *ஆனால்;* **யேஷாம்** - *எந்த;* **புண்யகர்மணாம்** - *தர்ம காரியங்களைச் செய்த;* **ஜனானாம்** - *ஜனங்களின்;* **பாபம்** - *பாவம்;* **அந்தகதம்** - *அழிந்துவிட்டதோ;* **தே** - *அவர்கள்;* **த்வந்த்வ மோஹ விநிர்முக்தா:** - *மேற்படி இருவித இருமை களிலுள்ள விபரீத ஞானத்திலிருந்து அடியோடு விடுபட்டவர்*

களாகி; **த்ருட வ்ரதா: (ஸந்த:)** – (ஸம்ஸாரத்தை ஒழிப்பதில்) உறுதியான நியமங்களுள்ளவர்களாகி; **மாம்** – என்னை; **பஜந்தே** – சேவிக்கிறார்கள்.

அந்த சேவையின் பலன் பகவத்ஞானம் என்கிறார்.

29. जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये ।
ते ब्रह्म तद्विदुः कृत्स्नं अध्यात्मं कर्म चाखिलम् ॥

ஜராமரண மோக்ஷாய, மாம் ஆஶ்ரித்ய யதந்தி யே |
தே ப்ரஹ்ம தத்விது[3]: க்ருத்ஸ்னம், அத்[4]யாத்மம் கர்ம சாகி[2]லம் || 29

**யே** – எந்த ஸாத்விகர்கள்; **ஜராமரணமோக்ஷாய** – கிழத்தனம், மரணம், இவற்றிலிருந்து விடுபடுவதற்காக, (அவைகளைத் தரும் ஸ்வர்க்கம் முதலியவற்றிலுள்ள ஆசை நீங்குவதற்காக); **மாம்** – என்னை; **ஆஶ்ரித்ய** – அண்டி; **யதந்தி–யதந்தே** – (சேவிக்க) முயற்சிக்கின்றனரோ; **தே** – அவர்கள்; **தத் ப்ரஹ்ம** – அந்த பிரம்மத்தையும் (குணபூர்ணனான விஷ்ணுவின் வியாப்தரூபத்தையும்); **க்ருத்ஸ்னம் அத்யாத்மம்** – ஜீவனைச் சார்ந்த முழுவதையும்; **அகிலம் கர்ம ச** – (பகவானின்) எல்லா காரியங்களையும்; **விது:** – அறிவார்கள்.

குறிப்பு: சுலோகம் 3ல் போல், இங்கும் யதந்தே என்பதற்கு யதந்தி என உளது. இந்நூல் இலக்கணத்திற்கு அப்பாற்பட்டது.

'அந்த பிரம்மத்தை' என்றதால் பிரம்மம் பகவானைக்காட்டிலும் வேறானது என்ற சந்தேகத்தைப் போக்குகிறார்.

30. साधिभूत - अधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥

ஸாதி[4]பூ[4]த – அதி[4]தை[3]வம் மாம், ஸாதி[3]யஜ்ஞும் ச யே விது[3]: |
ப்ரயாணகாலேSபி ச மாம், தே விதுர் யுக்த சேதஸ: || 30

**யே** – எவர்கள்; **ஸ அதிபூத அதிதைவம்** – அதிபூதம், அதிதைவம் இவற்றுடன் கூடியவரும்; **ஸ அதியஜ்ஞும் ச** – அதியஜ்ஞுத்துடன் கூடியவருமான; **மாம்** – என்னை; **விது:** – அறிகிறார்களோ; **அபி ச** – மேலும்; **ப்ரயாணகாலே** – மரண சமயத்திலும்; **மாம்** – என்னை; **விது:** – அறிகிறார்களோ, (ஸ்மரிக்கிறார்களோ); **தே** – அவர்கள்; **யுக்தசேதஸ:** – தியானத்துடன் கூடிய மனதையுடையவர்கள் (ஆவர்).

குறிப்பு: அதிபூதம் - பஞ்சபூதங்களைப்பற்றியது. அதிதைவம்- அவற்றின் அபிமானி தேவதைகளைப்பற்றியது. அதியஜ்ஞம் - யாகங்களைப்பற்றியது. இவற்றை அடுத்த அத்தியாயத்தில் விளக்குகிறார்.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुन संवादे ज्ञानविज्ञान योगो नाम सप्तमोऽध्यायः ॥

ஓம் தத்ஸத். இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம வித்யாயாம், யோக சாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம் வாதே, ஜ்ஞான விஞ்ஞானயோகோ நாம ஸப்தமோSத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய ஜ்ஞான விஞ்ஞான யோகம் என்ற ஏழாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 8

# அக்ஷரப்ரஹ்ம யோகம்

(28 சுலோகங்கள்)

## எட்டாம் அத்தியாயத்தின் சுருக்கம்

7-ம் அந்தியாயத்தின் கடைசியில் கூறியதையொட்டி அர்ஜுனன் வினவிய 8 கேள்விகளுக்கு இந்த அத்தியாயத்தில் பதிலளிக்கிறார்.

1. பிரம்மம் எது? - ஸ்ரீ கிருஷ்ணருடைய வியாப்த ரூபம்.

2. அத்யாத்மம் என்றால் என்ன? - ஸ்வபாவ:- ஜீவனுக்கு உதவி புரியும் தேகம், முதலிய பொருள்கள் அல்லது ஜீவராசிகள்.

3. கர்மம் எது?- விஸர்க்க:- உலகைச் சிருஷ்டிப்பது.

4. அதிபூதம் எது? - க்ஷர: பாவ:- தேகத்துடன் கூடிய ஜீவனுக்கு உதவி புரியும் பஞ்ச பூதங்கள்.

5. அதிதைவம் அல்லது அதிதைவதம் எது? - புருஷ:- பிரம்மதேவர் அல்லது ஸங்கர்ஷணர். ஸர்வஜீவாபிமானி.

6. ஜீவர்களின் தேகத்தில் எவ்வாறு அதியஜ்ஞன் ஆவான்? - ஸகல யாகங்களைப் புசிப்பதாலும் செய்விப்ப தாலும் அதியஜ்ஞன் ஆவான் என்று 5-29ல் கூறப்பட்டது.

7. அந்த அதியஜ்ஞன் யார்?- அதிகம் பூஜிக்கப் படுவதால் அப்பெயர் கொண்ட என் ரூபவிசேஷம்.

8. (i) மரண சமயத்தில் எதற்காக உம்மை ஸ்மரிக்க வேண்டும்?- என்னை அடைவதற்காக என்னை ஸ்மரிக்க வேண்டும்.

(ii) எப்படியிருப்பவராக ஸ்மரிக்கவேண்டும்?- பகவான் அனைவரையும் போஷிப்பவர், மனதுக்கு முழுமையாக எட்டாதவர், என ஸ்மரிக்கவேண்டும்.

(iii) எவ்வாறு ஸ்மரிக்கத் தகுந்தவர்?- மனதை பகவானிடம் நிலைநிறுத்தி, பிராண வாயுவை பிரம்மரந்தி ரத்தில் வைத்து அல்லது ஞான பக்தி வைராக்கியத்துடன், ஸ்மரிக்கத் தகுந்தவர்.

சென்ற அத்தியாயத்தின் கடைசி இரு சுலோகங்களின் வியாக்யானம் இந்த அத்தியாயத்தில் முக்கியமாகச் செய்யப் படுகிறது. அதையொட்டி மரண காலத்தில் ஸ்மரிப்பதின் பலன், ஸ்மரிக்கும் உபாயம், பகவானை அடைதல், செல்லும் மார்க்கம், இவைகளும் கூறப்படுகின்றன. இவையும் பகவன் மகிமையையே குறிக்கும். ஸ்மரிக்கப்படுபவனும், அடையப் படுபவனும் பகவானல்லவா!

अर्जुनः उवाच — **அர்ஜுன: உவாச** - *7-29ல்,* **அந்த பிரம்மம்** என்றதாலும், *7-30ல்,* **என்னை** என்றதாலும், பிரம்மம் வேறு, ஸ்ரீ கிருஷ்ணர் வேறு, என்ற சந்தேகத்தால் **அர்ஜுனன் கேட்கிறான்.**

1. किं तद्ब्रह्म किं अध्यात्मं किं कर्म पुरुषोत्तम।
अधिभूतं च किं प्रोक्तं अधिदैवं किमुच्यते॥

2. अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन।
प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः॥

கிம் தத் ப்[3]ரஹ்ம கிம் அத்[4]யாத்மம், கிம் கர்ம புருஷோத்தம |
அதி[4]பூ[4]தம் ச கிம் ப்ரோக்தம், அதி[4]தை[3]வம் கிமுச்யதே || 1

அதி[4]யஜ்ஞ: கத[2]ம் கோSத்ர, தே[3]ஹேSஸ்மின் மது[4]ஸூத[3]ன |
ப்ரயாணகாலே ச கத[2]ம், ஜ்ஞேயோSஸி நியதாத்மபி[4]: || 2

*1.* **புருஷோத்தம** - உத்தம புருஷரே! *(15-ம் அத்தியா யத்தில் க்ஷர அக்ஷர புருஷர்களைக்காட்டிலும் உத்தமர் எனக் கூறப்போகிறார்);* வினா *(1)* **தத் ப்ரஹ்ம** - அந்த *(7-29ல் கூறிய)* பிரம்மம்; **கிம்** - எது?; வினா *(2)* **அத்யாத் மம் கிம்** - அத்யாத்மம் என்றால் என்ன?; வினா *(3)* **கர்ம கிம்** - *(அந்த பிரம்மத்தின்)* தொழில் யாது?; வினா *(4)* **கிம்** - எது; **அதிபூதம் ச** - அதிபூதம் என்று; **ப்ரோக்தம்** - கூறப்படுகிறது?; வினா *(5)* **கிம்** - எது; **அதிதைவம்** - அதிதைவம் என்று; **உச்யதே** - சொல்லப் படுகிறது?

*2.* **மதுஸூதன** - மது என்ற அசுரனைக் கொன்றவரே!; வினா *(6)* **அத்ர** - இந்த *(பகவானின் தேகமல்லாத)* **தேஹே** - ஜீவர்களின் தேகத்தில்; **அதியஜ்ஞ:** - அதியஜ்ஞன் எனப் படுவது; **கதம்** - எவ்விதம்?; வினா *(7)* **அஸ்மின் தேஹே** - இந்த தேகத்தில்; **அதியஜ்ஞ: க:** - அதியஜ்ஞன் யார்?; வினா *(8)* **ச** - மேலும்; **ப்ரயாணகாலே** - இறக்கும் தருவாயில்; **நியத ஆத்மபி:** - மனத்தை அடக்கினவர்களால்; **கதம்** - i எதற்காக ii எப்படி

இருப்பவராக iii எவ்வாறு; **ஜ்ஞேய: அஸி** - அறியத் தகுந்தவராயிருக்கிறீர்?

குறிப்பு: மொத்தம் 8 கேள்விகள். 6ம் கேள்விக்கு, 5-29ல், **போக்தாரம் யஜ்ஞ தபஸாம்** - ஜ்யோதிஷ்டோமம் முதலிய பல யாகங்களைப் புசிப்பவன் (செய்விப்பவன்) நான் (ஸ்ரீ கிருஷ்ணர்) என்ற பதிலுள்ளது. ஆகையால் மற்ற வினாக் களுக்குப் பின்வரும் சுலோகங்களில் விடையளிக்கிறார்.

श्रीभगवान् उवाच — **ஸ்ரீ பகவான் உவாச - ஸ்ரீ கிருஷ்ணர் பதிலளிக்கிறார்.**

3. अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूत भावोद्भवकरः विसर्गः कर्मसंज्ञितः ॥

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம், ஸ்வப[4]ாவோSத்[4]யாத்ம முச்யதே ।
பூ[4]த ப[4]ாவோத்ப[4]வகர: விஸர்க்க[3]:, கர்ம ஸம்ஜ்ஞித: ॥ 3

விடை *(1)* **பரமம்** - உத்தமமான; **அக்ஷரம்** - *நாசமற்ற வஸ்து (நானே, அதாவது என் வியாப்த ரூபம்).* **ப்ரஹ்ம** - *( நீ வினவிய) பிரம்மமாகும்.* விடை *(2)* **ஸ்வபாவ:** - ஸ்வஸ்ய ஜீவஸ்ய, பவதீதி பாவ:; ஜீவனுக்கு உதவியாகவிருக்கும் தேகம், இந்திரியம், மனம் ஆகியவை; **அத்யாத்மம்** - ஆத்மா ஜீவனுக்கு, **அதி** - உதவியாகவிருப்பது, என்றும்; அல்லது, (ஸ்வஸ்சாஸௌ பாவஸ்ச) எப்போதும் ஒரேவிதமான ஸ்வரூபத்தையுடைய ஜீவராசிகள்; **அத்யாத்மம்** - ஆத்மாவான ஜீவனைப்பற்றிய நூலில் கூறப்படுவன; என்றும் **உச்யதே** - சொல்லப்படுகிறது. விடை *(3)* **பூத - பாவ - உத்பவ - கர:** - ஜீவர்கள், ஜடப் பொருள்கள், இவற்றின் உற்பத்தியைச் செய்கிற; **விஸர்க்க:** - விசேஷமாகப் படைத்தல்; **கர்ம ஸம்ஜ்ஞித:** - *(பகவானுடைய)* தொழில் என்று சொல்லப்படுகிறது.

குறிப்பு: இங்கு முதல் மூன்று வினாக்களுக்கு விடையளிக்கப் பட்டுள்ளது. 'அந்த பிரம்மம் நானே' என்று சொல்லாமல், **அக்ஷரம்** என்றதின் கருத்து:- **தஸ்மாத் அக்ஷரமித்யாசக்ஷதே ஏதமேவ ஸந்தம்** - என்ற சுருதியில் அக்ஷரன் என்ற பிரசித்தமாயிருப்பவனும் நானே என்று அறிவிக்கிறார். பரமம் அக்ஷரம் என்றதால் 1. அதம அக்ஷரம் - சூக்ஷ்ம ரூபத்தினால் நித்யமான ஜட பிரகிருதி. 2. மத்யம அக்ஷரம் - அதன் அபிமானியும், தேகத்துடன் நித்யளுமான, லக்ஷ்மீ. 3. உத்தம அக்ஷரம் - விஷ்ணு (பிரம்ம சூத்திரம் 1-2-22) என்ற மூவகையான அக்ஷரங்களில், 'நான் உத்தமாக்ஷரன் என அறிவிக்கிறார். (11-18)

4. अधिभूतं क्षरो भावः पुरुषश्च अधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥

அதி⁴பூ⁴தம் க்ஷரோ பா⁴வ:, புருஷஸ்ச அதி⁴தை³வதம் |
அதி⁴யஜ்ஞோ ஸஹமேவாத்ர, தே³ஹே தே³ஹப்⁴ருதாம் வர || 4

விடை *(4)* **க்ஷர:** - நாசமுடையதும்; **பாவ:** - உற்பத்தியையுடையதுமான (தேகம், இந்திரியம் இவற்றைக்காட்டிலும் வேறான) பஞ்சபூதங்கள்; **அதிபூதம்** - பூத-தேகத்துடன் கூடிய ஜீவர்களுக்கு, **அதி** - உதவிபுரியும் வஸ்து (எனக் கூறப்படுகிறது). விடை *(5)* **புருஷ: ச** - (புரி சேதே) தேகத்தில் உள்ள ஜீவன், அதாவது எல்லா ஜீவர்களின் அபிமானியான ஸங்கர்ஷணன் (சேஷன்) அல்லது பிரம்மா; **அதிதைவதம்** - எல்லா தேவர்களுக்கும் ஸ்வாமியாயிருப்பவர், அல்லது தேவதா பிரகரணத்தில் முக்கியமாகக் கூறப்படுபவர் (எனக் கூறப்படுகிறார்). விடை *(7)* **தேஹ ப்ருதாம் வர** - தேகத்தைப் படைத்தவர்களிற் சிறந்தவனே!; **அத்ர** - இந்த (பகவானின்) தேகமல்லாத; **தேஹப்ருதாம் தேஹே** - தேகம் படைத்த ஜீவர்களின் தேகத்தில்; **அதி யஜ்ஞ:** - (**அதிகம் யாஜ்யத்வாத்** - அதிகமாகப் பூஜிக்கப்படுவதால்) அப்பெயர்கொண்டவன்; **அஹம் ஏவ** - நானே. (என் ரூப விசேஷமேயாகும்).

**குறிப்பு:** 1. இங்கு விடை 6 தவிர (சு. 2 பார்க்க) மீதி 3 விடைகள் தரப்பட்டுள்ளன. 2. 7-30ல், 8-1ல் **அதிதைவம்** என்பதும் இந்த சுலோகத்தில் **அதிதைவதம்** என்பதும் ஒன்றே.

வினா 8. (i) எதற்காக இறக்கும் தருவாயில் ஸ்மரிக்கத் தகுந்தவர்? இதற்கு (5 முதல் 8 சுலோகங்களில்) பதிலளிக்கிறார்.

5. अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥

அந்தகாலே ச மாமேவ, ஸ்மரன் முக்த்வா கலேவரம் |
ய: ப்ரயாதி ஸ மத்ப⁴ாவம், யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶய: || 5

**ய:** - யார்; **அந்தகாலே ச** - மரணசமயத்திலும்; **மாம் ஏவ** - என்னையே; **ஸ்மரன்** - நினைத்துக்கொண்டு; **கலேவரம்** - தேகத்தை; **முக்த்வா** - விட்டுவிட்டு; **ப்ரயாதி** - செல்கிறானோ; **ஸ:** - அவன்; **மத்பாவம்** - (மயி பாவம்) என்னிடம் துக்க மில்லாத ஒப்பற்ற ஆனந்தத்தை அனுபவிக்கும் நிலையை; **யாதி** - அடைகிறான். **அத்ர** - இவ்விஷயத்தில்; **ஸம்ஶய:** - சந்தேகம்; **ந அஸ்தி** - இல்லை.

குறிப்பு: (1) மத்பாவம் - நான்கு அர்த்தங்களை 4-10ல் பார்க்க (2) துக்கக்கலப்பற்ற ஆனந்தத்தை அநுபவிப்பதற்காகப் பகவானை மரண காலத்தில் ஸ்மரிக்கவேண்டும்.

அது எப்படி? என்றால் பொதுவான விதியைக் கூறுகிறார்.

6. यं यं वाऽपि स्मरन् भावं त्यजत्यन्ते कलेवरम् ।
तं तमेवैति कौन्तेय सदा तद्भाव भावितः ॥

யம் யம் வாSபி ஸ்மரன் ப⁴ாவம், த்யஜத்யந்தே கலேவரம் |
தம் தமேவைதி கௌந்தேய, ஸத³ா தத்ப⁴ாவ ப⁴ாவித: || 6

**கௌந்தேய** - *குந்தீ புத்திரனே!; (முற்கூறியபடி என்னை);* **வா** - *அல்லது;* **யம் யம் பாவம் அபி** - *எந்தெந்த வஸ்துவையோ கூட;* **ஸதா** - *இடைவிடாது;* **தத்பாவ பாவித:** - *அந்தந்த வஸ்துவில் மூழ்கின மனதினால் (பாவோ அந்தர்கதம் மனன:), அதை நினைப்பதால் ஏற்பட்ட வாஸனா என்ற ஸம்ஸ்காரத்தை உடையவனாகி; (***தம்*** - அந்தப் பொருளை)* **அந்தகாலே** - *மரண சமயத்தில்;* **ஸ்மரன்** - *நினைத்துக் கொண்டு;* **கலேவரம்** - *தேகத்தை;* **த்யஜதி** - *விடுகிறானோ;* **தம்தம் ஏவ** - *அந்தந்த வஸ்துவையே;* **ஏதி** - *அடைகிறான்.*

குறிப்பு: 1. பகவானை எப்போதும் ஸ்மரிப்பது, அபரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணி, பிராரப்த கர்மம் இருந்தால் அதை அநுபவித்தபிறகு, மரண சமயத்தில் ஞாபகத்திற்குக் காரணமாகிறது; ஸாக்ஷாத்தாக அல்ல; என்று அறியவும், பீஷ்மாசாரியாருக்கு த்யு என்ற வஸுவின் பதவியாகிற பிராரப்த கர்மா மீதி யிருந்ததால், **விஷ்ணு மாயா ததா தேஷாம், மனோ பாஹ்யம் கரோதி ஹி** - பகவானை அடையும்படிச் செய்யாது, வஸுபதவியை அடையும்படிச் செய்தது.

2. பாகவதம் 5ம் ஸகந்தத்தில், பரத சக்ரவர்த்தி மரணகாலத்தில் மானை ஸ்மரித்துக்கொண்டே தேகத்தை விட்டதால், மானாகப் பிறந்தது பிரசித்தமாயுள்ளது.

*ஹிரண்யகசிபுர் பூதம், அமன்யத மருதௌ ஹரிம் |*
*அதோ பயானகோ ஜாத: தத்ர ராஜான மேவ ச ||*
*மத்வா ராஜைவ ஸஞ்ஜாத: க்ருஷ்ணம் சக்ராதி லக்ஷணை: ||*

*ம்ருதிகாலே ஹரிம் சைவ, மத்வா பக்த்யைவ கேவலம் |*
*த்வாஸ் ஸதத்வம் ஹரிமாவிச்ய, ப்ராபைவ மனுஜோ அபி து*

ஹிரண்யகசிபு மரணகாலத்தில் ஸ்ரீ நரஜிம்மரைப் பல தலைகளுள்ள பூதமாக நினைத்ததால், பத்து தலைகளுள்ள ராவணனாகி; அவன் ஸ்ரீ ராமரை ராஜகுமாரனாக நினைத்ததால், சிசுபாலன் என்ற ராஜகுமாரனாகி; அவன் ஸ்ரீ கிருஷ்ணரை சக்கரம் முதலிய அடையாளங்களால்,

வைகுண்டநாதனாக நினைத்ததால், அவரிடம் பிரவேசித்து, மீண்டும் வைகுண்டத்தில் துவாரபாலகன் ஆனான்.

3. ஸ்மரன் – முக்த்வா:– ஸ்மரிப்பதும், தேகத்தை விடுவதும் ஒரே காலத்தியதாக இருக்க வேண்டும்.

மரணகால ஸ்மரணத்தின் பலனைக் கூறியதின் உபயோகத்தை விளக்குகிறார்.

7. तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च।
मय्यर्पितमनोबुद्धिः मामेवैष्यसि असंशयः ॥

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு, மாமநுஸ்மர யுத்[4]ய ச |
மய்யர்ப்பித மனோபுத்தி[4]: மாமேவைஷ்யஸி அஸம்ஶய || 7

**தஸ்மாத்** – ஆகையால்; அதாவது, எப்போதும் என்னை ஸ்மரிப்பது, என்னை அடைவிக்கும் மரணகாலத்திய ஸ்மரணத்திற்குக் காரணமாயிருப்பதால்; **ஸர்வேஷு காலேஷு** – எல்லாக் காலங்களிலும்; **மாம்** – என்னை; **அநு ஸ்மர** – தொடர்ந்து நினைத்துக்கொண்டிரு. **மயி** – என்னிடம்; **அர்ப்பித மனோபுத்தி:** – மனதையும், புத்தியையும் அர்ப்பணம் செய்தவனாய்; **யுத்ய ச** – (உனக்குரிய கர்மமான) சண்டையையும் செய். **மாம் ஏவ ஏஷ்யஸி** – என்னையே அடைவாய்; **அஸம்ஶய:** – சந்தேகமில்லை.

**குறிப்பு:** (1) மனம் சுத்தமாய் இருந்தால்தான் பகவானை ஸமரிக்க முடியும். மனம் சுத்தமாய் இருக்க, தன் வர்ணாசிரமத்திற்குரிய கர்மாவைச் செய்யவேண்டும். மனம் கடிவாளம் போன்றது. புத்தி தேரோட்டி போன்றது. (6–6 குறிப்பு: பார்க்க) (2) கோபிகைகள், பால் கறக்கும்போதும், நெல் குத்தும்போதும், தயிர் கடையும்போதும், பிறருடன் பேசும்போதும், தொட்டில் ஆட்டும்போதும், அழுகிற குழந்தைகளைச் சமாதானம் செய்யும் போதும், சாணம் தெளித்துப் பெருக்கும்போதும், குளிக்கும் போதும், ஸ்ரீ கிருஷ்ணனையே நினைத்து அவருடைய குணங்களைப் பாடிவந்தனர். (பாகவதம் 10–44–15)

எப்பொழுதும் பகவானிடம் மனம் மூழ்கியிருப்பதை விளக்குகிறார்.

8. अभ्यासयोगयुक्तेन चेतसाऽनन्यगामिना।
परमं पुरुषं दिव्यं याति पार्थ अनुचिन्तयन् ॥

அப்[4]யாஸயோக[3] யுக்தேன, சேதஸாS*நன்ய கா[3]மினா |
பரமம் புருஷம் தி[3]வ்யம், யாதி பார்த்த[2] அநுசிந்தயன் || 8

**பார்த்த** – குந்தீ புத்திரனே !; **அப்யாஸயோக யுக்தேன** – திருப்பித்திருப்பிச் செய்தல் என்ற உபாயத்துடன் கூடியதும்;

**அநன்ய காமினா** – வேறு விஷயங்களில் செல்லாததுமான; **சேதஸா** – மனதினால்; **பரமம்** – உத்தமரும்; **திவ்யம்** – சிருஷ்டி முதலிய லீலைகளாகிற குணங்களுடையவரும்; **புருஷம்** – (புரி சேதே) எல்லாப் பிராணிகளின் தேகங்களில் நியாமகராக இருக்கும் அல்லது (ப்ரு பாலன பூரணயோ:) ரக்ஷிப்பவரும், பூர்ணருமான பகவானை; **அநுசிந்தயன்** – தொடர்ந்து ஸ்மரித்துக் கொண்டவனாய் (**பரமம் புருஷம்** – உத்தம புருஷரான பகவானை); **யாதி** – அடைகிறான்.

குறிப்பு: *நான்யகாமினா – பிறர்பாடம்.

வினா 8 (ii) எப்படி இருப்பவராக ஸ்மரிக்கத் தகுந்தவர்? இதற்கு 9, 10 இரு சுலோகங்களில் பதிலளிக்கிறார்.

9. कविं पुराणं अनुशासितारं अणोरणीयांसं अनु स्मरेत् यः ।
सर्वस्य धातारं अचन्तियरूपं आदित्यवर्णं तमसः परस्तात् ॥

10. प्रयाणकाले मनसाऽचलेन भक्तया युक्तो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य संयक् स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥

கவிம் புராணம் அநுஶாஸிதாரம், அணோரணீயாம்ஸம்
அநுஸ்மரேத் ய: |
ஸர்வஸ்ய தா⁴தாரம் அசிந்த்யரூபம், ஆதி³த்ய வர்ணம் தமஸ:
பரஸ்தாத் || 9

ப்ரயாணகாலே மனஸாऽசலேன, ப⁴க்த்யா யுக்தோ யோக³ப³லேன
சைவ |
ப்⁴ருவோர் மத்⁴யே ப்ராண மாவேஶ்ய ஸம்யக், ஸ தம் பரம்
புருஷமுபைதி தி³வ்யம் || 10

*9.* **ய:** – *யார்;* **கவிம்** – எல்லாம் அறிந்தவரும்; **புராணம்** – அநாதியானவரும்; **அநுஶாஸிதாரம்** – நியாமகரும்; **அணோ:** – சிறியதைக்காட்டிலும்; **அணீயாம்ஸம்** – மிகச் சிறியதா யிருப்பவரும்; **ஸர்வஸ்ய** – சராசரமான உலகம் அனைத் திற்கும்; **தாதாரம்** – தாங்குபவரும், போஷகரும்; **அசிந்த்யரூபம்** – முழுமையாக மனதுக்கெட்டாத ஸ்வரூபமுடையவரும்; **ஆதித்ய வர்ணம்** – சூரியன் போன்ற பிரகாசமுடையவரும் *(11–12 பார்க்க);* **தமஸ:** – பிரகிருதிக்கும் அல்லது மிருத்யுவுக்கும்; **பரஸ்தாத் (ஸ்திதம்)** – அப்பாற்பட்டு இருப்பவருமான (பரம புருஷரை);

*10.* **பக்த்யா யுக்த:** – பக்தியுடன் கூடினவனாய்; **ப்ரயாண காலே** – மரண சமயத்தில்; **யோகபலேன** – வாயுஜயத்தின்

*பலத்தினால்;* **ப்ராணம்** – *ப்ராண வாயுவை;* **ப்ருவோ: மத்யே** – இரு புருவங்களின் நடுவில்; **ஸம்யக் ஆவேச்ய** – நன்றாக நிறுத்தி; **அசலேன மனஸா ச** – *ஸ்திரமான மனத்தால்; (சு. 9* **அநுஸ்மரேத்** – *தொடர்ந்து தியானம் செய்கிறானோ);* **ஸ:** – *அவன்;* **தம்** – *அந்த;* **திவ்யம்** – *சிருஷ்டி முதலிய லீலைகளாகிற குணங்களையுடையவரும்;* **பரம்** – *உத்தமருமான;* **புருஷம்** – *பகவானை;* **உபைதி ஏவ** – *நிச்சயம் அடைகிறான்.*

குறிப்பு: 1. ஆதித்யவர்ணம், என்றதால் பகவானுக்குத் தேகம் உண்டு என்று ஏற்படுகிறது. அந்த தேகத்திற்கு உற்பத்தியும், நாசமும் இல்லை என்று – தமஸ: பரஸ்தாத் – என்ற பதங்களால் கூறுகிறார். அவருடைய தேகம் அப்ராகிருதமானது; ஆகையால் பிறப்பு இறப்புகள் இல்லை. (2) வாயுஜயத்தில் நிபுணர்கள் பிராணனைப் புருவத்தின் நடுவில் நிலைநிறுத்தவேண்டும். மற்றவர்கள் ஞானம், பக்தி, வைராக்யம் முதலியவைகளினாலேயே முக்தி பெறலாம்.

வினா 8. (iii) எவ்வாறு ஸ்மரிக்கத் தகுந்தவர்? என்பதற்கு சுலோகம் 12,13ல் விடையளிப்பவராய், இங்கு தியானிக்கத் தகுந்த வஸ்துவின் ஸ்வரூபத்தை வர்ணிக்கிறேன் என்கிறார்.

11. यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यत् यतयो वीतरागाः ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥

யத³க்ஷரம் வேத³விதே³ா வத³ந்தி, விஶந்தி யத் யதயோ வீதராக³ா:|
யதி³ச்ச²ந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி, தத்தே பத³ம் ஸங்க்³ரஹேண
ப்ரவக்ஷ்யே || 11

**யத்** – எந்த ஸ்வரூபத்தை; **அக்ஷரம்** – நாஶமில்லாதது என; **வேதவித:** – வேதமறிந்தவர்கள்; **வதந்தி** – கூறு கின்றனரோ; **யத்** – எதை; **வீத ராகா:** – *காமம் முதலிய தோஷங்களில்லாத;* **யதய:** – முயற்சிப்பவர்கள்; **விஶந்தி** – பிரவேசிக்கின்றனரோ; **யத்** – எதை; **இச்சந்த:** – விரும்புகிறவர் களாய்; **ப்ரஹ்மசர்யம்** *(ப்ரஹ்மணி சரணம்)* – பகவானிடம் மனம் முதலியவற்றைச் செலுத்துவதை; **சரந்தி** – அநுஷ்டிக் கின்றனரோ; **தத் பதம்** *(பத்யதே இதி பதம்)* – அந்த அடையப் படும் ஸ்வரூபத்தை *(அதை ஸ்மரிக்கும் விதத்தை);* **தே** – உனக்கு; **ஸங்க்ரஹேண** – *சுருக்கமாக;* **ப்ரவக்ஷ்யே** – நன்கு கூறுவேன்.

12. सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।
मूर्ध्नि आधाय आत्मनः प्राणं आस्थितो योगधारणाम् ॥

13. ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन् मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन् देहं स याति परमां गतिम् ॥

ஸர்வத்[3]வாராணி ஸம்யம்ய, மனோ ஹ்ருதி[3] நிருத்[4]ய ச |
மூர்த்[4]னி ஆத[4]ாய ஆத்மன: ப்ராணம், ஆஸ்தி[2]தோ
யோக[3]த[4]ாரணாம் || 12

ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம, வ்யாஹரன் மாமநுஸ்மரன் |
ய: ப்ரயாதி த்யஜன் தே[3]ஹம், ஸ யாதி பரமாம் க[3]திம் || 13

*12.* **ய:** *(சு. 13) – யார்;* **ஸர்வ த்வாராணி** *– வாயு ஸஞ்சரிக்கும் எல்லா இடங்களான ஸுஷும்னா நாடி முதலியவைகளையும்;* **ஸம்யம்ய** *– நன்கு அடக்கியும்;* **மன:** *– மனதை;* **ஹ்ருதி** *– (ஹரதி ஜகத் இதி ஹ்ருத்) உலகங்களை அழிக்கும் ஸ்ரீ நாராயணனிடம்;* **நிருத்ய ச** *– அடக்கியும்;* **ஆத்மன:** *– தன்னுடைய;* **ப்ராணம்** *– பிராண வாயுவை;* **மூர்த்னி** *– தலையில் (பிரம்ம ரந்திரம் என்ற உச்சியில்);* **ஆதாய** *– (ஸுஷும்னா நாடியின் மூலம்) நிலைநிறுத்தி;* **யோக தாரணாம்** *– அகண்ட ஸ்மரணம் என்ற தியானத்தில்;* **ஆஸ்தித:** *– ஆழ்ந்திருந்து கொண்டு;*

*13.* **ஓம் இதி ஏகாக்ஷரம்** *– ஓம் என்ற ஒரு எழுத்தால் கூறப்படும்;* **ப்ரஹ்ம** *– பரப்பிரம்மமான;* **மாம்** *– என்னை;* **வ்யாஹரன்** *– ஓம் என்று சொல்லிக்கொண்டும்;* **தேஹம்** *– உடலை;* **த்யஜன்** *– விடுபவனாய்;* **ப்ரயாதி** *– செல்கிறானோ;* **ஸ:** *– அவன்;* **பரமாம் கதிம்** *– உத்தம ஸ்தானத்தை (மோக்ஷத்தை);* **யாதி** *– அடைகிறான்.*

குறிப்பு: பிரம்ம சூத்திரம் 4-2-17: ஹ்ருதயத்துடன் இணைந்த 101 நாடிகள் உள்ளன. அவைகளின் நடுவிலுள்ள ஓர் நாடி தலைவரையில் சென்றுள்ளது. அது ஸுஷும்னா எனப்படும். அதன் மூலம் வெளியேறும் ஜீவர்கள் தாம், மோக்ஷமடைகிறார்கள். மற்ற 100 நாடிகளின் மூலம் வெளியேறுபவர்கள் வேறு உலகங்களை அடைகின்றனர்.

இடைவிடாது எப்போதும் பகவானை ஸ்மரிக்கும் பழக்கமுள்ளவனுக்குத்தான் மரண சமயத்தில் பகவத் ஸ்மரணம் ஏற்படும் என்றும், பகவானை அடைவதே உத்தம கதி என்றும், கூறுகிறார்.

14. अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥

அநந்ய சேதாஸ் ஸததம், யோ மாம் ஸ்மரதி நித்யஶ: |
தஸ்யாஹம் ஸுலப[4]: பார்த்த[2], நித்ய யுக்தஸ்யா யோகி[3]ன: || 14

பார்த்த – குந்தீ புத்திரனே!; **ய:** – யார்; **ஸததம்** – எப்போதும்; **அநன்யசேதா:** – வேறு விஷயங்களில் செல்லாத மனத்தை யுடையவனாய்; **மாம்** – என்னை; **நித்யஶ:** – தினந் தோறும்; **ஸ்மரதி** – நினைக்கிறானோ; **நித்ய யுக்தஸ்ய** – தினஶரி உபாயத்தை உடையவனும்; **யோகின:** – பூர்த்தியடைந்த உபாயமுள்ளவனுமான; **தஸ்ய** – அவனுக்கு; **அஹம்** – நான்; **ஸுலப:** – எளிதில் கிடைக்கத்தகுந்தவன் அல்லது மரண சமயத்தில் நினைவுக்கு வருபவன் (ஆவேன்).

அந்த சுலபமான பகவத் பிராப்தியைப் புகழ்கிறார்.

15. मामुपेत्य पुनर्जन्म दुःखालय मशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥

மாமுபேத்ய புனர் ஜன்ம, து[3]க்காலய மஶாச்வதம் |
நாப்னுவந்தி மஹாத்மான:, ஸம்ஸித்தி[4]ம் பரமாம் க[3]தா: || 15

**மஹாத்மான:** – மஹாஞானிகளான பக்தர்கள்; **மாம் உபேத்ய** – என்னை அடைந்து; **யத:** – எதனால்; **பரமாம்** – உத்தமமான; **ஸம்ஸித்திம்** – மோக்ஷத்தை; **கதா:** – அடைந்து விடுகின்றனரோ; **தத:** – (அதனால்) அவர்கள்; **புன:** – மறுபடியும்; **துக்க ஆலயம்** – துக்கத்திற்கு இருப்பிடமானதும்; **அஶாச்வதம்** – நாசமுள்ளதுமான; **ஜன்ம** – ஸ்தூல தேக சம்பந்த மாகிற பிறப்பை; **ந ஆப்னுவந்தி** – அடைவதில்லை.

பிரம்மா முதலிய தேவர்களை அடைந்தவர்களுக்கு மறுபிறப்பு உண்டு, என்னை அடைந்தவர்களுக்கு இல்லை, என்கிறார்.

16. आब्रह्म भवनात् लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥

ஆ ப்[3]ரஹ்ம ப[4]வனாத் லோகா:, புனராவர்த்தினோ Sர்ஜுன |
மாமுபேத்ய து கௌந்தேய, புனர்ஜன்ம ந வித்[3]யதே || 16

**கௌந்தேய** – குந்தீ புத்திரனே!; **அர்ஜுன** – சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!; **ஆ ப்ரஹ்ம* பவனாத்** – பூலோகத் திலுள்ள மேரு மலையிலுள்ள சதகோடி என்ற பிரம்ம தேவரின் இருப்பிடம் ஆரம்பித்துக் கீழேயுள்ள; **லோகா:** – உலகத்து ஜனங்கள்; **புன: ஆவர்த்தின:** – மறுபடியும் பூமிக்கு வந்து, பிறப்பு முதலியவற்றை அடைகிறார்கள். **து** – ஆனால்; **மாம் உபேத்ய** – என்னை அடைந்துள்ளவர்களுக்கு; **புன: ஜன்ம** – மீண்டும் பிறப்பு; **ந வித்யதே** – இல்லை.

குறிப்பு: (1) *ஆப்ரஹ்ம புவனாத் - பிறர்பாடம்.

(2) மேற்படி பிரம்மதேவரின் இருப்பிடத்திற்கு மேலேயுள்ள உலகங்களில் உள்ளவர்களுக்கும் மறுபிறப்பு இல்லை என்று ஏற்படுகிறது. அதாவது ஆங்காங்கு இருப்பது மாத்திரம் போதாது. ஆங்காங்குள்ள பகவானை அடைந்தால்தான் மறுபிறப்பில்லை என்று கருத்து. ஆயினும், அங்குள்ளவர் களுக்கு அம்சத்தால் மறுபிறப்பு உண்டு. வைகுண்டத்தில் அமுக்த ஸ்தானத்திலுள்ள ஜயவிஜயர்களுக்கும், ஸத்ய லோகத்திலுள்ள வாயு பகவானுக்கும் முறையே அம்சத்தினால் பிறப்பும், அவதாரமும், உண்டு என்பது குறிப்பிடத் தகுந்தது.

பகவானை அடைந்தால்தான் மறுபிறப்பில்லை. ஏனெனில் ஸ்ருஷ்டி, பிரளயம் முதலியவற்றைச் செய்யும் ஸாமர்த்தியம் அவருக்குத் தான் உண்டு. மற்றவர்களுக்கில்லை என்பதற்குப் பீடிகையைக் கூறுகிறார்.

17. सहस्त्रयुगपर्यन्तं अहर्यत् ब्रह्मणो विदुः ।
रात्रिं युगसहस्त्रान्तां तेऽहोरात्र विदो जनाः ॥

ஸஹஸ்ரயுக$^3$ பர்யந்தம், அஹர் யத் ப்ரஹ்மணோ விது$^3$: |
ராத்ரிம் யுக$^3$ ஸஹஸ்ராந்தாம், தேऽஹோ ராத்ர விதே$^3$ா ஜனா: || 17

**யத்** - *எது;* **ப்ரஹ்மண:** - *பரபிரம்மமான விஷ்ணுவின்;* **அஹ:** - *பகலோ;* **தத்** - *அதை;* **ஸஹஸ்ரயுக பர்யந்தம்** - *பல யுகங்கள் வரையிலுள்ளதாயும்;* **ராத்ரிம்** - *(அந்த விஷ்ணுவின்) இரவை;* **யுக ஸஹஸ்ராந்தாம்** - *பல யுகங்கள் வரையிலுள்ள தாயும்;* **(யே) ஜனா:** - *(எந்த) ஜனங்கள்;* **விது:** - *அறிகிறார் களோ;* **தே** - *அவர்கள்;* **அஹோராத்ர வித:** - *பகலையும், இரவையும் அறிந்தவர்கள் ஆவர்.*

| | | |
|---|---|---|
| **குறிப்பு:-** | க்ருத யுகம் | **- 17,28,000** வருஷங்கள் |
| | த்ரேதா யுகம் | **- 12,96,000** வருஷங்கள் |
| | த்வாபர யுகம் | **- 8,64,000** வருஷங்கள் |
| | கலி யுகம் | **- 4,32,000** வருஷங்கள் |

இந்த நான்கும் சேர்ந்தது ஒரு சதுர் யுகம். 1000 சதுர் யுகங்கள் பிரம்மதேவரின் ஒரு பகல், 1000 சதுர் யுகங்கள் ஓர் இரவு. அம்மாதிரி 100 வருடங்கள் அவருடைய ஆயுள். அதற்குப் பரம் என்று பெயர். ஏனெனில், அதற்குமேல் எண்ணிக்கை கிடையாது. அதில் பாதிக்கு (50 வருஷங் களுக்கு) பரார்த்தம் எனப்பெயர்.

இப்போது அவருக்கு த்விதீய (இரண்டாவது) பரார்த்தம் நடக்கிறது. அவர் ஆயுள் முடிந்ததும் முக்தியடைவார். பிரம்ம தேவரின் இந்த ஆயுளே விஷ்ணுவின் இமை கொட்டும் காலம் எனப்படுகிறது. ஆகவே, விஷ்ணுவின் இரவு பகல்களின் நேரம் பல யுகங்கள் எனப்பட்டது.

இம்மாதிரி காலத்தைக் கடந்த பகவானுக்கு உலக ரீதியில் சிருஷ்டி முதலியவற்றைச் செய்யும் காலம் பகல் எனவும், யாதும் செய்யாதிருக்கும் காலம் இரவு எனவும் அறியவேண்டும். சிலர் இங்கு பிரம்மதேவரின் இரவு பகல்கள் கூறப்படுகின்றன என்கின்றனர். அது முந்திய சுலோகங்களுக்குப் பொருந்தாமல் விருத்தமாகும்.

18. अव्यक्तात् व्यक्तयः सर्वाः प्रभवन्ति अहरागमे ।
राज्यागमे प्रलीयन्ते तत्रैव अव्यक्तसंज्ञके ॥

அவ்யக்தாத் வ்யக்தயஸ் ஸர்வா:, ப்ரபவந்தி அஹராக[3]மே |
ராத்ர்யாக[3]மே ப்ரலீயந்தே, தத்ரைவ அவ்யக்த ஸம்ஜ்ஞகே || 18

**அஹராகமே** – விஷ்ணுவின் பகல் வரும்போது அதாவது மஹாபிரளயத்தின் கடைசியில்; **அவ்யக்தாத்** – கண்ணுக்குப் புலப்படாததால் அவ்யக்தன் என்ற விஷ்ணுவிடமிருந்து; **ஸர்வா: வ்யக்தய:** – புலப்படும் எல்லா கார்யப் பொருள்களும்; **ப்ரபவந்தி** – உண்டாகின்றன. **ராத்ரி ஆகமே** – இரவு வரும்போது அதாவது பிரளயத்தில்; **அவ்யக்த ஸம்ஜ்ஞகே** – அவ்யக்தன் எனப்படும்; **தத்ர ஏவ** – அந்த விஷ்ணுவிடமே; **ப்ரலீயந்தே** – அடியோடு நாசமடைகின்றன.

பகவானின் மகாமகிமையை விளக்க, இந்த சிருஷ்டி பிரளயங்களுக்கு முடிவேயில்லை என்கிறார்.

19. भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।
रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥

பூ[4]த க்[3]ராமஸ் ஸ ஏவாயம், பூ[4]த்வா பூ[4]த்வா ப்ரலீயதே |
ராத்ர்யாக[3]மே஽வஶ: பார்த்த[2], ப்ரப[4]வதி அஹராக[3]மே || 19

**பார்த்த** – குந்தீ புத்திரனே!; **ஸ: ஏவ** – அதே (முன் உற்பத்தியும் நாசமும் உடையதாகக் கூறப்பட்ட); **அயம்** **பூதக்ராம:** – இந்த சர அசரப் பொருள்களின் கூட்டம்; **அவஶ:** – **அ இதி ப்ரஹ்ம** – பகவானின் வசமாகி; தம்வசமில்லாது; **அஹராகமே** – (விஷ்ணுவின்) பகல் வந்ததும் (ஒவ்வொரு பகலிலும்); **ப்ரபவதி** – பிறக்கிறது; **பூத்வா பூத்வா** – பிறந்து பிறந்து; **ராத்ரி ஆகமே** – இரவு வந்ததும் (ஒவ்வொரு இரவிலும்); (அவச: – விஷ்ணுவின் வசப்பட்டு); **ப்ரலீயதே** – நாசமடைகிறது அல்லது, **பூத்வா பூத்வா** – அடிக்கடி பிறந்து; **ராத்ரி ஆகமே** – இரவு வந்ததும்; **ப்ரலீயதே** – நாசமடைகிறது. **அஹராகமே** – மறுபடியும் பகல் வந்ததும்; **ப்ரபவதி** – பிறக்கிறது.

பகவானுக்கு இரவு பகல்களைக் கூறியதால், உலகத்துப் பொருள்களுக்கு உள்ளதுபோல் அவருக்கு மற்றொருவரிட மிருந்து பிறப்பு, இறப்பு உண்டா? என்றால் 2 சுலோகங்களில் இல்லை என்கிறார்.

20. परस्तस्मात्तु भावोऽन्यो अव्यक्तो व्यक्तात्सनातनः ।
यस्य सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥

பரஸ் தஸ்மாத்து ப⁴ாவோSன்யோ, *அவ்யக்தோ வ்யக்தாத் ஸநாதன:|
யஸ் ஸ ஸர்வேஷு பூ⁴தேஷு, நஶ்யத்ஸு ந விநஶ்யதி || 20

**அவ்யக்த: து** - *புலப்படாத பகவானோ;* **தஸ்மாத் வ்யக்தாத்** - *அந்த (பிறப்பு இறப்புகளையுடைய) பொருள் களின் கூட்டத்தைக் காட்டிலும்;* **அன்ய:** - *வேறானவர்.* **பாவ:** - *ஸ்வதந்திரமாக இருப்பவர்.* **பர:** - *உத்தமர்.* **ஸநாதன:** - *அநாதியானவர், இவ்வித பகவான்;* **ய:** - *யாரோ;* **ஸ:** - *அவர்;* **ஸர்வேஷு பூதேஷு** - *எல்லா பொருள்களும்;* **நஶ்யத்ஸு** - *நாசமடையும்போது;* **ந விநஶ்யதி** - *நாஶமடைவதில்லை.*
***அவ்யக்தாத்** - *பிறர்பாடம்.*

21. अव्यक्तोऽक्षर इत्युक्तः तामाहुः परमां गतिम् ।
यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ॥

அவ்யக்தோSக்ஷர இத்யுக்த:, தாமாஹு: பரமாம் க³திம் |
யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே, தத் த⁴ாம பரமம் மம || 21

**அவ்யக்த:** - *புலப்படாத பகவான்;* **அக்ஷர: இதி** - *எந்த நாசமும் இல்லாதவர் என்று;* **உக்த:** – **தஸ்மாத் அக்ஷரம்** - *(முதலிய சுருதிகளில்) கூறப்படுகிறார்.* **தாம்** - *அவரை;* **பரமாம்** - *உத்தமமான;* **கதிம்** - *அடையுமிடமாக; கூறுகின்றனர். ஏனென்றால்;* **யம்** - *எவரை;* **ப்ராப்ய** - *அடைந்த பிறகு;* **ந நிவர்த்தந்தே** - *(மீண்டும் ஸம்ஸாரத்திற்கு) திரும்பி வருவதில்லையோ;* **தத்** - *அதுதான்;* **மம** - *என்னுடைய;* **பரமம்** - *உத்தமமான;* **தாம** - *ஸ்வரூபம் (ஆகும்).*

**குறிப்பு: (1) தமாஹு: பரமாம் கதிம் - பிறர் பாடம். கதிம், என்ற பெண்பாலையொட்டி தாம் என்று உளது.**

**(2) 2-17ல் நான்குவித நாஶங்கள் பகவானுக்கு இல்லை எனப் பட்டதைக் காண்க.**

**சு. 10-ல், யோகபலம் முதலிய மற்ற ஸாதனங்களுடன் பக்தியைக் கூறியதால், அவைகளும் பக்தியும் சமமானவை என்று தோன்றுமாதலின், பக்திதான் சிறந்த ஸாதனம் என்று கூறுகிறார்.**

22. पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।
यस्यान्तस्स्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥

புருஷஸ் ஸ பர: பார்த்த[2], ப[4]க்த்யா லப்[4]யஸ் த்வநன்யயா |
யஸ்யாந்தஸ் ஸ்த[2]ானி பூ[4]தானி, யேன ஸர்வமித[3]ம் ததம் || 22

**பார்த்த** - *குந்திபுத்திரனே !;* **பூதானி** - *பிராணிகள் யாவும்;* **யஸ்ய** - *எந்த பகவானுடைய;* **அந்த: ஸ்தானி** - *உள்ளே யிருக்கின்றனவோ;* **ஸர்வம் இதம்** - *இந்த உலகம் அனைத்தும்;* **யேன** - *எந்த பகவானால்;* **ததம்** - *வியாபிக்கப்பட்டுள்ளதோ;* **ஸ:** - *அந்த;* **பர: புருஷ:** - *உத்தம புருஷர்;* **அநன்யயா** - *மற்றவர் களுக்கும் பொதுவாயில்லாத (தனிப்பட்ட);* **பக்த்யாது** - *பக்தி யினால்தான்;* **லப்ய:** - *அடையத்தகுந்தவர்.*

குறிப்பு: இங்கு பக்தி சிறந்தது என்று சொல்லாவிடினும், சு. 10ல் கூறிய பக்தியை இங்கு மீண்டும் கூறியதால், அது சிறந்த ஸாதனமாகும். மேலும் 3-3-54 பிரம்ம சூத்திரத்திலும், பக்திரேவபூயஸீ-என்ற சுருதியிலும், கீதை 11-54லும் அவ்வாறே உளது.

சுலோகம் 16ல், பகவானை அடைந்தவர்களுக்கு மறு பிறப்பில்லை; மற்றவர்களுக்கு மறுபிறப்பு உண்டு. எனப்பட்டது. அவ்விருவர்கள் செல்லும் மார்க்கங்களையும், அவற்றின் தேவதைகளையும் மூன்று சுலோகங்களில் (23-25) கூறுகிறார்.

23. यत्र काले तु अनावृत्तिं आवृत्तिं चैव योगिनः ।
प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥

யத்ர காலேது அநாவ்ருத்திம், ஆவ்ருத்திம் சைவ யோகி[3]ன: |
ப்ரயாதா யாந்தி தம் காலம், வக்ஷ்யாமி ப[4]ரதர்ஷப[4] || 23

**பரதர்ஷப** - *பரத வம்சத்துச் சிரேஷ்டனே !;* **யத்ர காலே** - *எந்தக் காலாபிமானி தேவதையின் மார்க்கத்தில்;* **து ச** - *மற்ற தேவர்களின் மார்க்கத்தில்;* **ப்ரயாதா:** - *செல்லும்;* **யோகின:** - *யோகிகள்;* **அநாவ்ருத்திம்** - *மறு பிறப்பின்மை யையும்;* **ஆவ்ருத்திம்ச** - *மறு பிறப்பையும்;* **யாந்தி ஏவ** - *நிச்சயம் அடைகின்றனரோ;* **தம் காலம்** - *அந்தக் காலாபி மானி தேவதைகளையும் (மற்ற தேவதைகளையும்);* **வக்ஷ்யாமி** - *சொல்கிறேன்.*

மறு பிறப்பில்லாத மார்க்கத்தை கூறுகிறார்.

24. अग्निर्ज्योतिरहःशुक्लः षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥

அக்நிர் ஜ்யோதி: அஹஸ்ஶுக்ல:, ஷண்மாஸா உத்தராயணம் |
தத்ர ப்ரயாதா க[3]ச்ச[2]ந்தி, ப்ரஹ்ம ப்ரஹ்மவிதே[3]ா ஜனா: || 24

*(1)* **அக்நி:** – *அப்பெயருள்ள தேவதை; (2)* **ஜ்யோதி:** – *அப்பெயருள்ள தேவதை; (3)* **அஹ:** – *(அபிஜித் (நடுப்பகல்) தேவதையுடன் கூடிய) பகல் அபிமானி தேவதை; (4)* **ஶுக்ல:** – *(பௌர்ணமி தேவதையுடன் கூடிய) சுக்ல பக்ஷாபிமானி தேவதை; (5)* **ஷண்மாஸா:** – *ஆறு உத்தராயண மாதங்களின் அபிமானி தேவதைகள்; (6)* **உத்தராயணம்** – *(விஷு அபிமானி தேவதையுடன் கூடிய) உத்தராயணாபிமானி தேவதை;* **தத்ர** – *இந்த வரிசையில் கூறப்பட்ட தேவதைகளின் மார்க்கத்தில்;* **ப்ரயாதா:** – *செல்லும்;* **ப்ரஹ்ம வித:** – *பகவானையறிந்த;* **ஜனா:** – *ஜனங்கள் (ஞானயோகிகள்)* **ப்ரஹ்ம** – *விஷ்ணுவை;* **கச்சந்தி** – *அடைகின்றனர்.*

குறிப்பு: முதலில் கூறப்பட்ட, அக்நி, ஜ்யோதிஸ் – என்ற இரண்டும், பிரதான அக்நி தேவதையின் புத்திரரான அர்ச்சிஸ் என்பவரின் இரு ரூபங்களே ஆகும். அவ்விருவரும் ஒரே நகரத்தில் வசிக்கின்றனர். பிரம்மசூத்திரபாஷ்யம் 4-3-1.

*அக்நிர் ஜ்யோதிரிதி த்வேதை வார்ச்சிஷஸ் ஸம்ப்ர திஷ்டிதி: |*
*அக்நிம் கத்வா ஜ்யோதிரேதி ப்ரதமம் ப்ரஹ்ம ஸம்வ்ரஜன் ||*

*ஏகஸ்மிம்ஸ்து புரே ஸம்ஸ்தோ, த்விரூபோ அக்நேஸ்ஸுதோ மஹான் ||*

முதலில் இரு ரூபமுள்ள அர்ச்சிஸ் என்ற அக்நி புத்திரனை அடைவதால் இந்த மார்க்கத்திற்கு அர்ச்சிராதி மார்க்கம் அல்லது தேவயானம் அல்லது பிரம்மயானம் என்று பெயர்.

*மறுபிறப்புள்ள மார்க்கத்தைக் கூறுகிறார்.*

25. धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चान्द्रमसं ज्योतिः योगी प्राप्य निवर्तते ॥

தூ[4]மோ ராத்ரிஸ்தத[2]ா க்ருஷ்ண: ஷண்மாஸா த[3]க்ஷிணாயனம் |
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதி:, யோகீ[3] ப்ராப்ய நிவர்த்ததே || 25

*(1)* **தூம** – *புகையின் அபிமானி தேவதை; (2)* **ராத்ரி:** – *இரவின் தேவதை;* **ததா** – *அவ்வாறு; (3)* **க்ருஷ்ண:** – *கிருஷ்ண பக்ஷ தேவதை; (4)* **ஷண்மாஸா:** – *ஆறு தக்ஷிணாயன மாதங்களின் தேவதைகள்; (5)* **தக்ஷிணாயனம்** – *தக்ஷிணாயன தேவதை;* **தத்ர** – *இந்த வரிசையில் கூறப்பட்ட தேவதைகளின் மார்க்கத்தில்; (ப்ரயாத: – செல்லும்);* **யோகீ** – *கர்மயோகி; (*

**சாந்த்ரமஸம் ஜ்யோதி:** – *சந்திரனுடைய பிரகாசத்தை;* **ப்ராப்ய** – *அடைந்து;* **நிவர்த்ததே** – *(ஸம்ஸாரத்திற்கு)* திரும்புகிறான்.

குறிப்பு: 1 சென்ற சுலோகத்தில், ப்ரஹ்மவித: என்ற பதத்தால் ஞானயோகி கூறப்பட்டதால், இங்கு யோகீ என்ற பதம் கர்மயோகியைக் குறிக்கும். மேலும், அது ஞான மார்க்கம், இது கர்ம மார்க்கம் ஆகும். இது தூமாதி மார்க்கம் என்றும், பித்ருயானம் என்றும் கூறப்படும். இந்த இரு மார்க்கங்களும் அவரவர்களின் மரண காலத்தில் ஞாபகத்திற்கு வரும் என்று, பிரம்ம சூத்திரம் 4-2-22ல் கூறப்படுகிறது.

2. உத்தராயணத்தில் இறந்தால் விசேஷ புண்ணியம். அதனால் பீஷ்மாசாரியார் உத்தராயணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் என்பதன் தத்வம்:- பிரம்ம சூத்திரம் 4-2-18, 21; அனைவரின் தேகத்திலுள்ள நாடிகளில் சூரியனின் ஆயிரம் கிரணங்கள் வியாபித்துள்ளன. அவற்றில் தக்ஷிணாயன கிரணங்கள் 500, உத்தராயண கிரணங்கள் 500. இந்த உத்தராயண கிரணங்களின் மூலம் வெளியேறும் ஞானிகளுக்கு மறுபிறப்பில்லை. வெளியேயுள்ள உத்தராயண புண்யகாலம் சேர்ந்தால், பீஷ்மாசாரியார் போன்றவர்களுக்கு அதிக பலன் உண்டு. அவரைக் காட்டிலும் உயர்ந்தவர் களுக்கு அது தேவையில்லை. ஸ்ரீடீகா சாரியார், ஸ்ரீராகவேந்திரர் முதலியோர் தக்ஷிணாயனத்திலும், கிருஷ்ண பக்ஷத்திலும் மறைந்திருக்கின்றனர் என்பதை அறிக.

*அந்த மார்க்கங்களின் விபரத்தை முடிக்கிறார்.*

26. शुक्ल कृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।
एकया याति अनावृत्तिं अन्यया आवर्तते पुनः ॥

ஶுக்ல க்ருஷ்ணே க$^3$தீ ஹ்யேதே, ஜக$^3$த: ஶாச்வதே மதே |
ஏகயா யாதி அநாவ்ருத்திம், அன்யயா ஆவர்த்ததே புன: || 26

**ஏதே** – *இந்த (முற்கூறப்பட்ட);* **ஶுக்ல க்ருஷ்ணே** – *வெண்மையானதும், கருமையானதுமான அதாவது ஞானம், கர்மம் என்ற;* **கதீ** – *இரு மார்க்கங்கள்;* **ஜகத:** – *ஞானயோகி, கர்மயோகிகளாகிற உலகத்திற்கு;* **ஶாச்வதே** – *ஶாச்வத்யௌ – அநாதியானவை, நிரந்தரமானவை என;* **மதே** – *கருதப் படுகின்றன.* **ஏகயா** – *ஒன்றினால் (அர்ச்சிராதி ஞான மார்க்கத்தினால்);* **கத:** – *செல்பவன்;* **அநாவ்ருத்திம்** – *மறுபிறப் பில்லாத மோக்ஷத்தை;* **யாதி** – *அடைகிறான்.* **அன்யயா** – *மற்றதால் (தூமாதி கர்ம மார்க்கத்தினால்);* **கத:** – *செல்பவன்;* **புன: ஆவர்த்ததே** – மறுபடியும் பிறப்புக்குத் திரும்புகிறான்.

*இந்த இரு மார்க்கங்களைக் கூறியதின் பயனை விளக்குகிறார்.*

27. नैते सृती पार्थ जानन् योगी मुह्यति कश्चन।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन॥

நைதே ஸ்ருதீ பார்த்த[2] ஜானன், யோகீ[3] முஹ்யதி கஸ்சன |
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு, யோக[3]யுக்தோ ப[4]வார்ஜுன || 27

**பார்த்த** – குந்தீ புத்திரனே !; **ஏதே** – இந்த (முற்கூறிய) **ஸ்ருதீ** – இரு மார்க்கங்களை; **ஜானன்** – அறியும், அல்லது நேரில் பார்க்கும்; **கஸ்சன** – எந்த; **யோகீ** – அவைகளின் உபாயமான ஞானத்தையும் கர்மங்களையும் அனுஷ்டிப் பவனும் அல்லது அபரோக்ஷ ஞானியும்; **ந முஹ்யதி** – பகவானை மறத்தல் என்ற மோகத்தை அடைவதில்லை. **தஸ்மாத்** – ஆகையால்; **அர்ஜுன** – சுத்தமான கர்மத்தைச் செய்பவனே !; **ஸர்வேஷு காலேஷு** – எல்லா காலங்களிலும்; **யோக யுக்த:** – பகவானின் ஞானத்துடனும், அவரிடம் பக்தி யுடனும், உனக்குரிய கர்மங்களை அனுஷ்டித்தல் என்ற உபாயத்துடனும் கூடினவனாக; **பவ** – இரு.

பலனைக்கூறி இந்த அத்தியாயத்தின் அர்த்தத்தை முடிக்கிறார்.

28. वेदेषु यज्ञेषु तपस्सु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टं।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम्॥

வேதே[3]ஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு சைவ, த[3]ானேஷு யத் புண்யப[2]லம் ப்ரதிஷ்டம் |
அத்யேதி தத் ஸர்வமித[3]ம் விதி[3]த்வா, யோகீ[3] பரம் ஸ்தான முபைதி சாத்[3]யம் || 28

**யோகீ** – ஞானோபாயத்தை உடையவன்; **இதம்** – இதை. அதாவது சுலோகம் 3ல் கூறிய அத்யாத்மம் முதலியவற்றி ன் ஸ்வரூபம், பகவானின் எல்லாவற்றையும் சிருஷ்டிக்கும் தொழில், சு. 24-26ல் கூறிய ஞான கர்ம மார்க்கங்கள் முதலிய வற்றை; **விதித்வா** – அறிந்து, அல்லது, இரு மார்க்கங்களையும் பகவானையும் நேரில் கண்டு; **வேதேஷு** – வேதங்களின் அத்தியயனத்தாலும்; **யஜ்ஞேஷு** – யாகங்களைச் செய்வ தாலும்; **தபஸ்ஸு** – க்ருச்ரம், சாந்திராயணம் முதலிய தவங் களைச் செய்வதாலும்; **தானேஷு ச** – பலவித தானங்களை ஸத் பாத்திரத்தில் கொடுப்பதாலும்; **யத் புண்ய பலம்** – எந்த புண்ணியமான பலன்; **ப்ரதிஷ்டம்** – சாஸ்திரங்களில் கூறப் பட்டுள்ளதோ; **தத்ஸர்வம் ஏவ** – அந்த எல்லாவற்றையுமே;

**அத்யேதி** - தாண்டிவிடுகிறான், அதாவது அதிக பலனை அடைகிறான். அந்த அதிக பலன் யாது? **ஆத்யம்** - முதலாவதும்; **பரம் ச** - உத்தமமுமான; **ஸ்தானம்** - விஷ்ணுவின் இருப்பிடத்தை; **உபைதி** - அடைகிறான்.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे अक्षरब्रह्म योगो नाम अष्टमोऽध्यायः ॥

ஓம்தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம வித்யாயாம், யோக சாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே, அக்ஷர ப்ரஹ்மயோகோ நாம அஷ்டமோ Sத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய அக்ஷர பிரம்மயோகம் என்ற எட்டாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 9
# ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

(34 சுலோகங்கள்)

## ஒன்பதாம் அத்தியாயச் சுருக்கம்

இது வித்யைகளில் சிறந்ததாயும், ரஹஸ்யங்களில் சிரேஷ்டமாயும் உள்ளது. 7-ம் அத்தியாயத்தில் கூறியதுபோல பகவானின் ஸாதாரண மகிமைகளையும், விசேஷ மகிமை களையும் கூறுகிறார். பகவான் எல்லா ஜீவஜடப்பொருள் களிலும் வியாபித்திருக்கிறார். ஆயினும், பரஸ்பரம் ஒட்டாத குண தோஷங்களை உடையவராய் இருக்கிறார். ப்ரகிருதி முதலிய ஸாதனங்கள் இல்லாமலேயே சிருஷ்டிக்க வல்லவ ராயினும், தம் வைபவத்திற்காக அவைகளை உபயோகிக் கிறார்.

இவ்விதமான பகவானைத் தமோயோக்யர்கள் அவ மதிக்கிறார்கள். ஆனால், ஸாத்விகர்கள் அவரைப் பலவித மாகப் போற்றி வழிபடுகிறார்கள். த்ரைவித்யர்கள், விஷ்ணு ஸர்வோத்தமர் என்று அறிந்தும் மற்ற தேவர்களைப் பூஜித்து, அதைக் கடைசியில் பகவானிடம் சமர்ப்பிக்கின்றனர். ஆகவே, அவர்கள் அடிக்கடி பிறப்பு, இறப்புகளை அடைகிறார்கள். ஸுத்த பாகவதர்களோ பகவானையே பூஜித்து மறு பிறப்பில்லாத மோக்ஷத்தை அடைகிறார்கள்.

ரகஸ்யங்களில் சிறந்தது யாது என்றால், இவ்வித மகாமகிமை பொருந்தியவரைப் பூஜிப்பது மிக ஸுலபமானது. ஒரு இலையோ, புஷ்பமோ, பழமோ, சிறிது ஜலமோ அர்ப்பித்தால் போதும். அல்லது நாம் செய்யும் கர்மத்தையோ உண்ணும் உணவையோ, ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் என்றாலும் போதுமானது. அவர் அதற்காக நம் யோக க்ஷேமத்தை வகிக்கிறார். மேலும், அவர் அனைவரிடமும் யோக்யதைக்குச் ஸமமாக, துவேஷிகளை துவேஷத்துடனும் (16-19, 20) அன்பர்களை அன்புடனும் நடத்துகிறார். பகவத் பக்தனுக்கு ஒருபோதும் யாதொரு அனர்த்தமும் கிடையாது.

பகவானை அடைவதற்குப் பக்திதான் சிறந்த ஸாதனமாகும். தேவனோ, தேவாம்சனாக இருப்பவனோ, தன்

யோக்கியதையைக் காட்டிலும் அதிகமாகச் செய்த புண்ணியத்தைப் போக்கிக் கொள்ள, அதிக துராசாரமுள்ளவனாயினும், பக்தியால் மோக்ஷம் அடைகிறான். ஜீவஸ்வரூபத்திலேயே ஆண்களாகவும், உத்தமவர்ணத்தினராகவும் உள்ளவர்கள், பாபத்தினால் ஸ்த்ரீகளாகவும், தாழ்ந்த வர்ணத்தினராகவும் பிறந்து, பக்தியினால் மோக்ஷம் அடையும்போது, ஸ்வரூபத்திலேயே ஸ்த்ரீகளாகவும், தாழ்ந்த வர்ணத்தினராகவும் உள்ளவர்களைப்பற்றிக் கேட்பானேன்! ஆகையால், இந்த அநித்யமான உலகில் பிறந்தவர்கள் பகவானிடம் பக்திபுரியவேண்டும்.

இங்கு 7-30ல் கூறப்பட்ட அதிபூதம் முதலியதுடன் கூடின பகவானின் மகிமையை விஸ்தரிக்கிறார் அதற்கு அடுத்த 8-ம் அத்தியாயமாக அல்லவா இருக்கவேண்டும்? என்றால், ஆம். அதிபூதம் முதலிய பதங்களின் அர்த்தத்தை அர்ஜுனன் வினவியதால், அதற்குப் பதிலளித்து இப்போது விஸ்தரிக்கிறார்.

श्रीभगवानउवाच - ஸ்ரீ பகவான் உவாச - ஸ்ரீ கிருஷ்ணர் அந்த அதியற்புதமான பகவானின் மகிமையைக் கூறுமுன், அதில் சிரத்தையை உண்டாக்க, இரு சுலோகங்களில் அதைப் புகழ்கிறார்.

1. इदं तु ते गुह्यतमं प्रवक्ष्यामि अनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥

இத³ம் து தே கு³ஹ்யதமம், ப்ரவக்ஷ்யாமி அநஸூயவே |
ஜ்ஞானம் விஜ்ஞான ஸஹிதம், யத் ஜ்ஞாத்வா
மோக்ஷ்யஸே Sஶுபாத் || 1

**யத்** - எதை; **ஜ்ஞாத்வா** - அறிந்து; **அஶுபாத்** - அமங்களமான ஸம்ஸாரத்திலிருந்து; **மோக்ஷ்யஸே** - விடுவிக்கப் படுவாயோ; **இதம்** - இந்த (கூறப்போகும்); **குஹ்யதமம்** - மிக ரகஸ்யமான; **விஜ்ஞான ஸஹிதம்** - (சு. 7-2) **விஜ்ஞாதவ்ய ஸஹிதம்** - விசேஷமாக அறியத்தகுந்ததுடன் கூடிய; **ஜ்ஞானம்** - ஜ்ஞாதவ்யம் - அறியத் தகுந்ததை; **அநஸூயவே** - பொறாமை (முதலிய தோஷங்கள்) இல்லாத; **தே** - உனக்கு; **ப்ரவக்ஷ்யாமி** - நன்கு கூறுவேன்.

**குறிப்பு:**

1. ந குணான் குணினோ ஹந்தி, ஸ்தௌதி மந்தகுணானபி |
நான்யதோஷேஷு ரமதே, ஸாSநஸூயா ப்ரகீர்த்திதா ||

குணமுள்ளவனுடைய குணங்களைக் கெடுக்காமலும், அற்ப குணமுள்ளவர்களையும் கூட புகழ்ந்துகொண்டும், மற்றவர்களின் தோஷங்களைக் கூறுவதில் உற்சாகமில்லாமலும் இருப்பது, பொறாமை யின்மையாம்.

2. அர்ஜுனனுக்கு ஏகலைவனிடம் பொறாமை இருந்ததே! என்றால், உத்தமர்களிடம் பொறாமை கொள்ளக்கூடாதே தவிர அதமனான ஏகலைவனிடம் பொறாமைப்பட்டது நியாயமே. ஆகையால், இங்கு பொறாமையில்லாதவன் என்கிறார். ஸ்ரீமத் பாகவதம் 1-1-2ல் நிர் மத்ஸராணாம் ஸதாம் - என்பதின் வியாக்யானத்தில் - அர்ஜுனனுக்கு ஏகலைவனிடம் இருந்ததுபோல, நல்லவர்களுக்கும் பொறாமை, சில இடங்களில் காணப்படுகிறது. அதைக்கண்டு ஒருவன் உத்தமர்களிடம் பொறாமைப் பட்டால், அது கூடாது, என விளக்கப்பட்டுள்ளது.

*உத்தமேஷு ஆத்மன: நித்யம், மாத்ஸர்யம் பரிவர்ஜயேத் |*

3. ஞானத்தை சு. 4 முதல் 15 முடியவும், விஜ்ஞானத்தை சு. 16 முதல் 19 முடியவும் கூறுகிறார்.

2. राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।
प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥

ராஜவித்யா ராஜகு³ஹ்யம், பவித்ர மித³முத்தமம் |
ப்ரத்யக்ஷாவக³மம் த⁴ர்ம்யம், ஸுஸுக²ம் கர்த்து மவ்யயம் || 2

**இதம்** - இது *(கூறப்போவது);* **ராஜவித்யா** - *வித்யைகளில் அரசன் போன்று பிரதானமானது;* **ராஜகுஹ்யம்** - *ரஹஸ்யங் களில் அரசன் போன்று சிறந்தது.* **பவித்ரம்** - *சுத்தப்படுத்துவது, ஆகவே,* **உத்தமம்** - *மேலானது.* **ப்ரத்யக்ஷ அவகமம்** - *ஒவ்வொருவரின் இந்திரியங்களில் பிரேரகராக இருக்கும் பகவானை நேரில் காணும்படி செய்வது, அதாவது அபரோக்ஷ ஞான ஸாதனமானது.* **தர்ம்யம்** - *(தாரகத்வாத் தர்ம: பகவான்) அனைத்தையும் தாங்கும் பகவானின் பரோக்ஷ ஞானத்தைத் தருவது.* **அவ்யயம்** - *நாசமற்ற நித்யமான மோக்ஷபலனைத் தருவது.* **கர்த்தும்** - *ஸம்பாதிப்பதற்கு;* **ஸுஸுகம்** - *மிகவும் எளிது (இதை உனக்குக் கூறுவேன் சு. 1).*

**குறிப்பு:** ராஜா சாஸௌ அல்லது ராஜ்ஞீ சாஸௌ வித்யாச என்று இருவிதமாகவும் விளக்கப்பட்டுள்ளது. பரோக்ஷஞானம். நேரில் காணாத பொருள்களைப் பற்றிய ஞானம்; அபரோக்ஷஞானம். நேரில் காணும் பொருள்களைப் பற்றிய ஞானம் (5-16 பார்க்க).

**அர்ஜுனன்:** - அப்படியாயின் ஒருவர்கூட ஸம்ஸாரியாய் இராமல், அனைவரும் மோக்ஷமடையலாமே! அல்லது இதைச் சம்பாதிக்காதவர் களுக்கு என்ன அநிஷ்டம் ஏற்படும்?

3. अश्रद्दधानाः पुरुषाः धर्म्यस्यास्य परंतप ।
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसार वर्त्मनि ॥

அஶ்ரத்தத⁴ானா: புருஷா:, த⁴ர்ம்யஸ்யாஸ்ய பரம்தப |
அப்ராப்ய நிவர்த்தந்தே, ம்ருத்யு ஸம்ஸார வர்த்மனி || 3

**பரம்தப** – *சத்ருக்களை வாட்டுபவனே!*; ***தர்ம்யஸ்ய** – *அனைத்தையும் தாங்கும் பகவானைப்பற்றிய;* **அஸ்ய – அச்ரத்ததானா:** – *இந்த ஞான மோக்ஷ ஸாதனமாகும் என்ற ஆஸ்திக்ய புத்தி இல்லாத;* **புருஷா:** – *மனிதர்கள்;* **மாம் அப்ராப்ய** – *என்னை அடையாமல்;* **ம்ருத்யுஸம்ஸார வர்த்மனி** – *மரணத்தைத் தரும் ஸம்ஸார மார்க்கத்தில்;* **நிவர்த்தந்தே** – *நிதராம் வர்த்தந்தே – ஸ்திரமாய் இருக்கின்றனர். (திரும்பி வருகின்றனர் என்ற அர்த்தமல்ல).*

குறிப்பு: *தர்மஸ்ய – பிறர் பாடம்

சுலோகம் 1 முதல் 3 வரை கூறிய ஞானத்தை (அறியத்தகுந்ததை) 12 சுலோகங்களில் கூறுகிறார்.

4. मया ततमिदं सर्वं जगदव्यक्त मूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥

மயா ததமித³ம் ஸர்வம், ஜக³த³வ்யக்த மூர்த்தினா |
மத்ஸ்த³ானி ஸர்வ பூ³தானி, ந சாஹம் தேஷ்வ வஸ்தி³த: || 4

**இதம்** – *இந்த;* **ஸர்வம்** – *எல்லா சராசரப் பொருள்கள் அடங்கிய;* **ஜகத்** – *உலகம்;* **அவ்யக்தமூர்த்தினா** – *கண் களுக்குப் புலப்படாத தேகமுடைய;* **மயா** – *என்னால்;* **ததம்** – *வியாபிக்கப்பட்டுள்ளது. (உலகம் உமக்கு ஆதாரமாய் இருக் கிறதா? இல்லை).* **ஸர்வபூதானி** – *எல்லா ஜீவர்களும், ஜடப் பொருள்களும்;* **மத்ஸ்தானி** – *என்னிடம் உள்ளன, அதாவது என்னை ஆதாரமாகக் கொண்டுள்ளன.* **ச** – *மேலும்;* **அஹம்** – *நான்;* **தேஷு** – *அவைகளிடம்;* **ந அவஸ்தித:** – *(அவற்றை ஆதாரமாகக் கொண்டோ, அண்டிப் பிழைத்துக்கொண்டோ) இல்லை.*

குறிப்பு : நாம் பூமியில் உள்ளோம். பூமியின் குளிர்ச்சியினால் நாம் குளிர்ந்திருக்கிறோம் என்ற ஞானம் நமக்கு இருப்பதுபோல, பகவானிடம் நாமிருக்கிறோம் என்ற ஞானமில்லையே! அவ்வாறே உஷ்ணம், குளிர், இவற்றால் பூமி சூடாகிறது, குளிர்கிறது. அதுபோல நம் குணங்களும் பகவானிடம் ஒட்டுமே? என்றால் பதிலளிக்கிறார். (13-33 பார்க்க)

5. न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृत् न च भूतस्थो ममात्मा भूतभावनः ।।

ந ச மத்ஸ்த2ானி பூ4தானி, பஶ்ய மே யோக3மைஶ்வரம் |
பூ4தப்4ருத் ந ச பூ4தஸ்தே2ா, மமாத்மா பூ4தப4ாவன: || 5

**பூதானி** - *அந்த ஜீவ ஜடப்பொருள்கள்;* **ந மத்ஸ்தானி** - *அவ்வாறு என்னிடமில்லை. (அதாவது ஸ்பர்சத்தால் என்னை உணர்ந்து, பரஸ்பரம் ஒட்டும் குணங்களுடையவை களாக இல்லை. ஏனெனில், எனக்குப் ப்ராகிருதமான ஸ்பர்ஶம் முதலியன இல்லை. அஶப்தம் அஸ்பர்சம் அரூபம்). ஆதாரமாயினும், ஆதாரமாய் இல்லாமல் இருப்பது எவ்வாறு பொருந்தும்?* **மே** - *என்னுடைய;* **ஐஶ்வரம்** - *அவ்வித தெய்வத் தன்மையுள்ள;* **யோகம்** - *ஸாமர்த்தியத்தை;* **பஶ்ய** - *பார். (ஜீவர்களின் தேகம் வேறு, ஜீவர்கள் வேறு. ஆனால் என் தேகமும் நானும் ஒன்றே என்கிறார்).* **மம** - *என்னுடைய;* **பூதபாவன:** - *ஜீவஜடங்களைச் சிருஷ்டிக்கும்;* **ஆத்மா** - *தேகம்;* **பூதப்ருத்** - *(என் போலவே) ஜீவஜடங்களைத் தாங்குவது. ஆனால்,* **பூதஸ்த: ந** - *ஜீவஜடங்களை ஆதாரமாகக்கொண்டு இல்லை.*

குறிப்பு: 1. சேதனன் 2. தேகம் என்ற இரு அர்த்தங்களுடைய ஆத்மா என்ற பதத்தினால், பகவானுடைய தேகம் ஜடமல்ல, பகவானைப் போன்றே சேதனமானது என்று அறிவிக்கிறார். பகவானின் ஒவ்வொரு அவயமும் நகம், கூந்தல் முதலியவைகளும் பகவானும் ஒன்றே. பகவானுடைய சக்தியை உடையவை. பகவானின் கருமையான கூந்தல் (கிருஷ்ண கேசம்) தான் ஸ்ரீ கிருஷ்ணாவதாரமாகும். அதன் சக்தியை நாம் அறிந்துள்ளோம். (13-14 பார்க்க)

*கேசஸ்ய ப்ரஸ்மதா த்ருஷ்டா, கேசவஸ்யாபி கிம் ந ஸா |*

அதனால் ஸ்ரீ மத்வர் ஸ்ரீ நரசிம்மரின் நகத்தையே இரு சுலோகங்களில் துதித்திருக்கிறார் (நரசிம்ம நகஸ்தோத்திரம்)

ஆதாரமாயினும், ஆதாரமாய் இல்லாதிருப்பதற்குப் புரியும்படியான உதாரணத்தைக் காட்டுகிறார்.

6. यथाऽऽकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ।।

யத2ாSSகாஶஸ்தி2தோ நித்யம், வாயுஸ் ஸர்வத்ரகே3ா மஹான் |
தத2ா ஸர்வாணி பூ4தானி, மத்ஸ்தானீத்யுபத4ாரய || 6

**யதா** - *எப்படி;* **நித்யம்** - *எப்போதும்;* **ஆகாஶ ஸ்தித:** - *Space என்ற இடைவெளியிலுள்ள;* **மஹான் வாயு:** - *பெருங் காற்று;* **ஸர்வத்ரக: அபி** - *குளிர்ந்த, வாசனையுள்ள, எல்லா இடங்களில் இருந்தபோதிலும்; (குளிர், வாசனை முதலிய வற்றை அடையாமலிருக்கிறதோ);* **ததா** - *அப்படியே;* **ஸர்வாணி பூதானி** - *எல்லா ஜீவ ஜடப்பொருள்களும்;* **மத்ஸ்தானி** - *என்னிடம் பரஸ்பரம் ஒட்டாத குண தோஷங் களையுடையவைகள்;* **இதி** - *என்று;* **உபதாரய** - *தீர்மானமாக அறிவாயாக. (13-33 பார்க்க)*

குறிப்பு: காற்றின் குளிர்ச்சியும், வாசனையும், உண்மையில் அது அடித்துக்கொண்டுவரும், ஜலம் புஷ்பம் முதலிய பொருள்களின் சூக்ஷ்மமான அம்சங்களுடைய வையே. காற்றினுடையதல்ல. மேலும், ஆகாயத்தின் நீலரூபம் காற்றில் ஒட்டுவதில்லை. காற்றுக்கு ரூபம் கிடையாது. காற்றின் ஸ்பர்சம் ஆகாயத்தில் ஒட்டுவதில்லை. ஆகாயத்திற்கு ஸ்பர்சம் கிடையாது.

ஸ்ரீ ஹரி எங்கும் உள்ளவர். எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் இருப்பவர், என்ற இரு அறியத்தகுந்த விஷயங் களைக் கூறி பிரளயம் முதலியவற்றிற்கும் காரணமானவர் என்கிறார்.

7. सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।
कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥

ஸர்வ பூ[4]தானி கௌந்தேய, ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் |
கல்பக்ஷயே புனஸ்தானி, கல்பாதெ[3]ள விஸ்ருஜாம்யஹம் || 7

**கௌந்தேய** - *குந்தீ புத்திரனே!;* **ஸர்வ பூதானி** - *எல்லா ஜீவ ஜடப்பொருள்களும்;* **கல்பக்ஷயே** - *பிரளய காலத்தில்;* **மாமிகாம்** - *என்வசமான;* **ப்ரக்ருதிம்** - *முக்குணமுள்ள ஜட பிரகிருதியை;* **யாந்தி** - *அடைகின்றன (அங்கு நசிக்கின்றன).* **அஹம்** - *நான்;* **புன:** - *மறுபடியும்;* **தானி** - *அவைகளை;* **கல்பஆதௌ** - *சிருஷ்டி காலத்தில்;* **விஸ்ருஜாமி** - *விசேஷ மாகவும், பலவிதமாகவும் சிருஷ்டிக்கிறேன்.*

குறிப்பு: கல்பம் - 1000 சதுர்யுகம்கொண்ட பிரம்மதேவரின் ஒரு பகல் என்று அர்த்தம். அவருடைய 100 வயதாகிய ஆயுளுக்கும் கல்பம் எனப்பெயர். (8-17 குறிப்பு பார்க்க).

சிருஷ்டியில் பிரகிருதியைக் கூறாததால், காரணப் பொருள்கள் இல்லாமலே சிருஷ்டிக்கிறார்? என்றால் கூறுகிறார்.

8. प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनःपुनः ।
भूतग्राममिमं कृत्स्नं अवशं प्रकृतेर्वशात् ॥

ப்ரக்ருதிம் ஸ்வாம் அவஷ்டப்[4]ய, விஸ்ருஜாமி புன: புன: |
பூ[4]தக்[3]ராமமிமம் க்ருத்ஸ்னம், அவஶம் ப்ரக்ருதேர் வஶாத் || 8

**ஸ்வாம்** – எனக்கு வசமான; **ப்ரக்ருதிம்** – முக்குணமுள்ள ஜட பிரகிருதியை; **அவஷ்டப்ய** – உபாதான காரணமாகக் கொண்டு; **ப்ரக்ருதே: வஶாத்** – அந்தப் பிரகிருதியின் அதீனமாய் இருப்பதால்; **அவஶம்** – தம்வஶம் இல்லாத அல்லது அ – என்ற விஷ்ணுவான என்வஶமான; **இமம்** – இந்த; **க்ருத்ஸ்னம்** – எல்லா; **பூதக்ராமம்** – பொருள்களின் கூட்டத்தை; **புன: புன:** – திருப்பித்திருப்பி; **விஸ்ருஜாமி** – விஶேஷமாகவும், பலவித மாகவும் படைக்கிறேன்.

குறிப்பு: ஜடப்ரகிருதி முதலிய காரணப் பொருள்களைக் கொள்வது. அவைகள் இல்லாவிடில் சிருஷ்டிப்பதற்குச் ஸாமர்த்யம் இல்லாததால் அல்ல விளையாட்டாகவும், தம் ஐசுவரியத்தை வெளிப்படுத்தவும்தான். த்ரௌபதியின் மான ஸம்ரக்ஷண ஸமயத்தில் தரி, நூல் முதலிய எவ்வித காரணப் பொருள் இல்லாமலேயே கோடிக்கணக்கான புடவைகளைச் சிருஷ்டித்துத் தந்தார் அல்லவா!

*லீலயா தண்ட மாலம்ப்ய, கச்சன் கிம் பங்குதாம் வ்ரஜேத் |*

நடக்கும் சக்தியுள்ள பிரபுக்கள் விளையாட்டாகவும், தம் ஐசுவரியத்தை வெளிப்படுத்தவும் (Walking Stick) கோலை ஊன்றிச் சென்றால் நொண்டியானவர்களா! பிரம்ம சூத்திரம் 2-1-15 பிரகிருதி முதலியவைகளின் காரணமாய் இருக்கும் சக்தியும் பகவத்வஶமே.

அர்ஜுனன்: – பலவித ஶ்ருஷ்டிகளைச் செய்யும் உமக்கு, ஜீவனைப்போன்று, அந்தக் கர்மங்களினால் பந்தம் உண்டா?

9. न च मां तानि कर्माणि निबध्नन्ति धनञ्जय ।
उदासीनवत् आसीनं असक्तं तेषु कर्मसु ॥

ந ச மாம் தானி கர்மாணி, நிப[3]த்[4]னந்தி த[4]னஞ்ஜய |
உத[3]ாஸீனவத் ஆஸீனம், அஸக்தம் தேஷு கர்மஸு || 9

**தனஞ்ஜய** – ராஜஸூயத்திற்காகச் செல்வத்தை ஜயித்தவனே!; **தானி கர்மாணி** – சிருஷ்டி முதலிய அந்த கர்மங்கள்; **உதாஸீனவத்** – நடுநிலைமை வகிப்பவன்போல; **ஆஸீனம்** – இருக்கும்; அதாவது, **தேஷு கர்மஸு** – அந்தக் காரியங்களில்; **அஸக்தம்** – பற்று அல்லது சிரமம் இல்லாத; **மாம்** – என்னை; **ந நிபத்னந்தி** – கட்டுப்படுத்தா.

குறிப்பு: ஜீவர்கள் கர்மத்தின் பலன் தமக்கு வேண்டும் என்ற பற்றுதலுடனும், ஆயாஸத்துடனும் செய்கிறார்கள். ஆகவே, அவர்களுக்கு அந்தக்கர்மத்தினால் பந்தமுண்டு.

*மமேதி பத்யதே ஜந்து:, ந மமேதி ப்ரமுச்யதே |*

என்னுடையது என்றால் கட்டுப்படுகிறான். என்னுடையதல்ல என்றால் விடுபடுகிறான். பகவான் அவ்வாறு பற்றுதலுடனும் ஆயாஸத்துடனும் கர்மங்களைச் செய்வதில்லை. அதனால் அவருக்கு கர்மபந்தம் இல்லை.

சுலோகம் 8-ல் பிரகிருதியைக் கொண்டு சிருஷ்டிப்பதாகக் கூறினார். சுலோகம் 9இல் உதாஸீனனாக இருப்பதாகக் கூறினார். அதனால் பகவான் யாதும் செய்யாமல், பிரகிருதியே ஸ்வதந்திரமாக உலகத்தைச் சிருஷ்டிக்கிறதாகத் தோன்று வதைப் போக்கி, தன் ஸ்வாதந்தர்யத்தை தெளிவாக்குகிறார்.

10. मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनाऽनेन कौन्तेय जगत् विपरिवर्तते ॥

மயா Sத்[4]யக்ஷேண ப்ரக்ருதி:, ஸூயதே ஸசராசரம் |
ஹேதுனா Sநேன கௌந்தேய, ஜகத் விபரி வர்த்ததே || 10

**கௌந்தேய** – குந்தீ புத்திரனே !; **அத்யக்ஷேண** – பிரகிருதி சிருஷ்டிப்பதை நேரில் காண்பவனும், அதைத் தூண்டும் காரியத்தைச் செய்பவனுமான; அல்லது அதன் தலைவனான; **மயா** – என்னால்; **ப்ரக்ருதி:** – ஜடபிரகிருதியானது; **ஸசராசரம்** – அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் இவற்றுடன் கூடிய; **ஜகத்** – உலகத்தை; **ஸூயதே** – உண்டு பண்ணுகிறது. **அநேன ஹேதுனா** – (என்னால், தூண்டப்படும் பிரகிருதி, தூண்டும் நான் ஆகிய) இந்த இரு காரணங் களினாலும்; **ஜகத்** – உலகம்; **விபரிவர்த்ததே** – விசேஷமாக திரும்பித் திரும்பி உண்டாகிறது.

**குறிப்பு :** நீரே உலகத்தின் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றைச் செய்பவராயின், ஏன் சிலர் உம்மை அவமதிக்கிறார்கள்? அவர்களுக்கு அநர்த்தம் இல்லையேல், நீர் ஸர்வ கர்த்தா அல்ல, என்றால் 2 சுலோகங்களில் பதில் தருகிறார்.

11. अवजानन्ति मां मूढाः मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥

அவஜானந்தி மாம் மூட[4]ா:, மானுஷீம் தனுமாஶ்ரிதம் |
பரம் ப[4]ாவமஜானந்த:, மம பூ[4]த மஹேஶ்வரம் || 11

**மூடா:** – தாமஸர்கள்; **மம** – என்னுடைய; **பூத மஹேஶ்வரம்** – **பூத** – எல்லாக் காலங்களிலிருப்பதும், **மஹா** – எல்லா தேசங்களில் வியாபித்துள்ளதும்; **ஈஶ்வரம்** – எல்லா

குணங்களினால் நிறைந்ததும்; **பரம்** - உத்தமுமான; **பாவம்** - உண்மையான ஸ்வரூபத்தை; **அஜானந்த:** - அறியாதவர் களாய்; **மானுஷீம் தனும் ஆச்ரிதம்** - மனித தேகத்தை யுடையவன், என்ற விபரீத ஞானத்திற்கு விஷயமான, அல்லது மனித தேகம்போல் அவர்களுக்குத் தோன்றும் தேகத்தைப் படைத்த; **மாம்** - என்னை; **அவஜானந்தி** - அவம தயா ஜானந்தி - தாழ்ந்தவனாக அறிகிறார்கள்.

குறிப்பு: சிலர் விபரீத ஞானமுள்ள தாமஸர்களானதால் பகவானை அவமதிக்கிறார்கள். அதாவது (1) விஷ்ணுவும், லக்ஷ்மி, பிரம்மா, சிவன் முதலியோரும், ஸமமானவர்கள் (2) விஷ்ணுவும் அவர்களும் வேறல்ல ஒன்றே. (3) விஷ்ணுவின் அவதாரங்களில் தோஷமுண்டு. (4) விஷ்ணு பூர்ணரல்ல (5) அவருக்கும் அவருடைய தேகம், குணங்கள், ரூபங்கள் முதலியவற்றிற்கும் பேதமுண்டு என்று அறிவது அவமதிப்பாகும்.

அவர்களுக்கு அனர்த்தங்களும் உண்டு என்கிறார்.

12. मोघाशा मोघकर्माणः मोघज्ञाना विचेतसः ।
राक्षसीं आसुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥

மோக[4]ாஶா: மோக[4]கர்மாண:, மோக[4]ஜ்ஞானா: விசேதஸ: |
ராக்ஷஸீம் ஆஸுரீம்சைவ, ப்ரக்ருதிம் மோஹினீம் ஶ்ரிதா: || 12

**மோகஆஶா:** - வீணான ஆசையுள்ளவர்கள். அதாவது அவர்கள் விரும்பும் எவ்வித மறுமைப்பயனும் கிடைக்காது. **மோககர்மாண:** - அவர்கள் செய்யும் யாகம் முதலிய எல்லா கர்மங்களும் வீணே. **மோகஜ்ஞானா:** - அவர்களின் தத்வ ஞானமும் வீணே. அதாவது பிரம்ம சூத்திரம் 3-4-34ல் கூறிய படி, மற்ற பிரம்மாதி தேவர்களிடம் செய்யும் பக்தி முதலிய உபாயங்களினால்கூட தத்வஞானம் உண்டாகாது. **விசேதஸ:** - பகவானிடம் விருத்தமான மனதைப் படைத்தவர்கள். அவர்களின் த்வேஷத்தின் மூலகாரணம் யாது? **மோஹனீம்** - விபரீத ஞானத்தையுண்டுபண்ணும்; **ராக்ஷஸீம்** - ராக்ஷஸர் களுக்குரிய ஹிம்சித்தல் முதலியவற்றுடன் கூடியதும்; **ஆஸுரீம்ச** - அஸுரர்களுக்குரிய காமம், இறுமாப்பு முதலிய வற்றுடன் கூடியதுமான; **ப்ரக்ருதிம்** - ஸ்வபாவத்தை; **ச்ரிதா:** - அடைந்துள்ளார்கள்.

குறிப்பு : பகவான் தோஷமுள்ளவராயிருப்பதால்தான் அவர்கள் அவமதிக்கிறார்கள் என்று ஏன் கூறக்கூடாது? என்றால், அப்படி இருந்தால், தேவஸ்வபாவமுள்ள ஸாத்விகர்களும் அவமதிப்பார்கள் அல்லவா! ஆனால் அவர்கள் அவமதிப்பதில்லையே! என்கிறார்.

13. महात्मानास्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः ।
भजन्ति अनन्यमनसः ज्ञात्वा भूतादिमव्ययम् ॥

மஹாத்மானஸ்து மாம் பார்த்த[2], தை[3]வீம் ப்ரக்ருதி மாஶ்ரிதா: |
ப[4]ஜந்தி அநன்யமனஸ:, ஜ்ஞாத்வா பூ[4]தாதி[3] மவ்யயம் || 13

**பார்த்த** - *குந்தீ புத்திரனே!;* **தைவீம்** - *முக்தியோக்யர்களான உத்தம ஜீவர்களைச் சார்ந்த;* **ப்ரக்ருதிம்** - *ஸ்வபாவத்தை;* **ஆச்ரிதா:** - *தாங்கியுள்ள;* **மஹாத்மான: து** - *பெரிய மனது படைத்தவர்களோ;* **பூதஆதிம்** - *ஜீவஜடப்பொருள்களுக்குக் காரணமானவரும்;* **அவ்பயம்** - *(2-17ல் கூறிய நான்கு விதமான) நாஶமற்றவருமான;* **மாம்** - *என்னை;* **ஜ்ஞாத்வா** - *அறிந்து;* **அநன்யமனஸ:** - *வேறு விஷயங்களில் செல்லாத மனத்தினர்களாய், என்னிடம் ஏகாக்ரசித்தத்துடன்;* **மாம்** - *என்னை;* **பஜந்தி** - *ஸேவிக்கிறார்கள்.*

குறிப்பு: பகவானிடம் தோஷமில்லை. தாமஸர்களிடமே தோஷமுள்ளது.

அவர்கள் சேவிக்கும் விதத்தை இரு சுலோகங்களில் விளக்குகிறார்.

14. सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।
नमस्यन्तश्च मां भक्तया नित्ययुक्ताः उपासते ॥

ஸததம் கீர்த்தயந்தோ மாம், யதந்தஸ்ச த்[3]ருட[4]வ்ரதா: |
நமஸ்யந்தஸ்ச மாம் ப[4]க்த்யா, நித்யயுக்தா: உபாஸதே || 14

**மாம்** - *என்னை;* **ஸததம்** - *எப்பொழுதும், அல்லது* **ததம் வீணாதிகம் வாத்யம்** - *வீணை முதலிய வாத்தியங்களுடனும்;* **கீர்த்தயந்த:** - *கிருஷ்ணா! கிருஷ்ணா! என்று பலவாறு சொல்லிக்கொண்டும், பாடிக்கொண்டும்;* **யதந்த: ச** - *(என் பூஜை முதலியவைகளில்) முயன்றுகொண்டும்;* **த்ருடவ்ரதா:** - *உபவாஶம் முதலிய உறுதியான நியமங்களையும், விரதங்களையும் உடையவர்களாயும்;* **நித்யயுக்தா:** - *எப்போதும் என்னிடம் மனதைச் செலுத்தியவர்களாயும், அல்லது கர்மம் ஞானம் என்ற உபாயத்தையுடையவர்களாயும்;* **பக்த்யா** - *பக்தியோடு;* **நமஸ்யந்த: ச** - *நமஸ்கரிப்பவர்களாயும்;* **மாம்** - *என்னை;* **உபாஸதே** - *உபாஸிக்கிறார்கள்.*

15. ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मां उपासते ।
एकत्वेन पृथक्तवेन बहुधा विश्वतोमुखम् ॥

ஜ்ஞான யஜ்ஞேன சாப்யன்யே, யஜந்தோ மாம் உபாஸதே |
ஏகத்வேன ப்ருதக்த்வேன, ப³ஹுதா⁴ விஶ்வதோ முக²ம் || 15

**அன்யே அபிச** - வேறு மகாத்மாக்களும்கூட; **ஜ்ஞான யஜ்ஞேன** - ஞானம் என்ற யாகத்தினால்; **மாம்** - என்னை; **யஜந்த:** - பூஜிப்பவர்களாய்; **மாம் உபாஸதே** - என்னை உபாசிக்கிறார்கள். அதாவது பகவத்குணங்களின் சிரவணம், மனனம், தியானம் முதலியவற்றைச் செய்துகொண்டும், பிறருக்கு உபதேஶம் செய்துகொண்டும் எப்பொழுதும் பகவன் மகிமையின் ஞானத்தில் ஈடுபட்டுள்ளனர். **பஹுதா** - பலர்; **விஶ்வதோமுகம்** - எல்லாப் பொருள்களிலும், முகம் முதலிய எல்லா அவயவங்களுடன் கூடிய; **மாம்** - என்னை; **ஏகத்வேன** - என் ரூபம் முதலியவைகளில் பேதமில்லாத ஒருவனாகவும், நாராயணர் என்ற ஒரு மூர்த்தியாகவும்; **ப்ருதக்த்வேன** - உலக மனைத்தைக் காட்டிலும் வேறானவனாகவும், வாஸுதேவர், ஸங்கர்ஷணர், பிரத்யும்னர், அநிருத்தர் என்ற நான்கு மூர்த்தி களாகவும், நாராயணரைச் சேர்த்து, ஐந்து மூர்த்திகளாகவும்; **பஹுதா** - வெண்மை, கருமை, மஞ்சள் முதலிய நிறங் களுடையவனாகவும், **விஶ்வதோ முகம்** - கேஶவர் முதல் தாமோதரர் வரையில் உள்ள 12 மூர்த்திகளாகவும் அல்லது ஸ்ரீ கிருஷ்ணர் வரையில் உள்ள 24 மூர்த்திகளாகவும் (4-25 முதல் 30 முடிய கூறியவாறும்); **மாம்** - என்னை; **உபாஸதே** - உபாசிக்கின்றனர்.

குறிப்பு: இன்னும் மத்ஸ்யம் முதலிய 10 மூர்த்திகள்; கலச பூஜையில், அஜன் முதலிய 100 மூர்த்திகள்; விசுவன் முதலிய 1000 மூர்த்திகள்; அஜிதன் முதலிய அனந்த மூர்த்திகள் உண்டு.

சுலோகம் 1-ல் கூறிய ஜ்ஞானம் என்பதை இதுவரை நிரூபித்து, விஜ்ஞானம் என்பதை (16 முதல் 19 வரை) நான்கு சுலோகங்களில் கூறுகிறார். இது 7-8ல் கூறியதுபோல. 10ம் அத்தியாயத்து விபூதிகளின் சுருக்கம் எனலாம்.

16. अहं क्रतुः अहं यज्ञः स्वधाऽहं अहमौषधम् ।
मन्त्रोऽहं अहमेवाज्यं अहमग्निः अहं हुतम् ॥

அஹம் க்ரது: அஹம் யஜ்ஞ:, ஸ்வத⁴ாSஹம் அஹமௌஷத⁴ம் |
மந்த்ரோSஹம் அஹமேவாஜ்யம், அஹமக்நி: அஹம் ஹுதம் || 16

**அஹம்** - நான்; **க்ரது:** - தீக்ஷை, ப்ராயணீயம், உதயனீயம், ஸவனத்ரயம், அவபிருதம் ஆகிய கர்மங்களாகவிருக்கிறேன். அதாவது ஐக்யமல்ல. 7-8 முதல் 11ல் கூறியபடி, அவைகளைப்

ப்ரேரிப்பதாலும், அவை என்வஶமானதாலும் நான் ஹவிஸ் களைப் புசிப்பதாலும், க்ரது என்ற பெயருள்ளவனாய் இருக் கிறேன் *(4-24 பார்க்க)*. **அஹம்** - நான்; **யஜ்ஞ:** - உத்திச்ய தேவான் த்ரவ்யாணாம், த்யாகோ யஜ்ஞ இதீரித: - தேவர்களைக் கருதி, நெய் முதலிய பொருள்களை அக்நியில் போடும் முக்கிய கர்மமாக இருக்கிறேன். அது என்வஶமானது. (யத் ஜானாதி இதி யஜ்ஞ:) எந்தப் பொருளையும் அறிவதால், யஜ்ஞன் என்ற பெயருள்ளவன். **அஹம் ஸ்வதா** - நான், பித்ருக்களுக்குத் தரும் எள் ஜலம் முதலியனவாக உளேன். அவை என் வஶமானவை (ஸ்வம் தத்தே) என்னை நானே தரிப்பவன். ஆனதால் ஸ்வதா என்ற பெயர் உள்ளவன். **அஹம் ஔஷதம்** - நான் மருந்தாகவுளேன். அது என்வசமானது. (உஷா: தீயந்தே அஸ்மின்) தாப த்ரயங்களால் எரிக்கப் படுபவர்களுக்கு நிதியாக இருப்பதால், ஔஷதம் என்ற பெயருள்ளவன். **அஹம் மந்த்ர:** - நான் மந்திரமாகவுளேன். அது என்வஶமானது. (மானாத் த்ராதி) என்னை அறிவதால் காப்பாற்றுகிறேன், ஆனதால் மந்த்ர: என்ற பெயருள்ளவன். **அஹம் ஏவ ஆஜ்யம்** - நானே நெய்யாகவுளேன். அது என்வஶமானது (ஆ ஜ்யாய ஸ்த்வாத்) எல்லோரைக் காட்டிலும் உயர்ந்தவனானதால், ஆஜ்யம் என்ற பெயருள்ளவன். **அஹம் அக்நி:** - நான் நெருப்பாக உளேன். அது என்வஶமானது. (அகம் நயதி) தானே செல்லும் ஶக்தியற்ற உலகைச் செலுத்து வதால், அக்நி என்ற பெயருள்ளவன் *(11-39)*. **அஹம் ஹுதம்** - நான் ஹோமம் செய்யப்படும் பொருளாகவுளேன். அது என்வசமானது. (ஆஹூதத்வாத்) யாகங்களில் கூப்பிடப் படுவதால், ஹுதம் என்ற பெயருள்ளவன்.

17. पिताऽहमस्य जगतः माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोंकारः ऋक् साम यजुरेव च ॥

பிதாऽஹமஸ்ய ஜக³த:, மாதா த⁴ாதா பிதாமஹ: |
வேத்³யம் பவித்ரம் ஓங்கார:, ரிக் ஸாம யஜுரேவ ச || 17

**அஹம்** - நான்; **அஸ்ய ஜகத:** - இந்த உலகத்திற்கு; **பிதா** - (உண்டுபண்ணும்) தந்தை (அஹம்) **மாதா** - (நான்) தாய். (அஹம்) **தாதா** - (நான்) போஷிப்பவன். (அஹம்) **பிதாமஹ:** (பிது: மஹான்) - (நான்) பாட்டனார். பூஜிக்கத் தகுந்தவன். (அஹம்) **வேத்யம்** - (நான்) அறியத் தகுந்த வஸ்து. (அஹம்) **பவித்ரம்** - (நான்) சுத்தமான வஸ்து (அஹம்) **ஓங்கார:** - (நான்) ஓம் என்று

கூப்பிடப்படுவதால் ஓங்காரமாகியுள்ளேன். *(அஹம்)* **ரிக்** - *(நான்)* ரிக்வேதம் அதனால் அறியப்படுபவன், *(அர்ச்யத்வாத் ரிக்)* பூஜிக்கத் தகுந்தவன், ஆனதால் ரிக் என்ற பெயருள்ளவன். *(அஹம்)* **ஸாம** - *(நான்)* ஸாமவேதம் அதனால் அறியப்படுபவன். எல்லா ரூபங்களிலும் ஸமமாக விருப்பதால் ஸாம என்ற பெயருள்ளவன். *(அஹம்)* **ஏவ யஜு: ச** - *(நானே)* யஜுர் வேதம் அதனால் அறியப்படுபவன். *(யாஜ்யத்வாத்)* யாகத்தினால் பூஜிக்கத்தகுந்தவன், ஆனதால் யஜு: என்ற பெயருள்ளவன்.

18. गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥

க[3]திர் ப[4]ர்த்தா ப்ரபு[4]ஸ்ஸாக்ஷீ, நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் |
ப்ரப[4]வ: ப்ரளயஸ் ஸ்த[2]ானம், நித[4]ானம் பீ[3]ஜமவ்யயம் || 18

'நான்' என்று ஒவ்வொரு பதத்துடனும் சேர்க்க வேண்டும்.

**கதி:** *(ஞானார்த்த:)* - முக்தியை விரும்புகிறவர்களால் அறியத் தகுந்தவன். **பர்த்தா** - போஷகன் **ப்ரபு:** - யஜமானன். **ஸாக்ஷீ** - நேரடியாக எல்லாவற்றையும் பார்ப்பவன். **நிவாஸ:** - ஆசிரயன். **சரணம்** - *(ஸம்ஸாரத்தைக் கண்டு பயந்தவர் களைக்)* காப்பவன். அதாவது முக்தர்களின் ஆசிரயன். **ஸுஹ்ருத்** - *(6-9)* பிரதி உபகாரத்தை எதிர்பாராது உபகரிக்கும் நண்பன். **ப்ரபவ:** - உலகை உண்டு பண்ணுபவன். **ப்ரளய:** - அழிப்பவன். **ஸ்தானம்** - அனைத்துக்கும் ஆதாரமானவன். **நிதானம்** - *(நிதராம் தாரகத்வாத்)* சிறந்த தரிப்பவன் அல்லது *(நிதீயதே அத்ர)* பிரளயத்தில் ப்ரக்ருதி முதலிய உலகம் வைக்கப்படும் இடமானவன். **பீஜம்** - உலகை வெளிப்படுத்து வதால் விதையானவன். **அவ்யயம்** - மாறுதலும் நாசமும் இல்லாதவன்.

19. तपाम्यहं अहं वर्षं निगृह्णामि उत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥

தபாம்யஹம் அஹம் வர்ஷம், நிக்[3]ருண்ஹாமி உத்ஸ்ருஜாமி ச |
அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச, ஸத[3]ஸச்சாஹ மர்ஜுன || 19

**அர்ஜுன** - ஸுத்தமான கர்மத்தைச் செய்பவனே !; **அஹம்** - நான்; **தபாமி** - *(சூரியனிடம் இருந்துகொண்டு)* உஷ்ணமாக்கு கிறேன். **அஹம்** - நான் *(மேகக் கூட்டத்தில் இருந்துகொண்டு);*

**வர்ஷம்** - மழையை; **உத்ஸ்ருஜாமி** - வெளியிடுகிறேன். **நிக்ருண்ஹாமி ச** - அடக்குகிறேன். **அம்ருதம் ச** - (இந்திரியங்களில் இருந்துகொண்டு, தேகத்தைத் தாங்கி) மரணத்தைப் போக்குபவன். **அஹம் ஏவ** - நானே; **ம்ருத்யு:** - ப்ரளயம் தவர, மற்ற காலங்களிலும் கொல்பவன்; **ஸத்** - காரியப்பொருளும்; **அஸத்ச** - காரணப் பொருளும்; **அஹம்** - நானே, அதாவது அவைகளை நான் ப்ரேரிக்கிறேன். அவை என் வசமானவை. அல்லது, **ஸத்** - ஸாது குணங்களினால் நிறைந்தவன். **அஸத்** - ஸாது குணங்கள் நிறைந்த வேறு புருஷனில்லாதவன்.

குறிப்பு : சுலோகம் 16ல் எல்லா யாகங்களில் புஜிப்பவர் எனப்பட்டது. 7-21ல் கூறிய த்ரைவித்யர்களின் யாகங்களிலும் புஜிப்பவராதலால், அவர்களுக்கும் ஸூத்த பாகவதர்களுக்கும், பலனில் பேதமிராமற் போகுமே என்றால், பாகவதர்களின் பலன் உயர்ந்தது என்கிறார்.

20. त्रैविद्या मां सोमपाः पूतपापाः यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।
ते पुण्यमासाद्य सुरेन्द्रलोकं अश्नन्ति दिव्यान् दिवि देवभोगान् ॥

த்ரைவித்[3]யா மாம் ஸோமபா: பூதபாபா:, யஜ்ஞை ரிஷ்ட்வா
ஸ்வர்க[3]திம் ப்ரார்த்த[2]யந்தே |
தே புண்யமாஸாத்[3]ய ஸுரேந்த்[3]ரலோகம் அஶ்னந்தி தி[3]வ்யான்
தி[3]வி தே[3]வபே[4]ாகான் || 20

**த்ரைவித்யா:** - *(7-21)* விஷ்ணு ஸர்வோத்தமர் என்று அறிந்தும், மூன்று வேதங்களில், மேல்வாரியாகத் தோன்றும், ஸ்வர்க்கம் முதலியவற்றைக் கருதி, மற்ற தேவர்களைப் பூஜிப்பவர்கள்; **மாம்** - என்னை; **யஜ்ஞை:** - யாகங்களினால்; **இஷ்ட்வா** - பூஜித்து (கடைசியில் என்னிடம் அர்ப்பணம் செய்து): **ஸோமபா:** - ஸோம ரஸத்தைக் குடித்து; அதனால், **பூதபாபா:** - பாபங்களிலிருந்து சுத்தமாக்கப்பட்டு; **ஸ்வர்கதிம்** - ஸ்வர்க்கத்தின் வழியை அல்லது ஸ்வர்க்கமாகிற சேருமிடத்தை; **மாம்** - என்னிடம்; **ப்ரார்த்தயந்தே** - வேண்டுகிறார்கள். **தே** - அவர்கள்; **புண்யம்** - புண்ணியத்தால் பெறத் தகுந்த; **ஸுரேந்த்ரலோகம்** - தேவேந்திரனின் உலகத்தை (ஸ்வர்க் கத்தை); **ஆஸாத்ய** - அடைந்து; **திவி** - ஸ்வர்க்கத்தில்; **திவ்யான்** - அங்குள்ள, அல்லது இங்கு கிடைக்காத; **தேவ போகான்** - தேவர்களின் ஸுகங்களை; **அஶ்னந்தி** - அநுபவிக்கிறார்கள்.

21. ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।
एवं त्रयीधर्म मनुप्रपन्नाः गतागतं कामकामा लभन्ते ॥

தே தம் பு$^{4}$க்த்வா ஸ்வர்க்க$^{3}$லோகம் விஸாலம், க்ஷீணே புண்யே
மர்த்யலோகம் விஸந்தி |
ஏவம் த்ரயீத$^{4}$ர்ம மநுப்ரபன்னா:, க$^{3}$தாக$^{3}$தம் காம காமா: லப$^{4}$ந்தே ||

**தே** – *(ஸ்வர்க்கத்திலுள்ள ஆஸையால் மற்ற தேவர்களைப் பூஜிக்கும்) அவர்கள்;* **தம்** – *அந்த;* **விஸாலம்** – *பரந்த;* **ஸ்வர்க்கலோகம்** – *ஸ்வர்க்க உலக சுகத்தை;* **புக்த்வா** – *அநுபவித்து;* **புண்யே க்ஷீணே (ஸதி)** – *புண்ணியம் குறைந்ததும்;* **மர்த்யலோகம்** – *மனிதர்களின் பூலோகத்தை;* **விஸந்தி** – *(3-1-8 பிரம்ம சூத்திரத்தில் கூறியபடி, மீதியுள்ள புண்ணியத்துடன்) பிரவேஸிக்கிறார்கள்.* **ஏவம்** – *இம்மாதிரி (மறுபடியும்);* **காம காமா:** – *சுகங்களை விரும்பி;* **த்ரயீதர்மம்** – *மூன்று வேதங்களில் கூறப்பட்ட கர்மங்களை;* **அநு ப்ரபன்னா:** – *தொடர்ந்து செய்பவர்களாய்;* **கத ஆகதம்** – *செல்வதுடன் கூடிய வருகையை அதாவது ஸ்வர்க்கத்திற்குச் செல்லுதலையும், அங்கிருந்து பூலோகத்துக்குத் திரும்பி வருதலையும்;* **லபந்தே** – *அடைகிறார்கள். (ஒரு பொழுதும், மறுபிறப்பில்லாத மோக்ஷத்தை அடைவதில்லை).*

*இரு சுலோகங்களில் த்ரைவித்யர்களின் பலனைக் கூறி, பாகவதர்களின் பலனைக் கூறுகிறார்.*

22. अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥

அநன்யாஸ் சிந்தயந்தோ மாம், யே ஜனா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபி$^{4}$யுக்தானாம், யோக$^{3}$க்ஷேமம் வஹாம்யஹம் || 22

**அநன்யா:** – *என்னைத்தவிர நினைக்கத் தகுந்த வேறு யாருமில்லாது, மற்றவைகளை நினைக்காமல்;* **மாம்** – *என்னை;* **சிந்தயந்த:** – *நினைத்துக் கொண்டிருக்கும்;* **யே ஜனா:** – *எந்த பாகவதர்கள்;* **பரி உபாஸதே** – *பக்திப் பெருக்குடன் உபாசிக்கின்றனரோ;* **தேஷாம்** – *அந்த;* **நித்ய அபியுக்தானாம்** – *நித்ய – எப்போதும், அபி – எங்கும் அல்லது மனோ வாக்காயங்களால்,* **யுக்தானாம்** – *பகவத் சேவையில் ஈடுபட்டவர்களுடைய;* **யோகக்ஷேமம்** – *யோக: – முன் அடையாத மோக்ஷத்தை அடைவித்தல்,* **க்ஷேம:** – *அதை அழியாமல் பாதுகாப்பது – இவற்றை;* **அஹம் வஹாமி** – *நான் ஸூமக்கிறேன் (மீண்டும் பிறப்பில்லாத மோக்ஷத்தைத் தருகிறேன்).*

குறிப்பு: அநன்யா: - பகவானைக் காட்டிலும் வேறானவர்களல்லாத; என்ற அர்த்தம், ஜீவேசுவர ஐக்கியத்தைக் குறிக்கும். அது ஸகல ஶ்ருதிஸ்மிருதி புராணங்களுக்கு விருத்தமானது. 16-14ல் அது ஆஸுர ஸம்பத்து என்றும், அதனால் விளையும் அனர்த்தங்களையும் விளக்கியுள்ளார்.

*மற்ற தேவர்களைப் பூஜிப்பவர்களுக்கு, பாகவதர்களைக் காட்டிலும் வேறான பலன் ஏன்? என்பதை காரணத்துடன் கூறுகிறார்.*

23. येऽपि अन्यदेवताभक्ताः यजन्ते श्रद्धयाऽन्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्ति अविधिपूर्वकम् ॥

யேSபி அன்யதே[3]வதா ப[4]க்தா:, யஜந்தே ஶ்ரத்த[4]யாSன்விதா: |
தேSபி மாமேவ கௌந்தேய, யஜந்தி அவிதி[4] பூர்வகம் || 23

**அபி** - *மேலும்;* **கௌந்தேய** - *குந்தீ புத்திரனே!;* **அன்ய தேவதாபக்தா:** - *மற்ற தேவதைகளின் பக்தர்களான;* **யே** - *எவர்கள்;* **ஶ்ரத்தயா அன்விதா:** - *ஆஸ்திக்ய புத்தியுடன் கூடினவர்களாய்;* **யஜந்தே** - *அவர்களைக் குறித்து யாகம் செய்கின்றரோ;* **தே அபி** - *அவர்களும்கூட;* **மாம் ஏவ** - *என்னையே;* **அவிதி பூர்வகம்** - *ஶாஸ்திரமுறை தவறி;* **யஜந்தி** - *யாகம் செய்கின்றனர்.*

*அந்த யாகத்திலும் பகவான் புசிப்பதால், அது எப்படி முறை தவறியதாகும் என்பதை விளக்குகிறார்.*

24. अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।
न तु मां अभिजानन्ति तत्वेनातः च्यवन्ति ते ॥

அஹம் ஹி ஸர்வயஜ்ஞானாம், போக்தா ச ப்ரபு[4]ரேவ ச |
ந து மாம் அபி[4]ஜானந்தி, தத்வேனாதஸ் ச்யவந்தி தே || 24

**அஹம் ஏவ** - *நானே;* **ஸர்வயஜ்ஞானாம்** - *எல்லோருடைய எல்லா யாகங்களிலும்;* **போக்தா ச** - *ஹவிஸ்ஸைப் புசிப்பவனாயும் (உத்தேச்யனாயும்);* **ப்ரபு ச** - *யஜமானனாயும் (ப்ரவர்த்தகனாயும்) இருக்கிறேன்;* **ஹி** - *எதனால்;* **தே** - *அவர்கள்;* **மாம்** - *அவ்வித என்னை;* **து** - *ஸர்வோத்தமன் என அறிந்தும்;* **தத்வேன** - *உண்மையாக; அதாவது, மற்ற பிரம்மாதி தேவர்கள், என் பரிவாரங்கள் என்றும்; நான் யாகத்தின் உத்தேச்யன் என்றும், பிரவர்த்தகன் என்றும்,* **ந அபி ஞானந்தி** - *நன்கு அறியவில்லையோ;* **அத:** - *அதனால்;* **ச்யவந்தி** -

நழுவுகிறார்கள். அதாவது ஸ்வர்க்கத்திலிருந்து பூலோகத்தை அடைகிறார்கள்.

குறிப்பு: (1) மற்ற தேவர்களைப் பூஜித்து, அதைக் கடைசியில் பகவானிடம் அர்ப்பணம் செய்கின்றனர். அது முறைதவறியது.

(2) இருவர்களின் கருத்துக்களையும் பலனில் பேதத்தையும் கீழே காண்க.

| | த்ரைவித்யர்கள் | பாகவதர்கள் (பக்தர்கள்) |
|---|---|---|
| 1. | அன்யதேவதா பக்தா: (9–23, 7–21) விஷ்ணு தவிர மற்ற தேவர்களைப் பூஜிப்பார்கள். | அநன்யா: (9–22) – விஷ்ணு தவிர மற்றவர்களை நினைக்க மாட்டார்கள். |
| 2. | ந து மாம் அபி ஜானந்தி (9–24) – பகவானை நன்கு அறியாதவர்கள். அதனால் பக்தியில்லாதவர்கள் | பரிஉபாஸதே (9–22) – பக்திப் பெருக்குடன் உபாஸிப்பவர்கள் |
| 3. | ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே (9–20) ஸ்வர்க்கத்தை வேண்டுகிறார்கள். காம காமா: (9–21) சுகங்களில் ஆசையுள்ளவர். | சிந்தயந்த: மாம் (9–22) – என்னையே நினைப்பவர்கள். வேறு ஆசையில்லாதவர். |
| 4. | மாம் இஷ்ட்வா (9–20) யஜந்தி அவிதிபூர்வகம் (9–23) – முறை தவறி என்னைக் குறித்து யாகம் செய்கிறார்கள். | நித்யாபியுக்தானாம் (9–22) – எப்போதும், எங்கும், எல்லாவற்றினாலும், என் சேவையையே புரிகிறார்கள். |
| 5. | மர்த்யலோகம் விசந்தி (9–21) பூமியில் மறுபிறப்புள்ளவர்கள். | யோகக்ஷேமம்வஹாம்யஹம் (9–22) மறு பிறப்பில்லாத மோக்ஷமடைபவர்கள். |

*இருவர்களின் பலபேதத்தை விவரித்து விஸ்தரிக்கிறார்.*

25. यान्ति देवव्रताः देवान् पितृन् यान्ति पितृव्रताः ।
भूतानि यान्ति भूतेज्याः यान्ति मद्याजिनोऽपि माम् ॥

யாந்தி தே³வவ்ரதா: தே³வான், பித்ரூன் யாந்தி பித்ருவ்ரதா: |
பூ⁴தானி யாந்தி பூ⁴தேஜ்யா:, யாந்தி மத்³யாஜீனோऽபி மாம் || 25

**தேவவ்ரதா:** - இந்திரன் முதலிய தேவர்களிடம் நியமங்களையுடையவர்கள்; **தேவான்** - இந்திரன் முதலிய தேவர்களை; **யாந்தி** - அடைகின்றனர். **பித்ருவ்ரதா:** - பித்ரு தேவதைகளிடம் சிராத்தம் முதலிய நியமங்களை யுடைவர்கள்; **பித்ருன் யாந்தி** - பித்ரு தேவதைகளை அடைகிறார்கள். **பூத இஜ்யா:** - ஏழு தாய்கள், யக்ஷர்கள் முதலியவர்களைப் பூஜிப்பவர்கள்; **பூதானியாந்தி** - அந்த ஏழு தாய்கள் முதலியோரை அடைகிறார்கள். **மத்யாஜின: அபி** - என்னைப் பூஜிப்பவர்களும்; **மாம் யாந்தி** - என்னை அடைகின்றனர்.

குறிப்பு: 1. ப்ராஹ்மீ 2 மாஹேச்வரி 3 கௌமாரீ 4 வைஷ்ணவி 5 மாஹேந்த்ரீ 6 வாராஹீ 7 சாமுண்டீ என்பவர்கள் ஸப்தமாதர: - ஏழு தாய்கள் எனப்படுவர்.

மற்ற தேவர்களின் பலன் அற்பமாயினும், அவர்களைப் பூஜிப்பது சுலபம். நீர் மகாமகிமையையுடையவர் ஆதலால், உம்மைப் பூஜிப்பது எளியவர்களால் முடியாதே ! என்றால், தாம் பரம சுலபர் என்கிறார்.

26. पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्तया प्रयच्छति ।
तदहं भक्तयुपहृतं अश्नामि प्रयतात्मनः ॥

பத்ரம் புஷ்பம் ப$^{2}$லம் தோயம், யோ மே ப$^{4}$க்த்யா ப்ரயச்ச$^{2}$தி |
தத$^{3}$ஹம் ப$^{4}$க்த்யுபஹ்ருதம், அச்னாமி ப்ரயதாத்மன: || 26

**ய:** - யார்; **பத்ரம்** - (தடுக்கப்படாத) துளசி முதலிய ஒரு இலையையும்; **புஷ்பம்** - ஒரு மலரையும்; **பலம்** - ஒரு பழத்தை யும்; **தோயம்** - சுத்த ஜலத்தையும்; **மே** - எனக்கு; **பக்த்யா** - பக்தியுடன்; **ப்ரயச்சதி** - தருகிறானோ; **(தஸ்ய** - அந்த); **ப்ரயத ஆத்மன:** - நன்கு அடக்கின மனத்தினனால், அதாவது விஷய வைராக்கியமுடையவனால்; **பக்தி உபஹ்ருதம்** - பக்தியுடன் சமர்ப்பிக்கப்படும்; **தத்** - அந்த வஸ்துவை; **அஹம் அச்னாமி** - நான் சாப்பிடுகிறேன் (பெற்றுக்கொள்கிறேன்). (பக்தி முக்கியமே தவிர பொருள்களோ, அவற்றின் அளவோ அல்ல).

**குறிப்பு:** மே என்பதை பத்ரம் முதலிய பதங்களோடும் சேர்க்கலாம். என் இலை, என் மலர். என் பழம், என் ஜலம் அதை எனக்குக் கொடுப்பதாலேயே நான் ஸந்தோஷிக்கிறேன். என்றதாலும்; ஒருமையால் பல இலைகள், பல மலர்கள், பல பழங்கள் தேவையில்லை, என்றதாலும்; பகவான் பரமஸுலபன் என்று தெரிவிக்கிறார் துரௌபதி அக்ஷய்ய பாத்திரத்தில் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு இலையை ஸ்ரீ கிருஷ்ணருக்கும், கஜேந்திரன் ஒருதாமரை மலரை ஸ்ரீ நாராயணருக்கும், சபரி ஒரு பழத்தை ஸ்ரீ ராமருக்கும், ரந்திதேவன் (பாகவதம் 9-21-14) ஜலத்தை மாறுவேடம் பூண்ட பகவானுக்கும், தந்தனர் எனக்கூறுவர்.

பத்ரம், புஷ்பம் முதலியவற்றைக்கூட, சம்பாதிக்க சிரமப்பட வேண்டாம். நீ செய்துகொண்டிருப்பதை அர்ப்பணம் செய்தாலும் போதும் என்கிறார்.

27. यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥

யத் கரோஷி யத[3]ஶ்னாஸி, யஜ்ஜுஹோஷி த[3]த[3]ாஸி யத் |
யத் தபஸ்யஸி கௌந்தேய, தத் குருஷ்வ மத[3]ர்ப்பணம் || 27

**கௌந்தேய** - குந்தீபுத்திரனே!; **யத்** - (சாஸ்திரவிஹித மான) எந்தக் கர்மத்தை; **கரோஷி** - செய்கிறாயோ; **யத் அஶ்னாஸி** - எதைச் சாப்பிடுகிறாயோ; **யத் ஜுஹோஷி** - எதை ஹோமம் செய்கிறாயோ; **யத் ததாஸி** - எதை (ஸத் பாத்திரத்தில்) தானம் செய்கிறாயோ; **யத் தபஸ்யஸி** - எந்த தவத்தைச் செய்கிறாயோ; **தத்** - அந்த (அனைத்தையும்); **மதர்ப்பணம் குருஷ்வ** - என்னிடம், ஸ்ரீ கிருஷ்ணார்ப்பண மஸ்து, என்று ஸமர்ப்பிப்பாயாக.

**குறிப்பு:** துளஸி, புஷ்பம் இவற்றை அர்ப்பணம் செய்வது என்றால், அவற்றை ஸாலக்ராமத்தின் மீதோ, விக்ரஹத்தின்மீதோ, போடுகிறோம். கர்மத்தை அர்ப்பணம் செய்வது எப்படி? என்றால் பகவான் நம்மிடமிருந்து கொண்டு, நம் பூர்வபுண்யத்தையொட்டி, நம் க்ஷேமத்தின் பொருட்டு, நம் மூலம் அந்தப்புண்ணிய கர்மத்தைச் செய்விக்கிறார், என்று அநுஸந்திப்பதே புண்யகர்ம ஸமர்ப்பணமாகும். அந்த முறையில் நாம் செய்யும் பாபங்களையும் பகவானிடம் ஸமர்ப்பணம் செய்யலாம். அதாவது பகவான் நம்மிடம் இருந்துகொண்டு, நம் பூர்வபாபத்தை அநுஸரித்து, இந்தப்பாபத்தை நம் மூலம் செய்விக்கிறார் என்று அநுஸந்திப்பதேயாகும். அடுத்த சுலோகத்தில் ஶுபா ஶுப பலை: என்ற பதத்தையும் கவனிக்க.

பகவானிடம் ஸமர்ப்பிப்பதின் பலனைக் கூறுகிறார்.

28. शुभाशुभ फलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः ।
संन्यास योग युक्तात्मा विमुक्तो मां उपेष्यसि ॥

ஶுப[4]ாஶுப[4] ப[2]லைரேவம், மோக்ஷ்யஸே கர்ம ப[3]ந்த[4]னை: |
ஸந்ந்யாஸ யோக[3] யுக்தாத்மா, விமுக்தோ மாம் உபேஷ்யஸி || 28

**ஏவம்** - இம்மாதிரி அனைத்தையும் என்னிடம் ஸமர்ப் பிப்பதால், (உனக்கு அதில் இனி சம்பந்தமில்லையாதலால்); **ஶுப அஶுப பலை:** - புண்ணிய பலன், பாப பலன் ஆகிய வற்றைத்தரும்; **கர்மபந்தனை:** - கர்மங்களாகிற கட்டுகளினால்; **மோக்ஷ்யஸே** - விடுபடுவாய் அதாவது, ஸந்ந்யாஸ-யோக-

*யுக்தாத்மா – பலனை விட்டுவிடுதல் – கர்மங்களைச் செய்தல் – ஆகியவைகளுடன் கூடிய மனத்தையுள்ளவனாய்;* **விமுக்த:** – *ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டவனாய்;* **மாம்** – *என்னை;* **உபேஷ்யஸி** – *அடைவாய் (***உபைஷ்யஸி** *– பிறர்பாடம்).*

குறிப்பு: புண்ணிய கர்மாவும் பந்தத்தைத் தரும். எப்படியெனில், அதன் பலனை அநுபவிப்பதற்குப் பிறக்க வேண்டுமல்லவா! ஆகவே புண்ணியத்தில் 1. இஷ்ட புண்ணியம் 2. அநிஷ்ட புண்ணியம் என இரு வகையுண்டு. முதலாவது மோக்ஷத்தில் ஆனந்தம் பொங்குவதற்காக உதவும். அது விடத் தகுந்ததல்ல. இரண்டாவது, பிறப்பைக் கொடுத்து மோக்ஷத்திற்குத் தடையாகவுள்ளது. ஆகவே அபரோக்ஷ ஞானிகள், ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் போன்றவர்கள், அந்த அநிஷ்ட புண்ணியத்தை அவர்களின் புத்திரர்கள், நண்பர்கள், ஸேவிப்பவர்கள் முதலியோருக்கு வாரி வழங்குகிறார்கள். (2-50 குறிப்பு பார்க்க)

சுலோகம் 26ல், ''பக்தியுடன் ஸமர்ப்பிக்கப் படுவதைச் சாப்பிடு கிறேன்'', என்றதால், நீர் பக்தனுக்குப் பிரியமானவர். அதனால் த்வேஷி களுக்குப் பிரியமானவரல்ல, என்று ஏற்படுகிறது. உலகில் அரசர் முதலியோர் போன்று. பக்தனிடமுள்ள சினேகத்தால் அவனுக்குச் ஸுகத்தையும்; துவேஷிகளிடமுள்ள துவேஷத்தால் அவர்களுக்குத் துக்கத்தையும், தருவீர். ஆகவே உமக்கு பக்ஷபாதமும் (வைஷம்யமும்), தயையின்மையும் (நைர்கருண்யமும்) ஏற்படுமே! என்றால் பதிலளிக் கிறார்.

29. समोऽहं सर्वभूतेषु न मे द्वष्योऽस्ति न प्रियः ।
ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥

ஸமோऽஹம் ஸர்வபூ⁴தேஷு, ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய: |
யே ப⁴ஜந்தி து மாம் ப⁴க்த்யா, மயி தே தேஷு சாப்யஹம் || 29

**அஹம்** – *நான்;* **ஸர்வபூதேஷு** – *எல்லா ஜீவர்களிடமும்;* **ஸம:** – *சமமாயிருக்கிறேன் (பக்ஷபாதம் முதலியன இல்லை). ஏனெனில்,* **மே** – *எனக்கு;* **த்வேஷ்ய:** – *அவனுடைய த்வேஷத் திற்குத் தகுந்ததைக் காட்டிலும் அதிகம் த்வேஷிக்கத் தகுந் தவன்;* **ந அஸ்தி** – *இல்லை.* **ப்ரிய:** – *அவனுடைய பக்திக்குத் தகுந்ததைக் காட்டிலும், அதிகம் பிரியமானவன்;* **ந** – *இல்லை, அதாவது அவரவர்கள் என்னிடம் புரியும் த்வேஷத்தையும், பக்தியையும், அநுசரித்து பலனைத் தருகிறேன். ஆகையால் ஸமமானவன். அல்லது* **ஸர்வ பூதேஷு மே (பக்த:)** – *எல்லா ஜீவர்களிலும் (என் பக்தன்);* **த்வேஷ்ய: நாஸ்தி** – *த்வேஷிக்கத் தகுந்தவன் அல்ல. (அபக்த:)* **மே ப்ரிய: ந** – *(பக்தனல்லாதவன்) எனக்குப் பிரியமானவன் அல்ல. ஆகையால் ஸமமானவன்.*

**யே** – எவர்கள்; **மாம்** – என்னை; **பக்த்யா பஜந்தே** – பக்தியுடன் ஸேவிக்கிறார்களோ; **தே** – அவர்கள்; **மயி** – என் அதீனர்கள் என்ற ஞானமுள்ளவர்களாயிருக்கிறார்கள். **அபி ச** – மேலும்; **அஹம்** – நான்; **தேஷு** – அவர்களின் அதீனமாயிருக்கிறேன்.

**குறிப்பு:** அவரவர்களின் புண்ணிய பாபங்களுக்குத் தகுந்தபடி தண்டிக்கும் யமன் பக்ஷபாதமுள்ளவனா? பக்ஷபாதமுள்ளவன் என்றால் அவனுக்கு ஸமவர்த்தீ - ஸமமாயிருப்பவன், என்ற பிரசித்தமான பெயர் விருத்தமாகும். தன் தாய் தந்தையர்களை நமஸ்கரித்தும், தன் மனைவி மக்களால் நமஸ்கரிக்கப்பட்டும், உள்ள ஒருவன், பக்ஷபாதமுள்ளவனா? ஆகவே, அவரவர்களின் தகுதிக்குத் தக்கபடி நடப்பவன்தான் ஸமன் எனப்படுவான். கீதை 5-18, 19; 6-9; 13-29; பிரம்மசூத்திரம் 2-1-35 பார்க்க.

*பக்தியைப் புகழ்கிறார்.*

30. अपि चेत्सुदुराचारः भजते मां अनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः संयक् व्यवसितो हि सः ॥

அபி சேத் ஸுது[3]ராசார:, ப[4]ஜதே மாம் அநன்ய ப[4]ாக் |
ஸாது[4]ரேவ ஸ மந்தவ்ய:, ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: || 30

**ஸுதுராசார: அபி** – அதிக துர்நடத்தையுள்ளவனாயினும்; **அநன்ய பாக்** – மற்ற தேவர்களை ஸ்வதந்திரர்கள் என்று ஸேவிக்காதவனாய்; **மாம்** – என்னை; **பஜதே சேத்** – ஸேவிக்கும் பக்ஷத்தில்; **ஸ:** – அந்த பக்தன்; **ஸாது: ஏவ** – நல்லவனாகவே; **மந்தவ்ய:** – அறியத் தகுந்தவன். **ஹி** – ஏனென்றால்; **ஸ:** – அவன்; **ஸம்யக் வ்யவஸித:** – பகவானைப் பற்றிய நிச்சய ஞானமுள்ளவன். அதாவது அபரோக்ஷ ஞானியாவான்.

**குறிப்பு:** இந்த சுலோகம், துராசாரமுள்ள மனிதர்களைப் பற்றியதல்ல, அபரோக்ஷ ஞானிகளான தேவனையோ, தேவாம்சமுள்ளவனையோ, ரிஷியையோ குறிக்கும். அவர்கள், தமது யோக்யதைக்கு அதிகமாகச் செய்த புண்ணியத்தைக் குறைக்க, ஏதமான த்விட் என்ற பெயருள்ள பகவானால் பிரேரிக்கப்பட்டு, துராசாரம் புரிகின்றனர். சந்திரன் பிருஹஸ்பதியின் பத்னியையும், சூரியனின் அம்சமான சுக்ரீவன், வாலியின் மனைவியையும் அபஹரித்தனர். விசுவாமித்திரர் நாயின் மாமிசத்தைத் திருடினார் என்ற சரிதம் சாந்திபர்வம் 141-ம் அத்தியாயத்திலுள்ளது. ஸ்ரீமத் பாகவதம் 6ம் ஸ்கந்தத்தில், அஜாமிள உபாக்யானம் உளது. அதிக உணவு உண்பதால் அஜீர்ணம் ஏற்படுவதுபோல், இது அதிக புண்ணியத்தின் அஜீர்ணமாகும், என்று ஸ்ரீ ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்த ஸ்வாமிகள் கூறிவந்தார்கள்.

*துராசாரமுள்ளவன் எவ்வாறு நல்லவனாவான்? என்பதை விளக்குகிறார்.*

31. क्षिप्रं भवति धर्मात्मा शश्वत् शान्तिं निगच्छति ।
कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥

க்ஷிப்ரம் ப[4]வதி த[4]ர்மாத்மா, ஶஶ்வத் ஶாந்திம் நிக[3]ச்ச[2]தி |
கௌந்தேய ப்ரதி ஜானீஹி, ந மே ப[4]க்த: ப்ரணஶ்யதி || 31

**கௌந்தேய** - *குந்தீபுத்திரனே!; (அவன் அபரோக்ஷ ஞானமுடையவனாதலால்),* **க்ஷிப்ரம்** - *சீக்கிரம்;* **தர்மாத்மா** - *தர்மத்தில் சித்தமுள்ளவனாக;* **பவதி** - *ஆகிறான்.* **ஶஶ்வத் ஶாந்திம்** - *சாச்வதமான மோக்ஷத்தை;* **நிகச்சதி** - *நன்கு அடைகிறான்.* **மே பக்த:** - *என்னுடைய பக்தன் (துராசாரமுள்ளவனாயினும்);* **ந ப்ரணஶ்யதி** - *அடியோடு நாஶமடைவதில்லை, (நரகம் முதலிய அனர்த்தங்களை அடைவதில்லை.) என்று;* **ப்ரதி ஜானீஹி** - *தைரியமாகப் பறைசாற்றுவாயாக.*

*கைமுத்ய நியாயத்தினாலும், பக்தியின் மகிமையை 1½ சுலோகத்தில் விளக்குகிறார். (கிமுத-கிம்புன: கேட்பானேன்! என்ற இடங்களில் கூறப்படும் யுக்திக்கு கைமுத்ய நியாயம் எனப்பெயர்).*

32. मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्याः तथा शूद्राः तेऽपि यान्ति परां गतिम् ॥

33. किं पुनः ब्रह्मणाः पुण्याः भक्ताः राजर्षयस्तथा ।

மாம் ஹி பார்த்த[2] வ்யபாஶ்ரித்ய, யேSபி ஸ்யு: பாபயோனய: |
ஸ்த்ரியோ வைஶ்யாஸ் தத[2]ா ஶூத்ரா:, தேSபி யாந்தி பராம்க[3]திம் ||

கிம் புன: ப்ராஹ்மணா: புண்யா:, ப[4]க்தா: ராஜர்ஷயஸ்தா | 33A

*32.* **பார்த்த** - *குந்தீபுத்திரனே!;* **யே அபி** - *எந்த ஜீவர்கள்;* **பாபயோனய: ஸ்த்ரிய:** - *ஸ்வபாவத்தில் ஆண்களாயிருந்து பாபத்தினால், ஸ்த்ரீகளாகப் பிறந்து;* **ததா** - *அவ்வாறே;* **பாப யோனய: வைச்யா: சூத்ரா:** - *ஸ்வபாவத்தில் உத்தம வர்ண மான பிராம்மணராகவும், க்ஷத்திரியர்களாகவும் இருந்து, பாபத்தினால், தாழ்ந்த வர்ணமான வைசியர்களாயும், சூத்திரர்களாயும் பிறந்து;* **மாம்** - *என்னை;* **வ்யபாஶ்ரித்ய** - *விசேஷமாக ஆசிரயித்துப் பக்தியுள்ளவர்களாக;* **ஸ்யு:** - *இருப் பார்களோ;* **தே அபி** - *அவர்களும்கூட;* **பராம்கதிம்** - *உத்தம ஸ்தானமாகிய மோக்ஷத்தை;* **யாந்தி** - *அடைகின்றனர்.* **ஹி** - *பிரஸித்தம்.*

*33.* **அவ்விதமே, புண்யா: ப்ராஹ்மணா:** - *ஸ்வபாவத்தில் தாழ்ந்த வர்ணமான வைசியர்களாயும், சூத்திரர்களாயும்*

இருந்து, புண்யத்தினால் பிராம்மணர்களாகவும்; **ததா** - அவ்வாறு; **ராஜர்ஷய:** - க்ஷத்திரியர்களாகவோ, ரிஷிகளாகவோ பிறந்து; **பக்தா:** - பக்தியுள்ளவர்களாயின்; (**பராம் கதிம் யாந்தி** - மோக்ஷத்தை அடைகின்றனர்). **கிம் புன:** - அவ்வாறிருக்க, ஸ்வபாவத்தில் ஸ்திரீகளாயும், வைசியர்களாயும், சூத்திரர் களாயும் உள்ள ஜீவர்கள் மோக்ஷமடைகின்றனர், என்று சொல்லவும் வேண்டுமோ?

குறிப்பு: இங்கு ஸ்திரீகளும், வைசியர்களும், ஶூத்திரர்களும் பாபயோனிகள் என்கிறார். உண்மையில் இம்மூவரும் பாபயோனி களல்லர். ஏனெனில், ஜீவர்கள் ஸ்வரூபத்திலேயே ஆண்களாயும், பெண்களாயும், நான்கு வர்ணத்தினர்களாயும் உள்ளனர். ஆகவே இங்கு கூறப்பட்ட மூவர்களும் ஸ்வாபாவிகமான ஸ்திரீகளும், வைசியர்களும், சூத்திரர்களும் அல்லர், பாபத்தினால் அந்த பிறப்பையடைந்தவர்கள் என்று அர்த்தம் செய்ய வேண்டும். ஸ்திரீ ஜீவர்கள், ஸ்திரீகளாகப் பிறப்பது பாபயோனியல்ல, ஆண் ஜீவர்கள், பாகவதம் 9-1 அ.ல் ஸுத்யும்னன் போன்று. பாபத்தினால் ஸ்த்ரீயாகப் பிறப்பது பாபயோனியாகும்.

இங்கு ஒரு முக்கியமான தத்வம் உண்டு. பா.தா.நி 11-113.

*பும்ஸாம் ஸ்த்ரீத்வம் பவேத் க்வாபி, ததாப்யந்தே புமான் பவேத் |*
*ஸ்த்ரீணாம் நைவ ஹி பும்ஸ்த்வம் ஸ்யாத், பலவத் காரணை ரபி||*

ஸ்வபாவத்தில் ஆண் ஜீவர்கள், ஸ்த்ரீகளாகப் பிறப்பார்கள். மறுபடியும் ஆண்களாவார்கள். ஆனால், ஸ்வபாவத்தில் ஸ்த்ரீ ஜீவர்கள் எக்காரணத்தினாலும் ஆண்களாப் பிறக்கமாட்டார்கள். ஆண்ஜீவர்கள் ஸ்த்ரீகளாகப் பிறக்கிறார்கள் என்பதற்கு, ஸுத்யும்னன்-இளா என்ற பெண்; அக்நியின் புத்திரர்கள் - ஸ்ரீ கிருஷ்ணரின் 16100 பத்னிகள்; தண்டகாரண்ய வாஸிகளான மஹர்ஷிகள் - கோபிகைகளாகப் பிறந்தனர் (பாத்ம புராணம்) முதலியோர் உதாரணமாவர். ஸ்த்ரீ ஜீவர்கள் ஆணாகப் பிறக்கமாட்டார்கள் என்பதற்குப் பாரதத்தில் உள்ள அம்போபாக்யானம் உதாரணமாகும். இதைக்கொண்டு, இப்போது உலகில் ஆண்களாக வுள்ளவர்களின் ஜீவர்கள் ஆண்களே என்றும், ஸ்த்ரீகளாகவுள்ளவர் களில், சிலரின் ஜீவர்கள் ஆண்கள் என்றும், சிலரின் ஜீவர்கள் பெண்கள் என்றும் கூறலாம். இது நம் உலக அனுபவத்துக்கும் பொருத்தமா யிருக்கிறது.

மேலும், உயர்ந்த வர்ணத்தினரான ஜீவர்கள், பாபத்தினால் தாழ்ந்த வர்ணத்தினரையும், தாழ்ந்த வர்ணத்தினரான ஜீவர்கள் புண்ணியத்தால் உயர்ந்த வர்ணத்தினராயும், பிறப்பார்கள். ஆண் ஜீவர்கள் பாபத்தினால் ஸ்த்ரீகளாகப் பிறப்பார்களே தவிர, ஸ்த்ரீஜீவர்கள் புண்ணியத்தினால் ஆண்களாகப் பிறக்கமாட்டார்கள். இதைக் குறிக்கவே, ஶ்லோகத்தில் **ஸ்த்ரிய:** என்ற பதத்திற்கு எதிராக **புமாம்ஸ:** என்ற பதமில்லை என்பதைக் கவனிக்கவும்.

அர்ஜுனன் செய்யவேண்டியதைக் கூறுகிறார்.

अनित्यमसुखं लोकं इमं प्राप्य भजस्व माम् ॥

அநித்யமஸுக$^{2}$ம் லோகம், இமம் ப்ராப்ய ப$^{4}$ஜஸ்வ மாம் || 33B

*(அத: - பக்தியே ஸாதனங்களிற் சிறந்தது ஆகையால்,)* **அநித்யம்** - *நாசமடைவதும்;* **அஸுகம்** - *ஸுகமில்லாததுமான;* **இமம்** - *இந்த (தர்மஸாதனமான);* **லோகம்** - *தேகத்தை, அல்லது - பூவுலகத்தை;* **ப்ராப்ய** - *அடைந்து (இருப்பதால்);* **மாம் பஜஸ்வ** - *என்னை (தாமதமில்லாது) ஸேவிப்பாயாக.*

*ஸேவிக்கும் விதத்தைக் கூறி பலனையும் கூறுகிறார்.*

34. मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि युङ्क्त्वैवं आत्मानं मत्परायणः ॥

மன்மனா ப$^{4}$வ மத்ப$^{4}$க்தோ, மத்யாஜீ மாம் நமஸ்குரு |
மாமேவைஷ்யஸி யுங்க்த்வைவம், ஆத்மானம் மத்பராயண: || 34

**கௌந்தேய** - *குந்தீபுத்திரனே!; 1)* **மன்மனா:** - *என்னிடம் மனதுள்ளவனாகவும் (தியானயோகம்); 2)* **மக்பக்த:** - *என் பக்தனாகவும் (பக்தியோகம்); 3)* **மத்யாஜீ** - *என்னைப் பூஜிப்பவனாகவும் (கர்மயோகம்);* பவ - இரு. **மாம்** - *என்னை; 4)* **நமஸ்குரு** - *வணங்கு (ஞானயோகம்).* **ஏவம்** - *இம்மாதிரி;* **மத்பராயண:** - *என்னையே சிறந்த ஆசிரயமாகக் கொண்டவனாய்;* **ஆத்மானம்** - *மனதை;* **யுங்க்த்வா** - *(என்னிடம்) சேர்த்து;* **மாம் ஏவ** - *என்னையே;* **ஏஷ்யஸி** - *அடைவாய்.*

**குறிப்பு:** 18-65ல் இதே சுலோகம் சிறு மாறுதலுடன் இருப்பதைக் காண்க. இந்த அத்தியாயம் கீதையின் பாதியானதால், அதே சுலோகம் இங்கும் கூறப்பட்டுள்ளது.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे राजविद्या राजगुह्य योगो नाम नवमोऽध्यायः ॥

ஓம்தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம
வித்யாயாம், யோக சாஸ்த்ரே, ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
ராஜவித்யா ராஜகுஹ்ய யோகோ நாம நவமோ அத்யாய:

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய
கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்
என்ற ஒன்பதாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---



# 10

## விபூதி யோகம்

(42 சுலோகங்கள்)

### பத்தாம் அத்தியாயத்தின் சுருக்கம்

ஆறாம் அத்தியாயத்தில் கூறிய தியான யோகத்தை 9ம் அத்தியாயக் கடைசியில் ஞாபகமூட்டினார். தியானம் செய்ய ரூபம் அவசியம். ஆனதால் அந்த ரூபங்களை இந்த அத்தியாயத்தில் கூறுகிறார். **விபூதி**-விசிஷ்ட பவனம் - சிறந்த மகிமை என்றும்; **விவித பூதி** - பலவிதமான ரூபங்கள் எனவும் பொருள்படும். எந்த ரூபம் ஒரு வஸ்துவுக்குள் இருப்பதினால், அந்த வஸ்துவுக்கு ஏற்றம் ஏற்பட்டுள்ளதோ, அந்த ரூபமும் விபூதி ஆகும். அவ்விதமான 77 ரூபங்கள் இங்கு தரப் பட்டுள்ளன.

தியானத்திற்குத் தகுந்த பகவானின் விபூதி ரூபங்களை சு.21 முதல் 38 முடிய கூறுகிறார். சு. 4, 5ல் புத்தி முதலிய 20 பொருள்களையும், சு. 6ல் மஹரிஷிகள் முதலியோரையும், விசேஷ ஸாமர்த்தியத்துடன் கூடினவர்களாகச் சிருஷ்டிக்கும் மகிமையைக் கூறுகிறார். 7-8ல் **ரஸோஹம்**; 9-16ல் **அஹம் க்ரது;** முதலியவற்றினால் விபூதி ரூபங்களைச் சுருக்கமாகக் கூறியிருப்பினும் இங்கு விஸ்தாரமாகக் கூறப்போகிறார். அதனால், விபூதியோகம் என்று இதற்குப்பெயர்.

யேஷாம் விஷ்ணு ஸ்வரூபாணாம், ஸந்நிதே: அன்யவஸ்துஷு |
விசிஷ்டத்வம் ஸ்வஜாதேஸ் ஸ்யாத், விபூத்யாக்யானி தானி து ||

எந்த விஷ்ணு ரூபங்கள் மற்ற பொருள்களில் இருப்பதால், அப்பொருள்களுக்கும், அவற்றின் ஜாதியிலுள்ள மற்றவைகளைக் காட்டிலும், ஏற்றம் எவற்றின் ஜாதிக்கே உண்டாகிறதோ, அந்த ரூபங்களுக்கு விபூதிகள் எனப் பெயர். இவற்றின் பல வகைகளை கீழே கொடுக்கப்பட்டுள்ள பட்டியலைக் கண்டு அறிக.

விபூதிகள்

I. ப்ரத்யக்ஷம் — திரோஹிதம் — II. ஸாரதர்ம ப்ரதம்

V. ஸஜாதீயம் — IV. ஸஜாதீய ஏகதேசம் — III. விஜாதீயம்

**I. ப்ரத்யக்ஷ விபூதிகள்:– 5**

*1. விஷ்ணு (சு.21) 2. கபிலர் (சு. 26) 3. ராமர் (சு. 31) 4. வியாஸர் (சு. 37) 5. வாசுதேவர் (சு.37)*

**II. ஸாரதர்மப்ரத விபூதிகள்:– 8**

*1. சேதனா (சு. 22) 2. யம: (சு 29) 3 ஜய: (சு. 36) 4. வ்யவஸாய: (சு 36) 5. ஸத்வம் (சு. 36) 6. தண்ட: (சு. 38) 7. நீதி: (சு.38) 8. ஜ்ஞானம் (சு.38).*

இவற்றில் *1, 2* ஸஜாதீய விபூதியிலும் வரும்.

**III. திரோஹித விஜாதீய விபூதிகள்:– 2**

*1. சசீ (சு. 21) 2. வருண: (சு. 29)*

**IV. திரோஹித ஸஜாதீய ஏகதேச விபூதிகள்:– 6**

*1. ஸாமவேத: (சு.22) 2. வாஸவ: (சு.22) 3. ஜபயஜ்ஞ: (சு.25) 4. வஜ்ரம் (சு.28) 5. தனஞ்ஜய: (சு.37) 6. உஶனா: (சு. 37).*

**V. திரோஹித ஸஜாதீய விபூதிகள்:– 56**

**சு. 21: – 1. ரவி; 2. மரீசி.**

**சு. 22: – 3. மன: 4. சேதனா.**

**சு. 23: – 5. ஶங்கர: 6. வித்தேஶ: 7. பாவக: 8. மேரு:**

**சு. 24: – 9. ப்ருஹஸ்பதி: 10. ஸ்கந்த: 11. ஸாகர:**

**சு. 25: – 12. ப்ருகு: 13. ப்ரணவ: 14. ஹிமாலய:**

**சு. 26: – 15. அஶ்வத்த: 16. நாரத: 17. சித்ர ரத:**

**சு. 27: – 18. உச்சைஸ்ஶ்ரவஸ் 19. ஐராவத: 20. நராதிப:**

**சு. 28: – 21. காமதுக் 22. கந்தர்ப்ப: 23. வாஸுகி:**

**சு. 29: – 24. அனந்த: 25. அர்யமா 26. யம:**

**சு. 30: – 27. ப்ரஹ்லாத: 28. கால: 29. ம்ருகேந்த்ர: 30. வைனதேய:**

**சு. 31: – 31. பவன: 32. மகர: 33. ஜாஹ்னவீ.**

**சு. 32: – 34. ஆதி: 35. அந்த: 36. மத்யம் 37. அத்யாத்ம வித்யா 38. வாத:**

**சு. 33: – 39. அகார: 40. த்வந்தவ: 41. அக்ஷய: கால: 42. விச்வதோமுக:**

**சு. 34: – 43. ம்ருத்யு: 44. உத்பவ: 45. கீர்த்தி: 46. ஶ்ரீ: 47. வாக் 48. ஸ்ம்ருதி: 49. மேதா 50. த்ருதி: 51. க்ஷமா.**

சு. 35: – 52. ப்ருஹத்ஸாம 53. காயத்ரீ 54. மார்க்க சீர்ஷ:
55. குஸுமாகர:

சு. 36: – 56. த்யூதம் 57. தேஜ:

சு. 37: – 58. மௌனம்.

**குறிப்பு:** ஸாரதர்மப்ரதமாகவுமுள்ள சேதனா (சு. 22), யம: (சு. 29) என்ற இரண்டு, இந்தப் பிரிவிலும் சேர்ந்துள்ளதால் 58.

श्रीभगवान् उवाच – **ஸ்ரீ பகவான் உவாச** – *ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்குக் கேட்கும் பாக்கியம் உண்டு என்பதைப் ப்ரீயமாணாய, என்ற பதத்தால் குறிப்பிட்டுக் கூறுகிறார்.*

1. भूय एव महाबाहो श्रृणु मे परमं वचः ।
यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यमि हितकाम्यया ॥

பூ⁴ய ஏவ மஹாப³ாஹோ, ஶ்ருணு மே பரமம் வச: |
யத்தேऽஹம் ப்ரீயமாணாய, வக்ஷ்யாமி ஹிதகாம்யயா || 1

**மஹாபாஹோ** – *பெருங்கைகளை உடையவனே!;* **பூய: ஏவ** – *மறுபடியுமே;* **மே** – *என்னுடைய;* **பரமம் வச:** – *மகிமையை விளக்கும் சிறந்த வார்த்தையை;* **ஶ்ருணு** – *கேள் (கேட்டு அதில் சிரத்தையை வை).* **யத்** – *அதை;* **ப்ரீயமாணாய** – *என் வார்த்தையைக்கேட்டு சந்தோஷிக்கும் (சு. 18);* **தே** – *உனக்கு;* **ஹித காம்யயா** – *நன்மையை விரும்பி;* **அஹம் வக்ஷ்யாமி** – *நான் கூறுகிறேன்.*

*அனைத்தையும் சிருஷ்டிக்கும் மகிமையைக் கூறுகிறார்.*

2. न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥

ந மே விது³ஸ் ஸுரக³ணா:, ப்ரப⁴வம் ந மஹர்ஷய: |
அஹமாதி³ர் ஹி தே³வானாம், மஹர்ஷீணாம் ச ஸர்வஶ: || 2

**ஸுரகணா:** – *தேவர் கூட்டங்கள்;* **மே ப்ரபவம்** – *1) என்னுடைய மகிமையையும் 2) என் வசமான உலக உற்பத்தியையும்;* **ந விது:** – *(பூர்ணமாக) அறியார்கள்.* **மஹர்ஷய: ந** – *மகரிஷிகளும் அறியார்கள்.* **ஹி** – *ஏனெனில்;* **அஹம்** – *நான்;* **தேவானாம்** – *அந்த தேவர்களுக்கும்;* **மஹர்ஷீணாம்** – *மகரிஷிகளுக்கும் (4–2)* **ஸர்வஶ: ச** – *மனிதர் முதலிய எல்லோருக்கும்;* **ஆதி:** – *காரணமாய் இருக்கிறேன் (நான் அவர்களைச் சிருஷ்டிப்பவன்).*

*தம்மை அறிவதால் மோக்ஷம் கிடைக்கும் எனக் கூறுகிறார்.*

3. यो मां अजं अनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।
असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥

யோ மாம் அஜம் அநாதி[3]ம் ச, வேத்தி லோக மஹோஶ்வரம் |
அஸம்மூட[4]ஸ் ஸ மர்த்யேஷு, ஸர்வபாபை: ப்ரமுச்யதே || 3

**யோ–ய:** – *(தகுதியுள்ள) யார்;* **அஜம்** – *பிறப்பில்லாதவனும்;* **அநாதிம் ச** – *1* **(அநஸ்சாஸெள ஆதிஸ்ச)** – *அனைவரை இயங்கும்படிச் செய்பவனும், அனைத்துக்கும் காரணமாய் இருப்பவனும்; 2.* **(அநஸ்ய ஆதி:)** *முக்கிய பிராணனுக்குக் காரணனும்;* **லோக மஹேச்வரம்** – *உலக மக்களுக்கு மகா ஸ்வாமியுமான;* **மாம்** – *என்னை;* **வேத்தி** – *அறிகிறானோ;* **ஸ:** – *அவன்;* **மர்த்யேஷு** – *மனிதர்களிடையே;* **அஸம்மூட:** – *விபரீத ஞானமில்லாதவனாய்;* **ஸர்வ பாபை:** – *எல்லா பாபங்களினாலும்;* **ப்ரமுச்யதே** – *அடியோடு விடப்படுகிறான் (மோக்ஷமடைகிறான்).*

**குறிப்பு: அஜம் – அநாதிம் = பிறப்பில்லாதவன் – ஆதி இல்லாதவன். என்றால் இரண்டும் ஒரே அர்த்தமுள்ளவை. ஆகையால் அநாதிம் என்பதற்கு வேறு அர்த்தம் கூறப்பட்டுள்ளது. மேலும், முக்கியப் பிராணனுடைய ஸம்பந்தத்தை அறிந்தால்தான் பாபம் விலகும். மோக்ஷம் கிடைக்கும்.**

*புத்தி முதலிய இருபது விஷயங்களைத்தரும் மகிமையை இரு ஸ்லோகங்களில் கூறுகிறார்.*

4. बुद्धिर्ज्ञानं असंमोहः क्षमा सत्यं दमः शमः ।
सुखं दुःखं भवो भावो भयं च अभयमेव च ॥

5. अहिंसा समता तुष्टिः तपो दानं यशोऽयशः ।
भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥

பு[3]த்தி[4]ர் ஞானம் அஸம்மோஹ:, க்ஷமா ஸத்யம் த[3]ம: ஶம: |
ஸுக[2]ம் து[3]க்க[2]ம் ப[4]வோ ப[4]ாவோ, ப[4]யம் ச அப[4]யமேவ ச || 4

அஹிம்ஸா ஸமதா துஷ்டி: தபோ த[3]ானம் யஶோऽயஶ: |
ப[4]வந்தி ப[4]ாவா: பூ[4]தானாம், மத்த ஏவ ப்ருதகவித[4]ா: || 5

*(1)* **புத்தி:** – *மனம், அல்லது 'இதுதான்' என்று நிச்சயிக்கும் அதன் பகுதி (3–40 குறிப்பு காண்க). (2)* **ஜ்ஞானம்** – *அறிவு. (3)* **அஸம்மோஹ:** – *செய்யத்தகாததில் ஆசையின்மை அல்லது*

விபரீத ஞானமின்மை; *(4)* **க்ஷமா** – பொறுமை அதாவது கோப மின்மையோடுகூட, தீங்கிழைத்தவனுக்குத் தீங்கு செய்யா திருத்தல். *(5)* **ஸத்யம்** – உண்மை பேசுதல் அல்லது அனுஷ்டித்தல். *(6)* **தம:** – இந்திரியங்களை அடக்குதல். *(7)* **ஶம:** – பகவானிடம் புத்தியை ஸ்திரமாக வைத்தல். *(8)* **ஸுகம்** – இன்பம் அதாவது நமக்கு அநுகூலமானது என அறியத் தகுந்தது. *(9)* **துக்கம்** – துன்பம் அதாவது நமக்கு பிரதிகூல மானது என அறியத்தகுந்தது. *(10)* **பவ:** – பிறப்பு *(11)* **பாவ:** – இருத்தல் (**அபாவ:** – பிறர்பாடம்). *(12)* **பயம் ச** – அச்சம். *(13)* **அபயம்** – அச்சமின்மை. **ஏவ ச** – இவையும்;

*(14)* **அஹிம்ஸா** – பிற பிராணிகளைப் பீடிக்காமல் இருத்தல். *(15)* **ஸமதா** – சுகம், துக்கம் முதலிய ஜோடிகளில் ஒரேவிதமாய் இருத்தல் *(6–9 பார்க்க)*. *(16)* **துஷ்டி:** – திருப்தி அதாவது ஶப்தம், ஸ்பர்ஶம் முதலிய விஷயங்களில் போதும் என்ற புத்தி. *(17)* **தப:** – பிரம்மசரியம் முதலியன. *(18)* **தானம்** – தர்மத்தினால் ஸம்பாதித்த பொருள்களை ஸத்பாத்திரத்தில் கொடுத்தல். *(19)* **யஶ:** – திசைகளில் பரந்த புகழ். *(20)* **அயஶ:** – அபகீர்த்தி, இகழ்ச்சி, இம்மாதிரி; **ப்ருதக்விதா:** – பலவிதமான; **பாவா:** – குணங்களும், தன்மைகளும்; **பூதானாம்** – பிராணிகளுக்கு; **மத்த: ஏவ** – என்னிடமிருந்தே; **பவந்தி** – உண்டாகின்றன.

புத்தி முதலிய தர்மங்கள் மாத்திரமல்ல, எல்லா ஜீவர்களும் என்னிடமிருந்து உண்டாகின்றனர் என்கிறார்.

6. महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाताः येषां लोक इमाः प्रजाः ।।

மஹர்ஷயஸ் ஸப்த பூர்வே, சத்வாரோ மனவஸ் தத[2]ா |
மத்ப[4]ாவா: மானஸா ஜாதா:, யேஷாம் லோகே இமா: ப்ரஜா: || 6

**பூர்வே** – முந்திய, முதல் மன்வந்தரத்தின்; **ஸப்த மஹர்ஷய:** – *(1)* மரீசி *(2)* அத்ரி *(3)* அங்கிரஸ் *(4)* புலஸ்த்யர் *(5)* புலஹர் *(6)* க்ரது *(7)* வஸிஷ்டர் என்ற ஏழு மகரிஷிகளும்; **ததா** – அவ்வாறே; **மானஸா: ஜாதா:** – பிரம்மாவின் மனதினால் உண்டானவர் களும்; **பூர்வே** – முதல்வர்களுமான; **சத்வார: மனவ:** – *(1)* ஸ்வாயம்புவர் *(2)* ஸ்வாரோசிஷர் *(3)* ரைவதர் *(4)* உத்தமர் – என்ற நான்கு மனுக்களும் அல்லது நான்கு வர்ணங்களின் அபிமானிகளாய், நான்கு விதமாயுள்ள (மனு அவபோதனே) விசேஷ ஞானம் படைத்த பிரம்மா முதலிய தேவர்களும்;

**மத்பாவா:** *என்னிடமிருந்து பிறந்தவர்கள்.* **லோகே** - *இவ்வுலகில் உள்ள;* **இமா: ப்ரஜா:** - *இந்த மக்கள்;* **யேஷாம்** - *முற்கூறிய மனுக்களின் புத்திர பௌத்திரர்களாக இருக்கின்றனரோ;* **(தே** - *அவர்களும்;* **மத்பாவா:** - *என்னிடமிருந்து பிறந்தவர்கள்).*

**குறிப்பு:** 1. முதல் நான்கு மனுக்கள் **கௌதமகிலம்** என்ற நூலைத்தழுவி கூறப்பட்டுள்ளனர். பாகவதத்தின்படி 3. உத்தமர் 4. தாபஸர் ஆவார்.

2. பிருஹத் பாஷ்யத்தின்படி வர்ணாபிமானி தேவர்கள்:-

(i) பிராம்மணர் - பிரம்மா, பாவகன் என்ற அக்நி.

(ii) க்ஷத்திரியர் - வாயு, 11 ருத்திரர்களில் ஸதாசிவன், சேஷன், கருடன், காமன், வருணன், சந்திரன், சூரியன், யமன் முதலியோர்.

(iii) வைசியர் - 12 ஆதித்யர்களில் 8 பேர்கள். 11 ருத்திரர்களில் 10 பேர்கள், 49 மருத்துக்கள், 8 வஸுக்களில் பாவகனைத் தவிர 7 பேர்கள் முதலியோர்

(iv) ஶூத்திரர் - அச்வினி தேவர்கள், பிருதிவீ, காலன், ம்ருத்யு முதலியோர்.

3. பாகவதம் 3-20-49ல் பிரம்மா மனுக்களைச் சிருஷ்டித்தார் என்றுளது. அவர் அந்தர்யாமியான பகவானே அவர்மூலம் சிருஷ்டிப்பதால், இங்கு 'என்னிடமிருந்து பிறந்தார்கள்' எனப்பட்டது. முற்கூறிய மகிமைகளை அறிவதின் பலனைக் கூறுகிறார்.

7. एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्वतः ।
सोऽविकंपेन योगेन युज्यते नात्र संशयः ॥

ஏதாம் விபூ[4]திம் யோக[3]ம் ச, மம யோ வேத்தி தத்வத: |
ஸோऽவிகம்பேன யோகே[3]ன, யுஜ்யதே நாத்ர ஸம்ஶய: || 7

**ய:** - *யார்;* **மம** - *என்னுடைய;* **ஏதாம் விபூதிம்** - *(விசேஷேணஸ்திதி:) சு. 2ல் கூறிய தேவர் கூட்டங்களால் அறியப்படாதிருக்கும் மகிமையையும் அல்லது கூறப்போகும் விசேஷ ரூபங்களையும்;* **யோகம் ச:** - *சு. 3, 4ல் கூறிய சாமர்த்தியத்தையும்;* **தத்வத:** - *உண்மையாக;* **வேத்தி** - *அறிகிறானோ;* **ஸ:** - *அவன்;* **அவிகம்பேன** - *சஞ்சலமற்ற, ஸ்திரமான;* **யோகேன** - *தியானமாகிற உபாயத்துடன்;* **யுஜ்யதே** - *கூடி யிருப்பான்,* **அத்ர ந ஸம்சய:** - *இவ்விஷயத்தில் சந்தேக மில்லை.*

*மேற்கூறிய பலனில் நம்பிக்கையை உண்டுபண்ண, முற்கூறிய மகிமைகளை அறிந்து, என்னைச் சேவிப்பவர் களுண்டு என்கிறார். (இரு சுலோகங்களில்)*

8. अहं सर्वस्य प्रभवः मत्तः सर्वं प्रवर्तते ।
इति मत्वा भजन्ते मां बुधाः भावसमन्विताः ॥

அஹம் ஸர்வஸ்ய ப்ரப$^4$வ:, மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே |
இதிமத்வா ப$^4$ஜந்தே மாம், பு$^3$த$^4$ா ப$^4$ாவ ஸமன்விதா: || 8

**அஹம்** – *நான்;* **ஸர்வஸ்ய ப்ரபவ:** – *எல்லாவற்றையும் உண்டாக்குபவன்.* **மத்த:** – *என்னிடமிருந்து;* **ஸர்வம்** – *எல்லாம்;* **ப்ரவர்த்ததே** – *இஷ்டானிஷ்ட விஷயங்களில் செயல் படுகிறது;* **இதி** – *என்று;* **புதா:** – *ஞானிகள்;* **மத்வா** – *அறிந்து;* **பாவ ஸமன்விதா:** – *பக்தியுடன் நன்கு கூடினவர்களாய்;* **மாம் பஜந்தே** – *என்னைப் பத்ர புஷ்பாதிகளால் பூஜிக்கிறார்கள், சேவிக்கிறார்கள்.*

**குறிப்பு:** சுலோகத்தின் முன்பாதியில் **அஹம், மத்த:** என்றிருப்பதால், பிற்பாதியில் **மாம்** தேவையில்லை. ஆயினும் இந்த ஞானிகள் தாமே எல்லாவற்றையும் உண்டாக்குபவர்கள், ஸ்ரீ கிருஷ்ணரல்ல என்று அறிந்து பூஜிக்கிறார்கள் என விபரீதமான ஜீவேசுவர ஐக்யமல்ல; என்று அறிவிக்க மீண்டும் **மாம்** என்றார்.

9. मच्चित्ता मद्गतप्रणाः बोधयन्तः परस्परम् ।
कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥

மச்சித்தா: மத்க$^3$தப்ராணா:, போ$^3$த$^4$யந்த: பரஸ்பரம் |
கத$^2$யந்தஸ்ச மாம் நித்யம், துஷ்யந்தி ச ரமந்தி ச || 9

*(அந்த ஞானிகள்)* **நித்யம்** – *எப்போதும்;* **மச்சித்தா:** – *என்னிடம் மனதுள்ளவர்களாயும்;* **மத்கதப்ராணா:** – *(அன சேஷ்டாயாம்) என்னைப் பற்றிய செயல்களைப் புரிபவர்களாயும்;* **மாம்** – *என்னை;* **போதயந்த:** – *ஶிஷ்யர்களுக்கு உபதேசத்தால் அறிவிப்பவர்களாயும்;* **பரஸ்பரம் கதயந்த: ச** – *ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு இருப்பவர்களாயும்;* **துஷ்யந்தி** – *சிற்றின்பங்களில் போதுமென்ற திருப்தி அடைகிறார்கள்.* **ரமந்தி ச** – *பேரின்பத்தையும் அனுபவிக்கிறார்கள்.*

*அவர்கள் ஸேவிப்பதால் அடையும் பலனை இரு சுலோகங்களில் கூறுகிறார்.*

10. तेषां सततयक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मां उपयान्ति ते ॥

தேஷாம் ஸததயுக்தானாம், ப$^4$ஜதாம் ப்ரீதிபூர்வகம் |
த$^3$த$^3$ாமி பு$^3$த்தி$^4$யோக$^3$ம் தம், யேன மாம் உபயாந்தி தே || 10

**ஸததயுக்தானாம்** – *(8-7) பார்க்க. எப்போதும் என்னிடம் பதிந்த மனதை உடையவர்களும்;* **ப்ரீதி பூர்வகம்** – *அன்பை முன்னிட்டு; (***மாம்** – *என்னை);* **பஜதாம்** – *சேவிப்பவர் களுமான;* **தேஷாம்** – *அந்த ஞானிகளுக்கு;* **யேன** – *எதனால்;* **தே** – *அவர்கள்;* **மாம்** – *என்னை;* **உபயாந்தி** – *அடைகிறார் களோ;* **தம்** – *அந்த;* **புத்தியோகம்** – *அபரோக்ஷ ஞானமாகிற முக்தி உபாயத்தை;* **ததாமி** – *கொடுக்கிறேன்.*

அநாதி அஜ்ஞானத்தினால் ஏற்பட்ட பந்தம் இருக்கையில் உம்மை எப்படி அடையமுடியும்? என்றால் கூறுகிறார்.

11. तेषामेव अनुकंपार्थं अहं अज्ञानजं तमः ।
नाशयामि आत्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥

தேஷாமேவ அநுகம்பார்த்த²ம், அஹம் அஜ்ஞானஜம் தம: |
நாஶயாமி ஆத்மப⁴ாவஸ்தே²ா, ஜ்ஞானதீ³பேன ப⁴ாஸ்வதா || 11

**அஹம்** – *நான்;* **தேஷாம்** – *அவர்களுடைய;* **அநுகம் பார்த்தம் ஏவ** – *அநுக்ரஹத்தின்பொருட்டே (எந்த பலனையும் எதிர்பாராமல்);* **ஆத்ம பாவஸ்த:** – *அவர்களின்,* **ஆத்ம** – *மனதின்,* **பாவ** – *வ்ருத்தியில்,* **ஸ்த:** – *இருந்துகொண்டு;* **பாஸ்வதா** – *இருளை (அஜ்ஞானத்தை) போக்கும் சக்தியுடன் பிரகாசிக்கிற;* **ஜ்ஞானதீபேன** – *அபரோக்ஷ ஞானம் என்ற விளக்கினால் (***தேஷாம்** – *அவர்களுடைய);* **அஜ்ஞானஜம்** – *அநாதி அஜ்ஞானத்தினால் ஏற்பட்ட;* **தம:** – *இருளை, அதாவது, இன்பதுன்பங்களாகிற பந்தத்தை;* **நாஶயாமி** – *போக்கடிக்கிறேன் (அதனால் என்னை அடைவார்கள்).*

अर्जुनः उवाच – **அர்ஜுன: உவாச** – *அர்ஜுனன் இவ்வாறு சுருக்கமாகக் கூறிய விபூதியையும், ஸாமர்த்தியத்தையும் கேட்டு விஸ்தாரமாக அறிய விரும்பி அவரைத்துதித்து, (12 முதல் 18 வரை) 7 சுலோகங்களில் வேண்டுகிறான்.*

12. परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्यं आदिदेवं अजं विभुम् ॥

13. आहुस्त्वां ऋषयः सर्वे देवर्षिः नारदस्तथा ।
असितो देवलोव्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥

பரம் ப்ரஹ்ம பரம் த⁴ாம, பவித்ரம் பரமம் ப⁴வான் |
புருஷம் ஶாஶ்வதம் தி³வ்யம், ஆதி³தே³வம் அஜம் விபு⁴ம் || 12

ஆஹுஸ்த்வாம் ரிஷயஸ்ஸர்வே, தே$^3$வர்ஷி: நாரத$^3$ஸ்தத$^2$ா |
அஸிதோ தே$^3$வலோ வ்யாஸ:, ஸ்வயம் சைவ ப்$^3$ரவீஷி மே || 13

**கேஶவ** *(சு. 14)* – *பிரம்மருத்திரர்களின் நியாமகரே !;* **பவான்** – *தாங்கள்;* **பரம்** – *உத்தமமான;* **ப்ரஹ்ம** – *பரிபூர்ண வஸ்து.* **பரம் தாம** – *உத்தமமான ஆசிரயம்.* **பரமம் பவித்ரம்** – *உத்தமமான பரிசுத்த வஸ்து. (யார் சொன்னார்?) சு. 13.* **ஸர்வே ரிஷய:** – *எல்லா ரிஷிகளும்;* **த்வாம்** – *உம்மை; சு. 12.* **புருஷம்** – *பூர்ணமான ஆறு குணங்களுடையவராகவும்;* **ஶாஶ்வதம்** – *மாறுதலடையாதவராகவும்;* **திவ்யம்** – *உலகிலிருந்து வேறு பட்டவராகவும்;* **ஆதி தேவம்** – *முதற் கடவுளாகவும்;* **அஜம்** – *பிறப்பில்லாதவராகவும்;* **விபும்** – *(விஷ்டதயா விவிததயா ச பவதி) ஸர்வோத்தமராகவும், பலவித ரூபங்களையுடைய வராகவும்; சு. 13.* **ஆஹு:** – *சொல்கிறார்கள். (அவர்கள் ஸாதாராண ரிஷிகள் என்றால்);* **தேவர்ஷி: நாரத: ததா** – *தேவரிஷியான நாரதரும் அவ்வாறு கூறுகிறார் (அவருடைய வார்த்தையை நம்பாதே என்றால்);* **அஸித: தேவல:** – *என் புரோகிதரான தௌம்யாசாரியரின் தந்தையான அஸிதரும், தமையனான தேவலரும் கூறுகின்றனர். (சொல்பவர்கள் ஆயிரம் சொல்வார்கள், யாராவது எழுதியிருக்கிறாரா? என்றால்);* **வ்யாஸ:** – *ஸ்ரீ வேதவியாஸர் (பிரம்மசூத்திரம், பாரதம் 18 புராணங்கள் முதலியவற்றில் எழுதியிருக்கிறார்) அவர்கள் சொல்லலாம். வியாஸர் எழுதியிருக்கலாம். நான் சொல்லியிருக்கிறேனா? என்றால்);* **ஸ்வயம் ச ஏவ** – *நீரே;* **மே** – *எனக்கு;* **ப்ரவீஷி** – *7–7ல்,* **மத்த: பரதரம் நாஸ்தி:** *சு. 8ல், அஹம் ஸர்வஸ்ய ப்ரபவ: முதலிய பலவிடங்களில்) கூறியிருக்கிறீர்.*

குறிப்பு: (1) ஞானம், ஶக்தி, பலம், ஐசுவரியம், வீர்யம், தேஜஸ் என்பன ஆறு குணங்களாகும். ஆகவே பகவான் எனப்படுபவர்.

(2) ரிஷிகளில் ஏழு வகையினரை 4–2ல் காண்க.

(3) ஸ்ரீ வியாஸர் 60 லக்ஷம் கிரந்தங்களாகிய மகாபாரதத்தை இயற்றி, 30 லக்ஷம் கிரந்தங்களை தேவர்களுக்குச் சொல்ல நாரதரையும், 15 லக்ஷம் கிரந்தங்களைப் பித்ருக்களுக்குச் சொல்ல அஸிதர், தேவலர் இருவரையும், 14 லக்ஷம் கிரந்தங்களை கந்தர்வர்கள் முதலியோருக்குச் சொல்ல ஶுகரையும், 1 லக்ஷம் கிரந்தங்களை ஜனமேஜயராஜனுக்குச் சொல்ல வைஶம்பாயனரையும் நியமித்தார்.

அவர்கள் சொல்லியிருக்கலாம், வியாஸர் எழுதியிருக்க லாம். நானும் சொல்லியிருக்கலாம். உன் அபிப்பிராயம் யாது? என்றால் கூறுகிறான்.

14. सर्वमेतत् ऋतं मन्ये यन्मां वदसि केशव ।
न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥

15. स्वयमेव आत्मना आत्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।

ஸர்வமேதத் ரிதம் மன்யே, யன்மாம் வத[3]ஸி கேஶவ |
நஹி தே ப[4]க[3]வன் வ்யக்திம், விது[3]ர்தே[3]வா: ந த[3]ானவா: || 14

ஸ்வயமேவ ஆத்மனாऽத்மானம், வேத்த[2]த்வம் புருஷோத்தம |

**கேஶவ** – *பிரம்மருத்திரநியாமகரே!* **நீர், யத்** – *எதை;* **மாம்** – *என்னிடம்;* **வதஸி** – *சொல்லியிருக்கிறீரோ;* **ஏதத் ஸர்வம்** – *இந்த எல்லா மகிமையையும்;* **ரிதம்** – *உண்மையே என்று;* **மன்யே** – *அறிகிறேன்.* **பகவன்** – *ஆறு குணங்களை உடையவரே!;* **தே** – *உம்முடைய;* **வ்யக்திம்** – *ஸாமர்த்தியத்தின் மேன்மையை;* **தேவா:** – *பிரம்மாதி தேவர்கள்;* **ந விது:** – *(பூர்ணமாக) அறியார்கள் (சு. 2).* **தானவா:** – *தானவர்களும்;* **ந** – *அறியார்கள்.* **ஹி** – *(ந யஸ்யேந்த்ரோ, வருணோ மித்ர: – முதலிய சுருதிகளில்) பிரஶித்தமாயுள்ளது.*

**குறிப்பு:** பகைவர்களான தானவர்கள் பகவானை நிந்திப்பதற்காக, அவர் மகிமைகளை அறிய முயன்றாலும்கூட அறியார்கள்.

பின் யார்தான் அறிவார்கள்? என்றால் கூறுகிறான்.

*15.* **புருஷோத்தம** – *உத்தம புருஷரே! (க்ஷராக்ஷர புருஷர்களைக் காட்டிலும் உத்தமர் என 15–18ல் கூறப்போகிறார்).* **த்வம்** – *நீர்தான்;* **ஸ்வயம் ஏவ** – *வேறு எதையும் அபேக்ஷியாமலேயே;* **ஆத்மனா** – *உமது ஸாமர்த்தியத்தினால்;* **ஆத்மானம்** – *உம்மை;* **வேத்த** – *அறிவீர்.*

பகவானைத் துதித்து வேண்டுகிறான்.

भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥

16. वक्तुमर्हसि अशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।
याभिर्विभूतिभिर्लोकान् इमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥

பூ[4]தப[4]ாவன பூ[4]தேச, தே[3]வதே[3]வ ஜகத்பதே || 15

வக்து மர்ஹஸி அசேஷேண, தி[3]வ்யா ஹ்யாத்ம விபூ[4]தய: |
யாபி[4]ர் விபூ[4]திபிர் லோகான், இமான் த்வம் வ்யாப்ய திஷ்ட[2]ஸி || 16

**பூதபாவன** – *ஜீவ ஜடப்பொருளைச் சிருஷ்டிப்பவரே!;* **பூதேச** – *அந்தப் பூதங்களின் ஸ்வாமியே!;* **தேவ தேவ** – *தேவர்களுக்கெல்லாம் தேவரே!;* **ஜகத்பதே** – *உலகங்களின்*

யஜமானரே!; **ஹி** – பிரஸித்தமான; **திவ்யா:** – உலக விலக்ஷண மான; (யா: – எந்த); **ஆத்ம விபூதய:** – உம்முடைய உத்தமமான ராமர், கிருஷ்ணர் முதலிய பல ரூபங்களோ; **யாபி: விபூதிபி:** – எந்த ரூபங்களால்; **த்வம்** – நீர்; **இமான் லோகான்** – இந்த உலகங்களை; **வ்யாப்ய** – வியாபித்து; **திஷ்டஸி** – இருக்கிறீரோ; (தா: – அவைகளை); **அபேஷேண** – மீதியில்லாமல் எல்லா வற்றையும்; **வக்தும்** – சொல்வதற்கு; **அர்ஹஸி** – தகுந்தவராய் இருக்கிறீர்.

நித்யம் என்னை தியானிப்பதால், என் விபூதிகளை அறியலாமே! நான் சொல்வானேன்? என்றால், 2 சுலோகங்களில் கூறுகிறான்.

17. कथं विद्यामहं योगिन् त्वां सदा परिचिन्तयन् ।
केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया ॥

கத²ம் வித்³யாமஹம் யோகி³ன், த்வாம் ஸத³ா பரிசிந்தயன் |
கேஷு கேஷு ச ப⁴ாவேஷு, சிந்த்யோऽஸி ப⁴கவன் மயா || 17

**யோகின்** – அனந்த சக்தி வாய்ந்தவரே!; **த்வாம்** – உம்மை; **ஸதா** – எப்பொழுதும்; **பரிசிந்தயம் (அபி)** – ஆழ்ந்து தியானித்துக் கொண்டிருந்தும்கூட (நீர் சொல்லாவிட்டால்); **அஹம் கதம் வித்யாம்** – நான் (அந்த விபூதிகளை) எப்படி அறிவேன்? ஆகையால், **பகவன்** – ஆறு குணங்களுள்ளவரே!; **மயா** – என்னால்; **கேஷு கேஷு ச** – எந்தெந்த; **பாவேஷு** – பொருள்களில்; (**ஸ்தித:** – அவற்றின் ஜாதிக்கு ஏற்றத்தைத் தருபவராய் இருக்கிறீர் என்று); **சிந்த்ய: அஸி** – தியானிக்கத் தகுந்தவராய் இருக்கிறீர்?

18. विस्तरेण आत्मनो योगं विभूतिं च जनार्दन ।
भूयः कथय तृप्तिर्हि श्रृण्वतो नास्ति मेऽमृतम् ॥

விஸ்தரேண ஆத்மனோ யோக³ம், விபூ⁴திம் ச ஜநார்த³ன |
பூ⁴ய: கத²ய த்ருப்திர்ஹி, ஶ்ருண்வதோ நாஸ்தி மேऽம்ருதம் || 18

**ஜநார்தன** – (1–35; 3–1) பிறப்பில்லாதவரே! ஸம்ஸாரத்தை அழிப்பவரே! துஷ்ட ஜனங்களைக் கொல்பவரே! பக்த ஜனங்களால் வேண்டப்படுபவரே!; **ஆத்மன:** – தங்களுடைய; **யோகம்** – சாமர்த்தியத்தையும்; **விபூதிம் ச** – வஸ்துக்களுக்கு ஏற்றத்தைத் தரும் பலவித ரூபங்களையும்; **விஸ்த்ரேண** – விரிவாக; **பூய:** – மறுபடியும் (7–8; 9–16); **கதய** – சொல்லும்; **ஹி** – ஏனெனில்; (**தே** – உம்முடைய) **அம்ருதம்** – வார்த்தை களாகிற

அமிருதத்தை, **ஶ்ருண்வத:** - கேட்கும்; **மே** - எனக்கு; **த்ருப்தி:** - போதும் என்ற புத்தி; **ந அஸ்தி** - ஏற்படவில்லை.

**குறிப்பு: விஸ்தர:**– சொற்களின் விரிவு. **விஸ்தார:**– அர்த்தத்தின் விரிவு என்ற பேதத்தை அறிக.

श्रीभगवान् उवाच - **ஶ்ரீ பகவான் உவாச** - ஶ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனின் பிரார்த்தனைக்குப் பதிலளித்து உறுதி கூறுகிறார்.

19. हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।
प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥

ஹந்த தே கத²யிஷ்யாமி, தி³வ்யா ஹ்யாத்ம விபூ⁴தய: |
ப்ராத⁴ான்யத: குருச்ரேஷ்ட, நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே || 19

**குருச்ரேஷ்ட** - குருவம்சத்திற் சிறந்தவனே!; **ஹந்த** - சந்தோஷம். **திவ்யா:** - உலக விலக்ஷணமான; (**யா:** - எந்த); **ஆத்ம விபூதய:** - வஸ்துக்களுக்கு ஏற்றத்தைத் தரும் என் பலவித ரூபங்களோ; (**தா:** - அந்த); **ப்ராதான்யத:** (ஸ்திதா:) - முக்கியமாக இருப்பவைகளை; **தே** - உனக்கு; **கதயிஷ்யாமி** - சொல்வேன். **ஹி** - ஏனெனில்; **மே** - என்னுடைய; **விஸ்தரஸ்ய** - விரிவான விபூதி ராசிகளுக்கு; **அந்த: ந அஸ்தி** - முடிவில்லை. (ஆகையால் எல்லாவற்றையும் கூறமுடியாது.)

சுலோகம் 17ல், எந்தெந்தப் பொருள்களில் தியானிக்கத் தகுந்தவர்? என்றதற்கு, தாம் எல்லாப் பொருள்களிலும் இருப்பதை, முதலில் பொதுவாகக் கூறுகிறார்.

20. अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।
अहमादिश्च मध्यं च भूतानां अन्त एव च ॥

அஹமாத்மா கு³டா³கேஶ, ஸர்வபூ⁴தாஶய ஸ்தி²த: |
அஹமாதி³ஸ்ச மத்⁴யம் ச, பூ⁴தானாம் அந்த ஏவ ச || 20

**குடாகா ஈச** (1-24; 2-9; 11-7) - தூக்கத்தை வென்றவனே!; **அஹம்** - நான்; **ஆத்மா** (அபி) - எங்கும் வியாபித்த வனாயினும்; **ஸர்வபூத ஆஶய ஸ்தித:** - எல்லா பிராணிகளின் ஹ்ருதய குகையில் இருக்கிறேன். **அஹம் ஏவ** - நானே; **பூதானாம்** - எல்லாப் பிராணிகளுக்கும்; **ஆதி: ச** - ஆரம்ப மாகவும் (சிருஷ்டிப்பவனாகவும்); **மத்யம் ச** - நடுவாகவும் (காப்பாற்று பவனாகவும்); **அந்த: ச** - முடிவாகவும் (அழிப்ப வனாகவும்) இருக்கிறேன் (சு. 32).

இது முதல் சுலோகம் 38 முடிய 18 சுலோகங்களில் விபூதி ரூபங்களைக் கூறுகிறார்.

21. आदित्यानां अहं विष्णुः ज्योतिषां रविरंशुमान् ।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥

ஆதி[3]த்யானாம் அஹம் விஷ்ணு:, ஜ்யோதிஷாம் ரவி ரம்ஶுமான் |
மரீசிர் மருதாமஸ்மி, நக்ஷத்ராணாம் அஹம் ஶஶீ || 21

**ஆதித்யானாம்** – *அதிதிதேவியின் புத்திரர்களான 12 பேர்களிடையே;* **அஹம்** – *நான்;* **விஷ்ணு:** – *விஷ்ணு என்பவனாக;* **அஸ்மி** – *இருக்கிறேன். எங்கும் வியாப்தனாயும், எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்திருப்பதாலும், விஷ்ணு எனப் பெயருள்ளவன்.* **ஜ்யோதிஷாம்** – *ஒளியுள்ள பொருள் களிடையே;* **அம்ஶுமான்** – *உலக முழுவதும் பரவிய கிரணங் களையுடைய;* **ரவி:** – *சூரியனாக இருக்கிறேன். அதாவது, (ரவேண ஈயதே இதி ரவி:) வேத சப்தங்களினால் அறியப் படுவதால் ரவி என்ற பெயருள்ள ரூபத்துடன் சூரியனுக்குள் உள்ளேன்.* **மருதாம்** – *49 வாயுக்களிடையே;* **மரீசி:** – *மரீசி (ப்ரவஹன்) என்பவனாக;* **அஸ்மி** – *இருக்கிறேன். அதாவது,* **மர:** – *ஜலம்;* **அஸ்ய அஸ்தி இதி மரீ** – *மேகம்;* **தம் சாலயதி** – *அதை அடித்துச் செல்வதால் மரீசி என்ற பெயருள்ள ரூபத்துடன் அவனுக்குள் உளேன்.* **நக்ஷத்ராணாம்** – *அச்வினி முதலிய நக்ஷத்திரங்களிடையே;* **அஹம்** – *நான்;* **ஶஶீ** – *சந்திரனாக இருக்கிறேன். அதாவது, (ஶம் அஸ்ய அஸ்தி இதி* ***ஶஶீ*** *) அதிக சுகமுள்ளவன் ஆதலால்* ***ஶஶீ*** *என்ற பெயருள்ள ரூபத்துடன் சந்திரனுக்குள் உளேன்.*

**குறிப்பு:** 1. தாதா धाता 2.. அர்யமன் 3. மித்ரன் 4. வருணன் 5. இந்திரன் 6. விவஸ்வான் 7. த்வஷ்டா 8. விஷ்ணு 9. அம்சு 10. பக: भग: 11. பூஷா 12. பர்ஜன்யன் என்ற 12 ஆதித்யர்கள் 12 மாதங்களின் தேவதைகள் ஆவர். (பாகவதம் 12-11அ) இவர்களை அனைவரும் பார்க்க முடியுமாதலால், விஷ்ணு என்ற ரூபம் பிரத்யக்ஷ விபூதி எனப்படும். இத்துடன் 1. கபிலர் (சு. 26) 2. ராமர் (சு. 31); 3. வியாஸர் (சு. 37); 4. கிருஷ்ணர் (சு. 37) என்ற ரூபங்களும் சேர்ந்துமொத்தம் ஐந்து பிரத்யக்ஷ விபூதிகளாகும்.

ரவி என்ற ரூபம், சூரியனுக்குள் இருப்பதால், பார்க்க முடியாதது. ஆகையால், திரோஹித விபூதி எனப்படும். இந்த விபூதிகளில் சில, ஒரே இனத்தைச் சேர்ந்த வஸ்துவில் இருந்தால், ஸஜாதீய விபூதி எனவும், வேறு இனத்தைச் சேர்ந்த வஸ்துவில் இருந்தால், விஜாதீய விபூதி எனவும்

சொல்லப்படும். அம்முறையில், ரவி என்ற ரூபம், ஸஜாதீய விபூதியும், ஶஶீ என்ற ரூபம் விஜாதீய விபூதியும் ஆகும். சந்திரன், நக்ஷத்திர இனத்தைச் சேர்ந்தவன் அல்ல. சு.29ல் வருணன் என்ற விபூதி ரூபமும், விஜாதீய விபூதியாகும். வருணன் ஜலஜந்துக்களின் இனத்தைச் சேர்ந்தவனல்ல.

49 வாயுக்களில் ப்ரவஹன் என்பவனுக்கே மரீசி என்று பெயர். (கீதாதாத்பர்யம்) 13-7ல் வாயுபுத்திரனான மரீசி வேறு. ஜலத்தில் விழுந்தவர்கள் மரிப்பதால் ஜலத்துக்கு மர: என்று பெயர்.

22. वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।
इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥

வேத³ானாம் ஸாமவேதே³ாSஸ்மி, தே³வானா மஸ்மி வாஸவ: |
இந்த்ரியாணாம் மனஸ்சாஸ்மி, பூ⁴தானாமஸ்மி சேதனா || 22

**வேதானாம்** – *நான்கு வேதங்களிடையே;* **ஸாமவேத: அஸ்மி** – *ஸாமவேதமாய் இருக்கிறேன். அதாவது, எல்லோரிடமும், எல்லா ரூபங்களிலும், ஸமமாய் இருப்பதால் (ஸாம), எல்லாவற்றையும் அறிவதால் (வேத:), ஸாம வேதம் என்ற பெயருள்ள ரூபத்துடன் ஸாம வேதத்தில் உளேன்.* **தேவானாம்** – *தேவர்களிடையே;* **வாஸவ: அஸ்மி** – *இந்திரனாக இருக்கிறேன். (அதாவது,* **வஸந்தி அத்ர இதி வாஸ:** – *எல்லா இடங்கள்;* **தத்ர வர்த்ததே** – *அங்கு இருப்பவன்; ஆதலால் வாஸவன் என்ற பெயருள்ள ரூபத்துடன் இந்திரனுள்ளே உளேன்.)* **இந்த்ரியாணாம் ச** – *இந்த்ரியங்களிடையேயும்;* **மன: அஸ்மி** – *மனதாக இருக்கிறேன். (அதாவது* **மனுதே இதி** – *ஞானஸ்வரூபியானதால் மனஸ் என்ற பெயருள்ள ரூபத்துடன், மனதில் உளேன்.)* **பூதானாம்** – *பிராணிகளின்;* **சேதனா** – *பல விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும் சக்தியாக (3-40);* **அஸ்மி** – *இருக்கிறேன். (அதாவது, அவ்வித ஞாபகசக்தி என்ற சிரேஷ்டமான தர்மத்தைத் தருபவனாக உளேன். அல்லது,* **சேதோ நேத்ருத்வாத் சேதனா** – *மனதை நியமிப்பதால் சேதனா என்ற பெயருள்ள ஸ்த்ரீ ரூபத்துடன் பிராணிகளுக்குள் உளேன்.)*

**குறிப்பு: 1. (a) வேதங்களிடையே ரிக்வேதம்தான் உயர்ந்தது. (வேதேஷுரிக்வேத உச்யதே). அதையடுத்து ஸாம வேதம் உயர்ந்தது. ஆகவே, ஸாமவேதம் உயர்ந்தவைகளில் ஒன்றாகுமே தவிர (one of the best), அதுவே எல்லாவற்றிலும் உயர்ந்ததல்ல (not the best). இவ்வித விபூதிகள், ஸஜாதீய ஏகதேச விபூதிகள் எனப்படுவன.**

**1. (b) ரிக்வேதத்திற்கு - லக்ஷ்மீ, ஸரஸ்வதி, பார்வதி முதலியோர் அபிமானிகளாவர். ஸாமவேதத்திற்கு - வாயு, சிவன் முதலியோர்**

 


அபிமானிகளாவர். ஸாமவேத அபிமானிகளான வாயுவும், சிவனும், ரிக்வேதாபிமானிகளான சரஸ்வதி, பார்வதியைக்காட்டிலும் முறையே உயர்ந்தவரானதால், ரிச: ஸாம ரஸ: (சாந்தோக்யம்) ரிக்வேதத்தைக் காட்டிலும், ஸாமவேதம் உயர்ந்தது எனப்பட்டுள்ளது. ஸாம வேதம், ரிக் வேதத்தைக்காட்டிலும் உயர்ந்தது என்று அல்ல.

2. இந்திரன் தேவர்களிடையே உயர்ந்தவனல்ல. அவனைக் காட்டிலும் சிவன். வாயு, பிரம்மா முதலிய உயர்ந்தவர்கள் உள்ளனர். ஆகவே, வாஸவ: என்பது ஸஜாதீய ஏகதேச விபூதியாகும். அர்ஜுனன் இந்திரனின் அவதாரமானதால், அவனைப் புகழவே இந்திரனைக் கூறியுள்ளார். (சு. 27-28-37 பார்க்க)

3. **சேதனா** - ஞாபகசக்தி என்ற அர்த்தத்தில் ஸாரதர்ம ப்ரதவிபூதி எனப்படும். மனதை நியமிப்பவன் என்ற அர்த்தத்தில் திரோஹித விபூதியாகும்.

23. रुद्राणां शङ्करश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।
वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥

ருத்[3]ராணாம் ஶங்கரஸ் சாஸ்மி, வித்தேஶோ யக்ஷ ரக்ஷஸாம் |
வஸூனாம் பாவகஸ்சாஸ்மி, மேரு: ஶிக[2]ரிணாமஹம் || 23

**அஹம்** - *நான்;* **ருத்ராணாம் ச** - *11 ருத்திரர் களிடையேயும்;* **ஶங்கர: அஸ்மி** - *ஶங்கரன் என்பவனாக இருக்கிறேன். அதாவது ஸுகத்தைத் தருபவனாதலால் ஶங்கரன் என்ற பெயருள்ள ரூபத்துடன் ஶங்கரனுக்குள் உளேன்.* **யக்ஷரக்ஷஸாம்** - *யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் இவர்களிடையே;* **வித்தேச:** - *குபேரனாக இருக்கிறேன். (அதாவது, செல்வத்தின் யஜமானனாய் இருப்பதால் வித்தேசன் என்ற பெயருள்ள ரூபத்துடன் குபேரனுக்குள் உளேன்.)* **வஸூனாம் ச** - *எட்டு வஸுக்களிடையேயும்;* **பாவக: அஸ்மி** - *அக்னியாக இருக்கிறேன். அதாவது, ((***பாவயதி இதி பாவக:***) சுத்தமாக்குபவன் ஆனதால் பாவகன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அக்னிக்குள் உளேன்.)* **ஶிகரிணாம்** - *சிகரங்களையுடைய மலை களிடையே;* **மேரு:** - *மேருமலையாக இருக்கிறேன். (அதாவது, (மா - ந வித்யதே;* **ஈர:** - *ப்ரேரக: யஸ்ய மேர: ஸ ஏவ மேரு:) என்னைப் பிரேரிப்பவன் இல்லாததால் மேரு என்ற பெயருள்ள ரூபத்துடன், மேரு மலைக்குள் உளேன்.)*

**குறிப்பு:** 11 ருத்திரர்களின் பெயர்கள் பல இடங்களில் பலவாறாகக் கூறப்பட்டுள்ளன. ஆயினும், பிரசித்தமானவை 1. அஜைகபாத் 2. அஹிர்புத்னி 3. வீரபத்ரன் 4. கிரிசன் 5. ஶங்கரன் 6. அபராஜிதன் 7. ஹரன் 8. அங்காரகன் 9. பினாகன் 10. பகன் भगः 11. ஶம்பு.

பாகவதம் 6-6-11ல் எட்டு வஸுக்கள்:- 1. த்ரோணன் 2. பிராணன் 3. த்ருவன் 4. அர்க்கன் 5. அக்னி (பாவகன்) 6. தோஷ: दोषः 7. வஸு 8. விபாவஸு.

24. पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।
सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥

புரோத$^{4}$ஸாம் ச முக்$^{2}$யம் மாம், வித்தி$^{4}$ பார்த்த$^{2}$ ப்$^{3}$ருஹஸ்பதிம் |
ஸேனானீனாம் அஹம் ஸ்கந்த$^{3}$:, ஸரஸாம் அஸ்மி ஸாக$^{3}$ர: || 24

**பார்த்த** - *குந்தீபுத்திரனே !;* **புரோதஸாம் ச** - *புரோஹிதர் களிடையேயும்;* **முக்யம்** - *முக்கியரான;* **ப்ருஹஸ்பதிம்** - *பிருகஸ்பதியாக;* **மாம்** - *என்னை;* **வித்தி** - *அறிவாயாக. (அதாவது (ப்ருஹதாம் பதி:) பெரியோர்களின் தலைவனான தால் ப்ருஹஸ்பதி என்ற பெயருள்ள ரூபத்துடன் அவருக்குள் உளேன்.)* **ஸேனானீனாம்** - *சேனைத் தலைவர்களிடையே;* **அஹம்** - *நான்;* **ஸ்கந்த:** - *முருகனாகவிருக்கிறேன். (அதாவது (ஸ்கந்தனாத் ஸ்கந்த:) என்னிடமிருந்து உலகத்தை வெளி யேற்றுவதால் ஸ்கந்தன் என்ற பெயருள்ள ரூபத்துடன் முருகனுக்குள் உளேன்.)* **ஸரஸாம்** - *நீர்நிலைகளிடையே;* **ஸாகர: அஸ்மி** - *ஸமுத்திரமாகவிருக்கிறேன். அதாவது* **(கிரதி இதி கர:** - *விழுங்குபவன்;* **ஸாரஸ்ய கர:** - *ஸாரத்தைச் சாப்பிடு பவன் ஆதலால் ஸாகரன் என்ற பெயருள்ள ரூபத்துடன் சமுத்திரத்திற்குள் உளேன்.)*

25. महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।
यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥

மஹர்ஷீணாம் ப்$^{3}$ருகுரஹம், கி$^{3}$ராம்அஸ்மி ஏகமக்ஷரம் |
யஜ்ஞானாம் ஜபயஜ்ஞோऽஸ்மி, ஸ்த$^{2}$ாவராணாம் ஹிமாலய: || 25

**மஹர்ஷீணாம்** - *மகரிஷிகளிடையே;* **அஹம்** - *நான்;* **ப்ருகு:** - *ப்ருகுரிஷியாக இருக்கிறேன் (அதாவது (பர்ஜனாத் ப்ருகு:) விரோதிகளை எரிப்பதால் ப்ருகு என்ற பெயருள்ள ரூபத்துடன் அந்த ரிஷிக்குள் உளேன்.)* **கிராம்** - *வார்த்தை களிடையே;* **ஏகம் அக்ஷரம்** - *ஒரு எழுத்தான ஓம் என்ற ப்ரணவமாகவிருக்கிறேன். (அதாவது,* **ஏகம்** - *முக்கியனாயும்* **அக்ஷரம்** - *(சு. 2-17) நான்குவித நாசமில்லாதவனாயும் இருப்பதால், ஏகாக்ஷரம் என்ற பெயருள்ள ரூபத்துடன் பிரணவத்தில் உளேன்.)* **யஜ்ஞானாம்** - *யாகங்களிடையே;* **ஜப யஜ்ஞ: அஸ்மி** - *ஜபமாகிற யாகமாயிருக்கிறேன். (அதாவது*

 


(ஜான் பாதி) பிறந்தவர்களைக் காப்பதால் ஜப;, யாஜ்யத்வாத் **யஜ்ஞ:** - பூஜிக்கத் தகுந்தவனானதால் யஜ்ஞ: ஆகவே ஜபயஜ்ஞன் என்ற பெயருள்ள ரூபத்துடன் ஜபத்தில் உளேன்.) **ஸ்தாவராணாம்** - அசையாப் பொருள்களிடையே; **ஹிமாலய:** - இமயமலையாகவிருக்கிறேன். (அதாவது (ஹ்ரீ: ச, மாச, தயோ: ஆலய: ஹ்ரீமாலய: | ஸ ஏவ ஹிமாலய:) ஹ்ரீ, ஸ்ரீ என்ற லக்ஷ்மியின் இரண்டு ரூபங்களுக்கு ஆசிரயமா யிருப்பதால், ஹிமாலயன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அந்த மலைக்குள் உளேன்.)

**குறிப்பு:** (1) 4-2 குறிப்பில் ரிஷிகளின் ஏழு வகையினரைக் காண்க. பாகவதம் 10-89அத்தியாயத்தில், மும்மூர்த்திகளில் சிறந்தவர் விஷ்ணுவே; என்று நேரில் அறிந்து வந்து முடிவு கூறிய தால் ப்ருகு ரிஷிக்கு ஏற்றத்தைத் தந்துள்ளார்.

(2) ஜ்ஞானம் யஜ்ஞேஷு சோத்தமம் - யஜ்ஞங்களில் ஞானயஜ்ஞம்தான் சிறந்தது. அதையடுத்துத்தான் ஜபயஜ்ஞம் சிறந்தது. ஆகவே இது ஸஜாதீய ஏகதேச விபூதியாகும். சு.22 பார்க்க.

26. अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।
गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥

அஶ்வத்தஸ் ஸர்வவ்ருக்ஷாணாம், தே[3]வர்ஷீணாம் ச நாரத[3]: |
க[3]ந்த[4]ர்வாணாம் சித்ரரத[2]:, ஸித்த[4]ானாம் கபிலோ முனி: || 26

**ஸர்வ வ்ருக்ஷாணாம்** - எல்லா மரங்களிடையே; **அஶ்வத்த:** - அரசமரமாக இருக்கிறேன். (அதாவது (அச்வ வத் திஷ்டதி) குதிரை போன்றிருப்பதால், அச்வத்தன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அந்த மரத்துக்குள் உளேன்.) **தேவர்ஷீணாம் ச** - தேவரிஷிகளிடையேயும்; **நாரத:** - நாரதராகவிருக்கிறேன். (அதாவது, (நராணாம் இதம் நாரம் | தத் ததாதி இதி) மனிதர்களால் வேண்டப்படும் ஞானத்தைத் தருவதால் நாரதன் என்று பெயருள்ள ரூபத்துடன் நாரதருக்குள் உளேன்.) **கந்தர்வாணாம்** - கந்தர்வர்களிடையே; **சித்ரரத:** - சித்ரரதன் என்பவனாகவிருக்கிறேன். (அதாவது, தேவர்கள் முதலியோரையே விசித்திரமான தேராகவுடைய தால், சித்ரரதன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அவனுக்குள் உளேன்.) **ஸித்தானாம்** - ஸித்தியடைந்தவர்களிடையே; **கபில: முனி:** - கபிலர் என்ற முனிவராய் இருக்கிறேன். (**க:** - சுக ரூபியாயும்; **பி-பால்யதே** - உலகங்களைக் காப்பவனாயும்; **ல:**

*(லீயதே) - உலகங்களை அழிப்பவனாயும் இருப்பதால், கபிலர் எனப் பெயருள்ளவன்.) (இது பிரத்யக்ஷ விபூதி).*

குறிப்பு: 1. அரசமரத்தின் வேரில் பிரம்மாவும், நடுவில் விஷ்ணுவும், நுனியில் சிவனும் இருப்பதால் அது விருக்ஷராஜன் எனப்படுகிறது.

*மூலதோ ப்ரஹ்மரூபாய, மத்யதோ விஷ்ணு ரூபிணே |*
*அக்ரத: சிவரூபாய, வ்ருக்ஷ ராஜாய தே நம: ||*

ஸ்காந்த புராணம், அத். 247 சு. 41-44ல் கூறப்படும் மகிமை:

வேர்களில் விஷ்ணு, அடிமரத்தில் கேசவன், கிளைகளில் நாராயணன், இலைகளில் ஹரி, பழங்களில் அச்யுதன், இவர்களுடன் எல்லா தேவர்களும் கூடியுள்ளனர். அந்த மரமே உருவெடுத்த விஷ்ணுவாகும். அதன் அடிப்பாகத்தை மகாத்மாக்கள் சேவிக்கிறார்கள் அதையண்டினால் மனிதர்களின் ஆயிரக்கணக்கான பாபங்கள் விலகும். விரும்பும் பொருள்கள் அனைத்தையும் கறக்கும். இரத்த சுத்திக்கும், தீராத வியாதிகளுக்கும் சிறந்த மருந்தாகும்.

2. 4-2ல் ரிஷிகளில் ஏழு வகையினரைக் காண்க.

3. மனித கந்தர்வங்கள், தேவ கந்தர்வங்கள் என இருவகையினரான கந்தர்வர்கள் உண்டு தேவர்களால் நேரில் அழைக்கப்படுபவர்கள் தேவ கந்தர்வர்கள் என்றும், மற்றவர்களின்மூலம் அழைக்கப்படுபவர்கள் மனித கந்தர்வர்கள் என்றும் தைத்திரீய உபநிஷத் பாஷ்யத்தில் காண்க.

4. இங்கு கூறப்படும் கபிலர், பாகவதம் 3ம் ஸ்கந்தத்தில் கூறப்படும் விஷ்ணுவின் அவதாரமானவர், கபிலர் என்ற வேறொரு அஸுரனும் உண்டு. அவன்தான் நிரீசுவரஸாங்க்ய சாஸ்திரத்தை இயற்றியவன்.

27. उच्चैःश्रवसं अश्वानां विद्धि मां अमृतोद्भवम् ।
ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥

உச்சைஸ் ஶ்ரவஸம் அஶ்வானாம், வித்தி[4] மாம் அம்ருதோத்ப[4]வம் |
ஐராவதம் க[3]ஜேந்த்ராணாம், நராணாம் ச நராதி[4]பம் || 27

**அஶ்வாணாம்** - *குதிரைகளிடையே;* **அம்ருத உத்பவம்** - *பாற்கடலில் தோன்றின;* **உச்சைஸ் ஶ்ரவஸம்** - *உச்சைஸ் சிரவஸ் என்ற குதிரையாக;* **மாம்** - *என்னை;* **வித்தி** - *அறிவாயாக. (அதாவது,* **உத்க்ருஷ்ட கீர்த்திமத்வாத்** - *மிகச் சிறந்த புகழ் படைத்தவனாதலால் உச்சைஸ் சிரவஸ் என்ற பெயருள்ள ரூபத்துடன் அந்தக் குதிரைக்குள் உளேன்.)* **கஜேந்த்ராணாம்** - *சிறந்த யானைகளிடையே;* **ஐராவதம்** - *ஐராவதம் என்ற யானையாக (என்னை அறிவாய்) (அதாவது,* **ஐரம் அவதி இதி** - *லக்ஷ்மீயைக் காப்பதால் ஐராவதம் என்ற பெயருள்ள ரூபத்துடன் அந்த யானைக்குள் உளேன்.)* **நராணாம் ச** - *மனிதர்களிடையேயும்;* **நராதிபம்** - *அரசனாக (என்னை*

*அறிவாய்) (அதாவது,* **நராணாம் அதிப:** *- மனிதர்களின் தலைவனாய் இருப்பதால், நராதிபன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அரசனுக்குள் உளேன்.)*

**குறிப்பு:** உச்சைஸ் ஶ்ரவஸ் என்ற குதிரையும், ஐராவதம் என்ற யானையும், இந்திரனுடைய வாகனங்களாவன.

28. आयुधानां अहं वज्रं धेनूनां अस्मि कामधुक् ।
प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणां अस्मि वासुकिः ॥

ஆயுத[4]ானாம் அஹம் வஜ்ரம், தே[4]னூனாம் அஸ்மி காமது[4]க் |
ப்ரஜனஸ்சாஸ்மி கந்த[3]ர்ப்ப:, ஸர்ப்பாணாம் அஸ்மி வாஸுகி: || 28

**அஹம்** *- நான்;* **ஆயுதானாம்** *-ஆயுதங்களிடையே;* **வஜ்ரம்** *- வஜ்ராயுதமாக இருக்கிறேன். (அதாவது,* **வர்ஜிதத்வாத்** *- தோஷமற்றவன் ஆனதாலும்,* **வர்ஜனாத்** *- சத்ருக்களால் விடப்படுபவன் ஆனதாலும், வஜ்ரன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அதற்குள் உளேன்.)* **தேனூனாம்** *- பசுக்களிடையே;* **காமதுக்** *- காமதேனுவாக;* **அஸ்மி** *- இருக்கிறேன். (அதாவது,* **காமிதார்த்த தோக்த்ருத்வாத்** *- விரும்பும் பொருள்களைக் கறப்பதால், காமதுக் என்ற பெயருள்ள ரூபத்துடன் அதற்குள் உளேன்.)* **ப்ரஜன:** *- சிறந்த பிறப்புக்குக் காரணமான;* **கந்தர்ப்ப: ச** *- மன்மதனாகவும்;* **அஸ்மி** *- இருக்கிறேன். (அதாவது,* **கம்** *- சுகத்தின்,* **தரா:** *- பலவிதங்களை,* **ப:** *- அனுபவிப்பவன், ஆதலால், கந்தர்ப்பன் என்ற பெயருள்ள ரூபத்துடன் மன்மதனுக்குள் உளேன்.)* **ஸர்ப்பாணாம்** *- ஒரு தலையுள்ள பாம்புகளிடையே;* **வாஸுகி:** *- வாசுகி என்ற பாம்பாக;* **அஸ்மி** *- இருக்கிறேன். (அதாவது,* **வாஸ ஸுகத:** *- வசிப்பதின் சிறந்த சுகத்தைத் தருவதாலும், அந்த சுகமுள்ளவன் ஆனதாலும், வாஸுகி என்ற பெயருள்ள ரூபத்துடன் அவனுக்குள் உளேன்.)*

**குறிப்பு:** இந்திரனின் வஜ்ராயுதத்தைக் காட்டிலும், சிவன், வாயு, பிரம்மா, விஷ்ணு முதலியோரின் ஆயுதங்கள் சிறந்தவை. ஆகவே இந்த ரூபம் ஸஜாதீய ஏகதேச விபூதியாகும். (சு. 22)

29. अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।
पितृणां अर्यमा चास्मि यमः संयमतामहम् ॥

அனந்தஸ்சாஸ்மி நாக[3]ானாம், வருணோ யாத[3]ஸாமஹம் |
பித்ரூணாம் அர்யமா சாஸ்மி, யமஸ் ஸம்யமதாமஹம் || 29

**நாகானாம் ச** *- பல தலைகளுள்ள பாம்புகளிடையேயும்;* **அனந்த:** *- சேஷனாக:* **அஸ்மி** *- இருக்கிறேன். (அதாவது, தேசம்,*

காலம், குணம் இவற்றால் முடிவில்லாதவன் ஆதலால் அனந்தன் என்ற பெயருள்ள ரூபத்துடன் சேஷனுக்குள் உளேன்.) **அஹம்** – நான்; **யாதஸாம்** – ஜலஜந்துக்களிடையே; **வருண:** – வருணனாகவிருக்கிறேன். (அதாவது **வர: ண: யஸ்ய** – உத்தமமான சுகமுடையவன் அல்லது **வ்ருணோதி** – பக்தர்களை வரிப்பவன் ஆதலால் வருணன் என்ற பெயருள்ள ரூபத்துடன் வருணனுக்குள் உளேன்.) **பித்ரூணாம் ச** – பித்ரு தேவதைகளிடையேயும்; **அர்யமா** – அர்யமன் என்பவனாக; **அஸ்மி** – இருக்கிறேன். (அதாவது **அர்யம் மாதி** – அறியத் தகுந்ததை அறிகிறேன். ஆதலால், அர்யமா என்ற பெயருள்ள ரூபத்துடன் அவனுக்குள் உளேன்.) **ஸம்யமதாம்** – நன்கு நியமனம் செய்பவர்கள் அல்லது தண்டிப்பவர் களிடையே; **அஹம்** – நான்; **யம:** – யமனாகவிருக்கிறேன். (அதாவது **யமயதி** – நியமனம் செய்வதால், தண்டிப்பதால், யமன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அவனுக்குள் உளேன் (11–39). அல்லது தண்டிக்கும் சக்தி என்ற சிரேஷ்ட தர்மத்தைத் தருபவனாயுளேன்.)

**குறிப்பு:** (1) வருணன் ஜலஜந்து அல்ல. ஆகையால் இது திரோஹித விபூதிகளில் விஜாதீய விபூதியாகும். (சு 21)

(2) யமன் என்ற ரூபம் திரோஹித விபூதியாகும். அல்லது நியமனம் என்ற ஸாரதர்மத்தைத்தரும் விபூதியாகவும் கூறலாம்.

(3) 'என் குழந்தைகள் தானம் செய்வதில் விருப்ப முள்ளவர்களாகவிருக்கட்டும்', என்று விரும்புகிறவனும், தானும் தானம் தருபவனுமானவனுக்கு அர்யமா என்று பெயர்.

30. प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।
मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥

ப்ரஹ்லாத³ஸ்சாஸ்மி தை³த்யானாம், கால: கலய தாமஹம் |
ம்ருக³ாணாம் ச ம்ருகே³ந்த்ரோऽஹம், வைனதேயஸ் ச பக்ஷிணாம் || 30

**தைத்யானாம்ச** – திதிதேவியின் புத்திரர்களான அசுரர் களிடையேயும்; **ப்ரஹ்லாத:** – பிரஹ்லாதனாக; **அஸ்மி** – இருக்கிறேன். (அதாவது, **ப்ரக்ருஷ்ட: ஹ்லாத: யஸ்ய** – உத்தம ஆனந்தமுடையவன் ஆதலால் ப்ரஹ்லாதன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அவனுக்குள் உளேன்.) **கலயதாம்** – அறிபவர்கள் அல்லது கட்டுபவர்களிடையே; **அஹம்** – நான்; **கால:** – காலமாக அல்லது காலன் என்ற யமதூதனாக விருக்கிறேன். (அதாவது **ஸர்வம் ஆகலயதி** – எல்லாவற்றையும் நன்கு

அறிவதால், (கல ஜ்ஞானே, கல பந்தனே) காலன் என்ற பெயருள்ள ரூபத்துடன் காலத்துக்குள் அல்லது காலனுக்குள் உளேன்) *(11-32)*. **ம்ருகாணாம் ச** - மிருகங்களிடையேயும்; **அஹம்** - நான்; **ம்ருகேந்த்ர:** - மிருகங்களின் அரசனான சிங்கமாக விருக்கிறேன். (அதாவது, **ம்ருகயந்தி இதி ம்ருகா: | தேஷாம் இந்த்ர:** - பகவானைத் தேடும் பக்தர்களின் ஸ்வாமியாக இருப்பதால், ம்ருகேந்திரன் என்ற பெயருள்ள ரூபத்துடன் சிங்கத்திற்குள் உளேன்.) **பக்ஷிணாம் ச** - பக்ஷிகளிடையேயும்; **வைனதேய:** - விநதா தேவியின் புத்திரனான கருடனாக இருக்கிறேன். (அதாவது, **விஶேஷேண நதா: விநதா: | தேஷாம் அயம் |** - என்னை விஶேஷமாக வணங்குபவர்களுக்கு ஆசிரய மாயிருப்பதால் (வைனதேயோ நதாஸ்பத:) வைனதேயன் என்ற பெயருள்ள ரூபத்துடன் கருடனுள் உளேன்.)

31. पवनः पवतामस्मि रामः शस्त्रभृतां अहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥

பவன: பவதாமஸ்மி, ராம: ஶஸ்த்ரப்[4]ருதாம் அஹம் |
ஜஷாணாம் மகரஸ்சாஸ்மி, ஸ்ரோதஸாம் அஸ்மி ஜாஹ்னவீ || 31

**பவதாம்** - சுத்தமாக்கும் பொருள்களிடையே, அல்லது வேகமுள்ள பொருள்களிடையே; **பவன:** - காற்றாக; **அஸ்மி** - இருக்கிறேன். (அதாவது, **பாந்தீதி பா: | பை: வனனீயத்வாத்** - சக்கிரவர்த்திகளால் சேவிக்கத் தகுந்தவன் ஆதலால் பவனன் என்ற பெயருள்ள ரூபத்துடன், வாயுவுக்குள் உளேன்.) **ஶஸ்த்ரப்ருதாம்** -ஆயுதம் தரிப்பவர்களிடையே; **அஹம்** - நான்; **ராம:** - ராமராகவிருக்கிறேன். (**ரமயதி இதி ராம:** - உலகத் தாரைச் சந்தோஷப்படுத்துவதால் அப்பெயருள்ளவன்.) (இது ப்ரத்யக்ஷ விபூதியாகும். சு. 21) **ஜஷாணாம் ச** - மீன்களிடையேயும்; **மகர: அஸ்மி** - முதலையாகவிருக்கிறேன். அதாவது, (**மம்** - அல்ப ஞானத்தை, **கரோதி** - செய்வதால், மகரன் என்ற பெயருள்ள ரூபத்துடன் முதலைக்குள் உளேன்.) **ஸ்ரோதஸாம்** - நதிகளிடையே, **ஜாஹ்னவீ** - கங்கையாக, **அஸ்மி** - இருக்கிறேன். (அதாவது, **ஜஹத; வ்ருணோதி** - அஸாரமான ஸம்ஸாரத்தை விட்டுவிடுபவர்களைக் காப்பதால், ஜாஹ்னவீ என்ற பெயருள்ள ரூபத்துடன் கங்கைக்குள் உளேன்.)

**குறிப்பு:** ராமாயணம் - பாலகாண்டம், ஸர்க்கம் 43:- பகீரதனின் பெருமுயற்சியால் பூமிக்குக் கொண்டுவரப்பட்ட கங்கை வழியில் ஜஹ்னு என்ற ராஜரிஷியின் யாகசாலையை வெள்ளத்தினால் சேதப்படுத்தியதால்

அவரால் குடிக்கப்பட்டு, பிறகு இரு காதுகளின்மூலம் வெளிவந்ததால், ஜாஹ்னவீ (ஜஹ்னுவின் புத்ரி) என்ற பெயர் வந்தது.

32. सर्गाणां आदिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥

ஸர்க்க$^{3}$ாணாம் ஆதி$^{3}$ரந்தஸ்ச, மத்$^{4}$யம் சைவாஹ மர்ஜுனா |
அத்$^{4}$யாத்ம வித்$^{3}$யா வித்$^{3}$யானாம், வாத$^{3}$: ப்ரவத$^{3}$தா மஹம் || 32

**அர்ஜுன** – *ஶாஞ்த்தமான கர்மத்தைச் செய்பவனே!;* **ஸர்க்காணாம்** – *சிருஷ்டிக்கப்படும் ஜீவ ஜடப்பொருள்களுக்கு;* **அஹம் ஏவ** – *நானே;* **ஆதி:** – *ஆரம்பமாகவும்;* **அந்த: ச** – *முடிவாகவும்;* **மத்யம் ச** – *மத்தியாகவும் உளேன். (அதாவது, அவற்றின் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றிற்குக் காரணமான மூன்று ரூபங்களுடன் உளேன்.) (சு. 20).* **வித்யானாம்** – *கல்விகளிடையே;* **அத்யாத்ம வித்யா** – *(பிரம்ம சூத்திரங்களாகிற) பிரம்ம வித்யையாக இருக்கிறேன். (அதாவது,* **ஆத்மன: அதிக்ருத்ய** – *ஜீவர்களின் யஜமான னாதலால் அத்யாத்மா, ஞானஸ்வரூபியாதலால் வித்யா, ஆக அத்யாத்மவித்யா என்ற பெயருள்ள ரூபத்துடன், பிரம்ம வித்தைக்குள் உளேன்.)* **ப்ரவததாம்** – *வாதம் புரிபவர் களிடையே;* **அஹம்** – *நான்;* **வாத:** – *வாத கதையாக இருக்கிறேன். (அதாவது,* **வாச்யத்வாத் வாத:** – *சொல்லப்படுபவன் ஆதலால் வாத: என்ற பெயருள்ள ரூபத்துடன் வாத கதையில் உளேன்.)*

**குறிப்பு:** ஸ்ரீ மத்வர் **கதாலக்ஷணம்** என்ற நூலில், வாதம் செய்யும் முறைகளையும், விதங்களையும் கூறியுள்ளார். கதை. 1. வாதம் 2. ஜல்பம் 3. விதண்டா என்று மூவகைப்படும் முதலாவது, தத்வ நிர்ணயத்தைக் கருதி, குரு சிஷ்யர்கள், நல்லோர்கள் புரியும் வாதமாதலால் அது சிறந்தது.

33. अक्षराणां अकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।
अहमेव अक्षयःकालः धाताऽहं विश्वतोमुखः ॥

அக்ஷராணாம் அகாரோSஸ்மி, த்$^{3}$வந்த்$^{3}$வ: ஸாமாஸிகஸ்ய ச |
அஹமேவ அக்ஷய: கால:, த$^{4}$ாதாSஹம் விஶ்வதோ முக$^{2}$: || 33

**அக்ஷராணாம்** – *எழுத்துக்களிடையே;* **அகார:** – *அ என்ற எழுத்தாக;* **அஸ்மி** – *இருக்கிறேன். (அதாவது,* **அ இதி ஆக்ரியமாணத்வாத்** – *அ எனக் கூப்பிடப்படுவதால் அகார: என்ற பெயருள்ள ரூபத்துடன் அதனுள் உளேன்.)* **ஸாமாஸிகஸ்ய ச** – *பலவித ஸமாஸங்களுக்கிடையேயும்;* **த்வந்த்வ:** – *த்வந்த்வ ஸமாஸமாக உளேன். (அதாவது,*

அனைவரின் (உள்ளேயும் வெளியேயும்) இரு ரூபங்களை உடையவன் ஆதலால் த்வந்த்வன் என்ற பெயருள்ள ரூபத்துடன், அந்த ஸமாஸத்தில் உளேன்.) **அஹம் ஏவ** – நானே; **அக்ஷய: கால:** – முடிவற்ற கால ப்ரவாஹமாய் இருக்கிறேன். (அதாவது, நாசமில்லாததால் அக்ஷயன், அழிப்பதால் காலன், ஆக அக்ஷய: கால: என்ற பெயருள்ள ரூபத்துடன் காலத்தில் உளேன்.) **தாதா** – தாங்குபவனும், போஷிப்பவனுமாகிய; **அஹம்** – நான்; **விச்வதோமுக:** – பல திசைகளில் முகங்களையுடையவன் அல்லது முகம் முதலிய எல்லா அவயவங்களை உடையவனாதலால், விசுவதோமுகன் என்ற பெயருள்ள ரூபத்துடன், பிரம்மதேவரிடம் உளேன். அல்லது எங்கும் உளேன்.

**குறிப்பு:** 1. காலம் எப்போது உண்டாயிற்று? எப்போது அழியும்? என்று யாராலும் கூறமுடியாது. ஆகவே, காலம் ஆதியும் அந்தமும் இல்லாதது. ஆனால், அதன் அம்சங்களான செகண்டு, நிமிஷம், மணி, நாள் முதலியன, ஆதி அந்தமுள்ளவை. ஆகவே, இது நித்யாநித்யம் என்ற வகையைச் சேர்ந்தது. தத்வஸங்க்யானம் என்ற நூலைப்பார்க்க)

2. பல பதங்கள் சேர்ந்தது ஸமாஸம் எனப்படும். ஸம்ஸ்கிருதத்தில் பல ஸமாஸங்கள் உண்டு. ஆயினும் முக்கியமான நான்கையும், அவற்றின் விபரத்தையும் அடியில் காண்க.

| | ஸமாஸத்தின் பெயர் | உதாரணம் | விக்ரஹம் பிரித்தல் | குறிப்பு |
|---|---|---|---|---|
| 1. | அவ்யயீ பாவம் | உபகும்பம் | 1. கும்பஸ்ய 2. ஸமீபே | முதல் பதத்திற்குச் சிறப்பு |
| 2. | தத்புருஷம் | ராஜபுருஷ: | 1. ராஜ்ஞ: 2. புருஷ: | 2ம் பதத்திற்குச் சிறப்பு |
| 3. | பஹு வ்ரீஹி: | ஸுந்தராங்க: | 1. ஸுந்தரம் 2. அங்கம் யஸ்ய ஸ: \| | இரு பதங்களுமல்லாத வேறு பொருளுக்குச் சிறப்பு. |
| 4. | த்வந்த்வம் | ராமக்ருஷ்ணௌ | ராமஸ்ச க்ருஷ்ணஸ்ச | இரு பதங்களுக்கும் சிறப்பு |
| | | ஆகவே த்வந்த்வம் சிறந்தது. | | |

34. मृत्युः सर्वहरश्चाहं उद्भवश्च भविष्यताम् ।
कीर्तिः श्रीर्वाक् च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥

ம்ருத்யு: ஸர்வஹரஸ் சாஹம், உத்ப$^4$வஸ்ச ப$^4$விஷ்யதாம் |
கீர்த்தி: ஶ்ரீர் வாக் ச நாரீணாம், ஸ்ம்ருதிர் மேத$^4$ா த்$^4$ருதி: க்ஷமா ||34

**அஹம்** – நான்; **ஸர்வஹர:** – எல்லாவற்றையும் கொல்கிற; **ம்ருத்யு: ச** – ம்ருத்யு தேவதையாகவும்; **அஸ்மி** – இருக்கிறேன். (அதாவது, கொல்வதால் ம்ருத்யு என்ற பெயருள்ள ரூபத்துடன் மிருத்யு தேவதையிடம் உளேன்.) **பவிஷ்யதாம்** – இனி பிறப்பவைகளுக்கு; **உத்பவ: ச** – உண்டுபண்ணுபவனுமாக இருக்கிறேன். (அதாவது, உத்பவன் என்ற பெயருள்ள ரூபத்துடன் அதில் உளேன்.) **நாரீணாம்** – ஸ்திரீகளுடைய; **கீர்த்தி:** – புகழாகவும்; (அதாவது **கீர்த்யத்வாத்** – புகழத் தகுந்தவன் ஆதலால், கீர்த்தி என்ற பெயருள்ள ரூபத்துடன் புகழிலும்); **ஶ்ரீ:** – காந்தியாகவும்; (அதாவது, **ச்ரயத்வாத்** – ஆதாரமாய் இருப்பதால், ஶ்ரீ: என்ற பெயருள்ள ரூபத்துடன் காந்தியிலும்); **வாக்** – பேச்சாகவும்; (அதாவது, **வக்த்ருத்வாத்** – பேச்சாளனாக இருப்பதால் வாக் என்ற பெயருள்ள ரூபத்துடன் பேச்சிலும்); **ஸ்ம்ருதி:** – ஞாபகசக்தியாகவும்; (அதாவது, **ஸ்மரணீயத்வாத்** – ஸ்மரிக்கத்தகுந்தவன் ஆதலால், ஸ்மிருதி என்ற பெயருள்ள ரூபத்துடன் ஞாபக சக்தியிலும்); **மேதா** – கூர்மையான புத்தியாகவும்; (அதாவது, மேதாஸ்வரூபி ஆனதால் மேதா என்ற பெயருள்ள ரூபத்துடன் மேதையிலும்; **த்ருதி:** – தைரியமாகவும்; அதாவது, தைர்ய ஸ்வரூபியான தால், த்ருதி என்ற பெயருள்ள ரூபத்துடன் தைர்யத்திலும்); **க்ஷமா ச** – பொறுமையாகவும்; (அதாவது, பொறுமை ஸ்வரூபி யானதால், க்ஷமா என்ற பெயருள்ள ரூபத்துடன் பொறுமையிலும்) இருக்கிறேன்.

35. बृहत्साम तथा साम्नां गायत्री छन्दसामहम् ।
मासानां मार्गशीर्षोऽहं ऋतूनां कुसुमाकरः ॥

ப்$^3$ருஹத்ஸாம தத$^2$ா ஸாம்னாம், க$^3$ாயத்ரீ ச$^2$ந்த$^3$ஸாமஹம் |
மாஸானாம் மார்க்க$^3$ஶீர்ஷோSஹம், ரிதூனாம் குஸுமாகர: || 35

**ததா** – அவ்வாறே; **ஸாம்னாம்** – காயத்ரம், ரதந்தரம் முதலிய பல ஸாமங்களிடையே; **ப்ருஹத் ஸாம** – ப்ருஹத் என்ற ஸாமமாகவிருக்கிறேன். (அதாவது, **ப்ருஹத் ஸாரத்வாத் ப்ருஹத்ஸ:** | **அமேயத்வாத் அம:** | பெரும் ஸாரமாயிருப்ப

தாலும், பூர்ணமாக அறியத் தகாதவனானதாலும் ப்ருஹத் ஸாம என்ற பெயருள்ள ரூபத்துடன் அதில் உளேன்.) **சந்தஸாம்** – பலவித செய்யுள் விருத்தங்களிடையே **அஹம்** – நான்; **காயத்ரீ** – காயத்ரீ விருத்தமாகவிருக்கிறேன். (அதாவது, **ஸ்வகுண காயகான் த்ராதி** – என் குணங்களைப் பாடுகிறவர் களைக் காப்பதால், காயத்ரீ என்ற பெயருள்ள ரூபத்துடன் காயத்ரீயில் உளேன். **காயதி த்ராயதி ச** – வேதங்களை முதலில் வெளிப்படுத்துவதாலும், அனைவரையும் காப்பாற்றுவ தாலும் காயத்ரீ எனப்பெயர்.) **மாஸானாம்** – பன்னிரண்டு மாதங்களிடையே; **அஹம்** – நான்; **மார்க்க ஶீர்ஷ:** – மார்கழி மாதமாயிருக்கிறேன். அதாவது, **மார்க்காணாம் ஶீர்ஷம்** – (8-24) அர்ச்சிராதி மார்க்கங்களுக்குத் தலை போன்று சிறந்திருப் பதால், மார்க்கசீர்ஷம் என்ற பெயருள்ள ரூபத்துடன் மார்கழி மாதத்தில் உளேன்.) **ரிதூனாம்** – ஆறு ரிதுக்களிடையே; **குஸுமாகர:** – வஸந்த ரிதுவாகவிருக்கிறேன். அதாவது, **கு** – கெட்ட, (மா – ஞானத்தை) அயோக்கியர்களுக்கும், **ஸு** – நல்ல, **மா** – ஞானத்தை யோக்யர்களுக்கும், **கர:** – செய்பவனாதலால் குஸுமாகரன் என்ற பெயருள்ள ரூபத்துடன், வஸந்தருதுவில் உளேன்.

குறிப்பு: (1) சாந்தோக்யம் – அத்தியாயம் 2. கண்டம் 11 முதல் 21 முடிய, ஸாமங்களின் பல வகைகளைக் காணலாம்.

(2) பல செய்யுள் விருத்தங்களில் ஏழு முக்கியமானவை. 1. காயத்ரீ (24 எழுத்துக்களுடையது) 2. உஷ்ணிக் (28) 3. அனுஷ்டுப் (22) 4. ப்ருஹதீ (36) 5. பங்க்தீ (40) 6. த்ரிஷ்டுப் (44) 7. ஜகதீ (48).

(3) தனுர்மாத பூஜை, பஜனை முதலியவற்றாலும், கீதோப தேசம் செய்த மாதமானதாலும், கேசவாதி 12 மூர்த்திகளில் முதலாவதான கேசவன், இம்மாதத்தின் மூர்த்தியாக விருப்பதாலும், மார்கழி மாதம் சிறப்பு வாய்ந்தது.

(4) யாகம் முதலிய கர்மாக்களுக்கு உகந்தது வஸந்தருது வானதால் அது சிறந்தது.

36. द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्वं सत्ववतामहम् ॥

த்[3]யூதம் ச[2]லயதாமஸ்மி, தேஜஸ் தேஜஸ்விநாமஹம் |
ஜயோऽஸ்மி வ்யவஸாயோऽஸ்மி, ஸத்வம் ஸத்வவதாமஹம் || 36

**சலயதாம்** – கபடமாக வஞ்சிக்கும் பல வஸ்துக்கள் இடையே; **த்யூதம்** – சூதாட்டமாக; **அஸ்மி** – உளேன். (அதாவது (திவு க்ரீடா) சிருஷ்டி முதலிய விளையாட் டுள்ளவன்

ஆனதால், த்யூதம் என்ற பெயருள்ள ரூபத்துடன் சூதாட்டத்தில் உளேன்.) **தேஜஸ்வினாம்** - பராக்கிரமசாலி களிடையே (7-10); **அஹம்** - நான்; **தேஜ:** - பராக்கிரமமாக இருக்கிறேன். (அதாவது, பிரகாச ரூபமுள்ளவனாதலால், தேஜஸ் என்ற பெயருள்ள ரூபத்துடன், தேஜஸ்ஸில் உளேன்.) (**ஜயினாம்** - வெற்றியுள்ளவர்களிடையே); **ஜய: அஸ்மி** - வெற்றியாக உளேன். (அதாவது அவர்களுக்கு வெற்றி என்ற சிரேஷ்ட தர்மத்தைத் தரும் ஜயம் என்ற பெயருள்ள ரூபத்துடன் உளேன். (**வ்யவஸாயினாம்** - நிச்சய ஞானமுடைய வர்களிடையே); **வ்யவஸாய: அஸ்மி** - நிச்சய ஞானமாக உளேன். (அதாவது, அவர்களுக்கு நிச்சய ஞானமென்ற சிரேஷ்ட தர்மத்தைத்தரும், வ்யவஸாயன் என்ற பெயருள்ள ரூபத்துடன் உளேன்.) **ஸத்வவதாம்** - ஸத்வ குணமுள்ளவர் களிடையே; **அஹம்** - நான்; **ஸத்வம்** - ஸத்வ குணமாக இருக்கிறேன். (அதாவது, அவர்களுக்கு ஸத்வகுணம் என்ற சிரேஷ்ட தர்மத்தைத் தரும் ஸத்வம் என்ற பெயருள்ள ரூபத்துடன் உளேன்.)

குறிப்பு: மேன்மை இருவிதங்களில் ஏற்படும் 1. குணங்களினால் (Famous) 2 தோஷங்களினால் (Notorious) ஸூதாட்டத்திற்குள்ள மேன்மை தோஷத்தினால் என்று அறியவும். அந்த மேன்மையும், பகவான் அதில் த்யூதம் என்ற ரூபத்துடன் இருப்பதால்தான் ஏற்பட்டது. ஆகவே, தருமபுத்திரர், நளன் முதலிய அரசர்களே விலக்கப்பட்ட சூதாட்டத்தை, பகிரங்கமாகப் பெரும்சபையில் ஆடித் தோற்று, சட்டதிட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் போல நடந்தனர்.

37. वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनञ्जयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनां उशना कविः ॥

வ்ருஷ்ணீனாம் வாஸுதே³வோऽஸ்மி, பாண்ட³வானாம் த³னஞ்ஜய: |
முனீனாமப்யஹம் வ்யாஸ:, கவீனாம் உஶனா கவி: || 37

**வ்ருஷ்ணீனாம்** - வ்ருஷ்ணி என்பவரின் வம்சத்தினர் களிடையே; **வாஸுதேவ:** - வஸுதேவனின் புத்திரனான நானாக; **அஸ்மி** - இருக்கிறேன், (**ஸர்வம் வாஸயதி ஆச்சாதயதி, ஸர்வத்ர வஸதி வா** - எல்லாவற்றையும் மறைப்பதால் அல்லது எங்கும் வசிப்பதால் வாஸு; சிருஷ்டி முதலிய விளையாட்டுள்ளவனாதலால் தேவ:, ஆக வாஸுதேவன் என்ற பெயருள்ளவன்.) **பாண்டவானாம்** - ஐந்து பாண்டு புத்திரர்களிடையே; **தனஞ்ஜய:** - அர்ஜுனனாக (நீயாக)

இருக்கிறேன். (அதாவது, செல்வங்களை ஜயிப்பவனாதலால் தனஞ்ஜயன் என்ற பெயருள்ள ரூபத்துடன் உன்னிடம் இருக்கிறேன்.) **முனீனாம் அபி** - வேதார்த்தங்களை மனனம் செய்பவர்களிடையேயும்; **அஹம்** - நான்; **வ்யாஸ:** - வேதவியாஸராக இருக்கிறேன் (**வி** = ஸர்வோத்தமனாயும், **ஆ** = எங்கும், **ஸ:** - இருப்பவன் அல்லது **வி** = உத்தமமான, **ஆஸா** = இருக்கையுள்ளவன். ஆதலால், வ்யாஸ: என்ற பெயருள்ளவன். **கவீனாம்** - ஞானிகளிடையே; **உஶனா:** - சுக்கிராசார்யர் என்ற; **கவி:** - ஞானியாக இருக்கிறேன். அதாவது, **உச இச்சாயாம்** - பக்தர்களுக்கு ஸ்வர்க்கம் முதலியவற்றை விரும்புவதால், உசனா என்ற ரூபத்துடன் சுக்கிராசாரியரிடம் உளேன்.

குறிப்பு: 1. வாஸுதேவ: வ்யாஸ: இரண்டும் பிரத்யக்ஷ விபூதிகள் (சு.21).

2. தனஞ்ஜய: இது ஸஜாதீய ஏகதேச விபூதியாகும். ஏனெனில் பாண்டவர்களில் பீமன்தான் உத்தமன், (ததா பீமஸ் ச பார்த்தேஷு). அதற்கு அடுத்த உத்தமன் அர்ஜுனன் ஆவான். விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் தனஞ்ஜய: என்ற நாமமுள்ளது. ஸ்ரீ கிருஷ்ணர் பரந்தாமம் சென்றபோது, அர்ஜுனனிடமுள்ள தன் விபூதி ரூபத்தை மறைத்ததால் அவனுடைய தேககாந்தி, பராக்கிரமம் எல்லாம் மங்கின. (பாகவதம் 1-15-5 முதல் 21 சுலோகம்)

3. கவிகளுக்குள் பிரம்மாதான் உத்தமர். (ஆதி கவயே என்று பாகவதம் முதல் சுலோகம்.) அடுத்து உத்தமர் சுக்கிராசாரியர். ஆகையால் உசனா: ஸஜாதீய ஏகதேச விபூதியாகும்.

38. दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥

த³ண்டோ த³மயதாமஸ்மி, நீதிரஸ்மி ஜிகீஷதாம் |
மௌனம் சைவாஸ்மி கு³ஹ்யானாம், ஜ்ஞானம் ஜ்ஞானவதாமஹம் ||

**தமயதாம்** - தண்டிப்பவர்களிடையே; **தண்ட:** - தண்டிக்கும் சக்தியாக; **அஸ்மி** - இருக்கிறேன். (அதாவது அவர்களுக்கு அந்த சிரேஷ்ட தர்மத்தைத் தருபவன் ஆதலால் தண்ட: என்ற பெயருள்ள ரூபத்துடன் உளேன்.) **ஜிகீஷதாம்** - வெற்றியை விரும்புகிறவர்களிடையே; **நீதி:** - நியாயம் அல்லது நேர்மையாக; **அஸ்மி** - இருக்கிறேன். (அதாவது, அவர்களுக்கு அந்த சிரேஷ்ட தர்மத்தைத்தரும் நீதி என்ற பெயருள்ள ரூபத்துடன் உளேன்.) **குஹ்யானாம் ச** - ரஹஸ்யங்களிடையேயும்; **மௌனம்** - பேசாதிருத்தலாக; **அஸ்மி** - உளேன். (அதாவது, முனிவர்களால் துதிக்கப்படுவதால் மௌனம்

என்ற பெயருள்ள ரூபத்துடன், மௌனத்தில் உளேன்.) **ஜ்ஞானவதாம்** – அறிவுள்ளவர்களிடையே; **அஹம் ஏவ** – நானே; **ஜ்ஞானம்** – அறிவாகவிருக்கிறேன். (அதாவது, ஞானஸ்வரூபி யாதலால் ஞானம் என்ற பெயருள்ள ரூபத் துடன், அவர்களுக்கு ஞானம் என்ற சிரேஷ்ட தர்மத்தைத் தருபவனாக உளேன்.)

குறிப்பு: சுலோகம் 21ல், இருளை அல்லது அஜ்ஞானத்தைப் போக்கும் ஆதித்யனுடன் ஆரம்பித்த விபூதிகள், ஞானம் என்ற ரூபத்துடன் முடிகின்றன. அவைகளின் விபரங்களை இந்த அத்தியாயச் சுருக்கத்திலும் கண்டோம்.

39. यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।
न तदस्ति विना यत्स्यात् मया भूतं चराचरम् ॥

யச்சாபி ஸர்வபூ4தானாம், பீ3ஜம் தத3ஹமர்ஜுன |
ந தத3ஸ்தி வினா யத் ஸ்யாத், மயா பூ4தம் சராசரம் || 39

**அர்ஜுன** – ஸுத்தமான கர்மத்தைச் செய்பவனே!; **ஸர்வபூதானாம் ச** – எல்லா ஜீவ ஜடப் பொருள்களுக்கும்; **யத்** – எது; **பீஜம்** – காரணமோ; **தத் அபி** – அதுவும்; **அஹம்** – நானே. (அதாவது, அதற்கு மேன்மையைத் தருபவன்.) பகவான் எங்கும் இருக்கிறான் என்பதற்கு என்ன பிரமாணம்? **மயா வினா** – நான் இல்லாத; **யத்** – எந்த; **சர அசரம்** – ஜங்கம ஸ்தாவரமான; **பூதம்** – வஸ்து; **ஸ்யாத்** – இருக்குமோ; **தத் நாஸ்தி** – அது இல்லை. அதாவது நான் எங்கும் உளேன்.

குறிப்பு: சுலோகம் 21 முதல் 38 முடிய தாம் இருக்கிற இடங்களைக் கூறினார். இங்கு இல்லாத இடமில்லை என்கிறார்.

சுருங்கக் கூறியதின் காரணத்தைக் காட்டி முடிக்கிறார்.

40. नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप ।
एष तु उद्देशतः प्रोक्तः विभूतेः विस्तरो मया ॥

நாந்தோSஸ்தி மம தி3வ்யானாம், விபூ4தீனாம் பரந்தப |
ஏஷ து உத்தே3ஶத: ப்ரோக்த: விபூ4தே: விஸ்தரோ மயா || 40

**பரந்தப** – பகைவர்களை வாட்டுபவனே!; **மம** – என்னுடைய; **திவ்யானாம்** – அதியற்புதமான; **விபூதீனாம்** – விபூதி ரூபங்களுக்கு; **அந்த:** – முடிவு; **ந அஸ்தி** – இல்லை. **ஏஷ:** – இந்த; **விபூதே:** (ஸம்க்ஷேப:) – சுலோகம் 21 முதல் 38 முடிய கூறப்பட்ட) விபூதிகளின் சுருக்கம்; **உத்தேஶத:** – தெளிவாக காட்டிக் கொடுக்க; **மயா** – என்னால்; **ப்ரோக்த:** – கூறப்பட்டது. (**ஏஷ:** –

இந்த; அடுத்த சுலோகத்தில் கூறுவதற்கு என் மனதிலுள்ள) **விபூதே: விஸ்தர: து** - விபூதி ரூபங்களின் விரிவோ; **மயா** - என்னால்; **ப்ரோக்த:** - ப்ரோச்யதே - கூறப்படப்போகிறது.

**குறிப்பு:** ஏஷ: என்ற பதத்தை மீண்டும் சேர்த்தும், ஸம்க்ஷேப: என்ற பதத்தைப் புதிதாகச் சேர்த்தும், ப்ரோக்த: என்பதற்கு ப்ரோச்யதே என்று அர்த்தம் செய்தும், அர்த்தம் செய்யப்பட்டுள்ளது. அப்படிச் செய்யாவிடில், சு.21 முதல் 38 முடிய கூறப்பட்ட ரூபங்களே விரிவு என்றாகிவிடும். அவை 7-8; 9-16 முதலியவைகளில் கூறப்பட்ட ரூபங்களைக் காட்டிலும் விரிவேதவிர, உண்மையில் விரிவல்ல. ஏனெனில், எல்லா ரூபங்களும் இவற்றில் அடங்கவில்லை. அடுத்த ஸ்லோகத்தில் கூறப்படும் லக்ஷணத்தின் மூலம், எல்லா விபூதிரூபங்களும் அடங்கிவிடுவதால், அதுவே விபூதியின் விரிவாகும். இதுவரையில் கூறப்பட்டவை சுருக்கமே. இந்த அபூர்வமான அர்த்தத்தைப் பூர்ண ப்ரஜ்ஞரான நமது ஆசார்யரைத்தவிர, வேறு யாரும் கூறவில்லை.

*அந்த விபூதிகளின் விரிவையே லக்ஷணத்தின் மூலம் விளக்குகிறார்.*

41. यद्यत् विभूतिमत्सत्वं श्रीमत् ऊर्जितमेव वा ।
तत्तदेव अवगच्छ त्वं मम तेजो अंश संभवम् ॥

யத்யத் விபூ[4]திமத் ஸத்வம், ஸ்ரீமத் ஊர்ஜிதமேவ வா |
தத்ததே[3]வ அவக[3]ச்ச[2] த்வம், மம தேஜோऽம்ஶ ஸம்ப[4]வம் || 41

**யத்யத் ஸத்வம்** - எந்தெந்த வஸ்து; **விபூதிமத்** - அதன் இனத்தில் மேன்மையை உடையதோ; **ஸ்ரீமத்** - ஸம்பத்துடன் கூடியதோ; **வா** - அல்லது; **ஊர்ஜிதம்** - அபிவிருத்தியுடன் கூடியதோ; **தத்தத் ஏவ** - அந்தந்த வஸ்துவே; **மம** - என்னுடைய; **தேஜோ அம்ச ஸம்பவம் ஏவ** - பிரகாசரூபமான அம்சத்துடன் (ஸஹ பவதி) கூடியுள்ளதே என்று; **த்வம்** - நீ; **அவகச்ச** - அறிவாயாக.

**குறிப்பு:** 1. யத்ர தூம: தத்ர அக்னி: எங்கு புகையுளதோ, அங்கு நெருப்பு உண்டு என்று கூறினால், எல்லாக் காலங்களிலும், எல்லா தேசங்களிலும், இருந்த, இருக்கிற, இருக்கும் புகையையும் நெருப்பையும் குறிப்பதுபோல, இங்கு கூறிய விபூதியின் லக்ஷணத்தில், எல்லா விபூதிகளுமே அடங்கியுள்ளன. ஆதலால் இதுதான் விபூதியின் விரிவாகும். சிலர் ஒரு சுலோகத்தில் கூறப்படுவது சுருக்கம் என்றும், பல சுலோகங்களில் கூறப்படுவது விரிவு என்றும் தவறாக நினைத்துள்ளனர்.

2. அம்சம் (1) ஸ்வரூபாம்சம் (2) பின்னாம்சம் என இருவகைப்படும். அக்நியின் ஸ்வரூபாம்சம் சூரியன்; பின்னாம்சம் மின்மினிப்பூச்சி, பகவானின் அவதார ரூபங்களும், அந்தர்யாமி ரூபங்களும் அவருடைய ஸ்வரூபாம்சமாகும். ஜீவர்களோ அவருடைய பின்னாம்சமாவார்கள்.

ஸ்வரூபாம்சத்திற்குள்ள சக்தி பின்னாம்சத்திற்கு இல்லை. ஆகவே. தேஜோம்ச ஸம்பவம் - என் அம்சத்தால் உண்டானது என்ற அர்த்தம் தவறாகும். என் அம்சத்துடன்கூடிய என்ற அர்த்தத்தைக் கவனிக்க. 15-7 குறிப்பு பார்க்க.

*அதைக்காட்டிலும் அதிக விபூதி விரிவைக் கூறுகிறார்.*

42. अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।
विष्टभ्याहमिदं कृत्स्नं एकांशेन स्थितो जगत् ॥

அத²வா ப³ஹுனைதேன, கிம் ஜ்ஞாதேன தவார்ஜுன |
விஷ்டப்⁴யாஹமித³ம் க்ருத்ஸ்னம், ஏகாம்ஶேன ஸ்தி²தோ ஜக³த் || 42

**அர்ஜுன** - *ஸுத்தமான கர்மத்தைச் செய்பவனே!;* **அதவா** - *அல்லது;* **ஏதேன** - *இந்த சு. 21 முதல் 38 முடிய கூறப்பட்ட;* **பஹுனா** - *பலவாறான அளவுக்குட்பட்ட விபூதிகளின் விஸ்தாரத்தின்;* **ஜ்ஞாதேன** - *அறிவினால்;* **தவ** - *உனக்கு;* **கிம்** - *என்ன பிரயோஜனம்? (யாதுமில்லை). அதாவது, அடுத்த அத்தியாயத்தில கூறப்போகும் விசுவரூபத்தை அறிவதால் ஏற்படும் பலனைக்காட்டிலும் அற்பமான பலன் எனக்கருத்து. அப்படியாயின் எது அறியத்தகுந்தது? என்றால்;* **அஹம்** - *நான்;* **இதம்** - *இந்த;* **க்ருத்ஸ்னம் ஜகத்** - *உலக மனைத் தையும்;* **ஏகாம்ஶேன** - *கணக்கற்ற அம்ஶஙகளிடையே, ஒரு அம்ஶத்தினாலேயே;* **விஷ்டப்ய** - *வியாபித்து;* **ஸ்தித:** - *இருக்கிறேன். (இந்த விசுவரூபம் அறியத்தகுந்தது).*

குறிப்பு: பகவானின் முழு அம்சங்களால் வியாபிக்க ஆயிரக்கணக்கான உலகங்கள் போதா. அர்ஜுனன் பெரும் பலனை அடைய அதிகாரியானதால், விபூதிரூபம், விசுவரூபம் ஆகிய இருவித ரூபங்களையும், அவன் அவசியம் அறியவேண்டும் என்பதை, தே-உனக்கு என்ற பதம் அறிவிக்கிறது.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे विभूति योगो नाम दशमोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம வித்யாயாம், யோகசாஸ்த்ரே, ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே, விபூதியோகோ நாம தசமோ அத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய விபூதியோகம் என்னும் பத்தாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---



# 11

# விசுவரூப தர்சன யோகம்

(55 சுலோகங்கள்)

## பதினோராம் அத்தியாயத்தின் சுருக்கம்

**விச்வம் ரூபம் யஸ்ய** – உலகமனைத்தையும் பிரதிமையாக உள்ளவர்: அல்லது **விச்வம் ரூபயதி** – உலகமனைத்தையும் காண்பிக்கிறவர்; ஆகையால் பகவான் விச்வரூபர். அவருடைய தர்சனம் இந்த அத்தியாயத்தில் ஏற்பட்டிருப்பதால், அப்பெயர் உள்ளது. சென்ற அத்தியாயத்தில் கூறிய விபூதி ரூபங்கள் பலரிடம் உள்ளவை. பல இடங்களில் உள்ளவை. அந்தர்யாமி யாதலால் அளவுக்குட்பட்டவை. இந்த விசுவரூபமோ அளவு கடந்தது. எல்லா இடங்களிலும் வியாபித்து எல்லாவற்றையும் தன்னுள் கொண்டது. ஒரே இடத்தில் ஒரே காலத்தில் அனைத்தையும் பார்க்கத் தகுந்தது. அதைக் காட்டும்படி அர்ஜுனன் வேண்ட, பரம காருணிகரான பகவான், அவனுக்கு திவ்யமான பார்வையைத் தந்து காண்பித்தார்.

அர்ஜுனன், அந்த ரூபம் கணக்கற்ற கைகால்கள் முதலிய அவயங்களையும், பல வர்ணங்களையும், பல உருவங்களையும் ஏந்திய பல ஆயுதங்களையும், உடையதாகப் பார்த்தான். அதில் உலகம் அனைத்தையும் பிரம்மாதி சகல தேவர்களையும், கந்தர்வர்யக்ஷர், அஸுரர், ஸித்தர் முதலிய அனைவரையும் கண்டான். இரு சேனையிலுள்ள வீரர்கள் பகவானுடைய வாய்களுக்குள் வேகமாய்ச் செல்வதையும், சிலர் பற்களின் இடுக்குகளில் சிக்கி விரிந்த கிரீடமுடையவர்களாயிருந்ததையும் பார்த்து பயந்தான்.

உடனே 11 சுலோகங்களில் பகவானைத் துதித்துப் பலதடவை நமஸ்கரித்து, தான் முன் செய்த குற்றங்களை எல்லாம் மன்னிக்கும்படி வேண்டினான். பகவானும், "அர்ஜுனா! நீ பயப்படாதே. உன்னையும், உன்னைச் சேர்ந்த அறுவரையும், எதிர்கக்ஷியில் மூவரையும் தவிர, மற்ற எல்லோரையும், நானே கொல்வேன். நீ அவர்களைக்

கொல்வதற்கு நிமித்தமாயிருந்து, புகழையும் ராஜ்யத்தையும் அடைவாயாக" என்றார்.

அர்ஜுனன், இந்த பயங்கரமான ரூபத்தை மறைந்து சதுர்புஜரூபத்தைக் காட்டும்படி வேண்ட, பகவானும் அவ்வாறே செய்து அவனைத் தேற்றி, விச்வரூபத்தின் மகிமையையும் விளக்கினார். இந்த ரூபத்தை மூவுலகிலுள்ள பலர் பார்த்திருப்பினும், அவரவர்களின் யோக்கியதைக்குத் தக்கவாறே பார்க்க முடியும். அர்ஜுனன் பார்த்தமாதிரி, அவனைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள் பார்க்க முடியாது. வேதாத்யயனம், தபஸ், தானம், யாகம் முதலிய ஸாதனங் களைக்காட்டிலும், பக்தியே இந்த ரூபத்தைப் பார்க்கும் சிறந்த ஸாதனமாகும். ஆகவே, அனைவரும் பக்தியைப் பெருக்கிக் கொள்ளவேண்டும்.

சென்ற அத்தியாயத்தின் கடைசியில், வியாப்தரூபத்தின் உபாஸனையைச் சுருக்கமாகக் கூறினார். சுருக்கமாகக் கூறியது புத்தியில் ஏறாது. ஆகையால், தியானம் செய்வதற்குச் ஸௌகரியமாக, அந்த விச்வரூபத்தை இங்கு விஸ்தாரமாகக் கூறுகிறார்.

अर्जुन उवाच — **அர்ஜுன; உவாச** - அர்ஜுனன் அதை அறிவதற்காக, ஸ்ரீ கிருஷ்ணர் கூறியதைக் கூறுகிறான். *(2சு)*

1. मदनुग्रहाय परमं गुह्यं अध्यात्म संज्ञितम् ।
यत् त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥

மத[3]நுக்ரஹாய பரமம், கு[3]ஹ்யம் அத்[4]யாத்ம ஸம்ஜ்ஞிதம் |
யத் த்வயோக்தம் வசஸ்தேன, மோஹோऽயம் விக[3]தோ மம || 1

**மதனுக்ரஹாய** - என்னை அநுக்ரஹிப்பதற்காக; **பரமம் குஹ்யம்** - அதி ரகஸ்யமானதும்; **அத்யாத்ம ஸம்ஜ்ஞிதம்** - பகவானைப் பற்றியதால், அத்யாமம் என்ற பெயருடையது மான; **யத்வச:** எந்த வார்த்தை; **த்வயா உக்தம்** - (இது வரையில்) உம்மால் கூறப்பட்டதோ; **தேன** - அதனால்; **மம** - என்னுடைய; **அயம் மோஹ** :- பந்துக்களிடமிருந்த சினேக மாகிற இந்த விபரீதஞானம்; **விகத:** - அடியோடு போய் விட்டது. *(18–73)*

**குறிப்பு:** சுலோகத்தில் முதற் பாதத்தில் எட்டு எழுத்துக்களுக்குப் பதிலாக ஒன்பது உள்ளன. அது இந்த அத்தியாயத்தின் சிறப்பைக் குறிக்கிறது.

2. भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।
त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥

ப[4]வாப்யயௌ ஹி பூ[4]தானாம், ஶ்ருதௌ விஸ்தரஶோ மயா |
த்வத்த: கமலபத்ராக்ஷ, மாஹாத்ம்யமபி சாவ்யயம் || 2

**கமலபத்ராக்ஷ** – *தாமரை இதழ் போன்று விஶாலமான கண்களையுடையவரே!;* **பூதானாம்** - *ஜீவ ஜடப்பொருள் களின்,* **பவ அப்யயௌ** – *உற்பத்தியும் நாசமும்;* **த்வத்த:**– *உம்மிடமிருந்து;* **விஸ்தரஶ:**– *(7–6 முதலிய சுலோகங்களில்)* **மயா** – *என்னால்;* **ஶ்ருதௌ** – *கேட்கப்பட்டன.* **அபிச** – *மேலும்;* **அவ்யயம்** – *அழிவில்லாத;* **மாஹாத்ம்யம்** – *மகிமையும்;* **(ஶ்ருதம்** – *கேட்கப்பட்டது);* **ஹி** - *பிரசித்தம்.*

*ஸ்ரீ கிருஷ்ணரின் வார்த்தையைப் புகழ்ந்து, விஶ்வ ரூபத்தைக் காட்டும்படி வேண்டுகிறான். (2 ஸ்லோகங்களில்)*

3. एवमेतत् यथाऽऽत्थ त्वं आत्मानं परमेश्वर ।
द्रष्टुमिच्छामि ते रूपं ऐश्वरं पुरुषोत्तम ॥

ஏவமேதத் யத[2]ாऽத்த[2] த்வம், ஆத்மானம் பரமேஶ்வர |
த்ரஷ்டு மிச்சாமி தே ரூபம், ஐஶ்வரம் புருஷோத்தம || 3

**பரமேஶ்வர** – *உத்தமரான ஈஶ்வரரே!* **த்வம்** – *நீர்;* **ஆத்மானம்** – *உம்மைப்பற்றி;* **யதா ஆத்த** – *எவ்வாறு சொன்னீரோ (10–42);* **ஏதத்** – *இந்த வார்த்தை;* **ஏவம் (ஏவ)** - *அப்படியே; அதாவது, ஸத்யமே,* **புருஷோத்தம** – *புருஷ சிரேஷ்டரே! (க்ஷராக்ஷர புருஷர்களைக் காட்டிலும் உத்தமர் என 15–18ல் தான் கூறப்போகிறார்);* **தே** – *உம்முடைய;* **ஐஶ்வரம் ரூபம்** – *அற்புத சக்திவாய்ந்த ரூபத்தை;* **த்ரஷ்டும் இச்சாமி** – *பார்ப்பதற்கு விரும்புகிறேன்.*

4. मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानं अव्ययम् ॥

மன்யஸே யதி[3] தச்ச[2]க்யம், மயா த்[3]ரஷ்டுமிதி ப்ரபே[4]ா |
யோகே[3]ச்வர ததோ மே த்வம், த[3]ர்சயாத்மானம் அவ்யயம் || 4

**ப்ரபோ** – *ஸமர்த்தரே!;* **தத்** – *அந்த ரூபம்;* **மயா** – *என்னால்;* **த்ரஷ்டும்** – *பார்ப்பதற்கு;* **ஶக்யம்** – *முடியும்;* **இதி** – *என்று;* **யதிமன்யஸே** – *நீர் கருதினால்;* **தத:** – *(தர்ஹி) அப்பொழுது;* **யோகேஶ்வர** – *உபாயங்களுக்கெல்லாம்*

தலைவரே!; **த்வம்** – *நீர்;* **அவ்யயம்** – *அழிவில்லாத;* **ஆத்மானம்** – *உமது ஸ்வரூபத்தை;* **மே தர்ஶய** – *எனக்குக் காண்பிப்பீராக.*

**குறிப்பு:** ஸமர்த்தரே! என்றதால், உமது சாமர்த்தியத்தால் இந்திரியங்களுக்கு அப்பாற்பட்ட பொருள்களின் தர்ஶனமும் தனக்குக் கிட்டும் என்று அறிவிக்கிறான்.

श्रीभगवान् उवाच — **ஸ்ரீ பகவான் உவாச** - *ஸ்ரீ கிருஷ்ணர் ஆவலுள்ள அர்ஜுனனால் வேண்டப்பட்டு, அந்த ரூபத்தைக் காண்பிக்க விரும்பி முதலில் 'பார்' என்கிறார். (4 சுலோகங்களில்)*

5. पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥

பஶ்ய மே பார்த்த[2] ரூபாணி, ஶதஶோऽத[2] ஸஹஸ்ரஶ: |
நானாவித[4]ானி தி[3]வ்யானி, நானாவர்ணா க்ருதீனி ச || 5

**பார்த்த** - *என் அத்தையான குந்தீயின் புத்திரனே!; (நீ சு.3ல் ஒரு ரூபத்தைக்காண விரும்பியபோதிலும்);* **மே**– *என்னுடைய;* **நானாவிதானி** – *பலவிதமானவையும் அதாவது,* **நானாவர்ண ஆக்ருதீனி ச** – *வெண்மை, சிவப்பு முதலிய பல நிறங்களையும், பல உருவங்களையும், உடையவையும்;* **திவ்யானி** – *அப்ராக்ருதமானவையும்;* **ஶதஶ:**– *நூற்றுக்கணக்கானவையும்;* **அத ஸஹஸ்ரச :** – *ஆயிரக் கணக்கானவையுமான;* **ரூபாணி** – *ரூபங்களை;* **பஶ்ய**- *பார்.*

**குறிப்பு:** 1. மே - என்னுடைய (ஒருமை) ரூபாணி (பன்மை). இதனால் என் ஒரு ரூபமே அற்புத ஶக்தியாலும், விஶேஷம் என்ற வஸ்துவின் பலத்தாலும், பல ரூபங்களாகும் என்று அறிவிக்கிறார். 2. பகவத் ரூபங்கள் பல நிறமுள்ளவை. வாஸுதேவன் - வெண்மை, ஸங்கர்ஷணன் - சிவப்பு, பிரத்யும்னன் - மஞ்சள், அநிருத்தன் - கருமை முதலியன. இவை அப்ராகிருதமான நிறங்கள். 1. தந்த்ரஸாரம் (1-23) 2. பாகவதம் (10-8-13).

*1. வாஸுதேவாதிகா: சுக்ல, ரக்த பீத அஸிதோஜ் ஜ்வலா: |*
*2. சுக்லோ ரக்த: ததா பீத: இதானீம் க்ருஷ்ணதாம் கத: |*

ஓம் ரூபோபந்யாஸாச்ச ஓம் 1-2-23 பிரம்ம சூத்திரமும், ருக்மவர்ணம், ஆதித்யவர்ணம் என்று வேதங்களும், கூறுவதால், நிர்குண நிராகாரப்ரம்மம் என்பது இல்லை.

*அந்த ரூபத்தில் என்ன விசேஷம்? என்றால் கூறுகிறார்.*

6. पश्यादित्यान् वसून् रुद्रान् अश्विनौ मरुतस्तथा ।
बहूनि अदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥

பஶ்யாதி[3]த்யான் வஸூன் ருத்ரான், அஶ்வினௌ மருதஸ்தத[2]ா |
ப[3]ஹூனி அத்[3]ருஷ்ட பூர்வாணி, பஶ்யாஸ்சர்யாணி ப[4]ாரத || 6

**பாரத** – *பரத வம்சத்திற் பிறந்தவனே!;* **ஆதித்யான்** – *12 சூரியர்களையும்;* **வஸூன்** – *8 வஸுக்களையும்;* **ருத்ரான்** – *11 ருத்திரர்களையும்;* **அஶ்வினௌ** – *இரு அச்வினி தேவர் களையும்;* **மருத: ததா** – *(49+முக்ய வாயு) 50 வாயுக்களையும்;* **பஶ்ய** – *பார்.* **அத்ருஷ்டபூர்வாணி** – *இதற்குமுன் பார்க்காத;* **பஹூனி** – *பற்பல;* **ஆஸ்சர்யாணி** – *அற்புதங்களையும்;* **பஶ்ய** – *பார்.*

7. इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।
मम देहे गुडाकेश यच्चान्यत् द्रष्टुमिच्छसि ॥

இஹைகஸ்த[2]ம் ஜக[3]த் க்ருத்ஸ்னம், பஶ்யாத்[3]ய ஸசராசரம் |
மம தே[3]ஹே குட[4]ாகேஶ, யச்சான்யத் த்ரஷ்டு மிச்ச[2]ஸி || 7

**குடாகா ஈச** – *(1-24;2-9) தூக்கத்தை வென்றவனே!* **இஹ** – *இந்த (உனக்குக் காண்பிக்கப்போகிற);* **மமதேஹே** – *என் னுடைய ரூபத்தில்;* **க்ருத்ஸ்னம்** – *முழுமையான; அதாவது,* **ஸசர அசரம்** –*ஜங்கம ஸ்தாவரத்துடன் கூடிய;* **ஜகத்** – *உலகை;* **ஏகஸ்தம்** – *ஒரே இடத்தில் இருப்பதையும்;* **அன்யத் யத்** – *வேறு எதையும்;* **த்ரஷ்டும்** – *பார்ப்பதற்கு;* **இச்சஸி** – *விரும்புகிறாயோ;* **(தத்ஸர்வம்) ச** – *அந்த எல்லாவற்றையும்;* **அத்ய** – *இப்பொழுது;* **பச்ய** – *பார்.*

**குறிப்பு:** குடாகேச-சிலர், படம் பார்க்கையில் தூங்குவது போல, அல்லாது, இவன் தூங்காமல் பார்ப்பான், என்பதைக் குறிக்கிறார் போலும்.

8. न तु मां शक्यसे द्रष्टुं अनेनैव स्वचक्षुषा ।
दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥

ந து மாம் ஶக்யஸே த்[3]ரஷ்டும், அனேனைவ ஸ்வசக்ஷுஷா |
தி[3]வ்யம் த[3]த[3]ாமி தே சக்ஷு:, பச்ய மே யோக[3] மைச்வரம் || 8

**து** – *(நீ பார்க்க விரும்புகிறாய் நானும் பார் என்கிறேன்) ஆயினும்;* **அனேன** – *இந்த;* **ஸ்வசக்ஷுஷா ஏவ** – *உன் கண்ணா லேயே;* **மாம்** – *என்னை (என் விஶ்வரூபத்தை);* **த்ரஷ்டும்** – *பார்ப்பதற்கு;* **ந ஶக்யஸே** – *முடியாதவனாக இருக்கிறாய். ஆகவே,* **தே** – *உனக்கு;* **திவ்யம்** – *அற்புதமான;* **சக்ஷு:** – *பார்க்கும் சக்தியை;* **ததாமி** – *தருகிறேன்.* **மே** – *என்னுடைய;*

**ஐஶ்வரம்** – *ஈஶ்வரனான என்னைச்சார்ந்த;* **யோகம்** – *ஸாமர்த்தியத்தை;* **பச்ய** – *பார்.*

सञ्जयः उवाच — **ஸஞ்ஜய: உவாச** - *ஸஞ்ஜயன் பிறகு நடந்ததை திருதராஷ்டிரனுக்குக் கூறி வர்ணிக்கிறான். (6 சுலோகங்களில்)*

9. एवमुक्त्वा ततो राजन् महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥

10. अनेकवक्त्रनयनं अनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥

11. दिव्यमाल्यांबरधरं दिव्यगन्धानुलेपनम् ।
सर्वाश्चर्यमयं देवं अनन्तं विश्वतोमुखम् ॥

ஏவ முக்த்வா ததோ ராஜன், மஹாயோகே$^3$ச்வரோ ஹரி: |
த$^3$ர்சயாமாஸ பார்த்த$^2$ாய, பரமம் ரூப மைஶ்வரம் || 9

அநேக வக்த்ர நயனம், அநேகாத்பு$^4$த த$^3$ர்ஶனம் |
அநேக தி$^3$வ்யா ப$^4$ரணம், தி$^3$வ்யாநேக உத்யதாயுத$^4$ம் || 10

தி$^3$வ்ய மால்யாம்ப$^3$ர த$^4$ரம், தி$^3$வ்ய க$^3$ந்த$^4$ாநுலேபனம் |
ஸர்வாஸ்சர்யமயம் தே$^3$வம், அநந்தம் விஶ்வதோ முகம் || 11

*9.* **ராஜன்**– *அரஸரான திருதராஷ்டிரரே!;* **தத:**– *பிறகு;* **மஹாயோக ஈஶ்வர:** *பெரிய உபாயங்களுக்கு அல்லது அநந்த சக்திகளுக்குத் தலைவரான;* **ஹரி:**–*ஸ்ரீ கிருஷ்ணர்;* **ஏவம் உக்த்வா** – *இம்மாதிரி (சு. 5 முதல்) சொல்லிவிட்டு;* **பார்த்தாய** – *குந்தீ புத்திரனுக்கு;* **பரமம்** – *அநேக வைபவங்களுடன் கூடியதும்:* **ஐஶ்வரம்** – *ஈஶ்வரரான அவருடையதும்;*

*10.* **அநேக வக்த்ர நயனம்** – *கணக்கற்ற வாய்களையும் கண்களையும் உடையதும்;* **அநேக அத்புத தர்சனம்** – *கணக்கற்ற அற்புதக்காட்சிகளை உடையதும்;* **அநேக திவ்ய ஆபரணம்** – *கணக்கற்ற அற்புத நகைகளை அணிந்ததும்;* **திவ்ய அநேக உத்யத ஆயுதம்** – *கணக்கற்ற அற்புத ஆயுதங்களை ஏந்தியதும்;*

*11.* **திவ்ய மால்ய அம்பர தரம்** – *அற்புதமான மாலைகளையும், வஸ்திரங்களையும் அணிந்ததும்;* **திவ்ய கந்த அநுலேபனம்** – *அற்புதமான ஸந்தனப்பூச்சுகளையுடையதும்;* **ஸர்வ ஆஸ்சர்யமயம்** – *எல்லா அற்புதங்களின் ஸ்வரூபமானதும்;* **தேவம்** – *லீலை முதலிய குணங்களைப்பெற்றதும்;*

**அநந்தம்** – தேசம், காலம், குணம் இவற்றால் முடிவற்றதும்; **விஶ்வதோமுகம்** – எல்லா திசைகளிலும் முகங்களை உடையதுமான;

*9.* **ரூபம்** – விசுவரூபத்தை; **தர்ஶயாமாஸ** – காட்டினார்.

குறிப்பு:

*இடோமஹூதம் கே³ஹேஷு, ஹரே ப⁴ாகம் க்ரதுஷ்வஹம் |*
*வர்ணோ மே ஹரித: ச்ரேஷ்ட:, தஸ்மாத் ஹரிரிதி ஸ்ம்ருத: ||*

ஸர்வயஜ்ஞ போக்தாவான பகவான், ஏக காலத்தில் பல யாகசாலைகளில் இருந்துகொண்டு, ஹவிர்ப்பாகங்களை, எடுத்துக் கொள்கிறார். பச்சை நிறம் அவருக்குச் சிறந்தது. ஆகையால், ஹரி எனப்படுகிறார். அதனால், மஹாயோகேசுவரர் என்பது பொருத்தமானது.

12. दिवि सूर्यसहस्रस्य भवेत् युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्यात् भासस्तस्य महात्मनः ॥

தி³வி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய, ப⁴வேத் யுக³பது³த்தி²தா |
யதி³ ப⁴ாஸ் ஸத்³ருஶீ ஸா ஸ்யாத், ப⁴ாஸஸ் தஸ்ய மஹாத்மன: || 12

**(மேலும்) திவி** – *ஆகாயத்தில்;* **யுக்பத்** – *ஏககாலத்தில்;* **(உத்திதஸ்ய** – *உதயமான);* **ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய** – *கணக்கற்ற சூரிய ராசிகளின்;* **பா:**– *பிரகாசம்;* **உத்திதா பவேத்யதி** – *(ஏககாலத்தில்) கிளம்புமாயின்;* **(அப்போது) ஸா** – *அந்த பிரகாசம்;* **தஸ்ய** –*அந்த;* **மஹாத்மன:**– *விசுவரூபத்தையுடைய ஸ்ரீ கிருஷ்ணரின்;* **பாஸ:**– *பிரகாசத்திற்கு;* **ஸத்ருஶீ ஸ்யாத்** – *சமமாக இருக்கும் (வேறு உதாரணமில்லை).*

*பிறகு என்ன நடந்தது? என்றால் கூறுகிறான்.*

13. तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तं अनेकधा ।
अपश्यत् देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥

தத்ரை கஸ்த²ம் ஜக³த் க்ருத்ஸ்னம், ப்ரவிப⁴க்தம் அநேகத⁴ா |
அபஶ்யத் தே³வதே³வஸ்ய, ஶரீரே பாண்ட³வஸ் தத³ா || 13

**ததா** – *அப்பொழுது;* **பாண்டவ:**– *பாண்டுவின் புத்திரனான அர்ஜுனன்;* **தத்ர** - *அந்த (பகவானால் காண்பிக்கப் பட்ட);* **தேவதேவஸ்ய** - *தேவர்களுக்கெல்லாம் தேவரான ஸ்ரீகிருஷ்ணரின்;* **ஶரீரே** – *தேகத்தில் விஶ்வரூபத்தில்;* **அநேகதா** – *(தேவர்கள், தானவர்கள், மனிதர்கள் என்று) பலவாறான;* **ப்ரவிபக்தம்** – *பாகுபாடுகளுடைய;* **க்ருத்ஸ்னம்** - *முழுமை*

*யான;* **ஜகத்** – *உலகத்தை;* **ஏகஸ்தம் –** *ஒரே இடத்தில் உள்ளதாக;* **அபர்யத் –** *பார்த்தான்.*

குறிப்பு: உலகமனைத்தும் பகவானை அடைந்திருந்தும், அவனைக்காட்டிலும் வேறாகவும், பரஸ்பரம் வேறாகவும் இருக்கிறது. ஐக்கியமில்லை. ஆகவே, பஞ்ச பேதங்கள் நித்யமானவை.

*அர்ஜுனன் அதைப்பார்த்த பிறகு என்ன செய்தான் என்று கூறுகிறான்.*

14. ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनञ्जयः ।
प्रणम्य शिरसा देवं कृताञ्जलिः अभाषत ॥

ததஸ் ஸ விஸ்மயாவிஷ்டோ, ஹ்ருஷ்டரோமா த⁴னஞ்ஜய: |
ப்ரணம்ய ஶிரஸா தே³வம், க்ருதாஞ்ஜலி: அப⁴ாஷத || 14

**தத: – (பார்த்த) பிறகு; ஸ; தனஞ்ஜய: –** *ராஜஸூயத்திற்குச் செல்வங்களை ஜயித்த அந்த அர்ஜுனன்;* **விஸ்மய ஆவிஷ்ட:–** *ஆச்சர்யத்தினால் குடிகொண்டவனாயும்;* **ஹ்ருஷ்டரோமா –** *ஆனந்தத்தால் மயிர்க்கூச்சுள்ளவனாயும்;* **தேவம் –** *லீலை முதலிய குணங்களையுடைய ஸ்ரீ கிருஷ்ணரை* **ஶிரஸா ப்ரணம்ய –***தலையால் நன்கு வணங்கி;* **க்ருதாஞ்ஜலி:–** *கைகளைக் கூப்பினவனாய்;* **அபாஷத –** *சொன்னான்.*

*என்ன சொன்னான் என்றால் கூறுகிறான்.*

अर्जुनः उवाच — **அர்ஜுன: உவாச** - *அர்ஜுனன் அந்த ரூபத்தைப் பார்த்தவாறு கூறி, துதித்தான். 17 சுலோகங்களில் (15 முதல் 31 வரை)*

15. पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेष सङ्घान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थं ऋषींश्च सर्वान् उरगांश्च दिव्यान् ॥

பஶ்யாமி தே³வாம்ஸ் தவ தே³வ தே³ஹே, ஸர்வாம்ஸ் தத²ா
பூ⁴தவிஶேஷ ஸங்க⁴ான் |
ப்³ரஹ்மாணமீஶம் கமலாஸனஸ்த²ம். ரிஷீம்ஸ்ச ஸர்வான்
உரக³ாம்ஸ்ச தி³வ்யான் || 15

**தேவ –** *லீலை முதலிய குணங்களையுடையவரே!;* **தவ தேஹே –** *உம்முடைய உடலில்;* **ஸர்வான் –** *எல்லா;* **தேவான் –** *முக்தி பெறாத தேவர்களையும் (சு 21ல் முக்தி பெற்ற தேவர்கள்);* **பூதவிசேஷ ஸங்கான் ததா –** *பசு பக்ஷி முதலிய எல்லா பிராணிகளின் கூட்டங்களையும்;* **ப்ரஹ்மாணம் –** *பிரம்மதேவனையும்;* **கமலாஸனஸ்தம் –** *அந்த பிரம்ம*

தேவனின் மடியிலுள்ள; **ஈசம்** – சிவனையும்; **ஸர்வான்** – எல்லா; **ரிஷீன் ச** – வஸிஷ்டர் முதலிய ரிஷிகளையும்; **திவ்யான்** – அற்புதமான; **உரகான் ச** – சேஷன் முதலிய பாம்புகளையும்; **பச்யாமி** – பார்க்கிறேன்.

**குறிப்பு:**

*விஷ்ணும் ஸமாச்ரிதோ ப்ரஹ்மா ப்ரஹ்மணோSங்க கத: ஹர: |*
*ஹரஸ்ய அங்கவிசேஷேஷு, தேவாஸ் ஸர்வேSபி ஸம்ஸ்திதா: ||*

பிரம்மா விஷ்ணுவை ஆசிரயித்துள்ளார். சிவன் பிரம்மாவின் மடியில் இருக்கிறார். சிவனின் பல அங்கங்களில் மற்ற எல்லா தேவர்களும் உளர்; என்று பாத்ம புராணம் கூறுகிறது. ஆகவே கமலாஸனஸ்தம் ப்ரஹ்மாணம் என்று அர்த்தம் செய்வது தவறு.

16. अनेकबाहूदर वक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।
नान्तं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूप ।।

அநேக ப[3]ாஹூத[3]ர வக்த்ரநேத்ரம், பச்யாமி த்வாம் ஸர்வதோSநந்த ரூபம் |
நாந்தம் ந மத்[4]யம் ந புனஸ்தவாதி[3]ம், பச்யாமி விச்வேச்வர விச்வரூப || 16

*(ஸர்வம் ஸமஸ்தம் விச்வம் ச, அனந்தம் பூர்ணமேவ ச)*

**விச்வேச்வர** – ஜகத்பதியே!; **விச்வரூப** – பூர்ணமான ரூபத்தையுடையவரே! **த்வாம்** – உம்மை; **அநேக பாஹு உதர வக்த்ர நேத்ரம்** – கணக்கற்ற கைகளையும், வயிறுகளையும், முகங்களையும், கண்களையும் உடையவராகவும்; **ஸர்வத:**– எல்லா இடங்களிலும்; **அனந்தரூபம்** – அபரிமிதமான ரூபங்களையுடையவராகவும்; **பச்யாமி** – காண்கிறேன். **புன:**– மேலும்; **தவ** – உம்முடைய; **ஆதிம்** – ஆரம்பத்தை; **ந பச்யாமி** – காணவில்லை. **அந்தம்** – முடிவை; **ந** – காணவில்லை. **மத்யம்** – (ஆதியும் அந்தமும் இல்லையாதலால்) நடுவையும்; **ந** – காணவில்லை.

**குறிப்பு:** இங்கு தேசத்தால் ஆதி, அந்தம், மத்யம் இல்லை எனவும்; சு. 19ல் அநாதிமத்யாந்தம் - குணத்தால் அவை இல்லை என்றும்; சு. 38ல் ததம் - பரிமாணத்தால் அவை இல்லை எனவும் கூறப்படுகிறது.

17. किरीटिनं गदिनं चक्रिणं च तेजोराशिं सर्वतो दीप्तिमन्तम् ।
पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्तात् दीप्तानलार्कद्युतिं अप्रमेयम् ।।

கிரீடினம் க$^{3}$தி$^{3}$னம் சக்ரிணம் ச, தேஜோராஶிம் ஸர்வதோ
தீ$^{3}$ப்திமந்தம் |
பஶ்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத், தீ$^{3}$ப்தா நலார்க்க
த்$^{3}$யுதிம் அப்ரமேயம் || 17

**த்வாம்** – *உம்மை;* **கிரீடினம்** – *கிரீடத்தை அணிந்த வராகவும்;* **கதினம்** – *கதாயுதத்தை ஏந்தியவராகவும்;* **சக்ரிணம் ச** – *சக்ராயுதத்தைப் பிடித்தவராகவும்;* **ஸர்வத;** – *எங்கும்;* **தீப்திமந்தம்** – *ஜ்வலிக்கிறவராகவும்;* **தேஜோராஶிம்** – *ஒளிக் குவியலாகவும்;* **ஸமந்தாத்** – *எல்லாப் பக்கங்களில்;* **தீப்த அநல அர்க்க த்யுதிம்** – *ஜ்வலிக்கிற நெருப்பு, சூரியன் இரண்டின் பிரகாசம் போன்ற பிரகாஶமுடையவராகவும்;* **அப்ரமேயம்** – *(அவ்விரண்டும் போலல்லாது) அளவு கடந்த பிரகாஶ முடையவராகவும்;* **துர்நிரீக்ஷ்யம்** – *அதனால் உற்றுப் பார்க்க முடியாதவராகவும்;* **பஶ்யாமி** – *காண்கிறேன்.*

18. त्वमक्षरं परमं वेदितव्यं त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे ॥

த்வமக்ஷரம் பரமம் வேதி$^{3}$தவ்யம், த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம்
நித$^{4}$ானம் |
த்வமவ்யய: ஶாச்வத த$^{4}$ர்மகே$^{3}$ாப்தா, ஸநாதனஸ்த்வம் புருஷோ
மதோ மே || 18

**த்வம்** – *நீர்;* **வேதிதவ்யம்** – *(மோக்ஷத்தை விரும்புகிறவர் களால்) அறியத்தகுந்த;* **பரமம் அக்ஷரம்** –*(8–3) நாசமற்ற மூன்று பொருள்களில் உத்தமரானவர்.* **த்வம்** – *நீர்;* **அஸ்ய விஶ்வஸ்ய** – *இந்த உலகத்திற்கு;* **பரம்** – *முக்கியமான;* **நிதானம்** – *ஆசிரய மானவர் (சு. 38).* **த்வம்** – *நீர்;* **அவ்யய:**– *நாசமற்றவர்.* **த்வம்** – *நீர்;* **சாஶ்வத தர்ம கோப்தா** – *அநாதி பரம்பரையாக வந்த தர்மத்தைக் காப்பாற்றுபவர்.* **ஸநாதன:**– *அநாதி நித்யரான:* **புருஷ:**– *பூர்ணமான ஆறு குணங்களையுடையவர் (2 –சுலோகம் 1க்கும், 2க்கும் இடையில்) என்று;* **மே மத:**– *என்னால் கருதப்படுகிறீர்.*

19. अनादि मध्यान्तं अनन्तवीर्यं अनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।
पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥

அநாதி³மத்⁴யாந்தம் அனந்தவீர்யம், அனந்தப³ாஹும் ஶஶி
ஸூர்யநேத்ரம் |
பஶ்யாமி த்வாம் தீ³ப்தஹுதாஶவக்த்ரம், ஸ்வதேஜஸா விஶ்வமிதம்
தபந்தம் || 19

**த்வாம்** – *உம்மை;* **அநாதி மத்ய அந்தம்** *–(குணத்தால்) ஆரம்பம் முடிவு, மத்தி இல்லாதவராகவும் (சு. 16ல் தேசத்தால்);* **அனந்தவீர்யம்** – *அபரிமித பராக்கிரமமுள்ளவராகவும்;* **அனந்தபாஹும்** – *கணக்கற்ற கைகளையுடையவராகவும்;* **ஶஶிஸூர்யநேத்ரம்** – *சந்திரன், சூரியன் இருவர்களைக் கண்களாகவுடையவராகவும்; அதாவது உமது கண் களிலிருந்து உண்டாவதால், அவர்களுக்கு ஆஶ்ரயமான கண் களை உடையவராகவும்;* **தீப்தஹுதாஶ வக்த்ரம்** – *ஜ்வலிக்கிற அக்நியை உடையவராகவும்; அதாவது அக்நி முகத்திலிருந்து உண்டாவதால், அக்நிக்கு ஆஶ்ரயமான வாயை உடைய வராகவும்;* **ஸ்வதேஜஸா** – *உம்முடைய பிரகாஸத்தால்;* **இதம்விச்வம்** – *இந்த உலகத்தை;* **தபந்தம்** – *எரிக்கிறவராகவும்;* **பஶ்யாமி** – *காண்கிறேன்.*

**குறிப்பு: சந்த்ரமா மனஸோ ஜாத:– சந்திரன் மனதிலிருந்து உண்டானான். ஆகவே மனதை ஆஶ்ரயமாக உடையவன். ஆனால் இங்கு சந்திரன், கண்ணை ஆசிரயமாகக் கொண்டவன் எனப்படுகிறதே என்றால், சந்திரன் முதலிய தேவர்களுக்குப் பல ரூபங்கள் உண்டு. ஒரு ரூபம் கண்ணையும், மற்றொரு ரூபம் மனதையும், ஆஶ்ரயமாகக்கொண்டது. ஆகவே விரோதம் இல்லை.**

20. द्यावापृथिव्योः इदमन्तरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः |
दृष्ट्वाऽद्भुतं रूपमुग्रं तवेदं लोकत्रयं प्रव्यथितं महात्मन् ||

த்⁴யாவா ப்ருதி²வ்யோ: இத³மந்தரம் ஹி, வ்யாப்தம் த்வயைகேன
தி³சஸ்ச ஸர்வா: |
த்³ருஷ்ட்வாSத்பு⁴தம் ரூபமுக்³ரம் தவேத³ம், லோகத்ரயம்
ப்ரவ்யதி²தம் மஹாத்மன் || 20

**மஹாத்மன்** – *பெரிய தேகம் அல்லது ஸ்வபாவம் படைத்தவரே!:* **த்யாவா ப்ருதிவ்யோ:** – *ஆகாயம், பூமி இரண்டின்;* **இதம் அந்தரம்** – *இந்த இடைவெளி;* **ஏகேன த்வயா** – *ஒரு ரூபத்தையுடைய உம்மால்;* **வ்யாப்தம்** – *பரவப் பட்டுள்ளது.* **ஸர்வா: திஶ:** – *எல்லா திசைகளும் (வேறு ரூபங்களால் பரவப்பட்டுள்ளன)* **தவ** – *உம்முடைய;* **அத்புதம்** – *ஆச்சரியமானதும்;* **உக்ரம்** – *பயங்கரமானதுமான;* **இதம் ரூபம்**

– இந்த விஶ்வரூபத்தை; **த்ருஷ்ட்வா** – பார்த்து; **லோக த்ரயம்** – மூவுலகமும். அதாவது மூவுலகில் உள்ள பக்தர்கள்; **ப்ரவ்யதிதம்** – நடுநடுங்குவதாக; (**பஶ்யாமி** – காண்கிறேன்) **ஹி**– பிரசித்தமானது.

குறிப்பு: பூமியின் பாரத்தைக் குறைக்க முற்பட்டிருப்பதால் அர்ஜுனன் போன்ற பக்தர்களுக்கும் இந்த ரூபம் பயங்கரமாகத் தோன்றுகிறதே தவிர, உண்மையில் பயங்கரமல்ல. அதிலும் முதலில் பயங்கரமாகத் தோன்றினும், பார்த்துப் பழகிவிடின், ஆனந்தகரமானதே யாகும். பக்தரல்லாதார் இந்த ரூபத்தைப்பார்க்க முடியாதாகையால், மூவுலக பக்தர்கள் எனப்பட்டது.

*அர்ஜுனன் பார்த்த மற்றொன்றையும் கூறுகிறான்.*

21. अमी हि त्वा सुरसङ्घाः विशन्ति केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।
स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसङ्घाः स्तुवन्ति त्वां स्तुतिभिः
पुष्कलाभिः ॥

அமீ ஹி த்வா ஸுரஸங்க⁴ா: விஶந்தி, கேசித் பீ⁴தா: ப்ராஞ்ஜலயோ
க்³ருணந்தி ।
ஸ்வஸ்தீத் யுக்த்வா மஹர்ஷி ஸித்த⁴ ஸங்க⁴ா:, ஸ்துவந்தி த்வாம்
ஸ்துதிபி⁴: புஷ்களாபி⁴: ॥ 21

**அமீ** – அந்த (முக்தர்களான); **ஸுரஸங்கா:**– தேவர் கூட்டங்கள் (சு. 15ல் அமுக்தர்கள்); **த்வா** – உம்மை; **விஶந்தி ஹி** – பிரவேஶிக்கிறார்கள் அல்லவா!; **கேசித்** – சிலர்; **பீதா:**– பயந்தவர்களாய்; **ப்ராஞ்ஜலய:**– கைகளை நன்கு கூப்பிக் கொண்டு; **க்ருணந்தி** – (ஜய விஜயீ பவ; நம்மைக் காப்பீராக என்று) துதிக்கிறார்கள். **மஹர்ஷி ஸித்தஸங்கா:**– மஹர்ஷிகள், அணிமாதி ஸித்தியுடையவர்கள், ஆகியோரின் கூட்டங்கள்; **ஸ்வஸ்தி** – இந்த உலகத்திற்கு க்ஷேமம் உண்டாகட்டும்; **இதி உக்த்வா** – என்றுகூறி; ***த்வாம்** – உம்மை; **புஷ்களாபி:**– குணங்களினால் நிறைந்த; **ஸ்துதிபி:**– ஸ்தோத்திரங்களினால்; **ஸ்துவந்தி** – துதிக்கிறார்கள்.

குறிப்பு: 1. *த்வாம் - பிறர்பாடம் 2. ஸாயுஜ்யம் என்ற முக்தியை அடைந்தவர்கள் பகவானுடைய தேகத்தில் தம்மிஷ்டப்படி பிரவேசித்து இருக்கவும், வெளிவரவும் தகுந்தவர்கள்.

22. रुद्रादित्याः वसवो ये च साध्याः विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।
गन्धर्व यक्षासुरसिद्धसङ्घाः वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥

ருத்[3]ராதி[3]த்யா: வஸவோ யேச ஸாத்[4]யா:, விஶ்வேSஶ்வினௌ
மருதஸ்சோஷ்மபாஸ்ச |
க[3]ந்த[4]ர்வ யக்ஷா ஸுரஸித்த[4] ஸங்க[4]ா:, வீக்ஷந்தே த்வாம்
விஸ்மிதாஸ் சைவ ஸர்வே || 22

**ருத்ர ஆதித்யா:–** *11 ருத்திரர்களும், 12 ஆதித்யர்களும்;* **வஸவ:– 8** *வஸுக்களும்;* **ஸாத்யா: ச** – *ஸாத்யர்களும்;* **விஶ்வே** *–10 விசுவே தேவர்களும்;* **அஶ்வினௌ** – *இரு அஶ்வினி தேவர்களும்;* **மருத: ச** – *50 வாயுக்களும் (11-6);* **ஊஷ்மபா: ச** – *சுடுசாதத்தின் ஆவியைப்பருகும் பித்ருக்களும்;* **கந்தர்வ யக்ஷ அஸுர ஸித்தஸங்கா:** – *கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள், ஸித்தர்கள் ஆகியோரின் கூட்டத்தார்களும்;* **யே** – *எவர்களோ;* **தே ஸர்வே ஏவ** – *அவர்கள் எல்லோருமே;* **விஸ்மிதா:–** *ஆச்சர்யப்படுகிறவர்களாய்;* **த்வாம்** – *உம்மை;* **வீக்ஷந்தே** – *உற்றுப் பார்க்கிறார்கள்.*

குறிப்பு: 1. உலகம் முழுவதும் அந்த ரூபத்தில் இருப்பதால் அஸுரர்களும் காணப்படுகின்றனர். 2. பத்து விச்வே தேவர்கள் ஐந்து ஜோடிகளாகவே இருப்பார்கள். 1. புரூரவர் - ஆர்த்ரவர்= பார்வண சிராத்தத்தில். 2. தூரி - லோசனர் = மஹாலயசிராத்தம் முதலியதில். 3. காமர் - காலர் = அஷ்டகா முதலிய சிராத்தங்களில் 4. ஸத்யர் - வஸு = நாந்தீ சிராத்தத்தில். 5. க்ரது - தக்ஷர் = இஷ்டி சிராத்தம் முதலியதில்.

23. रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरूपादम् ।
बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्टवा लोकाः प्रव्यथिताः तथाऽहम् ॥

ரூபம் மஹத்தே ப[3]ஹு வக்த்ரநேத்ரம், மஹாப[3]ாஹோ ப[3]ஹு
ப[3]ாஹூருபாத[3]ம் |
ப[3]ஹூத[3]ரம் ப[3]ஹுத[3]ம்ஷ்ட்ராகராளம், த்[3]ருஷ்ட்வா லோகா:
ப்ரவ்யதி[2]தா: தத[2]ாSஹம் || 23

**மஹாபாஹோ** – *பெரும் புஜபலத்தை உடையவரே!;* **தே** – *உம்முடைய;* **பஹு வக்த்ர நேத்ரம்** – *பல வாய்களும், கண்களும், உள்ளதும்;* **பஹு பாஹு ஊரு பாதம்** – *பல கைகளும், துடைகளும், கால்களும் உள்ளதும்;* **பஹு உதரம்** – *பல வயிறுகளுள்ளதும்;* **பஹு தம்ஷ்ட்ராகராளம்** – *பல கோரப் பற்களால் விகாரமானதும்;* **மஹத்** – *பெரியதுமான;* **ரூபம்** – *உருவத்தை;* **த்ருஷ்ட்வா** – *பார்த்து;* **லோகா:–** *மூவுலக பக்தர்கள் (சு. 20);* **ப்ரவ்யதிதா:–** *நடுநடுங்குகிறார்கள்* **அஹம்** – **நானும்; ததா** – *அவ்வாறே (நடுங்குகிறேன்).*

24. नभस्स्पृशं दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा धृतिं न विन्दामि शमं च विष्णो ॥

நப$^4$ஸ் ஸ்ப்ருஶம் தீ$^3$ப்தமநேகவர்ணம், வ்யாத்தானனம்
தீ$^3$ப்தவிஶாலநேத்ரம் |
த்$^3$ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதி$^2$தாந்தராத்மா, த்$^4$ருதிம் ந விந்த$^3$ாமி
ஶமம் ச விஷ்ணோ || 24

**விஷ்ணோ** – *(சு. 10- 21) எங்கும் வியாப்தராய், எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்திருப்பவரே!;* **நப: ஸ்ப்ருஶம்** – *ஆகாயத்தைத் தொடுபவரும்;* **தீப்தம்** – *ஜ்வலிப்பவரும்;* **அநேக வர்ணம்** – *(சு. 5) பல நிறமுள்ளவரும்;* **வ்யாத்த ஆனனம்** – *திறந்த வாய்களையுடையவரும்;* **தீப்தவிஶால நேத்ரம்** – *ஜ்வலிக்கிற பரந்த கண்களையுடையவருமான;* **த்வாம்** – *உம்மை;* **த்ருஷ்ட்வா** – *பார்த்து;* **ப்ரவ்யதித அந்தராத்மா** – *நடு நடுங்கின மனதையுடையவனாய்;* **த்ருதிம்** – *தைரியத்தையும்;* **ஶமம் ச** – *ஸுகத்தையும் (சாந்தியையும்);* **ந விந்தாமி ஹி** – *அடையவில்லை என்பது பிரசித்தம்.*

25. दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसन्निभानि ।
दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास ॥

த$^3$ம்ஷ்ட்ரா கராளானி ச தே முக$^2$ானி, த்$^3$ருஷ்ட்வைவ காலாநல
ஸந்நிப$^4$ானி |
தி$^3$ஶோ ந ஜானே ந லபே$^4$ ச ஶர்ம, ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ|| 25

**தே** – *உம்முடைய;* **தம்ஷ்ட்ரா காராளானி** – *கோரப் பற்களால் விகாரமானவையும்;* **கால அநல ஸந்நிபானி ச** – *ப்ரளய காலத்து நெருப்பு போன்றவையுமான;* **முகானி** *முகங்களை;* **திருஷ்ட்வா ஏவ** – *பார்த்ததுமே;* **திஶ:** *கிழக்கு முதலிய திசைகளை;* **ந ஜானே** – *அறியவில்லை;* **ஶர்ம ச** – *சுகத்தையும்;* **ந லபே** – *அடையவில்லை;* **தேவேஶ** – *தேவர் களின் தலைவரே!* **ஜகந்நிவாஸ** – *உலகங்களின் ஆதார மானவரே!* **ப்ரஸீத** – *அருள் புரிவீராக.*

26. अमी च त्वा धृतराष्ट्रस्य पुत्राः सर्वे सहैव अवनिपालसङ्घैः ।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथाऽसौ सहास्मदीयैरपि योधमुख्यैः ॥

அமீ ச த்வா த்[4]ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:, ஸர்வே ஸஹைவ
அவனிபாலஸங்கை[4]: |
பீ[4]ஷ்மோ த்ரோண: ஸூத புத்ரஸ் தத[2]ாSஸௌ, ஸஹாஸ்மதீ[3]யை
ரபி யோத[4]முக்[2]யை: || 26

**அமீ** – *அந்த;* **ஸர்வே** – *எல்லா;* **த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:–** *திருதராஷ்டிரனின் புதல்வர்களான துரியோதனாதியர்கள்;* **அவனி பாலஸங்கை: ஸஹ ஏவ** - *அரசர் கூட்டங்களுடன் கூடியே;* **ததா** - *அவ்வாறு;* **பீஷ்ம:–** *பீஷ்மர்;* **த்ரோண** – *துரோணர்;* **அஸௌ ஸூதபுத்ர:** – *அந்த தேரோட்டியின் பிள்ளை (கர்ணன்) இந்த அனைவரும்,* **அஸ்மதீயை:** – *நம்மவர் களான;* **யோதமுக்யை: அபி ஸஹ** – *முக்கியமான போர் வீரர்களுடனும் கூடி;* **த்வா** – *உம்மை;* **(சு. 27 விஶந்தி** – *பிரவேஶிக்கிறார்கள்.)*

குறிப்பு: அர்ஜுனனுக்குக் கர்ணனிடம் அதிக கோபமாதலால், அவன் பெயரைச் சொல்லாது, தேரோட்டியின் பிள்ளை என்று இகழ்கிறான்.

27. वक्त्राणि ते त्वरमाणा विशन्ति दंष्ट्राकरालानि भयानकानि ।
केचित् विलग्नाः दशनान्तरेषु संदृश्यन्ते चूर्णितैः उत्तमाङ्गैः ॥

வக்த்ராணி தே த்வரமாணா விஶந்தி, த[3]ம்ஷ்ட்ரா கராளானி
ப[4]யானகானி |
கேசித் விலக்[3]னா: த[3]ஶனாந்தரேஷு, ஸந்த்ருஶ்யந்தே சூர்ணிதை:
உத்தமாங்கை[3]: || 27

**தே** – *அவர்கள் (முற்கூறிய அனைவர்களும்);* **தே** – *உம்முடைய;* **தம்ஷ்ட்ரா கராளானி** – *கோரப்பற்களினால் விகாரமானவையும்;* **பயானகானி** – *பயங்கரமானவையுமான;* **வக்த்ராணி** – *வாய்களை;* **த்வரமாணா:–** *அவஶரப்படுபவர் களாய்;* **ஆவிஶந்தி** - *நுழைகின்றனர்.* **கேசித்** – *(அப்போதே இறக்கும்) சிலர்;* **தஶன அந்தரேஷு** – *பற்களின் இடுக்குகளில்;* **விலக்னா:–** *நன்கு அகப்பட்டவர்களாகி;* **சூர்ணிதை** – *பல நுண்ணிய விரிசல்களுடன் பிளந்த;* **உத்தமாங்கை:–** *தலை களுடன் கூடினவர்களாய்; (மயா - என்னால்);* **ஸந்த்ருச்யந்தே** – *நன்கு பார்க்கப்படுகின்றனர்.*

குறிப்பு: துரியோதனன் முதலியோர் உண்மையில் பகவானுடைய வாய்களில் நுழையவில்லை. பகவானே தமது பலவாய்களை இரு சேனைகளிலுமுள்ளோரின் முன் நீட்டி, அவர்களை விழுங்குவது போலவும், அப்போது சிலர் பற்களின் இடுக்குகளில் மாட்டிக் கொண்டிருப்பது போலவும், தமது அற்புத சக்தியால் காட்டுகிறார்.

நுண்ணிய விரிசல்கள் மற்றவர்களுக்குப் புலப்படாவிடிலும், அர்ஜுனனின் திவ்யதிருஷ்டிக்குத் தென்பட்டன. எப்படியெனில் மற்றவர்களுக்குத் தென்படாத புரூரவஸ்ஸின் கிழத்தனம் அச்வினீ தேவர்களுக்குத் தென்பட்டது. (விஷ்ணு தர்மம் என்ற நூலில் அத்தியாயம் 29.)

ஒரு சமயம், அழகிற்சிறந்த அச்வினீ தேவர்கள் அழகுவாய்ந்த புரூரவஸ்ஸைப் பார்க்கச் சென்றனர். அவன், 'நான் எண்ணெய் தேய்த்துக் கொண்டுள்ளேன். குளித்துவிட்டு வருகிறேன்', என்றான். அவர்கள் 'குளிப்பதற்கு முன்பும், பின்பும் பார்க்க வேண்டும்', என்றனர். அப்படியே அவர்கள் பார்த்தபிறகு, அவன் குளித்து, ஆடையாபரணங்களினால் அலங்கரித்துக்கொண்டு வந்தான். அவர்கள் அவனைப்பார்த்துச் சிரித்தனர். அவன் சிரிப்பின் காரணத்தை வினவ, அவர்கள், 'குளிப்பதற்கு முன் எவ்வித அழகு இருந்ததோ, அவ்வித அழகு இப்போது இல்லை. இக்குறுகிய காலத்தில் அழகு குறைந்து, கிழவனின் தோற்றமளிக்கிறது. இதை நம் திவ்ய திருஷ்டியால் காண்கிறோம்.' என்றனர்.

28. यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेव अभिमुखाः द्रवन्ति ।
तथा तवामी नरलोकवीराः विशन्ति वक्त्राणि अभिविज्वलन्ति ॥

யத²ா நதீ³னாம் ப³ஹவோऽம்பு³வேக³ா:, ஸமுத்³ரமேவ அபி⁴முக²ா:
த்³ரவந்தி |
தத²ா தவாமீ நரலோகவீரா:, விஶந்தி வக்த்ராணி அபி⁴விஜ்வலந்தி || 28

**யதா** – *எவ்வாறு;* **நதீனாம்** – *ஆறுகளின்;* **பஹவ:** – *பல;* **அம்புவேகா:**– *நீர்ப்பெருக்குகள்;* **ஸமுத்ரம் ஏவ** – *கடலையே;* **அபிமுகா:** – *நோக்கியவைகளாய்;* **த்ரவந்தி** – *பாய் கின்றனவோ;* **ததா** – *அவ்வாறு;* **அமீ** – *அந்த;* **நரலோக வீரா:**– *மனித உலகத்து வீரர்கள்;* **தவ** – *உம்முடைய;* **அபிவிஜ்வலந்தி** – *சுற்றிலும் ஜ்வலிக்கின்ற;* **வக்த்ராணி** – *வாய்களை;* **விஶந்தி** – *நுழைகிறார்கள்.*

**குறிப்பு:** ஆறுகள் ஸமுத்திரத்தின் மனைவிகள் அல்லவா! அவை சுகத்திற்காகக் கணவரை நோக்கிச் செல்வதுபோல, இவர்கள் செல்கிறார்களா? என்றால், இல்லை என்று வேறு உதாரணம் தருகிறான்.

29. यथा प्रदीप्तं ज्वलनं पतङ्गाः विशन्ति नाशाय समृद्धवेगाः ।
तथैव नाशाय विशन्ति लोकाः तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥

யத²ா ப்ரதீ³ப்தம் ஜ்வலனம் பதங்கா:, விஶந்தி நாஶாய
ஸம்ருத்த⁴வேக³ா: |
ததை²வ நாஶாய விஶந்தி லோகா:, தவாபி வக்த்ராணி
ஸம்ருத்தவேகா: || 29

**யதா** – எவ்வாறு; **பதங்கா:** – விட்டில் பூச்சிகள்; **ஸம்ருத்தவேகா:**– அதிகரித்த வேகமுடையவைகளாய்; **நாஶாய** – அழிவதற்காக; **ப்ரதீப்தம்** – கொழுந்து விட்டு எரிகிற; **ஜ்வலனம்** – நெருப்பில்; **விஶந்தி** – நுழைகின்றனவோ; **ததா ஏவ** – அவ்வாறே; **லோகா: அபி** – அந்த ஜனங்களும்; **ஸம்ருத்தவேகா:**– அதிகரித்த வேகமுடையவர்களாய்; **நாஶாய** – அழிவதற்காக; **தவ வக்த்ராணி** – உமது வாய்களில்; **விஶந்தி** – நுழைகிறார்கள்.

30. लेलिह्यसे ग्रसमानः समन्तात् लोकान् समग्रान् वदनैर्ज्वलद्भिः ।
तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥

லேலிஹ்யஸே க்[3]ரஸமானஸ் ஸமந்தாத், லோகான் ஸமக்[3]ரான் வத[3]னைர் ஜ்வலத்பி[4]: |
தேஜோபி[3]ராபூர்ய ஜகத்ஸமக்[3]ரம் ப[4]ாஸஸ் தவோக்[3]ரா: ப்ரதபந்தி விஷ்ணோ || 30

**விஷ்ணோ** – *(சு. 24)* எங்கும் வியாபித்து, எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்திருப்பவரே!; **ஜ்வலத்பி** – ஜ்வலிக்கின்ற; **வதனை:**– வாய்களினால்; **ஸமக்ரான் லோகான்** – எல்லா ஜனங்களையும்; **ஸமந்தாத்** – எல்லா பக்கங்களிலும்; **க்ரஸமான:**– விழுங்குகிறவராய்; **லேலிஹ்யஸே** – (கோபத்தால் ரத்தம் தோய்ந்த உதடுகளை நாக்கின் நுனியால் ருசிப்பது போல) அடிக்கடி நக்குகிறீர். **தவ** – உம்முடைய; **உக்ரா:**– கொடிய; **பாஸ:** – ஒளிகள்; **தேஜோபி:**– நெருப்பின் பிரகாசத்தால்; **ஸமக்ரம் ஜகத்** – உலகம் முழுவதையும்; **ஆபூர்ய** – நன்கு நிரப்பி; **ப்ரதபந்தி** – (தேகம் முதலியவற்றை) அதிகம் எரிக்கின்றன.

பகவத் ஸ்வரூபத்தையும், அவருடைய குணங்களையும், செய்கைகளையும் அர்ஜுனன் அறிந்திருந்தும், அறியாதவை களை விஶேஷமாக அறிவதின் பொருட்டு வினவுகிறான்.

31. आख्यहि मे को भवान् उग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद ।
विज्ञातुमिच्छामि भवफन्तमाद्यं न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥

ஆக்[2]யாஹி மே கோ ப[4]வான் உக்[3]ரரூபோ, நமோऽஸ்து தே தே[3]வவர ப்ரஸீத[3] |
விஜ்ஞாது மிச்ச[2]ாமி ப[4]வந்தமாத்[3]யம், நஹி ப்ரஜானாமி தவ ப்ரவ்ருத்திம் || 31

**உக்ரரூப:** – *பயங்கர ரூபமுடைய;* **பவான்** – *தாங்கள்;* **க:**– *யார்? (என்ன குணமுடையவர்? ஏன் இந்த பயங்கர ரூபம்?) என்று;* **மே** – *எனக்கு;* **ஆக்யாஹி** – *சொல்வீராக.* **தேவவர** – *தேவர்களிற் சிறந்தவரே!;* **தே** – *உமக்கு;* **நம: அஸ்து** – *வணக்கம் இருக்கட்டும்.* **ப்ரஸீத** – *அருள் புரிவீராக.* **ஆத்யம்** – *(எல்லோருக்கும்) முதலில் உள்ள;* **பவந்தம்**– *தங்களை;* **விஜ்ஞாதும்** – *விசேஷமாக அறிய;* **இச்சாமி** – *விரும்புகிறேன்.* **ஹி** – *ஏனெனில்;* **தவ** – *உம்முடைய;* **ப்ரவ்ருத்திம்** – *அலுவலை;* **ந ப்ரஜானாமி** – *நான் நன்கு அறியவில்லை.*

श्रीभगवान् उवाच । **ஸ்ரீ பகவான் உவாச** | *ஸ்ரீ கிருஷ்ணர் இம்மாதிரி வேண்டப்பட்டு, தம் குணம் முதலியவற்றைக் கூறுகிறார்.*

32. कालोऽस्मि लोकक्षयकृत् प्रवृद्धो लोकान् समाहर्तुमिह प्रवृत्तः ।
ऋतेऽपि त्वा न भविष्यन्ति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥

காலோSஸ்மி லோகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்தே[4]ா, லோகான்
ஸமாஹர்த்துமிஹ ப்ரவ்ருத்த: |
ரிதேSபி த்வா ந ப[4]விஷ்யந்தி ஸர்வே, யேSவஸ்தி[2]தா: ப்ரத்யனீகேஷு
யோத[4]ா: || 32

*(நான் யார் என்றால்);* **கால:**– *(10–30) பூர்ணமான நற்குணங்களுடையவனாகவும் (குணை; கலிதத்வாத்); உலகத்தாரைக் கட்டுபவனாகவும் (கல பந்தனே); கொல்பவனாகவும் (கல ஸம்ஹரணே): எல்லாம் அறிந்தவனாகவும் (கல ஜ்ஞானே); அனைவரை விரட்டுபவனாகவும் (கல வித்ரா வணே);* **அஸ்மி** – *இருக்கிறேன்.* **ப்ரவ்ருத்த:**– *தேசம், காலம் இவற்றால் பூர்ணமானவன் அல்லது அநாதிநித்யனாக உளேன். (இந்தப் பயங்கர ரூபம் எதற்கு என்றால்);* **லோக க்ஷயக்ருத்** – *உலகத்தாரை அழிப்பவன். (என் அலுவல்யாது என்றால்);* **இஹ** – *இந்த யுத்த பூமியிலுள்ள;* **லோகான்** – *ஜனங்களை;* **ஸமாஹர்த்தும்** – *(கண்ணுக்குத் தெரியும் ரூபத்தினால்) கொல்வதற்கு;* **ப்ரவ்ருத்த:** – *முற்பட்டிருக்கிறேன். (பாண்டவர்களையும் கொல்வீரா என்றால்);* **த்வா ரிதே** – *உன்னை (மற்ற 9 பேர்களையும்) தவிர;* **ப்ரத்யனீ கேஷு** – *பரஸ்பரம் எதிரிகளாகவுள்ள இரு சேனைகளில்;* **அவஸ்திதா:**– *உள்ள;* **யே யோதா:**– *எந்தப் போர்வீரர்களோ;* **தே ஸர்வே அபி**

– *அவர்கள் அனைவருமே;* **ந பவிஷ்யந்தி** – *இருக்கப் போவதில்லை.*

**குறிப்பு: 1.** ரிதேபி த்வாம் - பிறர் பாடம். (2) பாகவதம் 10-98-2 முதல் 4 விஜயத்வஜ பாடம். பிழைத்த 10 பேர்கள்:- 1-5 பாண்டவர்கள். 6. ஸாத்யகி 7. யுயத்ஸு 8. அச்வத்தாமா 9. கிருபாசார்யர் 10. கிருதவர்மர். (3) **ப்ரத்யனீகயோ:** என்றிருக்க வேண்டும். பல அக்ஷௌஹிணிகள் இருந்ததால் பன்மை.

2-6ல் அர்ஜுனன், 'நாம் அவர்களை ஜயிப்போமா? அவர்கள் நம்மை ஜயிப்பார்களா? எனத்தெரியவில்லை' என்றான், அதற்கு 2-37ல், ஜயித்தாலும் தோற்றாலும் பலனிருப்பதால், போர்செய் என்றார். இங்கு அவனுக்கு ஜயம்தான், தோல்வியில்லை என்கிறார்.

33. तस्मात् त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून् भुंक्ष्व राज्यं समृद्धम्।
मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥

தஸ்மாத் த்வமுத்திஷ்ட[2] யஶோ லப[4]ஸ்வ, ஜித்வா ஶத்ரூன் பு[4]ங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்த[4]ம் |
மயைவைதே நிஹதா: பூர்வமேவ, நிமித்தமாத்ரம் ப[4]வ ஸவ்யஸாசின் || 33

*(யஸ்மாத் – எதனால் சுலோகம் 32ல், நானே அனைவரையும் கொல்வதற்கு முற்பட்டிருக்கிறேனோ);* **தஸ்மாத்** – *அதனால்;* **த்வம் உத்திஷ்ட** – *(1-46 தேரின் மத்தியில் உட்கார்ந்திருக்கும்) நீ எழுந்திரு. போர்புரியத் தயாராய் இரு.* **ஶத்ரூன்** – *பகைவர்களை;* **ஜித்வா** – *ஜயித்து;* **யஶ:**– *திசைகளில் பரந்த கீர்த்தியை;* **லபஸ்வ** – *அடைவாயாக.* **ஸம்ருத்தம்** – *செல்வங்கள் நிறைந்த;* **ராஜ்யம்** – *அரசை;* **புங்க்ஷ்வ** – *அனுபவிப்பாயாக,* **ஏதே** – *இவர்கள்;* **பூர்வம் ஏவ** – *முன்னமேயே (1-25).* **மயா ஏவ** – *என்னாலேயே;* **நிஹதா:**– *(அவர்களின் ஆயுளைக் கவர்ந்தபடியால்) கொல்லப் பட்டவர்கள் போன்றவர்கள், சமீபத்தில் இறப்பவர்கள்,* **ஸவ்யஸாசின்** – *இடது கையாலும் அம்புகளை எய்பவனே!;* **நிமித்தமாத்ரம்** – *(அவர்களை உண்மையில் கொல்ல) ஓர் கருவியாக மாத்திரம்;* **பவ** – *இரு (நான் உன்னிடம் 10-37ல் கூறிய தனஞ்ஜயன் என்ற ரூபத்துடன் இருந்து நானே கொல்கிறேன்).*

**குறிப்பு: 1. திக்ஷு யானாத் யசோ வ்யாப்தம், கீர்த்தி: ப்ரத்யக்ஷத: ஸ்துதி:** | யசஸ் = திசைகளில் செல்லும் புகழ். கீர்த்தி - நேரில் புகழ்தல்.

2. 1-25 இருசேனைகளிலும் உள்ளவர்களைப் பார், என்று கூறினபோது, பகவான் தன் பார்வையால் அனைவரின் ஆயுளைக்

கவர்ந்துவிட்டார். இதைப் பீஷ்மர் தமது ஸ்துதியில், பாகவதம் 1-9-35ல் கூறுகிறார்.

*ஸ்திதவதி பரஸைனிகாயுரக்ஷ்ணா. ஹ்ருதவதி பார்த்தஸகே ரதிர் மமாஸ்து |*

அர்ஜுனன் - துரோணர் எனக்கு வில்வித்தையில் ஆசார்யர். பீஷ்மர் தம் இஷ்டப்படி இறப்பவர். 'யார் இவனுடைய தலையை வெட்டிப் பூமியில் போடுவானோ, அவனுடைய தலை பிளக்கும்' என்ற தந்தையின் வரத்தால் ஜயத்ரதன் பலிஷ்டன். கர்ணன் இந்திரனின் சக்தி ஆயுதத்தைப் பெற்றிருப்பதால் பலமுள்ளவன். இம்மாதிரி பகதத்தன் முதலிய மற்ற பலிஷ்டர்களும் உள்ளனரே ! அவர்களை நான் எப்படி ஜயிப்பேன்?

34. द्रोणं च भीष्मं च जयद्रथं च कर्णं तथाऽन्यानपि योधवीरान् ।
मया हतान् त्वं जहि मा व्यथिष्ठाः युध्यस्व जेताऽसि रणे सपत्नान्॥

த்[3]ரோணம் ச பீ[4]ஷ்மம் ச ஜயத்ரதம் ச, கர்ணம் தத[2]ாSன்யானபி யோத[4]வீரான் |
மயா ஹதான் த்வம் ஜஹி மாவ்யதிஷ்ட[2]ா:, யுத்யஸ்வ ஜேதாSஸி ரணே ஸபத்னான் || 34

**மயா ஹதான்** – *என்னால் கொல்லப்பட்டவர்கள் போன்றுள்ள;* **த்ரோணம் ச** – *துரோணரையும்;* **பீஷ்மம் ச** – *பீஷ்மரையும்;* **ஜயத்ரதம் ச** – *ஜயத்ரதனையும்* **கர்ணம் ததா** – *கர்ணனையும்;* **அன்யான்** – *மற்ற;* **யோதவீரான் அபி** – *போர் வீரர்களையும்;* **த்வம்** – *நீ;* **ஜஹி** – *கொல்.* **மாவ்ய திஷ்டா:** – *மனவருத்தமடையாதே.* **யுத்யஸ்வ** – *சண்டைசெய்.* **ரணே**– *யுத்தத்தில்;* **ஸபத்னான்** – *சத்ருக்களை;* **ஜேதா** – *ஜயிப்ப வனாக;* **அஸி** – *இருக்கிறாய்.*

सञ्जय: उवाच। **ஸஞ்ஜய: உவாச** | *ஸஞ்ஜயன் பிறகு நடந்ததை திருதராஷ்டிரனுக்குக் கூறுகிறான்.*

35. एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृताञ्जलिः वेपमानः किरीटी ।
नमस्कृत्वा भूय एवाह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य ॥

ஏதத் ச்ருத்வா வசனம் கேஶவஸ்ய, க்ருதாஞ்ஜலி: வேபமான: கிரீடீ |
நமஸ்க்ருத்வா பூ[4]ய ஏவாஹ க்ருஷ்ணம் ஸக[3]த்க[3]த[3]ம் பீ[3]தபீ[3]த: ப்ரணம்ய || 35

**கிரீடீ** –*(1–31 பத்து பெயர்களில் ஒன்றானதும். சிறந்த கிரீடத்தை அணிந்திருப்பதால் கிரீடீ என்றதுமான பெய ருடைய)* **அர்ஜுனன்; கேஶவஸ்ய** – *பிரம்மருத்ர நியாமகரான ஸ்ரீ கிருஷ்ணரின்;* **ஏதத் வசனம்** – *இந்த வார்த்தையை;* **ஶ்ருத்வா** –

கேட்டு; **நமஸ்க்ருத்வா** – நமஸ்காரத்தைச் செய்து; **க்ருத அஞ்ஜலி:**– கைகளைக் கூப்பினவனாயும்; **வேபமான:** – நடுங்குகிற அங்கங்களை உடையவனாயும்; **பீதபீத:**– அதிகம் பயந்தவனாயும்; **பூய: ஏவ** – மறுபடியுமே; **ப்ரணம்ய** – நன்கு வணங்கி; **ஸகத்கதம்** – தழுதழுத்த குரலுடன்; **க்ருஷ்ணம் ஆஹ** – ஸ்ரீ கிருஷ்ணரிடம் சொன்னான்.

குறிப்பு: அந்தக்கிரீடத்தின் சிறப்பு - வனபர்வம் 176-4:- அர்ஜுனன் நிவாத கவசர்களைக் கொன்றதால் சந்தோஷித்த இந்திரன், தானே அந்த திவ்யகிரீடத்தை அவன் தலையில் சூட்டினான். கர்ணபர்வம் 97-35,36:- அது பொன்னாலும், முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டது. பிரம்ம தேவரால் இந்திரனுக்காகப் பிரயத்தினத்தால் செய்யப்பட்டது.

2. **ஸர்வேஷு காத்ரேஷு சிர: ப்ரதானம்** - ஆகையால் தலை உத்தமாங்கம், ஆகும். பகவானை வணங்காவிடில், அந்த தலை சுமையே ஆகும். பாகவதம் 2-3-21.

*பார: பரம் பட்ட கிரீட ஜுஷ்டம், அப்யுத்தமாங்கம் ந*
*நமேன் முகுந்தம் |*

अर्जुनः उवाच — **அர்ஜுன: உவாச** - *அர்ஜுனன் 11 சுலோகங்களில் (36மு.46) கூறுகிறான். (இந்தசுலோகங்களைத் தினந்தோறும் படிப்பதால், ராக்ஷஸர்கள் முதலியோரின் பீடையிராது, ஸகல மங்களங்களும் உண்டாகும். இது ரக்ஷோக்ன மந்திரமாகும்.)*

36. स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत् प्रहृष्यति अनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवन्ति सर्वे नमस्यन्ति च सिद्धसंघाः ॥

ஸ்த²ானே ஹ்ருஷிகேஶ தவ ப்ரகீர்த்யா, ஜகத் ப்ரஹ்ருஷ்யதி
அநுரஜ்யதே ச |
ரக்ஷாம்ஸி பீ⁴தானி தி³ஶோ த்³ரவந்தி, ஸர்வே நமஸ்யந்தி ச
ஸித்த⁴ஸங்க⁴ா: || 36

**ஹ்ருஷீக ஈஶ** – எல்லா இந்திரியங்களைத் தூண்டுபவரே! **தவ** – உம்முடைய; **ப்ரகீர்த்யா** – (குணங்களை) நன்கு சொல்வதால்; **ஜகத்** – உலகம்; **ப்ரஹ்ருஷ்யதி** – மிக மகிழ்கிறது. **அநுரஜ்யதே ச** – உம்மிடம் தொடர்ந்து ப்ரீதியுள்ளதாகவும் இருக்கிறது. **ரக்ஷாம்ஸி** – ராக்ஷஸர்கள்; **பீதானி** - பயந்தவர்களாய்; **திஶ** – பல திசைகளிலும்; **த்ரவந்தி** – ஓடுகின்றனர். **ஸர்வே** – எல்லா; **ஸித்த ஸங்கா: ச** – அணிமாதி ஸித்தியடைந்தவர்களின் கூட்டங்களும்; **நமஸ்யந்தி** – வணங்குகின்றன. **ஸ்தானே** – (இவையாவும்) பொருத்தமே.

*எவ்வாறு பொருந்தும்? என்றால் கூறுகிறான்.*

37. कस्माच्च ते न नमेरन्महात्मन् गरीयसे ब्रह्मणोप्यादि कर्त्रे ।
अनन्त देवेश दगन्निवास त्वमक्षरं सदसत् तत्परं यत् ॥

கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன், க[3]ரீயஸே ப்ரஹ்மணோப்யாதி[3] கர்த்ரே |
அனந்த தே[3]வேஶ ஜகந்நிவாஸ, த்வமக்ஷரம் ஸத[3]ஸத் தத்பரம் யத் ||

**மஹாத்மன்** – *மஹா - பூர்ணமான;* **ஆத்மன்** – *வியாப்தி, எடுத்துக்கொள்ளுதல், விஷயானுபவம், தொடர்ந்து இருத்தல் ஆகியவைகளையுடையவரே!;* **கரீயஸே** – *அனைவரிலும் மிகப் பெரியவரும்;* **ப்ரஹ்மண: அபி** – *பிரம்மாவுக்கும் கூட* **ஆதிகர்த்ரே ச** – *மூலகாரணமானவருமான;* **தே** – *உமக்கு;* **கஸ்மாத்** – *எந்தக் காரணத்தினால்;* **ந நமேரன்;** – *நமஸ்கரிக்க மாட்டார்கள்? (கட்டாயம் நமஸ்கரிப்பார்கள்)* **அநந்த** – *அந்தம் இல்லாதவரே!* **தேவேஶ** – *தேவர்களின் தேவரே!* **ஜகந் நிவாஸ** – *உலகத்தின் ஆஶ்ரயமானவரே!* **ஸதஸத் ;** *பாவப் பொருள்கள்;* **அஸத்** – *அபாவப்பொருள்கள் அடங்கிய;* **யத்** – *எந்த உலகமோ;* **தத்பரம்** – *அதைக் காட்டிலும் உத்தமமான;* **அக்ஷரம்** – *நாசமற்ற வஸ்து;* **த்வம்** – *நீரே.*

**குறிப்பு:–**

1. *யச்சாப்னோதி யதாதத்தே, யச்சாத்தி விஷயாணிஹ |*
*யச்சாஸ்ய ஸந்ததோபாவ:, தஸ்மாத் ஆத்மேதி பண்யதே ||*

ஆத்மா என்பதின் இந்த நான்கு அர்த்தங்கள் மேலே கூறப்பட்டன.

2. முதற்பார்வையிலேயே 'இருக்கிறது' என அறியப்படும் பொருள் (भावः) பாவப்பொருள். 'இல்லை' என அறியப்படுவது. (अभावः) அபாவப்பொருள்.

38. त्वमादिदेवः पुरुषः पुराणः त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्ताऽसि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनन्तरूप ॥

த்வமாதி[3]தே[3]வ: புருஷ: புராண:, த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம் நித[4]ானம் |
வேத்தா஽ஸி வேத்[3]யம் ச பரம் ச த[4]ாம, த்வயா ததம் விஶ்வமனந்தரூப || 38

**அனந்தரூப** – *காலத்தால் நாஶமற்ற ரூபமுடையவரே!* **த்வம்** – *நீர்;* **ஆதிதேவ:** – *முதல் தேவர்.* **புருஷ:–** *பூர்ண*

ஷட்குணமுடையவர் *(2-1 அடியில்)* **புராண** - *அநாதியானவர்* **த்வம்** – *நீர்;* **அஸ்ய விஶ்வஸ்ய** – *இந்த உலகுக்கு;* **பரம்** – *உத்தமமான;* **நிதானம்** – *ஆசிரயமானவர் (சு. 18)* **வேத்தா** – *(எல்லாவற்றை) அறிந்தவராயும்;* **வேத்யம் ச** – *(எல்லோராலும்) அறியத்தகுந்தவராயும்;* **பரம்** – *உத்தமமான;* **தாம ச** –*ஒளியின் கூட்டமாயும்;* **அஸி** – *இருக்கிறீர்.* **த்வயா** –*உம்மால்;* **விச்வம்** – *உலகமனைத்தும்;* **ததம்** – *வியாபிக்கப்பட்டுள்ளது. (சு.16,19 பார்க்க)*

**குறிப்பு:** முற்கூறப்பட்ட வியாப்தி முதலியன திருப்பித் திருப்பிக் கூறப்படுவதால், அதில் விசேஷ கருத்து உண்டு என்கிறான். வேறு குணங்களுடன் கூடினவராக மீண்டும் துதிக்கிறான்.

39. वायुर्यमोऽग्निः वरुणः शशाङ्कः प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥

வாயுர் யமோSக்நி: வருண: ஶஶாங்க:, ப்ரஜாபதிஸ்த்வம்
ப்ரபிதாமஹஸ் ச |
நமோ நமஸ்தேSஸ்து ஸஹஸ்ர க்ருத்வ:, புனஸ் ச பூ⁴யோSபி
நமோ நமஸ்தே || 39

**த்வம்** – *நீர்;* - **வாயு** – *முக்கிய பிராணன். அதாவது,* **வ** – *பலம்;* **அயு** – *உத்தம ஞானம் உள்ளவர். ஆதலால் வாயு என்ற பெயருள்ளவர். வாயுவின் அந்தர்யாமியானவர்* **யம:** *(உபரமே) தோஷங்களற்றவர் ஆதலால், யமன் என்ற பெயருள்ளவர். யமனின் அந்தர்யாமியானவர். (10-29)* **அக்நி:**– *(அகம் நியதி) தானே செல்லும் சக்தியற்ற உலகைச் செலுத்துவதால் அக்நி என்ற பெயருள்ளவர். அக்நியின் அந்தர்யாமியானவர் (9-16)* **வருண:**– *(வ்ருணோதி) பக்தர்களை வரிப்பதால் வருணன் என்ற பெயருள்ளவர் வருணனின் அந்தர்யாமியானவர் (10-29).* **ஶஶாங்க:**– *(சம் - சுகம்) அதிக ஸுகத்தை அடையாளமாகக் கொண்டவராதலால்* **ஶஶாங்க:**– *என்ற பெயருள்ளவர் சந்திரனின் அந்தர்யாமியானவர்.* **ப்ரஜாபதி** – *என்ற பெயருள்ளவர் ப்ரம்மாவின் அந்தர்யாமியானவர்.* **ப்ரபிதாமஹ: ச** – *உலகின் பிதாமஹரான ஆகவே,* **தே** – *உமக்கு;* **நம:**– *நமஸ்காரம்;* **அஸ்து** – *இருக்கட்டும்* **புன: ச**– *மறுபடியும்;* **ஸஹஸ்ர க்ருத்வ: நம:** – *ஆயிரம் தடவை நமஸ்காரம் இருக்கட்டும்.* **பூய:**– *அபி - மறுபடியும்கூட;* **தே** – *உமக்கு;* **நமோ நம:**– *பல நமஸ்காரங்கள் இருக்கட்டும்.*

குறிப்பு: ஸ்ரீ கிருஷ்ணரே வாயு முதலிய தேவர்களாக இருக்கிறார் என்ற அர்த்தம் ஸகல சுருதிஸ்மிருதிவிருத்தமானது. நாமானி ஸர்வாணி யமாவிசந்தி பால்லவேய சுருதி. யோதேவானாம் நாமதா ஏக ஏவ (ரிக் 10-82-6) விஷ்ணுதான் எல்லா தேவர்களின் பெயர்களை முக்கியமாகத்தரிப்பவர். ஸர்வதேவா பிதோஹ்யஸௌ (வாமனம்) - எல்லா தேவர்களின் பெயர்களை உடையவர். ஸர்வநாமா ஸர்வகர்மா - எல்லாப் பெயர்களையும் உடையவர். அந்ய நாம்னாம் கதிர்விஷ்ணு:, ஏகஏவப்ரகீர்த்தித:|(வாமனம்) மற்ற அனைவரின் பெயர்களின் ஆஸ்ரயன் விஷ்ணு ஒருவரே. முக்கியதஸ்ஸர்வ ஶப்தைஸ்ச வாச்ய ஏகோ ஜநார்தன:– (அணுபாஷ்யம்) எல்லா சப்தங்களாலுமே, ஜநார்த்தனன் ஒருவரே முக்கிய விருத்தியினால் கூறப்படுபவர்; என சுருதிஸ்மிருதிகளில் நன்கு கூறப்பட்டுள்ளார்.

நமஸ்கரித்ததில் திருப்தியில்லாது மீண்டும் நமஸ்கரிக்கிறான்.

40. नमः पुरस्तात् अथ पृष्ठतश्च नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥

நம: புரஸ்தாத் அத² ப்ருஷ்டதஸ்ச, நமோSஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ |
அநந்த வீர்யாமித விக்ரமஸ் த்வம், ஸர்வம் ஸமாப்னோஷி ததோSஸி ஸர்வ: || 40

**ஸர்வ** – *(சு. 16) பரிபூர்ணரே!* **தே** – *உமக்கு;* **புரஸ்தாத்** – *முன்பக்கத்தில்;* **நம:**– *நமஸ்காரம்;* **அஸ்து** – *இருக்கட்டும்.* **அத** – *மீண்டும்;* **ப்ருஷ்டத: ச நம:**– *பின்பக்கத்திலும் நமஸ்காரம் இருக்கட்டும்* **ஸர்வத: ஏவ** – *எல்லா பக்கங்களிலுமே (நமஸ்காரம் இருக்கட்டும்)* **த்வம்** – *நீர்;* **அநந்த வீர்ய அமிதவிக்ரம:**– *முடிவற்ற வல்லமையையும், அபரிமிதமான பராக்கிரமத்தையும் உடையவர்.*

ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம; புருஷ ஏவேதம் ஸர்வம்-என்ற சுருதிகளில், எல்லா உலகத்துக்கும், பிரம்மமான விஷ்ணுவுக்கும் ஐக்யம் கூறப்படுகிறதே. சு. 38ல், நீர் உலகுக்கு ஆச்ரயன், உம்மால் உலகம் வியாபிக்கப்பட்டுளது எனக்கூறியது சரியல்ல; என்றால், அந்த சுருதிகளின் உண்மையான அர்த்தத்தை விளக்குகிறான்.

**(யத:**- *எதனால்);* **ஸர்வம்** – *எல்லா உலகத்தையும்;* **ஸம் ஆப்னோஷி** – *நன்றாக அதாவது உள்ளேயும் வெளியேயும், வியாபித்திருக்கிறீரோ;* **தத:**- *அதனால்;* **ஸர்வ: அஸி**- *எல்லாமாக இருக்கிறீர். (என மேற்படி சுருதிகளில் கூறப்படுகிறீர். ஐக்யமல்ல).*

குறிப்பு: 7-19ல், வாஸு தேவ; ஸர்வம், என்று பகவான் கூறியதற்கும், இங்கு வியாக்யானம் செய்துள்ளான். அர்ஜுனன் ஓர் வியாகரணத்தை இயற்றிய இந்திரனின் அவதாரமானதால், சுருதிகளுக்கு வியாக்யானம் செய்யும் திறமையுள்ளவன். (7-19)

இவ்வித மகாமகிமை வாய்ந்த பகவானிடம், தான் செய்த குற்றங்களை மன்னிக்கும்படி வேண்டுகிறான்.

41. सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेदं मया प्रमादात् प्रणयेन वाऽपि ॥

42. यच्चापहासार्थं असत्कृतोऽसि विहारशय्याऽऽसन भोजनेषु ।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं तत्क्षामये त्वां अहमप्रमेयम् ॥

ஸகே$^{2}$தி மத்வா ப்ரஸப$^{4}$ம் யது$^{3}$க்தம், ஹே க்ருஷ்ணா ஹே யாத$^{3}$வ ஹே ஸகே$^{3}$தி |
அஜானதா மஹிமானம் தவேத$^{3}$ம், மயா ப்ரமாத$^{3}$ாத் ப்ரணயேன வாSபி || 41

யச்சாபஹாஸார்த்த$^{2}$ம் அஸத்க்ருதோSஸி, விஹார ஶய்யாSSஸன பே$^{4}$ாஜனேஷு |
ஏகோSத$^{2}$வாப்யச்யுத, தத் ஸமக்ஷம் தத்க்ஷாமயே த்வாம் அஹமப்ரமேயம் || 42

**தவ** – *உம்முடைய;* **இதம் – இமம்** – *இந்த முற்கூறப்பட்ட உலக சிருஷ்டி முதலிய;* **மஹிமானம்** – *மகிமையை;* **அஜானதா** – *அறியாத;* **மயா**– *என்னால்;* **ப்ரமாதாத்**– *கவனக் குறைவினால்;* **வா** – *அல்லது;* **ப்ரணயேன அபி** – *சினேகத்தினாலும்;* **ஸகா இதி** —*நண்பன் என்று;* **மத்வா** - *நினைத்து;* **ஹே க்ருஷ்ண** – *(உம்முடைய பெயரைச் சொல்லி) ஏ ! கிருஷ்ணா !;* **ஹே ! யாதவ** - *ஏ யாதவனே!;* **ஹே ஸகே இதி** - *(குணத்தைக் குறித்து) ஏ ! (ப்ராகிருத) நண்பா !;* **இதி** – *என்று;* **ப்ரஸபம்** - *மரியாதைக் குறைவாக;* **யத் உக்தம்** - *எது சொல்லப்பட்டதோ;*

*42.* **அதவா** - *அல்லது;* **அச்யுத** – *தேச கால குணங் களினால் நழுவாதவரே !;* **ஏக; அபி** - *(நீர்) ஸர்வோத்தம ராயினும்; அல்லது* **ஏ–ஏக:** - *ஒருவராகவே, பிறர் உதவியின்றி,* **க: கரோதி இதி** - *அனைத்தையும் செய்பவர், செய்விப்பவர் ஆயினும்; அதனால் அவமதிக்கத்தகாதவராயினும்;* **அபஹா ஸார்த்தம்** - *பரிஹாஸம் செய்யும் பொருட்டு;* **விஹார ஶய்யா ஆஸன போஜனேஷு** - *விளையாட்டு, படுக்கை, உட்காருமிடம், சாப்பாடு ஆகியவைகளில்;* **யத்**– *எதனால்;* **அஸத்க்ருத; அஸி** –

அவமதிக்கப்பட்டிருக்கிறீரோ; **தத்** – அதனால்; **தத் ச** – அதைப்பற்றியும்; **அப்ரமேயம்** –(யாராலும் முழுமையாக) அறியத்தகாத; **த்வாம்** – உம்மிடம்; **ஸமக்ஷம்** – உமது முன்னிலையில்; **அஹம்** – நான்; **க்ஷாமயே** – மன்னிப்பீராக என்று வேண்டுகிறேன்.

குறிப்பு: (அவஹாஸார்த்தம் - பிறர் பாடம்).

2. சு.41ல் முதல் ஸகேதி - ஸகா+இதி சரி. இரண்டாவது ஸகே + இதி = ஸக இதி, என்றிருக்கவேண்டும். கீதை வேதம் போன்றது. ஆதலால் இலக்கணத்திற்கு அப்பாற்பட்டது.

(2) பகவானை ஹே கிருஷ்ணா! ஹே ராமா! -என்று நாம் கூறிவருவதும் குற்றமா என்றால்; இல்லை. நாம் அது பகவானின் பெயர் என்று அறிந்து கூறுகிறோம். அர்ஜுனனோ, கிருஷ்ணன் ஓர் சாதாரண மனிதன் என்று நினைத்துக் கூறினதை மன்னிக்க வேண்டுகிறான்.

*க்ருஷீர் பூவாசக: சப்த: ணஸ்ச நிர்வ்ருதி வாசக: |*

க்ருஷ்ணன் என்றால், பூமிக்குச் சுகத்தைத் தந்தவன், பூமியில் சுகமுடையவன், என்ற அர்த்தம் அறிந்து கூறினால் விசேஷமானதே.

ஒருவனின் ஜாதியைக் குறிப்பிட்டுக் கூப்பிட்டால் அவன் கோபிப்பதை நாம் அறிவோம். நண்பா! என்று கூப்பிடுவது குற்றமா? **த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா** - என்ற சுருதியில், பகவானும் ஜீவனும் பிரியாது சேர்ந்துள்ள நண்பர்கள் எனப்படுகிறதே! என்றால், அம்மாதிரி பகவான் அப்ராகிருதமான நண்பன் என்று கூப்பிட்டால் தவறல்ல. கிருஷ்ணன் ஓர் ப்ராகிருத நண்பன் என்று நினைத்துக் கூறியது குற்றமே. மேலும் ஸமமான அந்தஸ்து இல்லை.

**ஸமான சீல வ்யஸனேஷு ஸக்யம்** – சமமான ஒழுக்கமோ, அந்தஸ்தோ துக்கமோ உடையவர்களே நண்பர்கள் ஆவார்கள். துரோணாசார்யர், துருபதராஜனிடம், நண்பன் என்று தெரிவித்தபோது அவன் ந நிர்தனோ ராஜஸகோ பவேத ஓர் ஏழை அரசனின் நண்பனாகவிருக்க முடியாது, என்று கோபித்தது, பாரதத்தில் பிரசித்தம். சு. 42 விளையாட்டில் கிருஷ்ணரின் முதுகில் ஏறுவது முதலியனவும், ஸ்ரீ கிருஷ்ணரின் படுக்கையில் படுப்பதும், அவருடைய ஆஸனத்தில் அமர்வதும், (பெரியோர்களின் ஆஸனங்களைத் தொடவே கூடாது - தேஷாம் த்வயா ஆஸனே ந ப்ரச்வஸி தவ்யம், என்று தைத்திரீயம்), அவர் சாப்பிட்ட சேஷத்தைச் சாப்பிடாது. அவருக்கு முன் சாப்பிடுவது குற்றங்களாகும்

*பாகவதம் 11-6-46 உத்தவன்:-*

*த்வயோபபுக்த ஸ்ரக்கந்த, வாஸோ அலங்கார சர்ச்சிதா: |*
*உச்சிஷ்டபோஜின: தாஸா: தவ மாயாம் ஜயேமஹி ||*

நீர் அநுபவித்து நிர்மால்யமான, மாலை, சந்தனம், வஸ்த்ரம், ஆபரணம், இவற்றை அணிந்தும், நீர்புசித்து எஞ்சியதைப் புசித்தும், உம்முடைய தாஸர்களாக இருந்து, உமது மாயையை ஜயிப்போம்.

வேறு குணங்களையும்கூறி அவமதிக்கத் தகாதவர் என்பதை விளக்கி மன்னிப்பைக் கோருகிறான். (2 சுலோகங்களில்).

43. पिताऽसि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्ति अभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽपि
अप्रतिमप्रभाव ॥

பிதாSஸி லோகஸ்ய சராசரஸ்ய த்வமஸ்ய பூஜ்யஸ்ச கு[3]ருர் க[3]ரீயான் |
ந த்வத்ஸமோSஸ்தி அப்யதி[4]க: குதோSன்யோ லோகத்ரயேSபி அப்ரதிம ப்ரப[4]ாவ || 43.

**அப்ரதிம ப்ரபாவ** – *ஒப்பற்ற சாமர்த்தியமுள்ளவரே!* **த்வம்** – *நீர்;* **அஸ்ய** – *இந்த;* **சராசரஸ்ய லோகஸ்ய** – *ஜங்கம ஸ்தாவர உலகுக்கு;* **பிதா** – *தந்தையாக;* **அஸி** – *இருக்கிறீர். அதனாலேயே,* **பூஜ்ய:**– *பூஜிக்கத் தகுந்தவர்.* **கரீயான்** – *மிகப் பெரிய;* **குரு: ச** – *குருவாகவும் இருக்கிறீர். (குருகளுக்கெல்லாம் குருவானதால்)* **லோகத்ரயே அபி** – *மூவுலகத்திலும்;* **த்வத்ஸம:**– *உமக்குச் சமமான;* **அன்ய;** – *வேறு ஒருவர்;* **ந அஸ்தி** – *இல்லை.* **அப்யதிக:** – *(உம்மைக் காட்டிலும்) மேலானவர்;* **குத:** *ஏது? (ஒருவருமில்லை).*

**குறிப்பு:** நகஸ்துதியில்–லக்ஷ்மீகாந்த ஸமந்ததோ விகலயன், நைவேசிதுஸ்தே ஸமம், பச்யாமி உத்தம வஸ்து தூரதரதோ அபாஸ்தம், ரஸோயோ அஷ்டம: என்பது இதே அர்த்தமுள்ளது.

44. तस्मात् प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वां अहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायाऽर्हसि देव सोढुम् ॥

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணித[4]ாய காயம், ப்ரஸாதயே த்வாம் அஹமீமீட்[3]யம் |
பிதேவ புத்ரஸ்ய ஸகே[2]வ ஸக்[2]யு:, ப்ரிய: ப்ரியாயாS ர்ஹஸி தே[3]வ ஸோடும் || 44

**தேவ** – *லீலை முதலிய குணங்களை உடையவரே!;* **தஸ்மாத்** – *(மகாமகிமை பொருந்தியவர்) ஆதலால்;* **அஹம்** – *நான்;* **காயம்** – *தேகத்தை;* **ப்ரணிதாய** – *(பூமியில்) நன்கு வைத்து;* **ப்ரணம்ய** – *நன்கு நமஸ்கரித்து;* **ஈட்யம்** – *துதிக்கத் தகுந்தவரும்;* **ஈசம்** – *ஸமர்த்தருமான;* **த்வாம்** – *உம்மை;* **ப்ரஸாதயே** –

அருள்புரியும்படி வேண்டுகிறேன். **புத்ரஸ்ய** - புதல்வனுடைய (அபராதம் - குற்றத்தை); **பிதா இவ** - தந்தை பொறுப்பதுபோலவும்; **ஸக்யு:** - நண்பனுடைய (குற்றத்தை); **ஸகா இவ** - நண்பன் பொறுப்பது போலவும்; **ப்ரியாயா:** - மனைவியின் (குற்றத்தை); **ப்ரிய: இவ** - கணவன் பொறுப்பது போலவும்; **ஸோடும்** - (என்குற்றத்தைப்) பொறுப்பதற்கு; **அர்ஹஸி** - தகுந்தவராய் இருக்கிறீர்.

குறிப்பு: ப்ரியாயா: அர்ஹஸி - விஸர்ககமும் அகாரமும் லோபம். அல்லது யா ப்ரியா - மனைவி யாரோ; தஸ்யா: - அவளுடைய; எனலாம்.

இம்மாதிரி மன்னிப்பைக்கோரி வேண்டுகிறேன்.

45. अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे ।
तदेव मे दर्शय देव रूपं प्रसीद देवेश जगन्निवास ॥

அத்[3]ருஷ்ட பூர்வம் ஹ்ருஷிதோऽஸ்மி த்ருஷ்ட்வா, ப[4]யேன ச
ப்ரவ்யதிதம் மனோ மே ।
ததே[3]வ மே த[3]ர்ஶய தே[3]வ ரூபம் ப்ரஸீத[3] தே[3]வேஶ ஜகந்நிவாஸ ॥ 45

**தேவ** — லீலை, ஜயம், காந்தி, ஸ்துதி முதலியவற்றை உடையவரே!; **அத்ருஷ்டபூர்வம்** - இதற்கு முன் கண்டிராத (சு. 48; **ரூபம்** - விஶ்வரூபத்தை; **த்ருஷ்ட்வா** — பார்த்து; **ஹ்ருஷித அஸ்மி**- மகிழ்ந்துள்ளேன். **ச** — மேலும்; **மேமன:**- என்மனம்; **பயனே** - பயத்தினால்; **ப்ரவ்யதிதம்** — அதிகம் நடுங்குகிறது. ஆகையால், **தேவ ஈச** - தேவர்களின் தலைவரே!; **ததேவ ரூபம்** — அந்த ரூபத்தையே; **மே** — எனக்கு; **தர்சய** - காட்டுவீராக. **ஜகந்நிவாஸ** - உலகின் ஆசிரயமானவரே!; **ப்ரஸீத** - அருள் புரிவீராக.

அதேரூபம் என்றதை விளக்குகிறான்.

46. किरीटिनं गदिनं चक्रहस्तं इच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥

கிரீடினம் க[3]தினம் சக்ரஹஸ்தம், இச்ச[2]ாமி த்வாம் த்[3]ரஷ்டுமஹம்
ததை[2]வ ।
தேனைவ ரூபேண சதுர்பு[4]ஜேன ஸஹஸ்ர ப[3]ாஹோ ப[4]வ
விஶ்வமூர்த்தே ॥ 46

**விஶ்வமூர்த்தே** - விஶ்வ - (குணங்களினால்) பூர்ணமான; **மூர்த்தே** - தேகமுடையவரே!; **அஹம்** - நான்; (யதா - எவ்வாறு விஶ்வ ரூபத்தைப் பார்த்தேனோ); **ததா ஏவ** — அவ்வாறே; **தேன**

**ஏவ** – அதே; **சதுர்புஜேன** – நான்கு கைகளை யுடைய; **ரூபணே** – ரூபத்துடன்; **கிரீடினம்** – தலையில் கிரீடத்தை அணிந்தவரும்; **கதினம்** – ஒருகையில் கதா யுதத்தைத் தரித்தவரும்; **சக்ரஹஸ்தம்** – மற்றொரு கையில், சக்கராயுதத்தை ஏந்தியவருமான; **த்வாம்** – உம்மை; **த்ரஷ்டும்** – பார்ப்பதற்கு; **இச்சாமி** – விரும்புகிறேன். ஆகையால், **ஸஹஸ்ர பாஹோ** – கணக்கற்ற கைகளை உடையவரே!; **பவ** – (அந்த நான்கு கைகளையுடைய ரூபத்துடன்) ஆவீராக.

குறிப்பு: அந்த நான்கு கைகளையுடைய ரூபம் – அந்த என்றதால், அந்த ரூபத்தை அர்ஜுனன் முன்னர் பார்த்திருக்கிறான் என ஏற்படுகிறது. ஆனால், அவன் பார்த்ததாகப் பாகவதத்திலோ பாரதத்திலோ கூறப்படவில்லையே! என்ற கேள்வி எழுகிறது. இதற்கு விளக்கம் விவ்ருதியில் தரப்படவில்லை. ஆகவே, பலர் பலவாறு கூறுகின்றனர். நம் அபிப்ராயம்:-ஸ்ரீ கிருஷ்ணர் பிறந்தவுடன் தாய் தந்தையர்களுக்குச் சதுர்புஜ ரூபத்தைக்காட்டிப் பிறகு இரு கைகளையுடைய ப்ராகிருத சிசுபோலானார். பிறகு கோபிகைகள், ஸ்ரீ கிருஷ்ணர் ஒரு கையினால் மணியையும், மற்றொரு கையினால் பால் பாத்திரத்தையும், மூன்றாவது கையினால் பாலை அள்ளிக் குடித்துக்கொண்டும், நான்காவது கையினால் நண்பர்களுக்குப் பாலைத்தந்து திருப்திசெய்துகொண்டும் இருந்ததைப் பார்த்ததாக ஸ்ரீ வாதிராஜர் கூறுகிறார். (பாகவதம் 10-15-4) காலயவனன் என்ற அசுரன், **சதுர்புஜ: அரவிந்தாக்ஷ:** - என்றும், சிசுபாலன் - **க்ருஷ்ணம் சக்ராதிலக்ஷணை:** - என்றும் பார்த்துள்ளனர். **சரீரார்த்தம் மமார்ன: மம ப்ராணா ஹி பாண்டவா:** - பாதி சரீரமென்றும், உயிர் என்றும் கூறப்பட்ட அர்ஜுனன் பார்த்திருக்க வேண்டும். சுலோகம் 51ல் **மானுஷம் ரூபம்**–இரு கைகளையுடைய ரூபம், எனப்படுகிறதே, என்றால், மனிதரூபம்போல ஸௌம்யமானது என்று அதன் அர்த்தம்.

இந்த விசுவரூபத்தை விட்டுவிட்டு, முந்திய சதுர்புஜ ரூபத்தை எடுப்பீராக - என்று அர்ஜுனன் கூறுவதாகத்தோன்றும். பகவத் ரூபம் விடமுடியாது அல்லவா! ஆகவே, **தேனைவ ரூபேண** - அந்த விச்வரூபத்தை விட்டுவிடாமல் அந்த விச்வ ரூபத்துடனேயே, அதாவது அதை மறைத்து, சதுர் புஜேன பவ-நான்கு கைகளுடன் ஆவீராக. நரசிம்ம ரூபத்திலும் – **கோபித விசுவரூபம்** – விசுவரூபத்தை மறைத்திருந்தார் எனப்படுகிறது. (கீதாதாத்பர்யம்).

श्रीभगवानुवाच। **ஸ்ரீ பகவான் உவாச** | ஸ்ரீ கிருஷ்ணர், அதிக பக்தியை உண்டுபண்ண, விச்வரூப தர்சனத்தின் அரிதான தன்மையை விளக்குகிறார்.

47. मया प्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात्।
तेजोमयं विश्वमनन्तमाद्यं यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम्॥

மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேத³ம், ரூபம் பரம் த³ர்சித
மாத்மயோக³ாத் |
தேஜோமயம் விச்வ மநந்த மாத்³யம், யன்மே த்வதன்யேன ந
த்ருஷ்டபூர்வம் || 47

**அர்ஜுன** - *ஸுத்தமான கர்மத்தைச் செய்பவனே!;* **ப்ரஸன்னேன** - *(உன்னிடம்) அருள்புரிந்த;* **மயா** - *என்னால்;* **ஆத்மயோகாத்** - *என் ஸ்வரூப ஸாமர்த்தியத்தினால்;* **தவ** - *உனக்கு;* **பரம்** - *உத்தமமானதும்* **தேஜோமயம்** - *அதிக பிரகாச ஸ்வரூபமானதும்;* **விச்வம்** - *பூர்ணமானதும்;* **அநந்தம்** - *தேச, கால குணங்களினால் முடிவற்றதும்;* **ஆத்யம்** - *ஆதியில் இருப்பதுமான;* **யத்** - *எந்த;* **மே** - *என்னுடைய;* **இதம் ரூபம்** - *இந்த விசுவரூபம்;* **தர்மிதம்** - *காட்டப்பட்டதோ;* **தத்** - *அந்த ரூபம்;* **த்வத் அன்யேன** - *உன்னைத்தவிர வேறு யாராலும்;* **த்ருஷ்ட பூர்வம் ந** - *இதற்குமுன் பார்க்கப்பட்டதல்ல.*

குறிப்பு: (1) உத்தமமான விசுவரூபம் என்றதால், கிருஷ்ணர் முதலிய ரூபங்கள் உத்தமமல்ல என்பதல்ல. பாமர ஜனங்களுக்காக அவ்வாறு கூறப்பட்டது.

(2) சு.20ல். த்ருஷ்ட்வா அத்புதம் ரூபம்; சு.23ல் த்ருஷ்ட்வா லோகா:-விசுவ ரூபத்தை மூன்று உலக பக்தர்களும் பார்த்ததாகக் கூறினான். இங்கு வேறு யாரும் காணவில்லை என்கிறார்.

பிரம்மாண்ட புராணத்தில்—விசுவரூபத்தை முதலில் பிரம்மா பார்த்தார். அவர் பார்த்ததில் நூறில் ஒரு பங்கைச் சிவன் பார்த்தார். அதில் நூறில் ஒரு பங்கை இந்திரன் பார்த்தான். அவனுடைய அவதாரமான அர்ஜுனனும் அவ்வாறே பார்த்தான். அவனுக்கும் தாழ்ந்தவர்கள் நூறில் ஒரு பங்காக அவரவர்களின் தகுதிக்குத் தக்கவாறு பார்த்தனர், என்றுள்ளது. ஆகவே இங்கு அர்ஜுனனைத் தவிர வேறு யாரும் பார்க்கவில்லை என்று கூறியதின் கருத்து—அர்ஜுனனைக் காட்டிலும் தாழ்ந்த வேறு யாரும் பார்க்கவில்லை: பார்த்தவர்களிலும் அர்ஜுனன் பார்த்தபடி பார்க்கவில்லை என்பதே.

*தர்ஶயாமாஸ பகவான் யாவதீ அர்ஜுன யோக்யதா |*

அர்ஜுனனின் யோக்யதைக்குத் தகுந்தபடி காட்டினார்; என்று இதையே ஸ்ரீமத்வர் — பாரத தாத்பர்ய நிர்ணயம் 25-15ல் விளக்கிக் கூறியுள்ளார்.

அர்ஜுனனைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள், வேதம் முதலிய சாதனங்களினால் அவ்வாறு பார்க்கலாமா என்றால் கூறுகிறார்:

48. न वेदयज्ञाध्ययनैः न दानैः न च क्रियाभिः न तपोभिरुग्रैः ।
एवं रूपः शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥

ந வேத$^{3}$ யஜ்ஞாத்$^{4}$யயனை: ந த$^{3}$ானை:, ந ச க்ரியாபி$^{4}$: ந
தபோபி$^{4}$ருக்$^{3}$ரை: |
ஏவம் ரூப: ஶக்ய அஹம் ந்ருலோகே, த்$^{3}$ரஷ்டும் த்வத$^{3}$ன்யேன
குருப்ரவீர || 48

**குருப்ரவீர** – *குருவம்சத்திற் சிறந்த வீரனே!;* **ஏவம்ரூப:–** *முன் காட்டிய விஶ்வரூபமுள்ள;* **அஹம் –** *நான்;* **ந்ருலோகே –** *இம்மனித உலகத்தில்;* **த்வதன்யேன** – *உன்னை விட தாழ்ந்த வேறுயாராலும்;* **வேதயஜ்ஞ அத்யயனை:–** *வேதங்களையும், யாகத்திற்குரிய வேத பாகங்களையும் ஓதுவதால்;* **த்ரஷ்டும்** –*(நீ பார்த்ததுபோல) பார்ப்பதற்கு;* **ந ஶக்ய:** – *முடியாதவன்.* **தானை: ந**-*கோதானம், பூதானம் முதலிய தானங்களினால் முடியாதவன்* **க்ரியாபி: ச ந** -*அக்நிஹோத்திரம் முதலிய கர்மாக்களினாலும் முடியாதவன்* **உக்ரை:**– *கடுமையான;* **தபோபி: ந –** *கிருச்ரம் சாந்திராயணம் முதலிய தவங்களினாலும் முடியாதவன். (சு. 53)*

*சுலோகம் 45ல் வேண்டினதற்குப் பதிலளிக்கிறார்.*

49. मा ते व्यथा मा च विमूढभावः दृष्ट्वा रूपं घोरमीदृङ् ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं तदेव मे रूपमिदं प्रपश्य ॥

மா தே வ்யத$^{2}$ா மா ச விமூட$^{4}$ப$^{4}$ாவ:, த்$^{3}$ருஷ்ட்வா ரூபம் கே$^{4}$ாரமீத்ருங்
மமேதம் |
வ்யபேதபீ$^{4}$: ப்ரீதமனா: புனஸ்த்வம், ததே$^{3}$வ மே ரூபமித$^{3}$ம் ப்ரபஶ்ய ||
49

**மம** – *என்னுடைய;* **கோரம்** – *பயங்கரமான (கொல்லும்);* **ஈத்ருக்** – *இப்படிப்பட்ட (கணக்கற்ற கைகள் முதலியவைகளுடன் கூடிய);* **இதம் ரூபம்** – *இந்த விஶ்வ ரூபத்தை;* **த்ருஷ்ட்வா** – *பார்த்து;* **தே** – *உனக்கு;* **வ்யதா** – *நடுக்கம்;* **மா** – *வேண்டாம்.* **விமூடபாவ: ச**– *விசேஷ மோகத் தின் தன்மையும் (மனக்கலக்கமும்):* **மா** – *வேண்டாம்;* **த்வம்** – *நீ;* **வ்யபேதபீ:** – *பயம் நீங்கினவனாயும்;* **ப்ரீதமனா:** – *மன மகிழ்ந்தவனாயும்;* **மே** – *என்னுடைய;* **ததேவ ரூபம்** – *முன் பார்த்த அதே சதுர்புஜரூபமான;* **இதம்** – *இதை;* **புன:** – *மறுபடியும்;* **ப்ரபஶ்ய** – *நன்றாகப் பார்.*

सञ्जय उवाच — **ஸஞ்ஜய: உவாச** — *ஸஞ்ஜயன் பிறகு நடந்ததை திருதராஷ்டிரனுக்குக் கூறுகிறான்.*

50. इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः ।
आश्वसयामास च भीतमेनं भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥

இத்யர்ஜுனம் வாஸுதே3வஸ் ததே2ாக்த்வா, ஸ்வகம் ரூபம்
த3ர்சயாமாஸ பூ4ய: |
ஆஶ்வாஸயாமாஸ ச பீ4தமேனம், பூ4த்வா புனஸ் ஸௌம்ய
வபுர் மஹாத்மா || 50

**வாஸுதேவ:** – *விசுவரூபியான, வஸுதேவ புத்திரரான ஸ்ரீ கிருஷ்ணர்;* **அர்ஜுனம்** – *அர்ஜுனனிடம்;* **இதி** – *இம்மாதிரி;* **உக்த்வா** – *சொல்லிவிட்டு;* **ஸ்வகம் ரூபம்** – *பாமரர்களுக்குத் தன்னுடையது என்று காட்டத்தகுந்த கிருஷ்ண ரூபத்தை;* **பூய:**– *மறுபடியும்;* **ததா** – *முன்னிருந்தவாறே;* **தர்ஶயாமாஸ** – *காண்பித்தார்.* **மஹாத்மா** – *பெருந் தன்மையுடைய ஸ்ரீ கிருஷ்ணர்;* **புன:**– *மறுபடியும்;* **ஸௌம்யவபு:** – *சாந்தமான தேகத்தை உடையவராக;* **பூத்வா** – *ஆகி;* **பீதம்** – *பயந்த;* **ஏனம்** – *இந்த அர்ஜுனனை;* **ஆஶ்வாஸயாமாஸ ச** – *தேற்றினார்.*

குறிப்பு: தன்னுடையதான கிருஷ்ண ரூபத்தை - என்றால் விசுவரூபம் தன்னுடையதல்ல என்றாகும். இரு ரூபங்களும் அவருடையதே. ஆனதால் மேற்கூறிய அர்த்தம் செய்யப்பட்டது.

अर्जुनः उवाच। **அர்ஜுன: உவாச** | *அர்ஜுனன் கூறுகிறான்.*

51. दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्तन ।
इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥

த்3ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம், தவ ஸௌம்யம் ஜனார்தன |
இத3ானீமஸ்மி ஸம்வ்ருத்த:, ஸசேதா: ப்ரகிருதிம் க3த: || 51

**ஜநார்தன** – *(1-36) பிறப்பில்லாதவரே! ஸம்ஸாரத்தை அழிப்பவரே!;* **(ஜனானாம் அர்த்தனம் யாசனம் யஸ்மின்** – *பக்த ஜனங்களினால் வேண்டப்படுகிறவரே!);* **தவ** – *உம்முடைய;* **இதம்** *-இந்த;* **மானுஷம்** – *மனிதன்போன்று காணப்படும்; அதனால்,* **ஸௌம்யம்** – *ஶாந்தமான;* **ரூபம்** – *ரூபத்தை;* **த்ருஷ்ட்வா** – *பார்த்து;* **இதானீம்** – *இப்பொழுது;* **ஸசேதா:** – *மனமகிழ்ந்தவனாக;* **ஸம் வ்ருத்த: அஸ்மி** – *நன்கு ஆகியிருக்கிறேன்.* **ப்ரக்ருதிம்** – *முந்திய ஸ்வபாவத்தை (ஸ்வஸ்தமாயிருப்பதை);* **கத:** *(அஸ்மி)* – *அடைந்துள்ளேன்.*

श्रीभगवान् उवाच । **பகவான் உவாச** - *ஸ்ரீ கிருஷ்ணர் பயங்கரமான ரூபத்தை ஏன் காட்டினீர்? என்றால் பதிலளிக்கிறார்.*

52. सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शन काङ्क्षिणः ॥

ஸுதுர்த$^{3}$ர்ஶமித$^{3}$ம் ரூபம், த்$^{3}$ருஷ்டவானஸி யன் மம |
தே$^{3}$வா: அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம், த$^{3}$ர்ஶன காங்க்ஷிண: || 52

**மம** – *என்னுடைய;* **யத் ரூபம்** - *எந்த விஶ்வரூபத்தை;* **த்ருஷ்டவான் அஸி** - *பார்த்தவனாய் இருக்கிறாயோ;* **அஸ்ய ரூபஸ்ய** - *இந்த ரூபத்தை;* **நித்யம்** - *எப்பொழுதும்;* **தர்ஶன காங்க்ஷிண:** - *பார்க்க விரும்புகின்ற;* **யே தேவா:** – *எந்த தேவர்களோ;* **(தே அபி யத் த்ருஷ்ட வந்த:–** *அவர்களும் எந்த ரூபத்தைப் பார்த்துளரோ);* **தத்** - *அந்த;* **இதம்** - *இந்த விசுவரூபம்;* **ஸுதுர்தர்ஶம்** – **ஸுதர்ஶம்** - *சிலருக்குச் ஸுகத்துடனும் சிலருக்கு துக்கத்துடனும் காணத்தகுந்தது.*

குறிப்பு: **1. ஸுதுர்தர்ஶம்** - பார்க்க மிகமிக அரிது, என்ற அர்த்தம், சு, 20, 23ல் மூவுலக பக்தர்கள் பார்த்தனர் என்று கூறியதற்கும், பிரம்மாண்ட புராணத்தில் கூறியதற்கும் விருத்தமாகும். ஆகவே (சு.47 குறிப்பு: பார்க்க).

2. தேவர்களும் இந்த விசுவரூபத்தைப் பார்க்க அபேக்ஷித்த படியாலும், உண்மையில் பகவானே அனைவரையும் கொல்பவர், அர்ஜுனன் நிமித்த மாத்திரம்தான், என்பதை அறிவிப்பதற்காகவும் இந்த விஶ்வரூபம் காண்பிக்கப்பட்டது.

மிக அரிய தர்சனம் தம்மால் செய்விக்கப்பட்டது என்கிறார்.

53. नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवं विधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥

நாஹம் வேதை$^{3}$ர் ந தபஸா, ந த$^{3}$ானேன நசேஜ்யயா |
ஶக்ய ஏவம்விதே$^{4}$ா த்$^{3}$ரஷ்டும், த்$^{3}$ருஷ்டவானஸி மாம் யத$^{2}$ா || 53

**மாம்** - *என்னை;* **யதா** - *எவ்வாறு;* **த்ருஷ்டவான் அஸி** - *பார்த்தவனாய் இருக்கிறாயோ;* **ஏவம் வித: அஹம்** - *இவ்வித விசுவரூபத்தையுடைய நான்;* **வேதை:–** வேதங்களின் மூலம்; **த்ரஷ்டும்** - *பார்ப்பதற்கு;* **ந ஶக்ய:–** முடியாதவன். **தபஸா ந** - *தவத்தினால் முடியாதவன்* **தானேன ந** - *தானத்தினாலும் முடியாதவன்.* **இஜ்யயா ச ந** - *யாகத்தினாலும் முடியாதவன் (சு. 48 பார்க்க).*

பின் எந்த உபாயத்தினால் பார்க்கமுடியும்? என்றால் கூறுகிறார்.

54. भक्त्या तु अनन्यया शक्यः अहमेवं विधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्वेन प्रवेष्टुं च परंतप ॥

ப[4]க்த்யா து அநன்யயா ஶக்ய:, அஹமேவம் விதே[4]ாऽர்ஜுன |
ஜ்ஞாதும் த்[3]ரஷ்டும் ச தத்வேன, ப்ரவேஷ்டும் ச பரம்தப || 54

**பரந்தப** – *சத்ருக்களை வாட்டுபவனே!;* **அர்ஜுன** – *சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!;* **து** – *(சு. 48, 53ல் கூறிய வேதம் முதலியவற்றைக் காட்டிலும்) சிறந்த;* **அநன்யயா** – *(9-22) மற்றவைகளிடம் வைக்கப்படாத அல்லது மற்ற சாதனங்களின் உதவியில்லாத;* **பக்த்யா** – *என்மகிமையின் அறிவை முதலில் கொண்டதும், மிக உறுதியானதும், மற்ற எல்லாவற்றிலும் வைத்துள்ளதைக் காட்டிலும் அதிகமானதுமான சிநேகத்தினால்;* **ஏவம்வித: அஹம்** – *இந்த விஶ்வரூபமுடைய நான்;* **தத்வேன** – *உள்ளபடி;* **ஜ்ஞாதும்** – *அறிவதற்கும்;* **த்ரஷ்டும்** – *பார்ப்பதற்கும்;* **ப்ரவேஷ்டும் ச** – *என்னிடம் பிரவேசிக்கும் ஸாயுஜ்யத்தை அடைவதற்கும்;* **சக்ய:** – *சக்தியுள்ளவன்.*

**குறிப்பு:–** பக்தியின் லக்ஷணம்:–

*மாஹாத்ம்ய ஜ்ஞானபூர்வஸ்து, ஸர்வதோऽதிக: |*
*ஸ்நேஹோ பக்திரிதி ப்ரோக்த: தயாமுக்திர் ந சான்யதா ||*

மற்ற ஸாதனங்களின் உதவியில்லாத பக்தியினால் என்றதால் கர்மானுஷ்டானம் முதலியவற்றை விட்டு விடலாம் என்று தோன்றும் விபரீத ஞானத்தைப் போக்குகிறார்.

55. मत्कर्मकृत् मत्परमः मद्भक्तः सङ्गवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यस्स मामेति पाण्डव ॥

மத்கர்மக்ருத் மத்பரம:, மத்ப[4]க்தஸ் ஸங்கவர்ஜித: |
நிர்வைரஸ் ஸர்வபூ[4]தேஷு, யஸ்ஸ மாமேதி பாண்ட[3]வ || 55

**பாண்டவ** – *பாண்டுவின் குமாரனே!;* **ய:** – *யார்;* **ஸங்கவர்ஜித:** *பலனில் ஆசையில்லாதவனாய்;* **மத்கர்மக்ருத்** – *என் விஷயமான கர்மங்களைச் செய்பவனாயும்;* **மத்பரம:** – *என்னையே (ஸ்ரீ கிருஷ்ணரையே) ஸர்வோத்தமனாக உள்ளவனாயும், அதாவது ஸ்ரீ கிருஷ்ணரே ஸர்வோத்தமர் என்ற அறிவுள்ளவனாயும்;* **மத்பக்த:** – *என்னுடைய பக்தனாயும்;* **ஸர்வபூதேஷு** – *(தகுந்த) எல்லாப் பிராணிகளிடமும்;* **நிர்வைர:**–

விரோதமில்லாதவனாயும்; இருக்கிறானோ; **ஸ:**- அவன்; **மாம்ஏதி** - என்னை அடைகிறான்.

**குறிப்பு:** எவர்களிடம் விரோதமுள்ளவனாயிருக்க வேண்டும் என்று சாஸ்திரம் விதிக்கிறதோ, அவர்களிடம் அம்மாதிரி இருக்க வேண்டும்.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे विश्वरूपदर्शनं नाम एकादशोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம
வித்யாயாம், யோகசாஸ்த்தே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
விச்வரூபதர்சனம் நாம ஏகாதசோऽத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹத்தைத்*
*தழுவிய விசுவரூபதர்சனம் என்னும்*
*பதினோராம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 12

## பக்தி யோகம்

(20 சுலோகங்கள்)

### பன்னிரண்டாம் அத்தியாயச் சுருக்கம்

அத்தியாயம் 11ன் கடைசியில் கூறிய பக்திதான் மோக்ஷஸாதனங்களில் சிறந்தது என இங்கு கூறுவதால், இதற்குப் பக்தியோகம் எனப் பெயர். 7-23ல் பிரம்மாதி தேவர்களை உபாஸித்தால், அநித்யமான பலன்தான் கிடைக்கும் என்றும், தம்மை உபாஸித்தால் நித்யமான மோக்ஷம் கிடைக்கும் என்றும் கூறினார். இவ்விருவர்களுக்கும் இடையிலுள்ள லக்ஷ்மியின் உபாஸனையின் பலனை ஸ்பஷ்டமாகக் கூறவில்லை. ஆதலால் பிறருக்கு ஏற்படும் ஸந்தேகத்தைக் கொண்டு அர்ஜுனன் விஷ்ணுவின் உபாஸனை சிறந்ததா? அவரது மனைவியின் உபாஸனை சிறந்ததா? என வினவுகிறான்.

லக்ஷ்மியை உபாஸிப்பவர்களும் மோக்ஷமடைகிறார்கள் என வேதம் கூறுவதால், பகவானை விட்டுவிட்டு அவளை ஏன் உபாஸிக்கலாகாது? என்றால்,

*விஷ்ணுனா ஸஹிதா த்யாதா, ஸாஹி துஷ்டிம் பராம் வ்ரஜேத் |*

விஷ்ணுவுடன் கூடிய லக்ஷ்மீயை உபாஸித்தால்தான் அவள் சந்தோஷப்படுவாள்.

*ததுபாஸா விவர்ஜிதை: | சபேத் உபாஸிதாப்யேஷா |*

விஷ்ணுவைவிட்டு அவளை ஸ்வதந்திரமாக உபாஸித்தால் அவள் ஶபிப்பாள். மேலும் அவளை உபாஸிக்கும் முன்னர், விஷ்ணுவை உபாஸித்து, நீண்ட காலம் தனியாக லக்ஷ்மியை உபாஸித்து, மறுபடியும் லக்ஷ்மியுடன் கூடிய விஷ்ணுவை உபாஸிக்க வேண்டும். அவளை உபாஸிக்கக் கடுமையான நியமங்களும் ஆசாரங்களும் வேண்டும். விஷ்ணுவின் உபாஸனையிலோ, அவ்வளவு கடுமையான நியமங்கள் வேண்டியதில்லை. ஆகவே லக்ஷ்மியின் உபாஸனையைவிட, விஷ்ணுவின் உபாஸனை

சிறந்ததும் சுலபமானதும் ஆகும். அதையே அனைவரும் செய்யவேண்டும்.

உபாஸனை என்பது ஶாஸ்திர விசாரம், தியானம் என இரு விதமாகும். விஷ்ணுவைத் தியானிக்க, நம் மனதை அவரிடம் வைக்கவேண்டும். அது முடியாவிடில், அதை அடிக்கடி அதில் பழக்க வேண்டும். பரோக்ஷஞானம், ஞானத்துடன் தியானம், பலனில் ஆசையில்லாத தியானம், அபரோக்ஷ ஞானம், பக்தி, பகவத் பிரஸாதம், இவற்றைக் கிரமமாகப் பெற்று, மோக்ஷமடையலாம். இதைத்தவிர உத்தமர்களிடம் த்வேஷமின்மை முதலிய, இதர ஸாதனங்களும் வேண்டும். சில சாதனங்களைப் பெற்றவன் பகவானுக்குப் பிரியமானவன். எல்லா ஸாதனங்களைப் பெற்றவன் மிகப் பிரியமானவன்.

अर्जुनः उवाच — **அர்ஜுன: உவாச** - அர்ஜுனன் பின்வருமாறு பிறருக்கு ஏற்படும் சந்தேகத்தைக்கொண்டு விசேஷயுக்தியை அறிய விரும்பி பின்வருமாறு வினவுகிறான்.

**தமேவம் வித்வான் அம்ருத இஹ பவதி** — என்ற ஶ்ருதியில் விஷ்ணுவின் உபாஸனையால் முக்தியடைவது போல, **ச்ரியம் வஸானா அம்ருதத்வம் ஆயன்**—என்ற சுருதியில் லக்ஷ்மியின் உபாஸனையினால் முக்தியடைகிறார்கள், எனக்கூறப் படுகிறது. 7-23ல் ஜனன மரணங்களையுடைய பிரம்மாதி தேவர்களின் உபாஸனா பலன் நாஸமுள்ளது எனக் கூறியிருப்பினும், லக்ஷ்மியின் உபாஸனா பலனை அவ்வாறு கூறமுடியாது. ஏனெனில் அவள் ஜனனமரணமில்லாதவள். (அக்ஷரம் சு. 1) **சதுஷ்கபர்தா யுவதிஸ்ஸுபேசா** — என்ற ஶ்ருதியில், நித்யயௌவனம், ஞானமயத்வம், பிரம்மாதி தேவர்களால் பூஜிக்கப்படுதல், பகவானுக்கு அதிபிரியமாயிருத்தல் முதலிய மகா மகிமைகளையுடையவளாகக் கூறப்படுகிறது. அதனால் அவளுடைய உபாஸனையாலும், நாஸமில்லாத பலனான மோக்ஷம் கிடைக்குமாதலால், விஷ்ணுவின் உபாஸனை எவ்வாறு சிறந்ததாகும்?

1. एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।
ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥

**ஏவம் ஸததயுக்தாயே, ப[4]க்தாஸ்த்வாம் பர்யுபாஸதே |**
**யேசாப்யக்ஷர மவ்யக்தம், தேஷாம் கே யோக[3]வித்தமா: ||** 1

**யே பக்தா:**- எந்த பக்தர்கள்; **ஸதத யுக்தா :** - எப்போதும் தியான கர்ம யோகங்களை யனுஷ்டிப்பவர்களாய்; **ஏவம் த்வாம்** - இம்மாதிரி பார்க்கப்பட்டதும், கேட்கப்பட்டதுமான, ரூபத்தையுடைய உம்மை; **ஏவம் பரி உபாஸதே** - *11-55ல்* கூறியபடி, ம்ரத்தா பக்தியுடன் உபாஸிக்கிறார்களோ; **யே ச** - எந்த பக்தர்களும்; **அக்ஷரம்** - தேக நாஸமற்றதால் அக்ஷரம் என்று பெயருள்ள *(8 -3 மத்ய மாக்ஷரம்)*; **அவ்யக்தம்** - சேதன பிரகிருதியான லக்ஷ்மீயை; **பரி உபாஸதே** - ம்ரத்தா பக்தியுடன் உபாஸிக்கிறார்களோ; **தேஷாம்** - அவ்விரு வகையினர்களில்; **கே** - யார்; **யோக வித்தமா:** - மோக்ஷோபாயத்தை அறிந்தவர்களில் சிரேஷ்டர்கள்?

श्रीभगवान् उवाच । **ஸ்ரீபகவான் உவாச**—ஸ்ரீகிருஷ்ணர் லக்ஷ்மீயின் உபாஸகர்களைக் காட்டிலும், தம் உபாஸகர்கள் சிரேஷ்டர்கள் என்கிறார்.

2. मय्यावेश्य मनो यो मां नित्ययुक्ताः उपासते ।
श्रद्धया परयोपेताः ते मे युक्ततमा मताः ॥

மய்யாவேம்ய மனோ யே மாம், நித்யயுக்தா: உபாஸதே |
ம்ரத்த[4]யா பரயோபேதா:, தே மே யுக்ததமா மதா: || 2

**யே** - எவர்கள்; மன: மனதை, **மயி** - என்னிடம்; **ஆவேம்ய** - நன்றாக வைத்து; **நித்யயுக்தா:** - எப்போதும் கர்ம யோகம் தியான யோகம் முதலியவற்றை உடையவர்களாயும்; **பரயா** - மேலான; **ம்ரத்தயா** - ஆஸ்திக்ய புத்தியுடன்; **உபேதா:(ச)** - கூடினவர்களாயும்; **மாம்** - என்னை; **உபாஸதே** - உபாஸிக்கிறார்களோ; **தே** - அவர்கள்; **யுக்ததமா:** - மோக்ஷோபாயமுடையவர்களில் சிரேஷ்டர்கள்; என்று, **மே மதா:** - என்னால் கருதப்படுகின்றனர்.

முற்கூறிய ம்ருதியின்படி லக்ஷ்மீயை உபாஸிப்பவர்களும் மோக்ஷத்தை அடைவார்கள். ஆயினும், அவளுடைய உபாஸனை கஷ்டமானது. என் உபாஸனை அப்படியல்ல. ஆகவே, என் உபாஸகர்கள் சிரேஷ்டர்கள் என்று 5 சுலோகங்களில் (3 முதல் 7 வரை) கூறுகிறார்.

3. ये त्वक्षरमनिर्देश्यं अव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगं अचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥

4. संनियम्य इन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥

யேது அக்ஷரம்அநிர்தே³ஶ்யம், அவ்யக்தம் பர்யுபாஸதே |
ஸர்வத்ரக³ம் அசிந்த்யம் ச, கூடஸ்தம் அசலம் த்ருவம் || 3

ஸம்நியம்ய இந்த்ரியக்³ராமம், ஸர்வத்ர ஸமபு³த்த⁴ய: |
தே ப்ராப்னுவந்தி மாமேவ, ஸர்வபூ⁴தஹிதே ரதா: || 4

*3.* **யே து** – *எவர்களோ;* **அக்ஷரம்** – *(சூக்ஷ்மமான வளாதலால்)* தேக நாசமற்றவளும்; **அநிர்தேஶ்யம்** – *(பிரசித்தி இல்லாததால்)* விளக்கமுடியாதவளும்; **ஸர்வத்ரகம்** – எங்கும் இருப்பவளும்; **அசிந்த்யம்** –*(குணங்களினால் நிறைந்தவ ளாதலால்)* பூர்ணமாக தியானிக்க முடியாதவளும்; **கூடஸ்தம்** – அவ்யாக்ருத ஆகாயத்தின் அபிமானியாய் இருப்பவளும்; **அசலம்** – *(விஷ்ணுவின் மார்பு என்ற தன் இடத்திலிருந்து)* ஒருபோதும் நழுவாதவளும்; **த்ருவம்** – மாறுதல் இல்லாத வளுமான; **அவ்யக்தம்** – உலகின் உபாதான காரணமான ஜட பிரகிருதியின் அபிமானியாயிருப்பதால், அவ்யக்தம் என்று பெயருள்ள லக்ஷ்மீயை;

*4.* **இந்த்ரியக்ராமம்** – இந்திரியங்களின் கூட்டத்தை; **ஸம்நியம்ய** – *(ஶப்தம் முதலிய விஷயங்களில் செல்லாது)* நன்றாக அடக்கி; **ஸர்வத்ர** – *(தகுந்த)* எல்லோரிடமும்; **ஸமபுத்தய:**– *6–9* குறிப்பில் கூறியபடி, ஸமமான அறிவ உள்ளவர்களாயும்; **ஸர்வபூத ஹிதேரதா:** – *(தகுந்த)* எல்லா பிராணி களின் நன்மையில் ஈடுபட்டவர்களாயும் இருந்து *(சு. 3–1)*; **பரி உபாஸதே** – பரி விஷ்ணுவிடம் பக்தி, விஷ்ணு ஸர்வோத்தமர் என்ற ஞானம், விஷ்ணுவின் உபாஸனை இவற்றுடன் கூடி; **உபாஸதே** – உபாஸிக்கிறார்களோ; **தே** – அவர்கள்; **மாம் ஏவ** – என்னையே *(மோக்ஷத்தை);* **ப்ராப்னுவந்தி** – அடைகிறார்கள்.

**குறிப்பு:** 1. அக்ஷரம் முதலிய பல அடைமொழிகள், லக்ஷ்மீயும் மோக்ஷத்தைத்தரும் சக்திவாய்ந்தவள் என்று குறிக்கின்றன. ஆனால் அவள் ஸ்வதந்திரமாகத் தருபவளல்ல. விஷ்ணுவின் அனுமதியினால் தருபவள். ஆதலால், அவளை உபாஸிக்கும்முன் விஷ்ணுவை உபாஸிக்கவேண்டும். (பரி-என்பதின் அர்த்தம்)

*விஷ்ணுர் ஹி தாதா மோக்ஷஸ்ய, வாயுஸ்ச ததனுஜ்ஞயா |*

மோக்ஷத்தை ஸ்வதந்திரமாகத் தருபவர் விஷ்ணுவே. அவரது அனுமதியின்பேரில் தருபவர்கள், லக்ஷ்மீயும், வாயுவும் ஆவார்கள். மற்ற எந்த தேவர்களுக்கும் இந்த சக்தி இல்லை.

2. சிலர் கிருஷ்ணர் முதலியோர் ஸகுண பிரம்மம் என்றும் அவ்யக்தம் என்பது நிர்குண பிரம்மம் என்றும் கூறுவர். (சு. 7–7 பார்க்க) அதை இங்கு ஒப்பினாலும், அவ்யக்தத்தை உபாஸிப்பவர்கள், என்னையே

அடைகிறார்கள் என்று ஸ்ரீகிருஷ்ணர் கூறுவதால், நிர்குணோபாஸகர்களும் ஸகுண பிரம்மத்தையே அடைகிறார்கள். ஆகவே, ஸகுண பிரம்மமே உத்தமமானது என ஏற்படுகிறது.

*லக்ஷ்மீயை உபாஸிப்பவர்களுக்கும் மோக்ஷமுண்டு என்றால் உம்மை ஊாஸிப்பவர்கள் எவ்வாறு ஶ்ரேஷ்டர்கள் ஆவார்? என்றால் விளக்குகிறார்.*

5. क्लेशोऽधिकतरस्तेषां अव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिः अवाप्यते ॥

க்லேஶோऽதி$^{4}$கதரஸ்தேஷாம், அவ்யக்தாஸக்தசேதஸாம் |
அவ்யக்தா ஹி க$^{3}$திர் து$^{3}$க்கம், தே$^{3}$ஹவத்$^{4}$பி: அவாப்யதே || 5

**அவ்யக்த ஆஸக்த சேதஸாம்** – *(விஷ்ணுவை விட்டு விட்டு)* **ஸ்வந்திரமாக** *லக்ஷ்மீயிடம் நன்கு பதிந்த மனதுடைய;* **தேஷாம்** – *அவர்களுடைய (அவளை உபாஸிப்பவர்களுடைய);* **க்லேஶ:**– *பிரயாசை (துக்கம்);* **அதிக தர:** – *மிக அதிகமானது* **ஹி** – *ஏனென்றால்;* **அவ்யக்தா** – *லக்ஷ்மீயின் உபாஸனை மூலமாக விஷ்ணுவை அடையும்;* **கதி:** – *(கம்யதே அநேன) மார்க்கம்;* **தேஹவத்பி:** – *தேகம் படைத்தவர்களால்;* **துக்கம்** – *துக்கமாய் இருக்கும்படி;* **அவாப்யதே** – *அடையப்படுகிறது.*

குறிப்பு: தன் பதியைவிட்டுத் தன்னைமாத்திரம் உபாஸித்தால், லக்ஷ்மீ கோபிப்பாள். செய்ததெல்லாம் வீணாகும். ஆகவே, முதலில் விஷ்ணுவையும், பிறகு லக்ஷ்மீயையும் உபாசிக்கவேண்டும். அவளை உபாஸிப்பது கடினமானது. ஏனெனில், ஸ்த்ரீ ரூபத்தை உபாஸிக்கையில் இந்திரியங்களை நன்கு அடக்கவேண்டும். முன்கூறிய எல்லா பிராணிகளிடம் ஸமபுத்தி, ஹிதமாய் இருத்தல், சிறந்த ஆசாரம் முதலியனவும் வேண்டும். கொஞ்சம் தவறினால் மகா அனர்த்தம் ஏற்படும். மேலும், அவள் அருள்புரிய வெகுகாலமாகும். அவளுடைய அருள் இல்லையேல், விஷ்ணுவின் அருள் இல்லை. விஷ்ணுவின் அருள் இல்லையேல் அவரை அடையும் மோக்ஷமில்லை. ஆகையால், விஷ்ணுவை மறுபடியும் உபாசிக்கவேண்டும். இம்மாதிரி ஸ்ரீ தேவி உபாசனையில் பிரயாசை அதிகம்.

*தன்னுடைய உபாஸனையில் அவ்வளவு க்லேஶம் இல்லை என்கிறார்.*

6. ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायन्तः उपासते ॥

7. तेषामहं समुद्धर्ता मृत्युसंसार सागरात् ।
भवामि नचिरात्पार्थ मय्यावेशित चेतसाम् ॥

யேது ஸர்வாணி கர்மாணி மயி ஸம்ந்யஸ்ய மத்பரா: |
அநன்யேனைவ யோகே³ன, மாம் த்⁴யாயந்த: உபாஸதே || 6

தேஷா மஹம் ஸமுத்த⁴ர்த்தா, ம்ருத்யு ஸம்ஸார ஸாக³ராத் |
ப⁴வாமி நசிராத் பார்த்த², மய்யா வேஶித சேதஸாம் || 7

*6.* **து** - *ஆனால்;* **யே** - *எவர்கள்;* **ஸர்வாணி கர்மாணி** - *எல்லா கர்மங்களையும்;* **மயி** - *என்னிடம்;* **ஸம் ந்யஸ்ய** - *நன்றாக அர்ப்பணம் செய்து;* **மத்பரா:** – *நானே ஸர்வோத்தமன் என்று அறிந்தவர்களாய்;* **மாம்** - *என்னை;* **அநன்யேன** - *மற்றவர்களைப் பற்றியிராத அதாவது லக்ஷ்மீயின் உபாஸனையில்லாது செய்யப்பட்ட;* **யோகேன ஏவ** – *தியானமாகிற உபாயத்தினாலேயே;* **த்யாயந்த:** – *என்னை நினைப்பவர்களாய்;* **உபாஸதே** - *உபாஸிக்கிறார்களோ;*

*7.* **தேஷாம்** - *அந்த;* **மயி** - *என்னிடம்;* **ஆவேஶிதசேதஸாம்** - *நன்கு வைக்கப்பட்ட மனதை உடையவர்களுக்கு;* **பார்த்த** – *குந்தீ புத்திரனே !;* **அஹம்** - *நான்;* **நசிராத்** - *சீக்கிரத்தில்;* **ம்ருத்யு ஸம்ஸார ஸாகராத்** - *மரண ரூபமான ஸம்ஸார சமுத்திரத்திலிருந்து;* **ஸம் உத்தர்த்தா** - *நன்கு அதாவது, குறைபாடுகள் இருப்பினும் உபேக்ஷிக்காமல், ஸாதனங்களைப் பூர்த்தி செய்வித்து தூக்கிவிடுபவனாக;* **பவாமி** - *இருப்பேன்.*

குறிப்பு: 1. (சு. 6) கர்மங்களைப் பகவானிடம் அர்ப்பணம் செய்தல் என்றால், ஸர்வஸ்வதந்திரனான ஸ்ரீ ஹரியே, நம்மில் இருந்து, தம் பூஜையாகக் கர்மங்களைத் தமக்கு அதீனகர்த்தாவான நம்மால் செய்விக்கிறார் என்று அநுஸந்திப்பதேயாகும்.

2. சுலோகம் 3ல் பர்யுபாஸதே; இங்கு உபாஸதே – இதனால் லக்ஷ்மீயின் உபாஸனையைவிட விஷ்ணுவின் உபாஸனை ஸுலபமானது. அவ்வளவு இந்திரிய நிக்ரஹம் முதலியன வேண்டாம் என்றும் சுலோகம் 7ல் நசிராத்-என்றால் லக்ஷ்மீ அருள்புரிய வெகுகாலமாகும் என்றும் குறிக்கிறார்.

இவ்வாறு என் உபாஸனை மேலானதாகையால், அதையே செய். முடியாவிடில் வேறு உபாயங்களையும் பின்பற்று என்கிறார்.

8. मय्येव मन आधत्स्व मयिबुद्धिं निवेशय ।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥

மய்யேவ மன ஆத⁴த்ஸ்வ, மயிபு³த்தி⁴ம் நிவேஶய |
நிவஸிஷ்யஸி மய்யேவ, அத ஊர்த்⁴வம் ந ஸம்ஶய: ||

**மயிஏவ** - என்னிடமே; **மன:**- (ஸங்கல்பிக்கும்) மனதை; **ஆதத்ஸ்வ** - நன்றாக வை, அதாவது என்னை தியானம் செய்வாயாக. அது முடியாவிடில்; **மயி** - என்னிடம்; **புத்திம்** - (தீர்மானிக்கும்) புத்தியை; **நிவேஶய** - நன்கு வை அதாவது என்னைப்பற்றிய ஞானத்தைச் சம்பாதிப்பாயாக. **அத: ஊர்த்வம்** - இதற்குமேல் அதாவது என்னை அடைந்த பிறகு; **மயிஏவ** - என்னிடமே; **நிவஸிஷ்யஸி** - நிரந்தரமாக வசிப்பாய், அதாவது துக்கமில்லாத ஆனந்தத்தை அநுபவிக்கும் நிலையை அடைவாய்; **ஸம்ஶய: ந** - சந்தேகமில்லை.

**குறிப்பு:** 1. மனதின் ஐந்து வகை 3-40 குறிப்பில் காண்க. 2. உபாஸனை இருவிதமானது. (i) ஶாஸ்த்ராப்யாஸம் (ii) தியானம்.

9. अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।
अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय ॥

அத[2] சித்தம் ஸமாத[4]ாதும், ந ஶக்னோஷி மயி ஸ்தி[2]ரம் |
அப்[4]யாஸயோகே[3]ன ததோ, மாமிச்சாப்தும் த[4]னஞ்ஜய || 9

**தனஞ்ஜய** - ராஜஸூயத்திற்காக செல்வத்தை ஜயித்தவனே!; தியானம் செய்ய, **சித்தம்** - மனதை; **மயி** - என்னிடம்; **ஸ்திரம்** - உறுதியாக; **ஸமாதாதும்** — நன்கு வைப்பதற்கு; **ந ஶக்னோஷி** - உன்னால் முடியவில்லை என்ற; **அத** — பக்ஷத்தில்; (அதேதி பக்ஷாந்தரே) **தத:**- அதில் அஸக்தனாக இருப்பதால்; **அப்யாஸயோகேன** - பழக்கம் என்ற உபாயத்தினால், அதாவது அடிக்கடி விஷயங்களில் செல்லும் மனதை இழுத்து பகவானிடம் வைத்தல் என்னும் ப்ரத்யா ஹாரத்தினால்; **மாம்** - என்னை; **ஆப்தும்** - அறிவதற்கு (அடைவதற்கு என்று அல்ல); **இச்ச** - விரும்பு.

10. अभ्यासेऽपि असमर्थोऽसि मत्कर्मपरमो भव ।
मदर्थमपि कर्माणि कुर्वन् सिद्धिमवाप्स्यसि ॥

அப்[4]யாஸேऽபி அஸமர்த்தே[2]ாऽஸி, மத்கர்மபாரமோ ப[4]வ |
மத[3]ர்த்த[2]மபி.கர்மாணி, குர்வன் ஸித்தி[4]மவாப்ஸ்யஸி || 10

**அப்யாஸே அபி** - பழக்கத்திலும்; **அஸமர்த்த:** — அஸக்தனாக; **அஸி (யதி)** - இருப்பாயாகில்; **மத்கர்மபரம:** - என் ப்ரீதியின் பொருட்டு என் விஷயமான, ஜபம் அர்ச்சனை

முதலிய கர்மாநுஷ்டானத்தையே உத்தமமாகக் கொண்டவனாக; **பவ** - இரு. **மதர்த்தம்** - என் பொருட்டு; **கர்மாணி** - கர்மங்களை; **குர்வன் அபி** - செய்துவரினும்கூட; **ஸித்திம்** - இஷ்ட ஸித்தியை (மோக்ஷத்தை); **அவாப்ஸ்யஸி** - அடைவாய்.

11. अथैतदपि अशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥

அதை[2]ததபி அஶக்தோऽஸி, கர்த்தும் மத்யோக[3]மாஶ்ரித: |
ஸர்வகர்ம ப[2]ல த்யாக[3]ம், தத: குரு யதாத்மவான் || 11

**ஏதத் அபி** - இதையும்கூட, அதாவது என்னை உத்தேஸித்து, என் ப்ரீதியின் பொருட்டு ஜபம் அர்ச்சனை முதலிய எல்லா கர்மங்களை; **கர்த்தும்** - செய்வதற்கு; **அஶக்த;** - அஸி - ஸக்தியற்றவனாயிருக்கிறாய் என்ற; **அத** - பக்ஷத்தில்; **மத்யோகம்** - என்னை உத்தேஶித்து கர்மங்களைச் செய்யும் உபாயத்தை, அதாவது பிற தேவதைகளை உத்தேஶித்துச் செய்யும் கர்மங்களைச் செய்து, அவற்றைக் கடைஸியில் என்னிடம் ஸமர்ப்பணம் செய்வதை; **ஆஶ்ரித:** – கடைப்பிடித்து; (பவ - இரு). **தத:**- அந்த உபாயத்தினால்; **யதஆத்மவான்** - மனதை அடக்கினவனாய்; **ஸர்வகர்ம பல த்யாகம் குரு** - எல்லா கர்மங்களின் பலனிலுள்ள ஆஸையை விட்டுவிடு. நிஷ்காம கர்மத்தைச் செய்.

*8 முதல் 11 சுலோகங்களில் கூறியதைச் சுருக்கிக் கூறுகிறார்.*

12. श्रेयो हि ज्ञानं अभ्यासात् ज्ञानात् ध्यानं विशिष्यते ।
ध्यानात् कर्मफलत्यागः त्यागात् शान्तिः अनन्तरम् ॥

ஶ்ரேயோஹி ஜ்ஞானம் அப்[4]யாஸாத், ஜ்ஞானாத் த்[4]யானம் விஶிஷ்யதே |
த்[4]யானாத் கர்ம[2]பல த்யாக[3]:, த்யாக[3]ாத் சாந்தி: அநந்தரம் || 12

**அப்யாஸாத்** - சுலோகம் 9ல் கூறிய, (ஞானமில்லாத), பழக்கத்தை விட; **ஜ்ஞானம்** - பரோக்ஷஞானம் (5 - 16); **ஶ்ரேய:**- உயர்ந்தது. **ஜ்ஞானாத்** - பரோக்ஷ ஞானத்தைவிட; **த்யானம்** –( அந்த ஞானத்துடன் கூடிய) தியானம்; **விஶிஷ்யதே** - உயர்ந்தது. **த்யானாத்** - ஸகாம தியானத்தைவிட; **கர்மபலத்யாக:**- கர்ம பலனில் ஆசையை விடுதல் (நிஷ்காம தியானம் உயர்ந்தது). **த்யாகாத்** - நிஷ்காம த்யானத்தை விட; (அபரோக்ஷஞானம்

*உயர்ந்தது.)* **அநந்தரம்** - *பிறகு;* **ஶாந்தி:-** *மோக்ஷம் (ஏற்படும்)* **ஹி** - *பிரஸித்தம்.*

குறிப்பு: அப்யாஸம் - நிஷ்காம கர்ம அபரோக்ஷ ஞானம் ஞானத்துடன் ஸகாம தியானம் - நிஷ்காமத்யானம் - பரோக்ஷ ஞானம் (பக்தி - ப்ரஸாதம்) - மோக்ஷம் - இந்த வரிசையில் சிறந்தவை.

சு-6ல் கூறியதை வேறு தர்மங்களுடனும் விவரிக்கிறார்.

13. अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहङ्कारः समदुःखसुखः क्षमी ॥

14. संतुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिः यो मद्भक्तः स मे प्रियः ॥

அத்வேஷ்டா ஸர்வபூ[4]தானாம், மைத்ர கருண ஏவ ச |
நிர்மமோ நிரஹங்கார:, ஸமது[3]க்க ஸுக[2]:க்ஷமீ || 13

ஸந்துஷ்டஸ் ஸததம் யோகீ[3], யதாத்மா த்ருட[4]நிஸ்சய: |
மய்யர்ப்பித மனோபு[3]த்தி[4]:, யோ மத்ப[4]க்தஸ் ஸ மே ப்ரிய: || 14

*13.* **ய: மத்பக்த: -** *எந்த என் பக்தன்; சுலோகம்* **13. அத்வேஷ்டா** - *(உத்தமர்களிடம்) வெறுப்பில்லாதவனாயும்;* **மைத்ர:-** *(சமமானவர்களிடம்) சினேகமுள்ளவனாயும் (6-9);* **கருண: ச** - *(தாழ்ந்தவர்களிடம்) கிருபையுள்ளவனாயும்;* **ஸர்வபூதானாம்** - *எல்லா பிராணிகளிடம் (வெறுப்பின்மை, சினேகம், கிருபை) யுள்ளவனாயும்;* **நிர்மம:** - *தன்னைச் சேர்ந்த பொருள்களில், இவை என்னுடையவை என்ற ஸ்வதந்திர புத்தியில்லாதவனாயும்;* **நிரஹங்கார:-** *தன்னிடமில்லாத குணங்களுண்டு என்ற விபரீத ஞானமில்லாதவனாயும்;* **ஸம துக்க ஸுக:** *(2-15) வேண்டாம் என்ற விஷயத்தில் துக்கத்திற்குச் ஸமமாக, சுகத்தைக் கருதுபவனாயும்;* **க்ஷமீ** - *பொறுமை யுள்ளவனாயும்;*

*14.* **ஸததம்** - *எப்பொழுதும்;* **ஸந்துஷ்ட:-** *போதும் என்ற புத்தியுடையவனாயும்;* **யோகீ** - *கர்மானுஷ்டானம், தியானம் ஆகிய ஞானோபாயங்களையுடையவனாயும்;* **யதஆத்மா** - *மனதை ஶப்தம் முதலிய விஷயங்களில் செல்லாமல் அடக்கினவனாயும்;* **த்ருட நிஸ்சய:-** *ஸந்தேகமில்லாமல் உறுதியான தத்வ ஞானத்தை உடையவனாயும்;* **மயி** - *என்னிடம்;* **அர்ப்பித மனோ புத்தி:** - *மனதையும், புத்தியையும் (3-40) ஸமர்ப்பித்தவனாயும், இருக்கிறானோ;* **ஸ: ஏவ** - *அவனே;* **மே** - *எனக்கு;* **ப்ரிய:** - *பிரியமானவன்.*

15. यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः।
हर्षामर्ष भयोद्वेगैः मुक्तो यः स च मे प्रियः ॥

யஸ்மாத் நோத்விஜதே லோகோ, லோகாத் நோத்விஜதே ச ய: ||
ஹர்ஷாமர்ஷ ப[4]யோத்வேகை[3]:, முக்தோயஸ்ஸ ச மே ப்ரிய: || 15

**யஸ்மாத்** - *யாரைக்கண்டு;* **லோக:** - *ஜனங்கள்;* **ந உத்விஜதே** - *பயப்படுவதில்லையோ;* **ய:** - *யார்;* **லோகாத்** - *ஜனங்களைக்கண்டு;* **ந உத்விஜதே ச** - *(எல்லாம் பகவானின் அதீனம் என்று அறிந்து) பயப்படுவதில்லையோ;* **ஹர்ஷ அமர்ஷ பய உத்வேகை:** - *ஹர்ஷ - (சந்தோஷம் என்ற அர்த்தமல்ல) மதத்தினால் அதர்மத்தில் மனம் செல்வது;* **அமர்ஷ** - *கோபம்;* **பய** - *பயம்;* **உத்வேக** - *மனதின் நடுக்கம் இவைகளால்;* **முக்த:** - *விடுபட்டவனோ;* **ஸ: (பக்த:) ச** - *அந்த பக்தனும்;* **மே ப்ரிய:** - *எனக்குப் பிரியமானவன்.*

குறிப்பு: ஹர்ஷ:- சந்தோஷம். இது அனைவராலும் வேண்டத்தகுந்ததே. விடத்தகுந்ததல்ல. ஆகவே

*ஹ்ருதிர் மதாத் அதர்மாய, ஹர்ஷோ நாம ப்ரகீர்த்தித: ||*

என்றபடி அர்த்தம் கூறப்பட்டது.

16. अनपेक्षः शुचिर्दक्षः उदासीनो गतव्यथः।
सर्वारंभपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥

அநபேக்ஷ: ஶுசிர் த[3]க்ஷ; உத[3]ாஸீனோ க[3]தவ்யத[2]: |
ஸர்வாரம்ப[4] பரித்யாகீ[3], யோ மத்ப[4]க்த:ஸ மே ப்ரிய: || 16

**ய:** - *எந்த;* **மத் பக்த:** - *என் பக்தன்;* **அநபேக்ஷ:** - *(ஸ்ரீஹரியின் ப்ரீதியைத் தவிர மற்றவைகளில்) விருப்பமில்லாதவனாயும்;* **ஶுசி:** - *(உள்ளும் புறமும்) சுத்தியுள்ளவனாயும்;* **தக்ஷ:** - *(பகவத் கர்மங்களைச் செய்வதில்) சமர்த்தனாயும்;* **உதாஸீன:** - *(6-9) செய்யவேண்டிய உபகாரத்தையும், அபகாரத்தையும், செய்யாமல் ஒதுங்கி இருப்பவனாயும்;* **கதவ்யத:** - *பிறர் செய்யும் அபகாரங்களினால் மனத்துயரமடையாதவனாயும்;* **ஸர்வ ஆரம்ப பரித்யாகீ** *1. விஷ்ணுவினுடையதல்லாத எல்லா கர்மங்களை விட்டவனாயும், 2. எல்லா கர்மங்களிலும் தன்னுடையதென்ற அபிமானத்தை விட்டவனாயும், 3. எல்லா கர்மங்களின் பலனை விட்டவனாயும்; 4. எல்லா கர்மங்களையும் பகவானிடம் ஸமர்ப்பணம் செய்பவனாயும்,*

இருக்கிறானோ; **ஸ:** – அவன்; **மே ப்ரிய:** – எனக்குப் பிரிய மானவன்.

17. यो न हृष्यति न द्वेष्टि न शोचति न कांक्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान् यः स मे प्रियः ॥

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி, ந ஶோசதி ந காங்க்ஷதி |
ஶுப⁴ாஶுப⁴ பரித்யாகீ, ப⁴க்திமான் யஸ் ஸ மே ப்ரிய: || 17

**ய:** – எந்த; **பக்திமான்** – என் பக்தன்; **ந ஹ்ருஷ்யதி** – *(சு. 15)* பிழைத்திருக்கும் வரையில், மதத்தினால் அதர்மத்தில் மனத்தைச் செலுத்துவதில்லையோ; **ந த்வேஷ்டி** – உத்தமர் களிடம், அல்லது துன்பம் நேரிட்டால், வெறுப்பதில்லையோ; **ந ஶோசதி** – ப்ரியமான வஸ்து அழிந்தால், துக்கப்படுவ தில்லையோ; **ந காங்க்ஷதி** – அநித்யமான அஸாரமான வஸ்துவை விரும்புவதில்லையோ; **ஶுப அஶுப பரித்யாகீ** – ஶுப – ஞானம் பக்தி வைராக்யம் முதலியவை தவிர, மற்ற காம்ய ஶுப கர்மங்களையும், **அஶுப** – அஶுப கர்மங்களையும் விட்டு விடுகிறானோ; **ஸ:** – அவன்; **மே ப்ரிய:** – எனக்குப் பிரிய மானவன்.

**குறிப்பு:** சுலோகம் 15ல், ஹர்ஷத்திலிருந்து விடுபட்டவன்-இறந்த காலத்தில் அல்ல. எல்லா காலத்திலும் என்று, இங்கு ஹ்ருஷ்யதி-என்ற நிகழ்கால வினையால் குறிக்கிறார். அதற்கு சந்தோஷப்படுவதில்லை என்று அர்த்தமல்ல. சு.16ல் ஸர்வாரம்ப பரித்யாகீ-என்பதின் விவரணம், இங்கு ஶுபாஶுப பரித்யாகீ.

18. समः शत्रौ च मित्र च तथा मानापमानयोः ।
शीतोष्ण सुखदुःखेषु समः संगविवर्जितः ॥

19. तुल्यनिन्दा स्तुतिर्मौनी संतुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिः भक्तिमान्मे प्रियो नरः ॥

ஸம: ஶத்ரௌ ச மித்ரே ச, தத²ா மாநாபமாநயோ: |
ஶீதோஷ்ண ஸுகது³க்கேஷு, ஸமஸ் ஸங்க விவர்ஜித: || 18

துல்ய நிந்தா ஸ்துதிர் மௌனீ, ஸந்துஷ்டோ யேன கேனசித் |
அநிகேத: ஸ்திரமதி:, ப⁴க்திமான் மே ப்ரியோ நர: || 19

*18.* **ஶத்ரௌ ச** – பகைவனிடமும்; **மித்ரே ச** – நண்ப னிடமும்; **ஸம:** – ஒரே விதமாய் இருப்பவனும் *(6-9)*; **மான**

**அபமானயோ:** - கௌரவத்திலும், அகௌரவத்திலும்; **ததா** - அவ்வாறு ஒரே விதமாய் இருப்பவனும்; **சீத உஷ்ண ஸுக துக்கேஷு** - குளிர், வெப்பம், இவற்றால் ஏற்படும், இன்ப துன்பங்களில்; **ஸம:** - ஒரேவிதமாய் இருப்பவனும்; **ஸங்க விவர்ஜித:** - கர்ம பலனில் ஆசையற்றவனாயும்;

*19.* **துல்ய நிந்தா ஸ்துதி:** - விட்டுவிடத்தகுந்ததில் இகழ்ச்சிக்குச் சமமான புகழ்ச்சியை உடையவனும்; **மௌனீ** - பேசாதிருப்பவனும் அதாவது குறைந்த பேச்சை உடையவனும்; **யேன கேனசித்** - எது நேரிட்டாலும்; **ஸந்துஷ்ட:** - நன்கு திருப்தி உள்ளவனும்; **அநிகேத:** - ஸ்திரமான இருப்பிடம் இல்லாதவனும்; **அல்லது அ-** பகவானையே; **நிகேத:** - ஆஶ்ரயமாக உடையவனும்; **ஸ்திர மதி:** - குதர்க்கங்களினால் அசைக்கப்படாத ஞானத்தை உடையவனுமான; **பக்திமான்** - பக்தியையுடைய; **நர:** – மனிதன்; **மே ப்ரிய:** - எனக்குப் பிரியமானவன்.

குறிப்பு: 1. சு. 13ல் **ஸமதுக்கஸுக:** - என்பது, இங்கு **சீதோஷ்ண ஸுகதுக்கேஷு** ஸம: - என விவரிக்கப்படுகிறது. சு. 14ல் **ஸந்துஷ்ட: ஸததம்** - என்பதின் உரை, **ஸந்துஷ்ட: யேன கேனசித்.** 2. சு.14, 16ல் - **யோ மத்பக்த:** என்றும், சு.17, 19ல் **பக்திமான்** என்றும்; பலதடவை கூறியதால், சு.13 முதல் கூறிய தர்மங்களில் பக்திதான் சிறந்தது எனக் குறிக்கிறார்.

சு.13 முதல் கூறிய ஒவ்வொரு குணத்தை உள்ளவன், தமக்குப் பிரியமானவன் என்பதை சு.14, 16, 17ல் **ஸமே ப்ரிய:** சு.15ல் ஸ ச மே ப்ரிய:, சு.19ல் மே ப்ரிய: என்று கூறினார். அவை எல்லாம் சேர்ந்து யாரிடம் உள்ளனவோ, அவன் தமக்கு மிகவும் பிரியமானவன் என்று இங்கு கூறி முடிக்கிறார்.

20. ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते ।
श्रद्दधाना: मत्परमा: भक्तास्तेऽतीव मे प्रिया: ॥

யே து த[4]ர்ம்யாம்ருதமித[3]ம், யதே[2]ாக்தம் பர்யுபாஸதே |
ஶ்ரத்தத[4]ானா: மத்பரமா:, ப[4]க்தாஸ்தேऽதீவ மே ப்ரியா: || 20

**து** - ஒரு விஶேஷம். **யே பக்தா:** - எந்த பக்தர்கள்: **தர்ம்ய அம்ருதம்** - **தர்ம்ய** (*தாரகத்வாத் தர்ம: விஷ்ணு: தஸ்ய*) - உலகைத் தாங்கும் விஷ்ணுவின் உபாஸனைக்கு அங்கமானதும்; **அம்ருதம்** - மோக்ஷத்திற்குச் சாதனமானதும்; **யதோக்தம்** - *சு. 13 முதல் 19 முடிய* கூறப்பட்டதுமான; **இதம்** -

த்வேஷமின்மை முதலிய எல்லாவற்றிலும்; **ஶ்ரத்ததானா:** - ஆஸ்திக்ய புத்தியுடையவர்களாயும்; **மத்பரமா:**- நானே ஸர்வோத்தமன் என்ற அறிவுள்ளவர்களாயும்; **பரி உபாஸதே** - நன்கு உபாஸிக்கிறார்களோ; **தே** - அவர்கள்: **மே** - எனக்கு; **அதீவ ப்ரியா:** - மிகவும் பிரியமானவர்கள்.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे भक्तियोगो नाम द्वादशोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸு உபநிஷத்ஸு ப்ரஹ்ம
வித்யாயாம், யோகசாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
பக்தியோகோ நாம த்வாதசோऽத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய பக்தியோகம்*
*என்னும் பன்னிரண்டாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 13
# க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ யோகம்

(1+34 சுலோகங்கள்)

## பதின்மூன்றாம் அத்தியாயத்தின் சுருக்கம்

இங்கு மூன்றாம் ஷட்கம் ஆரம்பிக்கிறது. முன் இரு ஷட்கங்களின் விஷயங்களையே சுருக்கிக் கூறுகிறார். மற்ற பதிப்புகளில் இல்லாத அர்ஜுனன் வினவும் சுலோகம் ஒன்று நம் பாடத்தில் அதிகமாயுளது. அர்ஜுனன், 1. பிரகிருதி 2. புருஷன் 3. க்ஷேத்ரம் 4. க்ஷேத்ரஜ்ஞன் 5. ஞானம் 6. ஜ்ஞேயம் என்ற ஆறு விஷயங்களைப்பற்றி வினவினான். ஸ்ரீ கிருஷ்ணர் அவற்றை விளக்கினார்.

1. **ப்ரகிருதி** - ஜட ப்ரகிருதி, சேதன ப்ரகிருதி என இரு வகைப்படும். முதலாவது ஜீவர்களின் ஸ்தூலதேகமாகவும், இந்திரியங்களாகவும் மாறுகிறது. இரண்டாவது அதன் அபிமானியான லக்ஷ்மீ ஆவாள். அவள் மேற்படி தேக இந்திரியங்களின் சம்பந்தத்தை ஜீவர்களுக்குத் தருகிறாள்.

2. **புருஷன்** - ஜீவன், ஈஶ்வரன் என்ற இருவகையினர் ஆவர். ஈஶ்வரன் ஜீவனுக்கு அவனுடைய கர்மங்களையொட்டி இன்ப துன்பங்களைத் தருகிறான். ஜீவன் ப்ரகிருதி சம்பந்தமான அவைகளைத் தனதாகப் பாவித்து, அனுபவித்துப் பல பிறவிகளை அடைகிறான். ஆகவே ஜீவேஶ்வரர்களுக்கும், ஜீவர்களிடையேயும் பேதமுண்டு.

3. **க்ஷேத்ரம்** - இது பகவான் வஸிக்கும் இடமாகும். பிரகிருதி மஹத்தத்வம், அஹங்கார தத்வம், புத்தி, ஐந்து பூதங்கள், பதினொன்று இந்திரியங்கள், ஐந்து இந்திரிய விஷயங்கள் ஆக 25ஆகும். விருப்பு, வெறுப்பு, சுகம், துக்கம், உடல், சேதனா, தைரியம் என்ற ஏழும் அதன் விகாரங்களாகும்.

4. **க்ஷேத்ரஜ்ஞன்** - க்ஷேத்ரம் என்ற மேற்படி 25 தத்வங்களை அறிந்தவன் பகவான்தான்; ஜீவனல்ல. ஏனெனில், அவற்றின் விகாரங்களில் ஒன்றான தனது தேகத்தைப்பற்றியே வைத்தியர்களின் மூலம் அறியவேண்டியிருக்கும் ஜீவன் மேற்படி 25 தத்வங்களை அறிந்தவனாகான்.

*5.* **ஜ்ஞானம்** – ஞான ஸாதனம். பகவானின் அபரோக்ஷ ஞானத்தை அடைவதற்கு தற்புகழ்ச்சியின்மை, டம்பமின்மை முதலிய *20* தர்மங்களாகும். நாம் அவற்றைச் சம்பாதிக்க முற்படவேண்டும்.

*6.* **ஜ்ஞேயம்** – அறியத்தகுந்த வஸ்து, பகவானே ஆவான். அவருடைய மகிமை அபாரமானது, எல்லா அவயவங்களுடன் கூடிய நுண்ணிய ரூபங்களுடன் எங்கும் உள்ளவர். ஒவ்வொரு உறுப்பும் மற்ற உறுப்புக்களின் தொழில்களைச் செய்யும் சக்தி வாய்ந்தது. ஜீவர்களின் உள்ளேயிருப்பினும் அவர்களுடைய குணதோஷங்களினால் ஒட்டாதவர்.

முன் இரு ஷட்கங்களில் (அதாவது *1* முதல் *6* அத்தியாயங்கள் மற்றும் *7* முதல் *12* அத்தியாயங்களில்) கூறிய விஷயங்களையே இங்கு சுருக்கிக் கூறுகிறார். *2–12* முதலியதில் ஜீவஸ்வரூபம் அநாதி நித்யமானது என்றார். *2–45* லிருந்து *6*–ம் அத்தியாயம் முடிய பகவத்ஞான ஸாதனங்களை விளக்கினார். *2*-ம் ஷட்கத்தில் பகவத் ஸ்வரூபத்தை நிரூபித்தார். *7–4*லிருந்து க்ஷேத்ரம் எனப்படும் பகவானின் இருப்பிடங்களைக் கூறினார். இவ்வாறு பலவிடங்களில் கூறியது நம் புத்தியில் நிற்பதற்காக அவற்றைச் சுருக்கி இந்த அத்தியாயத்தில் வினாவின் மூலம் காண்பிக்கிறார்.

अर्जुन उवाच — **அர்ஜுன: உவாச** – அர்ஜுனன் வேண்டுகிறான்.

1. प्रकृतिं पुरुषं चैव क्षेत्रं क्षेत्रज्ञमेव च ।
एतद्वेदितुमिच्छामि ज्ञानं ज्ञेयं च केशव ॥

ப்ரக்ருதிம் புருஷம் சைவ, க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞமேவ ச |
ஏதத் வேதி[3]துமிச்ச[2]ாமி, ஜ்ஞானம் ஜ்ஞேயம் ச கேஶவ || 1

**கேஶவ** - பிரம்மருத்திர்களின் நியாமகரே! *(1)* **ப்ரக்ருதிம்** - ஜடப்ரகிருதியையும்; *(2)* **புருஷம் ச ஏவ** - ஜீவனையுமே; *(3)* **க்ஷேத்ரம்** – (க்ஷீயதே ஸ்தீயதே அத்ர) பகவானின் இருட் பிடத்தையும்; *(4)* **க்ஷேத்ரஜ்ஞம் ச ஏவ** - அவ்விருப்பிடத்தை அறிந்தவனையுமே; *(5)* **ஜ்ஞானம்** - ஞானஸாதனத்தையும்; *(6)* **ஜ்ஞேயம் ச** – அறிய வேண்டிய வஸ்துவையும்; ஆகிய, **ஏதத்** - இதை; **வேதிதும் இச்சாமி** – அறிய விரும்புகிறேன்.

**குறிப்பு:** (1) இந்த ஸ்லோகம் பிற பாடங்கள் பலவற்றில் இல்லை. ஆகவே, இவ்வத்தியாயத்தின் சுலோகங்கள் 34 என்பர். (2) கேயவ: 1–30 பார்க்க.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - *ஸ்ரீ க்ருஷ்ணர் முதலில், 3, 4 வினாக்களுக்குப் பதிலளிக்கிறார்.*

2. इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते ।
एतत् यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञमिति तद्विदः ॥

இத[3]ம் ஶரீரம் கௌந்தேய, க்ஷேத்ரமித்யபி[4]தீ[4]யதே |
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு:, க்ஷேத்ரஜ்ஞமிதி தத்வித[3]: || 2

**கௌந்தேய** - *குந்தீ புத்திரனே !;* **இதம்** - *இந்த;* **ஶரீரம் – சர் ச தத் ஈரம் ச, தம்** - *மாறுபாடான தேகத்தின்மூலம் ஜீவர்களை ஹிம்சிப்பதால்* **ஶர்** - *என்றும், பகவானால் பிரேரிக்கப் படுவதால்* **ஈரம்** *என்றும், ஆகவே சரீரமெனப்படும், ப்ரகிருதி, முதலிய 25 பொருள்கள் (சு. 6.)* **க்ஷேத்ரம் இதி** - *பகவானின் இருப்பிடம் என்று;* **அபிதீயதே** - *சொல்லப்படுகின்றன.* **ய: –** *யார்;* **ஏதத்** - *இந்த 25 பொருள்களை;* **வேத்தி** - *அறிகிறானோ;* **தம்** - *அவனை;* **க்ஷேத்ரஜ்ஞம் இதி** - *க்ஷேத்திரங்களை அறிந்தவன் என்று;* **தத்வித:** *அவற்றை அறிந்தவர்கள்;* **ப்ராஹு:** - *நன்கு கூறுவர்.*

**குறிப்பு:** இதம் ஶரீரம் - இந்த உடல்: என்ற அர்த்தம்தான், அனைவருக்கும் தோன்றும். ஆனால் 6,7, சுலோகங்களில் ஸ்ரீ கிருஷ்ணரே மேற்படி 25 தத்வங்களே, **க்ஷேத்ரம்** என்றும், அவற்றின் ஏழு மாறுபாடுகளில் ஒன்றானது (ஸங்காத:) உடல், என்றும் விளக்கியிருப்பதைக் கவனித்தால், **ஶரீரம்** என்ற பதத்திற்கு, உடல் என்ற அர்த்தமல்ல, 25 தத்வங்களே; என நன்கு விளங்கும். இதனால் 25 தத்வங்களை நன்கு அறிந்த பகவானே க்ஷேத்ரஜ்ஞன் ஆவான், அவற்றைக் கொஞ்சம் அறிந்த ஜீவனல்ல, என்றும் விளங்கும். இதை அடுத்த சுலோகத்தில் கூறுகிறார்.

3. क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।
क्षेत्र क्षेत्रज्ञयो र्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥

க்ஷேத்ரஜ்ஞம் சாபிமாம் வித்தி[4], ஸர்வக்ஷேத்ரேஷு ப[4]ாரத |
க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞானம், யத்தஜ்ஞானம் மதம் மம || 3

**பாரத** - *பரத வம்சத்திற் பிறந்தவனே !;* **ஸர்வக்ஷேத்ரேஷு அபி** - *பகவானுடைய எல்லா இருப்பிடங்களின் விஷயத் திலும்;* **க்ஷேத்ரஜ்ஞம் ச** - *க்ஷேத்திரமறிந்தவனாக;* **மாம் வித்தி** -

என்னை அறிவாயாக. **(ஜீவனையல்ல). ச** - மேலும்; **க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ:-** பகவானின் இருப்பிடங்கள், அவற்றை அறிந்தவன், இந்த இரண்டைப்பற்றிய; **யத்ஜ்ஞானம்** - எந்த ஞானமோ; **தத்** - அந்த ஞானம்; **மம** - என்னைப் பற்றிய உண்மையான ஞானம் என; **மதம்** - கருதப்படுகிறது.

**குறிப்பு:** பகவான் க்ஷேத்ரஜ்ஞன் என்று அறிய வேண்டுமானால், முதலில் க்ஷேத்திரத்தை அறிய வேண்டுமல்லவா ! ஆகவே க்ஷேத்திரத்தின் ஞானமும் அவசியம். அதனால் க்ஷேத்திரங்களையும் அவற்றைப்பற்றிய விஷயங்களையும் அடுத்த சுலோகத்தில் கூறுவதாகச் சொல்கிறார்.

4. तत्क्षेत्रं यच्च यादृक् च यद्विकारि यतश्च यत् ।
स च यो यत्प्रभावश्च तत्समासेन मे श्रृणु ॥

தத் க்ஷேத்ரம் யச்ச யாத்[3]ருக் ச, யத்விகாரி யதஸ் ச யத் |
ஸ ச யோ யத் ப்ரப[4]ாவஸ் ச, தத் ஸமாஸேன மே ஶ்ருணு || 4

**க்ஷேத்ரம்** - பகவானின் இருப்பிடம் என்று கூறப் பட்டதும், தேகத்தின் மூலம் ஜீவர்களை ஹிம்சிப்பதாலும், பகவானால் பிரேரிக்கப்படுவதாலும், சரீரம் என (சு. 2ல்) கூறப்பட்டதுமான; **தத்** - அது; (1) **யத் ச** - எந்த ஸ்வரூபத்தை யுடையது; (2) **யாத்ருக் ச** - எவ்விதமானது; (3) **யத்விகாரி** - எந்த மாறுபாடுகளுடன் கூடியது; (4) **யத:-** எந்த புருஷனால்; **யத் ச** - இயங்குகிறதோ; (5) **ஸ:-** அந்தப் பிரேரக புருஷன்; **ய: ச** - எந்த ஸ்வரூபத்தையுடையவன்; (6) **யத் ப்ரபாவ: ச** - எவ்வித மகிமையை உடையவன் என்ற; **தத்** - அந்த எல்லாவற்றையும்; **மே** - என்னிடமிருந்து; **ஸமாஸேன** - சுருக்கமாக; **ஶ்ருணு** - கேட்டு அறிவாயாக.

**குறிப்பு:** (1) 1, 2 வினாக்களுக்கு சு 6ல்; 3க்கு சு. 7ல்; 4க்கு சு. 23ல்; 5, 6க்கு சு, 13 முதல் 18ல் விடை கூறப்போகிறார்.

(2) 4ல் **யத்** - 'எந்த' என்ற அர்த்தமுள்ள பதமல்ல. இயங்குகிறது அல்லது செயல்படுகிறது என்ற அர்த்தமுள்ளது.

கேட்போருக்கு விஶ்வாஸத்தை உண்டுபண்ண, தாம் கூறப்போகும் விஷயம், ப்ரமாணங்களினால் ஸித்தமானது என்கிறார்.

5. ऋषिभि र्बहुधा गीतं छन्तोभि र्विविधैः पृथक् ।
ब्रह्मासूत्रपदैश्चव हेतुमद्भि र्विनिश्चितम् ॥

ரிஷிபி[4]ர் ப[3]ஹுத[4]ா கீ[3]தம், ச[2]ந்தே[3]ாபி[4]ர் விவிதை[4]: ப்ருத[2]க் |
ப்[3]ரஹ்ம ஸூத்ர பதை[3]ஸ்சைவ, ஹேது மத்பி[4]ர் விநிஸ்சிதம் || 5

**(தத்** - *அந்த க்ஷேத்திரம் முதலியதின் ஸ்வரூபம்);* **ரிஷிபி:** - *ஞானிகளால்;* **பஹுதா** - *பலவாறாக;* **கீதம்** - *கூறப்பட்டுள்ளது.* **விவிதை:** - *பல விதமான;* **சந்தோபி: –** *வேதங்களினால்;* **ப்ருதக்** - *வேறாக;* **(கீதம்** - *கூறப்பட்டுள்ளது).* **ஹேதுமத்பி:** - *யுக்திகளுடன் கூடிய;* **ப்ரஹ்ம ஸூத்ரபதை: ச** - *ப்ரம்ம சூத்திரங்களின் பதங்களாலும்.* ***விநிஸ்சிதம் ஏவ** - *விசேஷமாக நிர்ணயிக்கப்பட்டுள்ளதே. (ஆகவே அதை நீ கேட்பாயாக).* **(*விநிஸ்சிதை: –** *பிறர் பாடம்.)*

குறிப்பு: (1) உண்மையான பொருளை மறைப்பதால், வேதங்களுக்குத் தமிழில் **மறை** என்றும், ஸமஸ்கிருதத்தில் **சந்தஸ்** (சாதயதி மறைப்பது) என்றும் பெயர்கள்.

(2) சிலவகை எழுத்துக்களால் பல்வகைப் பொருள்களை விளக்கும் நூலுக்கு **ஸூத்ரம்** எனப்பெயர். பாணினீய ஸூத்ரம், கௌதம தர்ம ஸூத்ரம், காம ஸூத்ரம், முதலிய பல ஸூத்திரங்களுண்டு. வேதங்களின் அர்த்தத்தையும், அவற்றின் பொருளான ப்ரம்மத்தின் (விஷ்ணுவின்) ஸ்வரூபத்தையும், நிர்ணயிப்பதற் காக, ஸ்ரீ வியாஸர் அருளிச்செய்த நூலுக்கு, ப்ரம்ம ஸூத்ரம் என்று பெயர். **ஓம் அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா ஓம்,** என்பது முதல் சூத்திரம். **ஓம் அநாவ்ருத்திஸ் ஸப்தாத், அநாவ்ருத்திஸ் ஸப்தாத் ஓம்,** என்பது கடைசி ஸூத்திரம், இதற்குத்தான் 21 பேர்கள் பாஷ்யத்தைச் செய்திருக்கின்றனர் (மத்வ விஜயம் 9-12.)

*ஏகவிம்சதி குப⁴ாஷ்ய தூ³ஷகம், ப்ரஹ்மஸூத்ரக³ண*
*ப⁴ாஷ்ய மத்பு⁴தம் |*

ஸ்ரீ மத்வர் அவற்றைக் கண்டித்துத் தமது 22ம் பாஷ்யத்தைச் செய்துள்ளார். சங்கர பாஷ்யத்தின்படி மொத்த சூத்திரங்கள் 555. ராமானுஜ பாஷ்யத்தின்படி 545. ஸ்ரீ மத்வ பாஷ்யத்தின்படி 564. ஸ்ரீ மத்வரின் பாஷ்யத்தைக் கண்டித்து வேறு பாஷ்யத்தைச் செய்த பாஷ்யகாரர் யாருமே நாளது வரையில் தோன்றவில்லையாதலால் அதுவே ஸர்வ ஸித்தாந்தமாய் விளங்குகிறது என ஸ்ரீ வாதிராஜர் தமது யுக்தி மல்லிகையில் கூறுகிறார்.

*அஸ்மாத் உத்தர பக்ஷோऽன்யோ, யஸ்மாந் நாத்யாபி த்ருச்யதே |*
*ஸ ஏவ ஸர்வ ஸித்தாந்த:, இதி நிஸ்சித்ய சேதஸா ||*

சூ.4ல் கூறிய (1) க்ஷேத்திர ஸ்வரூபத்தையும், (2) அதன் விதத்தையும், (3) அதன் மாறுபாடுகளையும் கூறுகிறார்.

6. महाभूतान्यहङ्कारः बुद्धिरव्यक्तमेव च ।
इन्द्रियाणि दशैकं च पञ्च च इन्द्रियगोचराः ।।

7. इच्छा द्वेषः सुखं दुःखं संघातश्चेतना धृतिः ।
एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥

மஹா பூ4தான்யஹங்கார: பு3த்தி4 ரவ்யக்தமேவ ச |
இந்த்3ரியாணி த3சைகம் ச பஞ்ச ச இந்த்3ரிய கே3ாசரா: || 6

இச்ச2ா த்வேஷ:ஸுக2ம் து3க்க2ம், ஸங்க4ாதஸ் சேதனா த்4ருதி: |
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன, ஸவிகார முத3ாஹ்ருதம் || 7

*6.* **மஹாபூதானி** - *நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐம்பெரும் பூதங்களும்;* **அஹங்கார:** – *அஹங்கார தத்வமும், (அதன் காரணமான மஹத்தத்வமும்);* **புத்தி:**- *மனதின் நிச்சயிக்கும் வடிவமும்;* **அவ்யக்தம் ச** - *ஸூக்ஷ்மமான முக்குணமுடைய ஜடபிரகிருதியும்;* **தச ஏகம் ச** - *பத்தும் ஒன்றும் ஆன;* **இந்த்ரியாணி** - *(1) காது (2) தோல் (3) கண் (4) நாக்கு (5) மூக்கு (ஐந்து ஞானேந்திரியங்கள்) (6) வாய் (7) கைகள் (8) கால்கள் (9) பாயு - மலம் கழிக்கும் உறுப்பு (10) உபஸ்தம் - ஆண் பெண் குறி (ஐந்து கர்மேந்திரியங்கள்) (11) மனது என்பவையும்;* **இந்த்ரிய கோசரா:**– *ஞானேந்திரியங்களின் விஷயங்களான;* **பஞ்ச ச ஏவ** - *சப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம், என்ற ஐந்துமே; ஆகமொத்தம் 25 தத்துவங்களாவன;*

*7.* **ஏதத்** - *இவை;* **ஸமாஸேன** – *சுருக்கமாக;* **க்ஷேத்ரம்** - *பகவானின் இருப்பிடம் என்றும்;* **இச்சா** - *விருப்பம்;* **த்வேஷ:** - *வெறுப்பு;* **ஸுகம்** - *இன்பம்;* **துக்கம்** - *துன்பம்;* **ஸங்காத:**- *(பல பொருள்களின் சேர்க்கையான) உடல்;* **சேதனா** - *பல விஷயங்களை ஞாபகம் வைத்துக்கொள்ளும் மனதின் வடிவம்;* **த்ருதி:**- *தைரியம்; ஆகிய ஏழு;* **ஸவிகாரம்** - *மாறுபாடுகளுடன் கூடியது என்றும்;* **உதாஹ்ருதம்** - *கூறப்படுகிறது.*

குறிப்பு: (1) இந்த 25 தத்வங்கள், 7 விகாரங்கள் ஆகிய 32ன் அபிமானி தேவதைகளிடமும் பகவான் வசிப்பதால் அவர்களுக்கும் க்ஷேத்ரம் எனப்பெயர்.

| தத்வங்கள் | | அபிமானிகள் |
|---|---|---|
| 1. நிலம் | – | பூதேவி |
| 2. நீர் | – | வருணன் |
| 3. நெருப்பு | – | அக்நிதேவன் |
| 4. காற்று | – | முக்கிய வாயுவின் புத்திரனான மரீசி (10–21) |
| 5. ஆகாயம் | – | விக்னேசுவரர் |

| | | |
|---|---|---|
| 6. அஹங்காரம் | – | சிவன் |
| 7. மஹத்தத்வம் | – | ப்ரம்மா |
| 8. புத்தி | – | உமா |
| 9. அவ்யக்தம் | – | லக்ஷ்மி |
| 10. மனது | – | ஸ்கந்தன், இந்திரன், அநிருத்தன் |
| 11. காது | – | சந்திரன் |
| 12. தோல் | – | வாயுவின் புத்திரனான பிராணன் |
| 13. கண் | – | சூரியன் |
| 14. நாக்கு | – | வருணனின் மற்றொரு ரூபம் |
| 15. மூக்கு | – | அச்வினி தேவர்கள் |
| 16. வாக் | – | அக்நி (வாய்) (3–43 பார்க்க) |
| 17. கைகள் | – | வாயுவின் புத்திரர்களான இரு மருத்துக்கள் |
| 18. கால்கள் | – | யஜ்ஞன், சம்பு, (இந்திர புத்திரர்) |
| 19. பாயு | – | யமன் |
| 20. உபஸ்தம் | – | சிவன், மனு |
| 21. ஶப்தம் | – | |
| 22. ஸ்பர்ஶம் | – | |
| 23. ரூபம் | – | சிவனின் புத்திரர்களான ஐவர் |
| 24. ரஸம் | – | |
| 25. கந்தம் | – | |
| 26. விருப்பம் | – | லக்ஷ்மீ, பாரதீ |
| 27. வெறுப்பு | – | |
| 28. துன்பம் | – | கலி, த்வாபரன் |
| 29. இன்பம் (சுகம்) | – | முக்கிய வாயு |
| 30. உடல் | – | சேர்க்கைப் பொருள்களின் தேவர்கள் |
| 31. சேதனா | – | லக்ஷ்மீ |
| 32. தைரியம் | – | ஸரஸ்வதி, பாரதி |

*ஸ்ரீ மத்வரின் தந்த்ர ஸாரஸங்க்ரஹத்தின்படி 25 தத்வங்களும், அபிமானிகளும்:- (தத்வந்யாஸத்திற்கு)*

| தத்வங்கள் | | அபிமானிகள் |
|---|---|---|
| 1. புருஷன் (ஜீவன்) | – | ப்ரம்மா, வாயு |

| | | |
|---|---|---|
| 2. அவ்யக்தம் | – | ஸரஸ்வதி, பாரதி |
| 3. மஹத்தத்வம் | – | ப்ரம்மா, வாயு |
| 4. அஹங்காரம் | – | கருடன், சேஷன், ருத்திரன் |
| 5. மனம் | – | சுப்பிரமண்யர், இந்திரன் |
| 6. காது | – | திசைகளின் தேவதைகள் |
| 7. தோல் | – | முக்கிய வாயு புத்திரனான பிராணன் |
| 8. கண் | – | சூரியன் |
| 9. நாக்கு | – | வருணன் |
| 10. மூக்கு | – | அச்வினி தேவர்கள் |
| 11. வாக் (வாய்) | – | அக்நி |
| 12. கைகள் | – | தக்ஷன் |
| 13. கால்கள் | – | ஜயந்தன் (இந்திர புத்திரன்) |
| 14. பாயு (மலம் கழிக்கும் உறுப்பு) | – | மித்திரன் |
| 15, உபஸ்தம் (ஆண் பெண் குறி) | – | ஸ்வாயம்புவ மனு |
| 16. ஶப்தம் | – | பிருஹஸ்பதி, பிராணன் என்ற ருத்திர புத்திரன் |
| 17. ஸ்பர்ஶம் | – | வாயுபுத்திரனான அபானன், ருத்திர புத்திரனான அபானன் |
| 18. ரூபம் | – | ஷ இரு வியானர்கள் |
| 19. ரஸம் | – | ஷ இரு உதானர்கள் |
| 20. கந்தம் | – | ஷ இரு ஸமானர்கள் |
| 21. ஆகாயம் | – | விநாயகர் |
| 22. வாயு | – | வாயு புத்திரனான மரீசி |
| 23. அக்நி தேஜஸ் | – | அக்நிதேவன் |
| 24. ஜலம் (அப்) | – | வருணன் |
| 25. பிருதிவி | – | சனைஸ்சரன், பூதேவி |

(2) ஜலம் என்ற பெயரின் விளக்கம்:– ஜ- ஜனனத்தையும், ல - லயத்தையும் தருவது. கர்ப்பிணியின் உடலில் ஜலத்தின் பெருக்கினால் தான் சீக்கிரம் பிரஸவமாகும். உடலில் ஜலம் பெருகி அதன் குளுமையால் உஷ்ணம் தணிந்து, மரணம் ஏற்படுகிறது. ஜனன மரணத்திற்குக்

23 '

காரணமானது ஜலம். மேலும், பகவான் பிரம்மாண்டத்தைப் படைப்பதும் ஜலத்தில்தான், பிரளயத்திலும் எங்குபார்த்தாலும் ஜலம்தான்.

(3) முக்கிய வாயு. ஸுகத்தின் அபிமானியாதலால், அவருடைய அவதாரமான ஸ்ரீமத்வருக்கு ஸுகதீர்த்தர் என்ற பெயர் பொருத்தமாய் இருப்பதையும், அவரை ஆச்ரயித்தால்தான் சுகம் கிடைக்கும் என்பதையும் கவனிக்க.

சுலோகம் 13 முதல் கூறப்போகும் பகவத் ஸ்வரூபமும், அவருடைய மகிமையும் நம் அநுபவத்தில் நிலைபெறவேண்டி (சு. 1ல்) அர்ஜுனன் வினவிய 20 ஞான ஸாதனங்களைக் கூறுகிறார்.

8. अमानित्वं अदम्भित्वं अहिंसा क्षान्तिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यं आत्मविनिग्रहः ॥

அமானித்வம் அத[3]ம்பி[4]த்வம், அஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் |
ஆசார்யோபாஸனம் ஶௌசம், ஸ்தை[2]ர்யம் ஆத்மவிநிக்[3]ரஹ: || 8

[1]**அமானித்வம்** – *தற்புகழ்ச்சியின்மை,* [2]**அதம்பித்வம்** – *டம்பமின்மை (தன் சிறுமையை அறிந்தும், பெருமையை வெளிப்படுத்துவது டம்பம்).* [3]**அஹிம்ஸா** – *பிறருக்குத் தீங்கு செய்யாமை,* [4]**க்ஷாந்தி: –** *பொறுமை,* [5]**ஆர்ஜவம்**– *(16–1) –நேர்மை, நல்வழியில் மனோவாக்காயங்கள் ஒரே விதமாயிருத்தல்* [6]**ஆசார்ய உபாஸனம்** – *ஞானிகளின் சேவை.* [7]**ஶௌசம் (16–1) –** *தூய்மை (1. வெளித்தூய்மை – உடலின் சுத்தி – ஜலத்தினாலும், மிருத்திகையினாலும் ஆவது. 2. உள்தூய்மை – மனச்சுத்தி – காமாதிகளை ஒழித்து ஸ்ரீ ஹரியை ஸ்மரித்தல்).* [8]**ஸ்தைர்யம்** – *1. உறுதியாய் இருத்தல். 2. பயம் முதலியவற்றினால் ஸ்வதர்மத்திலிருந்து வழுவாதிருத்தல்.* [9]**ஆத்ம விநிக்ரஹ: –** *மனதை விசேஷமாக ஶப்தம் முதலிய விஷயங்களில் செல்லாது அடக்குதல்.*

9. इन्द्रियार्थेषु वैराग्यं अनहङ्कार एव च ।
जन्ममृत्यु जराव्याधि दुःखदोषानुदर्शनम् ॥

இந்த்[3]ரியார்த்தே[2]ஷு வைராக்[3]யம், அநஹங்கார ஏவ ச |
ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி[4], து[3]க்கதே[3]ாஷாநு த[3]ர்ஶனம் || 9

**ச ஏவ** – *மேலும்;* [10]**இந்த்ரிய அர்த்தேஷு** – *ஞானேந்திரியங்களின் விஷயங்களான ஶப்தம், ஸ்பரிசம் முதலியவைகளில்;* **வைராக்யம்** – *ஆஸையின்மை;* [11]**அநஹங்கார: –** *தன்னிடமில்லாத நற்குணங்கள் இருப்பதாக பாவிக்காதிருத்தல்.* [12]**ஜன்ம** – *பிறப்பு;* **ம்ருத்யு** – *இறப்பு;* **ஜரா –** *கிழத்தனம்;*

**வ்யாதி** - ரோகம், இவைகளிலுள்ள; **துக்கதோஷ** - துக்கத்தையும், தோஷத்தையும்; **அநுதர்சனம்** - தொடர்ந்து சிந்தித்தல்.

10. असक्तिः अनभिष्वङ्गः पुत्रदार गृहादिषुः ।
नित्यं च समचित्तत्वं इष्टानिष्टोपपत्तिषु ॥

அஸக்தி: அநபி$^{4}$ஷ்வங்க$^{3}$:, புத்ர த$^{3}$ாரக்$^{3}$ருஹாதி$^{3}$ஷு |
நித்யம் ச ஸமசித்தத்வம், இஷ்டாநிஷ்டோப பத்திஷு || 10

[13]**புத்ரதாரக்ருஹாதிஷு** - புதல்வன், மனைவி, வீடு முதலியவைகளில்; **அஸக்தி:** – பற்றின்மை; [14]**அநபிஷ்வங்க:** - அவைகளிடம் மிகப்பழுத்த நேசமின்மை. [15]**இஷ்ட அநிஷ்ட உபபத்திஷு** - விரும்பப்படுவதையும், விரும்பப்படாததையும், அடைந்தபொழுது; **நித்யம்** - எப்பொழுதும்; **ஸமசித்தத்வம்** - முறையே மகிழ்ச்சியையும் இகழ்ச்சியையும் அடையாது ஒரே விதமான மனதைப் பெற்றிருத்தல்.

11. मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वं अरति जनसंसदि ॥

மயி ச அநந்ய யோகே$^{3}$ன, ப$^{4}$க்தி: அவ்யபி$^{4}$சாரிணீ |
விவிக்த தே$^{3}$ஶ ஸேவித்வம், அரதிர் ஜனஸம்ஸதி$^{3}$ || 11

**ச** -- மேலும்; [16]**மயி** - என்னிடம்; **அநந்யயோகேன** - மற்றவர்களான லக்ஷ்மீ ப்ரம்மா முதலியோருக்கு (ஸ்வாதந்தர்ய) சம்பந்தமில்லாததும்; **அவ்யபிசாரிணீ** - என்னை விட்டுப் பிரியாததுமான; **பக்தி:** - சினேகம்; [17]**விவிக்த தேஶ ஸேவித்வம்** - ஜன ஸஞ்சாரமற்ற சுத்தமான இடத்தில் இருத்தல்; [18]**ஜனஸம்ஸதி** - (துஷ்ட) ஜனக் கூட்டத்தில்; **அரதி** - விருப்பமின்மை.

12. अध्यात्मज्ञान नित्यत्वं तत्वज्ञानार्थदर्शनम् ।
एतत् ज्ञानमिति प्रोक्तं अज्ञानं यततोऽन्यथा ॥

அத்$^{4}$யாத்ம ஜ்ஞான நித்யத்வம், தத்வஜ்ஞானார்த்த$^{2}$ த$^{3}$ர்ஶனம் |
ஏதத் ஜ்ஞானமிதி ப்ரோக்தம், அஜ்ஞானம் யததோSன்யத$^{2}$ா || 12

[19]**அத்யாத்ம ஜ்ஞான நித்யத்வம்** - பரமாத்மாவைப் பற்றிய ஞானத்தில் என்றும் நிலைபெற்றிருத்தல், [20]**தத்வ ஜ்ஞானார்த்த தர்ஶனம்** - அபரோக்ஷ ஞானத்தின் பொருட்டு சாஸ்திரங்களை விமர்ஶித்தல் அல்லது உண்மையான ஞானத்

திற்கு விஷயனான பகவானை நேரில் பார்த்தல்; **ஏதத்** - இந்த இருபது தர்மங்களும்; **ஜ்ஞானம்** - ஜ்ஞாயதே அநேன இதி - ஞானத்தின் ஸாதனங்களாகும், நேரில் பார்த்தல் என்ற அர்த்தத்தில் ஞானமாகும்; **இதி** - என்று; **ப்ரோக்தம்** - நன்கு கூறப்பட்டுள்ளது. **அத: அன்யதா** - இதற்கு மாறானது; **யத்** - எதுவோ; *(தத் - அது)*; **அஜ்ஞானம்** - ஞான ஸாதனமுமல்ல, ஞானமுமல்ல.

சுலோகம் 1ல் அர்ஜுனன் அறிய விரும்பிய, **ஜ்ஞேயம்** - அறியத்தகுந்த வஸ்துவும், சு. 4ல் 5, 6 விஷயங்களுமான பகவத் ஸ்வரூபத்தையும், அவருடைய மகிமையையும் பலனுடன் இங்கு கூறுகிறார்.

13. ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वाऽमृतमश्नुते ।
अनादिमत् परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥

ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி, யத் ஜ்ஞாத்வாSம்ருதமஶ்னுதே |
அநாதி[3]மத் பரம் ப்ரஹ்ம, ந ஸத்தந் நாஸதுச்யதே || 13

**யத்** - எது; **ஜ்ஞேயம்** - *(முற்கூறிய 20 ஸாதனங்களால்)* அறியப்பட வேண்டியதோ; **யத்** - எதை; **ஜ்ஞாத்வா** - அறிந்த பிறகு; **அம்ருதம்** - மரணமற்ற மோக்ஷத்தை; **அச்னுதே** - அடைகிறானோ; **தத்** - அந்த வஸ்துவை; **ப்ரவக்ஷ்யாமி** - நன்கு கூறுகிறேன். **பரம் ப்ரஹ்ம** - உத்தமரான குணபூர்ணரான விஷ்ணுவே *(அதன் ஸ்வரூபம்)* அவருடைய மகிமை:- **அநாதிமத்** - *(ந வித்யந்தே ஆதிமந்தி யஸ்ய)* - உற்பத்தியை யுடைய பிராகிருத தேகம், இந்திரியங்கள், குணங்கள், கர்மங்கள் ஆகியவை இல்லாதவர். அல்லது **ந ஆதிமத்** - உற்பத்தியில்லாதவர்; **தத்** - அந்த விஷ்ணு; **ஸத் ந** - *(1)* காரியப்பொருள்களைச் சேர்ந்தவரல்ல. *(2)* அளவுக்குட்பட்ட நிலம், நீர் நெருப்பு ஆகியவற்றைக் கடந்தவர். **அஸத் ந** - *(1)* காரணப்பொருள்களைச் சேர்ந்த வரல்ல. *(2)* அளவு கடந்த வாயு, ஆகாயம் ஆகியவற்றைக் கடந்தவர் என்று; **உச்யதே** - சொல்லப்படுகிறார்.

*மீண்டும் அவர் மகிமையை 5 சுலோகங்களில் கூறுகிறார்.*

14. सर्वतः पाणिपादं तत् सर्वतः अक्षिशिरोमुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥

ஸர்வத: பாணிபாத[3]ம் தத், ஸர்வத: அக்ஷிஶிரோமுக[2]ம் |
ஸர்வத: ஶ்ருதிமல்லோகே, ஸர்வமாவ்ருத்ய திஷ்ட[2]தி || 14

**தத்** - *அந்த பிரம்மம் (விஷ்ணு);* **ஸர்வத:** — *எல்லா அவயங்களிலும்;* **பாணிபாதம்** - *கைகால்களையும் அவற்றின் சக்திகளையும் பெற்றுள்ளது.* **ஸர்வத:-** *எல்லா அவயவங் களிலும்;* **அக்ஷிசிரோமுகம்** – *கண், தலை, வாய்களையும், அவற்றின் ஶக்திகளையும் பெற்றுள்ளது.* **ஸர்வத:** - *எல்லா அவயவங்களிலும்;* **ஶ்ருதிமத்** - *காதுகளையும், அவற்றின் சக்தியையும் பெற்றுள்ளது.* **லோகே** - *உலகிலுள்ள;* **ஸர்வம்** - *எல்லா வஸ்துக்களையும்;* **ஆவ்ருத்ய** - *வியாபித்து;* **திஷ்டதி** - *இருக்கிறது.*

குறிப்பு: (1) எல்லா இடங்களிலுமுள்ள விஷ்ணு, அணுவைக் காட்டிலும் அணுவான, கைகால் முதலிய எல்லா அவயவங்களுடன் கூடிய அனந்த ரூபங்களுடன் எல்லா வஸ்துக்களின் உள்ளே இருந்துகொண்டு, வியாப்த ரூபத்தினால் வெளியேயும் அனைத்தையும் வியாபித்துள்ளார்.

*அந்தர் பஹிஸ்ச தத் ஸர்வம், வ்யாப்ய நாராயண: ஸ்தித: |*

(2) பகவானின் கண் பார்ப்பதைத் தவிர, ஶப்தங்களைக் கேட்கும்; வாஸனையை முகரும்; ருசி பார்க்கும்; கைகால்களின் வேலைகளைச் செய்யும். இம்மாதிரியே மற்ற அவயவங்களும், எல்லா வேலைகளையும் செய்வன. ஹரி வம்ஶத்தில், மூல ரூபியான விஷ்ணுவின் ஓர் கருத்த கூந்தலே, ஸ்ரீ கிருஷ்ணராக அவதரித்துள்ளது எனப்படுகிறது. அந்தக் கிருஷ்ணருக்கு எல்லா அவயவங்களும் ஶக்திகளுமிருந்தன அல்லவா! ஆகவே பகவானின் கூந்தலுக்கு, எல்லா அவயவங்களும், அவற்றின் சக்திகளும் இருந்தன என்பது தெளிவு. (9-5 பார்க்க)

*கேசஸ்ய ப்ரஹ்மதா த்ருஷ்டா, கேசவஸ்யாபி கிம் ந ஸா |*

15. सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥

ஸர்வேந்த்[3]ரிய கு[3]ணாப[4]ாஸம், ஸர்வேந்த்[3]ரிய விவர்ஜிதம் |
அஸக்தம் ஸர்வபு[4]க் சைவ, நிர்கு[3]ணம் கு[3]ணபே[4]ாக்த்ரு ச || 15

**(தத்** - *அந்த விஷ்ணு);* **ஸர்வ இந்த்ரிய குண ஆபாஸம்** – *எல்லா இந்திரியங்களையும், ஶப்தம், ஸ்பர்சம் முதலிய அவற்றின் விஷயங்களையும், நன்கு உணர்த்துபவர், அறிபவர்,* **ஸர்வ இந்த்ரிய விவர்ஜிதம்** - *(பிராகிருதமானவையும், வேறுபட்டவையுமான) எல்லா இந்திரியங்களுமில்லாதவர்,* **அஸக்தம்** - *(புண்ய பாபங்களின்) பற்று அற்றவர்;* **ஸர்வபுக் ச ஏவ** - *எல்லாப் பொருள்களின் ஸாரத்தைப் புசிப்பவரே அல்லது எல்லாவற்றையும் கொல்பவரே.* **(ஸர்வப்ருத்** - *பாடாந்தரம்)* **நிர்குணம்** - *(பிராகிருதமான) குணங்களில்லாதவர்.*

**குணபோக்த்ரு ச** – *(அப்ராக்ருதமான) எல்லா மங்களகரமான குணங்களையும் அனுபவிப்பவர் ஆவார்.*

**குறிப்பு:** சென்ற ஸ்லோகத்தில், விஷ்ணு எல்லா அவயவங்களையும் உடையவர் என்றார். இங்கு எல்லா அவயவங்களும் இல்லாதவர் என்கிறார். இவ்விரண்டுக்கும் விரோதமில்லாதவாறு பிராகிருதமான அவயவங்களில்லாதவர் என்றும், அப்ராகிருதமான அவயவங்களுள்ளவர் என்றும், அர்த்தம் கூறவேண்டும். வேதங்களிலும் இவ்வாறே விரோதங் களைப் போக்கவேண்டும்.

16. बहिरन्तश्च भूतानां अचरं चरमेव च ।
सूक्ष्मत्वात् तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥

ப[3]ஹிரந்தஸ்ச பூ[4]தானாம், அசரம் சரமேவ ச |
ஸூக்ஷ்மத்வாத் தத[3]விஜ்ஞேயம், தூ[3]ரஸ்தம் சாந்திகே ச தத் || 16

**தத்** – *அந்த விஷ்ணு;* **பூதானாம்** – *எல்லா பிராணிகளின்;* **பஹி:** – *வெளியேயும்;* **அந்த : ச** – *உள்ளேயும்; (சு. 14)* **திஷ்டதி** – *இருக்கிறார்;* **அசரம்** – *மாறுதலில்லாதிருப்பவர்;* **சரம் ஏவ ச** – *எவ்விடத்திலும் ஸஞ்சரிப்பவரும் ஆவார்.* **ஸூக்ஷ்மத்வாத்** – *நுட்பமாயிருப்பதால்;* **அவிஜ்ஞேயம்** – *இந்திரியங்களால் நன்கு அறிய முடியாதவர்;* **தத்** – *அந்த விஷ்ணு;* **தூரஸ்தம் ச** – *(எங்கும் இருப்பவர் ஆனதால்); தூரத்திலும் இருப்பவர்;* **அந்திகே ச (ஸ்திதம்)** – *சமீபத்திலும் இருப்பவர்.*

17. अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥

அவிப[4]க்தம் ச பூ[4]தேஷு, விப[4]க்தமிவ ச ஸ்தி[2]தம் |
பூ[4]தப[4]ர்த்ரு ச தத் ஜ்ஞேயம், க்ர[3]ஸிஷ்ணு ப்ரப[4]விஷ்ணு ச || 17

**தத்** – *அந்த விஷ்ணு;* **பூதேஷு** – *(நானாவிதமான) பிராணிகளுக்குள்;* **அவிபக்தம் ச** – *தமது ரூபங்களுக்குள் பேதமில்லாதிருப்பவரே ஆயினும்;* **விபக்தம் இவ ச** – *பேத முள்ளவர்போலும்;* **ஸ்திதம்** – *(அறிவிலிகளுக்குத் தோன்றும் படி) இருப்பவர்.* **பூதபர்த்ரு ச** – *(ஸ்திதி காலத்தில்) எல்லா பிராணிகளைத் தாங்குபவராயும், போஷகராயும் இருப்பவர்;* **க்ரஸிஷ்ணு** – *(ஸம்ஹார காலத்தில்) எல்லாவற்றை விழுங்கு பவராயும் இருப்பவர்;* **ப்ரபவிஷ்ணு ச** – *(சிருஷ்டி காலத்தில்) எல்லாவற்றையும் நன்கு படைப்பவராயும் இருப்பவர் என்று;* **ஜ்ஞேயம்** – *அறியத் தகுந்தவர்.*

18. ज्योतिषामपि तज्ज्योतिः तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥

ஜ்யோதிஷாமபி தஜ் ஜ்யோதி:, தமஸ: பரமுச்யதே |
ஜ்ஞானம் ஜ்ஞேயம் ஜ்ஞானக[3]ம்யம், ஹ்ருதி[3] ஸர்வஸ்ய விஷ்டி[2]தம் || 18

**தத்** - *அந்த விஷ்ணு;* **ஜ்யோதிஷாம் அபி** - *ஒளியுள்ள ஸூரியன், முதலியவர்களுக்கும் கூட;* **ஜ்யோதி:** - *பிரகாசிக்கும் சக்தியைத் தருபவர். (15-12)* **தமஸ:** - *பிரகிருதிக்கும், மிருத்யுவுக்கும், அஜ்ஞானத்திற்கும்;* **பரம்** - *அப்பாற்பட்டவர் என்று;* **உச்யதே** - *(ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் - முதலிய சுருதிகளில்) கூறப்படுகிறார்.* **ஜ்ஞானம்** - *அறிவையே ஸ்வரூபமாயுள்ளவர்.* **ஜ்ஞேயம்** - *(தம்மாலேயே) அறியத் தகுந்தவர். ஸ்வப்ரகாஶமானவர்.* **ஜ்ஞானகம்யம்** - *அபரோக்ஷ ஞானத்தினால் (மோக்ஷத்தில்) அடையத்தகுந்தவர்.* **ஸர்வஸ்ய ஹ்ருதி** - *(சிறிய இடமாகிய) எல்லோருடைய ஹ்ருதயத்திலும்;* **விஷ்டிதம்** - *விசேஷமாக வீற்றிருப்பவர்.*

19. इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।
मद्भक्तः एतद्विज्ञाय मद्भावाय उपपद्यते ॥

இதி க்ஷேத்ரம் தத[2]ா ஜ்ஞானம், ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத: |
மத்ப[4]க்த: ஏதத் விஜ்ஞாய, மத்ப[4]ாவாய உபபத்[3]யதே || 19

**இதி** - *இம்மாதிரி;* **க்ஷேத்ரம்** - *(சு. 6ல்) பகவானின் இருப்பிடமும், (சு. 7ல் அவற்றின் மாறுபாடுகளும்);* **ததா** - *அவ்வாறே;* **ஜ்ஞானம்** - *(சு. 8 முதல் 12 ல்) ஞானமும் ஞான ஸாதனங்களும்;* **ஜ்ஞேயம் ச** - *(சு.13ல்) அறியப்பட வேண்டிய பகவானும்;* **ஸமாஸத:** - *சுருக்கமாக;* **உக்தம்** - *சொல்லப் பட்டன.* **மத்பக்த:** *என் பக்தன்;* **ஏதத்** - *இவற்றை;* **விஜ்ஞாய** - *விஶேஷமாக அறிந்து;* **மத்பாவாய** - *(4-10)* **மயி பாவாய** - *என்னிடம் இருப்பதற்கு (ஸாயுஜ்யத்திற்கு)* **உபபத்யதே** - *தகுந்தவனாகிறான்.*

*சு. 1ல், அர்ஜுனன் அறிய விரும்பிய ப்ரகிருதி புருஷர்களைக் கூறுகிறார்.*

20. प्रकृतिं पुरुषं चैव विद्धि अनादी उभावपि ।
विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृति संभवान् ॥

ப்ரக்ருதிம் புருஷம் சைவ, வித்தி[4] அநாதீ[3] உப[4]ாவபி |
விகாராம்ஸ்ச குணாம்ஸ்சைவ, வித்தி[4] ப்ரக்ருதி ஸம்ப[4]வான் || 20

**ப்ரக்ருதிம்** – *(சு. 6ல்) கூறிய ஜட ப்ரகிருதி முதலிய 25 தத்வங்களும்;* **புருஷம் ச** – *ஜீவனையும்;* **உபௌ அபி** – *இவ்விரண்டையும் கூட;* **அநாதீ ஏவ** – *உற்பத்தியில்லாதவையே என்று;* **வித்தி** – *அறிவாயாக* **2ம் அர்த்தம்; ப்ரக்ருதிம்** – *ஜடப்ரகிருதி, சேதன ப்ரகிருதி (ஆகிய இரண்டையும்);* **புருஷம் ச** – *ஜீவனையும், பரமாத்மாவையும்;* **உபௌ அபி** – *இவ்விருவர்களையும்;* **அநாதீ ஏவ** – *உற்பத்தியில்லாதவர்களே என்று;* **வித்தி** – *அறிவாயாக,* **விகாரான் ச** – *(சு. 7ல்) கூறிய விருப்பம் முதலிய ஏழு மாறுபாடுகளையும்;* **குணான் ச** – *ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களையும்;* **ப்ரக்ருதி ஸம்பவான் ஏவ** – *ஜடபிரகிருதியிலிருந்து உண்டானவையே என்று;* **வித்தி** – *அறிவாயாக.*

குறிப்பு: (1) அநாதீ என்ற இருமை, இரண்டைக் கூறினும், உபௌ என்ற பதம், ஒவ்வொன்றிலும் இரண்டு, என்பதை அறிவிக்கிறது. (2) முக்குணங்களும் பிரகிருதியின் மாறுபாடுகளே. ஆயினும் விருப்பம் முதலியவைகளைக் காட்டிலும் அற்பமாறுதலையுடையவை. ஆதலால் தனித்துக் கூறப்பட்டன.

*பிரகிருதியிலிருந்து உண்டாவதை விளக்குகிறார்.*

21. कार्य कारण कर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषः सुखतुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥

கார்ய காரண கர்த்ருத்வே, ஹேது: ப்ரக்ருதி ருச்யதே |
புருஷஸ் ஸுக²து³க்க²ானாம், பே⁴ாக்த்ருத்வே ஹேதுருச்யதே || 21

**ப்ரகிருதி:** – *சேதன பிரகிருதியான லக்ஷ்மீ; (ஜீவஸ்ய – ஜீவனுக்கு);* **கார்ய** – *தேகம்;* **காரண** – *இந்திரியங்கள், இவற்றின் சம்பந்தத்தை;* **கர்த்ருத்வே** – *உண்டுபண்ணுவதில்;* **ஹேது:** – *காரணமாக;* **உச்யதே** – *கூறப்படுகிறாள்.* **புருஷ:** –*பரமாத்மா;* **ஸுகதுக்கானாம்** – *(பிரா கிருதமான) இன்பதுன்பங்களை;* **போக்த்ருத்வே** – *ஜீவன் தன்னுடையவை என்று பாவித்து, அநுபவிப்பதில்;* **ஹேது:** – *காரணமாக;* **உச்யதே** – *கூறப் படுகிறார்.*

குறிப்பு: லக்ஷ்மீ ஜீவனின் கர்மத்தையொட்டி தேகம் முதலியவற்றின் சம்பந்தத்தைத் தருகிறாள். பகவான் இன்பதுன்பங்களைத் தருகிறான் என்று கருத்து. பகவானே தேகம் முதலியவற்றையும் முக்கியமாகத் தருபவர். ஆயினும் அதில் லக்ஷ்மீக்கு அதிக பங்கு உண்டு என்பதற்காக லக்ஷ்மீ எனப்பட்டது.

**2–ம் அர்த்தம்: – ப்ரக்ருதி: –** ஜடபிரகிருதி; **கார்ய காரணகர்த்ருத்வே** - தேகமாகவும், இந்திரியங்களாகவும் மாறுபடுவதில்; **ஹேது: –** உபாதான காரணமாக; **உச்யதே** – கூறப்படுகிறது. **புருஷ:–** ஜீவன்; **ஸுகதுக்கானாம் போக்த்ருத்வே** - இன்பதுன்பங்களை அநுபவிப்பதில்; **ஹேது: –** காரணமாக; **உச்யதே** - கூறப்படுகிறான்.

குறிப்பு: (1) தேகமும், இந்திரியங்களும் ஜடபிரகிருதியினால் ஆனவை. அவற்றின் சம்பந்தத்தால், ஜீவன் இன்பதுன்பங்களை அநுபவிக்கிறான். இவைகளுக்கு நியாமகர்கள் பகவானும், லக்ஷ்மீயும் ஆவர்.

(2) (சு. 20ல்) கூறிய இரு அர்த்தங்களைத் தழுவி இந்த சுலோகத்திற்கு இரு அர்த்தங்கள் செய்யப்பட்டன. தேகசம்பந்தம் முதலியன பொய் (மித்யா) ஆயிற்றே! என்றால், ஒவ்வொருவரின் அனுபவஸித்தமானதால் பொய்யல்ல என்கிறார் சுலோகம் 22-ல்.

22. पुरुषः प्रकृतिस्थो हि भुंक्ते प्रकृतिजान् गुणान् ।
कारणं गुणसंगोऽस्य सदसद्योनि जन्मसु ॥

புருஷ: ப்ரக்ருதிஸ்தே²ா ஹீ, பு⁴ங்க்தே ப்ரக்ருதிஜான் கு³ணான் |
காரணம் கு³ணஸங்கோSஸ்ய, ஸத³ஸத்யோனி ஜன்மஸு || 22

**புருஷ: –** ஜீவன்; **ப்ரக்ருதிஸ்த:** - ஜடபிரகிருதியாலான தேகம் முதலியவற்றில் இருந்துகொண்டு; **ப்ரக்ருதிஜான்** – ஜடபிரகிருதியினால் உண்டான; **குணான்** - சுகதுக்கங்களை; **புங்க்தே** – அநுபவிக்கிறான். **ஹி** - இது ஒவ்வொருவரின் அநுபவசித்தமல்லவா! (ஆகவே மித்யா அல்ல). அப்ராகிருத ஸ்வரூபனான ஜீவனுக்கு ப்ரகிருதி சம்பந்தம் ஏற்படக் காரணம்யாது? **அஸ்ய** - இந்த ஜீவனுக்கு; **ஸத் அஸத் யோனி ஜன்மஸு** - நல்ல அல்லது கெட்ட பிறவிகளில் பிறப்பதற்கு; **குணஸங்க: –** ஸத்வ ரஜஸ்தமோ குணங்களின் சம்பந்தம்; **காரணம்** – ஹேதுவாகும்.

நல்ல அல்லது கெட்ட பிறவிகளுக்கு பகவான்தான் ஸ்வதந்திர காரணம் என்றும் (சு.4ல்) (4ம்) விஷயத்தின் பதிலையும் தருகிறார்.

23. उपद्रष्ठाऽनुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।
परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन् पुरुषः परः ॥

உபத்³ரஷ்ட²ாSநுமந்தா ச, ப⁴ர்த்தா பே⁴ாக்தா மஹேஶ்வர: |
பரமாத்மேதி சாப்யுக்தோ, தே³ஹேSஸ்மின் புருஷ: பர: || 23

**உபத்ரஷ்டா** - *ஸர்வோத்தமராயிருந்து பார்ப்பவர்,* **பர்த்தா** - *அனைவரையும் தாங்குபவர், போஷிப்பவர்.* **போக்தா** - *ஸகல கர்ம பலன்களின் ஸாரத்தைப் புசிப்பவர்.* **மஹேஶ்வர:** - *பெரும் சக்திபடைத்தவர்,* **ச** - *மேலும்;* **பரமாத்மா** - *உத்தம சேதனர்.* **இதி** - *இவ்வித காரணங்களால்;* **அஸ்மின் தேஹே அபி உக்த:** *இந்த தேகத்தில் இருப்பவராயும் கூறப்பட்ட:* **பர:** - *ஜீவனைக்காட்டிலும் வேறானவரான;* **புருஷ:**- *பூர்ண ஷட்குணரான பகவான்;* **அநுமந்தா** - *புத்திபூர்வமாக ப்ரேரிப்பவர், செய்யவேண்டியதை அடிக்கடி விசேஷமாக ஆலோசிப்பவர் என்று;* **உக்த:** - *கூறப்படுகிறார்.*

**குறிப்பு:** உபத்ரஷ்டா முதலியவராக உள்ள பகவானால் தான் க்ஷேத்திரம் இயங்குகிறது.

சு. 20ல் கூறிய ப்ரகிருதி புருஷர்களை அறிவதின் பலனைக் கூறுகிறார்.

24. य एनं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह ।
सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥

ய ஏனம் வேத்தி புருஷம், ப்ரக்ருதிம் ச கு³ணைஸ்ஸஹ |
ஸர்வத²ா வர்த்தமானோSபி, ந ஸ பூ⁴யோSபி⁴ஜாயதே || 24

**ய:** *(தகுதியுள்ள) யார்;* **ஏனம்** - *இந்த;* **புருஷம்** - *ஜீவன், பரமாத்மா என்ற இருவரையும்;* **குணை: ஸஹ** - *முக்குணங் களோடு கூடிய;* **ப்ரக்ருதிம் ச** - *ஜடபிரகிருதி, சேதன ப்ரகிருதி என்ற இரண்டையும்;* **வேத்தி** — *முதலில் ஸாஸ்திரமூலமாக அறிந்து, பிறகு நேரில் தரிசிக்கிறானோ;* **ஸ:** - *அவன்;* **ஸர்வதா வர்த்தமான: அபி** - *எவ்விதமாய் இருப்பினும், (கவனக்குறை வினால் ஸாஸ்திரத்தை மீறி அகார்யத்தைச் செய்தாலும் கூட) பிரம்ம சூத்திரம் 3-4- 15);* **புன:** - *மறுபடியும்;* **ந அபிஜாயதே** - *பிறப்பதில்லை, முக்தியடைகிறான்.* **(ய ஏவம் வேத்தி** - *பிறர் பாடம்).*

பகவானை நேரில் தரிசிப்பதின் ஸாதனங்களைக் கூறுகிறார்.

25. ध्यानेन आत्मनि पश्यन्ति केचित् आत्मानमात्मना ।
अन्ये सांख्येन योगन कर्मयोगेन चापरे ॥

26. अन्ये तु एवमजानन्तः श्रुत्वाऽन्येभ्य उपासते ।
तेऽपि च अतितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ॥

த்[4]யானேன ஆத்மனி பஶ்யந்தி, கேசித் ஆத்மான மாத்மனா |
அன்யே ஸாங்க்யேன யோகே[3]ன, கர்மயோகே[3]ன சாபரே || 25

அன்யே து ஏவமஜானந்த:, ஶ்ருத்வாऽன்யேப்[4]ய உபாஸதே |
தேऽபி ச அதிதரந்த்யேவ, ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: || 26

*25.* **கீதா பாஷ்யத்தின்படி அர்த்தம்: கேசித் –** *(சிரவணம், மனனம் இவற்றுடன் கூடிய) சிலர்;* **த்யானேன –** *தியானத்தினால்;* **ஆத்மானம்** *- பரமாத்மாவை;* **ஆத்மனா** *- புத்தியினால்;* **ஆத்மனி —** *தேகத்தில்;* **பஶ்யந்தி** *- காண்கிறார்கள்.* **அன்யே** *- (தியானத்தில் அஶக்தர்களான) மற்றவர்கள்;* **ஸாங்க்யேன** *- வேதம் முதலிய ஸாஸ்திரங்களினால் பகவத் ஸ்வரூபத்தை அறிவது என்ற பரோக்ஷஞானமாகிற;* **யோகேன** *- உபாயத்தினாலும்;* **அபரே** *- (அதிலும் அசக்தர்களான) மற்றவர்கள்;* **கர்மயோகேன ச** *- கர்மானுஷ்டானமாகிற உபாயத்தினாலும்; (பரமாத்மாவைக் காண்கிறார்கள்.)*

குறிப்பு: பரோக்ஷ ஞானத்திற்குப் பிறகு தியானமும் அவசியம். கர்மானுஷ்டானத்திற்குப் பிறகு ஶ்ரவணமும், மனனமும், அதன் பிறகு தியானமும் அவசியம் என்று அறிக.

**கீதா தாத்பர்யத்தின் படி அர்த்தம்: கேசித்** *- சிலர், ரிஷிகள் (தம்முடைய ஸ்புரிக்கும் அறிவினாலும், மற்றவர்களிடம் கேட்டும், பகவானை அறிந்து);* **ஆத்மனா** *- மனதால்;* **ஆத்மனி** *- ஹ்ருதயத்தில்;* **ஆத்மானம்** *- பரமாத்மாவை;* **த்யானேன** *- தியானத்தினால்;* **பஶ்யந்தி** *- நேரில் பார்க்கிறார்கள்.* **அன்யே** *- மற்றவர்கள், தேவர்கள்;* **ஸாங்க்யேனயோகேன** *- தம்முடைய ஸ்புரிக்கும் அறிவாகிற உபாயத்தினால்; (தியானமில்லாமலேயே, ஹ்ருதயத்திலும், வெளியேயும், விஷ்ணுவைப் பார்க்கிறார்கள்).* **அபரே** *- மற்றும் சிலர், ராஜ சிரேஷ்டர்கள்;* **கர்மயோகேன** *- அசுவமேதயாகம் முதலிய கர்மங்களாகிற உபாயத்தினால், (நித்யம் பகவானை ஸ்மரித்து, அந்த யாகத்தில் ஹவிஸ்ஸைப் பெற வரும் பகவானைக் காண் கிறார்கள். இவர்களுக்கு கொஞ்சம் ஸ்புரிக்கும் ஞானமும் ஶ்ரவணமும் உண்டு.)*

*26.* **அன்யே து** *- மற்றவர்களான மனுஷ்யோத்தமர்களோ;* **ஏவம்** *- இம்மாதிரி (தம்முடைய ஸ்புரிக்கும் அறிவினால் பகவானை);* **அஜானந்த:** *- அறியாதவர்களாய்;* **அன்யேப்ய:** *- (குருக்கள் போன்ற) மற்றவர்களிடமிருந்து;* **ஶ்ருத்வா** *- கேட்டு (மனனமும் செய்து);* **உபாஸதே** *- தியானிக்கிறார்கள். (அதனால்*

*பகவானைக் காண்கிறார்கள்).* **தே அபி ச** – *அவர்களும் கூட;* **ஶ்ருதிபராயணா:** – *கேட்பதில் ஈடுபட்டவர்களாய்;* **ம்ருத்யும்** – *ஸம்ஸாரத்தை;* **அதி தரந்தி ஏவ** – *நிச்சயமாய்த் தாண்டுகிறார்கள். முக்தி அடைகின்றனர்.*

(1) உபாதான காரணமாயிருத்தல் (2) பிராகிருதமான தேக சம்பந்தத்தைப் பெற்றிருத்தல் (3) எங்கும் சமமாயிருத்தல் முறையே ஜடப்ரகிருதி, ஜீவன், விஷ்ணு ஆகியோரின் ஸ்வரூபம் என்பதை மீண்டும் கூறுகிறார்.

27. यावत्संजायते किंचित् सत्वं स्थावर जङ्गमम् ।
क्षेत्र क्षेत्रज्ञ संयोगात् तद्विद्धि भरर्तषभ ॥

யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித், ஸத்வம் ஸ்த[2]ாவர ஜங்கமம் |
க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோக[3]ாத், தத் வித்தி[4] ப[4]ரதர்ஷப[4] || 27

**பரதர்ஷப** – *பரத வம்சத்திற் சிறந்தவனே!;* **யாவத்** – *எத்தனை;* **கிஞ்சித்** – *எந்த;* **ஸ்தாவர ஜங்கமம்** – *அசையாப் பொருளும், அசையும் பொருளுமான;* **ஸத்வம்** – *ஜீவஸமூகம் (உண்டோ);* **தத்** – *அது;* **க்ஷேத்ர, க்ஷேத்ரஜ்ஞ** – *ஸம்யோகாத்* – *லக்ஷ்மீ, பரமாத்மா ஆகிய இருவர்களின் சேர்க்கையால்;* **ஜாயதே** – *வெளிப்படுகிறது;* **இதி** – *என்று;* **வித்தி** – *அறிவாயாக.*

(சு. 23ல்) எல்லா பிராணிகளிடமும் பகவான் இருக்கிறார் என்றார். தாரதம்யத்துடனும், துக்கத்துடனுமுள்ள பிராணிகளிடமுள்ள பகவானுக்கும், தாரதம்யமும் துக்கமும் ஏற்படுமே! என்றால், அவருடைய அற்புத சக்தியினால் ஏற்படாது என்கிறார்.

28. समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।
विनश्यत्सु अविनश्यन्तं यः पश्यति स पश्यति ॥

ஸமம் ஸர்வேஷு பூ[4]தேஷு, திஷ்ட[2]ந்தம் பரமேஶ்வரம் |
விநஶ்யத்ஸு அவிநஶ்யந்தம், ய: பஶ்யதி ஸ பஶ்யதி || 28

**ஸர்வேஷு** – *எல்லா;* **பூதேஷு** – *(தாரதம்யமுள்ள) பிராணிகளிடம்;* **திஷ்டந்தம்** – *இருக்கிற;* **பரமேஶ்வரம்** – *அற்புத சக்தி வாய்ந்த ஸ்ரீ ஹரியை;* **ஸமம்** – *தாரதம்ய மில்லாதவராய், எங்கும், எல்லா நற்குணங்களையுடையவராக;* **ய:** – *யார்;* **பஶ்யதி** – *அறிகிறானோ;* **விநஶ்யத்ஸு** – *சுகம், துக்கம், பிறப்பு, இறப்பு முதலிய தோஷங்களையுடைய;* **பூதேஷு** – *பிராணிகளிடம்;* **திஷ்டந்தம்** – *இருக்கிற (ஸ்ரீ ஹரியை);* **அவிநஶ்யந்தம்** – *மேற்படி தோஷங்களில்லாதவராக;* **(ய: பஶ்யதி** – *யார்*

அறிகிறானோ); **ஸ: – பஶ்யதி** - அவன்தான் உண்மையான ஞானியாவான்.

**குறிப்பு:** (1) நாஶம் = தோஷம் என்ற அர்த்தத்தைக் கவனிக்க.

உண்மையறிவின் பலனைக் கூறுகிறார்.

29. समं पश्यन्हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।
न हिनस्ति आत्मनाऽऽत्मानं ततो याति परां गतिम् ॥

ஸமம் பஶ்யன் ஹி ஸர்வத்ர, ஸமவஸ்தித மீஶ்வரம் |
ந ஹினஸ்தி ஆத்மனாऽத்மானம், ததோ யாதி பராம் க$^3$திம் || 29

**ஸர்வத்ர** – எங்கும்; **ஸம் அவஸ்திகம்** – நன்கு அதாவது, தோஷமற்றவராயும், நற்குணங்களனைத்தும் பொருந்தியவராயும், இருக்கிற; **ஈஶ்வரம்** – அற்புத ஶக்தி வாய்ந்த விஷ்ணுவை; **ஸமம்** – ஒரேவிதமாயிருப்பவராக, (ப்ரம்ம சூத்திரம் 3–2–11ல் கூறியபடி); **பஶ்யன்** – அறிபவன்; **ஆத்மனா** – புத்தியினால்; **ஆத்மானம்** – தன்னை; **ந ஹினஸ்தி** – நாஶம் செய்து கொள்கிறதில்லை. அதாவது நரகத்தில் விழும்படி செய்து கொள்வதில்லை. **ஹி** – பிரசித்தம். (5–19, 9–29 பார்க்க)

(சு.23ல்) நல்ல அல்லது கெட்ட பிறவிகளுக்குப் பகவான் ஸ்வதந்திர காரணம் எனப்பட்டது. ஆகவே அவர் ஜீவனின் கர்மங்களைத் தழுவாது தம்மிஷ்டப்படி பிறவிகளைத் தருவதால், பக்ஷபாதமுள்ளவர், கருணையில்லாதவர் என்ற தோஷம் உள்ளவராவார். கர்மங்களை யொட்டியே தருகிறார் என்றால் அவருக்கு ஒரு கர்த்தா உண்டுபண்ணினவர் உண்டு. அவர் ஸ்வதந்திரர் அல்ல என்று ஆகும். என்றால் பதிலளிக்கிறார்.

30. प्रकृत्य एव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।
यः पश्यति तथाऽऽत्मानं अकर्तारं स पश्यति ॥

ப்ரக்ருத்ய ஏவ ச கர்மாணி, க்ரியமாணானி ஸர்வஶ: |
ய: பஶ்யதி தத$^2$ாऽத்மானம், அகர்த்தாரம் ஸ பஶ்யதி || 30

**ய:** – யார்; **ச ஏவ** – முன்சுலோகத்தில் கூறிய விஷ்ணுவே; **ப்ரக்ருத்ய** – (1) ஜீவனின் அநாதியான பூர்வ கர்மத்தை யொட்டியே (2) ப்ரக்ருத்யா (எனப் பதம் பிரித்து) - பிரகிருதியை நிமித்தமாகக் கொண்டு; **க்ரியமாணானி** – செய்விக்கப்படும்; **ஸர்வஶ: கர்மாணி** – எல்லா கர்மங்களையும்; **ததா** – அவ்வாறே; **ஆத்மானம் அகர்த்தாரம்** – (1) பரமாத்மாவை உண்டு பண்ணினவர் கிடையாது என்றும் (2) தன்னை ஸ்வதந்திர

கர்த்தா அல்ல என்றும்: **பஶ்யதி** - *அறிகிறானோ:* **ஸ:**- அவன்; (**ஆத்மானம்** - *பரமாத்மாவை*); **பஶ்யதி** - *காண்கிறான்.*

**குறிப்பு:** விஷ்ணு ஜீவனின் கர்மங்களை யொட்டியே பல பிறவிகளைத் தருகிறார். என்பதால், அவர் ஸ்வதந்திரரல்ல என்று ஆகாது. ஏனெனில், அந்தக் கர்மங்களும் அவருக்கு வஸப்பட்டவையே. மேலும் அவை உண்டுபண்ணினவர் இல்லை என்றதாலும் அவருடைய ஸ்வாதந்தர்யத்திற்கு ஹானியில்லை.

பகவான் அனைத்தையும் ப்ரேரிப்பவர் என்ற அறிவு மாத்திரம் போதாது. 1-4-23 பிரம்ம சூத்திரத்தில் கூறியபடி, அனைத்திற்கும் ஆதாரமாயுமிருக்கிறார் என்று அறியவேண்டும் என்கிறார்.

31. यदा भूतपृथग्भावं एकस्थं अनुपश्यति ।
तत एव च विस्तारं ब्रह्म संपद्यते तदा ॥

யத³ா பூ⁴த ப்ருத²க்ப⁴ாவம், ஏகஸ்த²ம் அநுபஶ்யதி |
தத ஏவ ச விஸ்தாரம், ப்ரஹ்ம ஸம்பத்யதே தத³ா || 31

**பூத, ப்ருதக் பாவம்** - *ஜீவர்களின், பேதத்தை;* **ஏகஸ்தம்** - *ஒருவராகிய விஷ்ணுவிடம் இருப்பதாக, அதாவது, தமக்குள் பரஸ்பரம் பேதமுடையவர்களும், தமக்கும், விஷ்ணுவுக்கும் பேதமுடையவர்களுமான ஜீவர்கள் ஒரே விஷ்ணுவை ஆதார மாகக்கொண்டுள்ளனர் என்பதையும்;* **தத: ஏவ** - *அந்த விஷ்ணுவிடமிருந்தே;* **விஸ்தாரம் ச** - *(ஜீவர்களின்) உற்பத்தி யையும்;* **யதா** - *எப்பொழுது;* **அநுபஶ்யதி** - *தாரதம்யத்தை அநுஸரித்து அறிகிறானோ;* **ததா** - *அப்பொழுது;* **ப்ரஹ்ம** - *குணபூர்ணரான விஷ்ணுவை;* **ஸம்பத்யதே** - *நன்கு அடைகிறான்.*

சு. 28ல், எல்லா ப்ராணிகளிடமும் உள்ள பகவானுக்கு நாசமில்லை என்றார். அதன் காரணங்களை இங்கு விளக்குகிறார்.

32. अनादित्वात् निर्गुणत्वात् परमात्माऽयं अव्ययः ।
शरीरस्थोऽपि कौन्तेय नकरोति न लिप्यते ॥

அநாதி³த்வாத் நிர்கு³ணத்வாத், பரமாத்மாSயம் அவ்யய: |
ஶரீரஸ்தே²ாSபி கௌந்தேய, ந கரோதி ந லிப்யதே || 32

**கௌந்தேய** - *குந்தீ புத்திரனே !;* **அயம் பரமாத்மா** - *உத்தம சேதனரான இந்த விஷ்ணு;* **சரீரஸ்த: அபி** - *ப்ராணிகளின் தேகத்தில் இருந்த போதிலும்;* **அநாதித்வாத்** - *பிறப் பில்லாதவரானதாலும்;* **நிர்குணத்வாத்** - *(ஸத்வ ரஜஸ்தமோ) குணங்களில்லாதவரானதாலும்;* **அவ்யய;** - *மாறுதலும்,*

நாமமும் இல்லாதவர். **ந கரோதி** - (உலகத்தார் போன்று காரியங்களைச்) செய்வதில்லை. ஆகவே, **ந லிப்யதே** - (கவலை, துக்கம், தாபத்ரயம் முதலியவைகளுடன்) சம்பந்தப் படுவதில்லை.

**2-ம் அர்த்தம்:- ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம** - இந்த எல்லாம் பிரம்மமே (விஷ்ணுவே); **புருஷ ஏவ இதம் ஸர்வம்** - இந்த எல்லாம் புருஷ ரூபியான விஷ்ணுவே; என விஷ்ணுவும், சகல ஜீவ ஜடப்பொருள்களும் ஒன்றே; என்று வேதங்களும்; அவ்வாறே சில மதத்தினரும் கூறுவதால்; முன் சுலோகத்தில் கூறிய ஜீவ பரஸ்பரபேதமும், ஜீவேச்வர பேதமும் எப்படிப் பொருந்தும்? என்றால், வேதங்களின் தாத்பர்யத்தை அறியாததால் தோன்றும் ஐக்யத்தைக் காரணங்களுடன் நிராகரிக்கிறார்.

**அயம் பரமாத்மா** - உத்தமசேதனரான இந்த **விஷ்ணு; சரீரஸ்ய: அபி** - பிராணிகளின் தேகத்தில் இருந்த போதிலும்; **சரீரஸ்த: அபி** - (அந்த தேகத்தின் அபிமானியாக இருந்து, துக்கம் முதலியவற்றை அநுபவித்துவரும்) ஜீவனாகக்கூட; **ந** - ஆவதில்லை, ஜடமாக ஆவதில்லை என்று சொல்லத் தேவையில்லை. ஏனெனில், **அநாதித்வாத்** - தேக ஸம்பந்த மாகிற பிறப்பில்லாதவர். **நிர்குணத்வாத்** - முக்குணங்களில் லாதவர். **அவ்யய:** - தேக ஸம்பந்தத்தால் ஏற்படும் மாறுதலும் நாசமுமில்லாதவர். **கரோதி** - (எல்லாவற்றையும்) செய்கிறார். ஆயினும், **ந லிப்யதே** - அவற்றின் பலனை அநுபவிப்பதில்லை. (ஆக ஐந்து காரணங்கள்).

**குறிப்பு:** ஜீவனோ இந்த ஐந்துக்கும் மாறானவன். தேக சம்பந்தமாகிற பிறப்பையுடையவன். ஆகவே, முக்குணங்களுடையவன். தேகநாசத்தால் ஏற்படும் நாசமுடையவன். எதையும் ஸ்வதந்திரமாகச் செய்யும் சக்தியற்றவன். கர்ம பலனை அனுபவிப்பவன். ஆகவே முன் ச்லோகத்தில் கூறிய ஜீவபரஸ்பர பேதத்தையும், ஜீவேச்வர பேதத்தையும், பிற மதத்தினரும் ஒப்ப வேண்டும். ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம - முதலிய சுருதிகளின் உண்மையான அர்த்தம் - இந்த எல்லாம் விஷ்ணுவின் அதீனமானது, விஷ்ணுவினால் வியாபிக்கப்பட்டுள்ளது என்பதே (4-24; 7-19; 11-40).

எங்கும் உள்ள விஷ்ணுவுக்குக் கர்ம பலஸம்பந்த மின்மையை உதாரணத்தால் விளக்குகிறார்.

33. यथा सर्वगतं सौक्ष्मयात् आकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथाऽऽत्मा नोपलिप्यते ॥

யத$^2$ா ஸர்வக$^3$தம் ஸௌக்ஷ்ம்யாத், ஆகாஶம் நோபலிப்யதே |
ஸர்வத்ராவஸ்தி$^2$தோ தே$^3$ஹே, தத$^2$ாऽத்மா நோபலிப்யதே || 33

**யதா** – *எவ்வாறு;* **ஸர்வகதம்** – *சேறு, தூசி முதலிய எல்லா இடங்களிலுமுள்ள;* **ஆகாஶம்** – *இடைவெளி* (Space); **ஸௌக்ஷ்ம்யாத்** -*நுட்பமாய் இருப்பதால்;* **ந உபலிப்யதே** – *(சேறு முதலியவற்றால்) ஒட்டுவதில்லையோ;* **ததா** — *அவ்வாறே;* **ஸர்வத்ர** – *உயர்ந்த, தாழ்ந்த எல்லா;* **தேஹே** – *சரீரங்களில்;* **அவஸ்தித:** – *இருக்கிற:* **ஆத்மா** – *விஷ்ணு;* **ந உபலிப்யதே** *(கர்மபலனால்) ஒட்டுவதில்லை. (9-6)*

குறிப்பு: பகவான், பங்கஜம் என்ற தாமரைப்பூவை சேற்றில் உண்டாகும்படிச் செய்கிறார். அது சேற்றில் உண்டானாலும் சேறு அதில் ஒட்டுவதில்லை அல்லவா! அவரால் சிருஷ்டிக்கப்பட்ட பூவே ஒட்டாதிருக்க, அதைச் சிருஷ்டித்தவருக்கு ஒட்டு உண்டா? அஸங்கோ ஹ்யயம் புருஷ:|

பகவான் க்ஷேத்திரங்களை அறிந்தவர் என்ற ஞானம் ஏற்பட, க்ஷேத்திரம் முதலியவற்றைக் கூறினார். அவர் க்ஷேத்திரஜ்ஞராக இருப்பதை உதாரணத்தால் விளக்குகிறார்.

34. यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥

யத$^2$ா ப்ரகாஶயத்யேக:, க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி: |
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ தத$^2$ா க்ருத்ஸ்னம், ப்ரகாஶயதி ப$^4$ாரத$^4$ || 34

**பாரத** – *பிரகாசமாகிற ஞானத்தில் ஸந்தோஷிப்பவனே!* **யதா** – *எவ்வாறு;* **ஏக: ரவி:** – *ஒரே சூரியன்;* **இமம்** – *இந்த;* **க்ருத்ஸ்னம் லோகம்** – *உலகம் முழுவதையும்;* **ப்ரகாஶயதி** - *விளங்கச் செய்கிறதோ;* **ததா** – *அவ்வாறு;* **(ஏக: – *ஒரே):* க்ஷேத்ரீ** *– 25 தத்துவங்களுக்குள் இருக்கும் பரமாத்மா;* **க்ருத்ஸ்னம் க்ஷேத்ரம்** – *ஜீவ ஜடப்பொருள்களாகிற இருப்பிடங்கள் முழுவதையும்;* **ப்ரகாசயதி** – *விளங்கச் செய்கிறார்.*

*பலனைக்கூறி இந்த அத்தியாயத்தின் அர்த்தத்தை முடிக்கிறார்.*

35. क्षेत्र क्षेत्रज्ञयोरेवं अन्तरं ज्ञानचक्षुषा ।
भूतप्रकृति मोक्षं च ये विदुः यान्ति ते परम् ॥

க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோரேவம், அந்தரம் ஜ்ஞானசக்ஷுஷா |
பூ$^4$த ப்ரக்ருதிமோக்ஷம் ச, யே விது$^3$: யாந்தி தே பரம் || 35

**யே** – *எவர்கள்;* **ஏவம்** – *இம்மாதிரி கூறப்பட்ட;* **க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ:** – *க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன் ஆகிய இரண்டுக்குமுள்ள;* **அந்தரம்** – *பேதத்தையும்;* **பூத ப்ரக்ருதி மோக்ஷம் ச = பூத** – *ஐந்து பூதங்களிலிருந்தும்,* **ப்ரக்ருதி** – *ஜடபிரகிருதியிலிருந்தும், அல்லது,* **பூத** – *ஜீவர்களுக்கு,* **ப்ரக்ருதி** – *ஜடபிரகிருதியிலிருந்து,* **மோக்ஷம்** – *மோக்ஷ ஸாதனம் – விடுதலையைத் தரும். சு. 8 முதல் 13 வரையில் கூறப்பட்ட 20 மோக்ஷ ஸாதனங்களையும்;* **ஜ்ஞான சக்ஷுஷா** – *அறிவுக் கண்ணால் (விவேகத்தால்);* **விது:** – *அறிகிறார்களோ;* **தே** – *அவர்கள்;* **பரம்** – *உத்தமமான பிரம்மத்தை (விஷ்ணுவை);* **யாந்தி** – *அடைகின்றனர்.*

**குறிப்பு:** மோக்ஷம் = முக்தி: என்று தோன்றும். ஆனால், இங்கு முக்தி ஸாதனம் என்ற அர்த்தத்தைக் கவனிக்க.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे क्षेत्रक्षेत्रज्ञ योगो नाम त्रयोदशोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம
வித்யாயாம், யோக சாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ யோகோ நாம த்ரயோதசோऽத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ யோகம்*
*என்ற பதின்மூன்றாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 14
# குணத்ரய விபாக யோகம்

(27 சுலோகங்கள்)

## பதிநான்காம் அத்தியாயத்தின் சுருக்கம்

ஸம்ஸார பந்தத்திலிருந்து மோக்ஷமடைய, நிஷ்காம கர்மயோகம், தியானயோகம் முதலிய ஸாதனங்களை முன் கூறினார். அவற்றின் அங்கங்களை இங்கு விஸ்தரிக்கிறார்.

ஸம்ஸார பந்தத்திற்குக் காரணம் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் சம்பந்தமாகும். ஜடபிரகிருதியிலிருந்து இம் மூன்று குணங்கள் சிருஷ்டி காலத்தில் உண்டாகும்போது, அதன் அபிமானியான லக்ஷ்மீயும், ஸ்ரீதேவி, பூதேவி, துர்க்காதேவி என்ற மூன்று ரூபங்களை எடுத்துக்கொள்கிறாள்.

ஸ்ரீதேவி நிர்மலமான ஸத்வ குணத்தின் அபிமானியாய் இருந்து, சுகத்தையும் ஞானத்தையும் தந்து, நானே ஸுகீ, நானே ஞானீ என்ற பற்றுதலை உண்டுபண்ணி, தேவ ஜீவர்களைக் கட்டுகிறாள். நம்மிடம் சுகமும், ஞானஒளியும், விளங்கும்போது ஸத்வகுணம் பெருகியுள்ளது என அறியவேண்டும். அப்போது மரணமடைந்தால், மறுபிறப்பில் விஷ்ணு ஞானியின் குலத்தில் பிறந்து முக்திபெற்று ஆனந்தமடைய ஹேதுவாகும்.

பூதேவி, ரஜோகுணத்தின் அபிமானியாயிருந்து, ஆசையையும், பற்றையும் தந்து கர்மத்தில் தூண்டி மனித ஜீவர்களைக் கட்டுகிறாள். நம்மிடம் ஆசை, முயற்சி முதலியன விளங்கும் போது ரஜோகுணம் பெருகியுள்ளது என அறியவேண்டும். அப்போது மரணமடைந்தால், மறுபிறப்பில் காம்யகர்மிகளின் குலத்தில் பிறந்து சுகதுக்கங்களை அநுபவிக்க ஹேதுவாகும்.

துர்க்காதேவி தமோ குணத்தின் அபிமானியாயிருந்து சோம்பல், துக்கம், விபரீத ஞானம் முதலியவற்றைத்தந்து தைத்ய ஜீவர்களைக் கட்டுகிறாள். நம்மிடம் சோம்பல், துக்கம் முதலியன விளங்கும்போது, தமோகுணம் பெருகியுள்ளது என அறியவேண்டும். அப்போது மரணமடைந்தால் மறுபிறப்பில் விபரீத ஞானிகளான தைத்யர்களின் குலத்தில் பிறந்து அந்தந்தமஸ் என்ற நித்ய நரகத்தை அடைய ஹேதுவாகும்.

இவ்வித முக்குணங்களைத் தாண்டியவன் குணாதீதன் எனப்படுவான். அவன் பகவானிடம் இடைவிடாது பக்திபுரிந்து, லக்ஷ்மீயை அடைந்து, அவளுடைய அருளைப்பெற்று பகவானை யடைவான்.

*2-39ல்* பகவத்ஞான ஸாதனத்தைக் கூறுவதாகச் சொன்னார். ஆறாம் அத்தியாயம் முடிய நிஷ்காம கர்மானுஷ்டானம், தியான யோகம் என்ற ஞான ஸாதனங்களை, ஆசை முதலியவற்றைத் துறத்தல் போன்ற அங்கங்களுடன் கூறினார். அந்த அங்கங்களை இது முதல் ஐந்து அத்தியாயங்களில் விஸ்தரிக்கப் போகிறார். *13-22ல்* ஸம்ஸார பந்தத்தின் காரணம் ஸத்வ ரஜஸ்தமோ குணங்களின் சம்பந்தம் என்றார். அந்தக் குணங்கள் ஜீவர்களை எவ்வாறு கட்டுகின்றன என்பதையும், அவற்றைத் தாண்டும் உபாயத்தையும், இந்த அத்தியாயத்தில் கூறுகிறார். *13-27ல்* உலகிலுள்ள பொருள்களனைத்தும், க்ஷேத்ரம் (லக்ஷ்மீ), க்ஷேத்ரஜ்ஞர் (பரமாத்மா) ஆகிய இருவர்களின் சேர்க்கையால்தான் வெளிப்படுகிறது; என்று கூறியதையும் விளக்குகிறார். *3-5ல்* முக்குணங்களைப் பற்றிச் சுருக்கமாகக் கூறியதை இங்கு விஸ்தாரமாகக் கூறுகிறார்.

ஶ்ரீ भगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் கூறப்போகும் விஷயத்தில் சிரத்தையை யுண்டாக்க **இரு ஶ்லோகங்களில்** அதைப் புகழ்கிறார்.

1. परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम् ।
यत् ज्ञात्वा मुनयस्सर्वे परां सिद्धिं इतो गताः ॥

பரம் பூ[4]ய: ப்ரவக்ஷ்யாமி, ஜ்ஞானானாம் ஜ்ஞானமுத்தமம் |
யத் ஜ்ஞாத்வா முனயஸ்ஸர்வே, பராம் ஸித்தி[4]ம் இதோ க[3]தா: || 1

**பூய:**- மறுபடியும்; **பரம்** - மற்றொரு; **ஜ்ஞானனாம்** - ஜ்ஞாதவ்யானாம் - அறியத் தகுந்தவைகளிடையே; **உத்தமம்** - மேலான; **ஜ்ஞாதவ்யம்** - அறியத் தகுந்த விஷயத்தை; **ப்ரவக்ஷ்யாமி** - நன்கு கூறுகிறேன். **யத்** - அதை; **ஜ்ஞாத்வா** - அறிந்து; **முனய:** -மனனத்தில் ஈடுபட்ட; **ஸர்வே** - அனைவரும்; **இத:** - இந்த ஸம்ஸாரத்திலிருந்து; **பராம்** - உயர்ந்த; **ஸித்திம்** - மோக்ஷத்தை; **கதா:** - அடைந்துள்ளனர்.

அவர்கள் மோக்ஷத்தில் எவ்வாறு உள்ளனர் என்பதை விளக்குகிறார்.

2. इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥

இத[3]ம் ஜ்ஞானமுபாஶ்ரித்ய, மம ஸாத[4]ர்ம்ய மாக[3]தா: |
ஸர்க்[3]கேऽபி நோபஜாயந்தே, ப்ரளயே ந வ்யத[2]ந்தி ச || 2

**இதம் ஜ்ஞானம்** – *ஜ்ஞாதவ்யம் – இந்த (கூறப்போகும்) அறியத்தகுந்த விஷயத்தை;* **உபாஶ்ரித்ய** – *சம்பாதித்து;* **மம** – *என்னுடைய;* **ஸாதர்ம்யம்** – *ஸாம்யத்தை அல்லது ஸாரூப்யத்தை* **ஆகதா:** – *அடைந்துள்ளனர். எவ்வித ஸாம்யம்?* **ஸர்க்கே அபி** – *சிருஷ்டியிலும்;* **ந உபஜாயந்தே** – *பிறப்பதில்லை.* **ப்ரளயே ச** – *பிரளயத்திலும்;* **ந வ்யதந்தி** – *மரணமாகிற துக்கத்தை அடைவதில்லை. ஸம்ஸார பந்தத்தை அடைவதில்லை.*

குறிப்பு: இங்கு பரமம் ஸாம்யமுபைதி – ஜீவன் பகவானின் சிறந்த ஸாம்யத்தை அடைகிறான் என்ற ஶ்ருதிக்கு. பிறப்பு, இறப்புகள் இல்லாதிருப்பதில் ஸாம்யமே தவிர ஸம்பூர்ண ஸாம்யமல்ல என்ற அர்த்தம் கூறப்படுகிறது. இந்த ஸாம்யம், ஸம்ஸாரத்திலும், ஜீவஸ்வரூபத்திலேயே இருப்பினும், அது லிங்கதேகத்தால் மூடப்பட்டுள்ளது. மோக்ஷத்திலோ லிங்கதேகம் விலகி அந்த ஸாம்யம் வியக்தமாகிறதால், சிறந்தது எனப்படுகிறது. மேலும், ஜடதேஹமின்மை, துக்கமின்மை, எப்போதும் ஸுகாநுபவம் தனக்குரிய சுகத்தின் நிறைவு, பந்தமின்மை, ஸத்யகாமத்வம் ஆகியவற்றிலும் ஸாம்யம் எனலாம்.

*லிங்கதேக: பரானந்த: துக்கா பாவஸ் ஸமா மதா |*

தைத்திரீயம் முதலிய ஶ்ருதிகளிலும், ஸ்மிருதிகளிலும், மோக்ஷத்தில் ஆனந்தத்தில் தாரதம்யம் கூறப்பட்டுள்ளது. அதிகாரிகள் பலவகையினராதலின், அவர்களின் ஸாதனங்களில் தாரதம்ய மிருப்பதால், மோக்ஷத்திலும் தாரதம்யமே தவிர ஸம்பூர்ண ஸாம்ய மில்லை.

பரமம் ஸாம்யம் என்பதை அழுத்தமாகக்கூறும் ராமானுஜ மதத்திலும், முக்தஜீவன் அணு சேஷன் (தாஸன்), பரதந்திரன் என்றும்; பகவான் முறையே வியாப்தன், சேஷி (யஜமானன்) ஸ்வதந்திரன் என்றும் ஜீவேசுவர தாரதம்யத்தையும்; விஷ்வக் ஸேனர் முதலிய ஜீவர்களைக்காட்டிலும், மற்ற ஜீவர்கள் தாழ்ந்தவர்கள் என்ற ஜீவர்களிடையே தாரதம்யத்தையும் ஒப்பியுள்ளனர்.

(13-27) க்ஷேத்ரம் (லக்ஷ்மீ), க்ஷேத்ரஜ்ஞர் (பரமாத்மா) ஆகிய இருவர்களின் சேர்க்கையால், உலக சிருஷ்டியை விவரிக்கிறார்.

3. मम योनिः महद्ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम् ।
संभवः सर्वभूतानां ततो भवति भारत ॥

மம யோனிர் மஹத் ப்ரஹ்ம, தஸ்மின் க$^{3}$ர்ப்ப$^{4}$ம் த$^{3}$த$^{4}$ாம்யஹம் |
ஸம்ப$^{4}$வஸ் ஸர்வபூ$^{4}$தானாம், ததோ ப$^{4}$வதி ப$^{4}$ாரத || 3

**பாரத** – *பரதவம்சத்தில் பிறந்தவனே!;* **மஹத் ப்ரஹ்ம** – *சேதன பிரகிருதியான மஹாலக்ஷ்மீ;* **மம** – *என்;* *யோனி; மனைவி.* **அஹம்** – *நான்;* **தஸ்மின்** – *அவளிடம்;* **கர்ப்பம்** – *கருவை;* **ததாமி** – *வைக்கிறேன். அதாவது என் வயிற்றிலுள்ள ப்ரகிருதி தவிர மற்ற 24 தத்வங்களின் அம்சங்களுடன் கூடிய ஜீவராசிகளை, வீர்யத்தின்மூலம் வெளிப்படுத்தி லக்ஷ்மீயின் வயிற்றில் வைக்கிறேன்.* **தத:** – *அதிலிருந்து;* **ஸர்வ பூதானாம்** – *பிரம்மா முதலிய எல்லா ஜீவர்களுக்கும்;* **ஸம்பவ:** – *தேக ஸம்பந்தமாகிற பிறப்பு;* **பவதி** – *ஏற்படுகிறது. (பிரம்ம சூத்திரம் 2-3-18, 19).*

**குறிப்பு:** ஜீவர்கள் ஸ்வருபத்தில் அநாதி நித்யர்களாய் இருப்பினும், ஸ்தூலதேகத்தின் சம்பந்தமே அவர்களின் பிறப்பாகும். அந்த தேகத்தின் நாசமே மரணமாகும்.

ஆதிசிருஷ்டியில் மாத்திரமல்ல, எப்போதுமே இவ்விருவர்களும் பிறப்பின் காரணமானவர்கள் என்கிறார்.

4. सर्वयोनिषु कौन्तेय मूर्तयः संभवन्ति याः ।
तासां ब्रह्म महत् योनिः अहं बीजप्रदः पिता ॥

ஸர்வயோனிஷு கௌந்தேய, மூர்த்தயஸ் ஸம்ப$^{4}$வந்தி யா: |
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனி: அஹம் பீ$^{4}$ஜப்ரத$^{3}$: பிதா || 4

**கௌந்தேய** – *குந்தீ புத்திரனே!;* **ஸர்வயோனிஷு** – *(தேவர், மனிதர், பசு, பக்ஷி முதலிய) எல்லாப் பிறவிகளிலும்;* **யா: மூர்த்தய:** *எந்த தேகங்கள்;* **ஸம்பவந்தி** – *உண்டா கின்றனவோ;* **தாஸாம்** – *அவைகளுக்கு;* **மஹத் ப்ரஹ்ம** – *மஹாலக்ஷ்மீ;* **யோனி:–** *(வயல்போன்ற காரணமானவள்,* **அஹம்** – *நான்;* **பீஜப்ரத:** – *விதைகளைத்தரும்;* **பிதா** – *தந்தையானவன்.*

**குறிப்பு:** லக்ஷ்மீ நாராயணர்கள் உலகமனைத்திற்கும் தாய் தந்தையர்களாவர்.

இங்கு முக்குணங்களையும், அவை ஜீவர்களைக் கட்டும் விதத்தையும் கூறுகிறார்.

5. सत्वं रजस्तम इति गुणाः प्रकृति संभवाः ।
निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥

ஸத்வம் ரஜஸ் தம இதி, கு$^{3}$ணா: ப்ரக்ருதி ஸம்ப$^{4}$வா: |
நிப$^{3}$த்$^{4}$னந்தி மஹாப$^{3}$ாஹோ, தே$^{3}$ஹே தே$^{3}$ஹினமவ்யயம் || 5

**மஹாபாஹோ** - பெருத்த தோள்களை உடையவனே!; 1. **ப்ரக்ருதி ஸம்பவா:** - ஜட பிரகிருதியிலிருந்து உண்டாகும், அதன் அம்சங்களான; **ஸத்வம், ரஜஸ் தம: இதி குணா:**- ஸத்வ குணம், ரஜோகுணம், தமோகுணம் என்பவை: 2. **ப்ரக்ருதி ஸம்பவா:** - சேதன பிரகிருதியான லக்ஷ்மீயிடமிருந்து வெளிப் படும். **ஸத்வம்** - நற்குணங்கள் பொருந்தியதால், ஸத்வம் எனப்படுபவளும், ஸத்வகுணத்தின் அபிமானியுமான, ஸ்ரீ தேவி; **ரஜ:**- ரஞ்ஜனாத் - முன்னர் விளங்காதிருப்பதைச் சிருஷ்டியால் விளங்கச் செய்வதால், ரஜஸ் எனப்படுபவளும், ரஜோ குணத்தின் அபிமானியுமான பூதேவி, **தம:**- (தமு க்லபனே) ஸம்ஸாரத்தைத் தந்து ஜீவர்களை வாட்டுவதால் தமஸ் எனப்படுபவளும்; தமோகுணத்தின் அபிமானியுமான, துர்க்காதேவி என்ற லக்ஷ்மீயின் மூன்று ரூபங்கள்; **தேஹே (ஸ்திதம்)** - தேகத்திலிருப்பவர்களும்; **அவ்யயம்** - ஸ்வரூபத்தில் மாறுதல் இல்லாதவர்களுமான; **தேஹினம்** - ஜீவர்களை; **நிபத்னந்தி** - இறுகக் கட்டுகின்றனர்.

**குறிப்பு:** குணா: கயிறுகள் என்ற அர்த்தமும் உண்டு. சிலேடையால் கட்டுவதற்குப் பொருத்தமானவை எனலாம். லக்ஷ்மீயின் மேற்படி மூன்று ரூபங்களும் எல்லோரையும் கட்டுபவை. ஆயினும், ஸ்ரீதேவி தேவர் களையும், பூதேவி மனுஷ்யர்களையும், துர்க்காதேவி தைத்யர்களையும் விசேஷமாகக் கட்டுபவர்கள் என அறிக. தேகத்தினுள் ஜீவர்களை என்றதால், முக்தியடைந்த ஜீவர்களை கட்டுவதில்லை என அறிக.

6. तत्र सत्वं निर्मलत्वात् प्रकाशक मनामयम् ।
सुखसंगेन बध्नाति ज्ञानसंगेन चानघ ॥

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத், ப்ரகாஶக மநாமயம் |
ஸுக²ஸங்கே³ன ப³த்⁴னாதி, ஜ்ஞானஸங்கே³ன சாநக⁴ || 6

**அநக** - பாபமற்றவனே!; **தத்ர** - (1) அந்த மூன்று குணங்களில் (2) அந்த மூன்று தேவிகளில்; **ஸத்வம்** - (1) ஸத்வகுணம் (2) ஸ்ரீதேவி; **நிர்மலத்வாத்** - தோஷமில்லா திருப்பதால்; **அநாமயம்** - வியாதி முதலியவற்றால் உபத்திர விக்காமலும்; **ப்ரகாஶகம்** - தத்வ ஞானத்தை உண்டு பண்ணியும்; **ஸுகஸங்கேன** - நான்ஸுகீ, என்று; சுகத்தில் பற்றுதலையும்; **ஜ்ஞான ஸங்கேன ச** - நான் ஞானீ என்று தத்வ ஞானத்தில் பற்றுதலையும் உண்டுபண்ணி; **பத்னாதி** - (தேவர்களை) (1) கட்டுகின்றது (2) கட்டுகிறாள்.

7. रजो रागात्मकं विद्धि तृष्णासंग समुद्भवम् ।
तन्निबध्नाति कौन्तेय कर्मसंगेन देहिनम् ॥

ரஜோ ராக³ாத்மகம் வித்தி⁴, த்ருஷ்ணா ஸங்க³ ஸமுத்ப⁴வம் |
தந் நிப³த்⁴னாதி கௌந்தேய, கர்மஸங்கே³ன தே³ஹினம் || 7

**கௌந்தேய** – *குந்தீ புத்திரனே!*; **ரஜ: –** *(1) ரஜோ குணத்தை (2) பூதேவியை;* **ராக ஆத்மகம்** – *சிருஷ்டியால் விளங்கச்செய்யும் ஸ்வரூபமுடையதாயும்; (2)* **த்ருஷ்ணாஸங்க ஸமுத்பவம்** – *த்ருஷ்ணா – அடையாத பொருளில் ஆசை யையும்,* **ஸங்க** – *அடைந்த பொருளில் பற்றையும்,* **ஸமுத்பவம்** – *உண்டுபண்ணுவதாயும்;* **வித்தி** – *அறிவாயாக.* **தத்** — *அவ் விருவித ரஜோகுணம்;* **தேஹினம்** – *மனுஷ்ய ஜீவர்களை;* **கர்ம ஸங்கேன** – *கர்மங்களில் பற்றை உண்டுபண்ணி;* **நிபத்னாதி** – *இறுகக் கட்டுகிறது.*

8. तमस्तु अज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिः तन्निबध्नाति भारत ॥

தமஸ்து அஜ்ஞானஜம் வித்தி⁴, மோஹனம் ஸர்வ தே³ஹினாம் |
ப்ரமாத³ாலஸ்ய நித்ராபி⁴:, தந்நிப³த்⁴னாதி பாரத || 8

**பாரத** – *பரத குலத்திற் பிறந்தவனே!;* **தம: து** – *(1) தமோகுணத்தையோ (2) துர்க்கா தேவியையோ;* **அஜ்ஞானஜம்** – *அறிவின்மையை உண்டுபண்ணுவதாயும்;* **ஸர்வதேஹினாம்** – *எல்லா ஜீவர்களுக்கும்;* **மோஹனம்** – *விபரீதஞானத்தை யுண்டுபண்ணுவதாயும்;* **வித்தி** – *அறிவாயாக.* **தத்** – *அவ்விருவித தமோகுணம்;* **ப்ரமாத ஆலஸ்ய நித்ராபி:**– *கவனமின்மை, சோம்பல், தூக்கம் இவற்றை உண்டுபண்ணி;* **நிபத்னாதி** – *(தைத்யர்களை) இறுகக் கட்டுகிறது.*

**குறிப்பு: துர்க்காதேவி, யசோதையின் குழந்தையாகப் பிறந்து, கோகுலத்திலும் மதுரா பட்டணத்திலும் உள்ள அனைவருக்கும் தூக்கத்தை உண்டுபண்ணி, வஸுதேவன், குழந்தையான ஸ்ரீ கிருஷ்ணரை, கோகுலத்திற்குக் கடத்திச் சென்று, தன்னை மதுரைக்கு எடுத்து வரும்படி உதவினாள்.**

*மூன்று குணங்களின் மேற்கூறிய தன்மையையே உறுதிப்படுத்துகிறார்.*

9. सत्वं सुखे संजयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे संजयत्युत ॥

ஸத்வம் ஸுகே[2] ஸஞ்ஜயதி, ரஜ: கர்மணி ப[4]ாரத |
ஜ்ஞானமாவ்ருத்ய து தம:, ப்ரமாதே[3] ஸஞ்ஜயத்யுத || 9

**பாரத** – *பரதகுலத்திற் பிறந்தவனே!;* **ஸத்வம்** – *ஸத்வ குணம்,* **ஸ்ரீதேவி; ஸுகே** – *சுக விஷயங்களில்;* **ஸஞ்ஜயதி** – *தூண்டுகிறாள்.* **ரஜ:–** *ரஜோகுணம், பூதேவி;* **கர்மணி** – *கர்மத்தில்; (தூண்டுகிறாள்).* **தம: து** – *தமோகுணமும், துர்க்கா தேவியும்;* **ஜ்ஞானம் ஆவ்ருத்ய** – *மனதின் தத்வஞான சக்தியைத் தடுத்து;* **ப்ரமாதே** –*(அதர்மத்தைத் தர்மமாக அறிவது போன்ற) விபரீத ஞானத்திலும்;* **உத** – *சோம்பல், தூக்கம் ஆகியவற்றிலும்;* **ஸஞ்ஜயதி** – *தூண்டுகிறாள்.*

முக்குணங்களாகிய தேகத்தில், அம்மூன்றும் ஒரே காலத்தில் தூண்டுமாதலால், தனித்தனியான காரியம் எவ்வாறு உண்டாகும்? என்றால் பதிலளிக்கிறார்.

10. रजस्तमश्च अभिभूय सत्वं भवति भारत ।
रजस्सत्वं तमश्चैव तमस्सत्वं रजस्तथा ॥

ரஜஸ் தமஸ்ச அபி[4]பூ[4]ய, ஸத்வம் ப[4]வதி ப[4]ாரத |
ரஜஸ் ஸத்வம் தமஸ்சைவ, தமஸ் ஸத்வம் ரஜஸ் தத[2]ா || 10

**பாரத** – *பரதகுலத்திற் பிறந்தவனே!;* **ஸத்வம்** – *ஸத்வ குணம் (ஈசுவரனின் விருப்பத்தினால் ஒரு காலத்தில் மேலோங்கி);* **ரஜ: தம: ச** – *ரஜோகுணத்தையும், தமோ குணத்தையும்:* **அபிபூய** – *அவற்றின் காரியங்களைச் செய்யாது அடக்கி;* **பவதி** – *(தன் காரியத்தைச் செய்யும் திறனை யுடையதாக) ஆகிறது.* **ததா ஏவ** – *அதேமாதிரியே;* **ரஜ: – ரஜோகுணம்,** *(ஒரு சமயம் மேலோங்கி);* **ஸத்வம் தம: ச** – *ஸத்வகுணத்தையும், தமோகுணத்தையும் (அடக்கியும்);* **தம:** *–தமோகுணம் (ஓர் சமயம் மேலோங்கி);* **ஸத்வம், ரஜ:**- *ஸத்வகுணத்தையும், ரஜோகுணத்தையும் (அடக்கி தத்தம் காரியங்களைச் செய்யும் திறனையுடையவை ஆகின்றன)*

**குறிப்பு:** (1) நம் உடலில், கபம், வாதம், பித்தம் என்ற மூன்று தாதுக்கள் உள்ளன. அவை ஏக காலத்தில் செயல்படினும் ஒவ்வோர் சமயத்தில் ஒவ்வொன்று தலைதூக்கி, மற்றவைகளை அடக்கி, தன் காரியத்தைச் செய்கிறதல்லவா! அதுபோலவே, இம்மூன்று குணங்களும் என்று அறிக. அந்தக் காரிய சக்தி தடைபடுவது, அவற்றின் அபிமானிகளான ஸ்ரீதேவி முதலியோர் நடுநிலைமை வகிப்பதால்தான் என்றும் அறிக.

(2) கபத்தை துஷ்டனைப்போன்று காரஸாரத்தாலும்: வாதத்தை நண்பனைப்போன்று சிநேகத்தினாலும், (அதாவது நெய், எண்ணெய் முதலியவற்றாலும்); பித்தத்தை மாப்பிள்ளை போன்று, இனிப்பான பண்டங்களினாலும்: ஜயிக்கவேண்டும் என்று வைத்திய சாஸ்திரம் அழகாகக் கூறுகிறது.

எந்த அறிகுறிகளால், ஒவ்வொரு குணமும் மேலோங்கி யுள்ளது என்று அறியலாம்? என்றால் 3 சுலோகங்களில் கூறுகிறார்.

11. सर्वद्वारेषु देहेऽस्मिन् प्रकाशः उपजायते ।
ज्ञानं यदा तदा विद्यात् विवृद्धं सत्वमित्युत ॥

ஸர்வத்$^3$வாரேஷு தே$^3$ஹேSஸ்மின், ப்ரகாஶ: உபஜாயதே |
ஜ்ஞானம் யத$^3$ா தத$^3$ா வித்$^3$யாத், விவ்ருத்த$^4$ம் ஸத்வமித்யுத || 11

**அஸ்மின் தேஹே** - இந்த உடலில்; **ஸர்வத்வாரேஷு** - (வாயில்கள் போன்ற காது, தோல், கண், நாக்கு, மூக்கு ஆகிய) எல்லா இந்திரியங்களிலும்; **ஜ்ஞானம்** - (முறையே ஶப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், வாஸனை, ஆகிய்வற்றின்) அறிவாகிற; **ப்ரகாச:** - ஒளியும்; **உத** - சுகம் முதலியனவும்; **யதா** - எப்பொழுது; **உபஜாயதே** - உண்டாகின்றனவோ; **ததா** - அப்பொழுது; **ஸத்வம்** - ஸத்வகுணம்; **விவ்ருத்தம்** - விஶேஷ மாகப் பெருகியுள்ளது; **இதி** - என்று; **வித்யாத்** - அறிய வேண்டும்.

12. लोभः प्रवृत्तिः आरंभः कर्मणां अशमः स्पृहा ।
रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥

லோப$^4$: ப்ரவ்ருத்தி: ஆரம்ப$^4$: கர்மணாம் அஶமஸ் ஸ்ப்ருஹா |
ரஜஸ்யேதானி ஜாயந்தே, விவ்ருத்தே$^4$ ப$^4$ரதர்ஷப$^4$ || 12

**பரதர்ஷப** - பரதகுலத்தில் சிறந்தவனே!; **ரஜஸி** - ரஜோகுணம்; **விவ்ருத்தே** - விசேஷமாகப் பெருகியிருக்கும் பொழுது; **லோப:** உலோபித்தனம் (அளவற்ற பணம் முதலியன இருந்தும் அவற்றைக் கொடுப்பதில் விருப்பமின்மை); **ப்ரவ்ருத்தி:** – வீணான முயற்சி; **கர்மணாம் ஆரம்ப:** – (காம்ய) கர்மங்களை ஆரம்பித்தல் (முடிப்பதில்லை); **அஶம:** –மனதின் அமைதியின்மை; **ஸ்ப்ருஹா** - (அடையாத பொருள்களில்) ஆசை (ஆகிய); **ஏதானி** - இவைகள்; **ஜாயந்தே** - உண்டா கின்றன.

13. अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च।
तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥

அப்ரகாஶோऽப்ரவ்ருத்திஸ்ச, ப்ரமாதே³ா மோஹ ஏவ ச |
தமஸ்யேதானி ஜாயந்தே, விவ்ருத்தே⁴ குருநந்த³ன || 13

**குருநந்தன** - குருகுலத்தை மகிழ்விப்பவனே!; **தமஸி** - தமோகுணம்; **விவ்ருத்தே** - விசேஷமாகப் பெருகியிருக்கும் பொழுது; **அப்ரகாச:** - *(காது முதலிய இந்திரியங்களில், சப்தம் முதலியவற்றின்)* ஞானமாகிற ஒளியின்மையும்; **அப்ரவ்ருத்தி: ச** - முயற்சியின்மையும்; **ப்ரமாத:** - கவனமின்மையும்; **மோஹ: ஏவ ச** - விபரீத ஞானமும் (ஆகிய); **ஏதானி** – இவைகள்; **ஜாயந்தே** - உண்டாகின்றன.

ஒவ்வோர் குணமும் பெருகியிருக்கும்போது, இறப்போர்களின் கதியிலுள்ள வித்தியாஸத்தை இரு சுலோகங்களில் கூறுகிறார்.

14. यदा सत्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत्।
तदा उत्तमविदां लोकान् अमलान् प्रतिपद्यते ॥

யத³ா ஸத்வே ப்ரவ்ருத்தே⁴ து, ப்ரளயம் யாதி தே³ஹப்⁴ருத் |
தத³ா உத்தமவித³ாம் லோகான், அமலான் ப்ரதிபத்³யதே || 14

**யதா** - எப்பொழுது; **ஸத்வே** - ஸத்வகுணம்; **ப்ரவ்ருத்தேது** - விசேஷமாகப் பெருகியிருக்கையில்; **தேஹப்ருத்** - தேகம் படைத்துள்ள ஜீவன்; **ப்ரளயம் யாதி** - இறக்கிறானோ; **ததா** - அப்பொழுது; **உத்தம விதாம்** - ஸர்வோத்தமரான விஷ்ணுவை அறிந்தவர்களுடைய; **அமலான்** - தோஷமற்ற; **லோகான்** - தேகங்களை (உலகங்கள் என்ற அர்த்தமல்ல); **ப்ரதிபத்யதே** - அடைகிறான். (ஸாத்விகர்களின் குலத்தில் பிறக்கிறான்).

15. रजसि प्रलयं गत्वा कर्मसंघिषु जायते।
तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥

ரஜஸி ப்ரளயம் க³த்வா, கர்மஸங்கி⁴ஷு ஜாயதே |
தத²ா ப்ரலீனஸ் தமஸி, மூட⁴யோனிஷு ஜாயதே || 15

**ரஜஸி** - ரஜோகுணம்; (ப்ரவ்ருத்தே - விசேஷமாகப் பெருகியிருக்கையில்); **ப்ரளயம் கத்வா** - இறந்து; **கர்மஸங்கிஷு** - காம்ய கர்மங்களில் பற்றுள்ளவர்களின் குலத்தில்; **ஜாயதே** — பிறக்கிறான். **ததா** - அவ்வாறு; **தமஸி** - தமோகுணம்;

*(ப்ரவ்ருத்தே - விசேஷமாகப் பெருகியிருக்கையில்);* **ப்ரலீன:** - இறப்பவன்; **மூடயோனிஷு** - *9-11,* விபரீத ஞானமுடைய தைத்யர்களின் குலத்தில்; **ஜாயதே** - பிறக்கிறான்.

**குறிப்பு:** நாம் எப்போது இறக்கிறோம், எவ்வாறு இறக்கிறோம் என்று அறியோம். ஆகவே எப்போதும் நம்மிடம் (சு.11ல்) கூறியபடி ஸத்வ குணத்தையே பெருக்கி வைத்துக் கொண்டிருந்தால், மறுபிறப்பில் மீண்டும் பந்தத்தைத் தரும் காம்யகர்மிகளின் குலத்திலும், தமஸ் என்ற நித்ய நகரத்திற்குரிய தைத்யர்களின் குலத்திலும், பிறக்காமல் (சு.14ல்) கூறியபடி விஷ்ணு ஞானிகளின் குலத்தில் பிறந்து கடைசியில் மோக்ஷமடையலாம்.

ஸாத்விகம் முதலிய கர்மங்களின் பலனை இரு சுலோகங்களில் கூறுகிறார். சு. 18-23 முதல் 25ல் இம்மூன்று கர்மங்களையும் விவரிக்கப்போகிறார்.

16. कर्मणः सुकृतस्याहुः सात्विकं निर्मलं फलम् ।
रजसस्तु फलं दुःखं अज्ञानं तमसः फळम् ॥

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு:, ஸாத்விகம் நிர்மலம் ப$^{2}$லம் |
ரஜஸஸ்து ப$^{2}$லம் து$^{3}$க்க$^{2}$ம், அஜ்ஞானம் தமஸ: ப$^{2}$லம் || 16

**ஸுக்ருதஸ்ய** - விஷ்ணு ஞானியின் குலத்தில் பிறந்தவனால் செய்யப்படும்; **கர்மண:** - கர்மத்திற்கு; **ஸாத்விகம்** - நற்குணம் பொருந்தியதும்; **நிர்மலம்** - துக்கக் கலப்பற்றதுமான; **பலம்** - பலன், என்றும்; **ரஜஸ:து** - காம்யகர்மியின் குலத்தில் பிறந்தவனால் செய்யப்படும் கர்மத்திற்கோ; **துக்கம்** - (துக்கம் என்ற அர்த்தமல்ல) துக்கம் கலந்த சுகம்; **பலம்** - பலன் என்றும்; **தமஸ:** - தைத்யகுலத்தில் பிறந்தவனால் செய்யப்படும் கர்மத்திற்கு; **அஜ்ஞானம்** - அறிவின்மையாலும், விபரீத ஞானத்தினாலும் உண்டாகும் நித்ய துக்கம் (தமஸ், அந்தந்தமஸ்ஸில்); **பலம்** - பலன் என்றும்; **ஆஹு:** - சொல்கிறார்கள்.

**குறிப்பு:**

*துக்கம் துரிதி ஸம்ப்ரோக்தம், கம் நாம ஸுக முச்யதே |*

**துஹ்கம்** என்ற பதத்தில், துர் கம் என்ற இரு பதங்கள், துர்துக்கம் என்றும், கம் - சுகம் என்றும் அர்த்தம். ஆகவே துக்கம் கலந்த சுகம் என அர்த்தம் கூறவேண்டும். ஏனெனில், ராஜஸகர்மத்தின் பலன், துக்கம் கலந்த சுகம் என ஸ்காந்தம் கூறுகிறது.

*கர்மணோ ராஜஸஸ்யோக்தம், துக்கமிச்ரம் பலம் ஸுகம் |*

இம்மாதிரி **துக்கம்** என்ற பதத்திற்கு, ஸ்மிருதி ஸம்பந்தமான அபூர்வமான அர்த்தத்தை, நமது ஆசார்யர்தான் செய்திருக்கிறார்.

*நிர்மலமான பலன் முதலியதை விளக்குகிறார்.*

17. सत्वात्संजायते ज्ञानं रजसः लोभ एव च ।
प्रमादमोहौ तमसः भवतोऽज्ञानमेव च ॥

ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞானம், ரஜஸ: லோப[4] ஏவ ச |
ப்ரமாத[3]மோஹெள தமஸ:, ப[4]வதோऽஜ்ஞான மேவ ச || 17

**ஸத்வாத்** – *ஸத்வ குணத்தினால்;* **ஜ்ஞானம்** – *(பர தத்வம், அபர தத்வம் ஆகியவற்றின்) அறிவு;* **ஸஞ்ஜாயதே** – *நன்கு உண்டாகிறது.* **ரஜஸ: ச** – *ரஜோ குணத்தினாலும்;* **லோப:** – *(ஸ்வர்க்கம் முதலியவற்றில்) ஆசை உண்டாகிறது* **தமஸ:**- *தமோகுணத்தினால்;* **ப்ரமாத மோஹெள** – *கவனமின்மையும், விபரீத ஞானமும்;* **பவத: ஏவ** – *நிச்சயம் உண்டாகின்றன.* **அஜ்ஞானம் ச**– *அறிவின்மையும்; (பவதி– உண்டாகிறது)*

மேற்படி ஞானம், லோபம், அஜ்ஞானம் முதலியன, இடையிலுண்டாகும் பலன்களே. ஏனெனில் முக்ய பலன் சுகம், துக்கமின்மை என்ற இரண்டில் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும்.

*ஸுக துக்காபாவயோ: அன்யதரத்வமேவ பலத்வம்.*

ஆகவே, அவற்றின் முக்கிய பலனைக் கூறுகிறார்.

18. ऊधर्व गच्छन्ति सत्वस्थाः मध्ये तिष्ठन्ति राजसाः ।
जघन्यगुण वृत्तिस्थाः अधो गच्छन्ति तामसाः ॥

ஊர்த்[4]வம் க[3]ச்சந்தி ஸத்வஸ்த[2]ா:, மத்[4]யே திஷ்ட[2]ந்தி ராஜஸா: |
ஜக[4]ன்யகுண வ்ருத்திஸ்த[2]ா:, அதே[4]ா க[3]ச்சந்தி தாமஸா: || 18

**ஸத்வஸ்தா:** – *ஸத்வ குணத்திலுள்ள ஸாத்வீகர்கள் (ஞானத்தால்);* **ஊர்த்வம்** – *மேலே (ஜனலோகம் முதலிய மேல் உலகங்களுக்கு);* **கச்சந்தி** – *செல்கின்றனர்,* **ராஜஸா:** – *காம்ய கர்மிகளான ராஜஸர்கள் (லோபத்தால்):* **மத்யே** – *நடுவிலுள்ள (ஸ்வர்க்கம் முதலிய உலகங்களில்);* **திஷ்டந்தி** – *இருக்கின்றனர்.* **ஜகன்ய, குண, வ்ருத்தி, ஸ்தா:** – *மிகத் தாழ்ந்ததான, தமோ குணத்தின், கார்யமான, அஜ்ஞானமுள்ள, தாமஸர்கள் (அஜ்ஞானத்தால்);* **அத:** – *கீழே (தமஸ் என்ற நித்ய நரகத்திற்கு);* **கச்சந்தி** – *செல்கிறார்கள்.*

குறிப்பு: (1) 3-38ல் காமம், இம் மூவகையினரைக் கட்டும் வித்தைக் கூறினார். 17-2, 3ல் ஜீவர்கள் இயற்கையிலேயே (ஸாத்விகர், ராஜஸர்

தாமஸர் அல்லது முக்தியோக்யர், நித்ய ஸம்ஸாரி, தமோயோக்யர் என்ற மூவகையினர் என்றும், 17-4 முதலியவற்றில் அவர்கள் உண்ணும் உணவு, பூஜிக்கும் தெய்வங்கள் முதலியவற்றிலும் மூவகையுண்டு எனப் போகிறார்.

இம்மூவித கதியை அவர்கள் அடையவேண்டியே ஸ்ரீ வியாஸரும், 18 புராணங்களை மூன்று விதங்களாக அருளியுள்ளார்.

*இதி கீதோக்த மார்க்கேண, த்ரயாணாம் அதிகாரிணாம் |*
*கதித்ரயம் தாதுமேவ. சக்ரே வ்யாஸாத்மகோ ஹரீ: ||*

**ஸாத்விக புராணங்கள்:–** (1) விஷ்ணு புராணம் (2) நாரதீயம் (3) பாகவதம் (4) கருட புராணம் (5) பாத்மம் (6) வராஹ புராணம்

**ராஜஸ புராணங்கள்:–** (1) பிரம்மாண்ட புராணம் (2) ப்ரஹ்மவைவர்த்தம் (3) மார்க்கண்டேயம் (4) பவிஷ்யம் (5) வாமனம் (6) ப்ரஹ்ம புராணம்.

**தாமஸ புராணங்கள்:–** (1) மத்ஸ்ய புராணம் (2) கூர்மம் (3) லிங்கம் (4) சைவம் (5) ஸ்காந்தம் (6) அக்நி புராணம்.

இந்த சுலோகத்தில், இருவர்களுக்கு, செல்கின்றனர் என்ற பதமும், ஒருவருக்கு இருக்கின்றனர் என்ற பதமும் உள்ளன. அதன் ஸ்வாரஸ்யம்:– உலகில் நல்ல ஆபீஸர்கள் தம்முடைய நற்பணிகளால் மேல் பதவிக்கு மாற்றப்பட்டுச் செல்கின்றனர். கெட்ட ஆபீஸர்களும், புகார்களினால், தாழ்ந்த பதவிக்கு மாற்றப்பட்டுச் செல்கின்றனர். மத்யஸ்தர்களோ, மாற்றப்படாமலேயே ஒரே இடத்தில் இருக்கின்றனர். அதுபோல நல்ல ஸாத்விகர்களும் கெட்ட தாமஸர்களும் செல்கின்றனர். ராஜஸர்கள் இருக்கின்றனர்.

3-5ல் முக்குணங்களினால் அனைவரும் கர்மம் செய்விக்கப் படுகின்றனர் என்று சுருக்கமாகக் கூறியதை, இங்கு விஸ்தாரமாகக் கூறியதாலும், அவைகள் ஜீவர்களைக் கட்டும் விதத்தையும், அவைகளினால் ஏற்படும் முக்கிய அமுக்கிய பலன்களையும் கூறியதாலும், அவைகளே ஸர்வோத்தமமானவை, வேறு ஸர்வோத்தமனில்லை, என்ற சந்தேகம் எழலாம். ஆகவே அதைப் போக்குகிறார்.

19. नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टाऽनुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥

நான்யம் குணேப்[4]ய: கர்த்தாரம், யத[3]ா த்[3]ரஷ்டாऽநு பஶ்யதி |
கு[3]ணேப்[4]யஸ்ச பரம் வேத்தி, மத்ப[4]ாவம் ஸோऽதி[4]கச்சதி || 19

**த்ரஷ்டா** – *(பார்ப்பவன்) ஜீவன்;* **யதா** – *எப்பொழுது;* **குணேப்ய:** – *முக்குணங்களைக்காட்டிலும்; (ந+அன்யம்)* **அன்யம்** – *வேறான;* **கர்த்தாரம்** – *உபாதான காரணத்தை;* **ந அநுபச்யதி** – *அறிவதில்லையோ;* **குணேப்ய:** – *அந்தக் குணங்களைக் காட்டிலும்;* **பரம் ச** – *ஸர்வோத்தமனான, ஸ்வதந்திரனான*

பகவானையும்; **வேத்தி** - அறிகிறானோ; (**ததா**- அப்பொழுது); **ஸ:** - அவன்; **மத்பாவம்** - மயிபாவம் - (4-10) ஜ்ஞானானந்த ஸ்வரூபத்துடன் என்னிடம் இருப்பதை; **அதிகச்சதி** - அடைகிறான்.

**2-ம் அர்த்தம்:- த்ரஷ்டா** - ஜீவன்; **யதா** - எப்பொழுது; **குணேப்ய:** - இந்தக் குணங்களைக்காட்டிலும்; **அன்யம்** - வேறான; **கர்த்தாரம்** - சிருஷ்டிக்கும் பகவானை; **அநுபச்யதி** - நன்கு அறிகிறானோ; அதுமட்டுமல்ல; **குணேப்ய:** அந்தக் குணங்களைக்காட்டிலும்; **பரம்** - மேலானவன் பகவான் என்றும்; **வேத்தி** - அறிகிறானோ; **ததா** — அப்பொழுது; **ஸ:-** அவன்; (நா + அன்யம்) நா - (நா - நரௌ- நர:) மனிதன். இல்லையேல் மிருகமே. (ஏனெனில்) **ஸ:** - அவன்; **மத்பாவம்** - ஞானானந்த ஸ்வரூபத்துடன் என்னிடம் இருப்பதை; **அதிகச்சதி** - அடைகிறான்.

**குறிப்பு:** குணங்களைக் காட்டிலும் வேறு காரணமில்லை என்றால், அவைபோன்ற வேறு உபாதான காரணமில்லை என் அர்த்தமே தவிர, நிமித்த காரணமான பகவானில்லை என்ற அர்த்தமல்ல. ஆகவே, அந்த பகவானே ஸர்வோத்தமன். முக்குணங்களல்ல என்று அறியவேண்டும். அவ்வாறு அறிந்தால் தான் மோக்ஷம் கிடைக்கும்.

சுகதுக்க ரூபமான பந்தத்திற்கு இந்த முக்குணங்கள் காரணமானதால் அவைகளைக் கடந்தால்தான் பந்தம் விலகும் என்கிறார்.

20. गुणानेतान् अतीत्य त्रीन् देही देहसमुद्भवान् ।
जन्ममृत्यु जरादुःखैः विमुक्तोऽमृतमश्नुते ॥

கு³ணானேதான் அதீத்ய த்ரீன், தே³ஹீ தே³ஹ ஸமுத்ப⁴வான் |
ஜன்ம ம்ருத்யு ஜராது³க்கை²:, விமுக்தோSம்ருதமச்னுதே || 20

**தேஹீ** - தேகம் படைத்த ஜீவன்; **தேஹஸமுத்பவான்** - (முக்குணங்களாலாகிய) தேகங்களில் வெளிப்படும்; **ஏதான் த்ரீன் குணான்** - இந்த மூன்று குணங்களை; **அதீத்ய ஏவ** - கடந்த பிறகே; **ஜன்ம, ம்ருத்யு, ஜரா, துக்கை:** - பிறப்பு, இறப்பு, மூப்பு, துக்கம் இவற்றிலிருந்து; **விமுக்த:** — அடியோடு விடுபட்டு; **அம்ருதம்** - மரணமற்ற பகவானை; **அச்நுதே** - அடைகிறான்.

अर्जुन उवाच - **அர்ஜுன உவாச** - அர்ஜுனன் மூன்று கேள்விகளைக் கேட்கிறான்.

21. कैर्लिङ्गैः त्रीन्गुणानेतान् अतीतो भवति प्रभो ।
किमाचारः कथं चैतान् त्रीन्गुणान् अतिवर्तते ॥

கைர்லிங்கை[3]ஸ் த்ரீன் கு[3]ணானேதான், அதீதோ ப[4]வதி ப்ரபே[4]ா |
கிமாசார: கத[2]ம் சைதான், த்ரீன் கு[3]ணான் அதிவர்த்ததே || 21

**ப்ரபோ** – ஸமர்த்தரே!; **ஏதான்** – (அனைவரையும் கட்டும்) இந்த; **குணான்** – ஸத்வ ரஜஸ்தமோ குணங்களை; **அதீத:** – கடந்த புருஷன்; *(1)* **கை:- லிங்கை:** – எந்த உள் அடையாளங்களுடன்; **பவதி** – கூடியிருப்பான்? *(2)* **கிம் ஆசார:** – (வெளியில்) எவ்வித நடத்தையுடையவன்? **ச** – மேலும்; *(3)* **கதம்** – எந்த உபாயத்தினால்; **ஏதான் த்ரீன் குணான்** – இந்த மூன்று குணங்களை; **அதிவர்த்ததே** – கடக்கிறான்?

श्रीभगवान् उवाच – **ஸ்ரீ பகவான் உவாச** – ஸ்ரீ கிருஷ்ணர் முதல் வினாவிற்கு விடைதருகிறார். முக்குணங்கள் ஸ்தூலமானவை. ஸூக்ஷ்மமானவை என இரு வகைப்படும். ஸ்தூலமான குணங்களிலிருந்து உலக விஷயமான அறிவும், முயற்சியும், விபரீத ஞானமும் முறையே உண்டாகின்றன. ஸூக்ஷ்மமான குணங்களிலிருந்து பகவத் விஷயமான அறிவும், முயற்சியும், விபரீத ஞானமும் முறையே உண்டாகின்றன.

22. प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव ।
न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि कांक्षति ॥

ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச, மோஹ மேவ ச பாண்ட[3]வ |
ந த்[3]வேஷ்டி ஸம்ப்ர வ்ருத்தானி, ந நிவ்ருத்தானி காங்க்ஷதி || 22

**பாண்டவ** – பாண்டுவின் புத்திரனே!; **(குணாதீத:** – முக்குணங்களைக் கடந்தவன்); **ஸம்ப்ர வ்ருத்தானி** – தன்னை அடைந்துள்ளவையும், ஸ்தூலமான முக்குணங்களிலிருந்து உண்டானவையுமான; **ப்ரகாஶம் ச** – *(சு. 11)* உலக அறிவையும்; **ப்ரவ்ருத்திம் ச** – *(சு. 12)* முயற்சியையும்; **மோஹம் ச** *(சு. 13)* விபரீத ஞானத்தையும்; **ந த்வேஷ்டி ஏவ** – வெறுப்பதே இல்லை. **நிவ்ருத்தானி** – தன்னை விட்டு விலகின அவை களை; **ந காங்க்ஷதி** – விரும்புவதில்லை. (ஆனால் ஸூக்ஷ்ம மான முக்குணங்களிலிருந்து ஏற்படும் பகவத் விஷயமான அறிவையும், முயற்சியையும் விரும்புகிறான். விபரீத ஞானத்தை மாத்திரம் வெறுக்கிறான்). அல்லது மற்றவர் களுக்கு ஏற்படும் அறிவு முதலிய நற்குணங்களைக்கண்டு த்வேஷிப்பதில்லை. (பொறாமைப்படுவதில்லை). விபரீத ஞானம் முதலிய துர்க்குணங்கள் அவர்களிடமிருந்து விலக வேண்டும் என்று விரும்புவதுமில்லை.

*2-ம் வினாவுக்கு 3 சுலோகங்களில் விடைதருகிறார்.*

23. उदासीनवत् आसीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणाः वर्तन्त इत्येवं योऽवतिष्ठति नेंगते ॥

உத$^{3}$ாஸீனவத் ஆஸீனோ, கு$^{3}$ணைர் யோத ந விசால்யதே |
கு$^{3}$ணா: வர்த்தந்த இத்யேவம், யோSவதிஷ்ட$^{2}$தி நேங்க$^{3}$தே || 23

**ய:** *யார்;* **உதாஸீனவத்** – நடுநிலைமை வகிப்பவன் போல; **ஆஸீன:** – இருந்துகொண்டு; **குணை:** – முக்குணங் களினால்; **ந விசால்யதே** – *(வைஷ்ணவ தர்மானுஷ்டானத் திலிருந்து) அசைக்கப்படுவதில்லையோ;* **ய:** – *யார்;* **குணா:** – அந்த குணங்கள்: **வர்த்தந்தே** – ப்ரவர்த்தந்தே – பகவானின் விருப்பத்தால் செயல்படுபவை, ஸ்வதந்திரமானவையல்ல; **இதி ஏவம்** – என்று இவ்விதம்; **அவதிஷ்டதி** – *அறிகிறானோ;* **ஸ:** – அவன் (அந்த குணாதீதன்); **ந இங்கதே** – அவைஷ்ணவ கர்மங்களைச் செய்வதில்லை. வைஷ்ணவ கர்மங்களையே செய்து வருவான். **(இதி ஏவ –** *பிறர் பாடம்)*

24. समदुःख सुखः स्वस्थः समलोष्टाश्म कांचनः ।
तुल्य प्रियाप्रियो धीरः तुल्य निन्दाऽऽत्मसंस्तुतिः ॥

25. मानापमानयोस्तुल्यः तुल्यो मित्रारि पक्षयोः ।
सर्वारंभ परित्यागी गुणतीतः स उच्यते ॥

ஸமது$^{3}$க்க$^{2}$ ஸுக$^{2}$: ஸ்வஸ்த$^{2}$:, ஸம லோஷ்டாஶ்ம காஞ்சன: |
துல்ய ப்ரியாப்ரியோ தீ$^{4}$ர:, துல்யநிந்தாSத்ம ஸம்ஸ்துதி: || 24

மானாபமானயோஸ்துல்ய:, துல்யோ மித்ராரி பக்ஷயோ: |
ஸர்வாரம்ப$^{4}$ பரித்யாகீ, கு$^{3}$ணாதீதஸ் ஸ உச்யதே || 25

*24.* **(ய: –** *யார்);* **ஸமதுக்க ஸுக:** – *(1)* விட்டு விடத் தகுந்ததில் துக்கத்திற்குச் சமமாகச் சிற்றின்பத்தைப் பாவிப்பவனோ *(2-15, 38). (2)* விஷ்ணு பஜனையில் துக்கமும், அதைச் செய்யாவிடில், சுகமும் இருப்பினும், அதைச் செய்து வருவதில் ஒரே விதமாக இருப்பவனோ; **ஸ்வஸ்த:** – *(1)* மாறுதலில்லாமல் *(2)* வைஷ்ணவ தர்மத்திலிருந்து வழுவாமல், இருப்பவனோ; **ஸமலோஷ்ட அஶ்மகாஞ்சன:** – தூக்கி எறிந்து விடுவதில். மண்கட்டி, கல், பொன் இவற்றைச் ஸமமாகப் பாவிப்பவனோ *(2)* விஷ்ணு பஜனையை விட்டு விட்டால் பொன் தருகிறான், அதைச் செய்தால் மண்கட்டியையும், கல்லையும் தருகிறான் என்றாலும், அதைச் செய்து வருவதில்

ஒரே விதமாக இருப்பவனோ; **துல்ய ப்ரிய அப்ரிய:** – *(1)* விடத் தகுந்ததில் துன்பத்திற்குச் ஸமமாக, இன்பத்தைப் பாவிப் பவனோ *(2)* விஷ்ணு பஜனையை விட்டுவிட்டால் இன்பம், அநுஷ்டித்தால் துன்பம், ஏற்படினும் அதைச் செய்து வருவதில் ஸமமாக இருப்பவனோ; **துல்யநிந்தா ஆத்ம ஸம்ஸ்துதி:** – *(1)* வேண்டாம் என்பதில், இகழ்ச்சிக்குச் ஸமமாகப் புகழ்ச்சியைப் பாவிப்பவனோ; *(2)* விஷ்ணு பஜனையை விட்டு விட்டால் புகழ்ச்சியும், அதைச் செய்தால் இகழ்ச்சியும் ஏற்படின், அதைச் செய்து வருவதில் ஸமமாக இருப்பவனோ; **தீர:** – *(1)* இவற்றில் தைரியத்துடன் இருப்பவனோ *(2)* (தியா ரமதே) – புத்திமானோ;

*25.* **ததா** – அவ்வாறே; **மான அபமானயோ:** – கௌரவமும், அகௌரவமும் ஏற்படினும்; **துல்ய:** – விஷ்ணு பக்தியில் ஒரேவிதமாயிருப்பவனோ; **மித்ர அரிபக்ஷயோ:** – விஷ்ணு பக்தியைச் செய்தாலும், செய்யாவிடிலும், முறையே நண்பர்களின் கக்ஷியும், பகைவர்களின் கக்ஷியும் இருப்பினும்; **துல்ய:** – அதில் ஒரேவிதமாயிருப்பவனோ; **ஸர்வ ஆரம்ப பரித்யாகீ** – எல்லா (அவைஷ்ணவ) கர்மங்களை, அடியோடு விட்டு விடுபவனோ; **ஸ:** – அவன்; **குண அதீத:** – முக்குணங் களைக் கடந்தவன் என்று; **உச்யதே** – சொல்லப்படுகிறான்.

3–ம் வினாவுக்கு விடை தருகிறார்.

26. मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान् समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥

மாம் ச யோSவ்யபி⁴சாரேண, ப⁴க்தியோகே³ன ஸேவதே |
ஸ கு³ணான் ஸமதீத்யைதான், ப்ரஹ்மபூ⁴யாய கல்பதே || 26

**ய:** – *யார்;* **மாம்ச** – என்னையே; **அவ்யபிசாரேண** – விட்டுப் பிரியாத, நித்யமான; **பக்தியோகேன** – பக்தி என்ற உபாயத்தினால்; **ஸேவதே** – உபாஸிக்கிறானோ; **ஸ:** – அவன்; **ஏதான் குணான்** – இந்த மூன்று குணங்களினால், அவற்றின் அபிமானிகளான ஸ்ரீதேவி முதலிய மூவர்களால், செய்யப் பட்ட பந்தத்தை; **ஸம் அதீத்ய** – அடியோடு கடந்து; **ப்ரஹ்மபூயாய** – ப்ரஹ்மவத் – சேதனபிரகிருதியான லக்ஷ்மீ போல, அதாவது அவள் விஷ்ணுவுக்குப் பிரியமாயிருப்பது போல; **பூயாய** – இருப்பதற்கு, அல்லது ப்ரஹ்மணி – லக்ஷ்மியிடம்; **பூயாய** – இருப்பதற்கு, அவளை அடைவதற்கு; **கல்பதே** – சக்தியுள்ளவனாகிறான்.

குறிப்பு: (சு. 3, 4) போல் இங்கு ப்ரஹ்ம பதம் லக்ஷ்மீயைக் குறிப்பதைக் கவனிக்க.

*குணாதீதன் பகவானை அடைகிறான் என்றல்லவா கூறவேண்டும்? லக்ஷ்மீயை அடைகிறான் என ஏன் கூறப்பட்டது? என்பதை விளக்குகிறார்.*

27. ब्रह्मणो हि प्रतिष्ठाऽहं अमृतस्य अव्ययस्य च ।
शाश्वतस्य च धर्मस्य सुखस्य एकान्तिकस्य च ॥

ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்ட[2]ாSஹம், அம்ருதஸ்ய அவ்யயஸ்யச |
ஶாஶ்வதஸ்ய ச மோக்ஷஸ்ய, ஸுக[2]ஸ்ய ஏகாந்திகஸ்ய ச || 27

**அஹம்** – *நான்;* **ப்ரஹ்மண:** – *அந்த மஹாலக்ஷ்மீக்கும்* **அவ்யயஸ்ய** – *நாஶமற்ற;* **அம்ருதஸ்ய ச** – *மரணமற்ற முக்தர் களுக்கும்;* **ஶாஶ்வதஸ்ய** – *அழிவற்ற பலனைத்தரும்;* **தர்மஸ்ய ச** – *நிஷ்காம கர்மத்திற்கும்;* **ஏகாந்திகஸ்ய** – *(இது அதைக் காட்டிலும் அதிகம் என்றவாறு கணக்கிடுகையில்) இந்த ஒன்றையே கடைசியில்கொண்ட;* **ஸுகஸ்ய ச** – *(துக்கக் கலப்பற்ற) சுகத்திற்கும், (மோக்ஷத்திற்கும்);* **பிரதிஷ்டா** – *ஆதார மானவன்.* **ஹி** – *பிரஸித்தம்.*

குறிப்பு: குணாதீதன் லக்ஷ்மீயை முதலில் அடைந்தாலும், அவள் என்னைவிட்டுப் பிரியாதவளாதலால், என்னையே அடைகிறான். முதலில் அவளுடைய அருளைப்பெற்றுப் பிறகு என்னை அடைகிறான் என ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார்.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे गुणत्रयविभागयोगो नाम चतुर्दशोऽध्यायः ॥

ஓம் தத்ஸத் இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம
வித்யாயாம், யோக சாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
குணத்ரய விபாகயோகோ நாம, சதுர்தசோSத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய
கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய குணத்ரய விபாகயோகம்
என்ற பதிநான்காம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 15

# புராண புருஷோத்தம யோகம்

(20 சுலோகங்கள்)

## பதினைந்தாம் அத்தியாயச் சுருக்கம்

13-6ல் ஸம்ஸாரத்தின் காரணமான பிரகிருதி முதலிய 25 தத்வங்களாகிற க்ஷேத்திரமென்னும் உலகத்தின் ஸ்வரூபத்தைக் கூறினார். 13-24ல் அதைக்கடக்கும் உபாயமான, பகவத்ஞானம் முதலியதையும் கூறினார். அவ்விரண்டையுமே இங்கு விஸ்தரிக்கிறார். அதையொட்டி பகவானின் மகிமையையும் காண்பிக்கிறார். முதலில் 2½ சுலோகங்களில் உலகத்தின் ஸ்வரூபத்தை வர்ணிக்கிறார். அடுத்த 2½ சுலோகங்களில், பகவானை அடையும் ஸாதனங்களையும், 6 முதல் 11 சுலோகங்களில் பகவத் ஸ்வரூபத்தையும், 12 முதல் 15 சுலோகங்களில் பகவான் ஸர்வாந்தர்யாமி என்றும், 16 முதல் 20 சுலோகங்களில் அவர் ஸர்வோத்தமர் என்றும் கூறுகிறார்.

பாரதம் ஸர்வஶாஸ்திரங்களிற் சிறந்தது. பாரதத்தில் கீதை சிறந்தது. கீதையில் 15-ம் அத்தியாயம் சிறந்தது. அதில் 16 முதல் 19, நான்கு சுலோகங்கள் சிறந்தவை. அவற்றை ஸ்ரீமத்வர் தமது கிரந்தங்கள் பலவற்றில் உதாஹிரித்துள்ளார். ஏனெனில் அவற்றில் நம் மதத்தின் நவரத்தினங்கள் போன்ற ஒன்பது கொள்கைகள் அடங்கியுள்ளன. அதைக் கீழே காணலாம்.

| | கொள்கைகள் | கீதா சுலோகங்களின் அர்த்தம் |
|---|---|---|
| 1. | ஹரி: பரதர: – விஷ்ணு ஸர்வோத்தமர் | சு. 18, தேக நாசமுடைய பிரம்மாதி தேவர்களையும், தேகநாசமற்ற லக்ஷ்மீயையும் காட்டிலும் உத்தமன் எனப் பௌருஷேய, அபௌருஷேய கிரந்தங்களில் பிரஸித்தனாயிருக்கிறேன். |

| | கொள்கைகள் | கீதா சுலோகங்களின் அர்த்தம் |
|---|---|---|
| 2. | ஸத்யம் ஜகத் – உலகம் ஸத்யமானது மித்யை அல்ல. | சு. 17. மூவுலகங்களிலும் உட் புகுந்துளேன் – உலகம் மித்யையானால் புகுந்திருக்க முடியுமா? ஆகவே உலகம் ஸத்யமானது. |
| 3. | தத்வதோ பேத: – ஐந்து பேதங்கள் ஸத்யமானவை. | |
| | (i) ஜடங்களிடையே பேதம் | சு. 17. மூன்று உலகங்கள் என்றதால் ஜடப்பொருள்களிடையே பேதம். |
| | (ii) ஜட ஈசுவர பேதம் | உட்புகுந்துள்ளேன், என்றதால், ஜட உலகங்களுக்கும், ஈசுவரனுக்கும் பேதம். |
| | (iii) ஜீவ ஈசுவர பேதம் | சு. 17. உத்தமபுருஷர் வேறானவர் சு. 18. க்ஷரங்களை மீறியிருக்கிறேன், என்றதால், பிரம்மாதி ஜீவர்களுக்கும், ஈசுவரனுக்கும் பேதம். |
| | (iv) ஜீவர்களிடையே பேதம். | சு. 16. சேதனர்கள் இருவகையினர், – ஜீவர்களிடையே பேதம். |
| | (v) ஜீவஜட பேதம் | சு. 16. ஜீவர்கள் தேகநாசமுள்ளவர்கள் – நாசமற்ற ஜீவர்களுக்கும், நாசமுள்ள தேகத்திற்கும் பேதம். |
| 4. | ஜீவகணா: ஹரே: அநுசரா: ஜீவர் கூட்டங்கள் விஷ்ணுவின் தாஸர்கள் | சு. 17. அனைத்தையும் தாங்கிப் போஷிக்கிறார் – போஷிப்பவர் யஜமானர், போஷிக்கப்படுபவர்கள் தாஸர்கள். |

| | கொள்கைகள் | கீதா சுலோகங்களின் அர்த்தம் |
|---|---|---|
| 5. | நீசோச்சபாவம் கதா: – ஜீவர்கள் தாரதம்ய முடையவர்கள். | சு. 16. தேக நாசமுள்ளது, தேக நாசமில்லாதது – உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற தாரதம்யம். |
| 6. | முக்தி: நைஜஸு காநுபூதி: – தம் ஸ்வரூப சுகத்தையநுபவிப்பது (ஸாத்விக ஜீவர்களின்) மோக்ஷம். | சு. 20. க்ருதக்ருத்ய: – முக்தனாகிறான் – அந்த முக்தி சுகஸ்வரூபமானது என்று 14–20, 27 முதலிய சுலோகங்களில் கூறப்பட்டுள்ளது. |
| 7. | அமலா பக்திஸ்ச தத்ஸாதனம் – தோஷமற்ற (ஒன்பது விதமான த்வேஷமில்லாத) பக்திதான் மோக்ஷ ஸாதனம். | சு. 20. எல்லாவித பக்தியுடன் என்னை சேவிக்கிறான். (ஸர்வ பாவேன) |
| 8. | ஹ்யக்ஷாதி த்ரிதயம் ப்ரமாணம் – பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம் என்ற மூன்றே பிரமாணங்கள். | சு. 16. இமௌ – என்றதால், பிரத்யக்ஷம். சு. 17மூன்று உலகங்களையும் போஷிக்கிறார் என்றதால், அநுமானம். சு. 17 குறிப்பைப் பார்க்க. சு. 18 வேதங்கள் என்றதால் ஆகமம். |
| 9. | அகில ஆம்னாயைக வேத்யோ ஹரி: – எல்லா வேதங்களினால்தான் அறியத் தகுந்தவர் விஷ்ணு. | சு. 19. என்னை இம்மாதிரி அறிபவன். ஸர்வவேத சாஸ்திரங்களை அறிந்தவன் என்றதால், எல்லா வேதங்களாலும் அறியப்படுபவர். |

श्रीभगवान् उवाच - ஸ்ரீ பகவான் உவாச - *ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார்.*

1. ऊर्ध्वमूलं अधः शाखं अश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥

ஊர்த்4வமூலம் அத4ஸ் ஶாக2ம், அஶ்வத்த2ம் ப்ராஹுஶ ரவ்யயம் |
ச2ந்தாம்ஸி யஸ்ய பர்ணானி, யஸ்தம் வேத3 ஸ வேத3வித் || 1

**(யம்** - எதை; 13-6, 7ல் கூறிய, ஏழு மாறுபாடுகளுடன் கூடிய 25 தத்வங்களாகிற உலகமெனும் எந்த மரத்தை); **ஊர்த்வமூலம்** - மேலே வேர்களையுடையதும்; **அதஸ்ஶாகம்** - கீழே கிளைகளையுடையதுமான; **அஶ்வத்தம்** - அரசமரம் என்றும்; **அவ்யயம்** - அடியோடு அழியாதது என்றும்; **யஸ்ய** - எதற்கு - எந்த உலகமாகிற மரத்திற்கு; **சந்தாம்ஸி** - (அபிமானி தேவதைகளுடன் கூடிய) வேதவாக்கியங்களை; **பர்ணானி** - இலைகள் என்றும்; **ப்ராஹு:** - (அறிஞர்கள்) நன்கு கூறுவார்களோ; **தம்** - அதை - அந்த உலகமாகிற மரத்தை; **ய:** யார்; **வேத** - அறிகிறானோ; **ஸ:** - அவன்; **வேதவித்** - வேதார்த்தத்தை அறிந்தவன்.

குறிப்பு: மேலே வேர்களையுடையது - மேலானவர்கள் இந்த உலகமாகிற மரத்திற்கு வேர்கள் போன்று ஆதாரமானவர்கள். ஸர்வோத்தமரான விஷ்ணுவும், பரதந்திர சேதன வஸ்துக்களில் ஸர்வோத்தமளான லக்ஷ்மீயும், ஜடப்பொருள்களில் உத்தமமான ஜடப்ரகிருதியும் மேலானவர்கள் ஆவார்கள். வேர்களில்லையேல் மரமில்லை. இம்மூவரும் இல்லையேல் உலகமில்லை. பிரஸித்த மரத்திற்குப் பூமிதேவி நிமித்தகாரணமாய் இருப்பதுபோல, விஷ்ணு, உலகமாகிற மரத்திற்கு நிமித்தகாரணமானவர். ஜடபிரகிருதி மண்போன்று உபாதான காரணமாகும். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற அதன் முக்குணங்கள், மரத்தின் மூன்று வேர்கள் போன்றவை. லக்ஷ்மீ அதன் அபிமானியாய் உள்ளே இருந்து கொண்டு அடிப்பாகம் போன்றவள்.

கீழே கிளைகளையுடையது - தாழ்ந்தவர்கள் இந்த உலகமாகிற மரத்திற்குக் கிளைகள் போன்றவர்கள். முன் கூறிய மூவர்களைக் காட்டிலும் தாழ்ந்தவையான மஹத்தத்வம், அஹங்கார தத்வம், புத்தி தத்வம், ஐந்து மகா பூதங்கள் ஆகிய எட்டு பொருள்களும் அவற்றின் அபிமானி தேவதைகளும் (13-7) தாழ்ந்தவர்கள்.

அஶ்வத்தம் - (1) உலகம், ச்வ: நாளை; நதிஷ்டதி - (ஒரே விதமாக) இருக்காது. அதாவது மாறுதலையுடையது. பிரளயத்தில் நாசமடைவது. (2) அஶ்வவத் திஷ்டதி - குதிரைபோன்று சஞ்சலமாயுள்ளது. ஆகவே உலகம் அஶ்வத்தம் எனப்பட்டது.

அவ்யயம் - உலகம் அடியோடு நசிக்காமல், பூர்வகல்பத்தில் எப்படி இருந்ததோ, அப்படியே மற்ற கல்பங்களிலும் இருப்பதால், இருக்கப்போவதால் தாதா யதா பூர்வம் அகல்பயத் ப்ரவாஹம் போல் நித்யமானது. ஸ்தூல ரூபத்திற்கு நாசமுண்டு. ஸூக்ஷ்ம ரூபத்திற்கு நாசமில்லை.

**வேதங்கள் இலைகள்** - உலகமாகிற மரத்திற்கு காமம், மோக்ஷம் என்ற இரு பழங்களுண்டு. இலைகள் உண்டாகி, பூத்துக் காய்த்துப் பழம்தரும். ஆதலால் இலைகள் பழத்திற்குக் காரணமாய் இருப்பதுபோல, வேதங்களும் காமம், மோக்ஷம் ஆகிய பலன்களுக்குக் காரணமானவை. தர்மம், அர்த்தம் என்ற மற்ற இரண்டும் காமம், மோக்ஷம் என்ற இரண்டின் பொருட்டேயாதலால், நான்கு புருஷார்த்தங்களாகிற நான்கு பழங்கள் எனக்கூறவில்லை. பிரவ்ருத்த தர்மமும், மானுஷ அர்த்தமான செல்வமும், காமத்தின் பொருட்டும், நிவ்ருத்த தர்மமும், தைவ அர்த்தமான ஞானமும் மோக்ஷத்தின் பொருட்டும் ஆகின்றன.

2. अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखाः गुणप्रवृद्धाः विषयप्रवालाः ।
अधश्च मूलानि अनुसंततानि कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥

அத4ஸ்சோர்த்4வம் ப்ரஸ்ருதாஸ் தஸ்ய ஶாக2ா: கு3ண ப்ரவ்ருத்த4ா: விஷய ப்ரவாளா: |
அத4ஸ்ச மூலானி அநுஸந்தானி கர்மாநு ப3ந்தீ4னி மனுஷ்யலோகே ||

2

**தஸ்ய** - *அந்த உலகமாகிற மரத்தின்;* **குணப்ரவ்ருத்தா:** - *(வேர்கள்போன்ற) ஸத்வ ரஜஸ் தமோ குணங்களினால் செழிப்பாக வளர்ந்தவையும்;* **விஷய ப்ரவாளா:** – *(ஶப்தம், ஸபர்சம், ரூபம், ரஸம், வாஸனை என்ற) விஷயங்களைத் தளிர்களாக உள்ளவையுமான;* **ஶாகா:**– *கிளைகள் போன்ற மஹத்தத்வம் முதலிய எட்டு பொருள்களும், அவற்றின் அபிமானி தேவர்களும்;* **அத: ஊர்த்வம் ச** - *(1) கீழேயும், (2) மேலேயும்; அதாவது (1) தாழ்ந்தவையும் அவற்றிலிருந்து உண்டாகுபவையுமான, தேகம் முதலியவற்றிலும், (2) உயர்ந்ததும், அவற்றின் காரணமுமான ஜட பிரகிருதியிலும்;* **ப்ரஸ்ருதா:** – *(சூக்ஷ்மா ரூபத்தினால்) பரவியுள்ளன.* **மனுஷ்ய லோகே** ; *மனிதர்களின் தேகத்தில் அல்லது இப்பூவுலகில்;* **கர்ம அநுபந்தீனி** - *மனிதர்களின் கர்மங்களை யநுசரித்துப் பலனைத்தருபவர்களான;* **மூலானி** - *வேர்கள்போன்ற, (விஷ்ணுவும் அவருடைய பல ரூபங்களும், லக்ஷ்மீயும், ஜட பிரகிருதியும் அதன் ஸத்வ ரஜஸ்தமோகுணங்களும்);* **அத: ச** *அத: ச - கீழேயும்; அதாவது, தாழ்ந்தவையான கிளைகள் போன்ற மஹத்தத்வம், அஹங்காரதத்வம், புத்திதத்வம், ஐந்து பூதங்கள் என்ற எட்டுப் பொருள்களிலும், அவற்றின் அபிமானி தேவர்களிடமும்;* **அநுஸந்ததானி** - *தொடர்ந்து பரவியுள்ளன. (அந்தர்யாமியாயுள்ளன).*

குறிப்பு: 1. சப்தம் முதலிய விஷயங்கள் தாத்காலிகமான சுகத்தைத் தருவன ஆதலால், தளிர்கள் எனப்பட்டன. தளிர்களைக் கசக்கிப் பார்க்கலாகாது. விஷயங்களை விமர்சிக்கலாகாது.

2. மனித தேகத்தில் - என்றதால் மனிததேகத்தில்தான், கர்மங்களுக்கு அதிகாரமுண்டு எனக் குறிக்கிறார்.

3. न रूपमस्येह तथोपलभ्यते नान्तो न चादिर्न च संप्रविष्टः ।

ந ரூபமஸ்யேஹ ததே2ாபலப்4யதே, நாந்தோ நசாதி3ர் ந ச
ஸம்ப்ரவிஷ்ட: | 3A

**அஸ்ய** - *இந்த உலகமாகிற மரத்தின்;* **ரூபம்** - *ஸ்வரூபம்; (***யதா ஸ்திதம்** - *எவ்வாறு இருக்கிறதோ);* **ததா** - *அவ்வாறு;* **இஹ** - *இவ்வுலகில்;* **ந உபலப்யதே** - *(மாறுவதால்) அறியப்பட வில்லை. அவ்வாறே, அந்த:* - *இதை அழிப்பவரான விஷ்ணு;* **ந** - *அறியப்படவில்லை.* **ஆதி ச:** - *காரணமுமான. (படைப் பவருமான) விஷ்ணு;* **ந** - *அறியப்படவில்லை* **ஸம்ப்ரவிஷ்ட: ச** - *உள்ளே பிரவேசித்திருப்பவருமான (காப்பவருமான) விஷ்ணு;* **ந** - *அறியப்படவில்லை. (***ஸம்ப்ர திஷ்டா** - *பிறர் பாடம்)*

*உலகமாகிற மரத்தின் ஸ்வரூபம் அவ்வாறு இருக்கட்டும். அதனால் என்ன? என்றால் 1½ சுலோகங்களில் கூறுகிறார்.*

अश्वत्थमेनं सुविरूढमूलं असंगशस्त्रेण दृढेन छित्वा ॥

4. ततः परं तत् परिमार्गितव्यं यस्मिन् गताः न निवर्तन्ति भूयः ।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥

அஶ்வத்த2மேனம் ஸுவிரூட4மூலம்; அஸங்க3 ஶஸ்த்ரேண
த்3ருடே4ன சி2த்வா || 3B

தத: பரம் தத் பரிமார்க்கி3தவ்யம். யஸ்மின் க3தா: ந நிவர்த்தந்தி பூ4ய: |
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே, யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா
புராணீ || 4

**ஸுவிரூடமூலம்** - *வலுத்து வேரூன்றிய, பிரபலமான விஷ்ணு முதலிய பல வேர்களையுடைய;* **ஏனம் அஶ்வத்தம்** - *இந்த அரசமரம் என்ற பெயருடைய உலகமாகிற மரத்தை;* **த்ருடேன** - *கெட்டியான;* **அஸங்க (ஸஹித) ஶஸ்த்ரேண** - *பற்றின்மையுடன் கூடிய ஞானம் என்ற ஆயுதத்தால் (வாளினால்);* **சித்வா** - *வெட்டி, அதாவது வேர்போன்ற விஷ்ணு, பிரகிருதி முதலிய உலகைக்காட்டிலும் வேறானவர், உலகமும், பலவித பேதங்களையுடையது,* **அது விஷ்ணுவின்**

வசமானது, அது ப்ரவாஹம்போல் நித்யமானது, என்றெல்லாம் ஆராய்ந்து;

*4.* **தத: பரம்** - அதன் பிறகு; **தத்** - அந்த விஷ்ணு; **பரிமார்க்கிதவ்யம்** - அலசி தேடத்தகுந்தவர். அதாவது அவரைப் பற்றிய ஶ்ரவணம், மனனம் முதலிய விசாரம்செய்ய வேண்டும். ஏனெனில், **யஸ்மின்** - அந்த விஷ்ணுவை; **கதா:** - அடைந்தவர்கள்; **பூய:** - மறுபடியும்; **ந நிவர்த்தந்தி** - நிவர்த் தந்தே (சு.6) - ஸம்ஸாரத்துக்குத் திரும்புவதில்லை. கர்ப்பத்தில் துக்கத்தை அடைவதில்லை. உலகமாகிற மரத்தை வெட்டும் உபாயத்தைக் கூறுகிறார். **புராணீ** - பழையதான (அநாதியான); **ப்ரவ்ருத்தி:** - ஸம்ஸாரத்தின் செயல்; **யத:** - எவரிடமிருந்து; **ப்ரஸ்ருதா** - நன்கு பரவியுள்ளதோ; **தம் ஏவ** - அதே; **ஆத்யம்** - முதலிலுள்ள; **புருஷம்** - பூர்ணமான ஷட்குணமுடைய விஷ்ணுவை; **ப்ரபத்யே** - ப்ரபத்யேத - சரணமடைய வேண்டும்.

**குறிப்பு:** (1) தத: பதம் - பிறர் பாடம் (2) ஞானத்தினால் தான் மோக்ஷமாதலின், **அஸங்கசஸ்த்ரேண,** பற்றின்மை என்பதுடன் ஞானத்தைச் சேர்க்கவேண்டும். (3) நிவர்த்தந்தி, ப்ரபத்யே-இரண்டும் வைதிகப் பிரயோகங்கள். கீதை வேதம் போன்றதல்லவா!

விஷ்ணுவை அடைவதற்கு வேறு ஸாதனங்களையும் கூறுகிறார்.

5. निर्मानमोहाः जितसंगदोषाः अध्यात्मनित्याः विनिवृत्तकामाः ।
द्वन्द्वैः विमुक्ताः सुखदुःखसंज्ञैः गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥

நிர்மானமோஹா: ஜிதஸங்க$^{3}$தோ$^{3}$ஷா:,அத்$^{4}$யாத்ம நித்யா:
விநிவ்ருத்தகாமா: |
த்$^{3}$வந்த்வை: விமுக்தாஸ் ஸுக$^{2}$துக்க$^{2}$ ஸம்ஜ்ஞை:, க$^{3}$ச்சந்தி
அமூட$^{4}$ா: பத$^{3}$மவ்யயம் தத் || 5

**நிர்மானமோஹா:** - *(மான)* - அஹங்காரமும், (மோஹ) விபரீத ஞானமும் இல்லாதவர்களும்; **ஜிதஸங்க தோஷா:** - ஶப்தம் ஸபர்ஶம் முதலிய விஷயங்களில் பற்று என்ற தோஷத்தை வென்றவர்களும்; **அத்யாத்மநித்யா:** - எப்போதும் பகவத் ஶ்ரவணம் முதலியவற்றில் ஈடுபட்டவர்களும்; **விநிவ்ருத்தகாமா:** - விஷய ஆசைகளைப் பெரும்பாலும் விலக்கினவர்களும்; **ஸுகதுக்க ஸம்ஜ்ஞை:** - இன்பதுன்பங் களுக்குக் காரணமானதால், அப்பெயர்கொண்ட; **த்வந்த்வை:** = லாபம் - நஷ்டம், வெற்றி - தோல்வி, போன்ற இருமை களினால்; **விமுக்தா:** - பெரும் பாலும் விடுபட்டவர்களுமான;

**அமூடா:** – *ராஜஸ தாமஸ ஸ்வபாவமில்லாத ஸாத்விகர்கள் (முக்தியோக்யர்கள்);* **தத்** – *அந்த;* **அவ்யயம்** – *அழிவற்ற;* **பதம்** – *பகவத் ஸ்வரூபத்தை;* **கச்சந்தி** – *அடைகின்றனர்.*

*அந்த பகவத்ஸ்வரூபம் எப்படிப்பட்டது என்று வர்ணிக்கிறார்.*

6. न तत् भासयते सूर्यो न शशांको न पावकः ।
यत् गत्वा न निवर्तन्ते तत् धाम परमं मम ॥

ந தத் ப[4]ாஸயதே ஸூர்யோ, ந ஶஶாங்கோ ந பாவக: |
யத் க[3]த்வா ந நிவர்த்தந்தே, தத் த[4]ாம பரமம் மம || 6

**(ஞானிகள் யத்**– *எந்த ஸ்வரூபத்தை;* **கத்வா** – *அடைந்த பிறகு;* **ந நிவர்த்தந்தே** – *(ஸம்ஸாரத்திற்கு) திரும்புவதில்லையோ;* **தத்** – *அது;* **மம** – *என்னுடைய;* **பரமம்** – *உத்தமமான;* **தாம** — *ஸ்வரூபமாகும்.* **தத்** – *அந்த என் ஸ்வரூபத்தை;* **ஸூர்ய: –** *சூரியன்;* **ந பாஸயதே** — *பிரகாசப்படுத்துவதில்லை. சசாங்க; (முயல் போன்ற அடையாளமுடைய) சந்திரன்;* **ந** – *பிரகாசப்படுத்துவதில்லை.* **பாவக: ந** – *(அவர்களைவிடத் தாழ்ந்த) அக்நி விளக்குவதில்லை. (எனக்கூறவும் வேண்டுமா?)*

*உலகமாகிற மரத்தை வெட்டி, பிரம்மா முதலியோரைச் சரணமடையலாமே! விஷ்ணுவான உம்மை ஏன் சரணமடைய வேண்டும்? என்றால் பதிலளிக்கிறார்.*

7. ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनः षष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥

மமைவாம்ஶோ ஜீவலோகே, ஜீவபூ[4]தஸ் ஸநாதன: |
மன: ஷஷ்டானீந்த்[3]ரியாணி, ப்ரக்ருதிஸ்த[2]ானி கர்ஷதி || 7

**ஜீவலோகே** — *பிரம்மா முதலிய ஜீவர்களின் தேகங்களில்.* **ஸநாதன :–** *அநாதிநித்யனான;* **ஜீவபூத:** – *ஜீவன் என்பவன்;* **மம** – *என்னுடைய;* **அம்ஶ: ஏவ** – *பின்னாம்சனே, (மத்ஸ்யம் கூர்மம் முதலியன போன்று ஸ்வரூபாம்ஶமல்ல. அதனால் பிரம்மாதிகள் சக்தியற்றவர்கள். அவர்களைச் சரணமடையாமல் என்னையே சரணமடைய வேண்டும்). அப்படியானால் ஜீவன் எதையும் செய்ய முடியாதே?* **மம அம்ஶ: –** *என் அம்ஶமான அவன்;* **ப்ருக்ருதிஸ்தானி** – *ஜடபிரகிருதியியாலான தேகத்திலுள்ள;* **மன: ஷஷ்டானி** – *மனதை ஆறாகக் கொண்ட;* – **இந்த்ரியாணி –** *ஐம்புலன்களை;* **கர்ஷதி** –

இழுத்துக்கொள்கிறான். அதாவது, பிறக்கும் போது மூலகாரணமான ஜடபிரகிருதியிலிருந்து, தன்தேகத்திலும், உயிருடன் இருக்கும்போது, அவற்றை ஶப்தம் ஸ்பர்ஶம் முதலிய விஷயங்களைக் குறித்தும், இறக்கும் போது, இந்த தேகத்திலிருந்தும், இழுத்துச் செல்கிறான்.

குறிப்பு: அம்ஶம், (1) ஸ்வரூபாம்ஶம், (2) பின்னாம்ஶம், என இருவகைப்படும். அம்சத்தையுடையது அம்ஶீ எனப்படும். அம்ஶீயின் எல்லா குணங்களும் சக்திகளும் ஸ்வரூபாம்ஶத்திற்கும் உண்டு. இவை இரண்டுக்கும் சிறிதுகூட பேதமில்லை. பின்னாம்ஶமோ சூரியனுக்கு மின்மினிப் பூச்சிபோன்று, அம்ஶீயின் அற்ப ஸாம்யத்தை மாத்திரம் பெற்றுள்ளது. அவை இரண்டுக்கும் பேதமுண்டு. (10-41 குறிப்பு பார்க்க).

பிரம்ம சூத்திரம் 2-3-46 வராஹ புராண வசனம்:-

*ஸ்வாம்சஸ்சாதோ விபின்னாம்ச: இதி த்வேதாம் ச இஷ்யதே |*
*அம்சின: யத்து ஸாமர்த்யம், யத்ஸ்வரூபம் யதா ஸ்திதி: ||*

*ததேவ நாணுமாத்ரோபி, பேத: ஸ்வாம்சாம்சினோ: க்வசித் |*
*விபின்னாம்சோ ஹ்யல்பசக்திஸ் ஸ்யாத், கிஞ்சித் ஸாத்ருச்ய*
*மாத்ரயுக் ||*

| | மூலரூபி அல்லது அம்சீ | ஸ்வரூபாம்சம் | பின்னாம்சம் |
|---|---|---|---|
| 1. | விஷ்ணு | அவருடைய அவதார ரூபங்கள் முதலியன | பிரம்மாதி ஜீவர்கள் |
| 2. | பிருதிவீ (பூமி) | மேரு பர்வதம் | மலம் முதலியன |
| 3. | அப் (ஜலம்) | அமிருத சமுத்திரம் | மூத்திரம் முதலியன |
| 4. | தேஜஸ் (அக்னி) | ப்ரளய காலாக்னி | மின்மினிப் பூச்சி |

ஜீவன் இந்திரியங்களை இழுத்துக்கொள்ளுதல் அவனுடைய சொந்த சாமர்த்தியமல்ல என்கிறார்.

8. शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥

ஶரீரம் யத³வாப்னோதி, யச்சாப்யுத்க்ராமதீச்வர: |
க்³ருஹீத்வைதானி ஸம்யாதி, வாயுர் க³ந்த⁴ானிவாஶயாத் || 8

**ஈச்வர:** - விஷ்ணு; **சரீரம்** - ஜீவனின் தேகத்தை; **யத்** - யதா - எப்போது; **அவாப்னோதி** - அடைகிறாரோ; (அப்போது ஜீவன் விஷ்ணுவால் பிரேரிக்கப்பட்டு, இந்திரியங்களை இழுக்கிறான்) **யத்** – யதா - எப்பொழுது; **உத்க்ரா மதி ச** – (தேகத்திலிருந்து ஜீவனை எடுத்துக்கொண்டு) வெளியேறு கிறாரோ; (அப்போது), **ஏதானி** - இந்த இந்திரியங்களின் சூக்ஷமமான அம்சங்களின் ஒரு பாகத்தை; **வாயு:** - காற்று; **ஆஸயாத்** - புஷ்பம் முதலிய இடங்களிலிருந்து; **கந்தான் இவ** - வாசனையுள்ள புஷ்பம் முதலியவற்றின் சூக்ஷமமான அம்சங்களின் ஒரு பாகத்தை அடித்துச் செல்வதுபோல; **க்ருஹீத்வா** - எடுத்துக்கொண்டு; **ஸம்யாதி** – (வேறு உலகம்) செல்கிறான்.

**2–ம் அர்த்தம்:** (ஜீவன்) **யத்** - யதா - எப்போது; **சரீரம் அவாப்னோதி** - தேகத்தை அடைகிறானோ; (அப்போது), **ஈச்வர;** விஷ்ணு; **ஏதானி** - இந்த இந்திரியங்களை; **க்ருஹீத்வா** - எடுத்துக் கொண்டு; **ஸம்யாதி** - அவனுடைய (தேகத்தை) அடைகிறார். **யத்** - யதா - **உத்க்ராமதி ச** - ஜீவன் எப்போது தேகத்திலிருந்து வெளியேறுகிறானோ; (அப்போது) விஷ்ணு இவைகளை எடுத்துக்கொண்டு வேறு உலகம் செல்கிறார். (**வாயு: கந்தானிவ ஆசயாத்** - முதல் அர்த்தமே).

**குறிப்பு:** எல்லா இந்திரியங்களைப் பிரேரிப்பதும், விஷ்ணுவின் அதீனமாதலால், உலகமாகிற மரத்தை வெட்டுவதற்கு அவரையே சரணமடைய வேண்டும்.

இந்திரியங்களில் பிரேரிப்பவராக இருக்கும் ஸ்ரீஹரி, அவற்றின் மூலம் விஷயங்களை அநுபவிக்கிறார் எனக் கூறுகிறார்.

9. श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयान् उपसेवते ॥

ஶ்ரோத்ரம் சக்ஷுஸ் ஸ்பர்ஶனம் ச, ரஸனம் க்[4]ராணமேவ ச |
அதி[4]ஷ்ட[2]ாய மனஸ்சாயம், விஷயான் உபஸேவதே || 9

**அயம்** - இந்த விஷ்ணு; **ஶ்ரோத்ரம்** – (ஜீவனின்) காதையும்; **சக்ஷு:** – கண்ணையும்; **ஸ்பர்ஶனம் ச** - தோலையும்; **ரஸனம்** - நாக்கையும்; **க்ராணம் ச** - மூக்கையும்; **மன: ச** — மனதையும்; **அதிஷ்டாய ஏவ** - பிரேரிப்பவராகவே இருந்து கொண்டு; **விஷயான்** - (முறையே) சப்தம், ரூபம், ஸ்பர்சம், ரஸம், வாசனை ஆகிய விஷயங்களை; **உபஸேவதே** - அநுபவிக்கிறார்.

குறிப்பு: பூர்ணானந்தமுள்ளவரும், நித்யத்ருப்தரும், அவாப்த ஸமஸ்தகாமருமான, ஸ்ரீஹரி, ப்ராகிருத விஷயங்களின் ஸாரபாகத்தை மாத்திரம் அநுபவிக்கிறார். ஆகவே, ஸாரபோக்தா எனப்படுகிறார். பிரம்ம சூத்திரம் 1-2-11ல் பிருஹத்ஸம்ஹிதா வசனம். ஒரே விஷ்ணு, ஆத்மா, அந்தராத்மா என்ற இரு ரூபங்களுடன் ஜீவர்களின் ஹ்ருதயத்தில் இருந்துகொண்டு, கர்ம பலனின் ரஸத்தைக் குடிக்கிறார். பாத்ம வசனம்:– இந்த ஸ்ரீஹரி புண்ணிய கர்மத்தின் பலனையே குடிக்கிறார். பாபகர்மத்தின் பலனைக் குடிப்பதில்லை. பூர்ணானந்தராயினும் இதை ஏன் குடிக்கிறார் என்று யாராலும் அறியப்படவில்லை. அநச்னன் அன்யோ அபிசாகசீதி பகவான் சாப்பிடாமலேயே பிரகாசிக்கிறார், என்ற ஆதர்வண சுருதிக்கு, பாபகர்ம பலத்தின் போகமும், பராதீனமான போகமும் இல்லை, என்று அர்த்தம். சுப பலத்தின் போகமுண்டு.

பகவானுக்கு நைவேத்தியத்தை ஸமர்ப்பிக்கையில், கபிலரூபியான நீர், கண்ணால் பாரும். நரஸிம்ஹ ரூபியான நீர் மூக்கினால் முகரும், பரசுராம ரூபியான நீர், வாயினாலும், கூர்ம ரூபியான நீர், நாக்கினாலும் ருசிபாரும் என நாம் வேண்டுவதையும் கவனிக்க.

*பகவான் அசுபத்தைப் புசிப்பதில்லை என்றும், அவர் கண்ணுக்குப் புலப்படாதவர் என்றும் கூறுகிறார்.*

10. उत्क्रामन्तं स्थितं वाऽपि भुञ्जानं वा गुणान्वितम् ।
विमूढाः नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥

உத்க்ராமந்தம் ஸ்தி[2]தம்வாSபி, பு[4]ஞ்ஜானம் வா கு[3]ணான்விதம் |
விமூட[4]ா: நாநு பஶ்யந்தி, பஶ்யந்தி ஜ்ஞான சக்ஷுஷ: || 10

**உத்க்ராமந்தம்** – *(ஜீவனை எடுத்துக்கொண்டு, தேகத்திலிருந்து) வெளியே செல்பவரும்;* **வா** – *அல்லது;* **ஸ்திதம்** – *(தேகத்திலேயே) இருப்பவரும்;* **வா** – *அல்லது;* **குண அன்விதம்** – *புண்யத்துடன் கூடிய பலனையே;* **புஜ்ஞானம்** – *புசிப்பவருமான பகவானை;* **ஜ்ஞான சக்ஷுஷ:** *ஞானக் கண்ணைப் பெற்றவர்கள்;* **பஶ்யந்தி** – *காண்கின்றனர்.* **விமூடா:** – *ஆழ்ந்த அஜ்ஞானமுடையோர்;* **ந அநுபச்யந்தி** – *காண்பதில்லை. (அவர் புலப்படாதிருப்பதற்கு, நம் அஜ்ஞானமே காரணமாகும்)*

*முயற்சித்தால் அவரைக் காணமுடியுமா? என்றால் கூறுகிறார்.*

11. यतन्तो योगिनश्चैनं पश्यन्ति आत्मन्यवस्थितम् ।
यतन्तोऽपि अकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥

யதந்தோ யோகி$^{3}$னஸ்சைனம், பஶ்யந்தி ஆத்மனி அவஸ்திதம் |
யதந்தோऽபி அக்ருதாத்மானோ, நைனம் பஶ்யந்தி அசேதஸ: || 11

**யோகின** - ஞானோபாயத்தையுடையவர்கள்; **யதந்த:** - யதமானா: - முயற்சிப்பவர்களாய்; **ச** – மேலும் (ஞானத்தைப் பெற்று); **ஆத்மனி** - தேகத்தில்; **அவஸ்திதம்** – வீற்றிருக்கும்; **ஏனம்**; இந்த விஷ்ணுவை; **பஶ்யந்தி** – பார்க்கின்றனர். **அக்ருத ஆத்மான:** – அசுத்த புத்தியுள்ளவர்கள்; **யதந்த:** - யதமானா:- அபி - முயற்சித்தாலும்கூட; **அசேதஸ:** – விவேகமற்றவர் களாகி; **ஏனம்** - இந்த விஷ்ணுவை; **ந பஶ்யந்தி** - பார்ப்ப தில்லை.

*சுலோகம் 2ல் வேர்போன்ற விஷ்ணு பல ரூபங்களினால் எங்கும் அந்தர்யாமியாய் இருக்கிறார் எனக்கூறியதை 4 சுலோகங்களில் (12 முதல் 15) விவரிக்கிறார்.*

12. यदादित्यगतं तेजो जगत् भासयतेऽखिलम् ।
यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥

யத$^{3}$ாதி$^{3}$த்யக$^{3}$தம் தேஜோ, ஜக$^{3}$த் ப$^{4}$ாஸயதேऽகி$^{2}$லம் |
யச்சந்த்ரமஸி யச்சாக்$^{3}$னௌ, தத்தேஜோ வித்தி$^{4}$ மாமகம் || 12

**ஆதித்யகதம்** - சூரியனிடமுள்ள; **யத் தேஜ:** – எந்தப் பிரகாஶப்படுத்தும் சக்தியும்; **சந்த்ரமஸி யத் ச** - சந்திரனிட முள்ள எந்த சக்தியும்; **அக்னௌ யத் ச** - நெருப்பிடமுள்ள எந்த சக்தியும்; **அகிலம் ஜகத்** - உலகமனைத்தையும்; **பாஸயதே** - பிரகாசப்படுத்துகிறதோ, **தத்** - அது; **மாமகம்** - என்னுடைய தென்றும், என் அதீனமானதென்றும்; **வித்தி** – அறிவாயாக.

**குறிப்பு:** இது கடோபநிஷத்தின் அர்த்தமே. 1-3-22 பிரம்ம சூத்திரம்

*தமேவ பாந்தம் அநுபாதி ஸர்வம், தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி |*

பாத்மத்தில் - சூரியனின் தபிக்கும், பக்குவப்படுத்தும், உலர்த்தும் சக்திகளும்கூட அவனுடையவையல்ல, ஸ்ரீ நாராயணனுடையவையே எனக்கூறப்பட்டுள்ளது.

*தாபினீ பாசினீ சைவ, சோஷிணீ ச ப்ரகாசினீ*
*நைவ ராஜன் ரவேஸ் சக்தி:, சக்திர் நாராயணஸ்ய ஸா*

அனைத்தையும் தாங்கும் பூமியின் சக்தியும், மரம் செடிகளைப் போஷிக்கும் சந்திரனின் சக்தியும், தம்முடையதே என்கிறார்.

13. गां आविश्य च भूतानि धारायाम्यह मोजसा ।
पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ।।

க$^{3}$ாம் ஆவிஶ்ய ச பூ$^{4}$தானி, த$^{4}$ாரயாம்யஹ மோஜஸா |
புஷ்ணாமி சௌஷதீ$^{4}$ஸ்ஸர்வா:, ஸோமோ பூ$^{4}$த்வா ரஸாத்மக: || 13

**அஹம்** – நான்; **காம் ச** – பூமியையும்; **ஆவிச்ய** – நன்கு உட்புகுந்து; **ஒஜஸா** – என் சக்தியினால்; **பூதானி** – எல்லாப் பொருள்களையும்; **தாரயாமி** – தாங்குகிறேன். **ரஸ ஆத்மக:** – அமிருதரஸத்தின் ஸ்வரூபியான; **ஸோம: ச** – (ஸௌம்யத்வாத் – பார்க்க ஆழகாயிருப்பதால்) ஸோமன் என்ற பெயருள்ள வனாய், சந்திரனின் உள்ளேயும்; **பூத்வா** – இருந்து கொண்டு; **ஸர்வா: ஒஷதீ :**– எல்லா மரம்செடி கொடி, பயிர்களையும்; **புஷ்ணாமி** – வளரச் செய்கிறேன்.

14. अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापान समायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ।।

அஹம் வைஶ்வாநரோ பூ$^{4}$த்வா, ப்ராணினாம் தே$^{3}$ஹமாஶ்ரித: |
ப்ராணாபான ஸமாயுக்த:, பசாம்யன்னம் சதுர்வித$^{4}$ம் || 14

**அஹம்** – நான்; **வைச்வாநர:** – (விச்வநர ஸம்பந்தித் வாத் – ஸகலஜனங்களுக்கும் ஆஶ்ரயனாயிருப்பதால்) வைஶ்வாநரன் என்ற பெயருள்ளவனாய், அனைவரின் வயிற்றிலுள்ள நெருப்பில்; **பூத்வா** – இருந்துகொண்டு; **ப்ராணினாம்** – உயிருள்ள பொருள்களின்; **–தேஹம் ஆஶ்ரித:** – உடலில் இருந்துகொண்டு; **ப்ராண அபான ஸமாயுக்த:** – முக்கிய வாயுவின் ரூபங்களான (4–27) ப்ராணன், அபானன், என்ற இருவர்களுடன் கூடினவனாய்; **சதுர்விதம்** – நான்கு வகையான; **அன்னம்** – (அத்யதே இதி) உணவுப் பொருள்களை; **பசாமி** – பக்குவப்படுத்தி ஜீரணிக்கச் செய்கிறேன்.

குறிப்பு: நான்குவிதமான உணவுப் பொருள்கள்: (1) **பக்ஷ்யம்** – பற்களால் கடித்துத் தின்னப்படும் முறுக்கு முதலியன. (2) **போஜ்யம்** – பற்களினாலும் நாக்கினாலும் குழைத்துத்தின்னப்படும் ஸாதம் முதலியன. (3) **லேஹ்யம்** – நாக்கினால் மாத்திரம் சுவைத்து தின்னப்படும், தேன் முதலியன. (4) **சோஷ்யம்** – கடைவாய்ப் பற்களால் கடித்து, சாற்றை மாத்திரம் உறிஞ்சப்படும் கரும்பு முதலியன (அல்லது) **பேயம்** – குடிக்கப்படும் திரவங்கள்.

15. सर्वस्य चाहं हृदि सन्निविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो वेदान्तकृत् वेदविदेव चाहम् ॥

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி$^3$ ஸன்னிவிஷ்டோ, மத்தஸ் ஸ்ம்ருதிர்
ஜ்ஞானமபோஹனம் ச |
வேதை$^3$ஸ்ச ஸர்வை ரஹமேவ வேத்$^3$யோ, வேத$^3$ாந்தக்ருத்
வேத$^3$விதே$^3$வ சாஹம் || 15

**ச** – மேலும்; **அஹம் –** *நான்;* **ஸர்வஸ்ய** — *எல்லோருடைய;* **ஹ்ருதி** – *ஹிருதயத்திலும்;* **ஸம் நிவிஷ்ட:** – *நன்கு உட்புகுந்துளேன்.* **மத்த:** – *என்னிடமிருந்தே;* **ஸ்ம்ருதி:** – *ஞாபகமும்;* **ஜ்ஞானம் –** *அறிவும்;* **அபோஹனம் ச** – *விபரீத ஞானமும்; (***பவதி** – *உண்டாகிறது).* **அஹம் ஏவ** – *நானே;* **ஸர்வை: வேதை: ச** – *எல்லா வேதங்களினாலும்;* **வேத்ய :-** *(பரமமுக்கியவ்ருத்தியால்) அறியத் தகுந்தவன்.* **வேதாந்தக்ருத்** – *வேதங்களின் அர்த்தத்தை (***அந்த:–** *நிர்ணயம் 2–16) நிர்ணயிக்கும் பிரம்மசூத்திரங்களை வேத வியாஸ ரூபத்தினால் இயற்றினவன் (13–5)* **வேதவித்ச** – *வேதங்களின் உண்மையை அர்த்தத்தை அறிந்தவனும்;* **அஹம் ஏவ –** *நானே.*

**குறிப்பு: வேதங்களில், மற்ற தேவர்களையும், பல கர்மங்களையும் குறிக்கும் பதங்களும், ஸ்வரங்களும், எழுத்துக்களும், தோஷங்களைக் கூறும் துக்கீ, பத்தன், முதலிய பதங்களும், பகவானையே பரமமுக்கிய விருத்தியால் கூறுகின்றன, என்று பிரம்மசூத்திரம் முதல் அத்தியாயத்தின் நான்கு பாதங்களிலும் நிரூபிக்கப்பட்டுள்ளது.**

*சு.1 ல் கூறிய விஷ்ணு ஸர்வோத்தமர் என்பதை (16 முதல் 20 வரை) 5 சுலோகங்களில் விவரித்து முடிக்கிறார்.*

16. द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥

**த்$^3$வாவிமௌ புருஷௌ லோகே, க்ஷரஸ்சாக்ஷர ஏவச |**
**க்ஷரஸ் ஸர்வாணி பூ$^4$தானி, கூடஸ்தே$^2$ாऽக்ஷர உச்யதே ||** 16

**லோகே** – *அஸ்வதந்திரமான உலகில்;* **இமௌ** – *இந்த (பிரமாணங்களால் அறியப்பட்ட);* **புருஷௌ** – *சேதனர்கள் (அறிவுள்ளவர்கள்);* **த்வௌ ஏவ** – *இருவகையினரே. அவர்கள் யாவர்?* **க்ஷர: ச** – *தேக நாசமுடையவர்களும்;* **அக்ஷர: ச** – *தேக நாசமில்லாதவரும் (ஆவர்). அவ்விருவரின் ஸ்வரூபம் யாது?* **ஸர்வாணி பூதானி** – *ப்ரம்மா முதலிய எல்லா ஜீவராசிகள்;* **க்ஷர:** – *தேக நாசமுள்ளவை என்றும்;* **கூடஸ்த:–** *கூடவத் ஸ்த:* –

ஆகாயம்போல் மாறுதலில்லாது இருக்கும் லக்ஷ்மீ; **அக்ஷர:** – தேக நாசமில்லாதவள் என்றும்; **உச்யதே** – சொல்லப் படுகின்றனர்.

குறிப்பு: லக்ஷ்மீ - கூடஸ்த: அக்ஷர: என்ற ஆண்பால் சப்தங்களினால் கூறப்படுகிறாளே? என்றால்,

*புல்லிங்கேனோச்யதே ஸ்த்ரீ ச, பும்வத் சக்திமதீ க்வசித்*

ஆண்கள் போன்று சக்தியுடைய ஸ்திரீயும் சில இடங்களில் ஆண்பால் சப்தத்தினால் கூறப்படுவதால், அவ்வித சக்திபடைத்த லக்ஷ்மீயும் அவ்வாறு கூறப்படுகிறாள். பகவானின் கடாக்ஷத்தால் உலகத்தின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், நியமனம், ஞானம், அஜ்ஞானம், பந்தம், மோக்ஷம் ஆகியவற்றைத் தன் கடைக்கண்ணால் உண்டுபண்ணும் சக்தி அவளுக்குண்டு, என **துவாதச ஸ்தோத்திரம்** அத்தியாயம் 7 முதல் சுலோகம் கூறுகிறது.

17. उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्ति अव्यय ईश्वरः ॥

உத்தம: புருஷஸ் த்வன்ய: பரமாத்மேத் யுத³ாஹ்ருத: |
யோ லோகத்ரய மாவிஶ்ய, பி³ப⁴ர்த்தி அவ்யய ஈச்வர: || 17

**உத்தம: புருஷ: து** – புருஷோத்தமர் என்றஉயர்ந்த சேதனரோ; **அன்ய:** – (க்ஷர அக்ஷர சேதனர்களைக் காட்டிலும்) வேறானவர். அவைகளிடையே ஒருவரல்ல. இதற்கு என்ன பிரமாணம்? **பரம ஆத்மா இதி** – உத்தம சேதனர் என்று; **உதாஹ்ருத:** – (சேதனஸ் சேதனானாம்; ப்ரஹ்மாணி ஜீவாஸ்ஸர்வேபி; முதலிய சுருதிகளில்) சொல்லப்பட்டிருக்கிறார். அதற்கு யுக்தியையும் (அநுமானத் தையும்) கூறுகிறார். **யோ – ய:** – அவர்; **லோகத்ரயம்** – பூ:, புவ:; ஸ்வ:, என்ற மூவுலகங்களையும்; **ஆவிஶ்ய** – உட்புகுந்து; **பிபர்த்தி** – தாங்கிப்போஷிக்கிறார். மூவுலகமும் அழிகையில் உட்புகுந்தவரும் அழிவாரே! **அவ்யய:** – அழியாதவர். அது எப்படி முடியும்? **ஈஶ்வர:** அற்புத சக்திவாய்ந்தவர். ஈஶ்வரன் என்ற பெயரையுமுடையவர். (ஈஶேப்ய: வர:)

குறிப்பு: (1) யார், யாரைத்தாங்கிப் போஷிக்கிறாரோ, அவர் அவரைக்காட்டிலும் உத்தமர் என்ற அநுமானத்தை அறிக. (2) ஓர் வீடு தீப்பற்றி அழிகையில், அதனுள் இருக்கும் அக்நி ஸ்தம்பனம் என்ற அற்புத சக்திவாய்ந்தவன் அழியாமல் இருக்கிறான் அல்லவா! அதுபோல் மூவுலகங்களிலிருக்கும் பகவானும் என்று அறிக.

அந்த உயர்ந்த சேதனர் உம்மைக்காட்டிலும் வேறானவரா? என்றால், தாமே என்கிறார்.

18. यस्मात् क्षरमतीतोऽहं अक्षरादपि चोत्तमः।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः॥

யஸ்மாத் க்ஷரமதீதோSஹம், அக்ஷராத³பி சோத்தம: |
அதோSஸ்மி லோகே வேதே³ ச, ப்ரதி²த: புருஷோத்தம: || 18

**யஸ்மாத்**- எதனால்; **க்ஷரம் ச** - தேகநாசமுள்ள ப்ரம்மா முதலியவர்களை; **அதீத:** - மீறி இருக்கிறானோ; **அக்ஷராத் அபி** – தேகநாசமில்லாத லக்ஷ்மீயைக் காட்டிலும்; **உத்தம:** - உயர்ந்தவனாயிருக்கிறானோ; (அத: - அதனால்): **லோகே** - பௌருஷேய கிரந்தங்களிலும்; **வேதே ச** - அபௌருக்ஷேய மான வேதங்களிலும்; **ப்ரதித:** - பிரசித்தி பெற்ற; **புருஷோத்தம:** - புருஷோத்தமர் என்பவர்; **அஹம் ஏவ** - நானாகவே; **அஸ்மி** - இருக்கிறேன்.

குறிப்பு: (1) ஒருவரால் இயற்றப்பட்ட நூல் (புராணங்கள் முதலியன) பௌருஷேயம் எனப்படும். இவற்றில் சப்தங்கள் அநித்யமானவை. அர்த்தம் நித்யமானது. வேதங்கள் யாராலும் பகவானாலும்கூட, இயற்றப்படாது, அநாதி நித்யமாயிருப்பவை. ஆதலால் அபௌருஷேயம் எனப்படும். இவற்றில் சப்தமும் அர்த்தமும் நித்யமானவை. (2) **புருஷாப்யாம் உத்தம: புருஷோத்தம:** என்று பிரித்துக் கூறவேண்டும். புருஷேஷு உத்தம; என்றல்ல.

இவ்வாறு அறியும் ஞானியின் பலனைக் கூறுகிறார்.

19. यो मामेवं असंमूढो जानाति पुरुषेत्तमम्।
स सर्ववित् भजति मां सर्वभावेन भारत॥

யோ மாமேவம் அஸம்மூட⁴:, ஜானாதி புருஷோத்தமம் |
ஸ ஸர்வவித் ப⁴ஜதி மாம், ஸர்வப⁴ாவேன பாரத || 19

**பாரத** - பரதவம்சத்திற் பிறந்தவனே! **அஸம்மூட:** - விபரீத ஞான மில்லாதவனாய்; மித்யாவான (பொய்யான) ஸர்வோத்த மத்வம் சொல்லப்படுகிறது என்று நினைக்காமல்; **யோ** - ய: - எந்த அதிகாரி (தகுதியுள்ளவன்); **மாம்** - என்னை; **ஏவம்** - இம்மாதிரி; அதாவது, க்ஷர அக்ஷர புருஷர்களைக் காட்டிலும் உத்தமன் என, வேதம் முதலியவற்றில், பிரசித்தி பெற்றுள்ளேன் என்றவாறு; **புருஷோத்தமம்** - ஸர்வோத்தமன் என்று; **ஜானாதி** - அறிகிறானோ; **ஸ:** - அவன்; **ஸர்வவித்** - சகல வேத சாஸ்திரங்களின் அர்த்தத்தை அறிந்தவன். **மாம்** - என்னை; **ஸர்வ பாவேன** - (1) மாதா, பிதா, பந்து, ஸகா என்று

பலவாறாக (2) **பாவ:** – *பக்தி:* – *எல்லாவித பக்தியுடனும்;* **பஜதி** – *சேவிக்கிறான்.*

**குறிப்பு:** விஷ்ணு ஸர்வோத்தமர் என்பதே, சகல சாஸ்திரங்களிலும் கூறப்படுவதால், அதை அறிந்தால், சகல சாஸ்திரங்களின் அர்த்தத்தை அறிந்தவனாவான்.

இந்த தத்வத்தை எவனுக்குவேண்டுமானாலும் சொல்லலாகாது என்கிறார். (3-4-49 பிரம்ம சூத்திரம்).

20. इति गुह्यतमं शास्त्रं इतमुक्तं मयाऽनघ।
एतत् बुद्ध्वा बुद्धिमान् स्यात् कृतकृत्यश्च भारत ॥

இதி கு³ஹ்யதமம் ஶாஸ்த்ரம், இத³முக்தம் மயாऽநக⁴ |
ஏதத் பு³த்³⁴வா பு³த்³தி⁴மான் ஸ்யாத், க்ருத க்ருத்யஸ் ச ப⁴ாரத || 20

**அநக** – *பாவமற்றவனே!;* **இதி** – *இவ்வாறு;* **இதம்** – *உலகமாகிற மரத்தின் வேர்போன்றிருத்தல், ஸர்வாந்தர் யாமியாய் இருத்தல், ஸர்வோத்தமராய் இருத்தல் ஆகிய இது;* **ஶாஸ்த்ரம்** – *கற்கத்தகுந்தது.* **குஹ்யதமம்**– *மிக ரகஸ்யமானது.* **மயா** – *என்னால்;* **உக்தம்** – *உபதேசிக்கப் பட்டது. அதனால் என்ன?* **பாரத** – *பரத குலத்தில் பிறந்தவனே!;* **ஏதத்** – *இதை (யெல்லாம்);* **புத்த்வா** – *அறிந்து;* **புத்திமான்** – *அபரோக்ஷ ஞானியாகவும்;* **க்ருதக்ருத்ய: ச** – *செய்யவேண்டியதைச் செய்தவனாகவும் (முக்தனாகவும்);* **ஸ்யாத்** – *ஆவான் (என்னே பகவானின் மகிமை!)*

**குறிப்பு:** (9-1ல்) **இதம் து தே குஹ்யதமம்** என்று ஆரம்பித்த அதிரஹஸ்ய தத்வம், **இதி குஹ்ய தமம் ஶாஸ்த்ரம்** என்று இங்கு முடிகிறது.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे पुराणपुरुषोत्तम योगो नाम पञ्चदशोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஶ்ரீமத் பகவத்கீதாஸு, உபநிஷத்ஸு,
ப்ரஹ்ம வித்யாயாம், யோகசாஸ்த்ரே, ஶ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
புராண புருஷோத்தமயோகோ நாம பஞ்சதஶோऽத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத்தழுவிய புராண புருஷோத்தமயோகம்*
*என்ற பதினைந்தாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---



# 16
# தேவாஸுர ஸம்பத் விபாக யோகம்

(24 சுலோகங்கள்)

## பதினாறாம் அத்தியாயத்தின் சுருக்கம்

ஜீவர்கள் ஸ்வபாவத்திலேயே மூவகையினர். *(1)* ஸாத்விகர் *(2)* ராஜஸர் *(3)* தாமஸர், தேவர்களும் மனுஷ்யோத்தமர்களும் ஸாத்விகர். மத்யம மனிதர்கள் ராஜஸர். அஸுரர்களும், அதம மனிதர்களும் தாமஸர்.

தேவர்களின் ஸ்வபாவம், மனிதர்களிடையே சிலரிடமும், அஸுரர்களின் ஸ்வபாவம் மற்றும் சிலரிடமும் அமைந்திருப்பதால், தேவாஸுரர்களின் ஸ்வபாவங்களை இங்கு கூறுகிறார். முதலில், நற்குணம்படைத்த தேவர்கள் சிறந்தவர்களாதலால், அவர்களின் 26 குணங்களைக் கூறுகிறார்.

தமக்குரிய கர்மங்களைச் செய்தல், உடல் சுத்தி மனச்சுத்தியுடன் இருத்தல், வேதம் முதலிய சாஸ்திரங்களை ஓதுதல், ஞானத்தைப் பெறுதல், பிறருக்குத் தீங்கிழைக்காதிருத்தல், தேவகுணங்களில் முக்கியமானவை. நாம் இவற்றை நம்மிடம் பெருக்கிக்கொள்ள முயலவேண்டும்.

அஸுரர்களோ, சாஸ்திரவிதி விலக்குகளுக்குக் கட்டுப்படாமல், தம்மிஷ்டப்படி நடப்பவர்கள். உலகம், முத்துச் சிப்பியில் தோன்றும் வெள்ளிபோல் தோற்றமே தவிர, உண்மையில் இல்லை. அதைப் படைக்கும் ஈசுவரனும் இல்லை. நானே ஈசுவரன் எனக்குச் சமமானவன் யாருமில்லை. இவ்வுலகில் விரும்பும் இன்பங்களை அனுபவிப்பதே மேலானது என்றெல்லாம் கூறிக்கொண்டு, தாமும் கெட்டு, உலகையும் கெடுப்பார்கள். அவர்கள் செல்வத்தின் கொழுப்பால் யாகம் முதலிய நற்காரியம் செய்தாலும், சாஸ்திரவிதிக்குப் புறம்பாகவும் தம் பெருமையைக் காட்டவும்தான் செய்பவர்கள்.

பகவான் அவர்களைப் பன்முறை அஸுரப்பிறவிகளில் பிறப்பித்துக் கடைசியில் நித்ய நரகமான தமஸ்ஸில் வீழ்த்துகிறார். ஆகவே நாம் அந்த அஸுர குணங்களை அறவே

ஒழிக்க முற்படவேண்டும். அவற்றில் முக்கியமானவை மூன்று - காமம், கோபம், லோபம்.

மேலும் எக்காரியத்தைச் செய்வதற்கும், நமக்குப் பிரமாணமாயுள்ளது சாஸ்திரமே. கள்குடித்தல், பசுவைக் கொல்லுதல் - இவ்விரண்டில் எது பெரிய பாவம்? என்றால், முதலாவது மகா பாதகம், இரண்டாவது உப பாதகம் என்று சாஸ்திரம் நிர்ணயிக்கிறது. நமக்கு மாறாகத் தோன்றும். ஆகவே நாம் சாஸ்திர முறையைப் பின்பற்றி கர்மங்களைச் செய்து, பகவத் கிருபைக்குப் பாத்திரமானால், இங்கு ஆனந்தத்தையும், அங்கு பேரானந்தத்தையும் அடைவோம்.

*15-5ல்,* புருஷார்த்தமான ஞானத்திற்கும் மோக்ஷத்திற்கும், ஸாதனங்களைச் சுருக்கமாகக் கூறினார். *15-11ல்,* 'முயன்றாலும் அறிவதில்லை' என்று அவற்றிற்கு விரோத மானவைகளையும் கூறினார். இவ்விரண்டும் முறையே தேவாஸுரர்களின் லக்ஷணமானதால், அவற்றை இந்த அத்தியாயத்தில் விஸ்தரிக்கிறார். மோக்ஷஸாதனத்தை அநுஷ்டிப்பவர்கள், அதற்கு விரோதமானவைகளை அவசியம் விட்டுவிடவேண்டியதற்காக, அவைகளையும் கூறுகிறார். முதலில், அவ்விரண்டில் சிறந்ததான, தேவர்களின் *26* லக்ஷணங்களை முதல் மூன்று சுலோகங்களில் கூறுகிறார்.

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார்.

1. अभयं सत्वसंशुद्धिः ज्ञानयोगव्यवस्थितिः ।
दानं दमश्च यज्ञश्च स्वाध्यायः तप आर्जवम् ॥

அப[4]யம் ஸத்வஸம்ஶுத்தி[4]:, ஜ்ஞானயோக வ்யவஸ்தி[2]தி: |
த[3]ானம் த[3]மஸ்ச யஜ்ஞஸ்ச, ஸ்வாத்[4]யாய: தப ஆர்ஜவம் || 1

*(1)* **அபயம்** - *(12-15)* தான் பிறரைக்கண்டு பயப்படாதிருத்தல், தன்னைப்பார்த்து பிறர் பயப்படாதிருத்தல். *(2)* **ஸத்வ ஸம்சுத்தி:** - மனச்சுத்தி *(3)* **ஜ்ஞானயோக வ்யவஸ்திதி:** - ஞானோபாயத்தில் நிலைத்திருத்தல். *(4)* **தானம்** - நியாயமாகச் சம்பாதித்த பொருள்களை ஸத்பாத்திரத்தில் கொடுத்தல். *(5)* **தம:** दमः - இந்திரியங்களை அடக்குதல். *(6)* **யஜ்ஞ:** - ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களை அல்லது ப்ரம்ம யஜ்ஞம் முதலியவற்றைச் செய்தல் *(7)* **ஸவாத்யாய:** - வேதம் ஓதுதல். *(8)* **தப:** - பிரம்மசரியம் முதலியவற்றைக் கடைப்பிடித்தல். *(9)* **ஆர்ஜவம்** - *(13-8)* நேர்மை.

2. अहिंसा सत्यमक्रोधः त्यागः शान्तिः अपैशुनम् ।
दया भूतेषु अलोलुत्वं मार्दवं ह्रीः अचापलम् ॥

அஹிம்ஸா ஸத்ய மக்ரோத$^4$:, த்யாக$^3$: ஶாந்தி: அபைஶுனம் |
த$^3$யா பூ$^4$தேஷு அலோலுத்வம், மார்த$^3$வம் ஹ்ரீ: அசாபலம் || 2

*(10)* **அஹிம்ஸா** - *பிறருக்கு வேதங்கள் தடுத்த தீங்கிழைக்காமை. (11)* **ஸத்யம்** - *உண்மை (பிராணிகளுக்கு ஹிதமானதை) பேசுதல். (12)* **அக்ரோத** - *கோபமின்மை. (13)* **த்யாக:** - *ஔதார்யம். (14)* **சாந்தி:** - *பகவானிடம் மனதை நிலைநிறுத்தல். (15)* **அபைஶுனம்** - *கோள் சொல்லாமை. (16)* **பூதேஷு தயா** - *பிராணிகளிடம் கருணை, பிறர் துக்கத்தைப் பொறுக்காது உபகாரம் செய்யும் விருப்பம். (17)* **அலோலுத்வம்** - *சிற்றின்பங்களில் ஆசையின்மை (***அலோலுப்த்வம்** - *பிறர் பாடம்) (18)* **மார்தவம்** - *மிருதுவாய் இருத்தல், தன்னை ஹிம்சிப்பவரிடம்கூட விரோதமின்மை. (19)* **ஹ்ரீ:** - *தகாததைச் செய்வதில் நாணம் (லஜ்ஜை). (20)* **அசாபலம்** - *ஸ்திரமாய் இருத்தல்.*

3. तेजः क्षमा धृतिः शौचं अद्रोहो नातिमानिता ।
भवन्ति संपदं दैवीं अभिजातस्य भारत ॥

தேஜ: க்ஷமா த்$^4$ருதி: ஶௌசம், அத்$^3$ரோஹோ நாதிமானிதா |
ப$^4$வந்தி ஸம்பத$^3$ம் தை$^3$வீம், அபி$^4$ஜாதஸ்ய ப$^4$ாரத || 3

*(21)* **தேஜ:** - *பிறரால் தோல்வியடையாமை. (22)* **க்ஷமா** - *பொறுமை (10-4) (23)* **த்ருதி:** - *தைரியம். (24)* **சௌசம்** - *மனத்தூய்மை, உடல் தூய்மை (13-8) (25)* **அத்ரோஹ:** - *பிறரின் தொழிலுக்கு இடையூறு செய்யாதிருத்தல், (26)* **ந அதி மானிதா** - *அதி அஹங்காரமின்மை - இந்த 26 குணங்களும்;* **பாரத** - *பரத குலத்தில் பிறந்தவனே!* **தைவீம் ஸம்பதம்** - *தேவர்களுக்குரிய (ஸாத்விகமான) செல்வத்தை;* **அபிஜாதஸ்ய** - *அபி - நோக்கி,* **ஜாதஸ்ய** - *பிறந்த) அடைந்தவனுக்கு;* **பவந்தி** - *(லக்ஷணங்களாக) உள்ளன.*

**குறிப்பு:** இந்த குணங்களையே முக்திபெற விரும்புகிறவர்கள் அவசியம் சம்பாதிக்கவேண்டும்.

விட்டுவிடுவதற்காக அஸுரர்களின் லக்ஷணங்களைக் கூறுகிறார்.

4. दम्भो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च ।
अज्ञानं च अभिजातस्य पार्थ संपदमासुरीम् ॥

த³ம்பே⁴ா த³ர்ப்போSபி⁴மானஸ் ச, க்ரோத⁴: பாருஷ்ய மேவ ச |
அஜ்ஞானம் ச அபி⁴ஜாதஸ்ய, பார்த்த² ஸம்பத³ மாஸுரீம் || 4

**பார்த்த** - குந்தீ புத்திரனே! *(1)* **தம்ப:**- *(13-8)* ஆடம்பரம், தன் தாழ்மையை அறிந்தும், மேன்மையை வெளியிடுதல். *(2)* **தர்ப்ப:**- இறுமாப்பு, பயப்படவேண்டிய காரணமிருந்தும், கொழுப்பால் பயத்தை அறியாதிருத்தல் *(3)* **அபிமான: ச - மான** - சாஸ்திரம் முதலிய பிரமாணங்களை, அபி - மீறுதல். *(4)* **க்ரோத:** - கோபம், பிறரைத் துன்புறுத்தும் மனப்பான்மை. *(5)* **பாருஷ்யம் ச** - கடுமையாக இருத்தலும். *(6)* **அஜ்ஞானம் ச** - அறிவின்மையும், விபரீத ஞானமும் ஆகிய ஆறும்; **ஆஸுரீம் ஸம்பதம்** - அஸுரர்களுக்குரிய செல்வத்தை; **அபி ஜாதஸ்ய ஏவ** - அடைந்தவனுக்கே; (**பவந்தி** - லக்ஷணங்களாக உள்ளன).

இவ்விரு செல்வங்களின் பலனைக்கூறி, தன்னிடம் அஸுர ஸ்வபாவத்தைச் சந்தேகித்துத் துக்கித்த அர்ஜுனனைத் தேற்றுகிறார்.

5. दैवी संपत् विमोक्षाय निबन्धाय आसुरी मता ।
मा शुचः संपदं दैवीं अभिजातोऽसि पाण्डव ॥

தை³வீ ஸம்பத் விமோக்ஷாய, நிப³ந்த⁴ாய ஆஸுரீ மதா |
மா ஶுசஸ் ஸம்பத³ம் தை³வீம், அபி⁴ஜாதோSஸி பாண்ட³வ || 5

**தைவீ ஸம்பத்** - தேவர்களுக்குரிய செல்வம்; **விமோக்ஷாய** - பலவித அல்லது உத்தமமான மோக்ஷத்தின் பொருட்டும்; **ஆஸுரீ** -அஸுரர்களுக்குரிய செல்வம்; **நிபந்தாய** (நி - நீசஸ்தானே பந்தாய) - தமஸ் என்ற நித்ய நகரத்தில் கட்டுண்டு இருப்பதன் பொருட்டும்; என, **மதா** - கருதப்படுகிறது. **பாண்டவ** - பாண்டுவின் புத்திரனே!; **மா சுச:** - துக்கப்படாதே; **தைவீம் ஸம்பதம்** - தேவர்களுக்குரிய செல்வத்தை; **அபிஜாத: அஸி** - நீ லக்ஷணமாக அடைந்திருக்கிறாய். (**செல்வம்** - மேன்மை)

பல பிறவிகளிருக்கையில் தேவர் அஸுரர் என்ற இரண்டை மாத்திரம் கூறியதின் கருத்து யாது? என்றால் இவ்விரு ஸ்வபாவங்களே, எல்லாப் பிறவிகளிலும் அமைந்துள்ளன என்கிறார்.

6. द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन् दैवः आसुर एव च ।
दैवो विस्तरशः प्रोक्तोऽऽसुरं पार्थ मे श्रृणु ॥

த்[3]வௌ பூ[4]தஸர்க்கௌ[3] லோகேऽஸ்மின் தை[3]வ: ஆஸுர ஏவ ச |
தை[3]வோ விஸ்தரஶ: ப்ரோக்த:, ஆஸுரம் பார்த்த[2] மே ஶ்ருணு || 6

**பார்த்த** – குந்தீ புத்திரனே!; **அஸ்மின் லோகே** – *இவ்வுலகத்தில்;* **பூதஸர்க்கௌ** – *ப்ராணிகளின் ஸ்ருஷ்டிகள் அல்லது ஸ்வபாவங்கள்;* **தைவ:** – *தேவர்களுக்குரியது என்றும்;* **ஆஸுர: ச** – *அஸுரர்களுக்குரியது என்றும்;* **த்வௌ ஏவ** – *இரண்டே.* **தைவ:** –*தேவர்களுக்குரிய ஸ்வபாவம்;* **விஸ்தரஶ:** – *முதல் 3 சுலோகத்தில்) விரிவாக;* **ப்ரோக்த:** – *நன்கு கூறப்பட்டது.* **ஆஸுரம்** – *(சு. 4ல் சுருக்கமாக்கூறிய) அஸுரர்களுக்குரிய ஸ்வபாவத்தை;* **மே** – *என்னிடமிருந்து;* **விஸ்தரஶ:** – *விரிவாக;* **ஶ்ருணு** – *கேள்.*

*அதை 12 சுலோகங்களில் (7 முதல் 18 வரை) வர்ணிக்கிறார்.*

7. प्रवृत्तिं च निवृत्तिं च जनाः न विदुरासुराः ।
न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते ॥

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச, ஜனா: ந விது[3]ராஸுரா: |
ந ஶௌசம் நாபி சாசாரோ, ந ஸத்யம் தேஷு வித்[3]யதே || 7

**ஆஸுரா: ஜனா:** – *அஸுரஸ்வபாவமுள்ள ஜனங்கள்;* **ப்ரவ்ருத்திம் ச** – *விதிக்கப்பட்ட தர்மங்களைச் செய்வதையும்;* **நிவ்ருத்திம் ச** – *தடுக்கப்பட்ட அதர்மங்களைச் செய்யாமல் இருப்பதையும் (விதிவிலக்குகளை);* **ந விது:** – *அறியார்கள்.* **தேஷு** – *அவர்களிடம்;* **ஶௌசம்** – *உடல் சுத்தியும், மனச் சுத்தியும்;* **ந வித்யதே** – *இல்லை.* **ஆசார: அபி** – *நன்னடத்தையும்;* **ந** – *இல்லை;* **ஸத்யம் ச ந** – *உண்மை பேசுதலும் இல்லை.*

8. असत्यं अप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।
अपरस्पर संभूतं किमन्यत् कामहैतुकम् ॥

அஸத்யம் அப்ரதிஷ்டம் தே, ஜக[3]தாஹு: ரனீஶ்வரம் |
அபரஸ்பர ஸம்பூ[4]தம், கிமன்யத் காமஹைதுகம் || 8

**தே** – *அவர்கள்;* **ஜகத்** – *உலகம்;* **அஸத்யம்** – *(1) ஸத்யன் எனப்படும் விஷ்ணுவைப் பெற்றிராதது. (2) உண்மையல்ல.*

மித்யை. **அப்ரதிஷ்டம்** - *(1) பிரதிஷ்டா எனப்படும் விஷ்ணு வில்லாதது. (2) (முத்துச்சிப்பியில் தோன்றும் வெள்ளிபோல்) ஞானத்தால் பாதிக்கப்படுவது.* **அநீஶ்வரம்** - *(1) ஈஶ்வரன் எனப்பட்ட விஷ்ணுவில்லாதது. (2) பிரேரிப்பவன் இல்லாதது.* **அபரஸ் பர ஸம்பூதம்** - *(1) (3-14ல்) ஜீவர்கள் அன்னத்தினால் உண்டாகின்றனர். அன்னம் மழையினால் உண்டாகிறது என்றவாறு ஒன்றிலிருந்து ஒன்று உண்டாவதில்லை. (2) ஒருவனிடமிருந்து மற்றவன் உண்டாவதில்லை.* **கிம்** - *பின் எவ்வாறு உண்டாகிறது?* **அன்யத்** - *(இருக்கும் பொருள்கள், குதிரைக் கொம்பு போன்ற இல்லாத பொருள்கள், ஆகிய வற்றைக் காட்டிலும்) வேறானது. எதனால் உண்டாகிறது? (1)* **காமஹைதுகம்** - *ஆசைக்கும் காரணமான அஜ்ஞானத்தின் மாறுபாடேயாகும். உண்டாவதில்லை. (2) ஆண் பெண்களின் ஆசையால் ஆகியது என்று;* **ஆஹு:** - *சொல்வார்கள்.*

**குறிப்பு:** (1) 15-15 குறிப்பில் கூறியபடி எல்லா பதங்களுமே, பகவானைக் குறிப்பதால், ஸத்ய:, ப்ரதிஷ்டா முதலிய பதங்களும் பகவானையே குறிக்கின்றன. (2) ஸத் - இருக்கும் பொருள்கள். அஸத் - இல்லாத பொருள்கள் ஆகிய இரண்டைக் காட்டிலும் வேறானது. **ஸதஸத் விலக்ஷணம்** எனப்படும். (3) உண்மையில் விஷ்ணுவினால் படைக்கப்பட்டும், காக்கப்பட்டும், அழிக்கப்பட்டும், அதனாலே ஸத்யமுமான, உலகை அதற்குமாறாகக் கூறுவது அஸுரஸ்வபாவமாகும்.

9. एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः ।
प्रभवन्ति उग्रकर्माणः क्षयाय जगतोऽहिताः ॥

ஏதாம் த்ருஷ்டி மவஷ்டப்[4]ய, நஷ்டாத் மானோSல்ப பு[3]த்த[4]ய: |
ப்ரப[4]வந்தி உக்[3]ரகர்மாண:, க்ஷயாய ஜக[3]தோSஹிதா: || 9

**ஏதாம் த்ருஷ்டிம்** - *இந்த அறிவை;* **அவஷ்டப்ய** - *தாங்கி;* **நஷ்ட ஆத்மான:** - *(2-21ல் நாசம் = தோஷம்)* **நஷ்ட** - *துஷ்ட மான;* **ஆத்மான:** - *மனமுடையவர்களாயும்;* **அல்ப புத்தய:** - *அற்ப அறிவுள்ளவர்களாயும்;* **உக்ரகர்மாண:** - *பயங்கரமான காரியங்களைச் செய்பவர்களாயும், அல்லது உக்ர: ருத்ர: - சிவனுடைய காரியமான விபூதி பூசுதல், ஸம்ஹாரம் முதலிய காரியங்களைச் செய்பவர்களாயும்;* **ஜகத: அஹிதா:** - *உலகின் சத்துருக்களாயும்;* **க்ஷயாய** - *அநிஷ்டத்தை அடைவதின் பொருட்டு;* **ப்ரபவந்தி** - *(கலியுகத்தில்) பிறப்பார்கள்.*

10. काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विताः ।
मोहात् गृहीत्वाऽसद्ग्रहान् प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥

காம மாஶ்ரித்ய து$^{3}$ஷ்பூரம், த$^{3}$ம்ப$^{4}$மான மத$^{3}$ான்விதா: |
மோஹாத் க்$^{3}$ருஹீத்வாऽஸத் க்$^{3}$ராஹான், ப்ரவர்த்தந்தேऽஶுசி
வ்ரதா: || 10

**துஷ்பூரம்** - *(3-29) சிரமப்பட்டு நிரப்பத்தகுந்த;* **காமம்** - *ஆசையை;* **ஆஶ்ரித்ய** - *தாங்கி;* **தம்ப மான மதான் விதா:** - *ஆடம்பரம், அஹங்காரம், கொழுப்பு இவற்றுடன் கூடினவர் களாய்;* **மோஹாத்** - *விபரீத ஞானத்தின் ஸ்வபாவத்தால்;* **அஸத் க்ராஹான்** - *துஷ்ட சாஸ்திரங்களைக் கற்றதால் ஏற்படும் விபரீத நிச்சயங்களை;* **க்ருஹீத்வா** - *கைக்கொண்டு;* **அஶுசிவ்ரதா:** - *அசுத்தமான நியமங்களை உடையவர்களாய்;* **ப்ரவர்த்தந்தே** - *(சிற்றின்பங்களைப் பெற) முற்படுகிறார்கள்.*

11. चिन्तां अपरिमेयां च प्रलयान्तां उपाश्रिताः ।
कामोपभोगपरमाः एतावदिति निश्चिताः ॥

12. आशापाश शतैर्बद्धाः कामक्रोध परायणाः ।
ईहन्ते कामभोगार्थं अन्यायेन अर्थसंचयान् ॥

சிந்தாம் அபரிமேயாம் ச, ப்ரளயாந்தாம் உபாஶ்ரிதா: |
காமோபபே$^{4}$ாக பரமா:, ஏதாவதி$^{3}$தி நிஸ்சிதா: || 11

ஆஶா பாஶ ஶதைர் ப$^{3}$த்த$^{4}$ா:, காமக்ரோத$^{4}$ பராயணா: |
ஈஹந்தே காமபே$^{4}$ாகார்த்த$^{2}$ம், அந்யாயேன அர்த்த$^{2}$ ஸஞ்சயான் || 12

*11.* **அபரிமேயாம்** - *அளவிடமுடியாததும்;* **ப்ரளய அந்தாம் ச** - *மரணத்தை முடிவில் கொண்டதுமான;* **சிந்தாம்** - *ஆலோசனையை;* **உபாஶ்ரிதா:** - *கைக்கொண்டவர்களாய்;* **காம உப போக பரமா:** - *விரும்பும் பொருள்களை நன்கு அநுபவிப்பதே மேலானது என்பதில் ஈடுபட்டு;* **ஏதாவத் இதி** - *இவ்வளவுதான் என்று, (சார்வாக மதம்) அதாவது இம்மைப் பயனே உண்டு, மறுமைப்பயனில்லை என்று;* **நிஸ்சிதா:** - *தீர்மானமுள்ளவர்களாய்;*

*12.* **ஆஶா பாஶ ஶதை:** - *நூற்றுக்கணக்கான ஆசைகளாகிற கயிறுகளால்;* **பத்தா:** - *கட்டப்பட்டு;* **காமக்ரோத பாராயணா:** *ஆசையையும் கோபத்தையும், சிறந்த ஆஶ்ரயமாகக் கொண்டு;* **காமபோகார்த்தம்** - *(புஷ்பம் சந்தனம் ஸ்த்ரீ முதலிய) விஷயங் களை அநுபவிப்பதின் பொருட்டு;* **அந்யாயேன** - *நியாயமற்ற முறையால் (கொள்ளை கொலை களவு முதலியவற்றால்);*

**அர்த்த ஸஞ்சயான்** - *பொருட்குவியல்களை;* **ஈஹந்தே** - *விரும்புகின்றனர்.*

**குறிப்பு:** ஆசை என்பது ஓர் அற்புதமான சங்கிலி. அதனால் கட்டப்பட்டவர்கள், ஓடுவார்கள், அதிலிருந்து விடுபட்டவர்கள், நொண்டிபோல் நிற்பவர்கள்.

*ஆசா நாம மனுஷ்யாணாம், காசித் ஆஸ்சர்ய ச்ருங்கலா |*
*தயா பத்தா: ப்ரதாவந்தி, முக்தாஸ் திஷ்டந்தி பங்குவத் ||*

சு.11ல் கூறிய யோசனையின் விதத்தை 3 சுலோகங்களில் விவரிக்கிறார்.

13. इदमद्य मया लब्धं इमं प्राप्स्ये मनोरथम् ।
इदमस्ति इदमपि मे भविष्यति पुनर्धनम् ॥

இத[3]மத்[3]ய மயா லப்த[4]ம், இமம் ப்ராப்ஸ்யே மனோரத[2]ம் |
இத[3]மஸ்தி இத[3]மபி மே, ப[4]விஷ்யதி புனர் த[4]னம் || 13

**இதம் தனம்** - *இந்தப்பணம்;* **அத்ய** - *இன்று;* **மயா லப்தம்** - *என்னால் அடையப்பட்டது.* **இமம் மனோரதம்** - *இந்த இஷ்டத்தை;* **ப்ராப்ஸ்யே** - *நாளை அடைவேன்.* **இதம்** - *இந்தப்பணம்;* **மே** - *எனக்கு;* **அஸ்தி** - *இன்று இருக்கிறது.* **இதம் அபி** - *இந்தப்பணமும்;* **புன:** - *மறுபடியும்;* **பவிஷ்யதி** - *நாளை இருக்கப்போகிறது.*

14. असौ मया हतः शत्रुःहनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहं अहं भोगी सिद्धोऽहं बलवान् सुखी ॥

அஸௌ மயா ஹதஸ் ஶத்ரு: ஹனிஷ்யே சாப ரானபி |
ஈஶ்வரோSஹம் அஹம் பே[4]ாகீ, ஸித்தே[4]ாSஹம் ப[3]லவான் ஸுகி[2] || 14

**அஸௌ சத்ரு:** - *அந்தப் பகைவன்;* **மயா ஹத:** - *என்னால் கொல்லப்பட்டான்.* **அபரான் அபி** - *மற்ற பகைவர் களையும்கூட;* **ஹனிஷ்யே ச** - *கொல்லவும் போகிறேன்.* **அஹம் ஈஶ்வர:** - *நானே பரமேஶ்வரன்,* **அஹம் போகீ** - *நான் ஸகல இம்மை மறுமை ஸுகங்களை அநுபவிப்பவன்.* **அஹம் ஸித்த:** - *நான் முக்தன், செய்ய வேண்டியதைச் செய்தவன்.* **பலவான்** - *பலமுள்ளவன்.* **ஸுகி** - *சுகமுடையவன்.*

**குறிப்பு:** ஹிரண்யகசிபு - மதன்ய: ஜகதீச்வர: க்வாஸௌ, என்னைக் காட்டிலும் வேறான அந்த உலகத்துக்கெல்லாம் ஈசுவரன் எங்கே? என்றும்; பௌண்ட்ரக வாஸுதேவன் - வாஸு தேவோ ஹமித்யஜ்ஞ: தூதம் க்ருஷ்ணாய ப்ராஹிணோத், நானே வாஸுதேவன்

என்று கூறி கிருஷ்ணனுக்கு ஓர் தூதனை அனுப்பித்தான், என்றும்: வேனன் - மத்தோன்ய: கோ, அக்ரபுக் புமான், என்னைக் காட்டிலும் வேறான யஜ்ஞபோக்தா யார்? என்றும்; கூறியிருக்கிறார்கள். அவர்களுடைய கதி என்ன என்பது அனைவரும் அறிந்ததே.

15. आद्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्ये इत्यज्ञानविमोहिताः ॥

ஆட்[4]யோSபி[4]ஜனவானஸ்மி, கோSன்யோஸ்தி ஸத்[3]ருசோ மயா |
யக்ஷ்யே த[3]ாஸ்யாமி மோதி[3]ஷ்யே, இத்யஜ் ஞான விமோஹிதா: || 15

**ஆட்ய:** - *(நான்) செல்வம் முதலியதால் நிறைந்த வனாயும்;* **அபிஜனவான்** - *உயர்குலத்திற் பிறந்தவனாயும்;* **அஸ்மி** - *இருக்கிறேன்.* **மயா ஸத்ருஶ: -** *எனக்குச் சமமான;* **அன்ய: க:-** **வேறு எவன்,** *- அஸ்தி இருக்கிறான்? (ஒருவனு மில்லை).* **யக்ஷ்யே** *- நான் யாகம் முதலியதைச் செய்வேன் (சு. 17)* **தாஸ்யாமி** - *ஏராளமாக தக்ஷிணையையும், அன்னத்தையும் தருவேன்,* **மோதிஷ்யே** - *சந்தோஷமடைவேன்.* **இதி** - *இம்மாதிரி;* **அஜ்ஞான விமோஹிதா:-** *அறிவின்மையால் விசேஷமாக மயங்கியிருப்பார்கள்.*

*அவர்களடையும் பலனைக் கூறுகிறார்.*

16. अनेकचित विभ्रान्ताः मोहजाल समावृताः ।
प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥

அநேக சித்த விப்[4]ராந்தா:, மோஹஜால ஸமாவ்ருதா: |
ப்ரஸக்தா: காமபே[4]ாகே[3]ஷு, பதந்தி நரகேSஶுசௌ || 16

**அநேக சித்த விப்ராந்தா:-** *முற்கூறிய பலவாறான ஆலோசனைகளுடன் கூடிய மனதினால், விஶேஷமான விபரீத ஞானமுள்ளவர்களாயும்;* **மோஹஜால ஸமாவ் ருதா:** - *மனைவி, மக்கள், முதலியோரிடமுள்ள அபிமான மென்ற வலையினால் நன்கு சுற்றப் பட்டவர்களாயும்;* **காம போகேஷு** *சிற்றின்பங்களை அநுபவிப்பதில்,* **ப்ரஸக்தா:** - *ஆழ்ந்த பற்றுள்ளவர்களாயும் ஆகி;* **அஶுசௌ** *அசுத்தமான;* **நரகே** - *நரகத்தில்;* **பதந்தி** - *விழுகிறார்கள்.*

**குறிப்பு:** நரகங்கள் மூவுலகத்தினுள்ளே, தென்திசையில் பூமிக்குக் கீழேயும், அண்டஜலத்திற்கு மேலேயும் உள்ளன. அவை அநேகமாயினும் பாகவதம் 5-ம் ஸ்கந்தத்தின் கடைசியில் 28 நரகங்கள் வர்ணிக்கப் பட்டுள்ளன. அவற்றிலும் ஏழு முக்கியமானவை. (1) ரௌரவம் (2) மஹாரௌரவம் (3) வன்ஹி (4) வைதரணீ (5) கும்பீபாகம் - இவ்வைந்தும்

அநித்யமானவை (6) தாமிஸ்ரம் (7) அந்ததாமிஸ்ரம் - இவ்விரண்டும் நித்யமானவை பிரளயத்திலும் அழியாதவை. (சு. 20 பார்க்க) பிரம்மசூத்திரம் 3-1-16.

யாகம் முதலியதைச் செய்த அவர்கள் எவ்வாறு நரகத்தில் விழுவார்கள்? என்றால் கூறுகிறார்.

17. आत्मसंभाविताः स्तब्धाः धनमानमदान्विताः ।
यजन्ते नाम यज्ञैस्ते दम्भेन अविधिपूर्वकम् ॥

ஆத்ம ஸம்ப⁴ாவிதா: ஸ்தப்த⁴ா, த⁴ன மான மத³ான்விதா: |
யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே, த³ம்பே⁴ன அவிதி⁴ பூர்வகம் || 17

**ஆத்ம ஸம்பாவிதா:** – தம்மாலேயே கௌரவிக்கப் படுகிறவர்களும்; **ஸ்தப்தா:** – (அதனால்) வணங்காதவர்களும்; **தன மான மத அன்விதா:**– பணத்தினால் ஏற்படும். அஹங் காரத்துடனும் கொழுப்புடனும் கூடினவர்களுமான; **தே** – அவர்கள்; **அவிதிபூர்வகம்** – ஶாஸ்திர விதிகளுக்குப் புறம்பாக; **தம்பேன** – ஆடம்பரத்துடன், தம் பெருமையைக் காட்டவே (புண்ணியத்தைப் பெறவேண்டும் என்ற புத்தியினால் அல்ல); **யஜ்ஞை:** – யாகங்களால்; **யஜந்தே நாம** – பூஜை செய்கிறார் களாம்!

**குறிப்பு: நாம யஞ்ஞை:** - நாம்னா யஜ்ஞை:- பெயரளவில் யாகங்கள்; நாம்னே யஜ்ஞை - தீக்ஷிதர் முதலிய பெயர்களுக்காக யாகங்கள்; என்றும் கூறலாம்.

ஸர்வ கர்மங்களைச் செய்விப்பவரும், ஸர்வாந்தர்யாமியுமான உம்மைக்குறித்து ஏன் யாகம் செய்வதில்லை? என்றால், கூறுகிறார்.

18. अहङ्कार बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।
मां आत्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥

அஹங்காரம் ப³லம் த³ர்ப்பம், காமம் க்ரோத⁴ம் ச ஸம்ஶ்ரிதா: |
மாம் ஆத்ம பரதே³ஹேஷு, ப்ரத்³விஷந்தோऽப்⁴யஸூயகா: || 18

**அஹங்காரம்** – நான் என்ற பாவனையையும்; **பலம்** – பலத்தையும்; **தர்ப்பம்** – (சு. 4) இருமாப்பையும்; **காமம்** – ஆசையையும்; **க்ரோதம் ச** – கோபத்தையும்; **ஸம்ஶ்ரிதா:** – நன்கு அடைந்தவர்களாய்; **ஆத்ம பர தேஹேஷு** – தம் உடலிலும், பிறர்களின் உடல்களிலும்; (**ஸ்திதம்** – பிரேரகராக இருக்கும்); **மாம்** – என்னை; **ப்ரத்விஷந்த:** – அதிகம் வெறுப்பவர்களாயும்;

அபி அபி **அஸூயகா:** – *(9-1) அதிகம் பொறாமைப் படுபவர்களாயும்; (யஜந்தே – யாகம் செய்கின்றனர்).*

குறிப்பு: (1) அதிகம் வெறுப்பவர்கள் - கடவுள் இருந்தால் என்னை யாகம் செய்யும்படி செய்யட்டுமே! அல்லது யாகம் செய்யும் என்னைத் தடுக்கட்டுமே! ஆகவே கடவுள் இல்லை என்று கூறுபவர்கள். (2) தோஷமில்லாத பகவானிடம் தோஷங்களைக் கூறுதலும், குணபூர்ணரான அவரைக் குணமில்லாதவர் எனக்கூறுவதும், பொறாமை எனப்படும்.

அவர்கள் அநித்ய நரகத்தில் விழுவதுமன்னியில் மீண்டும் சிலகாலம் ஸம்ஸாரத்தை அநுபவித்துக் கடைசியில் நித்ய நரகத்தையும் அடைவார்கள் என இரு சுலோகங்களில்கூறுகிறார்.

19. तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्त्रं अशुभान् आसुरीष्वेव योनिषु ॥

தானஹம் த்[3]விஷத: க்ரூரான், ஸம்ஸாரேஷு நராத[4]மான் |
க்ஷிபாம்யஜஸ்ரம் அஶுப[4]ான், ஆஸு ரீஷ்வேவ யோனிஷு || 19

**அஹம்** – *நான்;* **த்விஷத:** – *என்னை வெறுப்பவர்களும்;* **க்ரூரான்** – *கருணையில்லாதவர்களும்;* **அஶுபான்** – *(அதனால்) துஷ்டர்களுமான;* **தான்** – *அந்த (சு. 7 முதல் கூறப்பட்ட);* **நர அதமான்** – *மனிதர்களில் தாழ்ந்தவர்களை (தமோ யோக்யர் களை);* **ஸம்ஸாரேஷு** – *பிறப்பு, இறப்பு ஆகிற வாழ்க்கைகளில்;* **ஆஸுரீஷு** – *(அவற்றிலும்) அஸுரர்களின்;* **யோனிஷுஏவ** – *பிறவிகளிலேயே;* **அஜஸ்ரம்** – *அடிக்கடி;* **க்ஷிபாமி** – *எறிவேன்.*

20. आसुरीं योनिमापन्नाः मूढाः जन्मनि जन्मनि ।
मां अप्राप्यैव कौन्तेय ततो यान्ति अधमां गतिम् ॥

ஆஸுரீம் யோனி மாபன்னா: மூட[4]ா: ஜன்மனி ஜன்மனி |
மாம் அப்ராப்யைவ கௌந்தேய, ததோ யாந்தி அத[4]மாம் க[3]திம் || 20

**தத:** – *பிறகு;* **மூடா:** – *தாமஸ ஸ்வபாவமுடைய அவர்கள்;* **ஜன்மனி ஜன்மனி** – *பல பிறப்புகளில்;* **ஆஸுரீம் யோனிம்** – *அஸுரப் பிறவியை;* **ஆபன்னா:** – *அடைந்தவர்களாய்;* **மாம்** – *என்னை;* **அப்ராப்ய ஏவ** – *அடையாமலேயே;* **கௌந்தேய** – *குந்தீ புத்திரனே !;* **அதமாம்** – *தாழ்ந்ததான;* **கதிம்** – *சேருமிடத்தை (சு. 16 நித்ய நரகங்களை);* **யாந்தி** – *அடைகின்றனர்.*

முற்கூறிய மோக்ஷத்திற்குத் தடையான அஸுர குணங்களில் முக்கியமான மூன்றை அவசியம் விடவேண்டும் என்கிறார்.

21. त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः।
कामः क्रोधस्तथा लोभः तस्मादेतत् त्रयं त्यजेत् ॥

த்ரிவித[4]ம் நரகஸ்யேத[3]ம், த்[3]வாரம் நாஶன மாத்மன: |
காம: க்ரோத[4]ஸ் தத[2]ா லோப[4]:, தஸ்மாதே[3]தத் த்ரயம் த்யஜேத் || 21

**காம:** ஆசை; **க்ரோத:** -கோபம், **ததா** - அவ்வாறே; **லோப:** - உலோபித்தனம் *(14-12); (இதி - என்று);* **த்ரிவிதம்** - மூன்றுவிதமான; **இதம்** - இது; **நரகஸ்ய த்வாரம்** - நரகத்தின் வாயில் (சாதனம்) ஆகும். அதனால், **ஆத்மன:** - தனக்கு; **நாஶனம்** - அனர்த்தத்தைத் தருவது **தஸ்மாத்** - ஆகையால்; **ஏதத் த்ரயம்** - இந்த மூன்றையும்; **த்யஜேத்** - விட்டுவிட வேண்டும்.

பிறகு மோக்ஷத்தையும் அடையலாம் என்கிறார்.

22. एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः।
आचरत्यात्मनः श्रेयः ततो याति परां गतिम् ॥

ஏதைர் விமுக்த: கௌந்தேய, தமோத்வாரைஸ் த்ரிபி[4]ர் நர: |
ஆசரத் யாத்மனஸ் ஶ்ரேய: ததோ யாதி பராம் க[3]திம் || 22

**கௌந்தேய** - குந்தீ புத்திரனே!; **தமோ த்வாரை;** - நரகத்துக்குக் காரணமான; **ஏதை:** - காமம், க்ரோதம், லோபம் என்ற இவைகளால்; **விமுக்த:** - அடியோடு விடுபட்ட; **நர:** - மனிதன்; **ஆத்மன:** - தன்னுடைய; **ஶ்ரேய:** - நலனை, மோக்ஷ ஸாதனத்தை; **ஆசரதி** - செய்து கொள்கிறான். **தத:** - அதனால்; **பராம் கதிம்** - உத்தம ஸ்தானமான மோக்ஷத்தை; **யாதி** - அடைகிறான்.

வேறு மோக்ஷ ஸாதனத்தையும் கூறி, அதைச் செய்யாவிடில், பாதகத்தையும் கூறுகிறார்.

23. यः शास्त्र विधिमुत्सृज्य वर्तते कामकारतः।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥

யஸ் ஶாஸ்த்ரவிதி[4] முத்ஸ்ருஜ்ய, வர்த்ததே காம காரத: |
ந ஸ ஸித்தி[4] மவாப்னோதி, ந ஸுக[2]ம் ந பராம் க[3]திம் || 23

**ய:** - யார்; **சாஸ்த்ரவிதிம்** - சாஸ்திரங்களில் கூறிய முறைகளை; **உத்ஸ்ருஜ்ய** - விட்டுவிட்டு; **காமகாரத:** - தன் இஷ்டப்படி; **வர்த்ததே** - ப்ரவர்த்ததே - செயல்படுவானோ; **ஸ:** - அவன்; **ஸித்திம்** - மோக்ஷோபாயமான தத்வஞானத்தை அல்லது கர்மத்தின் பூர்த்தியை; **ந அவாப்னோதி** - அடைவ

தில்லை. **ஸுகம்** - இம்மையில் சுகத்தையும்; **ந** - அடைவ தில்லை. **பராம் கதிம் ந** - உத்தம ஸ்தானமான மோக்ஷத்தையும் அடைவதில்லை.

*ஏன் அவ்வாறு? என்றால், சாஸ்திரம்தான் எல்லா வற்றிற்கும் பிரமாணம் என்கிறார்.*

24. तस्मात् शास्त्रं प्रमाणं ते कार्याकार्य व्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तु मिहार्हसि ॥

தஸ்மாத் ச[2]ாஸ்த்ரம் ப்ரமாணம் தே, கார்யாகார்ய வ்யவஸ்தி[2]தௌ |
ஜ்ஞாத்வா ஶாஸ்த்ர வித[4]ானோக்தம், கர்ம கர்த்து மிஹார்ஹஸி || 24

*('யஸ்மாத்' என்று சேர்த்துக்கொண்டு)* **யஸ்மாத்** - எதனால்; **இஹ** - இவ்வுலகில்; **கார்ய அகார்ய வ்யவஸ்திதௌ** - இது செய்யத்தகுந்தது, இது செய்யத்தகாதது என்று தீர்மானிப்பதில்; **தே** - (விவேகமுள்ள) உனக்கு; **சாஸ்த்ரம்** - வேதம் முதலியன; **ப்ரமாணம்** - உண்மையான ஞானத்தைத் தரும் ஸாதனமாயுளதோ (அதை மீறினால் அனர்த்தம் ஏற்படுமோ); **தஸ்மாத்** - அதனால்; **சாஸ்த்ர விதான உக்தம்** - வேதம் முதலியன விதிக்கும் முறைகளின் படி; **கர்ம கர்த்தும்** - காரியத்தைச் செய்வதற்கு; **அர்ஹஸி** - தகுதியுள்ளவனாய் இருக்கிறாய்.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे देवासुर संपत् विभागयोगो नाम षोडशोऽध्यायः ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு ப்ரஹ்ம
வித்யாயாம், யோக சாஸ்த்ரே, ஸ்ரீகிருஷ்ணார்ஜுனஸம்வாதே
தேவாஸுர ஸம்பத் விபாகயோகோ நாம ஷோடஶோऽத்யாய ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய
கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய தேவாஸுர ஸம்பத் விபாக
யோகம் என்ற பதினாறாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 17
## ச்ரத்தா த்ரய விபாக யோகம்

(28 சுலோகங்கள்)

### பதினேழாம் அத்தியாயத்தின் சுருக்கம்

16-ம் அத்தியாயத்தின் கடைசியில், சாஸ்திரம்தான் எல்லாவற்றிற்கும் பிரமாணமாகும் என்று சொன்னதும், உலகத்தில் பெரும்பான்மையோர், சாஸ்திர ஞானமில்லாமல், தமது முன்னோர்களின் ஸம்பிரதாயம் என்று கர்மங்களைச் ஶ்ரத்தா பக்தியுடன் செய்துவருகிறார்களே! அவர்களுடைய கதியாது? என்று அர்ஜுனன் வினவினான். அதற்கு ஸ்ரீ கிருஷ்ணர் பதிலளிக்கிறார்.

அம்மாதிரி கர்மங்களைச் செய்பவர்களின் ஜீவ ஸ்வரூபம் எவ்வாறுள்ளதோ, அவ்வாறான கதி கிட்டும், (14-18 பார்க்க) ஜீவ ஸ்வரூபமோ ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூவகைப்படும். ஆகவே, ஜீவர்களும் மூவகையினராவர். அவர்கள் ஸம்ஸாரத்தில் ஸ்வபாவத்துக்கு மாறான தேகங்களுடன் பிறக்கலாம். ஆயினும் அவர்களின் ஸ்வபாவம் மாறாது. தாமஸனான அஸுரனாகப் பிறந்த பிரஹ்லாதன், ஸாத்விக ஸ்வபாவமுள்ளவனாகவே விளங்கி வந்தானல்லவா!

ஜீவர்கள் ஸாத்விகரா, ராஜஸரா, தாமஸரா என்று எவ்வாறு அறியலாம்? அவர்களுடைய சிரத்தை என்ற ஆஸ்திக்ய புத்தி, பூஜிக்கும் தெய்வங்கள், செய்யும் கர்மங்கள், அவற்றைச் செய்யும் முறைகள், உண்ணும் உணவுகள், அவர்களின் யாகம், தானம், தவம் முதலியவற்றைக் கொண்டு அறியலாம்.

மேலும், பகவானுக்கு ஓம் தத் ஸத் என்ற மூன்றுவித பெயர்களுண்டு. அப்பெயர்கள் முறையே யாகம், தானம், தவம் இவற்றிற்கும் உண்டு. ஆகவே, அப்பெயர்களின் அர்த்த மறிந்து, பலனைக் கருதாது, விஷ்ணுவை உத்தேசித்துச் செய்யப்படும் கர்மமும் ஸாத்விகமாகும். சாஸ்திர முறைப்படி செய்யப்பட்டாலும், பகவானிடம் சிரத்தை இல்லாவிட்டால், அது பகவத் ப்ரீதிகரமாகாது. இம்மை மறுமைப் பயன்களையும்

தராது. ஆகவே, ஶ்ரத்தை இவ்வாறு முக்கியமாய் உள்ளதால், அதன் மூன்று வகைகளை இந்த அத்தியாயத்தில் விளக்கியுள்ளார்.

*3–5ல்* முக்குணங்கள் அனைவரையும் கர்மங்களைச் செய்யும்படி தூண்டுபவை எனச் சுருங்கச் சொன்னதை, *14–19ல்* எல்லா மாறுபாடுகளும் முக்குணங்களால் ஏற்படுகின்றன எனப்பொதுவாகக் கூறினார். இங்கு அவைகளினால் ஏற்படும் ஆஸ்திக்ய புத்தி, உணவு, தபஸ், முதலிய கர்மங்களில் நல்லதையும், கெட்டதையும் பிரித்துக் கூறுகிறார்.

अर्जुन उवाच — **அர்ஜுன: உவாச** - அர்ஜுனன் *(16–24ல்)* பகவான் கூறியதையொட்டி, சாஸ்திரமுறையை அறியாதவர் களின் கதி யாது? என வினவுகிறான்.

1. ये शास्त्रविधिमुत्सृज्य यजन्ते श्रद्धयाऽन्विताः ।
तेषां निष्ठा तु का कृष्ण सत्वमाहो रजस्तमः ॥

யே ஶாஸ்த்ரவிதி முத்ஸ்ருஜ்ய, யஜந்தே ச்ரத்தயாऽன்விதா: |
தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண, ஸத்வமாஹோ ரஜஸ்தம: || 1

**க்ருஷ்ண** – அவரவர்களுக்குரிய கதிகளுக்கு இழுத்துச் செல்பவரே!; **யே** - எந்த ஆஸ்திகர்கள்; **ஶாஸ்த்ரவிதிம்** - சாஸ்திரத்தில் கூறிய முறையை; **உத்ஸ்ருஜ்ய** - அறியாமல் (விட்டுவிட்டு என்று அர்த்தமல்ல); **து** - ஆனால்; **ஶ்ரத்தயா** - (நம் முன்னோர்களின் ஸம்பிரதாயம் என்று) ஆஸ்திக்ய புத்தி யுடன் மாத்திரம்; **அன்விதா:** - கூடினவர்களாய்; **யஜந்தே** - தேவதைகளைப் பூஜிக்கின்றனரோ; **தேஷாம்** - அவர்களின்; **நிஷ்டா** - நிலைமை; **கா** - யாது? **ஸத்வம்** - ஸாத்விகமானதா? **ஆஹோ** - அல்லது; **ரஜ:** - ராஜஸமா? **தம:** - தாமஸமா? (அவர்கள் ஸாத்விகரா, ராஜஸரா, தாமஸரா?).

श्रीभगवान् उवाच — **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் அவர்கள் மூன்றுவிதமாயுமுள்ளனர் என்று பதிலளிக்கிறார்.

2. त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा ।
सात्विकी राजसी चैव तामसी चेति तां श्रृणु ॥

த்ரிவித⁴ா ப⁴வதி ஶ்ரத்த⁴ா, தே³ஹினாம் ஸா ஸ்வப⁴ாவஜா |
ஸாத்விகீ ராஜஸீ சைவ, தாமஸீ சேதி தாம் ஶ்ருணு || 2

**தேஹினாம்** - ஜீவர்களின்; **ஶ்ரத்தா** - ஆஸ்திக்ய புத்தி; **ஸாத்விகீ** - நற்குணம் பொருந்தியது; **ராஜஸீச** - நற்குணம்,

துர்குணம் கலந்தது; **தாமஸீ ச** – துர்க்குணம் பொருந்தியது; **இதி** – என்ற; **த்ரிவிதா பவதி** – மூன்றுவிதமாக உளது. அது மூன்றுவிதமாக இருக்கக் காரணம் யாது? **ஸா ஸ்வபாவஜா ஏவ** – அது ஜீவர்களின் ஸ்வபாவத்திலிருந்து உண்டானவையே. மனோவிருத்தியால் ஏற்பட்டதல்ல. (அதாவது) ஜீவர்களின் ஸ்வபாவமே ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்றுவிதமாய் உள்ளது. அவ்வித ஸ்வபாவத்திலிருந்து உண்டாகும் ஶ்ரத்தையும் அவ்வாறான மூன்றுவிதமானது). **தாம்** – அந்த மூவகையான சிரத்தையை; **ஶ்ருணு** – கேள்.

அவர்களின் நிலைமை யாது? என்ற வினாவுக்கு என்ன விடை தரப்பட்டது? என்றால் கூறுகிறார்.

3. सत्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।
श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥

ஸத்வாநுரூபா ஸர்வஸ்ய, ஶ்ரத்தா ப[4]வதி ப[4]ாரத |
ஶ்ரத்த[4]ா மயோऽயம் புருஷ: யோ யச் ச்ரத்த[4]: ஸ ஏவ ஸ: || 3

**ய:** – யார்; **யத்ச்ரத்த:** – எந்த சிரத்தையுள்ளவனோ; **ஸ:** — அவன்; **ஸ: ஏவ** – அந்த ஶ்ரத்தையுள்ளவனே. அதாவது, சாஸ்திரமுறையை அறியாது முன்னோர்களின் ஸம்பிரதாயமென்று ஶ்ரத்தையுடன் பூஜிப்பவன், ஸாத்விக ஶ்ரத்தையுள்ளவனாயின், ஸாத்விக ஜீவனாவான்; ராஜஸ ஶ்ரத்தையுள்ளவனாயின், ராஜஸ ஜீவனாவான்; தாமஸ ஶ்ரத்தையுள்ளவனாயின், தாமஸ ஜீவனாவான். ஏன் இம்மாதிரி? பாரத – பரத குலத்தில் பிறந்தவனே!; **ஸர்வஸ்ய ஶ்ரத்தா** – எல்லா ஜீவர்களின் ஶ்ரத்தையும்; **ஸத்வ அநுரூபா** – அந்த ஜீவர்களின் ஸ்வரூபத்தை அநுஸரித்துள்ளது. இது எப்படி? **அயம் புருஷ:** – இந்த ஜீவன்; **ஶ்ரத்தாமய:** – ஶ்ரத்தா ஸ்வரூபியானவன். (ஸத்வம் ஜீவ: க்வசித் ப்ரோக்த: என்றபடி ஸத்வம் = ஜீவன்)

**குறிப்பு:** 18-40 பார்க்க. ஜீவர்கள் ஸ்வரூபத்திலேயே ஸாத்விகர், ராஜஸர், தாமஸர் என்று மூவகையினர். (தேவர்களும் மனுஷ்யோத்தமர்களும் ஸாத்விகர். மத்யம மனிதர்கள் ராஜஸர். அஸுரர்களும், அதம மனிதர்களும் தாமஸர்). ஸாத்விக ஜீவர்கள் கர்மவசத்தால் ஸம்ஸாரத்தில், ராஜஸ தாமஸ ஸ்தூல தேகமுள்ளவராகப் பிறப்பர். ராஜஸ தாமஸ ஜீவர்களும் அவ்வாறே மாறிப்பிறக்கலாம். ஆயினும் அவர்களின் ஸ்வபாவங்கள் மாறா. ஸாத்விகர் எப்போதும் ஸாத்விகராகவும், ராஜஸர் ராஜஸராகவும், தாமஸர் தாமஸராகவும்தான் இருப்பர். கடைசியில் அவரவர்களுக்குரிய மோக்ஷத்தையே அடைவர்.

மோக்ஷம் மூன்று வகைப்படும். ஸாத்விகர்களின் மோக்ஷம் வைகுண்டம் முதலிய உலகங்களில் மறுபிறப்பில்லாமல், தம் ஸ்வரூபானந்தத்தை அநுபவிப்பதேயாகும். ராஜஸ மோக்ஷம், மறுபிறப்பில்லாமல் ஸ்வர்க்கம், நரகம், பூமி இவைகளில் ஏக காலத்தில் சுகதுக்கத்தை அநுபவித்தலாகும். தாமஸ மோக்ஷம் மறுபிறப்பில்லாமல், தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம் என்ற நித்ய நரகங்களில் துக்கத்தை அநுபவித்தலாகும். (கீதை 14-18; பிரம்ம சூத்திரம் 3-4-40).

இதனால் அஸுரனான பிரஹ்லாதன் எவ்வாறு ஸாத்விக ஸ்வபாவமுள்ளவனாய் இருந்தான்? என்ற கேள்விக்கும் விடை வந்துவிட்டது.

*தேவா: சாபாபி பூதத்வாத்: ப்ரஹ்லாதாத்யா: பபூவிரே |*

பிரஹ்லாதன் முதலியோர், ஸ்வரூபத்தில் தேவர்களே. ஶாபத்தின் காரணமாக அஸுர யோனியில் பிறந்தவர்கள். ஆகையால் முற்கூறிய நியமத்திற்கு விரோதமில்லை.

*மோக்ஷ: ஸாங்கல்பிகஸ் ஸ்வர்க்க: பூதாதித்வம் பலம் க்ரமாத்*

மேற்படி ஸாத்விகர்களுக்கு மோக்ஷம்; ராஜஸர்களுக்கு, பிரஸித்த ஸ்வர்க்கத்தின் பிரதிநிதியான ஸ்வர்க்கம், தாமஸர்களுக்கு முதலில் சிவபரிவாரமான பூதங்களின் உலகம், பிறகு தமஸ் என்ற நித்ய நரகம்; என்ற பலன்கள், என்று சுலோகம் 1ல் அர்ஜுனனின் வினாவுக்கு விடை என அறியவும்.

மூவகையான ஶ்ரத்தையுடையவர்கள் பூஜிக்கும் தேவதைகளைக் கூறுகிறார்.

4. यजन्ते सात्विका देवान् यक्षरक्षंसि राजसाः ।
प्रेतान् भूतगणांश्चान्ये यजन्ते तामसा जनाः ॥

யஜந்தே ஸாத்விகா தே[3]வான், யக்ஷ ரக்ஷாம்ஸி ராஜஸா: |
ப்ரேதான் பூ[4]தக[3]ணாம் ஸ்சான்யே, யஜந்தே தாமஸாஜனா: || 4

**ஸாத்விகா:** - சாஸ்திர முறையை அறியாவிடினும், ஸாத்விக ஶ்ரத்தையுடன் கூடியுள்ள; **ஜனா:** - ஜனங்கள்; **தேவான் யஜந்தே** - விஷ்ணுவை ஸர்வோத்தமர் என்றும், ரமா பிரம்மா முதலியோர்களை அவரது பரிவாரங்கள் என்றும் பூஜிக்கின்றனர் **ராஜஸா:** - சாஸ்திர முறையை அறியா விடினும், ராஜஸ ஶ்ரத்தையுடன் கூடின ஜனங்கள்; **யக்ஷ ரக்ஷாம்ஸி** - யக்ஷர்களையும், ராக்ஷஸர்களையும் (பூஜிக்கிறார்கள்) **அன்யே** - இவ்விருவர்களைக்காட்டிலும் வேறான; **தாமஸா:** சாஸ்திர முறையை அறியாவிடினும், தாமஸ ஶ்ரத்தையுடன் கூடின

*ஜனங்கள்;* **ப்ரேதான்** – *பிரேதங்களையும்;* **பூதகணான் ச** – *சிவனின் பரிவாரமான பூதக் கூட்டங்களையும் (பூஜிக்கிறார்கள்)*

குறிப்பு: ராஜஸர்களும், தாமஸர்களும் தேவதைகளையே பூஜித்தாலும், அவர்களின் பூஜையை முறையே தேவர்களின் பெயர்களைக்கொண்ட யக்ஷ ராக்ஷஸர்களும், ப்ரேத பூதகணங்களும்தான் பெற்றுக்கொள்கிறபடியால் யக்ஷ ராக்ஷஸர்கள் முதலியோரைப் பூஜிக்கிறார்கள் எனப்பட்டது.

*தீனத்வாத் தேவ நாமான:, ப்ரஹ்மேந்த்ராதி ஸநாமகா: |*

பிரம்மா, இந்திரன் முதலிய எல்லா தேவர்களின் பெயர்களையுடைய யக்ஷ ராக்ஷஸர்கள் உள்ளனர். இவர்கள் தாழ்ந்தவர்கள் ஆதலால் தேவர்கள் எனப்படுகிறார்கள். அவர்கள் அபஹரிக்காமலிருக்கவே நாம் ஒவ்வொரு கர்மத்தின் கடைசியிலும் பாரதீரமண முக்ய ப்ராணாந்தர்க்கத எனச்சேர்த்திருக்கிறோம்.

*தாமஸர்களின் ஸ்வரூபத்தை (2. சுலோகங்களில்) விவரிக்கிறார்.*

5. अशास्त्र विहितं घोरं तप्यन्ते ये तपो जनाः ।
तम्भाहङ्कार संयुक्ताः कामरागबलान्विताः ॥

6. कर्शयन्तः शरीरस्थं भूतग्रामं अचेतसः ।
मां चैव अन्तश्शरीरस्थं तान् विद्धि आसुरनिश्चयान् ॥

அஶாஸ்த்ர விஹிதம் கே$^{4}$ாரம், தப்யந்தே யே தபோ ஜனா: |
த$^{3}$ம்ப$^{4}$ாஹங்கார ஸம்யுக்தா:, காமராக$^{3}$ ப$^{3}$லான்விதா: || 5

கர்ஶயந்த: ஶரீரஸ்த$^{2}$ம், பூ$^{4}$தக்$^{3}$ராமம் அசேதஸ: |
மாம் சைவ அந்தஸ்ஶரீரஸ்த$^{2}$ம், தான் வித்தி$^{4}$ ஆஸுர நிஸ்சயான் || 6

**யே ஜனா:** – *எந்த ஜனங்கள்;* **அஶாஸ்த்ரவிஹிதம்** – *ஶாஸ்திரங்களைக் காட்டிலும் வேறான துஷ்ட ஆகமங்களினால் விதிக்கப்பட்டதும்;* **கோரம்** – *மகா கஷ்டத்தைத் தருவதுமான;* **தப:** – *தவத்தை;* **தம்ப அஹங்கார ஸம்யுக்தா:** – *ஆடம்பரம் 'நான்' என்ற பாவனை, இவற்றுடன் கூடியும்;* **காம ராக பலான்விதா:** *ஆசை, பற்று, பிடிவாதம், இவற்றுடன் கூடியும்;* **தப்யந்தே** – *செய்கிறார்களோ;*

*6.* **ஶரீரஸ்தம்** – *தங்கள் தேகத்தில் வசிக்கும்;* **பூத க்ராமம்** – *லக்ஷ்மீ முதலிய தேவதைகளின் கூட்டத்தையும்;* **அந்த: ஶரீரஸ்தம்** – *ஶரீரத்தின் உள்ளே, பிரேரிப்பவனாகவிருக்கும்;* **மாம் ச** – *என்னையும்கூட;* **கர்ஶயந்த:** – *இளைக்கும்படி*

அதாவது அற்ப குணங்களையுடையவர்கள் என்று நினைப்பவர்களாயும்; **அசேதஸ;** – விவேக மற்றவர்களாயும் உள்ளனரோ; **தான் ஏவ** – அவர்களையே; ஆஸுர நிஸ்சயான் – அஸுரத்தன்மையுள்ள தீர்மானமுடையவர்களாக; **வித்தி** – அறிவாயாக. (அவர்கள் தைத்யர்கள் ராக்ஷஸர்கள், பிஶா சர்கள் ஆவர். நித்ய நரகமான தமஸ்ஸை அடைபவர்கள் – தத்வஸங்க்யானம் பார்க்க) (**கர்ஷயந்த:** – பிறர் பாடம்).

ஶ்ரத்தை என்ற ஆஸ்திக்ய புத்தியிலுள்ள பேதத்தினால், ஜீவஸ்வரூபத்திலுள்ள பேதத்தை அறியலாம், என்று கூறினார். இப்போது ஆஹாரம் முதலியவைகளிலுள்ள பேதத்தினாலும் அறியலாம் என்கிறார் (சுலோகம் 7ல்)

7. आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रियः ।
यज्ञस्तपस्तथा दानं तेषां भेदमिमं श्रृणु ॥

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய, த்ரிவிதே[4]ா ப[4]வதி ப்ரிய: |
யஜ்ஞஸ் தபஸ் தத[2]ா த[3]ானம், தேஷாம் பே[4]தமிமம் ஶ்ருணு || 7

**ஸர்வஸ்ய** – ஸாத்விகர் முதலிய அனைவருக்கும்; **ப்ரிய:** – பிடித்தமான; **ஆஹார: து அபி** — உணவும் கூட; **த்ரிவித:** – மூன்றுவிதமாக; **பவதி** – இருக்கிறது **யஜ்ஞ:** – யாகமும்; **தப:** – தவமும், **தானம்** – கொடையும்; **ததா** – அவ்வாறே மூவகை யானவை. **தேஷம்** – அந்த உணவு முதலியவற்றின்; **இமம்** – இந்த (கூறப்போகும்); **பேதம்** – வித்தியாசத்தை; **ஶ்ருணு** – கேள்.

**குறிப்பு:** ஆகாரம், யாகம், தவம், தானம் இந்த நான்கின் மூவகைகளை இந்த அத்தியாயத்தில் கூறுகிறார். அடுத்த 18ம் அத்தியாயத்தில் (1) தியாகம் (18-4) (2) ஞானம் (18-20) (3) கர்மம் (18-23) (4) கர்த்தா (18-26) (5) புத்தி (18-30) (6) த்ருதி (18-33) (7) சுகம் (18-37) என்ற ஏழின் மூவகைகளைக் கூறப்போகிறார். மொத்தம் 11.

முதலில் ஆகாரத்தின் மூவகைகளைக் கூறுகிறார்.

8. आयुस्सत्व बलारोग्य सुखप्रीति विवर्धनाः ।
रस्याः स्निग्धाः स्थिरा हृद्याः आहाराः सात्विकप्रियाः ॥

ஆயுஸ்ஸத்வ ப[3]லாரோக்[3]ய, ஸுக[2]ப்ரீதிவிவர்த்த[4]னா: |
ரஸ்யாஸ் ஸ்நிக்த[4]ா: ஸ்தி[2]ரா ஹ்ருத்[3]யா:, ஆஹாராஸ்
ஸாத்விக ப்ரியா: || 8

**ஆயு:** – ஆயுள் (பிழைத்திருத்தல்) **ஸத்வ** – சித்த ஶுத்தி, **பல** – உடலின் சக்தி, **ஆரோக்ய** – வியாதியின்மை; **ஸுக** – நீண்டகால இன்பம்; **ப்ரீதி** – அருந்தும்போது இன்பம் இவற்றை,

**விவர்த்தனா:** – *விசேஷமாகப் பெருக்குபவையும்;* **ரஸ்யா:** – *சாறு அல்லது ஸத்து உள்ளவையும்;* **ஸ்நிக்தா:** – *பசையுள்ளவையும்;* **ஸ்திரா:** – *நீண்ட கால வலுவைத் தருபவையும்;* **ஹ்ருத்யா:** – *இன்னும் வேண்டும் என்று மனதைக் கவருபவையாயுமுள்ள;* **ஆஹார:** – *உணவுப் பண்டங்கள்;* **ஸாத்விகப்ரியா:** – *ஸாத்விக ஜீவர்களுக்குப் பிரியமானவை.*

குறிப்பு: ஸாத்விகர்களுக்குள்ளேயே பல ருசியுள்ளவர் களிருப்பினும், ஶுத்த பாகவதனுடைய ஸ்வபாவத்தை யொட்டி கூறப்பட்டுள்ளது.

ह्द्यं पश्चान्मनोहारि प्रियं तत्कालसौख्यदम् ।
सुखदं दीर्घसुखदं रस्यं अभ्यास सौख्यदम् ॥

*ஹ்ருத்யம் பஸ்சான் மனோஹாரி, ப்ரியம் தத்கால ஸௌக்யதம் |*
*ஸுக²தம் தீ³ர்க்க⁴ ஸுக²த³ம், ரஸ்யம் அப்⁴யாஸ ஸௌக்யதம் ||*

घृतेन वर्धते बुद्धिः क्षीरेण आयुः प्रवर्धते ।

*க்⁴ருதேன வர்த்ததே புத்தி⁴: க்ஷீரேண ஆயு: ப்ரவர்த்ததே |*

*நெய்யினால் புத்தி வளரும்; பாலினால் ஆயுள் வளரும்.*

विना गोरसं को रसो भोजनस्य ।

*வினா கோ³ரஸம், கோ³ ரஸோ போ⁴ஜனஸ்ய |*

பசுவின் சிறப்புப் பொருள்களான பால் தயிர் வெண்ணெய் முதலியன இல்லையேல், சாப்பாட்டிற்குச் சிறப்பு ஏது?

9. कट्वाम्ल लवणात्युष्ण तीक्ष्ण रूक्ष विदाहिनः ।
आहारा राजसस्येष्टाः दुःखशोकामयप्रदाः ॥

கட்வாம்ல லவணாத்யுஷ்ணா, தீக்ஷ்ண ரூக்ஷ வித³ாஹின: |
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா:, து³க்கஶோக ஆமயப்ரத³ா: || 9

(**அதி** – *அதிகம், என்ற பதத்தைச் சேர்க்க வேண்டும்)* **கடு** – *கசப்பானவையும்;* **ஆம்ல** – *புளிப்பானவையும், (அம்ல – பிறர் பாடம்)* **லவண** – *(உப்பு) கரிப்பவையும்,* **அதி உஷ்ண** – *அதிக சூடானவையும்,* **தீக்ஷ்ண** – *(கடுகு போல்) எரிச்சலைத் தருபவையும்,* **ரூக்ஷ** – *ரஸமில்லாதவையும்,* **விதாஹின:** – *அதிகமாகச் சுடப்பட்டவையும்;* **துக்க ஶோக ஆமயப்ரதா:** – *துக்கத்தையும், மனவேதனையையும், வியாதியையும் தருவன வுமான;* **ஆஹாரா:** – *உணவுப்பண்டங்கள்,* **ராஜஸஸ்ய** – *ராஜஸ ஜீவர்களுக்கு;* **இஷ்டா:** – *பிரியமானவை.*

குறிப்பு: அறு சுவைகளாவன:- (1) இனிப்பு (2) புளிப்பு (3) கசப்பு (பாகற்காய்) (4) கரிப்பு (உப்பு) (5) கார்ப்பு (மிளகாய்) (6) துவர்ப்பு (வாழைப்பூ).

10. यातयामं गतरमं पूति पर्युषितं च यत् ।
उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥

யாதயாமம் க$^{3}$தரஸம், பூதி பர்யுஷிதம் ச யத் |
உச்சிஷ்டமபி சாமேத்$^{4}$யம், பே$^{4}$ாஜனம் தாமஸ ப்ரியம் || 10

**யத்** – *எது;* **யாதயாமம்** – *சமைத்து மூன்று மணி நேரம் கழிந்ததோ;* **கதரஸம்** – *சாறு அல்லது ஸத்து இல்லாததும்;* **பூதி** – *துர்நாற்றமுடையதும்;* **பர்யுஷிதம் ச** – *பழையதும் (சமைத்து ஒரு நாள் ஆனதும்);* **உச்சிஷ்டம் அபி** – *பிறர் சாப்பிட்டு மீதியுள்ளதும்,* **அமேத்யம் ச** – *அசுத்தமானதுமான;* **போஜனம்** – *சாப்பிடும் பண்டமோ;* **(தத்** – *அந்த உணவுப் பண்டம்);* **தாமஸ ப்ரியம்** – *தாமஸ ஜீவர்களுக்குப் பிரியமானது*

**குறிப்பு: லோகோ பின்ன ருசி:** என்ற பழமொழி இதையொட்டிதான் ஏற்பட்டுள்ளது.

*யாகங்களின் மூவகையாலும், ஜீவஸ்வரூப பேதத்தை அறியலாம் என்கிறார்.*

11. अफलाकांक्षिभिर्यज्ञो विधिदृष्टः य इज्यते ।
यष्टव्यमेवेति मनः समाधाय स सात्विकः ॥

அபலாகாங்க்ஷிபிர் யஜ்ஞோ, விதி$^{4}$ த்$^{3}$ருஷ்ட: ய இஜ்யதே |
யஷ்டவ்யமேவேதி மன:, ஸமாத$^{4}$ாய ஸ ஸாத்விக: || 11

**ய:** – *யஜ்ஞ:* – *எந்த யாகம்;* **அபல ஆகாங்க்ஷிபி:** – *பலனை விரும்பாதவர்களால்;* **விதித்ருஷ்ட:** – *சாஸ்திர முறையின் அறிவுடன்;* **யஷ்டவ்யமேவ** – *இதைச் செய்யத் தான் வேண்டும், இது என் கடமை;* **இதி** – *என்று; மன: ஸமாதாய – மனதை அதில் செலுத்தி;* **இஜ்யதே** – *செய்யப்படுகிறதோ;* **ஸ:** – *அது;* **ஸாத்விக:** – *ஸாத்விகமாகும்.*

12. अभिसंधाय तु फलं दम्भार्थमपि चैव यत् ।
इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम् ॥

அபி$^{4}$ஸந்த$^{4}$ாய து ப$^{2}$லம், த$^{3}$ம்ப$^{4}$ார்த்த$^{2}$மபி சைவ யத் |
இஜ்யதே ப$^{4}$ரதச்ரேஷ்ட$^{2}$, தம் யஜ்ஞம் வித்தி$^{4}$ ராஜஸம் || 12

**பரதச்ரேஷ்ட** – *பரதகுலத்திற் சிறந்தவனே!*– **யத்** – *எது;* **பலம் அபிஸந்தாய து** – *அதன் பலன் எனக்கு வேண்டும், என*

நன்கு கருதியே; அபிச - மேலும்; **தம்பார்த்தமேவ** - தன் பெருமையைக் காட்டுவதற்காகவே; **இஜ்யதே** - செய்யப் படுகிறதோ; **தம் யஜ்ஞம்** - அந்த யாகத்தை; **ராஜஸம்** - ராஜஸ மானது என; **வித்தி** - அறிவாயாக.

13. विधिहीनं असृष्टान्नं मन्त्रहीनं अदक्षिणम् ।
श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते ॥

விதி[4] ஹீனம் அஸ்ருஷ்டான்னம், மந்த்ரஹீனம் அத[3]க்ஷிணம் |
ஶ்ரத்தா விரஹிதம் யஜ்ஞம், தாமஸம் பரிசக்ஷதே || 13

**விதிஹீனம்** - சாஸ்திர முறைப்படி யில்லாததும்; **அஸ்ருஷ்டான்னம்** - அன்னதானமில்லாததும்; **மந்த்ர ஹீனம்** - மந்திரங்களில்லாததும்; **அதக்ஷிணம்** - தக்ஷிணை யில்லாததும்; **ஶ்ரத்தா விரஹிதம்** - ஆஸ்திக்யபுத்தி யில்லாததுமான; **யஜ்ஞம்** - யாகத்தை; **தாமஸம்** - தாமஸமானது என; **பரிசக்ஷதே** - கூறுகின்றனர்.

குறிப்பு: வால்மீகி ராமாயணம் உத்தரகாண்டம் 77 முதல் 79 ஸர்க்கம்:- ச்வேதன் என்ற அரசன் அன்னதானமில்லாத யாகம் செய்ததால், ஸ்வர்க்க மடைந்தும், பசியினால் பீடிக்கப்பட்டான். அதனால் பூவுலகில் கிடந்த தன்தேகத்தின் மாமிசத்தைப் புசித்து வந்தான். பிரம்மதேவரின் ஆணைப்படி ஒரு முத்துமாலையை அகஸ்தியர் மூலமாக ஸ்ரீராமருக்கு அர்ப்பணம் செய்ததும், அவனது பசியும் தீர்ந்தது, அவனது பூத உடலும் மறைந்தது. (பாகவத தாத்பர்ய நிர்ணயம் 9 அத்தியாயம் 22 மு. 26 சு.)

சு. 7ல் கூறியபடி ஸாத்விக தவம் முதலிய மூன்று விதங்களைக் கூறுமுன், மனோவாக்காய தவங்களின் மூவகையைக் கூறுகிறார்.

14. देवद्विजगुरुप्राज्ञ पूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यं अहिंसा च शारीरं तप उच्यते ॥

தே[3]வ த்விஜ கு[3]ரு ப்ராஜ்ஞ பூஜனம், ஶௌசமார்ஜவம் |
ப்ரஹ்மசர்யம் அஹிம்ஸா ச, ஶாரீரம் தப உச்யதே || 14

**தேவ** - தேவதைகள்; **த்விஜ** - பிராம்மணர்கள்; **குரு** - உபதேசிப்பவர்கள்; **ப்ராஜ்ஞ** - சிறந்த ஞானிகள், இவர்களை அவரவர்க்குத் தகுந்தபடி பூஜித்தலும்; **ஶௌசம்** - (13 -8) உடல்ஶுத்தியும், மனச்சுத்தியும்; **ஆர்ஜவம்** - (13 -8) நேர்மையும்; **ப்ரஹ்மசர்யம்** - பிரம்மசாரியின் விரதமும்; **அஹிம்ஸா ச** -

பிறருக்குத் தீங்கிழைக்காமையும்; ஶாரீரம் தப: – தேகத்தால் செய்யும் தவம் என்று; **உச்யதே** – சொல்லப்படுகிறது.

15. अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।
स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥

அநுத்வேக[3] கரம் வாக்யம், ஸத்யம் ப்ரிய ஹிதம் ச யத் |
ஸ்வாத்[4]யாயாப்[4]யஸனம் சைவ, வாங்மயம் தப உச்யதே || 15

**யத்** – எது; **அநுத்வேக கரம்** – பிறருக்குப் பயத்தை உண்டு பண்ணாததும்; **ஸத்யம்** – உண்மையானதும்; **ப்ரிய ஹிதம் ச – ப்ரியம்** – கேட்கும்போது, இன்னும் கேட்கவேண்டும் என்று விரும்பப்படுவதும்; **ஹிதம்** – பிற்காலத்தில் சுகத்தைத் தருவது மான; **வாக்யம்** – வார்த்தைகளோ; **ஸவாத்யாய அப்யஸனம் ச ஏவ** – வேதங்களைப் பயிலுவதோ; (**தத்** – அது); **வாங்மயம் தப:** – வார்த்தையால் செய்யப்படும் தவம் என; **உச்யதே** – சொல்லப்படுகிறது.

16. मनः प्रसादः सौम्यत्वं मौनं आत्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत् तपो मानसमुच्यते ॥

மன: ப்ரஸாத[3]: ஸௌம்யத்வம், மௌனம் ஆத்ம விநிக்[3]ரஹ: ||
ப[4]ாவஸம்ஶுத்தி[4] ரித்யேதத், தபோ மானஸ முச்யதே || 16

**மன: ப்ரஸாத:** – (2-64) மனத்தெளிவு; **ஸௌம்யத்வம்** – குரூரமாய் இல்லாதிருத்தல், **மௌனம்** – மனனம் செய்தல்; **ஆத்ம விநிக்ரஹ: –** (13-8) பரமாத்மாவிடம் மனதை விசேஷ மாக நிலைநிறுத்துதல்; **பாவஸம்ஶுத்தி:** – கருத்தில் பரிசுத்தி, பலவித காமங்களின்மை; **இதி** – என்ற; **ஏதத்** – இது; **மானஸம் தப:** மனதினால் செய்யும் தவம் என; **உச்யதே** – சொல்லப் படுகிறது.

ஸாத்விக தவம் முதலிய மூவகைகளைக் கூறுகிறார்.

17. श्रद्धया परया तप्तं तपस्तत् त्रिविधं नरैः ।
अफलाकांक्षिभिर्युक्तैः सात्विकं परिचक्षते ॥

ஶ்ரத்த[4]யா பரயா தப்தம், தபஸ் தத் த்ரிவித[4]ம் நரை: |
அபலாகாங்க்ஷிபி[4]ர் யுக்தை:, ஸாத்விகம் பரிசக்ஷதே || 17

**நரை:** – மனிதர்களால்; **தப்தம்** – செய்யப்படும்; **யத்தப:** – எந்த தவமோ; **தத் த்ரிவிதம்** – அது மூவகையானது. எவ்வாறெனில், **பரயா ஶ்ரத்தயா** – உத்தமமான ஆஸ்திக்ய

புத்தியுடன்; **அபலாகாங்க்ஷிபி:** - பலனை விரும்பாதவர்களும்; **யுக்தை:** - பகவானுக்கு அர்ப்பணம் செய்தல் முதலிய உபாயங்களுடன் கூடியவர்களுமான; **நரை: தப்தம் தப:-** மனிதர்களால் செய்யப்படும் தவத்தை); **ஸாத்விகம் பரிசக்ஷதே** - ஸாத்விகமானதென்று கூறுகிறார்கள்.

18. सत्कार मानपूजार्थं तपो दम्भेन चैव यत् ।
क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥

ஸத்கார மான பூஜார்த்த$^{2}$ம், தபோ த$^{3}$ம்பே$^{4}$ன சைவ யத் |
க்ரியதே ததி$^{3}$ஹ ப்ரோக்தம், ராஜஸம் சல மத்$^{4}$ருவம் || 18

**யத் தப:** – எந்த தவம்; **ஸத்கார மான பூஜார்த்தம் – ஸத்கார** – பிறர் தம்மை மனதால் பாராட்டவேண்டும்; **மான** – வாக்கினால் துதிக்க வேண்டும்; **பூஜா** - நமஸ்கரித்தல் முதலிய உடலால் பூஜிக்கவேண்டும், **அர்த்தம்** - என்பதற்காகவும்; **தம்பேன ச ஏவ** - ஆடம்பரத்தோடும்; **க்ரியதே** - செய்யப் படுகிறதோ; **தத்** - அது; **இஹ** - இவ்வுலகில்; **ராஜஸம் ப்ரோக்தம்** - ராஜஸம் என்று சொல்லப்படுகிறது. (அது) **சலம்** - ஸ்திரமானதல்ல. **அத்ருவம்** - நாசமுடையது.

19. मूढग्राहेणात्मनो यत् पीडया क्रियते तपः ।
परस्योत्सादनार्थं वा तत् तामसमुदाहृतम् ॥

மூட$^{4}$க்$^{3}$ராஹேணாத்மனோ யத், பீட$^{3}$யா க்ரியதே தப: |
பரஸ்யோத்ஸாத$^{3}$னார்த்த$^{2}$ம் வா, தத் தாமஸமுத$^{3}$ாஹ்ருதம் || 19

**யத் தப:** - எந்த தவம்; **முடக்ராஹேண** - விவேக மில்லாத பிடிவாதத்தால்; **ஆத்மன:-** தன் உடலுக்கு; **பீடயா** - கஷ்டத்தினால்; **வா** - அல்லது; **பரஸ்ய** - பகவானை அல்லது பிறரை; **உத்ஸாதனார்த்தம்** - அழிப்பதின் பொருட்டோ (ஆபிசாரிகம்); **க்ரியதே** - செய்யப்படுகிறதோ; **தத்** - அது; **தாமஸம்** - தாமஸமானது என; **உதாஹ்ருதம்** - சொல்லப் படுகிறது.

தானத்தின் மூவகைகளைக் கூறுகிறார்.

20. दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।
देशे काले च पात्रे च तद्दानं सात्विकं स्मृतम् ॥

த$^{3}$ாதவ்யமிதி யத் த$^{3}$ானம், தீ$^{3}$யதே அநுபகாரிணே |
தே$^{3}$சே காலே ச பாத்ரே ச, தத்த$^{3}$ானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் || 20

**யத் தானம்** – *எந்த கொடுக்கவேண்டிய பொருள்;* **தாதவ்யம் இதி** – *தானம் செய்யவேண்டும், அது நமது கடமை, என்ற புத்தியுடனும்;* **தேஶே** – *(காசி முதலிய புண்ணிய) தேசத்திலும்;* **காலே** – *(சூரிய கிரஹணம் முதலிய புண்ணிய) காலத்திலும்;* **அநுபகாரிணே** – *பிரதி உபகாரத்தைச் செய்யாதவனான;* **பாத்ரேச** – *(ஸதாசாரமுள்ள பண்டிதர் முதலிய) ஸத்பாத்திரத்தின் பொருட்டு;* **தீயதே** – *கொடுக்கப்படுகிறதோ;* **தத் தானம்** – *அந்தக்கொடை;* **ஸாத்விகம் ஸ்ம்ருதம்** – *ஸாத்விகமானது எனக் கருதப்படுகிறது.*

குறிப்பு: (1) முதற்பாதியிலுள்ள **தானம்** - கொடுக்கத் தகுந்த பொருள். பிற்பாதியிலுள்ள **தானம்** - கொடை. (2) தேசம், காலம், பாத்திரம் - இம்மூன்றில் கடைசியில் சொல்லப்பட்ட பாத்திரம் சிறந்தது. **தேசே, காலே**, என்ற இரண்டும் 7ம் வேற்றுமை. **அநுபகாரிணே** - என்ற 4ம் வேற்றுமையையொட்டியும், தானத்திற்கு 4ம் வேற்றுமை அவசியமாதலாலும், **பாத்ரே** - 4ம் வேற்றுமை என்று கவனிக்க. புண்ணியத்தால் தானம் கொடுத்த வரையும், தானம் வாங்கின பாபத்திலிருந்து தன்னையும், காப்பாற்றுபவன் என்று அர்த்தம்.

दानं ध्रुवं फलति पात्रगुणानुकूल्यात् ।

*தானம் த்ருவம் பலதி பாத்ரகுணானு கூல்யாத் |*

(மத்வவிஜயம் 2-30) பாத்திரத்தின் குணத்தையொட்டி தானம் நிச்சயம் பலனளிக்கும். ஸ்ரீமத்வர் பிறந்ததும், அவருடைய கீழண்டை வீட்டுக்காரர் அக்குழந்தையின் பொருட்டு கோதானம் செய்தார். அதன் பயனாக அவர் தன் பிள்ளையின் பிள்ளையாகப் பிறந்து, ஸ்ரீமத்வரின் தோழனாகிக் கடைசியில் முக்திபெற்றார். பாத்திரமறிந்து பிச்சையிடு. மகாபாரதம் அச்வ மேதபர்வம். 91ம் அத்தியாயத்தில், **நகுலோபாக்யானம்** - கீரிப் பிள்ளையின் சரிதம் ஸாத்விக தானத்திற்குச் சிறந்த உதாரணமாகும்.

21. यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम् ॥

யத்து ப்ரத்யுபகாரார்த்த²ம், ப²லமுத்தி³ச்ய வா புன: |
தீ³யதே ச பரிக்லிஷ்டம், தத்த³ானம் ராஜஸம் ஸ்ம்ருதம் || 21

**யத்** – எது; **பரிக்லிஷ்டம் து** – *அந்நியாயத்தினால் சம்பாதிக்கப்பட்டதோ;* **ப்ரதி உபகாரார்த்தம்** – *பதிலுபகாரத்தை அடைவதின் பொருட்டோ;* **வா** – *அல்லது;* **பலம் உத்திச்ய** – ஸ்வர்க்கம் முதலிய பலனைக் கருதியோ; **புன:** – மேலும்; **(பரிக்லிஷ்டம்** – அந்தப் பொருள் கைவிட்டுப் போய்

விட்டதே என்ற மனவருத்தத்துடன்); **தீயதே** - கொடுக்கப் படுகிறதோ; **தத் தானம்** - அந்தக் கொடை; **ராஜஸம் ஸ்ம்ருதம்** - ராஜஸமானது எனக் கருதப்படுகிறது.

22. अदेश काले यद्दानं अपात्रेभ्यश्च दीयते ।
असत्कृतं अवज्ञातं तत्तामसमुदाहृतम् ॥

அதே[3]ஶ காலே யத்த[3]ானம், அபாத்ரேப்[4]யஸ்ச தீ[3]யதே |
அஸத்க்ருதம் அவஜ்ஞாதம், தத் தாமஸ முத[3]ாஹ்ருதம் || 22

**தானம்** - எந்தக் கொடுக்கத்தகுந்த பொருள்; **அதேச காலே** - அசுத்தமான தேசத்திலும், தான் அசுத்தனாயிருக்கும் காலத்திலும்; **அபாத்ரேப்யஸ் ச** - தகுதியற்ற, துராசார முள்ளவர்களுக்கும்; (நல்லதேசம், காலம், பாத்திரம் கிடைத் தாலும்) **அஸத்க்ருதம்** - நமஸ்கரித்தல் முதலிய மரியாதை களற்றதும்; **அவஜ்ஞாதம்** - அலக்ஷ்யம் செய்தும், இகழ்ந்தும்; **தீயதே** - கொடுக்கப்படுகிறதோ; **தத்** - அந்தக்கொடை; **தாமஸம்** - தாமஸமானது என; உதாஹ்ருதம் சொல்லப்படுகிறது.

சுலோகம் 11லிருந்து, யாகம், தானம், தவம் இவைகளில் ஸாத்விகம் முதலிய மூன்று விதங்களின் தனித்தனி தர்மங்களைக் கூறினார். இங்கு. அம்மூன்றுக்கும் பொதுவான தர்மங்களைப் புராகல்பம் என்ற (3-13) பலர் செய்துள்ளதை உதாரணம் காட்டிக் கூறுகிறார்.

23. ओं तत् सत् इति निर्देशः ब्रह्मणः त्रिविधः स्मृतः ।
ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा ॥

ஓம் தத்ஸத் இதி நிர்த்தே[3]ஶ:, ப்[3]ரஹ்மணஸ் த்ரிவித[4]ஸ் ஸ்ம்ருத: |
ப்ராஹ்மணாஸ் தேன வேத[3]ாஸ்ச, யஜ்ஞாஸ்ச விஹிதா: புரா || 23

**ப்ரஹ்மண:** - குணபூர்ணரான விஷ்ணுவின்; **நிர்தேச:** - பெயர்; **ஓம் தத் ஸத் இதி** - *1 ஓம் 2 தத் 3 ஸத் என்று* **த்ரிவித:** - *1 மூன்றுவிதமானது. 2 த்ரீணி விதத்தே இதி* **த்ரிவித:** - யாகம், தானம், தவம் ஆகிய மூன்றையும் முறையே கூறுகிறது ன; **ஸ்ம்ருத:** - கருதப்பட்டுள்ளது. **தேன** - அந்த விஷ்ணுவால்; **புரா** - முன்னர் - சிருஷ்டிகாலத்தில்; **ப்ராஹ்மணா:** - பிராம் மணர்களும்; **வேதா: ச** - வேதங்களும்; **யஜ்ஞாஸ்ய** - யாகங் களும்; **விஹிதா:** - படைக்கப்பட்டன. *(3-10)*

**குறிப்பு:** உலகில் பகவான் உட்புகுந்திருப்பதாலும் பகவானை உலகம் ஆசிரயித்திருப்பதாலும், ஸ்வயம் குணபூர்ணர் ஆனதாலும், பகவானுக்கு **ஓம்** எனப் பெயர். ததத்வாத் - குணங்களினால் வியாப்தரானதாலும், கண்ணுக்குப் புலப்படாமல், மறைந்திருப்பதாலும்,

தத் எனப்பெயர். தோஷமில்லாதவரும் சகல நற்குணங்கள் பொருந்தியவரும், ஆதலால் ஸத் எனப் பெயர். இம்மூன்று பெயர்களும் **கீதையின் ஒவ்வொரு அத்தியாயத்தின் கடைசியிலும் கூறப்படுவதைக் கவனிக்க.**

*ஓதம் ஜகத் யத்ர ஸ்வயம் ச பூர்ணோ, வேதோக்த ரூபோ*
*Sநுபசாரதஸ்ச |*
*ஸர்வைஸ் சுபைஸ்சாபி யுதோ நசான்யை: ஓம் தத் ஸதித் யேன*
*மதோ வதந்தி ||*

*ரிக்வேத கில சுருதி ||*

ஓம் தத் ஸத், என்ற மூன்று பெயர்கள், (1) யாகம் (2) தானம், (3) தவம், (4) வேதங்கள் (5) பிராம்மணர்கள் என்ற ஐந்துக்கும், உண்டு. ஏனெனில் இவை பகவானின் பிரதிமைகள் போன்றவை. பிராம்மணர்கள், வேதங்கள், யாகம் முதலிய கர்மங்கள் - இவற்றைப் பரஸ்பரம் ஆசிரயித்திருக்கும்படிச் செய்திருப்பதாலும் பகவானுக்கு ஓம் என்று பெயர்.

அநாதி நித்யமான வேதங்களைச் ஸ்ருஷ்டித்தார் என்றால் வெளிப்படுத்தினார் என்று அர்த்தம்.

24. तस्मात् ओमित्युदाहृत्य यज्ञदानतपः क्रियाः ।
प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥

தஸ்மாத் ஓமித் யுத³ாஹ்ருத்ய, யஜ்ஞத³ானதப: க்ரியா: |
ப்ரவர்த்தந்தே வித⁴ானோக்தா:, ஸததம் ப்³ரஹ்ம வாதி³னாம் || 24

**தஸ்மாத்** - *ஓம் என்பது முக்கியமாக விஷ்ணுவின் பெயரானதாலும், யாகம் முதலிய ஐந்தின் பெயரானதாலும்;* **ஓம் இதி உதா ஹ்ருத்ய** - *ஓம் என்று உச்சரித்து;* **ப்ரஹ்ம வாதினாம்** - *வேதமறிந்தவர்களுடைய;* **விதான உக்தா:** - *விதிகளில் கூறப்பட்ட;* **யஜ்ஞ தான தப: க்ரியா:** - *யாகம் தானம், தவம் ஆகிய கர்மங்கள்;* **ஸததம்** - *எப்போதும்;* **ப்ரவர்த்தந்தே** - *நடைபெற்று வருகின்றன.*

குறிப்பு: மேற்படி மூன்று கர்மங்களும், ஸாத்விகமாக வேண்டுமானால் விஷ்ணுவின் பெயரான ஓங்காரத்தின் அர்த்தமறிந்து, ஓம் என்று உச்சரித்து, பிராம்மணர்களுடன் கூடி, வேத சாஸ்திர விதியின்படி அநுஷ்டிக்க வேண்டும்.

*ஸ்ரவத் யனோங்க்ருதம் ப்ரஹ்ம, பரஸ்தாச்ச விசீர்யதே |*

வேதங்களின் முதலில் ஓம் இல்லையேல், அதன் பலன் கசியும். கடைசியில் இல்லையேல், நசிக்கும். ஆகவே, ஆரம்பத்திலும்,

கடைசியிலும் ஓம் என உச்சரிக்கவேண்டும். நாமாவளிகளிலும், பிரம்ம ஸூத்திரங்களிலும் இதைக் கவனிக்க.

விஷ்ணுவின் பெயரான தத் என்றதின் அர்த்தமறிந்து விஷ்ணுவை உத்தேசித்து, வேறுபலனை விரும்பாமல் செய்தால் மேற்படி மூன்று கர்மங்களும் ஸாத்விகமாகும் என்கிறார்.

25. तदित्यनभिसंधाय फलं यज्ञतपः क्रियाः ।
दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकांक्षिभिः ॥

ததி$^{3}$த் யநபி$^{4}$ஸந்த$^{4}$ாய, ப$^{2}$லம் யஜ்ஞ தப: க்ரியா: |
த$^{3}$ானக்ரியாஸ்ச விவித$^{4}$ா:, க்ரியந்தே மோக்ஷ காங்க்ஷிபி$^{4}$: || 25

**தத்** – அந்த மறைவான; **பலம்** – ஸ்வர்க்கம் முதலியதை; **அநபிஸந்தாய** – தனக்கு வேண்டுமென்று விரும்பாமலும்; (**தத்** – அந்த மறைவான விஷ்ணுவை; **அபிஸந்தாய** – தனக்கு ஆஶ்ரயம் என்று விரும்பியும்); **இதி** – இம்மாதிரி; **யஜ்ஞ தப: க்ரியா:** – அக்னி ஹோத்ரம் முதலிய யாகங்கள், (சுலோகம் 14முதல் 16 வரையில் கூறிய) மனோவாக்காய தவங்களாகிற கர்மங்கள்; **விவிதா:** – பலவிதமான; **தானக்கிரியா: ச** – தானம் கொடுத்தல் முதலிய கர்மங்கள்; **மோக்ஷகாங்க்ஷிபி:** – மோக்ஷத்தை விரும்புகிறவர்களால்; **க்ரியந்தே** — செய்யப் படுகின்றன.

ஸத் என்ற பெயரின் அர்த்தமறிந்து செய்தாலும், ஸாத்விகமாகும் எனக்கருதி, விஷ்ணுவுக்கும் யாகம் முதலியவைகளுக்கும், ஸத் என்ற பெயரின் காரணத்தைக் கூறுகிறார்.

26. सद्भावे साधुभावे च सदित्येतत् प्रयुज्यते ।
प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥

ஸத்ப$^{4}$ாவே ஸாது$^{4}$ப$^{4}$ாவே ச, ஸதி$^{4}$த் யேதத் ப்ரயுஜ்யதே |
ப்ரஶஸ்தே கர்மணி தத$^{2}$ா, ஸச்ச$^{2}$ப்த$^{3}$: பார்த்த$^{2}$ யுஜ்யதே || 26

**பார்த்த** – குந்தீ புத்திரனே !; **ஸத் இதி** – ஸத் என்ற; **ஏதத்** – இந்தப்பதம்; **ஸத்பாவே** – ஸத: (முன் இல்லாத) வஸ்துவை; **பாவ:** – உண்டுபண்ணுதல்; அதாவது. விஷ்ணுவின் சிருஷ்டி என்ற அர்த்தத்திலும்; **ஸாதுபாவே ச** – தோஷமில்லாதிருத்தல், என்ற அர்த்தத்திலும்; **ப்ரயுஜ்யதே** – வழங்கப்படுகிறது (உலகைச் சிருஷ்டிப்பதாலும், தோஷமற்றவர் ஆனதாலும், விஷ்ணுவுக்கு ஸத் எனப் பெயர்). **ததா** – அவ்வாறே; **ஸச் சப்த:** – ஸத் என்ற பதம்; **ப்ரஶஸ்தே கர்மணி** –(யாகம், தானம், தவம் முதலிய) சுப

கர்மம் என்ற அர்த்தத்திலும்; **யுஜ்யதே** - உபயோகிக்கப் படுகிறது.

**குறிப்பு:** அப்ராமாண்யம் முதலிய தோஷங்களற்றதால், வேதங் களுக்கும் ஸத் என்று பெயர். காமம் முதலிய தோஷங்களற்றவர் களாதலால், பிராம்மணர்களுக்கும் ஸத் என்று பெயர். வேதங்களில் கூறப்படுவதாலும், பிராம்மணர்களால் செய்யப்படுவதாலும் யாகம், தானம், தவம் முதலிய சுப கர்மங்களுக்கும், ஸத் என்று பெயர்.

பகவானிடம் சிரத்தையுடன் இருப்பதும், ஸாத்விகமாவதற்குக் காரணமாகும் என்கிறார்.

27. यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।
कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥

யஜ்ஞே தபஸி த[3]ானே ச, ஸ்தி[2]திஸ் ஸதி[3]தி சோச்யதே |
கர்ம சைவ தத[3]ர்த்தீயம், ஸதித்யேவா பி[4]தீயதே || 27

**யஜ்ஞே** - யாகத்திலும்; **தபஸி** - தவத்திலும்; **தானே ச** - கொடையிலும்; **ஸ்திதி: ச** - இருத்தலும் அதாவது இந்தக் கர்மங்களினால், பகவான் பலனைத் தருகிறார் என்ற ஆஸ்திக்ய புத்தியும்; **ஸத் இதி உச்யதே** - ஸத் என்று சொல்லப் படுகிறது. அந்த ஆஸ்திக்ய புத்தியுடன் செய்யப்படும் யாகம் முதலிய கர்மமும் ஸத் எனப்படும். **ச – மேலும்; ததர்த்தீயம்** - ஸத் என்ற பதத்தின் அர்த்தமான பகவானை யுத்தேசித்தும், அவனைச் சந்தோஷப்படுத்தவும் செய்யப்படும்; **கர்ம ஏவ** - கர்மமும்; **ஸத் இதி ஏவ** - ஸத் என்றே; **அபிதீயதே** - கூறப் படுகிறது.

**குறிப்பு:** சு. 26, 27களில் **ஸத்** என்பதற்கு (1) சிருஷ்டித்தல் (2) தோஷமில்லாதிருத்தல் (3) சுபமான கர்மம் (4) யாகாதிகளில் ஆஸ்திக்ய புத்தி (5) பகவானின் பொருட்டு செய்யப்படும் கர்மம் என்ற அர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன. (சு.23ல்) குறிப்பையும் பார்க்க.

யாகம் முதலியன ஸாத்விகமாய் இருப்பதற்குரிய தர்மங்களைக் கூறி, ஸாத்விகமாய் இல்லாதிருப்பதற்குரிய தர்மங்களை நிந்தா என்ற அர்த்தவாதத்தினால் *(3-13)* கூறி முடிக்கிறார்.

28. अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥

அஶ்ரத்த[4]யா ஹுதம் த[3]த்தம், தபஸ் தப்தம் க்ருதம் ச யத் |
அஸதி[3]த் யுச்யதே பார்த்த, ந ச தத் ப்ரேத்ய நோ இஹ || 28

**பார்த்த** - குந்தீ புத்திரனே; **அஶ்ரத்தயா** - பகவானிடம் ஶ்ரத்தையில்லாமல்; **ஹுதம்** - சாஸ்திர முறைப்படி செய்யப் படும் ஹோமமும், யாகமும்; **தத்தம்** - அளிக்கப்படும் கொடையும்; **தப்தம் தப:** – செய்யப்படும் தவமும்; **க்ருதம் ச** - செய்யப்படும் ஜபம் முதலிய வேறு கர்மமும்; **யத்** - எதுவோ; **தத்** — அது; **அஸத்** - ஸத் என்ற பெயருள்ள பகவானுக்குப் பிரியமானதல்ல; ஆதலால், **அஸத்** - துஷ்டகர்மம்; **இதி** - என்று; **உச்யதே** - சொல்லப்படுகிறது. **தத்** - அந்தக் கர்மம்; **ப்ரேத்ய** - இறந்த பிறகு, பரலோகத்தில்; **ந** - சுகத்தைத் தராது. **இஹ ச ந** - இந்த லோகத்திலும் சுகத்தைத் தராது.

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुन संवादे श्रद्धात्रयविभागयोगो नाम सप्तदशोऽध्यायः ॥

ஓம் தத் ஸத், இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம
வித்யாயாம், யோக சாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே,
ச்ரத்தாத்ரய விபாக யோகோ நாம ஸப்த தசோ அத்யாய: ||

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய ச்ரத்தா த்ரய விபாகயோகம்*
*என்ற பதினேழாம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---





# 18

## மோக்ஷ ஸந்ந்யாஸ யோகம்

(78 சுலோகங்கள்)

### பதினெட்டாம் அத்தியாயச் சுருக்கம்

ஐந்தாம் அத்தியாயம் ஸந்ந்யாஸ யோகம் எனப்பட்டதால், இது மோக்ஷ ஸந்ந்யாஸ யோகம் எனப்படுகிறது. இதில் முற்கூறிய தத்வங்களின் ஸாரமும், ஸாதனங்களின் ஸாரமும், தொகுத்துக் கூறப்படுகின்றன.

நியத காம்ய கர்மங்களைச் செய்யாமலே விட்டுவிடுவதும், வைகல்பிக காம்யகர்மங்களைச் செய்து, பலனை விட்டுவிடுவதும் ஸந்ந்யாஸம் எனப்படும். மற்ற எல்லா கர்மங்களையும் செய்து பலனை விட்டுவிடுவது தியாகம் எனப்படும். நாம் செய்யும் காரியம் நல்லதோ கெட்டதோ, அனைத்துக்கும், இடம், கருவி, செய்கை, ஜீவர்களாகிய நாம், பகவான் அல்லது அதிருஷ்டம்; ஆகிய ஐந்து காரணங்கள் உள்ளன. அவ்வாறிருக்க, நாம் மாத்திரம் காரணம் என்று நினைப்பது தவறு. ஆகையால், நாம் செய்கிறோம், என்ற அபிமானத்தை விட்டுவிடவேண்டும்.

மனிதர்கள் ராஜஸ வகுப்பைச் சேர்ந்தவர்கள். அதிலும் பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு வர்ணத்தினராயுள்ளனர். அவரவர்களின் ஸ்வபாவத்தை யொட்டி அவர்களின் க்ஷேமத்திற்காகப் பகவான் பற்பல கர்மங்களை வகுத்துள்ளார். ஆகவே, அவரவர்களுக்குரிய கர்மங்களையே செய்யவேண்டும்.

அவ்வாறு செய்யும்போது, ஸ்ரீஹரியே ஸர்வோத்தமர் என்ற ஞானத்துடனும், பக்தியுடனும் கூடிய மனதை, அவரிடம் வைத்து, அதைப் பகவானுடைய சிறந்த பூஜையாகக் கருதி, நாம் அவரைச் சேர்ந்தவர்கள், அவர் நம்மைக் கைவிடமாட்டார் என்ற நம்பிக்கையுடன் இருப்பதே ஶரணாகதி தத்வமாகும்.

பகவானை நாம் ஶரணமடைய வேண்டும். பகவான் நம்மிடம் கிருபை கூர்ந்து நமது பாவங்களைப் போக்கி மோக்ஷத்தைத் தருவார்.

*2-45ல்* மோக்ஷ ஸாதனமான அபரோக்ஷ ஞானத்திற்குக் காரணமான, நிஷ்காம யோகத்தை, முன் அத்தியாயங்களில், பற்பல இடங்களில் கூறினார். மந்தபுத்தி உடையவர்களின் மனதில் அது நிலைநிற்காது என, அதை இங்குத் தொகுத்துச் சுருக்கமாகக் கூறுகிறார். 14ம் அத்தியாயத்தில் கூறாத முக்குணங்களின் காரியத்தையும் கூறுகிறார்.

अर्जुन उवाच — **அர்ஜுன: உவாச** - அர்ஜுனன், 5-2ல், ஸந்ந்யாஸம் மோக்ஷ ஸாதனமென்றும், 12-12ல் த்யாகம் மோக்ஷஸாதனமென்றும் கூறியிருக்கிறீர். இரு பதங்களும் ஒரே அர்த்தமுடையவைபோல் தோன்றுகிறது. அவற்றின் தத்வம் யாது? என வினவுகிறான்.

1. संन्यासस्य महाबाहो तत्वमिच्छामि वेदितुम् ।
त्यागस्य च हृषीकेश पृथक् केशिनिषूदन ॥

ஸந்யாஸஸ்ய மஹாப³ாஹோ, தத்வமிச்ச²ாமி வேதி³தும் |
த்யாக³ஸ்ய ச ஹ்ருஷீகேஶ, ப்ருத²க் கேஶிநிஷூத³ன || 1

**ஹ்ருஷீகேஶ** - இந்திரியங்களின் ஸ்வாமியே!; **மஹா பாஹோ** - பெருங்கைகளையுடையவரே; **கேஶி நிஷூதன** - கேசி என்ற அஸுரனைக் கொன்றவரே!; **ஸந்ந்யாஸஸ்ய** - ஸன்யாஸத்தின்; **தத்வம்** - ஸ்வரூபத்தையும்; **த்யாகஸ்யச** - தியாகத்தின் ஸ்வரூபத்தையும்; **ப்ருதக்** - தனித்தனியாக; **வேதிதும்** - அறிவதற்கு; **இச்சாமி** - விரும்புகிறேன்.

**குறிப்பு:** மஹா பாஹோ, கேசிநிஷூதன - பின்வரும் கிருஷ்ணரின் மகிமையைக் குறிக்கிறான். ஸ்ரீ கிருஷ்ணரைக் கொல்ல கம்ஸன் கேசீ என்ற அஸுரனை அனுப்பினான். அவன் குதிரை ரூபத்துடன் ஸ்ரீ கிருஷ்ணரை விழுங்க வந்தான். ஸ்ரீ கிருஷ்ணரோ தன் இடது கையை அதன் வாய்க்குள் செலுத்தி வயிற்றுக்குள் பெருக்கும்படி செய்து, அவன் வெள்ளரிப்பழம்போல் இரண்டாகப் பிளந்து இறக்கும்படிச் செய்தார். (பாகவதம் 10-35-6 முதல்-9 சு.)

श्रीभगवान् उवाच - **ஸ்ரீ பகவான் உவாச** - ஸ்ரீ கிருஷ்ணர் பதிலளிக்கிறார்.

2. काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।
सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥

**காம்யானாம் கர்மணாம் ந்யாஸம், ஸந் ந்யாஸம் கவயோ விது³: |**
**ஸர்வ கர்ம ப²லத்யாக³ம், ப்ராஹுஸ் த்யாக³ம் விசக்ஷணா: ||** 2

**காம்யானாம் கர்மணாம்** – ஓர் பலனையுத்தேசித்துச் செய்யும் கர்மங்களை, **ந்யாஸம்** – விட்டுவிடுவதை; **ஸந் ந்யாஸம்** – ஸன்யாஸம் என்று; **கவய:** – ஞானிகள்; **விது:** – அறிவார்கள். **ஸர்வகர்ம பலத்யாகம்** – பகவத் ப்ரீதியைத் தவிர எல்லாவித கர்மங்களின் பலனை விட்டுவிடுவதை; **த்யாகம்** – தியாகம் என்று; **விசக்ஷணா:** – நிபுணர்கள்; **ப்ராஹு:** கூறுகிறார்கள்.

குறிப்பு: ஓர் பலனை உத்தேசித்துச் செய்யும் கர்மம் காம்யகர்மம் எனப்படும். அது இருவகைப்படும்.

(1) மழையை விரும்புகிறவன். காரீரி என்ற யாகத்தைச் செய்ய வேண்டும் என்ற வேதத்தின்படி செய்யும் காரீரி யாகம் போன்றது, நியத காம்யம் ஆகும் - அதாவது எப்போதும் காம்யகர்மமாகவே இருப்பது, **இதைச் செய்யாது விட்டுவிடுவது ஸன்யாஸமாகும்.** (2) ஸ்வர்க்கத்தை விரும்புகிறவன், ஜ்யோதிஷ்டோமயாகம் செய்யவேண்டும். என்ற வேதத்தின்படி செய்யும் ஜ்யோதிஷ்டோம யாகம் போன்றது. வைகல்பிக காம்யம் ஆகும். அதாவது ஸ்வர்க்கத்தை விரும்பிச் செய்தால் காம்யமாகும். ஸ்வர்க்கத்தை விரும்பாமல் பகவத்பிரீதிக்காகச் செய்தால் காம்யமாகாது. ஆயினும் அதைச் செய்து பலனை விட்டுவிடுவது **ஸன்யாஸமாகும்.** மற்ற எல்லா கர்மங்களிலும் பலனை விட்டுவிடுதல் தியாகமாகும்.

தாம் கூறிய தியாகத்தின் ஸ்வரூபத்தை உறுதிப்படுத்த, மேல் வாரியாக விருத்தமாகத் தோன்றும் கருத்துக்களை விளக்குகிறார்.

3. त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः ।
यज्ञ दान तपः कर्म न त्याज्यं इति चापरे ॥

த்யாஜ்யம் தே³ாஷவத் இத்யேகே, கர்ம ப்ராஹுர் மனீஷிண: |
யஜ்ஞ த³ான தப: கர்ம ந த்யாஜ்யம் இதி சாபரே || 3

**ஏகே மனீஷிண:** – சில ஞானிகள்; **தோஷவத் இதி** – ஸம்ஸார பந்தத்தைத் தரும் தோஷமுள்ளது, ஆகையால் **கர்ம** – காம்யகர்மம்; **த்யாஜ்யம்** – விட்டுவிடத் தகுந்தது என; **ப்ராஹு:** – சொல்லுகிறார்கள்; **அபரே ச** – மற்றும் சில ஞானிகளும்; **யஜ்ஞ தான தப: கர்ம** – யாகம், தானம், தவம், ஆகிய கர்மங்கள்; அல்லது **தப:** – க்ருச்ரம்; முதலிய தவம், கர்ம – நித்ய நைமித்திக கர்மங்கள்; **ந த்யாஜ்யம்** – விடத்தகுந்தவையல்ல; **இதி** – என்று (சொல்கிறார்கள்) சு. 6 பார்க்க.

உண்மையில் கருத்துவேற்றுமையில்லை, என நிரூபிக்கிறார்.

4. निश्चयं श्रृणु मे तत्र त्यागे भरतसत्तम ।
त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः संप्रकीर्तितः ॥

நிஸ்சயம் ஶ்ருணு மே தத்ர, த்யாகே[3] ப[4]ரதஸத்தம |
த்யாகே[3]ா ஹி புருஷவ்யாக்[4]ர, த்ரிவித[4]ஸ் ஸம்ப்ரகீர்த்தித: || 4

**பரதஸத்தம** - பரதகுல சிரேஷ்டனே!; **தத்ர** - அந்த விவாத விஷயமான; **த்யாகே** - விட்டுவிடும் விஷயத்தில்!; **நிஸ்சயம்** - தீர்மானமான கருத்தை; **மே** - என்னிடமிருந்து; **ஶ்ருணு** - கேள் (கேட்டு அதன்படி நடப்பாயாக). **புருஷவ்யாக்ர** - மனிதர்களில் சிரேஷ்டனே!; **த்யாக: ஹி** - விட்டு விடுவது என்பதோ; **த்ரிவித:** - மூன்றுவிதமானது. (1) பலனை விட்டு விடுதல். (2) (மமதா) கர்மத்தில் என்னுடையது என்ற பற்றை விட்டுவிடுதல், (3) பகவானே எல்லாம் செய்கிறார், என்ற சிந்தனையுடன், நான் செய்கிறேன் என்ற அபிமானத்தை விட்டு விடுதல்; என்று சிலராலும்; சுலோகம் 7 முதல் 9 வரையில் கூறப்போகும், (1) ஸாத்விகம் (2) ராஜஸம் (3) தாமஸம், என்று வேறு சிலராலும், **ஸம்ப்ரகீர்த்தித:** - நன்கு ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.

தீர்மானமான கருத்தைக் கூறுகிறார்.

5. यज्ञ दान तपः कर्म न त्याज्यं कार्यमेवतत् ।
यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥

யஜ்ஞ த[3]ான தப: கர்ம, ந த்யாஜ்யம் கார்யமேவ தத் |
யஜ்ஞோ த[3]ானம் தபஸ்சைவ, பாவனானி மனீஷிணாம் || 5

**யஜ்ஞ தான தப: கர்ம** - யாகம், தானம், க்ருச்ரம் முதலிய தவம் அல்லது நித்திய நைமித்திக கர்மங்கள்; **ந த்யாஜ்யம்** - விட்டுவிடத் தகுந்தவை அல்ல. **தத்** - அந்த அனைத்தும்; **கார்யம் ஏவ** - கட்டாயம் செய்யத்தகுந்தவையே. (ஏனெனில்), **மனீஷிணாம்** ஞானிகளுக்கு; **யஜ்ஞ:** - யாகமும்; **தானம்** - கொடையும்; **தப: ச** - தவமும்; **பாவனானி ஏவ** - சுத்தியைச் செய்பவையே. அதாவது, ஸம்ஸார பந்தத்தைத் தரா; அல்லது அபரோக்ஷ ஞானமடைந்த பிறகும் செய்யப்படும் மேற்படி கர்மங்கள் மோக்ஷத்தில், பால் பொங்குவதுபோல ஆனந்தப் பெருக்கின் காரணமாகும் (ஆனந்த உன்னாஹம்).

**குறிப்பு:** எல்லோரும் தத்தம் வர்ணாசிரமங்களுக்குரிய யாகம் முதலிய கர்மங்களைச் செய்தே தீரவேண்டும் என்றால், ஸன்யாஸிகள், பிரம்மச்சாரிகள், ஸ்திரீகள் முதலியோருக்கு யாகம் முதலிய கர்மங்கள் உண்டா என்றால் உண்டு.

**ஸன்யாஸிகளுக்கு** - ஞானயஜ்ஞம், வித்யாதானம். அபயதானம், பிரம்மசர்யம் முதலிய தவங்கள்.

ஸ்திரீ முதலியோருக்கு - பகவன் நாம ஸங்கீர்த்தனம் என்ற யஜ்ஞம், பல தானங்கள், உண்மை பேசுதல், உபவாஸமிருத்தல் முதலிய தவங்கள்.

இவைகளை விட்டுவிட்டால் நரகம் முதலிய அனர்த்தங்களுண்டு.

சுலோகம் 3ல், சில ஞானிகள் விடத்தகுந்தவை என்றார்களே என்றால், விளக்குகிறார்.

6. एतान्यपि तु कर्माणि संगं त्यक्त्वा फलानि च ।
कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ।।

ஏதான்யபி து கர்மாணி, ஸங்கம் த்யக்த்வா ப[2]லானி ச |
கர்த்தவ்யானீதி மே பார்த்த[2], நிஸ்சிதம் மதமுத்தமம் || 6

**பார்த்த** – குந்தீ புத்திரனே!; **ஏதானி** – இந்த முற்கூறப் பட்ட; **கர்மாணி அபி** – யாகம், தானம், தவம் முதலிய கர்மங் களும் (உன்போன்றவர்கள் யுத்தம் என்ற கர்மமும்); **ஸங்கம்** – (மமதா) என்னுடையதென்ற பற்றையும்; **பலானி ச** – ஸ்வர்க்கம் முதலிய பலன்களையும்; **த்யக்த்வா** – விட்டுவிட்டு; **கர்த்தவ்யானி து** – செய்யத் தகுந்தவையே; **இதி** – என்று; **மே** – என்னுடைய; **நஸ்சிதம்** – தீர்மானிக்கப்பட்டதும்; **உத்தமம்** – சிறந்ததுமான; **மதம்** – அபிப்ராயமாகும்.

**குறிப்பு:** *(1)* சுலோகம் 3ல், அந்த ஞானிகளின் கருத்தும் முற்கூறிய யாகம் முதலிய கர்மங்களில் பற்றுதலையும், பலன்களையும் விட்டுவிடுதலே ஆகும். கர்மங்களையே விட்டுவிடுவதல்ல.

*(2)* 2–7ல் அர்ஜுனன், எது தனக்குச் சிறந்ததோ, அதை நிஸ்சிதம் சந்தேகமில்லாமல் சொல்லும்படி கேட்டதற்கு, ஸ்ரீ கிருஷ்ணர் இங்கு தன் நிஸ்சிதமான பதிலைக் கூறியிருக்கிறார்.

சுலோகம் 4ல் கூறிய மூன்றுவித தியாகங்களைக் கூறுகிறார்.

7. नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते ।
मोहात्तस्य परित्यागः तामसः परिकीर्तितः ।।

நியதஸ்ய து ஸந்ந்யாஸ:, கர்மணோ நோப பத்[3]யதே |
மோஹாத் தஸ்ய பரித்யாக[3]:, தாமஸ: பரிகீர்த்தித: || 7

**நியதஸ்ய** – தத்தம் வர்ணாசிரமங்களுக்குரிய; **கர்மண: து** – கர்மத்தையோ; **ஸந்ந்யாஸ:** – விட்டு விடுதல் **ந உபபத்யதே** – தகுந்ததல்ல. (ஏனெனில், நரகத்தை அடையவேண்டிவரும் ஆகவே); **மோஹாத்** – விபரீத ஞானத்தினால்; **தஸ்ய** – அந்தச்

கர்மத்தை; **பரித்யாக:** - செய்யாமல் விட்டுவிடுவது; **தாமஸ:** - தாமஸ தியாகம் என; **பரிகீர்த்தித:** - நன்கு கூறப்படுகிறது.

8. दुःखमित्येव यत्कर्म कायक्लेशभयात् त्यजेत् ।
स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥

து$^{3}$க்க$^{2}$மித்யேவ யத் கர்ம, காய க்லேஶ ப$^{4}$யாத் த்யஜேத் |
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாக$^{3}$ம், நைவ த்யாக$^{3}$ ப$^{2}$லம் லபே$^{4}$த் || 8

**துக்கம் இத்யேவ** - துக்கத்தைத்தரும் என்றே; **காயக்லேஶ பயாத்** - உடலுக்கு உபத்திரவம் ஏற்படும் என்ற பயத்தால்; **கர்ம** - (தனக்குரிய) கர்மத்தை; **த்யஜேத்** - விட்டுவிடுதல் என்ற; **யத்** - எதுவோ; **ஸ:** - அது; (ராஜஸ த்யாக: - ராஜஸ தியாகமாகும். **தம்** - அந்த); **ராஜஸம் த்யாகம்** - ராஜஸ தியாகத்தை; **க்ருத்வா** - செய்தால்; **த்யாக பலம்** - தியாகத்தின் பலனான பகவத் ப்ரீதியை; **நஏவ லபேத்** - அடையவே மாட்டான்.

9. कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन ।
संगं त्यक्त्वा फलं चैव स त्यागः सात्विको मतः ॥

கார்யமித்யேவ யத் கர்ம, நியதம் க்ரியதேऽர்ஜுன |
ஸங்க$^{3}$ம் த்யக்த்வா ப$^{2}$லம் சைவ, ஸ த்யாக$^{3}$: ஸாத்விகோ மத: || 9

**அர்ஜுன** - சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!; **கார்யம்** - கட்டாயம் செய்யவேண்டும் (இல்லாவிடில் தோஷமுண்டு). **இதி ஏவ** - என்ற புத்தியுடனே; **ஸங்கம்** - என்னுடையது என்ற பற்றையும்; **பலம் ச** - ஸ்வர்க்கம் முதலிய பலனையும்; **த்யக்த்வா ஏவ** - விட்டுவிட்டே; **நியதம்** - தன் வர்ணாசிரமத்திற்குரிய; **யத் கர்ம** - எந்தக் காரியம்; **க்ரியதே** - செய்யப்படுகிறதோ; **ஸ: த்யாக:** - அந்த கர்மானுஷ்டானத்துடன் கூடிய பற்றுதலையும், பலனையும் விட்டுவிடுதல்; **ஸாத்விக: மத:** - ஸாத்விக தியாகம் எனக் கருதப்படுகிறது.

ஸாத்விக தியாகியின் குணங்களைக் கூறுகிறார்.

10. न द्वेष्टि अकुशलं कर्म कुशले नानुषज्जते ।
त्यागी सत्व समाविष्टो मेधावी छिन्नसंशयः ॥

ந த்$^{3}$வேஷ்டி அகுஶலம் கர்ம: குஶலே நாநுஷஜ்ஜதே |
த்யாகீ$^{3}$ ஸத்வஸமாவிஷ்டோ, மேத$^{4}$ாவீ சி$^{2}$ன்ன ஸம்ஶய: || 10

(ய: - யார்;) **அகுஶலம்** - செய்யும் காலத்தில் சுகத்தைத் தராததும், உடலுக்குத் துக்கத்தைத் தருவதுமான; **கர்ம** -

காரியத்தை; **ந த்வேஷ்டி** - வெறுப்பதில்லையோ; **குஶலே** - முன் செய்த புண்ணியத்தின் பலனில் (சுகத்தில்); **ந அனுஷஜ்ஜதே** - பற்றை வைப்பதில்லையோ; விரும்புவது மில்லையோ; **ஸத்வஸமாவிஷ்ட:** - ஸத்வகுணத்தினால் நன்கு நிறைந்தவனாயும்; **மேதாவி** - பகவானின் உண்மையான ஞானமுடையவனாயும்; **சின்னஸம்ஶய:** - பரதத்வம். அபர தத்வம், பற்றியும், பகவத் தர்மானுஷ்டான விஷயத்திலும், சந்தேகமில்லாதவனாயும்; **த்யாகீ** - ஸர்வகர்மங்களையும் பகவானிடம் ஸமர்ப்பிக்கிறவனாயும் உள்ளவனோ; (**ஸ:** - அவன்; ஸாத்விக தியாகி ஆவான்.)

சுலோகம் 3ல், சிலர் கூறினதற்குக் கர்மங்களை விட்டு விடவேண்டும் என்று அர்த்தமல்ல, ஏனெனில் யாரும் கர்மத்தை அடியோடுவிட முடியாது எனக்கூறுகிறார்.

11. न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।
यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥

நஹி தேஹப்[4]ருதா ஶக்யம், த்யக்தும் கர்மாண் யஶேஷத: |
யஸ்து கர்மப[2]லத்யாகீ[3], ஸ த்யாகீ த்யபி[4]தீ[4]யதே || 11

**ஹி** - யஸ்மாத் - எதனால்; **அஶேஷத:**- கர்மாணி - பொதுவாக எல்லாகர்மங்களையும் குறிப்பாக சாஸ்திரங்களில் விதித்த கர்மங்களையும்; **தேஹப்ருதா** - தேகம் படைத்த ஜீவனால்; **த்யக்தும்** - விட்டு விடுவதற்கு; **ந ஶக்யம்** - (3-5ல் கூறியபடி) முடியாதோ; (**தஸ்மாத்** - அதனால்); **ய:** - யார்; **கர்மபலத்யாகீ** - கர்மங்களின் பலனை விட்டு விடுகிறானோ; **ஸ: து** - அவனே; **த்யாகீ** - தியாக முள்ளவன்; **இதி** - என்று; **அபிதீயதே** - கூறப்படுகிறான்.

குறிப்பு: சுலோகம் 3ல், கர்மங்களை விட்டுவிட வேண்டும் என்பதின்-கருத்து, கர்ம பலனை விட்டுவிட வேண்டும் என்பதே தவிர, கர்மங்களையே விட்டுவிடுதல் என்று அர்த்தமல்ல். சு. 66ல் ஸர்வதர்மான் பரித்யஜ்ய என்பதற்கும் இதே அர்த்தம் - ஸ்ரீஸுமத்வ விஜயம் 1-33 பார்க்க.

கர்மபலனை விடாதவர்களை நிந்தித்து, அதை விட்டவர்களைப் புகழ்கிறார்.

12. अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम् ।
भवति अत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥

அநிஷ்ட மிஷ்டம் மிஶ்ரம் ச, த்ரிவித[4]ம் கர்மண: ப[2]லம் |
ப[4]வதி அத்யாகி[3]னாம் ப்ரேத்ய, ந து ஸந்ந்யாஸினாம் க்வசித் || 12

**அத்யாகினாம்** - *கர்மபலனை விடாதவர்களுக்கு;* **ப்ரேத்ய** - *இறந்த பிறகு;* **கர்மண:** - *(அவர்கள் செய்த) கர்மத்தின்;* **த்ரிவிதம் பலம்** - *மூன்று வித பலனான; (1)* **அநிஷ்டம்** - *விரும்பப்படாத நகரம் முதலிய துக்கம். (2)* **இஷ்டம்** - *விரும்பப் பட்ட ஸ்வர்க்கம் முதலிய சுகம். (3)* **மிச்ரம் ச** - *சுகதுக்கம் இரண்டும் கலந்த மனிதப்பிறவி முதலியன;* **பவதி** - *ஏற்படும்.* **ஸந் நியாஸினாம் து** - *(சு.2ல் கூறியபடி) நியத காம்ய கர்மங் களைச் செய்யாமலும், வைகல்பிககாம்ய கர்மங்களைச்செய்து அதன் பலனை, விட்டும் இருப்பவர்களுக்கோ;* **க்வசித்** - *எங்கும், இவ்வுலகிலோ, அவ்வுலகிலோ;* **ந** *(மூன்றுவித பலனும்) இல்லை. அவர்கள் முக்தியடைவார்கள்.*

**குறிப்பு: அத்யாகினாம்** என்பதற்கு எதிரிடையாக **த்யாகினாம்** என்று கூறாமல், **ஸந்ந்யாஸினாம்** என்று கூறியதால், தியாகிகள் பிறருக்காகச் சில சமயங்களில், நியத காம்ய கர்மத்தைச் செய்வார்கள். ஸந் ந்யாஸிகளோ அதையும் செய்ய மாட்டார்கள் என்ற மேன்மையை அறிவிக்கிறார். **து** என்ற பதத்தால், அவர்களுக்கு ஞானம் பக்தி முதலியவைகளின் மூலம் அபரோக்ஷ ஞானத்தையடைந்து மோக்ஷத்தில் ஆனந்தப் பெருக்கு உண்டாகும் எனக்குறிக்கிறார் (12-12 பார்க்க).

நியத காம்யத்தைச் செய்யாதிருத்தல், வைகல்பிக காம்யத்தில் பலனைத்துறத்தல், பிறருக்காகவும், நியத காம்யத்தைச் செய்யாதிருத்தல், என்ற மூன்றைத் தவிர, 'கர்மத்தை நான் செய்கிறேன்', என்ற அபிமானத்தையும் விட்டுவிடவேண்டும்; என்று சு. 16,17ல் கூறப்போகிறார். அதற்காக கர்மத்தின் காரணங்களை ஐந்து சுலோகங்களில் விளக்குகிறார்.

13. पंचैतानि महाबाहो कारणानि निबोध मे ।
सांख्ये कृतान्ते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम् ॥

பஞ்சைதானி மஹாப[3]ாஹோ, காரணானி நிபே[3]ாத[4] மே |
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி, ஸித்த[4]யே ஸர்வ கர்மணாம் || 13

**மஹாபாஹோ** - *பெரிய கைகளையுடையவனே !;* **ஸர்வகர்மணாம் ஸித்தயே** - *எல்லா கர்மங்களும் நடைபெறு வதற்காக;* **ஸாங்க்யே க்ருதாந்தே** - *(10-26) விஷ்ணுவின் அவதாரமான கபிலர் அருளிய ஸாங்க்ய ஸித்தாந்தத்தில்;* **ப்ரோக்தானி** - *கூறப்பட்ட;* **ஏதானி** - *இந்த (கூறப்போகும்);* **பஞ்ச** - *ஐந்து;* **காரணானி** - *(கர்மத்தின்) காரணங்களை;* **மே** - *என்னிடமிருந்து;* **நிபோத** - *அறிவாயாக.*

**குறிப்பு:** 2-39. ஜீவேசுவரர்களைப் பற்றிய சுத்தமான விசேஷ ஞானம் ஸாங்க்யம் எனப்படும். அதை விளக்கும் சாஸ்திரம் ஸாங்க்ய சாஸ்திரமாகும்.

14. अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।
विविधा च पृथक् चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ॥

அதி[4]ஷ்டானம் தத[2]ா கர்த்தா, கரணம் ச ப்ருத[2]க் வித[4]ம் |
விவித[4]ா ச ப்ருத[2]க்சேஷ்டா, தை[3]வம் சைவாத்ர பஞ்சமம் || 14

**அத்ர** – *இந்தக் கர்மத்தின் விஷயத்தில்;* **அதிஷ்டானம்** – *(தேகம், பூமி முதலியன போன்ற) ஆதாரமும்;* **கர்த்தாததா** – *செய்பவனும் (ஸ்வதந்திர கர்த்தாவான விஷ்ணு அல்லது அஸ்வதந்திர கர்த்தாவான ஜீவன்);* **ப்ருதக்விதம்** – *பலவித மான;* **கரணம் ச** – *கருவிகளும் (இந்திரியங்கள் முதலியன);* **விவிதா** – *பலவாறானதும்;* **ப்ருதக்** – *பரஸ்பரம் வேறுபட்டது மான;* **சேஷ்டா ச** – *(கை கால்களால் செய்யும் வேலைகளும், மனதால் புரியும் தியானம் முதலிய) செயலும்;* **பஞ்சமம்** – *ஐந்தாவது காரணமான;* **தைவம் ஏவ** – *(புண்யம், பாவம் ஆகிய) அதிருஷ்டமும், அல்லது விஷ்ணுவும் ஆகும்.*

**குறிப்பு:** (1) கர்த்தா – விஷ்ணு எனக்கொண்டால் அத்ருஷ்டம் 5வது காரணமாகும். கர்த்தா – ஜீவன் எனக்கொண்டால், விஷ்ணு 5வது காரணமாகும். தைவத்தைக் கடைசியில் கூறியதால், முதல் நான்கு காரணங்களிருந்த போதிலும், தைவ பலம் இல்லையேல், யாதும் நடைபெறாது; எல்லாம் தைவாதீனமானவை; என அறிவிக்கிறார்.

(2) வேற்றுமைகள் எட்டு உண்டு அல்லவா! அவற்றில் ஆறு, காரகங்கள் எனப்படும். இங்கு மூன்று கூறப்பட்டன மீதி மூன்றும் எல்லாக் கர்மங்களுக்கும் தேவையில்லையாதலால் கூறப்படவில்லை.

1ம் வேற்றுமை – கர்த்தா

2ம், 6ம் வேற்றுமை – கர்ம

3ம் வேற்றுமை – கரணம்

4ம் வேற்றுமை – ஸம்ப்ரதானம்

5ம் வேற்றுமை – அபாதானம்

7ம் வேற்றுமை – அதிகரணம்

8ம் வேற்றுமை – 1ம் வேற்றுமையே

இவ்விதம் ஆறு காரகங்கள்

(3) விவிதாஸ்ச ப்ருதக் சேஷ்டா: பிறர்பாடம் சரியல்ல. ஏனெனின், மீதி நான்கும் ஒருமையாயிருக்க இது மாத்திரம் பன்மையாய் இருப்பது பொருந்தாது.

மேற்படி ஐந்தும் எதற்குக் காரணங்கள் என்றால் கூறுகிறார்.

15. शरीरवाङ्मनोभिर्यत् कर्म प्रारभते नरः ।
न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः ॥

ஶரீர வாங் மனோபி[4]ர் யத், கர்ம ப்ராரப[4]தே நர: |
ந்யாய்யம் வா விபரீதம் வா, பஞ்சைதே தஸ்ய ஹேதவ: || 15

**நர:** – ஓர் மனிதன்; **ஶரீர வாங்மனோபி:** – உடலாலும் வாக்கினாலும், மனத்தாலும்; **ந்யாய்யம் வா** – நீதி வழுவாததோ; **விபரீதம் வா** – அதற்கு மாறுபட்டதோ, நீதி வழுவியதோ; **யத் கர்ம** – எந்தக் கர்மத்தை; **ப்ராரபதே** – நன்கு ஆரம்பிக்கிறானோ; **தஸ்ய** – அந்தக் கர்மத்திற்கு; **ஏதே பஞ்ச** – ஐந்தும்; **ஹேதவ:** – காரணங்களாகும்.

## ஐந்து காரணங்களின் விபரம்

| | | நியாயமான கர்மம் | | விபரீத கர்மம் |
|---|---|---|---|---|
| | காரணங்கள் | போஜனம் முதலியன | யாகம் முதலியன | திருட்டு முதலியன |
| 1. | அதிஷ்டானம் (இடம்) | உணவு அறை | யாகசாலை | பதுங்கும் இடம் |
| 2. | கர்த்தா (ஜீவன்) | உண்பவன் | யஜமானன் | திருடுபவன் |
| 3. | கரணம் (கருவி) | உணவுப் பொருள் பாத்திரங்கள், முதலியன | ஸ்ருக், ஸ்ருவம், இந்திரியம் ஹோமப் பொருள்கள் முதலியன | கன்னக்கோல் தடி முதலிய ஆயுதங்கள் |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | சேஷ்டா (செய்கை) | மெல்லுதல், விழுங்குதல் | ஹோமம் செய்தல், மந்திரங்களைக் கூறுதல் முதலியன | கன்னம் வைத்தல், நுழைதல் முதலியன |
| 5. | தைவம் (அதிருஷ்டம், விஷ்ணு) | அருள் இருந்தால், ஜீர்ணமாகும். இல்லையேல் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாது (ராஹுவின் அமிருதம் போல) | அருள் இருந்தால் வெற்றியுடன் நடைபெறும், இல்லையேல் நடைபெறாது. | அருள் இருந்தால் கொள்ளை லாபம் கிடைக்கும். இல்லையேல் பிடிபட்டு சிறை வாஸம் |

'நான் செய்கிறேன்' என்ற அபிமானத்தை விடவேண்டும் என்கிறார்.

16. तत्रैवं सति कर्तारं आत्मानं केवलं तु यः ।
पश्यति अकृतबुद्धित्वात् न स पश्यति दुर्मतिः ॥

தத்ரைவம் ஸதி கர்த்தாரம், ஆத்மானம் கேவலம் து ய: |
பஶ்யதி அக்ருத பு[3]த்தி[4]த்வாத், ந ஸ பஶ்யதி து[3]ர்மதி: || 16

**தத்ர** – அந்த ஒவ்வொரு காரியத்திலும்; **ஏவம் ஸதி** – இம்மாதிரி விஷ்ணு முதலிய ஐந்து காரணங்கள் இருக்கையில்; **ய: து** - யார்; **கேவலம்** – பகவத் பிரேரணையில்லா விடில் யாதும் செய்ய முடியாமல் அஸ்வதந்திரனாயிருக்கும்; **ஆத்மானம்** – தன்னை; **கர்த்தாரம்** – (ஸ்வதந்த்ர: கர்த்தா) ஸ்வதந்திரமாகச் செய்பவன் என்று; **பச்யதி** – நினைக் கிறானோ; **ஸ:** அவன்; **அக்ருத புத்தித்வாத்** – ஶ்ரவணம், மனனம், தியானம் முதலியவற்றால் சீர்படாத புத்தியுள்ளவ னாதலால்; **துர்மதி:** – துஷ்ட புத்தியுள்ளவனாய்; **ந பஶ்யதி** – (உண்மையை) அறிவதில்லை, *(3–5, 27, 28, 30)*.

கர்த்ருத்வ அபிமானமுள்ளவனை இகழ்ந்து, அந்த அபிமான மில்லாதவனைப் புகழ்கிறார்.

17. यस्य नाहंकृतो भावः बुद्धिर्यस्य न लिप्यते ।
हत्वाऽपि स इमान् लोकान् न हन्ति न निबध्यते ॥

யஸ்ய நாஹங்க்ருதோ ப$^4$ாவ:, பு$^3$த்தி$^4$ர் யஸ்ய ந லிப்யதே |
ஹத்வாऽபி ஸ இமான் லோகான், ந ஹந்தி ந நிப$^3$த்$^4$யதே || 17

**யஸ்ய** – *யாருக்கு;* **அஹங்க்ருதா:** – *நான் இந்தக் காரியம் செய்தேன், என்ற;* **பாவ:** – *அபிப்பிராயம் (ஸ்வாதந்தர்யா பிமானம்);* **ந** – *இல்லையோ;* **யஸ்ய** – *யாருடைய;* **புத்தி:** – *நிச்சயஞானம்;* **ந லிப்யதே** – *(கர்ம பலனில் ஆசை முதலிய வற்றில்) ஒட்டாமலிருக்கிறதோ;* **ஸ:** – *அவன்;* **இமான் லோகான்** – *இந்த எல்லா ஜனங்களையும்;* **ஹத்வா அபி** – *கொன்றாலும்கூட;* (**ந லிப்யதே** – *கொன்ற தோஷத்தினால் ஒட்டுவதில்லை). ஏனெனில்,* **ந ஹந்தி** – *அவன் ஸ்வதந்திர னாகக் கொன்றேன், என்ற புத்தியைச் செய்யவில்லை. அதனால்,* **ந நிபத்யதே** – *கர்மபலத்தினால் கட்டுப்படுவ தில்லை.*

**குறிப்பு:** இது உலக ஸம்ஹாரத்தின் பொருட்டுப் பகவானால் நியமிக்கப்பட்டுப் பிறந்துள்ள ருத்ரன் அல்லது யமன் ஆகியோரைப் பற்றியது மற்றவர்களைப் பற்றியதல்ல.

*யஸ் ததர்த்தம் ஸமுத்பன்னோ, யதா ருத்ரோ யதா யம: |*

அபரோக்ஷஞானியான இந்திரனும்கூட விருத்ராஸுரனைக் கொன்றதில், தான் என்ற சிறிது அஹங்காரம் கொண்டதால், அவனுக்கும் சிறிது பந்தம் ஏற்பட்டது. ஆகையால் 'நானே செய்கிறேன்', என்ற கர்த்ருத்வ அபிமானத்தை விட்டுவிடுவதும் ஸந்ந்யாஸம் எனப்படும்.

ஜீவன் ஸ்வதந்திர கர்த்தா வல்ல வென்றால், 'யாகம் செய்ய வேண்டும், ஸந்தியா வந்தனம் செய்ய வேண்டும்; என்று வேதம் விதிப்பது வீணேயாகும். ஜடப்பொருள்களும், ஈசுவரனும், முக்தர்களும், அந்த விதிகளுக்கு உட்பட்டவரல்லவே! என்றால் கூறுகிறார்.

18. ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।
करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसंग्रहः ॥

ஜ்ஞானம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா, த்ரிவித$^4$ா கர்மசோதனா |
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித$^4$:, கர்ம ஸங்க்ரஹ: || 18

**கர்மசோதனா** – *யாகம் முதலியதைச் செய்யவேண்டும் என்று கர்மங்களில் வேதம் தூண்டுவது;* **ஜ்ஞானம்** – *அந்த விதியின் அறிவு;* **ஜ்ஞேயம்** – *தகுந்தவையான ஆசை, முயற்சி, முதலியன;* **பரிஜ்ஞாதா** – *அனைத்தையும் அறிந்தவரும்,*

அனைவரையும் பிரேரிப்பவரும், ஜீவர்களிடமுள்ளவருமான ஈஶ்வரன் என்று; **த்ரிவிதா** – மூன்றுவித மானது. அதாவது, இம்மூற்றைத் தழுவியது விதி.

**குறிப்பு:** வேதம் விதிப்பது வீணாகும் என்றதற்கு என்ன பதில்? என்றால், அந்தவிதி தன்னைக்குறித்தே ஏற்பட்டது என்ற அறிவு யாருக்கு உண்டாகிறதோ, பிறகு அந்தக் கர்மத்திலும் பலனிலும் ஆசையும், அதை அடைவதற்குரிய முயற்சியும், கர்ம ஸம்பந்தமும், பலப்ராப்தியும் ஏற்படுகின்றனவோ, அவன்தான் விதிக்கு விஷயனாவான். அம்முறையில் அவையாவும் ஜடப்பொருளுக்கோ, ஈசுவரனுக்கோ, முக்தர்களுக்கோ ஏற்படுவதில்லை அமுக்த ஜீவர்களுக்குத்தான் ஈசுவரனால் ஏற்படுகின்றன என்பது நம் அநுபவ ஸித்தமானது. ஆகவே, ஸம்ஸாரி ஜீவன் அந்த விதிக்கு விஷயன் ஆனதால் வேதம் விதிப்பது வீணல்ல. அஸ்வதந்திர கர்த்தாவும் மேற்படி காரணத்தால் விஷயனாயிருக்கலாம்.

சுலோகம் 14ல் கூறிய கர்மத்தின் ஐந்து காரணங்களை மூன்றாகச் சுருக்கிக்கூறுகிறார்.

**கர்மஸங்க்ரஹ:** – கர்மகாரணானாம் ஸங்க்ரஹ: கர்மத்தின் காரணங்களின் சுருக்கமாவது. 1. **கரணம்** – கருவிகள் ஸ்ருக், ஸ்வரும் முதலியன (அதிஷ்டானமான பூமியும்); 2. **கர்ம** – ஹோமம் செய்தல் முதலிய செயல்; 3. **கர்த்தா** – ஜீவன், தைவம் என்ற பகவான், ஆகிய இருவர்; **இதி** – என்றவாறு; **த்ரிவித:** – மூன்று விதமாகும்.

ஸாத்விகமான ஞானம், கர்மம் முதலியவை முக்திஸாதன மாகையால், அவைகளின் மூன்றுவிதங்களைக் கூறுகிறார்.

*(17–7 முதல் 22; 18–7 முதல் 9ல் கூறியதுபோல)*

19. ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।
प्रोच्यते गुणसंख्याने यथावत् श्रृणु तान्यपि ॥

ஜ்ஞானம் கர்ம ச கர்த்தா ச, த்ரிதை[4]வ கு[3]ணபே[4]தத: |
ப்ரோச்யதே கு[3]ணஸங்க்யானே, யத[2]ாவத் ச்ருணு தான்யபி || 19

**ஜ்ஞானம்** – அறிவும்; **கர்ம ச** – செயலும்; **கர்த்தா ச** – செய்பவனும்; **குணபேதத:** – ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் வித்தியாசத்தால்; **த்ரிதா ஏவ** – மூன்றுவிதமானவையே என்று; **குணஸங்க்யானே** – *(சு. 13)* மேற்படி குணங்களைக் கணக்கிடும் வைதிக ஸாங்க்ய சாஸ்திரத்தில்; **ப்ரோச்யதே** – நன்கு கூறப் பட்டுள்ளது. **தானி அபி** – அவைகளையும் கூட; **யதாவத்** – உள்ளபடி; **ச்ருணு** — கேட்பாயாக.

ஞானத்தின் மூன்று வகைகளைக் கூறுகிறார்.

20. सर्वभूतेषु येनैकं भावं अव्ययमीक्षते ।
अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्विकम् ॥

ஸர்வபூ[4]தேஷு யேனைகம், ப[4]ாவம் அவ்யயமீக்ஷதே |
அவிப[4]க்தம் விப[4]க்தேஷு, தத் ஜ்ஞானம் வித்தி[4] ஸாத்விகம் || 20

**விபக்தேஷு** ஒன்றுக்கொன்று வேறாகவும், தாரதம்யத்துடனும் உள்ள; **ஸர்வபூதேஷு** - எல்லா ஜீவ ஜடப் பொருள்களிலும்; **பாவம்** - (அவைகளுக்கு ஆதாரமாகவும், அவைகளைக் காட்டிலும் வேறாகவும்) எப்போதும் இருக்கும் விஷ்ணுவை; **ஏகம்** - முக்கியமானவர், ஸர்வோத்தமர், என்றும்; **அவிபக்தம்** - தமது ரூபங்களில் பேதமில்லாமலும் (ஐக்கியத்துடனும்), எங்கும் தோஷமில்லாமலும், ஸர்வ குண பூர்ணராயும், இருக்கிறார், என்றும்; **அவ்யயம்** - ஸ்வயமாகவும், தாமிருக்கும் இடங்கள் அழிந்தாலும், அழிவில்லாதவர், என்றும்; **யேன** - எந்த அறிவினால்; **ஈக்ஷதே** - (ஒருவன்) காண்கிறானோ; **தத் ஜ்ஞானம்** - அந்த அறிவு; **ஸாத்விகம் வித்தி** - ஸாத்விக ஞானம் என அறிவாயாக.

**குறிப்பு:** இவ்வித ஞானம் நமது ஸித்தாந்தத்தினால்தான் ஏற்படும் என்பதைக் கவனிக்க. பகவான் ஸர்வோத்தமன்; பகவானுடைய ரூபங்களிடையேயும், பகவானுக்கும் அவரது குணங்களுக்கும், அவயவங்களுக்கும், செய்கைகளுக்கும் பேதம் கிடையாது. என்பது நமது ஸித்தாந்தக் கொள்கையாகும். **அத்வைதம்** பரமார்த்தத:- பரமஸ்சாஸௌ அர்த்தஸ்ச - தம் அபேக்ஷ்ய - வேதங்களின் பரம முக்கிய பொருளான பகவானின் விஷயத்தில்தான் ஐக்கியம் என்று மாண்டுக்ய உபநிஷத் கூறுகிறது.

21. पृथक्त्वेन तु यत् ज्ञानं नानाभावान् पृथग्विधान् ।
वेत्ति सर्वेषु भूतेषु तत् ज्ञानं विद्धि राजसम् ॥

ப்ருத[2]க்த்வேன து யத் ஜ்ஞானம், நானாப[4]ாவான் ப்ருத[2]க் வித[4]ான் |
வேத்தி ஸர்வேஷு பூ[4]தேஷு, தத் ஜ்ஞானம் வித்தி[4] ராஜஸம் || 21

**ஸர்வேஷு பூதேஷு** - எல்லா ஜீவ ஜடப் பொருள்களிடையே; **ப்ருதக்த்வேன** - பேதமும் தாரதம்யமும் உண்டு என்றும்; அதாவது, நானா பாவான் - பற்பல விதமாகவுள்ள ஜீவ ஜடப் பொருள்களை; **ப்ருதக்விதான்** - ஒன்றுக்கொன்று பேதமும் தாரதம்யமுமுள்ளவை என்றும்; **து** - ஆனால் பகவானின் விஷயத்தில் சந்தேகத்தையும்; **யத் ஜ்ஞானம்** - எந்த

அறிவு, **வேத்தி** - அறிகிறதோ, கிரஹிக்கிறதோ; **தத் ஜ்ஞானம்** - அந்த அறிவு; **ராஜஸம் வித்தி** - ராஜஸஞானம் என் அறிவாயாக.

**குறிப்பு:** பகவானைத் தவிர, மற்ற பொருள்களைப்பற்றிய இந்த ஞானம் ஸாத்விகமாயினும், பகவத் விஷயத்தில் ஸந்தேகமுள்ள தாகையால் ராஜஸம் எனப்பட்டது.

22. यत्तु कृत्स्नवत् एकस्मिन् कार्ये सक्तं अहैतुकम् ।
अतत्वार्थवत् अल्पं च तत् तामसमुदाहृतम् ॥

யத்து க்ருத்ஸ்னவத் ஏகஸ்மின், கார்யே ஸக்தம் அஹைதுகம் |
அதத்வார்த்தவத் அல்பம் ச, தத் தாமஸ முத[3]ாஹ்ருதம் || 22

[அன்யதா க்ரிய மாணத்வாத், கார்யாக்யம் ஜீவமேவ ய: ||]

**கார்ய:** - செய்யப்படுபவன். ஸம்ஸாரியாகவுள்ளவன் முக்தனாகச் செய்யப்படுவதால், ஜீவன். **க்ருத்ஸ்னம்** - (i) குணபூர்ணனான பகவான். (ii) உலகம், என்ற இரு அர்த்தங்களுடையது.]

*(1)* **ஏகஸ்மின் கார்யே** - ஒரு ஜீவனிடம்; **க்ருத்ஸ்னவத்** - பகவான் போல; **யத் ஜ்ஞானம் ஸக்தம்** - எந்த அறிவு பற்றியுள்ளதோ; அதாவது பகவான் தம்மை எவ்வாறு பிரம்மமாக அறிகிறரோ, அவ்வாறு ஜீவனை பிரம்மமென்று (ஜீவப்ரம்ம ஐக்யத்தை) கிரஹிக்கிறதோ; **தத் ஜ்ஞானம்** - அந்த அறிவும்; *(2)* அதேமாதிரி, **ஏகஸ்மின் கார்யே** - ஒரு ஜீவனிடம்; **க்ருத்ஸ்னவத்** - உலகம்போல, ஜீவனே உலகம்; என, எந்த ஞானம் கிரஹிக்கிறதோ; *(3)* **ஏகஸ்மின் கார்யே** - ஒரு ஜீவனிடம்; **க்ருத்ஸ்னவத்** - எல்லா உலகஸ்வரூபமாக; எந்த ஞானம் கிரஹிக்கிறதோ; *(4)* எந்த ஞானம், **அஹைதுகம்** - வேதங்களின் உதவியுள்ள யுக்தியற்றதோ; *(5)* எந்த ஞானம் **அதத்வார்த்தவத்** - (குதிரைக் கொம்பு போன்ற) இல்லாத பொருளைக் கிரஹிக்கிறதோ, அதாவது உலகம் ஸதஸத் விலக்ஷணம் - இருக்கும் பொருளுமல்ல, இல்லாத பொருளுமல்ல, இரண்டைக் காட்டிலும் வேறானது, எனக் கிரஹிக்கிறதோ; *(6)* எந்த ஞானம், **அல்பம் ச** - அஜ்ஞானம் நிறைந்து, கொஞ்சம் ஞானம் போன்றதோ; **தத்** - அந்த ஆறு அறிவுகளும்; **தாமஸம் உதாஹ்ருதம்** - தாமஸ ஞானம் எனப்படுகிறது. **து** - எல்லாம் சேர்ந்திருந்தால் மஹா தாமஸ ஞானமாகும்.

**குறிப்பு:** ஆறுவிதமான தாமஸ ஞானங்களில் ஒவ்வொன்றும் தாமஸ ஞானமாகும். ஆறும் சேர்ந்தால், மஹா தாமஸ ஞானமாகும்.

சுலோகம் 19ல் கூறிய கர்மத்தின் மூவகைகளைக் கூறுகிறார்.

23. नियतं संगरहितं अरागद्वेषतः कृतम् ।
अफलप्रेप्सुना कर्म यत्तत् सात्विकमुच्यते ॥

நியதம் ஸங்க$^{3}$ரஹிதம், அராக$^{3}$ த்வேஷத: க்ருதம் |
அப$^{2}$ல ப்ரேப்ஸுனா கர்ம, யத்தத் ஸாத்விக முச்யதே || 23

**நியதம்** – *(3–30;31 ல் கூறியபடி)* ஸ்ரீ ஹரியே ஸர்வோத்தமர் என்ற அறிவுடனும், அவரிடம் பக்தியுடனும், அவருக்கு அர்ப்பணம் செய்யும் புத்தியுடனும் செய்யப்படும் தன் வர்ணாசிரமத்திற்குரியதும் எதைச் செய்தால் பலனுண்டோ, எதைச் செய்யாவிடில் தோஷமுண்டோ, அப்பேர்ப்பட்டதும்; **ஸங்க ரஹிதம்** – 'என்னுடையது', என்ற பற்றற்றதும் அராக த்வேஷத: **க்ருதம்** – புகழ் முதலியவற்றில் (ராக) ஆசையை விட்டும், இகழ்ச்சி முதலியவற்றில் (த்வேஷ) வெறுப்பை விட்டும் செய்யப்படுவதும்; **அபல ப்ரேப்ஸுனா** – பலனை அடைவதில் ஆசையில்லாதவனால்; **க்ருதம்** – செய்யப்படுவதுமான; **யத்** – எதுவோ; **தத்** – அது; **ஸாத்விகம் உச்யதே** – ஸாத்விகமான கர்மம் எனப்படும்.

24. यत्तु कामेप्सुना कर्म साहङ्कारेण वा पुनः ।
क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥

யத்து காமேப்ஸுனா கர்ம, ஸாஹங்காரேண வா புன: |
க்ரியதே ப$^{3}$ஹுளாயாஸம், தத் ராஜஸ முத$^{3}$ாஹ்ருதம் || 24

**யத்து** – எந்தக்கர்மமோ; **காம ஈப்ஸுனா** – பலனை அடைவதில் ஆசையுள்ளவனால்; **வா** – அல்லது; **ஸ அஹங்காரேண** – 'நானே செய்கிறேன்', என்ற அபிமானத்துடன் கூடினவனால்; **பஹுள ஆயாஸம் புன:**– (சுலபமாகச் செய்ய முடிவதை) அதிகப் பிரயாசையுடன்; **க்ரியதே** – செய்யப்படுகிறதோ; **தத் கர்ம** – அந்தக்காரியம்; **ராஜஸம் உதாஹ்ருதம்** – ராஜஸமான கர்மம் எனப்படும்.

25. अनुबन्धं क्षयं हिंसां अनवेक्ष्य च पौरुषम् ।
मोहात् आरभ्यते कर्म यत्तत् तामसमुच्यते ॥

அநுப$^{3}$ந்த$^{4}$ம் க்ஷயம் ஹிம்ஸாம், அநவேக்ஷ்ய ச பௌருஷம் |
மோஹாத் ஆரப$^{4}$யதே கர்ம, யத் தத் தாமஸ முச்யதே || 25

29

**அநுபந்தம்** - பிறகு ஏற்படும் சுபாசுபத்தையும்; **க்ஷயம்** - பொருளின் நாசத்தையும்; **ஹிம்ஸாம்** - பிறருக்கு ஏற்படும் உபத்திரவத்தையும்; **பௌருஷம் ச** - தன்னுடைய திறமையையும்; **அநவேக்ஷ்ய** - ஆராயாமல்; **மோஹாத்** - விபரீத ஞானத்தினால்; **யத் கர்ம** - எந்தக் காரியம்; **ஆரப்யதே** - ஆரம்பிக்கப்படுகிறதோ (முடிக்கப்படுவதில்லையோ); **தத்** - அது; **தாமஸம் உச்யதே** - தாமஸமான கர்மம் எனப்படும்.

சுலோகம் 19ல் கூறிய கர்த்தாவின் மூவகைகளைக் கூறுகிறார்

26. मुक्तसङ्गोऽनहंवादी धृत्युत्साहसमन्वितः ।
सिद्ध्यसिद्ध्योः निर्विकारः कर्ता सात्विक उच्यते ।।

முக்த ஸங்கோSநஹம் வாதீ[3], த்[3]ருத்யுத்ஸாஹ ஸமன்வித: |
ஸித்[4]யஸித்[4]யோ: நிர்விகார: கர்த்தா ஸாத்விக உச்யதே || 26

**முக்தஸங்க:** - பலனில் பற்றை விட்டவனும்; **அநஹம் வாதீ** - (எல்லாம் பகவான் அதீனமானது என்ற நிச்சயத்தால்) 'நானே கர்த்தா', என்று கூறாதவனும்; **த்ருதி உத்ஸாஹ ஸமன்வித:** - (காரியத்தில் தவிர்க்கமுடியாத துக்கத்தைப் பொறுத்துக்கொள்ளும்) தைரியத்துடனும், ஊக்கத்துடனும் கூடினவனும்; **ஸித்தி அஸித்யோ:** - பலன் கிட்டினாலும் கிட்டாவிடினும்; **நிர்விகார:** - முறையே இன்பமும் துன்பமும் இல்லாதவனுமான; **கர்த்தா** - செய்பவன்; **ஸாத்விக: - உச்யதே** - ஸாத்விக கர்த்தா எனப்படுகிறான்.

27. रागी कर्मफलप्रेप्सुः लुब्धो हिंसात्मकोऽशुचिः ।
हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ।।

ராகீ[3] கர்மப[2]ல ப்ரேப்ஸு:, லுப்தே[4]ா ஹிம்ஸாத்மகோSஶுசி: |
ஹர்ஷ ஶோகான்வித: கர்த்தா, ராஜஸ: பரிகீர்த்தித: || 27

**ராகீ** - (கீர்த்தி முதலியவற்றில்) ஆசையுள்ளவனும்; **கர்மபல ப்ரேப்ஸு:** - கர்ம பலனை அடைவதில் அதிக விருப்பமுள்ளவனும்; **லுப்த:** - அந்தக் காரியத்திற்குத் தேவையான பொருளைச் செலவழிக்க மனமில்லாதவனும்; **ஹிம்ஸாத்மக:** - பிறருக்குத் தீங்கிழைக்கும் ஸ்வபாவமுள்ளவனும்; **அஶுசி:** - பணவிஷயத்திலும், உள்ளமும் புறமும், சுத்தியில்லாதவனும்; **ஹர்ஷ ஶோக அன்வித:** - (பலன் கிட்டினால்) இன்பத்துடனும், (பலன் கிட்டாவிடில்) துன்பத்துடனும் கூடினவனுமான;

**கர்த்தா** - செய்பவன்; **ராஜஸ: பரிகீர்த்தித:** - ராஜஸ கர்த்தா எனப்படுகிறான்.

**குறிப்பு:**

*யோऽர்த்தே ஶுசி: ஸ ஶுசி:, நம்ருத் வாரிசுசி: ஶுசி: |*

பணவிஷயத்தில் ஶுத்தியுள்ளவனே, ஶுத்தியுள்ளவன்; மிருத்திகை, ஜலம் இவற்றால் ஶுத்தியுள்ளவன், அல்ல. (13-8,16-3)

28. अयुक्तः प्राकृतः स्तब्धः शठो नैकृतिकोऽलसः ।
विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते ॥

அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த[4]:, ஶடே[2]ா நைக்ருதிகோऽலஸ: |
விஷாதீ[3] தீ[3]ர்க்க[4]ஸூத்ரீ ச, கர்த்தா தாமஸ உச்யதே || 28

*(1)* **அயுக்த:** - தான் செய்த கர்மத்தைப் பகவானிடம் அர்ப்பணம் செய்தல் முதலிய உபாயமில்லாதவனும்; *(2) ப்ராக்ருத: (பகவத் பக்தி ஸாமர்த்யாத், ப்ரக்ருஷ்டோ ந க்ருதோ ஹி ய:)* **ப்ர அக்ருத:** - பகவத் பக்தியின் மகிமையால் சிறந்தவனாகச் செய்யப்படாதவனும்; *(3)* **ஸ்தப்த:** - தன்மதிப்பால் யாருக்கும் வணங்காதவனும்; *(4)* **ஶட:** - த்வேஷத்தை மறைத்துக் கொண்டு காரியம் புரிபவனும் (போக்கிரியும்); *(5)* **நைக்ருதிக:** - தாழ்ந்த தொழிலைப் புரிபவனும்; *(6)* **அலஸ:** - (குறித்த காலம் வந்திடினும், காரியத்தைச் செய்யாத) சோம்பேறியும்; *(7)* **விஷாதீ** - (எல்லாக் காரியங்களையும் செய்ய முடியாதபடிச் செய்யும்) மனக்கலக்கத்தை யுள்ளவனும் (1ம்-அத்தியாயம் அர்ஜுன விஷாதயோகம்); *(8)* **தீர்க்க ஸூத்ரீ ச** - பிறர் செய்த குற்றங்கள் வெகுகாலமாயினும் கூட, அவற்றைச் சுட்டிக் காட்டுபவனும், அல்லது, பஸ்சாத் குர்யாம் இதி ஸ்மரன், கர்மத்தைச் செய்யும் குறித்தகாலம் வந்திடினும், பிறகு செய்வேன் என்று நினைப்பவனுமான; **கர்த்தா** - செய்பவன்; **தாமஸ: உச்யதே** - தாமஸகர்த்தா எனப்படுகிறான்.

**குறிப்பு:**

*பரேண ய: க்ருதோ தோஷ:, தீர்க்க கால கதோऽபி வா |*
*யஸ் தஸ்ய ஸூசகோ தோஷான், தீர்க்க ஸூத்ரீஸ உச்யதே ||*

மேற்கூறிய 8 தாமஸர்களில், **அலஸ:, தீர்க்கஸூத்ரீ**, இருவரும் தாமஸ ஸாத்விகர்கள், **அயுக்த:** தாமஸ ராஜஸன், மற்றவர்கள் தாமஸதாமஸர்கள் என அறிக. **(நைஷ்க்ருதிக:– பிறர் பாடம்.)**

**புத்தி த்ருதி:**– இவ்விரண்டிலும் மூன்று வகைகளுண்டு என்கிறார்.

29. बुद्धे र्भेदं धृतेश्चैव गुणतः त्रिविधं श्रृणु ।
प्रोच्यमान मशेषेण पृथक्त्वेन धनंजय ॥

பு$^3$த்தே$^4$ர் பேதம் த்$^4$ருதேஸ்சைவ, குணதஸ் த்ரிவித$^4$ம் ஶ்ருணு |
ப்ரோச்யமானம் அசேஷேண, ப்ருத$^2$க்த்வேன த$^4$னஞ்ஜய || 29

**தனஞ்ஜய** – *ராஜஸூயத்திற்காகச் செல்வத்தை ஜயித்தவனே !;* **குணத:** – *ஸத்வ ரஜஸ் தமோ குணங்களையொட்டி;* **த்ரிவிதம்** – *மூவகையான;* **புத்தே:** – *புத்தியினுடைய;* **பேதம்** – *விதத்தையும்;* **த்ருதே: ச ஏவ** – *தைர்யத்தின், (மன உறுதியின்) விதத்தையும்;* **ப்ருதக்த்வேன** – *வெவ்வேறாக;* **ப்ரோச்யமானம்** – *(என்னால்) சொல்லப்படுவதை;* **அஶேஷேண** – *மீதியில்லாமல் அனைத்தையும்;* **ஶ்ருணு** – *கேள். (கேட்டு அதன் படி நடப்பாயாக).*

**புத்தியின்** மூன்று விதங்களைக் கூறுகிறார்.

30. प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये ।
बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिस्सा पार्थ सात्विकी ॥

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச, கார்யா கார்யே ப$^4$யாப$^4$யே |
ப$^3$ந்த$^4$ம் மோக்ஷம் ச யா வேத்தி, பு$^3$த்தி$^4$ஸ் ஸா பார்த்த$^2$ ஸாத்விகீ ||

**பார்த்த** – *குந்தீ புத்திரனே !;* **ப்ரவ்ருத்திம்ச** — *(1) தர்மத்தில் ஈடுபாட்டையும் (2) ஸம்ஸாரத்தின் காரணமான தர்மத்தையும்;* **நிவ்ருத்திம் ச** – *(1) அதர்மத்திலிருந்து விலகுவதையும், (2) முக்தியின் காரணமான தர்மத்தையும்;* **கார்ய அகார்யே** – *(அவற்றிற்காகச்) செய்யத் தகுந்ததையும், செய்யத்தகாததை யும்;* **பய அபயே** – *(அகார்யத்தால் ஏற்படும்) பயத்தையும், (கார்யத்தால் ஏற்படும்) பயமின்மையையும்;* **பந்தம்** – *ஸம்ஸாரக் கட்டையும்,* **மோக்ஷம் ச** – *அதிலிருந்து விடுதலையையும்;* **யா புத்தி:** *எந்த புத்தி;* **வேத்தி** – *அறிகிறதோ அதாவது எந்த புத்தியினால் ஒருவன் அறிகிறானோ;* **ஸா** – *அது;* **ஸாத்விகீ** – *ஸாத்விகமான புத்தி (ஆகும்).*

31. यया धर्मं अधर्मं च कार्यं च अकार्यमेव च ।
अयथावत् प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी ॥

யயா த$^4$ர்மம் அத$^4$ர்மம் ச, கார்யம் ச அகார்ய மேவ ச |
அயத$^2$ாவத் ப்ரஜானாதி, பு$^3$த்தி$^4$ஸ் ஸா பார்த்த$^2$ ராஜஸீ || 31

**பார்த்த** - குந்தீ புத்திரனே!; **தர்மம் அதர்மம் ச** - புண்ணியத்தையும் பாபத்தையும்; **கார்யம் ச அகார்யம் ச** - செய்யத் தகுந்ததையும், செய்யத் தகாததையும்; **யயா** - எந்த புத்தியினால்; **அயதாவத் ஏவ** - எப்பொழுதும் உள்ளதுக்கு மாறாகவே, அதாவது, உள்ளபடி சிறிதும், மாறாகச் சிறிதும் கலந்து; **ப்ரஜானாதி** - அறிகிறானோ; **ஸா புத்தி:** - அந்த புத்தி; **ராஜஸீ** - *ராஜஸ புத்தி (ஆகும்).*

32. अधर्मं धर्ममिति या मन्यते तमसाऽऽवृता ।
सर्वार्थान् विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥

அத[4]ர்மம் த[4]ர்மமிதி யா, மன்யதே தமஸாSSவ்ருதா |
ஸர்வார்த்த[2]ான் விபரீதாம்ஸ்ச, பு[3]த்தி[4]ஸ் ஸா பார்த்த[2] தாமஸீ || 32

**பார்த்த** - குந்தீ புத்திரனே! **யா புத்தி:** - எந்த புத்தி; **அதர்மம்** - பாரத்தை; **தர்மம் இதி** - புண்ணியமென்று; **மன்யதே** - கருதுகிறதோ; அதாவது எந்த புத்தியினால் ஒருவன் கருதுகிறானோ; **ச** - இதுமட்டுமல்ல; **தமஸா ஆவ்ருதா** - அறிவின்மையால் மூடப்பட்டு; **ஸர்வார்த்தான்** - எல்லாப் பொருள்களையும்; **விபரீதான்** - உள்ளதுக்கு மாறானவை களாய்; அதாவது, ஸத்யமானதை அஸத்யமாகவும், ஈசுவரன் இருக்கையில், இல்லை என்றும், அஸ்வதந்திரத்தை ஸ்வ தந்திரமாகவும், நீண்டகாலம் இருப்பதை (க்ஷணிகம்) ஒரு கணம்தான் இருப்பதாகவும்; **மன்யதே** - கருதுகிறதோ; **ஸா** - அது; **தாமஸீ** - *தாமஸ புத்தி (ஆகும்).*

சுலோகம் *29ல்* கூறிய **த்ருதியின்** மூன்று வகைகளைக் கூறுகிறார்.

33. धृत्या यया धारयते मनः प्राणेन्द्रियक्रियाः ।
योगेन अव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्विकी ॥

த்[4]ருத்யா யயா த[4]ாரயதே, மன: ப்ராணேந்த்[3]ரியக்ரியா: |
யோகே[3]ன அவ்யபி[4]சாரிண்யா, த்ருதிஸ் ஸா பார்த்த ஸாத்விகீ || 33

**பார்த்த** - குந்தீ புத்திரனே!; **யோகேன (ஸஹிதயா)** - பகவத் பக்தியோகத்துடன் கூடியதும்; **அவ்யபிசாரிண்யா** - சாஸ்திர விதியைவிட்டு வழுவாததுமான; **யயா த்ருத்யா** - எந்த தைர்யத்தால்; **மன: ப்ராண இந்த்ரிய க்ரியா:**- மனம், பிராணன்கள், ஞானகர்ம இந்திரியங்கள், ஆகியவற்றின் தொழில்களை; **தாரயதே** - கெட்டவழியில் செல்ல!தவாறு

தாங்குகிறானோ; **ஸா த்ருதி:** – அந்த தைரியம்; **ஸாத்விகீ** – ஸாத்விகமான த்ருதி (ஆகும்)

34. यया तु धर्मकामार्थान् धृत्या धारयतेऽर्जुन।
प्रसंगेन फलाकाक्षी धृतिः सा पार्थ राजसी॥

யயா து த[4]ர்ம காமார்த்த[2]ான், த்[4]ருத்யா த[4]ாரயதேSர்ஜுன |
ப்ரஸங்கேன ப[2]லாகாங்க்ஷீ, த்[4]ருதிஸ் ஸா பார்த்த[2] ராஜஸீ || 34

**பார்த்த** – குந்தீ புத்திரனே!; **அர்ஜுன** – சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!; **யயா த்ருத்யா து** – எந்த தைரியத்தினாலோ; **தர்ம காம அர்த்தான்** – மோக்ஷம் தவிர அறம், இன்பம், பொருள் ஆகியவற்றை; **தாரயதே** – (விடாமல்) தாங்கி இருக்கிறானோ; **ப்ரஸங்கேன** – கர்மத்தில் தனது என்ற ஆழ்ந்த சினேகத்தினால்; **பல ஆகாங்க்ஷீ** – பலனை எதிர் பார்க்கிறானோ; **ஸா த்ருதி:** – அந்த தைரியம்; **ராஜஸீ** – ராஜஸமான த்ருதி (ஆகும்).

35. यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च।
न विमुञ्चति दुर्मेधाः धृतिः सा पार्थ तामसी॥

யயா ஸ்வப்னம் ப[4]யம் ஶோகம், விஷாதம் மத[3]மேவ ச |
ந விமுஞ்சதி து[3]ர்மேத[4]ா:, த்[4]ருதிஸ் ஸா பார்த்த[2] தாமஸீ || 35

**பார்த்த** – குந்தீ புத்திரனே!; **துர்மேதா:** – (கும்பகர்ணன் கம்ஸன் போன்ற) துஷ்டபுத்தியுள்ளவன்; **யயா த்ருத்யா** – எந்த தைரியத்தினால்; **ஸ்வப்னம்** – (சாஸ்திரம் தடுத்துள்ள) அளவு கடந்த தூக்கத்தையும்; **பயம்** – அச்சத்தையும்; **ஶோகம்** – துக்கத்தையும்; **விஷாதம்** – (சு. 28) மனக்கலக்கத்தையும்; **மதம் ச** – கொழுப்பையும்; **ஏவ** – மற்றும் பகவத் துவேஷம் முதலிய வற்றையும்; **ந விமுஞ்சதி** – அடியோடு விடுவதில்லையோ; **ஸா த்ருதி:** – அந்த தைரியம்; **தாமஸீ** – தாமஸமான த்ருதி (ஆகும்).

**ஸுகமும்** மூன்றுவிதமாகும் என்கிறார்.

36. सुखं तु इदानीं त्रिविधं श्रृणु मे भरतर्षभ।

ஸுக[2]ம் து இதானீம் த்ரிவித[4]ம், ஶ்ருணு மே ப[4]ரதர்ஷப[4] | 36A

**பரதர்ஷப** – பரத வம்சத்தில் சிரேஷ்டனே!; **இதானீம் து** – இப்பொழுதுதோ; **த்ரிவிதம் ஸுகம்** – மூன்று விதமான சுகத்தை; **மே** – என்னிடமிருந்து; **ஶ்ருணு** – கேட்பாயாக.

अभ्यासात् रमते यत्र दुःखान्तं च निगच्छति॥

37. यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।
तत्सुखं सात्विकं प्रोक्तं आत्मबुद्धि प्रसादजम् ॥

அப்$^{4}$யாஸாத் ரமதே யத்ர, து$^{3}$க்காந்தம் ச நிக$^{4}$ச்ச$^{2}$தி || 36B

யத் தத் அக்$^{3}$ரே விஷமிவ, பரிணாமேSம்ருதோபமம் |
தத் ஸுக$^{2}$ம் ஸாத்விகம் ப்ரோக்தம், ஆத்ம பு$^{3}$த்தி$^{4}$ ப்ரஸாத$^{3}$ஜம் || 37

**யத்ர** - எந்த சுகத்தில்; **அப்யாஸாத்** - வெகுகாலம் அநுபவித்தாலும்; **ரமதே** - மீண்டும் மீண்டும் இன்புறுகிறானோ; **துக்க அந்தம் ச** — துக்கத்தின் நாசத்தையும்; **நி கச்சதி** - அடியோடு அடைகிறானோ; **யத்** - எந்த சுகம்; **அக்ரே** - ஆரம்பத்தில்; **விஷம் இவ** - (மிகச் சிரமப்பட்டு அடையவேண்டியதால்) விஷம்போல துக்கத்தைத் தருவதோ; **பரிணாமே** - முடிவில்; **அம்ருத உபமம்** - அமிருதம் போன்றதோ; **ஆத்ம (ப்ரஸாதஜம்) புத்தி ப்ரஸாதஜம்** - பரமாத்மாவின் அருளால் ஏற்படுவதோ, புத்தியின் தெளிவால் ஏற்படுவதோ; **தத்ஸுகம்** - அந்த சுகம்; **ஸாத்விகம் ப்ரோக்தம்** - ஸாத்விக சுகம் எனப்படும்.

**குறிப்பு:** (1) புத்தியானது தானாகவே சப்தம், ஸ்பர்சம் முதலிய விஷயங்களில் ஈடுபடாதிருப்பது புத்தியின் தெளிவு ஆகும். (2) மோக்ஷ சுகம்தான் ஸாத்விக சுகமாகும். அதை வெகுகாலம் அநுபவித்தாலும் இன்பமே. துக்கமும் இல்லாதது. அதை அடைய துக்கம் தரும் கடுமையான விரதங்களையும் தவங்களையும் செய்யவேண்டும். அது பகவானின் அருளாலும் புத்தியின் தெளிவாலும் கிடைப்பது.

38. विषयेन्द्रियसंयोगात् यत्तदग्रेऽमृतोपमम् ।
परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥

விஷயேந்த்ரிய ஸம்யோக$^{3}$ாத், யத் தத$^{3}$க்$^{3}$ரேSம்ருதோபமம் |
பரிணாமே விஷமிவ, தத்ஸுக$^{2}$ம் ராஜஸம் ஸ்ம்ருதம் || 38

**விஷய இந்த்ரிய ஸம்யோகாத்** - சப்தம் முதலிய விஷயங்களுடன், காது முதலிய இந்திரியங்களின், ஸம்பந்தத்தால் ஏற்படும் விஷயாநுபவத்தால் (உண்டாகும்); **யத்** — எந்தப் பிரசித்தமான ஸுகம் (சிற்றின்பம்); **அக்ரே** - ஆரம்பத்தில்; **அம்ருத உபமம்** - அமிருதம் போன்றதோ; **பரிணாமே** - முடிவில்; **விஷம் இவ** - விஷம்போல (துக்கத்தைத் தருவதோ); **தத் ஸுகம்** - அந்த சிற்றின்பம்; **ராஜஸம் ஸ்ம்ருதம்** - ராஜஸ சுகம் எனப்படும்

**குறிப்பு:** 5-22ல் இந்த சுகம் விவரிக்கப்பட்டுள்ளது.

39. यदग्रे च अनुबन्धे च सुखं मोहनमात्मनः ।
निद्राऽऽलस्य प्रमादोत्थं तत् तामसमुदाहृतम् ॥

யத$^3$க்ரே ச அநுப$^3$ந்தே$^4$ ச, ஸுக$^2$ம் மோஹன மாத்மன: |
நித்$^3$ராSSலஸ்ய ப்ரமாதே$^3$ாத்த$^2$ம், தத் தாமஸ முத$^3$ாஹ்ருதம் || 39

**யத் ஸுகம்** - எந்த சுகம்; **அக்ரே ச** — ஆரம்பத்திலும்; **அநுபந்தே ச** - முடிவிலும்; **ஆத்மன:** - தனக்கு; **மோஹனம்** - மயக்கத்தையுண்டு பண்ணிப் பரவசமாக்குகிறதோ; **நித்ரா ஆலஸ்ய, ப்ரமாத உத்தம்** - துக்கம், சோம்பல், விபரீத ஞானம் (அதர்மத்தில் தர்மம் என்ற புத்தி) ஆகியவற்றால் உண்டாவதோ; **தத்** - அது; **தாமஸம் உதாஹ்ருதம்** - தாமஸசுகம் எனப்படும்.

எல்லா ஜீவர்களும் மூன்று குணங்களினால் கட்டுப்பட்டிருப்பதால் மூவகையினராவர் என்கிறார்.

40. न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।
सत्वं प्रकृतिजै र्मुक्तं यदेभिः स्यात् त्रिभिर्गुणैः ॥

ந தத$^3$ஸ்தி ப்ருதி$^2$வ்யாம் வா, தி$^3$வி தே$^3$வேஷு வா புன: |
ஸத்வம் ப்ரக்ருதிஜைர் முக்தம், யதே$^3$பி$^4$ஸ் ஸ்யாத் த்ரிபி$^4$ர்
கு$^3$ணை: || 40

**யத் ஸத்வம்** - *(17-3)* எந்த ஜீவ சமூகம்; **ப்ரக்ருதிஜை:** - ஜடபிரகிருதியிலிருந்து உண்டான; **ஏபி:** - இந்த; த்ரிபி: குணை: (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற) மூன்று குணங்களினால்; **முக்தம்** - விடுபட்டதாக; **ஸ்யாத்** - இருக்குமோ; **தத்** - அந்த ஜீவ ஸமூகம்; **ப்ருதிவ்யாம் வா** - பூவுலகிலோ; **திவி வா** - ஸ்வர்க்க லோகத்திலோ; **தேவேஷு புன:** - தேவர்களிடையிலோ; **ந அஸ்தி** - இல்லை. அதாவது, விஷ்ணு, லக்ஷ்மீ, முக்த ஜீவர்கள் தவிர, மற்ற அனைவரும் பிரகிருதியின் முக்குணங்களினால் கட்டப்பட்டவர்கள்.



| ஸாத்விகர் (பிரம்மா முதலியோர்) | ராஜஸர் (இந்திரன்) | தாமஸர் (பிருஹஸ்பதி முதலியோர்) |
|---|---|---|

| ஸாத்விகர் (பிரம்மா, வாயு) | ராஜஸர் (ஸரஸ்வதீ, பாரதீ) | தாமஸர் (ருத்திரன்) |
|---|---|---|

குறிப்பு: *பிரம்மா, வாயு - ஸாத்விக, ஸாத்விக, ஸாத்விக, ஸாத்விகர் எனப்படுவர். இம்மாதிரி மற்றவர்களையும் அறிக.*

II ராஜஸர் (மனிதர்கள்)

| ஸாத்விகர் (உத்தமர்) (விஷ்ணு பக்தர்கள்) | ராஜஸர் (மத்யமர்) (த்ரைவித்யா 7–21, 9–20) | தாமஸர் (அஜ்ஞர்) (விஷ்ணு த்வேஷமற்றவர்) |
|---|---|---|

| ஸாத்விகர் (பிராமணர்) | ஸாத்விகர் (க்ஷத்ரியர், வைச்யர்) |
|---|---|

குறிப்பு: இங்கு பிராம்மணர் - ராஜஸ, ஸாத்விக ஸாத்விகர் என்றும், க்ஷத்திரியர், வைச்யர் - ராஜஸ, ராஜஸ, ஸாத்விகர் என்றும், (Table III) சூத்திரர் - தாமஸ, ராஜஸ, ஸாத்விகர் என்றும் அறிக.

III தாமஸர்கள் (அதம மனிதர் முதலியோர்)

| ஸாத்விகர் (அதம மனிதர்) | ராஜஸர் (தைத்யர்களின் வேலையாட்கள்) | தாமஸர் (கலி முதலிய மகா தைத்யர்கள்) |
|---|---|---|

ஸாத்விகர் (சூத்திரர்)

(இன்னும் பல பிரிவுகள் உள)

*இப்பொழுது, பிராம்மணர் முதலியோரின் இயற்கையான ஸத்வ ரஜஸ் தமோ குணங்களையொட்டி தொழில்கள் பலவாறு அமைந்துள்ளன என்கிறார். (4-13 பார்க்க)*

41. ब्राह्मण क्षत्रिय विशां शूद्राणां च परंतप ।
कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवै र्गुणैः ॥

ப்[3]ராஹ்மண க்ஷத்ரிய விஶாம், ஶூத்[3]ராணாம் ச பரம்தப |
கர்மாணி ப்ரவிப[4]க்தானி, ஸ்வப[4]ாவ ப்ரப[4]வைர் கு[3]ணை: || 41

பரம்தப – *சத்ருக்களை வாட்டுபவனே!;* **ப்ராஹ்மண க்ஷத்ரிய விஶாம்** – *பிராம்மணர், க்ஷத்திரியர், வைஶ்யர் ஆகியோருக்கும்;* **சூத்ராணாம் ச** – *ஶூத்திரர்களுக்கும்;* **ஸ்வபாவ ப்ரபவை;** – *அந்தந்தவர்ணத்தின் இயற்கையைத் தழுவிய;* **குணை;** – *ஸத்வ ரஜஸ் தமோ குணங்களினால்;* **கர்மாணி** – *தொழில்கள்;* **ப்ரவிபக்தானி** – *பலவாறாகப் பிரிந் துள்ளன. (அவற்றை என்னிடமிருந்து அறிவாயாக)*

குறிப்பு: முதல் மூன்று வர்ணத்தினர்களுக்கு உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்கள் உண்டு. அதனால் **த்விஜர்கள்** – இருமுறை பிறப்பவர்கள் எனப்படுவர். ஆதலால் ஒரே பதமாகக் கூறப்பட்டுள்ளனர்.

*நான்கு வர்ணத்தினரின் தொழில்களை 3 சுலோகங் களில் கூறுகிறார்.*

42. शमो दमस्तपः शौचं क्षान्तिः आर्जवमेव च ।
ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्राह्मं कर्म स्वभावजम् ॥

ஶமோ த³மஸ் தபஸ் ஶௌசம், க்ஷாந்தி: ஆர்ஜவ மேவ ச |
ஜ்ஞானம் விஜ்ஞானமாஸ்திக்யம், ப்ராஹ்மம் கர்ம ஸ்வப⁴ாவஜம் || 42

**சம:** — *பகவானிடம் புத்தியை நிலைநிறுத்துதலும்;* **தம:** – *இந்திரியங்களை அடக்குதலும்;* **தப:** – *பிரம்மசரியம் முதலியதும், (17–14)* ஶௌசம் *(13–8) உள்ளும் புறமும் தூய்மை யும்;* க்ஷாந்தி: *(16–3) கோபமின்மையும்;* **ஆர்ஜவம் ஏவ** – *(13 – 18) மனோ வாக் காயங்களில் ஒரே விதமாயிருத்தலும்;* **ஜ்ஞானம்** – *பொதுவான அறிவும்;* **விஜ்ஞானம்** – *விசேஷமான அறிவும் (7 –2);* ஆஸ்திக்யம் ச – *புண்யம் முதலியன உண்டு, அவற்றால் நமக்குப் பலனுண்டு, என்ற நம்பிக்கையும்; இவை ஒன்பதும்;* **ஸ்வபாவஜம்** — *இயற்கையில் அமைந்துள்ளன;* ***ப்ராஹ்மம் கர்ம** – *பிராம்மணருக்குரிய தொழில் (ஆகும்).*

குறிப்பு: *ப்ரஹ்ம கர்ம – பிறர் பாடம்.

43. शौर्यं तेजो धृति र्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।
दानं ईश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥

ஶௌர்யம் தேஜோ த்⁴ருதிர் த³ாக்ஷ்யம், யுத்தே⁴ சாப்யபலாயனம் |
த³ானம் ஈஶ்வரப⁴ாவஸ்ச, க்ஷாத்ரம் கர்ம ஸ்வப⁴ாவஜம் || 43

**சௌர்யம்** – *சூரனின் தன்மையும் (பயமின்மையும்);* **தேஜ:** — *உடலின் விசேஷ காந்தியும்;* **த்ருதி:** – *(சு. 33 மு 35) தைர்யமும்;* **தாக்ஷ்யம்** – *சாமர்த்தியமும்;* **யுத்தே** – *போரில்;* **அபலாயனம் ச** –

பயத்தினால் ஓடாதிருத்தலும், (புறங் காட்டாமையும்); **தானம்** - (பசு, பூமி, எள், பொன் முதலியவற்றை ஸத்பாத்திரத்தில்) கொடுப்பதும்; **ஈஶ்வர பாவ: ச** - துஷ்டர்களைத்தண்டித்தல் முதலியனவும்; இவ்வேழும்; **ஸ்வபாவஜம்** - இயற்கையில் அமைந்துள்ள; **க்ஷாத்ரம் கர்ம** - க்ஷத்திரியர்களுக்குரிய தொழில் (ஆகும்).

44. कृषि गोरक्ष वाणिज्यं वैश्यं कर्म स्वभावजम् ।
परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥

க்ருஷி கே$^3$ாரக்ஷ வாணிஜ்யம், வைஶ்யம் கர்ம ஸ்வப$^4$ாவஜம் |
பரிசர்யாத்மகம் கர்ம, ஶூத்$^3$ரஸ்யாபி ஸ்வப$^4$ாவஜம் || 44

**க்ருஷி** - உழவும்; **கோரக்ஷ** - பசுக்களைக் காப்பதும்; **வாணிஜ்யம்** - வியாபாரமும்; **ஸ்வபாவஜம்** - இயற்கையில் அமைந்த; **வைஶ்யம் கர்ம** - வைஶியர்களுக்குரிய தொழில் (ஆகும்). **ஶூத்ரஸ்ய அபி** - ஶூத்திரருக்கும்; **பரிசர்யாத்மகம்** - மூன்று வர்ணத்தினருக்குப் பணியாற்றுதல், **ஸ்வபாவஜம்** - இயற்கையில் அமைந்த; **கர்ம** - தொழில் (ஆகும்).

குறிப்பு: நான்கு வர்ணத்தினர்களின் தொழில்களும், ப்ராதான்யாத் வ்யபதேசா: பவந்தி அவரவர்களிடம் அதிகம் அமைந்துள்ளன என்பதைக் கொண்டு கூறப்பட்டன. பிராம்மணருக்குரிய சமம், தமம், முதலியன, மற்ற மூவருக்கும், குறைந்த அளவில் உண்டு என்றும்; மற்ற மூவரிடம் கூறப்பட்டவையும் பிராம்மணரிடம் குறைந்த அளவில் உண்டு, என்றும் அறிக.

**கோரக்ஷ்ய, வைச்ய கர்ம** - பிறர் பாடம்.

மேற்படி தொழில்களின் பிரிவினையின் பலனைக் கூறுகிறார்.

45. स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।
स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥

ஸ்வே ஸ்வே கர்மண்யபி$^4$ரத: ஸம்ஸித்தி$^4$ம் லப$^4$தே நர: |
ஸ்வகர்ம நிரதஸ் ஸித்தி$^4$ம், யத$^2$ா விந்த$^3$தி தத் ச்ருணு || 45

**ஸ்வே ஸ்வே** - தங்கள் தங்களுக்குரிய; **கர்மணி** - தொழிலில்; **அபிரத:** – நன்கு ஈடுபட்டுள்ள; அதாவது அதனால் பகவானைப் பூஜிக்கும்; **நர:** - மனிதன்; **ஸம்ஸித்திம்** - மோக்ஷத்தை; **லபதே** - (ஞானத்தின் மூலம்) அடைகிறான். **ஸ்வகர்ம நிரத:** - தன் வர்ணா சிரமத்திற்குரிய தொழிலால் பகவானைப் பூஜிப்பவன்; **யதா** - எவ்விதம்; **ஸித்திம்** -

மோக்ஷத்தை; **விந்ததி** – அடைகிறானோ; **தத்** – அவ்விதத்தை; **ஶ்ருணு** – கேட்பாயாக.

46. यतः प्रवृत्ति र्भूतानां येन सर्वमिदं ततम् ।
स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥

யத: ப்ரவ்ருத்திர் பூத[4]ானாம், யேன ஸர்வமிதம் ததம் |
ஸ்வகர்மணா தமப்[4]யர்ச்ய, ஸித்தி[4]ம் விந்த[3]தி மானவ: || 46

**யத:** – எந்த பகவானிடமிருந்து; **பூதானாம்** – பிராணிகளுக்கு; **ப்ரவ்ருத்தி:** – செயல்; (பவதி – ஏற்படுகிறதோ); **யேன –** எந்த பகவானால்; **இதம் ஸர்வம் –** இந்த சராசர உலகம் முழுவதும்; **ததம்** – (13–14) வியாபிக்கப்பட்டுள்ளதோ; **தம்** – அந்தப் பகவானை; **மானவ:** – மனிதன் அல்லது பிராம்மணன் முதலியோர்; **ஸ்வகர்மணா** – (சு. 42 முதல் 44) தமக்குரிய தொழில்களால்; **அபி அர்ச்ய** – நன்கு பூஜித்து; **ஸித்திம்** – மோக்ஷத்தை; **விந்ததி** – (12 – 12) (ஞானத்தின் மூலம்) அடைகிறான்.

தனக்குரிய கர்மத்தில் ஈடுபாடு அவசியம் என்கிறார்.

47. श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात् स्वनुष्ठितात् ।
स्वभावनियतं कर्म कुर्वन् नाप्नोति किल्बिषम् ॥

ஶ்ரேயான் ஸ்வத[4]ர்மோ விகு[3]ண:, பரத[4]ர்மாத் ஸ்வநுஷ்டிதாத் |
ஸ்வப[4]ாவ நியதம் கர்ம, குர்வன் நாப்னோதி கில்பி[3]ஷம் || 47

**ஸ்வதர்ம:** – (3–35) தன் வர்ணாசிரமத்திற்குரிய கர்மம்; **விகுண:** – அங்கஹீனமாயினும்; **ஸு அநுஷ்டிதாத்** – எல்லா அங்கங்களுடன் நன்கு செய்யப்பட்ட; **பரதர்மாத்** – பிற வர்ணாசிரமத்துக்குரிய கர்மத்தைக்காட்டிலும்; **ஶ்ரேயான்** – மேலானது. மோக்ஷ ஸாதனமானது அங்கஹீனமானது எவ்வாறு மோக்ஷமளிக்கும்? என்றால்; **ஸ்வபாவ நியதம்** – இயற்கையால் நியமிக்கப்பட்ட; **கர்ம** – கர்மத்தை; **குர்வன்** – செய்பவன்; **கில்பிஷம்** – (அங்கஹீனத்தால் ஏற்படும்) தோஷத்தை; **ந ஆப்னோதி** – அடைவதில்லை. அங்கஹீனம் என்று ஸ்வதர்மத்தை விட்டுவிடக்கூடாது.

எல்லா கர்மங்களுக்கும் ஏதாவதொரு தோஷமுண்டு தோஷமில்லாத கர்மம் எங்குமில்லை என்கிறார்.

48. सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।
सर्वारंभा हि दोषेण धूमेन अग्निरिव आवृताः ॥

ஸஹஜம் கர்ம கௌந்தேய, ஸதே[3]ாஷமபி ந த்யஜேத் |
ஸர்வாரம்பா[4] ஹி தே[3]ாஷேண, தூ[4]மேன அக்நிரிவ ஆவ்ருதா: || 48

**கௌந்தேய** – குந்தீ புத்திரனே !; **ஹி** – எதனால்; **தூமேன** – புகையினால்; **அக்நி:** – நெருப்பு; (*ஆவ்ருத:*) **இவ** – விடாது சூழப்பட்டிருப்பதுபோல; **ஸர்வ ஆரம்பா:** – எல்லா கர்மங்களும்; **தோஷேண** – ஏதாவதொரு தோஷத்தால்; **ஆவ்ருதா:** – சூழப்பட்டுள்ளனவோ; (**தத:** – *அதனால்*); **ஸதோஷம் அபி** – தோஷத்துடன் கூடியதாயினும்; **ஸஹஜம்** – கூடப்பிறந்த அதாவது இயற்கையில் அமைந்துள்ள; **கர்ம** – கர்மத்தை; **ந த்யஜேத்** – விட்டு விடலாகாது.

குறிப்பு: (3-13) தான்யங்களை அறுத்தல் முதலிய ஐந்து தோஷங்கள் தினந்தோறும் ஏற்படுகின்றன என்றதைக் காண்க.

சுலோகம் 45ன் பின்பாதியில் கூறிய தனக்குரிய கர்மாநுஷ்டானத்திற்கு வேண்டிய வேறு தர்மங்களையும் கூறுகிறார்.

49. असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेन अधिगच्छति ॥

அஸக்த பு[3]த்தி[4]ஸ் ஸர்வத்ர, ஜிதாத்மா விக[3]தஸ்ப்ருஹ: |
நைஷ்கர்ம்ய ஸித்தி[4]ம் பரமாம், ஸந் ந்யாஸேன அதி[4]க[3]ச்ச[2]தி || 49

**ஜித ஆத்மா** – மனதை வசப்படுத்தியவனாயும்; **அஸக்த புத்தி:** – பற்றில்லாத புத்தியுடையவனாயும்; **ஸர்வத்ர** – (அற்பமான ஐஹிக சுகங்கள், ஆமுஷ்மிக சுகங்கள், ஆகிய) எல்லா வற்றிலும்; **விகத ஸ்ப்ருஹ:** – அடியோடு ஆசை இல்லாதவனாயும்; **ஸந் ந்யாஸேன** – (*சு. 2*) காம்ய கர்மங்களை விட்டு விடுவதினாலும், அல்லது எல்லா கர்மங்களையும் பகவானிடம் அர்ப்பணம் செய்வதினாலும்; **பரமாம்** — பரிபூர்ணமான; **நைஷ்கர்ம்ய ஸித்திம்** – (மோக்ஷம் என்று அர்த்தமல்ல) மோக்ஷத்தின் பொருட்டான உபாயங்களின் பூர்த்தியை அல்லது பிராரப்த கர்மத்தைத் தவிர, மற்ற எல்லா அநிஷ்டங்களின் நாஶமாகிற ஸித்தியை; **அதிகச்சதி** – நன்கு அடைகிறான்.

குறிப்பு: சு.55ல். மாம் விஶதே என்று மோக்ஷத்தைக் கூறுவதால் இங்கு நைஷ்கர்ம்யம் என்ற பதத்திற்கு மோக்ஷம் என்று அர்த்தமல்ல.

கர்மத்தால் மாத்திரம் அடையத்தகுந்ததல்ல. ஆதலின், மோக்ஷத்திற்கு அக்ருதம், நைஷ்கர்ம்யம் என்ற பெயர்கள்.

மேற்படி ஸித்தியடைந்தவன், லக்ஷ்மீயின் மூலம் விஷ்ணுவை அடையும் விதத்தை விளக்குகிறார்.

50. सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाऽऽप्नोति निबोध मे ।
समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥

ஸித்தி[4]ம் ப்ராப்தோ யத[2]ா ப்ரஹ்ம, தத[2]ாSSப்னோதி நிபே[3]ாத[4] மே |
ஸமாஸேனைவ கௌந்தேய, நிஷ்ட[2]ா ஜ்ஞானஸ்ய யா பரா || 50

**கௌந்தேய** - குந்தீ புத்திரனே! **யா** - மோக்ஷத்தின் பொருட்டான எந்த ஸித்தி; **ஜ்ஞானஸ்ய** - ஞானத்தின்; **பரா நிஷ்டா** - உயர்ந்த நிலையோ; **தாம் ஸித்திம்** - அந்த ஸித்தியை; **ப்ராப்த:** - அடைந்தவனாகி; **ப்ரஹ்ம** — *(14-3, 27)* லக்ஷ்மீயை; **யதா** - எவ்விதம்; **ஆப்னோதி** - அடைகிறானோ; **ததா** - அவ்விதத்தை; **ஸமாஸேன ஏவ** - சுருக்கமாகவே; **மே** - என்னிடமிருந்து; **நிபோத** - நன்கு அறிவாயாக.

51. बुद्ध्या विशुद्धया युक्तो धृत्याऽऽत्मानं नियम्य च ।
शब्दादीन् विषयान् त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥

52. विविक्तसेवी लघ्वाशी यत वाक्काय मानसः ।
ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥

53. अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।
विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते ॥

பு[3]த்[4]யா விஶுத்[4]தயா யுக்தோ, த்[4]ருத்யாSத்மானம் நியம்யச |
ஶப்தாதீ[3]ன் விஷயான் த்யக்த்வா, ராக[3]த்வேஷௌ வ்யுதஸ்யச || 51

விவிக்தஸேவீ லக்[4]வாஶீ, யத வாக் காய மானஸ: |
த்[4]யானயோக[3]பரோ நித்யம், வைராக்[3]யம் ஸமுபாஶ்ரித: || 52

அஹங்காரம் ப[3]லம் த[3]ர்ப்பம், காமம் க்ரோத[4]ம் பரிக்[3]ரஹம் |
விமுச்ய நிர்மமஸ்ஶாந்தோ, ப்ரஹ்மபூ[4]யாய கல்பதே || 53

*51.* **விஶுத்தயா** - அதிக சுத்தமான (விஷயங்களில் பற்றில்லாத); **புத்யா** - புத்தியுடன்; **யுக்த:** - கூடினவனாய்; **த்ருத்யா** - தைரியத்தினால் (அடக்கும் சக்தியால்); **ஆத்மானம்** - மனதை; **நியம்ய ச** - (விஷயங்களில் செல்லாது) அடக்கியும்; **ஶப்த ஆதீன் விஷயான்** - சப்தம் முதலிய (ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்கள்) விஷயங்களை; (அநுபவிக்கும் ஆசையை); **த்யக்த்வா**

– விட்டு விட்டும்; **ராகத்வேஷௌ** – காமம் கோபம் இரண்டையும்; **வ்யுதஸ்ய ச** – விட்டு ஒழித்தும்;

*52.* **விவிக்தஸேவீ** – *(13–11)* துஷ்ட ஜனக் கூட்டமில்லாத இடத்தில் வசிப்பவனாயும்; **லகு ஆஶீ** – *(6–17)* ஹிதமாகவும் மிதமாகவும் உண்பவனாயும்; **யத வாக் காய மானஸ:** – ஸத்விஷயங்களிலேயே பேச்சு, உடல், மனம் ஆகியவைகளை அடக்கினவனாயும்; **நித்யம்** – எப்போதும்; **த்யானயோக பர:** – பகவானைத் த்யானிக்கும் உபாயத்தில் ஈடுபட்டவனாயும்; **வைராக்யம்** – (பகவானைத் தவிர மற்றவைகளில்) பற்றில்லாமையை; **ஸம் உபாஶ்ரித:** – நன்கு பெற்றவனாயும்:

*53.* **அஹங்காரம்** – 'நானே அனைத்தையும் செய்கிறேன்' என்ற அபிமானத்தையும்; **பலம்** – 'நானே பலிஷ்டன், சாமர்த்தியமுள்ளவன்' என்ற அபிமானத்தையும்; **தர்ப்பம்** – *(16–4)* பயத்தின் காரணமிருந்தும் கொழுப்பால் பயத்தை அறியாதிருத்தலையும்; **காமம்** – விஷயங்களில் ஆசையையும்; **க்ரோதம்** – கோபத்தையும்; **பரிக்ரஹம்** – மனைவி, மக்கள், உடைமைகள், ஆகியவற்றையும்; **விமுச்ய** – அடியோடு விட்டு; **நிர்மம:** – (கர்மங்களில்) தன்னுடையது என்ற புத்தியில்லாதவனாயும்; **ஶாந்த:** – (கோபிக்கக் காரணமிருந்தும்) கோபிக்காதவனாயும் இருப்பவன்; **ப்ரஹ்மபூயாய** *(14–26 ப்ரஹ்மணி ஸ்திதி: ப்ரஹ்மபூயம், தஸ்மை)* எப்போதும் குணபூர்ணரான விஷ்ணுவிடம் மனதுள்ளவனாயிருப்பதற்கு; **கல்பதே** – ஸமர்த்தனாகிறான்.

**குறிப்பு:** (சு.51ல்) ஸ்ரீ ராகவேந்திரர் **ராகத்வேஷௌ ச யஸ்யயத்** என்ற பாடத்தை ஒப்பி, யஸ்ய, யத்-யௌ, ராகத்வேஷௌ, தௌ ச த்யக்த்வா; என்று அர்த்தம் செய்து, **வ்யுதஸ்ய இதி பாடே ந து க்லேச:** | வ்யுதஸ்ய என்ற பாடத்தில் கஷ்டப்பட்டு அர்த்தம் செய்யவேண்டியதில்லை, என்று கூறியுள்ளார்.

விஷ்ணுவிடம் மனதுள்ளதால் ஏற்படும் பலனைக் கூறுகிறார்.

54. ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न कांक्षति ।
समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥

ப்ரஹ்மபூ[4]த: ப்ரஸன்னாத்மா, ந ஶோசதி ந காங்க்ஷதி |
ஸமஸ் ஸர்வேஷு பூ[4]தேஷு, மத்ப[4]க்திம் லப[4]தே பராம் || 54

**ப்ரஹ்மபூத:** – *ப்ரஹ்மணி பூத:* – (i) குணபூர்ணரான விஷ்ணுவிடம் மனதுள்ளவன்; (ii) *(14–26)* லக்ஷ்மீயை அடைந்து; **ப்ரஸன்ன ஆத்மா** – *(சு. 37)* தானாகவே சப்தம் முதலிய விஷயங்களில் ஈடுபடாத மனத்தினனாய்; **ந ஶோசதி** – துக்கப்படுவதில்லை. **ந காங்க்ஷதி** – (எதையும்) விரும்புவதில்லை. **ஸர்வேஷு பூதேஷு** – எல்லா பிராணிகளிடம்; **ஸம:** – *(6–9)* அவைகளின் தகுதிக்குச் சமமாயிருந்து கொண்டு; **பராம்** – உத்தமமான; **மத்பக்திம்** – என்னிடம் பக்தியை; **லபதே** – அடைகிறான்.

**குறிப்பு:** சமமாயிருத்தல் என்பதின் கருத்தை 5-18, 6-9 9-29; 13-9ல் காண்க.

55. भक्त्या मां अभिजानाति यावान् यश्चास्मि तत्वतः ।
तततो मां तत्वतो ज्ञात्वा विशते तदनन्तरम् ॥

ப⁴க்த்யா மாம் அபி⁴ஜானாதி, யாவான் யஸ்சாஸ்மி தத்வத: |
ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா, விஶதே தத³னந்தரம் || 55

**பக்த்யா** – அந்த உத்தம பக்தியினால்; **யாவான் அஸ்மி** – நான் தேசம், காலம், குணங்கள் இவைகளால் எவ்வாறு வியாபித்துள்ளேனோ; **ய: ச (அஸ்மி)** – எந்த பெயருள்ளவனோ, எந்த ஸ்வரூபமுள்ளவனோ; **(தாத்ருசம்** – அவ்வாறான); **மாம்** – என்னை; **தத்வத:** – உள்ளபடி; **அபிஜானாதி** – தன் தகுதிக்குத் தக்கவாறு அறிகிறான். **தத:** – அந்த பக்தியின் பலத்தால்; **மாம்** – என்னை; **தத்வத:** – உள்ளபடி; **ஜ்ஞாத்வா** – அறிந்து; **ததனந்தரம்** – அதற்குப் பிறகு; **(மாம்** – என்னை); **விஶதே** – பிரவேஶிக்கிறான் (முக்தியடைகிறான்).

மீண்டும் மோக்ஷத்தின் அந்தரங்க ஸாதனங்களைப் பின் வரும் சுலோகங்களில் கூறி சுலோகம் 64 முதல் 66 வரையில் சாஸ்திரார்த்தத்தை முடிக்கிறார். சு. 46ல் கூறிய கர்மாநுஷ்டானத்தின் விஶேஷ பலனையும் விளக்குகிறார்.

56. सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मत्व्यपाश्रयः ।
मत्प्रसादात् अवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥

ஸர்வகர்மாண்யபி ஸத³ா, குர்வாணோ மத்வ்யபாஶ்ரய: |
மத் ப்ரஸாத³ாத் அவாப்னோதி, ஶாஶ்வதம் பத³மவ்யயம் || 56

**ஸதா** – எப்பொழுதும்; **மத்வ்யபாச்ரய** – என்னை விஶேஷமாக ஆசிரயித்து (அதாவது 'நான் செய்பவனல்ல், ஸ்ரீ ஹரியே செய்பவன்' என்று) அர்ப்பணம் செய்து கொண்டு; **ஸர்வ**

**கர்மாணிஅபி** – *விதிக்கப்பட்ட எல்லா கர்மங்களையும்;* (**ஸதா** – *எப்போதும்);* **குர்வாண:** – *செய்கிறவன்;* **மத்ப்ரஸாதாத்** – *என் அருளால்;* **ஶாஶ்வதம்** – *ஆதியில்லாததும்;* **அவ்யயம்** – *அந்த மில்லாததுமான;* **பதம்** – *(என்) ஸ்வரூபத்தை;* **அவாப்னோதி** – *அடைகிறான்.*

**குறிப்பு:** அபி என்ற பத³ம். எந்த ஒரு கர்மத்தையும், பகவானின் ஆசிரயமில்லாது, அர்ப்பணமில்லாது செய்யலாகாது. என்பதைக் குறிக்கிறது.

த்ரைவித்யர்களும் (7-21, 9-20 மு 24) விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்து, கடைசியில் பகவானுக்கு அர்ப்பணம் செய்வதால், பகவானை ஆசிரயித்துச் செய்பவர்களே, அவர்களும் முக்தி யடையலாமே! என்றால் பதிலளிக்கிறார்.

57. चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।
बूद्धियोगमुपाश्रित्य मच्चितः सततं भव ॥

சேதஸா ஸர்வகர்மாணி, மயி ஸந்ந்யஸ்ய மத்பர: |
பு³த்³தி⁴யோக³ முபாஶ்ரித்ய, மச்சித்தஸ் ஸததம் ப⁴வ || 57

**ஸர்வ கர்மாணி** – *(விதிக்கப்பட்ட) எல்லா கர்மங்களையும்;* **சேதஸா** – *மனதால்;* **மயி** – *என்னிடம்;* **ஸந்ந்யஸ்ய** –*அர்ப்பணம் செய்து;* **மத்பர:** – *நானே (ஸ்ரீ கிருஷ்ணரே) ஸர்வோத்தமன் என்ற பாவனையுள்ளவனாக;* **பவ** – *நீ இரு. மேலும்,* **புத்தியோகம்** – *புத்தியை விஷயங்களில் செல்லாது தடுத்தல் (பிரத்யாஹாரம்) என்ற* **உபாயத்தை; உப ஆச்ரித்ய** – *நன்கு ஆசிரயித்து;* **ஸததம்** – *எப்போதும்;* **மச்சித்த:** – *என்னிடமே ஒப்படைத்த மனத்தினனாய்;* (**பவ** – *நீ இரு.)*

**குறிப்பு:** த்ரைவித்யர்கள் எப்போதும் பகவானிடம் ஒப்படைத்த மனதுடைய பாகவதர்களல்லர். ஆகவே அவர்கள் முக்தியடைய மாட்டார்கள். 9-24 குறிப்பின் அட்டவணையில் அவர்களுக்கும், பாகவதர்களுக்கும் உள்ள பேதங்களைக் காண்க.

பகவானிடம் ஒப்படைத்த மனத்தினனின் பலனையும் தனக்குரிய கர்மத்தைச் செய்யாவிடில் ஏற்படும் பலனையும் கூறுகிறார்.

58. मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात् तरिष्यसि ।
अथ चेत् त्वमहङ्कारात् न श्रोष्यसि विनंक्ष्यसि ॥

மச்சித்தஸ் ஸர்வ து³ர்க்காணி, மத் ப்ரஸாதாத் தரிஷ்யஸி |
அத²சேத் த்வமஹங்காராத், ந ஶ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி || 58

30'

**மச்சித்த:** – என்னிடமே ஒப்படைத்த மனதையுடைய நீ; **ஸர்வ துர்க்காணி** – தாண்டமுடியாத அல்லது ஶ்ரமப்பட்டுத் தாண்டவேண்டிய எல்லா கஷ்டங்களையும்; **மத் ப்ரஸாதாத்** – என் அருளால்; **தரிஷ்யஸி** – தாண்டுவாய். **அத** – ஒருகால்; **த்வம்** – நீ; **அஹங்காராத்** –'நான்' என்ற பாவனையால்; **ந ஶ்ரோஷ்யஸி சேத்** – (நான் இதுவரையில் கூறிய வார்த்தையை, அதாவது, உனக்கு விதித்த போர் என்ற கர்மத்தை பகவத் ப்ரீதியின் பொருட்டுச் செய், என்பதை) கேட்காவிட்டால்; **விநங்க்ஷ்யஸி** – அடியோடு அழிவாய். நான்கு புருஷோத்தங்களையும் இழப்பாய்.

இங்கு, தாம் சொல்வதைச் செய்யாமலிருப்பதற்கும் கூட அர்ஜுனனால் முடியாது என்கிறார்.

59. यदहङ्कार माश्रित्य न योत्स्य इति मन्यसे ।
मिथ्यैव व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥

யத³ஹங்கார மாஶ்ரித்ய, ந யோத்ஸ்யே இதி மன்யஸே |
மித்யைவ வ்யவஸாயஸ்தே, ப்ரக்ருதிஸ் த்வாம் நியோக்ஷ்யதி || 59

**அஹங்காரம்** – (என் வார்த்தையைக் கேளாது) நீயே அனைத்தையும் செய்பவன் என்ற அபிமானத்தை; **ஆஶ்ரித்ய** – தாங்கி; **ந யோத்ஸ்யே** – நான் போர்புரியமாட்டேன்; **இதி** – என்ற; **யத்** – எதை; **மன்யஸே** – நினைக்கிறாயோ; **(ஸ:** – அந்த); **தே வ்யவஸாய:** – (அஸ்வதந்திரனான) உன்னுடைய தீர்மானம்; **மித்யா ஏவ** – வீணே. ஏனெனில், **ப்ரக்ருதி:** – பகவானின் விருப்பம்; **த்வாம்** – உன்னை; **நியோக்ஷ்யதி** – (செய்யும்படி) தூண்டப்போகிறது

**(மித்யைஷ** – பிறர் பாடம்).

**குறிப்பு:** அடுத்த சுலோகத்தில் ஜீவர்களைத் தூண்டுவது ஸ்வபாவம், கர்மம், என்று கூறினாலும், அவைகள் நிமித்தமேதவிர, பகவதிச்சைதான் முக்கியமானது.

*மஹா மாயேத்ய வித்யேதி, நியதிர் மோஹினீதி ச |*
*ப்ரக்ருதிர் வாஸனேத் யேவம், தவேச்சாऽநந்த கத்யதே ||*

பகவதிச்சை, மஹாமாயா, அவித்யா, நியதி, மோஹினீ, ப்ரக்ருதி, வாஸனா என்ற பல பெயர்களால் அழைக்கப்படுகிறது.

பகவதிச்சை ஜீவர்களைத் தூண்டுவதில் நிமித்தங்களைக் கூறுகிறார்.

60. स्वभावजेन कौन्तेय निभद्धः स्वेन कर्मणा।
कर्तुं नेच्छसि यन्मोहात् करिष्यसि अवशोऽपि तत्॥

ஸ்வப[4]ாவஜேன கௌந்தேய, நிப[3]த்த[4]ஸ் ஸ்வேன கர்மணா |
கர்த்தும் நேச்சஸி யன் மோஹாத், கரிஷ்யஸி அவஶோSபி தத் || 60

**கௌந்தேய** – *குந்தீபுத்திரனே!;* **மோஹாத்** – *பந்துக் களிடமுள்ள ஸ்நேகமாகிற விபரீத ஞானத்தினால்;* **யத்** – *எந்தக் கர்மத்தை;* **கர்த்தும் ந இச்சஸி** – *செய்வதற்கு நீ விரும்ப வில்லையோ;* **தத்** – *அதை;* **அவஶ: அபி** – *நீ உன் வசமாயில்லா திருப்பினும்;* **அ** *என்ற விஷ்ணுவின் ஸ்வரூபமான இச்சையின் அதீனனாகவிருந்து;* **ஸ்வபாவஜேன** – *பூர்வ ஜன்ம ஸம்ஸ்காரத் தினால் ஏற்பட்ட;* **ஸ்வேன கர்மணா** – *உனக்குரிய கர்மத்தால்;* **நிபத்த:** – *நன்கு கட்டப்பட்டவனாய்* **கரிஷ்யஸி** – *செய்யப் போகிறாய்.*

**குறிப்பு:** ஸ்வபாவ: = இயற்கை, ஸ்வரூபம் என்று பொதுவான அர்த்தம். இங்கு முந்திய ஸம்ஸ்காரம் என்று அர்த்தம்.

விஷ்ணுவின் இச்சை தூண்டும் என்றால், விஷ்ணு தூண்டுபவரல்ல என்ற சந்தேகத்தை, விஷ்ணுவின் இச்சை விஷ்ணுவின் ஸ்வரூபமே; ஆகையால் அவரே தூண்டுகிறார் என்கிறார்.

61. ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति।
भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया॥

62. तमेव शरणं गच्छ सर्वभावेन भारत।
तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम्॥

ஈஶ்வரஸ் ஸர்வபூ[4]தானாம், ஹ்ருத்தே[3]ஶேSர்ஜுன திஷ்ட[2]தி |
ப்[4]ராமயன் ஸர்வபூ[4]தானி, யந்த்ரா ரூட[4]ானி மாயயா || 61

தமேவ ஶரணம் க[3]ச்ச[2], ஸர்வப[4]ாவேன ப[4]ாரத |
தத் ப்ரஸாத[3]ாத் பராம் ஶாந்திம், ஸ்த[2]ானம் ப்ராப்ஸ்யஸி
ஶாஶ்வதம் || 62

**அர்ஜுன** – *சுத்தமான கர்மத்தைச் செய்பவனே!* **ஈச்வர:** –*விஷ்ணு;* **யந்த்ர ஆரூடானி** – *யந்திரம் போன்ற உடல் களிலுள்ள;* **ஸர்வபூதானி** – *எல்லா பிராணிகளையும்;* **மாயயா** – *(சு. 59) தமது ஸ்வரூபமாயுள்ள இச்சையினால்;* **ப்ராமயன்** – *(பற்பல கர்மங்களில்) தூண்டிக்கொண்டு;* **ஸர்வபூதானாம்** – *எல்லா பிராணிகளின்;* **ஹ்ருத் தேசே** – *ஹிருதய பிரதேசத்தில்;* **திஷ்டதி** – *இருக்கிறார்.*

*62.* **பாரத** - *பரத வம்சத்தில் பிறந்தவனே; (விஷ்ணுவே ஸ்வதந்திரர், ஜீவர்கள் அவருக்கு அதீனமானவர்கள், ஆகையால், உனது அஹங்காரத்தை விட்டு);* **தம் ஏவ** - *அந்த விஷ்ணுவையே;* **ஸர்வபாவேன** - *எல்லா விதங்களாலும்;* **ஶரணம்** - *காப்பாற்றுபவராக;* **கச்ச** - *அடைவாயாக (சு. 66 பார்க்க)* **தத் ப்ரஸாதாத்** - *அவருடைய அருளால்;* **பராம்** - *உத்தமமான;* **ஶாந்திம்** - *(சமம்) விஷ்ணுவிடம் புத்தி நிலைத்திருக்கும் தன்மையையும்;* **ஶாஶ்வதம்** - *(லக்ஷ்மீயின் ஸ்வரூபமாய் பிரளயத்திலும் அழியாது) நித்யமான;* **ஸ்தானம்** - *இடமான வைகுண்டம், ஶ்வேதத்வீபம், அனந்தாஸனம், ஆகிய லோகங்களையும்* **ப்ராப்ஸ்யஸி** - *நன்கு அடைவாய்.*

**குறிப்பு:** எல்லோரின் ஹிருதயத்திலுள்ள ஈஶ்வரன் ஸ்ரீ கிருஷ்ணரே. அவரைக்காட்டிலும் வேறானவர் அல்ல. ஆயினும், 'நானே இருக்கிறேன். என்னையே சரணமடைவாயாக' என்று ஏன் கூறவில்லை? என்றால்.

*நிஸ்சிதார்த்தஸ் ஸ து ஜ்ஞேய:, யத்ராத்மைவ பரோக்ஷத: |*
*உச்யதே விஷ்ணுனா யத்வத், தத் ப்ரஹ்மேத்யாதி கத்யதே ||*

சாந்தோக்யத்தில், ஹயக்ரீவரூபியான பகவான், தம்மைப்பற்றி, **தத் ப்ரஹ்ம, தத் அம்ருதம்** - 'அவர், பிரம்மம், அவர் நித்யமுக்தர்' என்றும், ஐதரேயத்தில், மஹிதாஸ ரூபியான பகவான், **ஏதத் ப்ரஹ்ம தஸ்மாத் ந ப்ரமாத்யேத்** - 'இவர் பிரம்மம்' என்றும்; வேறாகக் கூறியிருப்பதுபோல், எங்கு தம்மை வேறு ஒருவராகக் கூறுகிறாரோ அங்கு அவரேதான் என்ற நிச்சயத்தை அறிவிக்கிறது. அதற்காகவே (சு. 65ல்) ஸ்ரீ கிருஷ்ணர் என்னிடம் மனதை வை, (சு.66) என்னைச் சரணமடைவாயாக எனக் கூறப்போகிறார்.

3-30ல், மயி ஸர்வாணி கர்மாணி, 5-10ல் ப்ரஹ்மண்யாதாய கர்மாணி; 4-34ல் உபதேக்ஷ்யந்திதே ஜ்ஞானம், 7-2ல் ஜ்ஞானம் தேSஹம்... ... வக்ஷ்யாமி; 9-1ல் ப்ரவக்ஷ்யாமி; என்றபடி தம்மை வேறு ஒருவராகவும், தாமே என்றும், கூறிக்கொண்டிருக்கிறார். 4-34 குறிப்பைப் பார்க்க.

இம்மாதிரி ஸ்ரீ கிருஷ்ண பகவான், அர்ஜுனனுக்கு அதிரஹஸ்யமான தத்வத்தை உபதேசித்தும் பேசாமலிருக்கும் அர்ஜுனனிடம் கோபத்துடன் கூறுகிறார்.

63. इति ते ज्ञानमाख्यातं गुह्यात् गुह्यतरं मया ।
विमृश्यैतत् अशेषेण यथेच्छसि तथा कुरु ॥

இதி தே ஜ்ஞானமாக்[2]யாதம், கு[3]ஹ்யாத் கு[3]ஹ்யதரம் மயா |
விம்ருஶ்யைதத் அஶேஷேண, யதே[2]ச்சஸி தத[2]ா குரு || 63

**குஹ்யாத்** - *ரஹஸ்யத்தைக் காட்டிலும்;* **குஹ்யதரம்** - *அதிக ரஹஸ்யமான (9-2 ராஜகுஹ்யம்);* **ஜ்ஞானம்** - *ஜ்ஞேயம் - அறியத் தகுந்த தத்வம்;* **இதி** - *இவ்வாறு (2-11 முதல்)* **தே** - *உனக்கு;* **மயா** - *என்னால்;* **ஆக்யாதம்** - *நன்கு கூறப்பட்டது.* **ஏதத்** - *இதை;* **அஶேஷேண** - *மீதியில்லாது அனைத்தையும் (ஆதியோடந்தமாக);* **விம்ருஶ்ய** - *தீர ஆலோசித்து;* **யதா இச்சஸி** - *எவ்வாறு விரும்புகிறாயோ;* **ததா குரு** - *அவ்வாறு செய். (உன்னிஷ்டப்படி செய்).*

(சு.9-1ல்) **இதம் து தே குஹ்யதமம்** என்று ஆரம்பித்த அதிரஹஸ்யமான **தத்வஸாரத்தை,** (15-20ல்) **இதி குஹ்யதமம் ஶாஸ்த்ரம்** என்று முடித்தார். இது வரையில் ஆங்காங்கு மோக்ஷ ஸாதனங்களைக் கூறிவந்தவைகளில் ஸாரமானவைகளை, (சு. 56 முதல் 62 முடிய) கூறினார். அந்த **ஸாதனஸாரத்தை** (சு. 65 ,66ல்) கூறி முடிக்கிறேன், என்கிறார்.

64. सर्वगुह्यतमं भूयः श्रृणु मे परमं वचः ।
इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥

ஸர்வகு[3]ஹ்யதமம் பூ[4]ய:, ஶ்ருணு மே பரமம் வச: |
இஷ்டோSஸி மே த்ருட[4]மிதி, ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் || 64

**பூய:** - *மறுபடியும்;* **ஸர்வகுஹ்யதமம்** - *எல்லா ஸாதனங்களில் அதி ரஹஸ்யமான;* **மே** - *என்னுடைய;* **பரமம் வச:** - *உயர்ந்த வார்த்தையை;* **ஶ்ருணு** - *கேள். (அதன்படி நட).* **மே**- *எனக்கு;* **இஷ்ட: அஸி** - *பிரியனாயிருக்கிறாய்;* **இதி** - *என்பது;* **த்ருடம்** - *நிச்சயம்;* **தத:** *ஆகையால்;* **தே** - *உனக்கு;* **ஹிதம்** - *நன்மையை; நான்கு ஸாதன ஸாரங்களை முடிவுரையாக;* **வக்ஷ்யாமி** - *கூறுகிறேன்*

*அவைகளை 1¼ சுலோகம் அல்லது 5 பாதங்களில் கூறுகிறார்.*

65. मन्मना भव मद्भक्तः मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥

66. सर्वधर्मान् परित्यज्य

மன்மனா ப[4]வ மத்ப[4]க்த:, மத்யாஜீ மாம் நமஸ்குரு |
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே, ப்ரதிஜானே ப்ரியோSஸி மே || 65

ஸர்வத[4]ர்மான் பரித்யஜ்ய, 66A

**ஸர்வதர்மான்** - (i) *பிற வர்ணாசிரம தர்மங்கள்* (ii) *அவைஷ்ணவ தர்மங்கள்* (iii) *(18-11) கர்ம பலன்கள் அனைத்தையும்;* **பரித்யஜ்ய** - *அடியோடு விட்டு விட்டு; 1.* **மன்மனா:** - *என்னிடமே மனமுள்ளவனாயும்; (தியானயோகம்); 2.* **மத்பக்த:**- *என் பக்தனாயும் (பக்தியோகம்); 3.* **மத்யாஜீ** - *(யஜ பூஜாயாம்) என்னைப் பூஜிப்பவனாயும் (கர்மயோகம்);* **பவ** - *இரு. 4.* **மாம் நமஸ்குரு** - *என்னை வணங்கு. (ஞானயோகம்). (யத: எதனால்);* **மே ப்ரிய: அஸி** - *எனக்குப் பிரியமானவனாக இருக்கிறாயோ; (தத: - அதனால்); இந்த நான்கு ஸாதன ஸாரங்களால்;* **மாம் ஏவ** - *என்னையே;* **ஏஷ்யஸி** – *அடைவாய்; மோக்ஷத்தை அடைவாய்.* **தே** - *உன்னிடம்;* **ஸத்யம்** - *உண்மையாக;* **ப்ரதிஜானே** - *ஸபதம் செய்கிறேன்.*

**குறிப்பு: (1) 65, 66 இரண்டு சுலோகங்களை 1¼ சுலோகம் அல்லது 5 பாதங்களாகவும், ¾ சுலோகம் அல்லது 3 பாதங்களாகவும் பிரித்து அர்த்தம் செய்யவேண்டும். ஏனெனில் அந்த 5 பாதங்களில் கூறியதை மூன்று பாதங்களால் விளக்குகிறார். மாம் ஏகம் ஶரணம் வ்ரஜ என்பதில் ஏகம் என்ற பதம், ஸர்வதர்மான் பரித்யஜ்ய என்பதையும்; ஶரணம் வ்ரஜ என்ற பதங்கள், மன்மனா பவ முதலியவற்றையும், விளக்குகின்றன. ஆகவே ஸர்வதர்மான் பரித்யஜ்ய என்பதை, மன்மனா: என்பதற்கு முன் சேர்க்க வேண்டும் மாமேகம் சரணம் வ்ரஜ என்பதுடன் சேர்க்கலாகாது (சு. 66 குறிப்பு பார்க்க)**

**(2) ஸர்வதர்மான் பரித்யஜ்ய - எல்லா கர்மங்களையும் விட்டு விட்டு என்ற அர்த்தம், ஶ்ரீ கிருஷ்ணர் உபதேசித்த அடிப்படையான நோக்கத்திற்கும், பிறகு அர்ஜுனன் போர் புரிந்த கர்மத்துக்கும் விருத்தமானது.**

**(3) சு. 9-34ல் இதே சுலோகம் சிறிய மாறுதலுடன், உள்ளதைக் கவனிக்க.**

*விளக்கம் தரும் ¾ சுலோகம் அல்லது 3 பாதகங்களைக் கூறுகிறார்.*

मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥

மாமேகம் ஶரணம் வ்ரஜ |
அஹம் த்வா ஸர்வ பாபேப்⁴யோ, மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: || 66B

**ஏகம்** - *ஸர்வோத்தமனான;* **மாம்** - *என்னை; (மற்ற அனைவரையும் விட்டு);* **ஶரணம்** - *காப்பாற்றுபவனாக;* **வ்ரஜ** - *அடைவாயாக. அநாதி ஜன்மங்களில் செய்த பாவங்களிருக்*

கையில் தங்களை எவ்வாறு அடையமுடியும்? என்றால்; **அஹம்** – நான்; **த்வா** – உன்னை; **ஸர்வ பாபேப்ய:** – அநாதி ஜன்மங்களிற் செய்த பாவங்களிலிருந்து; **மோக்ஷயிஷ்யாமி** – விடுவிப்பேன், (மோக்ஷம்) தருவேன்) **மா ஶுச:** – (ஸம்ஸார பயத்தினால்) துக்கப்படாதே.

குறிப்பு: (1) (சு 2-11ல்) ஸ்ரீ கிருஷ்ணரின் உபதேசம் அஶோச்யான் என ஆரம்பித்து, இங்கு மா ஶுச: என்று முடிகிறது. இரண்டிலும் துக்கமின்மையே உபதேஶ ஸாரமாயுள்ளது.

(2) ஶரணாகதியின் ஸ்வரூபம், மஹாவிஷ்ணு புராணத்தில் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளது.

*ஸர்வோத்தமத்வ விஜ்ஞான, பூர்வம் தத்ர மனஸ் ஸதா |*
*ஸர்வாதிக ப்ரேம யுக்தம், ஸர்வஸ்யாத்ர ஸமர்ப்பணம் ||*
*அகண்டா த்ரிவிதா பூஜா, தத் ரத்யைவ ஸ்வபாவத: |*
*ரக்ஷதீத்யேவ விச்வாஸ:, ததீயோऽஹமிதி ஸ்ம்ருதி: |*
*சரணாகதிரேஷா ஸ்யாத், விஷ்ணௌ மோக்ஷ பலப்ரதா ||*

1. விஷ்ணு ஸர்வோத்தமர் என்ற மகிமையின் விசேஷ ஞானத்தை முதலில் பெற்றதும் (2) பிறகு அனைவரிடமும், அனைத்திலுமுள்ளதைக் காட்டிலும் அதிக அன்பைப் பெற்றதுமான மனதை எப்பொழுதும் விஷ்ணுவிடம் வைத்திருக்க வேண்டும். (3) தான் செய்யும் எல்லா கர்மங்களையும் விஷ்ணுவிடம் ஸமர்ப்பிக்க வேண்டும். இயற்கையாக விஷ்ணுவிடமுள்ள அன்பினாலேயே, வேறு பலன்களைக் கருதாமல், மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் மூவகையான பூஜையைத் தொடர்ந்து செய்ய வேண்டும் (4) விஷ்ணு கட்டாயம் காப்பாற்றுவார், அவரை நம்பினோர் கைவிடப்படார் என்ற நம்பிக்கையும் தான் அவரைச் சேர்ந்தவன் என்ற ஞாபகமும், இருக்கவேண்டும். இந்த 4 அம்ஶங்களைக் கொண்டதே ஶரணாகதியாகும். இது மோக்ஷம் என்ற பலனைத் தருவது

**மன்மனாபவ, மத்பக்த:** = ஸர்வோத்தமத்வ.... ப்ரேமயுக்தம் (2) **மத்யாஜீ** = ஸர்வஸ்யாத்ர ஸமர்ப்பணம், (யஜபூஜாயாம்) த்ரிவிதா பூஜா. (3) **மத்பக்த:** – அகண்டா, தத் ரத்யைவ ஸ்வபாவத: (4) **மாம் நமஸ்குரு** = ரக்ஷதீத்யேவ... ஸ்ம்ருதி: (5) **மாமேவ ஏஷ்யஸி** = மோக்ஷ பல ப்ரதா. (6) **ஏகம்** = ஸர்வ தர்மான் பரித்யஜ்ய.

இங்கு ஸ்ரீ கிருஷ்ணர் கூறிய சரணாகதிக்கும், ராமாயணத்தில் ஸ்ரீராமர் கூறிய சரணாகதிக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைப் பார்க்கலாம். ராமாயணமே தீர்க்க சரணாகதியாயினும், விபீஷண சரணாகதி கட்டம் தலை சிறந்தது. அது (1) ஆநுகூல்யத்தை ஸங்கல்பித்தல் (2) ப்ராதிகூல்யத்தை விலக்குதல் (3) ரக்ஷிப்பார் என்ற நம்பிக்கை (4) காப்பாற்றுவீராக, என வரித்தல் (5) தன்னை அவரிடம் அர்ப்பித்தல் (6) தன் தாழ்வை அநுஸந்தித்துக் கூறல் என ஆறுவகைப்

பட்டது. அதில் 5ம் அம்சம் முக்கியமாயும், மற்றவை அங்கமாயும் கருதப்படுகிறது. (காவ்யரீதியில் விமர்சனம்)

| | ஸ்ரீ கிருஷ்ணர் கூறியது | ஸ்ரீராமர் கூறியது |
|---|---|---|
| 1. | தம் சேனை, பிறர் சேனை ஆகிய இரண்டின் நடுவே கூறியது | தமது வானர சேனையின் நடுவே கூறியது. |
| 2. | பிறர் அபஹரித்ததால் ராஜ்யமிழந்த அர்ஜுனனுக்கு ராஜ்யம் பெறச் செய்தது. | தானே ராஜ்யத்தைத் துறந்து விபீஷணனுக்கு ராஜ்யம் பெறச் செய்தது. |
| 3. | பிற தர்மங்களை விட்டுத் தம்மைச் சரணமடையக் கூறினார் | ராஜ்யத்தையும், மனைவி மக்கள் அனைத்தையும் தானே விட்டுச் சரணமடைந்தவனை ரக்ஷித்தார். |
| 4. | பாவங்களாகிற தோஷங்களிலிருந்து விடுவிப்பேன் என்றார். | தோஷமுடையவனாயினும் நான் கைவிட மாட்டேன் (தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்) என்றார். |
| 5. | அர்ஜுனனை ஏற்றுக்கொள்ளக் கூடாது எனத் தடை செய்தவர் ஒருவருமில்லை. | விபீஷணனை ஏற்றுக்கொள்ளக் கூடாதென அங்கதன் முதலியோர் தடை செய்தார்கள். |
| 6. | அர்ஜுனன் தனக்கு எது நன்மையோ, அதைக் கூற வேண்டினான். (2–7) | ஸ்ரீராமர் தன் நன்மையில் நிலைத்திருப்பவர்களைக் கேளுங்கள் என்றார். (யுத்த காண்டம் 18–2) |
| 7. | ஸ்ரீ கிருஷ்ணர் தேரோட்டியாக இருந்து கூறினார். | ஸ்ரீராமர், 10 திக்குகளிலும் தேரைச் செலுத்தியவரின் பிள்ளையாக இருந்து கூறினார். |

இவருடைய உபதேஶங்களாலும், இரு பக்தர்களும் துயரம் நீங்கி, ராஜ்யம் பெற்று இன்புடன் வாழ்ந்தனர்.

*இந்தக் கீதா ஶாஸ்திரத்தில் தகுதியற்றவர்களை நிராகரிப்பதின் மூலம், தகுதியுள்ளவர்களின் லக்ஷணத்தையும் குறிப்பிடுகிறார்.*

67. इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।
न च अशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥

இத[3]ம் தே நாதபஸ்காய, நாப[4]க்தாய கத[3]ாசன |
ந ச அஶுச்ரூஷவே வாச்யம், ந ச மாம் யோSப்[4]யஸூயதி || 67

**இதம்** - இந்த கீதா ஶாஸ்திரம்; **தே** - உன்னால்; **அதபஸ்காய** – *(17–14முதல் 16)* தவமில்லாதவனுக்கு; **ந வாச்யம்** — சொல்லத்தகுந்ததல்ல. **ச** - அதைக் காட்டிலும் அதிக தோஷமுள்ளதால்; **அஶுச்ருஷவே** - ஸேவைபுரியாதவனுக்கு; **ந** - சொல்லத் தகுந்ததல்ல. **கதாசன** - ஒரு பொழுதும்; (இந்தப் பதத்தால், அதைவிட அதிக தோஷமுள்ளதால்); **அபக்தாய** - பக்தியில்லாதவனுக்கு; **ந** - சொல்லத்தகுந்த தல்ல. **ச** - அதை விட அதிக தோஷமுள்ளதால்; **மாம்** - என்னை; **ய:** - யார்; **அபி அஸூயதி** - பொறாமையுள்ளவனாய் நிந்திக்கிறானோ; (**தஸ்மை** - அவனுக்கு); **ந** - சொல்லத் தகுந்ததே அல்ல.

**குறிப்பு:** இங்கு இந்த வரிசைப்படி (1) தவமில்லாதவன், (2) சேவைபுரியாதவன், (3) பக்தியில்லாதவன், (4) பகவானைத் த்வேஷிப்பவன், என்ற நான்கு தகாதவர்கள் கூறப்பட்டுள்ளனர். அவர்கள் சமமானவர்களல்லர். அவர்களுக்கு உபதேசித்தால் ஏறு வரிசையில் தோஷம் அதிகரிக்கும். இதனால் தவம், சேவை, பக்தி நிந்திக்காதிருத்தல், ஆகியவற்றைப் பெற்றவர்கள் கீதைக்குத் தகுதியுள்ளவர்கள் எனக் குறிக்கிறார்.

*ஸமுச்சயே ததாSSதிக்யே, ந்யூனத்வே ச: ப்ரயுஜ்யதே |*

ச என்பதற்கு சேர்த்தல், அதிகம், குறைவு - என்ற மூன்று அர்த்தங்களுண்டு. இங்கு அதிகம் என்ற அர்த்தமுள்ளது.

*கீதா ஶாஸ்திரத்தின் பாட ப்ரவசனத்தின் பலனைக்கூறி இரு ஶ்லோகங்களில் புகழ்கிறார்.*

68. य इदं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।
भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥

ய இத[3]ம் பரமம் கு[3]ஹ்யம், மத்ப[4]க்தேஷ் வபி[4]த[4]ாஸ்யதி |
ப[4]க்திம் மயி பராம் க்ருத்வா, மாமேவைஷ்யதி அஸம்ஶய: || 68

**ய:** – (தகுதியுள்ள) யார்; **பரமம் குஹ்யம்** – அதிரஹஸ்ய மான; **இதம்** – இந்தக் கீதா ஶாஸ்திரத்தை; **மத்பக்தேஷு** – என் பக்தர்களுக்கு; **அபிதாஸ்யதி** – நன்கு உபதேஶிப்பானோ; (**ஸ:** அவன்); மயி – என்னிடம்; **பராம் பக்திம்** – உயர்ந்த பக்தியை; **க்ருத்வா** – செய்து; **மாமேவ** – என்னையே; **ஏஷ்யதி** – அடை வான் அஸம்ஶய: – ஸந்தேகமில்லை.

**குறிப்பு:** சுலோகம் 67ல் அபக்தாய ஒருமை. இங்கு மத்பக்தேஷு பன்மை. இதனால் பக்தியில்லாத ஒருவனுக்குக்கூட உபதேஶிக்கலாகாது. பக்தியிருந்தால் பலருக்கு உபதேசிக்கலாம், என்கிறார்.

69. न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।
भविता न च मे तस्मात् अन्यः प्रियतरो भूवि ॥

ந ச தஸ்மான் மனுஷ்யேஷு கஸ்சின்மே ப்ரியக்ருத்தம: |
ப[4]விதா ந ச மே தஸ்மாத், அன்ய: ப்ரியதரோ பு[4]வி || 69

**தஸ்மாத்** – அந்தக் கீதா பாட ப்ரவசனம் செய்பவனைக் காட்டிலும்; **மே** – எனக்கு; **ப்ரிய க்ருத் தம:** – பிரியத்தைச் செய்பவர்களில் சிறந்தவன்; **மனுஷ்யேஷு** – மனிதர்களிடையே; **அன்ய: கஸ்சித் ச** – வேறு யாரும்; **ந (அஸ்தி)** – (இப்போது) இல்லை. புவி – பூமியில்; **தஸ்மாத்** – அவனைக் காட்டிலும்; **மே** – எனக்கு; **ப்ரியதர:** அதிகப் பிரியமான; **அன்ய: ச** – வேறு ஒருவனும்; **ந பவிதா** – இனி இருக்கப் போவதில்லை. (**ந அபூத்** – இதற்கு முன் இருந்ததுமில்லை).

**குறிப்பு: மனிதர்களில்** என்றதால் முக்தர்களில் தேவர்களுக்கு அதிக பலனுண்டு என்று குறிப்பிடுகிறார். ஏனெனில் எல்லா இந்திரியங்களையும் அவர்கள் பிரேரிப்பவர்கள்.

கீதையைக் கற்று அறிவதையும், பாராயணம் செய்வதையும் அவற்றின் பலனையும் கூறிப் புகழ்கிறார்.

70. अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः ।
ज्ञानयज्ञेन तेनाहं इष्टः स्यां इति मे मतिः ॥

அத்[4]யேஷ்யதே ச ய இமம், த[4]ர்ம்யம் ஸம்வாத[3]மாவயோ: |
ஜ்ஞான யஜ்ஞேன தேனாஹம், இஷ்டஸ் ஸ்யாம் இதி மே மதி: || 70

**ய:** – யார்; **ஆவயோ:** – நம் இருவருடைய; **தர்ம்யம்** – அனைத்தையும் தாங்குவதால் தர்ம; என்ற பகவானைப் பற்றிய அல்லது புண்ணியத்திற்குச் சாதனமான; **இமம் ஸம்வாதம்** – இந்த சம்பாஷணையான, கீதா ஶாஸ்திரத்தை; **ஆத்யேஷ்யதே ச** – கற்று அறிவானோ, பாராயணம் செய்வானோ; **தேன** – அவனால்; **அஹம் –** நான்; **ஜ்ஞானயஜ்ஞேன** – அந்த

ஞானமாகிற யாகத்தால்; **இஷ்ட:** - பூஜிக்கப்பட்டவனாக; **ஸ்யாம்** - ஆவேன்; **இதி** - என்று; **மே மதி:** - என் அபிப்ராயம்.

கீதையைக் காதால் கேட்பதையும், பலனையும் கூறிப் புகழ்கிறார்.

71. श्रद्धवान् अनशूयश्च श्रृणुयादपि यो नरः ।
सोऽपि मुक्तः शुभान् लोकान् प्राप्नुयात्पुण्यकर्मणाम् ॥

ஶ்ரத்தாவான் அநஸூயஸ் ச, ஶ்ருணுயாத³பி யோ நர: |
ஸோSபி முக்தஸ் ஶுப⁴ான் லோகான், ப்ராப்னுயாத் புண்ய கர்மணாம் ||

**ஶ்ரத்தாவான்** - இதனால் எனக்குப் பலனுண்டு என்ற ஆஸ்திக்ய புத்தியுள்ளவனும்; **அநஸூய: ச** - பொறாமை முதலிய தோஷங்களில்லாதவனுமான; **ய: நர:** - எந்த மனிதன்; (**ஆவயோ:** - **இமம் ஸம்வாதம்** - நம்மிருவருடைய இந்த ஸம்பாஷணையான கீதையை); **ஶ்ருணுயாத் அபி (சேத்)** - கேட்பானேயாகில்; **ஸ: அபி** - அவனும்கூட; **முக்த:** - ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு; **புண்ய கர்மணாம்** - புண்ய கர்மங்களைச் செய்தவர்களின்; **ஶுபான் லோகான்** - மங்கள மான உலகங்களை; **ப்ராப்னுயாத்** - நன்கு அடைவான்.

**குறிப்பு: அவனும்கூட** - என்றதால்; மனிதர்களிடையே, கீதையைக் காதால் கேட்பவனைக்காட்டிலும். அத்யயனம் செய்தவனுக்கு முக்தியில் அதிக ஸுகம் உண்டு. அவனைக் காட்டிலும், வியாக்யானம் செய்தவனுக்கு அதிக ஸுகம்; அதைக் காட்டிலும் தேவர்களுக்கு அதிக ஸுகம் உண்டு என அறிவிக்கிறார்.

ஸ்ரீ கிருஷ்ணர் இதுவரையில் தாம் உபதேஶித்தது, செவிடன் காதில் ஶங்கு ஊதினதுபோல் ஆகவில்லையே! என்ற பாவனையுடன் அர்ஜுனனை வினவுகிறார்.

72. कच्चिदेतत् श्रुतं पार्थ त्वया एकाग्रेण चेतसा ।
कच्चित् अज्ञान संमोहः प्रणष्टस्ते धनञ्जय ॥

கச்சிதே³தத் ச்ருதம் பார்த்த², த்வயா ஏகாக்³ரேண சேதஸா |
கச்சித் அஜ்ஞான ஸம்மோஹ:, ப்ரணஷ்டஸ் தே த⁴னஞ்ஜய || 72

**பார்த்த** - குந்தீ புத்திரனே!; **த்வயா** - உன்னால்; **ஏகாக்ரேண** - ஒரு முனைப்பட்ட; **சேதஸா** - மனதினால்; **ஏதத்** - இந்த என்னால் கூறப்பட்ட கீதாப்ரமேயம்; **ஶ்ருதம் கச்சித்** - கேட்கப்பட்டதா? **தனஞ்ஜய** - ராஜஸூயத்திற்குச் செல்வத்தை ஜயித்தவனே!; **தே** — உன்னுடைய; **அஜ்ஞான ஸம்மோஹ:** -

அறிவின்மையால் ஏற்பட்ட ஆழ்ந்த விபரீத ஞானம்; **ப்ரணஷ்ட: கச்சித்** – அடியோடு அழிந்ததா?

अर्जुन उवाच — **அர்ஜுன: உவாச** – இவ்வாறு வினவப்பட்ட அர்ஜுனன் பதிலளிக்கிறான்.

73. नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाऽच्युत ।
स्थितोऽस्मि गतसंदेहः करिष्ये वचनं तव ॥

நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்[4]தா, த்வத் ப்ரஸாத[3]ான் மயாS ச்யுத |
ஸ்தி[2]தோSஸ்மி க[3]த ஸந்தே[3]ஹ:, கரிஷ்யே வசனம் தவ || 73

**அச்யுத** – தேசம், காலம், குணம் இவற்றால் நழுவா தவரே! பக்தர்களை நழுவ விடாதவரே! **த்வத் ப்ரஸாதாத்** – உமது அருளால்; **மோஹ:** – (முதல் அத்தியாயத்தில் கூறிய) விபரீத ஞானம்; **நஷ்ட:** – அழிந்து விட்டது. **ஸ்ம்ருதி:** – (நாராயண த்வேஷிகளையும், அவர்களைச் சார்ந்தவர் களையும் கொல்வது, மேன்மையான தர்மமாகும். அதை அவசியம் செய்யவேண்டும், என்ற) **ஞாபகம்; லப்தா** – என்னால் அடையப்பட்டது. **கத ஸந்தேஹ** – ஸந்தேகம் விலகியவனாக; **ஸ்தித: அஸ்மி** – (போரில்) நின்று உள்ளேன். (சு. 63ல் 'உன்னிஷ்டப்படி செய்', என்று பகவான் கோபித்துக் கொண்டதால், அதைப் போக்க, பகவானை அநுஸரிக்கிறான்), **தவ** – உம்முடைய; **வசனம்** – வார்த்தையை; **கரிஷ்யே** – செய்வேன்.

**குறிப்பு: 2-9ல் ந யோத்ஸ்யே** – 'நான் போர் புரிய மாட்டேன்.' என்று கூறினவன், இங்கு 'போர் புரிகிறேன்', என்று கூறாமல்; 'உம்முடைய வார்த்தையைச் செய்வேன்' என்றதால்; போர் மாத்திரமல்ல நீர் சொல்லும் எதையும் செய்யத் தயார், என அறிவிக்கிறான்.

இத்துடன் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதம் முற்றிற்று.

ஸஞ்ஜய திருதராஷ்டிர ஸம்வாதம் ஆரம்பிக்கிறது (5 சுலோகங்கள்)

सञ्जयः उवाच – **ஸஞ்ஜய: உவாச** – தனிமையில் நடந்த ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனர்களின் ஸம்வாதத்தை, நீ எவ்வாறு அறிந்தாய்? என்ற திருதராஷ்டிரனின் வினாவுக்கு விடை தருகிறான்.

74. इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मनः ।
संवादं इममश्रौषं अद्भुतं रोमहर्षणम् ॥

இத்யஹம் வாஸுதே[3]வஸ்ய, பார்த்த[2]ஸ்ய ச மஹாத்மன: |
ஸம்வாத[3]ம் இமமஶ்ரௌஷம், அத்பு[4]தம் ரோமஹர்ஷணம் || 74

**மஹாத்மன:** – பெரிய மனம் படைத்த; **வாஸுதே – வஸ்ய** – வஸுதேவனின் புத்திரனுக்கும் (ஸ்ரீ கிருஷ்ணருக்கும்); **பார்த்தஸ்ய ச** – குந்தீயின் புத்திரனுக்கும் (அர்ஜுனனுக்கும்); **இதி** – இம்மாதிரியான (முதல் அத்தியாயம் முதல் எல்லாமு மடங்கிய); **இமம்** – இந்த; **அத்புதம்** – ஆச்சரியமான (இதற்கு முன் எங்கும் கேட்டிராத); **ரோமஹர்ஷணம்** – மயிர்க்கூச்சை யுண்டுபண்ணுகிற; **ஸம்வாதம்** – ஸம்பாஷணையை; **அஹம் அஶ்ரௌஷம்** – நான் கேட்டேன். (என்னே என் பாக்கியம்!)

குறிப்பு: க்ருஷ்ணஸ்ய, அர்ஜுனஸ்ய ச என்று கூறாது, வாஸுதேவஸ்ய, பார்த்தஸ்ய ச என்றதால்; வாஸுதேவ: ஸுப்ரஜ ப்ருதா ஸுப்ரஜா: வஸுதேவன் இவ்வித கீதோபதேசம் செய்யும் பிள்ளையையும், அவனது சகோதரியான குந்தி, கீதோபதேசம் பெற்ற பிள்ளையையும் பெற்றதற்கு அவர்கள் என்ன புண்ணியம் செய்தார்களோ! திருதராஷ்டிரரே! நீரும் நூறு பிள்ளைகளைப் பெற்றிருக்கிறீரே! எனச் சுட்டிக் காட்டுகிறான்.

75. व्यासप्रसादात् श्रुतवान् एतद्गुह्यमहं परम् ।
योगं योगेश्वरात्कृष्णात् साक्षात्कथयतः स्वयम् ॥

வ்யாஸ ப்ரஸாத$^3$ாத் ஶ்ருதவான், ஏதத் கு$^3$ஹ்யமஹம் பரம் |
யோக$^3$ம் யோகே$^3$ச்வராத் க்ருஷ்ணாத், ஸாக்ஷாத் கத$^2$யதஸ்
ஸ்வயம் || 75

**ஸ்வயம்** – தாமாகவே; **யோகம்** – மோக்ஷோபாயத்தை; **கதயத:** – சொல்பவரான; **யோகேஶ்வராத்** – எல்லா உபாயங்களுக்கும் ஸ்வாமியான; **க்ருஷ்ணாத்** – ஸ்ரீ கிருஷ்ணரிடமிருந்து; **ஸாக்ஷாத்** – நேராக; **பரம்** – உத்தமமும்; **குஹ்யம்** – ரஹஸ்யமுமான; **ஏதத்** – இந்தக் கீதையை; **அஹம்** – நான்; **வ்யாஸப்ரஸாதாத்** – ஸ்ரீ வேதவியாஸரின் அருளால்; **ஶ்ருதவான்** – கேட்டேன்.

குறிப்பு: வியாஸரின் அருள் - போர் ஆரம்பிக்கு முன்னர் ஸ்ரீ வேதவியாஸர் ஸஞ்ஜயனுக்குத் தூரத்ருஷ்டி, தூரஶ்ரவணம், பசி தாகமின்மை முதலியவற்றைத் தந்துப் போரின் நிகழ்ச்சிகளைத் திருதராஷ்டிரனுக்கு வர்ணிக்கும்படி ஏற்படுத்தினார். (முதல் அத்தியாயம்)

அதைக் கேட்டதால் தனக்கு அப்பொழுது ஏற்பட்ட பலனை 2 சுலோகங்களில் கூறுகிறான்.

76. राजन् संस्मृत्य संस्मृत्य संवादमिमं अद्भुतम् ।
केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः ॥

ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய, ஸம்வாத$^3$மிமம் அத்பு$^4$தம் |
கேஶவார்ஜுனயோ: புண்யம், ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: || 76

**ராஜன்** – *அரசே திருதராஷ்டரரே!;* **ச** – *மேலும்;* **கேசவ அர்ஜுனயோ:** – *(1-30) பிரம்மருத்ர நியாமகரான ஸ்ரீ கிருஷ்ணர், அர்ஜுனன், ஆகிய இருவர்களுடைய;* **புண்யம்** – *பரலோக சுகத்திற்குக் காரணமான அதிருஷ்டத்தைத் தருவதும்;* **அத்புதம்** – *ஆச்சரியமானதுமான;* **இமம் ஸம்வாதம்** – *இந்த ஸம்பாஷணையை;* **ஸம் ஸ்ம்ருத்ய, ஸம் ஸ்ம்ருத்ய** – *நன்கு நினைத்து நினைத்து;* **முஹு: முஹு:** – *மீண்டும் மீண்டும்;* **ஹ்ருஷ்யாமி** – *மகிழ்கிறேன்.*

77. तच्च संस्मृत्य संस्मृत्य रूपं अत्यद्भुतं हरेः।
विस्मयो मे महान् राजन् हृष्यामि च पुनः पुनः॥

தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய, ரூபம் அத்யத்$^4$புதம் ஹரே: |
விஸ்மயோ மே மஹான் ராஜன், ஹ்ருஷ்யாமி ச புன: புன: || 77

**ராஜன்** – *அரசே! திருதராஷ்டிரரே!;* **ஹரே:** – *அனைவரையும் அழிப்பவரான ஸ்ரீ கிருஷ்ணரின்;* **அதி அத்புதம்** – *மிக ஆச்சரியமான;* **தத் ரூபம் ச** – *அந்த விச்வரூபத்தையும்;* **ஸம் ஸ்ம்ருத்ய, ஸம் ஸ்ம்ருத்ய** – *நன்கு நினைத்து நினைத்து;* **மே** – *எனக்கு;* **மஹான் விஸ்மய:** – *பெரும் வியப்பு (உண்டாகிறது)* **புன:புன:** – *மீண்டும் மீண்டும்;* **ஹ்ருஷ்யாமி ச** – *மகிழ்ச்சியடைகிறேன்.*

**போர்புரியும் நிச்சயத்தைக்கேட்ட திருதராஷ்டிரனுக்கு, எந்தக் கக்ஷியில் ஜயம் முதலியன ஏற்படுமோ என்று அவன் மனதிலுதித்த சந்தேகத்தைப் போக்குகிறான்.**

78. यत्र योगीश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः।
तत्र श्रीः विजयो भूतिः ध्रुवा नीतिर्मतिर्मम॥

யத்ர யோகீ$^3$ச்வர: க்ருஷ்ணோ, யத்ர பார்த்தே$^2$ா த$^4$னுர்த$^4$ர: |
தத்ர ஸ்ரீ விஜயோ பூ$^4$தி:, த்$^4$ருவா நீதிர் மதிர் மம || 78

**யத்ர** – *எந்த சேனையில்;* **யோகி ஈச்வர** – *ஸர்வ உபாயங்களை உடையவர்களின் ஸ்வாமியான;* **க்ருஷ்ண:** – *ஸ்ரீ கிருஷ்ணரும்;* **யத்ர** – *எந்த சேனையில்;* **தனுர்தர:** – *வில்லைப்பிடித்த;* **பார்த்த:** – *குந்தீ புத்திரனான அர்ஜுனனும் (உள்ளனரோ)* **தத்ர** – *அந்த சேனையில்;* **ஸ்ரீ:** – *ராஜ்ய லக்ஷ்மீயும்;* **விஜய:** – *விசேஷ வெற்றியும்;* **பூதி:** – *செல்வமும்;* **நீதி:** – *நியாயமும்;* **த்ருவா** – *ஸ்திரமானவை;* **இதி** – *என்று;* **மம** – *(ஸ்ரீ வியாஸரின் அருளால் தீர்க்கதரிசியான) என்னுடைய;* **மதி:** – *நிஸ்சயமான அபிப்ராயம்.*

குறிப்பு: யோகேச்வர :– பிறர்பாடம்

ॐ तत्सत् इति श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुन संवादे (मोक्ष) संन्यासयोगो नाम अष्टादशोऽध्यायः ॥

॥ इति श्रीमद्भगवद्गीता संपूर्णा ॥

ஓம் தத்ஸத், இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு, உபநிஷத்ஸு, ப்ரஹ்ம வித்யாயாம், யோக சாஸ்த்ரே, ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே, (மோக்ஷ) ஸந்ந்யாஸயோகோ நாம அஷ்டாதசோ Sத்யாய: ||

இவ்வாறு ஸ்ரீமத் பகவத்கீதை ஸம்பூர்ணம்.

---

*இவ்வாறு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளிய*
*கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய, (மோக்ஷ) ஸந்ந்யாஸ யோகம்*
*என்ற 18ம் அத்தியாயத்தின் உரை முற்றிற்று.*

---

இவ்விதமாக உபதேசத்தைப் பெற்ற அர்ஜுனனுக்கு விபரீத ஞானம் விலகி, அவன் ஸ்ரீ கிருஷ்ணரை அடிபணிந்து, அவருடைய சொற்படி நடப்பதாகக் கூறினான். இதை ஸஞ்ஜயன் திருதராஷ்டிரனுக்கு வர்ணித்து, எங்கு ஸ்ரீ கிருஷ்ணரும், அர்ஜுனனும் இருந்தனரோ, அங்கு தான் ஸகல மங்களங்களும் இருக்கும் எனக் கூறிமுடித்தான்.

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் தமது உரையை முடித்துக் கடைசியிலும் பகவானைத் துதிக்கிறார்.

अशेषगुणपूर्णाय दोषदूराय विष्णवे ।
नमः श्रीप्राणनाथाय भक्ताभीष्ट प्रदायिने ॥

அஶேஷகு3ண பூர்ணாய, தே3ாஷ தூ3ராய விஷ்ணவே |
நம: ஸ்ரீப்ராண நாத2ாய, ப4க்தாபீ4ஷ்ட ப்ரத3ாயினே ||

எல்லா நற்குணங்கள் நிறைந்தவரும், தோஷங்களுக்கு அப்பாற்பட்டவரும், லக்ஷ்மீயின் உயிர்க் கணவரும் அல்லது லக்ஷ்மீ, வாயு ஆகிய இருவரின் ஸ்வாமியும்; பக்தர்களின் எல்லா இஷ்டங்களையும், நன்கு தருபவருமான; எங்கும் வியாப்தரான விஷ்ணுவுக்கு நமஸ்காரம் (இருக்கட்டும்)

ஸ்ரீமத் பகவத் கீதா முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.

☆

## ஸ்ரீமத் பகவத்கீதாஸாரம்:–

(பாரத தாத்பர்ய நிர்ணயம் –அ. 25–1மு 17சு)

தே ஸேனே ஸமராரம்பே4, ஸமேதே ஸாக3ரோபமே |
பீ4ம பீ4ஷ்மமுகே2 வீக்ஷ்ய, ப்ராஹ வாஸவி ரச்யுதம் |
ஸேனயோருப4யோர் மத்4யே, ரத2ம் ஸ்தாபய மேऽச்யுத ||
இத்யுக்த: ஸ தத2ா சக்ரே, பார்த்தோபஶ்யச்ச ப3ாந்த4வான் |
விஸஸர்ஜ த3நு: பாபா,ஶங்கீ தத்ராஹ மாத4வ: ||
ஸ்வத4ர்மோ து3ஷ்டநித4னம், த4ர்மஜ்ஞானாநுபாலனம் |
க்ஷத்ரியஸ்ய தமுத்ஸ்ருஜ்ய, நிந்தி3தோ யாத்யதே4ா த்4ருவம் ||
யத: ப்ரவ்ருத்திர் பூ4தானாம், யேன ஸர்வமித3ம் ததம் |
ஸ்வகர்மணா தம4ப்யர்ச்ய, ஸித்தி4ம் விந்த3தி மானவ: ||
ந ச ஶோகஸ்த்வயா கார்யோ, ப3ந்தூ4னாம் நித4னேச்ச2யா |
தே3ஹஸ்ய ஸர்வத2ா நாஶாத், அநாஶாச்சேதனஸ்ய ச ||
ஸ்ருஷ்டி ஸ்தி2தி அப்யயாஜ்ஞான ப3ந்த4மோக்ஷப்ரவ்ருத்தய: |
ப்ரகாஶ நியமௌ சைவ. ப்ரஹ்மேஶாதி க்ஷரஸ்ய ச |
அக்ஷர ப்ரக்ருதேஸ்சைவ, மத்த ஏவ ந சான்யத: ||
ந மே குதஸ்சித் ஸர்க்க3ாத்யா: ஸ்வாதந்த்ர்யாத் குணபூர்த்தித: |
அதஸ் ஸமாதிகாப4ாவாத், ஸர்வம் மத்வஶமேவ ச |
ஜ்ஞாத்வைஷாம் நித4னாத்யம் ச, ஜீவாதே3: அஸ்வதந்த்ர தாம் |
அஸ்வாதந்த்ர்யாத் நிவ்ருத்தௌ ச, மாமநுஸ்மர யுத்4ய ச ||
யேது ஸர்வாணி கர்மாணி, மயி ஸந்ந்யஸ்ய மத்பரா: |
அநன்யேனைவ யோகேன, மாம் த்4யாயந்த: உபாஸதே ||
தேஷாமஹம் ஸமுத்த4ர்த்தா, ம்ருத்யு ஸம்ஸார ஸாக3ராத் |
பவாமி நசிராத் பார்த்த2, மய்யாவேஶித சேதஸாம் ||
மயா (ஆ) ததமிதம் ஸர்வம், ஜக3தவ்யக்தமூர்த்தினா |
மத்ஸ்த2ானி ஸர்வபூ4தானி, ந சாஹம் தேஷ்வவஸ்தி2த: ||
ஸுபூர்ண ஸத்ஸர்வகு3ண, தே3ஹோऽஹம் ஸர்வத3ா ப்ரபு4: |
அஸ்ப்ருஷ்டாகி2ல தே3ாஷைக, நித்ய ஸத்தனுரவ்யய: ||
இத்யுக்தோ வாஸவி: ப்ராஹ வ்யாப்திம் தே த3ர்ஶயேஶ மே |
அத2 தி3வ்யத்3ருஶம் தஸ்ய த3த்வா வ்யாப்தம் நிஜம் வபு: |
தே3ஶத: காலதஸ்சைவ, பூர்ணம் ஸர்வகு3ணைஸ் ஸத3ா |
தர்ஶயாமாஸ ப4கவான், யாவத்யர்ஜுன யோக்3யதா ||
தத்–ப்ரார்த்தித: புன: க்ருஷ்ண: தத்ரூபம் லோகமானத: |
பூர்வவத் த3ர்ஶயாமாஸ, புனஸ்சைன மஶிக்ஷயத் |
ஜ்ஞானம் ஜ்ஞேயம் ப்ரக்ருத்யாதி3, ஜ்ஞாபயன் புருஷோத்தம: |
தேனாநுஶிஷ்ட: பார்த்த2ஸ்து, ஶரம் த4னுராத3தே3 ||



# ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமிகள் அருளியுள்ள க்ரந்தங்கள்

மந்த்ராலய மஹாப்ரபு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் சுமார் 50 க்ரந்தங்களை யாத்திருக்கிறார். அந்த ஐம்பதிலே மூன்று க்ரந்தங்கள் கீதையைப் பற்றியது. ப்ரமேய தீபிகை, ந்யாய தீபிகை மற்றும் கீதா விவ்ருதி என்னும் கீதார்த்த ஸங்க்ரஹம். இது குறித்த குறிப்புகளை நாம் பின் அட்டையில் காணலாம். இப்போது அந்த 50 க்ரந்தங்களின் பட்டியலைக் காண்போம்.

1. ரிக்வேதம் விவ்ருதி
2. யஜுர் வேதம் விவ்ருதி
3. ஸாம வேதம் விவ்ருதி
4. மந்த்ரார்த்த மஞ்ஜரி
5. ருகார்த்த மஞ்ஜரி
6. புருஷ ஸூக்த வ்யாக்யானம்
7. அம்பரணீ ஸூக்த வ்யாக்யானம்
8. பளித்தா ஸூக்த வ்யாக்யானம்
9. ஸ்ரீ ஸூக்த வ்யாக்யானம்
10. ராத்ரி ஸூக்த வ்யாக்யானம்
11. ஈசாவாஸ்ய உபநிஷத்தின் கண்டார்த்தம்
12. காடகம் கண்டார்த்தம்
13. ஐதரேய கண்டார்த்தம்
14. தைத்ரீய கண்டார்த்தம்
15. ஷட்ப்ரச்ந கண்டார்த்தம்
16. பிருஹதாரண்ய கோபநிஷத் கண்டார்த்தம்
17. மாண்டூக்யோப நிஷத் கண்டார்த்தம்
18. தலவகாரோப நிஷத் கண்டார்த்தம்
19. சாந்தாக்யோப நிஷத் கண்டார்த்தம்
20. ஆதர்வணோப நிஷத் கண்டார்த்தம்
21. கீதா விவ்ருதி
22. ப்ரமேய தீபிகை டிப்பணி
23. ந்யாய தீபிகை டிப்பணி
24. தந்த்ர தீபிகை
25. நியாய முக்தாவளி
26. தத்வ மஞ்ஜரி (அனுபாஷ்யம் டிப்பணி)
27. தத்வ ப்ரகாசிகை டிப்பணி (பாவ தீபிகை)
28. ஸ்ரீமன் ந்யாய ஸுதா டிப்பணி (ஸுதா பரிமளம்)
29. ப்ரமாண லக்ஷணம் டிப்பணி
30. கதாலக்ஷணம் டிப்பணி
31. மாயாவாத கண்டனம் டிப்பணி
32. உபாதி கண்டனம் டிப்பணி
33. மித்யாத்வா நுமான் கண்டனம் டிப்பணி
34. தத்வ விவேகம் டிப்பணி
35. தத்வ ஸங்க்யானம் டிப்பணி
36. தத் வோத்யோதம் டிப்பணி
37. ஸ்ரீமத் விஷ்ணு தத்வ நிர்ணயம் டிப்பணி
38. கர்ம நிர்ணயம் டிப்பணி
39. ஸ்ரீ ராம சாரித்ர மஞ்ஜரி
40. ஸ்ரீ க்ருஷ்ண சாரித்ர மஞ்ஜரி
41. மஹாபாரத தாத்பர்ய நிர்ணய டிப்பணி
42. வாதாவளீ டிப்பணி
43. சந்த்ரிகா ப்ரகாசம்
44. தர்க்க தாண்டவம் டிப்பணி
45. ப்ரமாண பத்ததி டிப்பணி
46. அனுமத்வ விஜயம் டிப்பணி
47. பாட்ட ஸங்க்ரஹம்
48. ப்ராத : ஸங்கல்ப கத்யம்
49. ப்ரமேய ஸங்கரஹம்
50. ஸர்வ ஸமர்ப்பண கத்யம்



# ஸ்ரீ ராகவேந்திரரின் க்ரந்த பலம்

**ஸ்ரீ**மந் நாராயண பூஜைக்குக் கைங்கர்யம் செய்து வந்த சங்கு கர்ணர் க்ருத யுகத்தில் ஸ்ரீ பிரஹல்லாதராகவும், த்வாபர யுகத்தில்ஸ்ரீ பாஹ்லீகராஜராகவும், இக்கலியுகத்தில் ஸ்ரீ வியாஸராஜராகவும், அதற்கடுத்த பிறவியில் ஸ்ரீ ராகவேந்திரராகவும் அவதரித்தார்.

கேட்டதைக் கொடுக்கும் நினைத்ததை நடத்தி வைக்கும் ப்ரபுவாக மந்த்ராலய மஹாப்ரபு விளங்குவதற்கு க்ருத யுகத்திலிருந்து அவர் சேமித்து வைத்துள்ள அளவிடற்கரிய புண்ய பலன்கள் ஒரு காரணமென்றால், அவர் அருளியுள்ள க்ரந்தங்களின் பலம் இன்னொரு காரணம்.

''வேதமாகிய இந்தப் புண்ய பூமியில் ஸ்ரீ வேதவ்யாஸரால் ஆழ்ந்து நடப்பட்ட பிரம்ம ஸூத்ரமெனும் விதைகள், ஸ்ரீமன் மத்வாசார்யரால் முளைவிட்டு, (ஸ்ரீ ஜெயதீர்த்தர் போன்ற) ப்ராசீன உரையாசிரியர்களால் நன்றாக நாற்றாக வளர்ந்து, ஸ்ரீ வியாஸ ராஜரால் துளிர்களாய் துளிர்த்து, ஸ்ரீ விஜயீந்த்ர ஸ்வாமிகளால் நன்கு புஷ்பித்து, ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமிகளாகிய தங்களால் பழுத்துத் தொங்கும் அதி ருசியான பழங்களைக் கொடுக்கும் மத்வ ஸித்தாந்த மெனும் கல்ப வ்ருக்ஷம் அதி விசேஷமாக பிரகாசித்துக் கொண்டிருக் கிறது...'' என ஸ்ரீமத் வாதீந்த்ர தீர்த்தர் ஸ்ரீ ராகவேந்த்ர மூல பிருந்தாவனம் அசைந்தாடி அருள் பொழியக் காரணமான 'குருகுண ஸ்தவனம்' எனும் க்ரந்தத்தில் அருளியிருக்கிறார்.

ஸ்ரீ ராகவேந்திர் தனது பூர்வாச்ரமத்தில் வேங்கடநாதராக இருந்தபோது, ஸன்யாசம் ஏற்கத் தயங்கிய போது, கலைவாணியே ப்ரட்தக்ஷமாகத் தோன்றி தன்னைத் 'தளிர்க்கொடி' யென உருவகப் படுத்திக் கொண்டு ஸ்ரீ வேதவ்யாஸரிலிருந்து துவங்கி யாரெல்லாம் எப்படியெப்படியெல்லாம் அதைத் தளிர்க்கச் செய்தார்கள் என வருணித்து, 'வேங்கடநாதா! என் உடம்பில் படர்ந்திருக்கும் 'சந்த்ரிகா' விற்கு 'ஸுதா'தான் ஆதாரம், இவை பட்டுப் போகாமல் காக்க வேண்டியது உன் பொறுப்பு. உன்னால்தான் இது முடியும். அதனால் நீ ஸன்யாஸ ஆச்ரமத்தை மேற்கொண்டே ஆக வேண்டும், இது பிரம்மன் விதித்த விதி. உன்னிடம் நான் பூர்ணமாக வாசம் செய்ய வேண்டும் என்பதும் பிரம்மாவின் கட்டளை'' என்றருளி

மந்த்ரோபதேசம் செய்து மூலமந்திரத்தை உபதேசித்ததை ஸ்ரீ ராகவேந்த்ரரின் உடனிருந்து எழுதப்பட்ட 'ஸ்ரீராகவேந்த்ர விஜயம்' எடுத்தியம்புகிறது.

இதன்படி ஸ்ரீ ராகவேந்த்ரராய்ச் சன்யாஸம் ஏற்று, அற்புதமான 50 க்ரந்தங்களை அருளி அந்த க்ரந்த பலத்தால், ஸ்ரீ ஹரியின் அருள் பலத்தால், ஆசார்ய மத்வர் மற்றும் அவர் வழி வந்த மஹான்களின் அநுக்ரஹ பலத்தால், இன்றும் ஜீவனோடு மந்த்ராலய மூல பிருந்தா வனத்தில் இருந்து கொண்டு, மிருத்திகை ரூபமாய் நாடெங்கும் எழுந்தருளி தன்னை ஸேவிக்கும் பக்தர்களின் இடர் களைந்து அருள் புரிந்து வருகிறார்.

இப்படிப்பட்ட ஸ்ரீ ராகவேந்திரருக்கு அவரின் கிரந்தத்தை அடிப்படையாக வைத்து, அவர் விட்டுச் சென்றுள்ள ஆதாரங்களை அடிப்படையாக வைத்து ஒரு ஆலயம், க்ரந்தங்களின் வலிமையை வலியுறுத்துவதற்காக, க்ரந்தத்தால் எதையும் சாதிக்க முடியும், எதையும் எதிர்கொள்ள முடியும் என்பதை நிலைநிறுத்துவதற்காக ஒரு ஆலயம், எழுப்ப வேண்டுமென்ற ஆவல், ஸ்ரீ ராகவேந்திர மகிமை க்ரந்தத்தை 40 ஆண்டுகளாக எழுதி வரும் திரு. அம்மன் சத்தியநாதனின் நெடுநாளைய ஆவல் எனும் விதை, வெகு நாளைய கனவு எனும் விதை, ஸ்ரீ ராகவேந்த்ர பக்தர்களின் ஆதரவினால் முளைவிட்டு, துளிர்விட்டு, செடியாக வளர்ந்திருக்கிறது.

இது அனைவருக்கும் பலன் தரும் வ்ருக்ஷமாக, கல்ப வ்ருக்ஷமான ஸ்ரீ ராகவேந்திரரின் அருளை வாரி வழங்கும் விருக்ஷமாக, தேசமெங்கும் கிளை விட்டுப் பரவி நற்கனியெனும் அருளை அள்ளித் தரும் வ்ருக்ஷமாக ஓங்கி வளர உங்கள் ஒத்துழைப்பும் சகாயமும் தொடர்ந்து தேவைப்படுகிறது. அதென்ன வ்ருக்ஷம் என்கிறீர்களா? அதுதான் ஸ்ரீ ராகவேந்த்ர க்ரந்தாலயம் எனும் அதி அற்புதமாக வ்ருக்ஷம். உலகிலேயே எங்குமில்லாத வ்ருக்ஷம். கவலை என்னும் வெய்யிலுக்கு அருள் எனும் நிழல் தரும் வ்ருக்ஷம். மனச்சுமை எனும் இருளுக்கு ஒளி தந்து வழிகாட்டும் வ்ருக்ஷம். திக்கற்று நிற்பவர்க்கு திசை காட்டும் வ்ருக்ஷம். அன்பெனும் அருமருந்தைக் குழைத்துத் தந்து அரவணைத்து ஆதரிக்கும் வ்ருக்ஷம். இது குறித்து இனி காண்போம்.

## ஸ்ரீ ராகவேந்த்ர க்ரந்தாலயா என்னும் ப்ரதி ரூப மந்த்ராலயா

'ஸ்ரீ ராகவேந்திர மகிமை'யின் ஏழாம் பாகம் வெளியான நிலையில் 2008 ஆம் ஆண்டின் இறுதியில் 'Sri Raghavendra Granthalaya Seva & Educational Charitable Trust' எனும் அறக்கட்டளை பதிவு செய்யப்பட்டு, 2009 இறுதியில் சூர்யோதயா டெவலப்பர்ஸ் எனும் நிறுவனம் மூலம் திருவள்ளூரில் ஒரு ஏக்கர் நிலம் தானமாகப் பெறப்பட்டது.

தானமாகக் கிடைத்தது போக, பக்தர்களின் நன்கொடை மூலம் மேலும் 33 சென்ட் இடம் அறக்கட்டளைக்கு வாங்கப்பட்டு, 8.5.2011 அன்று ஸ்ரீ மாதவதீர்த்த ஸ்வாமிகளால் பூமி பூஜை போடப்பட்டு, ஸ்ரீ ஐச்வர்ய விநாயகர் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு அலுவலகக் கட்டடம் 2012இல் கட்டப்பட்டது.

பக்தர்கள் மூலம் பெறப்பட்ட நிதி கொஞ்சம் சேர்ந்தவுடன் 2014 பிப்ரவரியில் ஸ்ரீ ராகவேந்த்ர க்ரந்தாலயா என்னும் மாபெரும் திட்டத்தின் முதற் கட்டப் பணிகள் துவக்கப்பட்டு 2017 பிப்ரவரி 9ஆம் தேதி மஹா கும்பாபிஷேகமும் ப்ரதிஷ்டாபனமும் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. 2011இல் யாருடைய அமிர்த ஹஸ்தத்தால் பூமி பூஜை போடப்பட்டதோ அதே ஸ்ரீ வித்யா ஸாகர மாதவ தீர்த்தர், அவரது இளவல் ஸ்ரீ வித்யா ஸிந்து மாதவ தீர்த்தர் மற்றும் உடுபி அஷ்டமடங்களில் ஒன்றான பலிமாரு மடாதீசர் ஸ்ரீ வித்யாதீஸ ஸ்ரீ பாதங்களால் கும்பாபிஷேகம் கோலாஹலமாக நடைபெற்றது. ஸ்ரீ ராகவேந்திரருக்கு இதைப் போன்றதொரு ஆலயம் இதுகாறும் எங்கும் அமைக்கப்படவில்லை என்பதே இவ்வாலயத்தின் பெருமையை பறை சாற்றுவதாய் உள்ளது. அது குறித்த விஷயங்களை இனி சுருக்கமாகக் காண்போம்.

### ஸ்ரீ ராகவேந்த்ர க்ரந்தாலயாவின் பெருமைகள்

கி.பி. 1671இல் மந்த்ராலய க்ஷேத்ரத்தில் ஸ்ரீ ராகவேந்திரர் ஜீவனுடன் பிரந்தாவனப் ப்ரவேசம் செய்யும் போது, தான் இன்னும் 700 ஆண்டுகள் ஜீவனுடன் பிருந்தாவனத்துள் வாழ்வேன் என்றும், அதை மெய்ப்பிக்கும் வகையில் தேசமெங்கும் 700 ம்ருத்திகா பிருந்தாவனங்கள் தோன்றும் என்றும் அருளியதற்கேற்ப அமைந்து

வரும் பிருந்தாவனங்களைப் போன்றதுதான் இது என்றாலும் எல்லாவற்றினின்றும் மாறுப்பட்டது இந்த க்ரந்தாலயா என்றும் அறுதியிட்டுக் கூறலாம்.

எப்படியெனில், ம்ருத்திகை எனப்படும் புனிதமான மண்ணை மந்த்ராலயத்தில் உள்ள பீடாதிபதியிடமிருந்து பெற்று வந்து பல்வேறு ப்ரதேசங்களில் ம்ருத்திகா பிருந்தாவனங்களைப் ப்ரதிஷ்டை செய்து வருகின்றனர். அவ்வகையில் ஸ்ரீ ராகவேந்திரரிலிருந்து 20வது பீடாதிபதியாக விளங்கிய ஸ்ரீ ஸுயமீந்த்ர தீர்த்தரிலிருந்து தற்போதைய பீடாதிபதி வரை ஆறு மடாதீசர்களிடமிருந்து பெற்று சேமித்து பூஜித்து வந்த ம்ருத்திகை ஒரு சிறிய பிருந்தாவனத்தில் நம் க்ரந்தாலயாவில் பிரதிஷ்டையாகி இருக்கிறது. இது ஒன்று. இதுவன்றி இன்னொன்றும் உள்ளது.

அதாவது, மிகப் பெரிதான ப்ரதானமான மந்த்ராலயத்தை ஒத்த இன்னொரு ப்ருந்தாவனத்துள் ஸ்ரீ ராகவேந்திரரே அவரது சம காலத்தில் அவரது சிஷ்யருக்குத் தந்த ம்ருத்திகை உலகிலேயே எங்குமில்லாத வகையில் முதன் முறையாக நம் க்ரந்தாலயாவில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது வேறெங்குமில்லாத ஒரு விசேஷமாகும். இது மட்டுமல்ல, இன்னும் அனேக விசேஷங்களைக் கொண்டதுதான் ஸ்ரீ ராகவேந்த்ர க்ரந்தாலயா. அவை என்னென்ன என்பதைப் பார்ப்போம். முதலில் சுற்றுச் சன்னதிகள்.

**தக்ஷிண த்வாரகா :** அச்சு அசலான த்வாரகா க்ருஷ்ண விக்ரஹம் அமைந்த அழகிய சுற்றுக் கோயில். கோயிலின் பின்புறம் ஸ்தல வ்ருக்ஷமான ஸ்ரீ பாரிஜாதம். நம் குறைகள் நீங்க தேங்காய் கட்டி வழிபடும் பிரார்த்தனை ஸ்தலம் இது.

**மாஞ்சாலி மற்றும் மாங்காடு அம்மன் :** மந்த்ராலயத்தில் உள்ள க்ராம தேவதையான ஸ்ரீ மாஞ்சாலி அம்மனுக்கு இங்கும் தனிச் சந்நிதி. கூடவே அர்த்தமேரு ஸ்ரீ சக்ரத்துடன் கூடிய மாங்காடு அம்மனும் கொள்ளை அழகு.

**ஸ்ரீ ஐச்வர்ய விநாயகர் :** கன்னி மூலையில் வேம்பு அடியில் அமைந்த ஆலயம். சகல விக்னங்களையும் தீர்க்கும் ஆலயம் இது.

**நாக சன்னதி :** மந்த்ராலயத்திற்கு அருகிலுள்ள நாகலோகமான பிக்ஷாலயாவிலிருந்து கொணரப்பட்ட நாக விக்ரஹங்கள். அரச மரத்துடன் கூடிய மேடையில்.

## கர்ப்ப க்ரஹத்திலுள்ள மற்ற விக்ரஹங்கள்

ப்ரதான கர்ப்ப க்ரஹம் முதல் தளத்தில் உள்ளது. அதற்கான காரணத்தை பின்னர் பார்ப்போம். இப்போது ப்ரதான பெரிய ப்ருந்தாவனம் மற்றும் சிறிய ப்ருந்தாவனத்துடன் உள்ள மற்ற விக்ரஹங்களைத் தரிசிப்போம்.

**ஸ்ரீ பிரஸன்னவரதவேங்கடேசர்:** ஸ்ரீ ராகவேந்திரரின் குல தெய்வமான வேங்கடேசர் விக்ரஹம் திருப்பதியிலிருந்து கொண்டு வரப்பட்டதாகும்.

**ஸ்ரீ மூலராம – திக்விஜய – ஜெயராமர் :** ஸ்ரீ ராகவேந்திரர் இன்றும் பூஜித்து வரும் விக்ரஹங்கள் இங்கும் சிலாரூபத்தில்.

**ஸ்ரீ ராம ஹநுமான் :** ஸ்ரீ ராமபிரான் அமர்ந்த கல்லிலிருந்து, மந்த்ராலய ப்ருந்தாவனம் செய்யப்பட்ட இடத்திலிருந்து கொண்டு வரப்பட்ட கல்லில் வடிக்கப்பட்ட ஹநுமான்.

**ஸ்ரீ வியாஸராஜ ஹநுமான் :** ஸ்ரீ ராகவேந்திரரின் முற்பிறப்பான ஸ்ரீ வியாஸராஜர் 732 இடங்களில் ஸ்ரீ ஹநுமன் விக்ரஹங்களைப் ப்ரதிஷ்டை செய்து பூஜித்தார். அவற்றுள் ஒன்று நம் க்ரந்தாலயாவில் இருப்பது அதி விசேஷமானது.

**கோபுர தரிசனம் :** தூரத்திலிருந்து கோபுரத்தை தரிசனம் செய்வது வாடிக்கை. இங்கு நாம் கோபுர உச்சிக்கே சென்று கோபுரத்தை அதிலுள்ள ஸ்ரீ ராம, நரசிம்ஹ, க்ருஷ்ண, வேதவ்யாஸ விக்ரஹங்களை வலம் வருவது மனதிற்கு சந்துஷ்டியைத் தரவல்லது. இவையல்லாமல் பிருந்தாவனத்திற்கு மேலே கோபுர தரிசனமென்றால் கீழே எங்கும் காண இயலா காட்சியில் ஸ்ரீ ராகவேந்திரரை தரிசிக்கலாம்.

## ப்ரதிரூப மந்த்ராலயத்தில் நிஜரூப ஸ்ரீ ராகவேந்திரர்

ஸ்ரீ ராகவேந்திரருடைய பிரம்மாண்டமான பிருந்தாவனம் முதல் தளத்தில் இருப்பதாகப் பார்த்தோம். ஏனெனில் பிருந்தாவனத்திற்குக் கீழே ஜீவனுடன் ஸ்ரீ ராகவேந்திரர் அமர்ந்துள்ள அற்புதத்தை இந்தக் க்ரந்தாலயா என்னும் ப்ரதிரூப மந்த்ராலயம் தவிர வேறெங்கும் தரிசிக்க முடியாது. அதுவன்றி ஸ்ரீ ராகவேந்திரர் த்யானிக்கும் 72 பகவத் ஸ்வரூபங்களையும், பரிவார தேவதைகளையும் ஒரு சேர தரை தளத்தில் தரிசிக்கலாம்.



இப்படிப்பட்ட அற்புதமான க்ரந்தாலயம் சுமார் ஒன்றே கால் ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. மூன்று கட்டப் பணிகளாகப் பிரித்து செய்ததில் தற்போது முதற் கட்டப் பணிகள் நிறைவடைந்துள்ளன. இரண்டு மற்றும் மூன்றாம் கட்டப் பணிகள் தொடர்ந்து நடைபெற பெருமளவில் நிதி தேவைப்படுகிறது. இந்தப் புனிதமான பணியில், வேறெங்கும் இல்லாத வகையில் உள்ள பணியில் நீங்களும் கலந்து கொண்டு பணமாகவோ, பொருளாகவோ நிர்வாக அலுவலகத்திற்கு அனுப்பி ஸ்ரீ ஹரிவாயு குருவின் அருளைப் பெற வேண்டுகிறோம்.

**ஆலய முகவரி :** ஸ்ரீ ராகவேந்த்ர க்ரந்தாலயா என்னும் ப்ரதி ரூப மந்த்ராலயா, சூர்யோதயா நகர், நெய்வேலி கிராமம், திருவள்ளூர் - ஊத்துக்கோட்டை சாலை, பூண்டி நெய்வேலி கூட் ரோடு, திருவள்ளூர் - 602 023.

<u>தங்கள் காணிக்கைகளை அனுப்ப வேண்டிய முகவரி:</u>

**SRI RAGHAVENDRA GRANTHALAYA**
**SEVA & EDUCATIONAL CHARITABLE TRUST**
**(Regd. No. 977/2008)**

16/116, T.P. Koil Street, Thirumala Flats, Triplicane, Chennai - 600 005.
✆ : 044 - 2844 3546, 4266 3546, 9445952585, 9884552585, 9444188999

அல்லது

**Indian Bank, Triplicane Branch, S.B. Account No. 6028257215**
IFSC Code : IDIB000T055

என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி எங்களுக்குத் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

<u>மேலும் விவரங்களுக்கு</u>

**9884552585, 9940553450, 9445952585, 8825722804,**
**044-42663546, 28443546** போன்ற எண்களில் தொடர்பு கொள்ளுங்கள்.






# அருள்மிகு அம்மன் வழங்கும்
# அதி அற்புதமான நூல்களில் சில

**கும்பகோணம் M. ராமராவ்**

- ❒ ஸ்ரீ ஸுமத்வ விஜய மஹாகாவ்யம் .............................. 400.00
  (மூலம் - பதவுரை - விளக்க உரையுடன்)
- ❒ பாராயணத்திற்கான ஸ்ரீ ஸுமத்வ விஜயம் (தமிழ்) ........... 130.00
- ❒ பாராயணத்திற்கான ஸ்ரீ ஸுமத்வ விஜயம் (சமஸ்கிருதம்) .... 50.00
- ❒ மாத்வ ஸம்ப்ரதாய ஶ்ராத்த ப்ரயோகம் (ரிக் / யஜுர்) .......... 90.00
- ❒ ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் (அர்த்தத்துடன்) ..................... 140.00

**அம்மன் சத்தியநாதன்**

- ❒ ஸ்ரீ ராகவேந்திரமகிமை (பத்து பாகங்கள்) செட் ............. 2640.00
- ❒ ஸ்ரீ விஜயீந்திர விஜயம் (மூன்று பாகங்கள்) செட் ............. 750.00
- ❒ நவநிதி நல்கும் நவபிருந்தாவனம் .............................. 150.00
- ❒ ஸ்ரீமத் சுந்தர வால்மீகி ராமாயணம் (HB 450.00) .......... 400.00
- ❒ சுந்தரன் அருளிய சுந்தரகாண்டம் .............................. 180.00
- ❒ நல்வழி காட்டும் ஸ்ரீமத் பகவத் கீதை (மூலமும் உரையும்) . 150.00
- ❒ ஸ்ரீ லக்ஷ்மீ ஷோபானம் (மூலமும் மொழிபெயர்ப்பும்) ............ 60.00
- ❒ ஸ்ரீமன் மத்வ நாம (மூலமும் மொழி பெயர்ப்பும்) .................... 50.00
- ❒ ஸ்ரீமத் த்வாதஶ ஸ்தோத்ரம் (மூலமும் மொழி பெயர்ப்பும்) ..... 40.00

**எல். லக்ஷ்மி நரசிம்மன்**

- ❒ ஸ்ரீ வேங்கடேஸ மஹாத்மியம் (ஸ்ரீ ஸத்யாத்மர் அருளியது).. 150.00
- ❒ ஸ்ரீ ஹரி வம்சம் ......................................................... 250.00

## K. LAKSHMAN

- ❒ Sri Raghavendra, The saint of Mantralaya (10 Vol.) ...... 2600.00
- ❒ The Hidden gems in Sundara Kandam ......................... 240.00
- ❒ Guru Vijayeendra, The invincible Saint (3 Vol.) .............. 900.00
- ❒ The Bountiful Nava Brindavana ..................................... 200.00




இன்னும் இதைப் போன்ற நூற்றுக்கணக்கான நூல்கள், குறுந் தகடுகள், பூஜை மற்றும் பரிசுப் பொருட்களை சென்னை திருவல்லிக்கேணி T.P. கோவில் தெருவில் ஸ்ரீ ராகவேந்திர மடத்திற்கு எதிரில் அமைந்துள்ள எமது விற்பனை நிலையமான பிருந்தாவனா எண்டர்பிரைசசிற்கு நேரில் வந்து வாங்கலாம் அல்லது 044-42663546, 42663545, 28443546, 9445952585, 9884552858 போன்ற எண்களில் தொடர்பு கொண்டு தபால் மூலமும் பெறலாம். விற்பனை நேரம் வார நாட்களில் : 9.00 a.m. to 1.00 p.m. & 4.00 p.m. to 9.00 p.m. ஞாயிறு மாலை மட்டும்.

**வாருங்கள்...! வாங்குங்கள்...! படியுங்கள்...!**
**பலனடையுங்கள்...! பரிசளித்து மகிழுங்கள்...!**



ஸ்ரீ மத்வாசார்யரால் பிரதிஷ்டை
செய்யப்பட்ட ஸ்ரீ கிருஷ்ண விக்ரஹம்,
கீதோபதேச அலங்காரத்தில்,
உடுப்பி க்ஷேத்ரத்தில்...



மஹாபாரதத்தை அருளிய
ஸ்ரீ வேதவ்யாஸரிடம், ஸ்ரீ மத்வர்
தனது 'கீதா பாஷ்யம்' மற்றும்
'கீதா தாத்பர்ய நிர்ணய'த்தைப்
படித்துக் காட்டுதல்...



ஸ்ரீ மத்வரின் கீதா பாஷ்யத்திற்கு
'பிரமேய தீபிகை' உரையையும்,
தாத்பர்யத்திற்கு 'நியாய தீபிகை'
உரையையும் அருளிய ஸ்ரீ ஜயதீர்த்தர்.



ஸ்ரீ மத்வரின் கீதா பாஷ்யம் மற்றும் தாத்பர்ய
நிர்ணயத்தையும், ஸ்ரீ ஜயதீர்த்தரின்
பிரமேய தீபிகை மற்றும் நியாய தீபிகை
உரைகளையும் தழுவி 'கீதார்த்த
ஸங்க்ரஹ'த்தை அருளிய ஸ்ரீ ராகவேந்திரர்.



ஸ்ரீ ராகவேந்திரரின் கீதார்த்த ஸங்க்ரஹத்தைத்
தழுவி தமிழிலே மிக நுண்ணிய முறையில்,
எளிய நடையில், தெளிவான முறையில்
உரையெழுதியுள்ள
கும்பகோணம் ஸ்ரீ M. ராமராவ்.

